ஓம்.

ஸ்ரீ கணேசாயநம:

# மஹேதிஹாஸமாகிய

# சிவரஹஸ்யம்.

முதலிரண்டாம் அம்சங்களும்

மூன்றாம் அம்சத்தின் பூர்வபாகமும்.

இஃது

பிரம்மஸ்ரீ

மருதூர்-கணேச சாஸ்திரியார் அவர்களால்

மொழிபெயர்த்து

கயப்பாக்கம் - சதாசிவசெட்டியார் B. A.

அவர்களால்

சென்னை:

கிச்சினர் அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது.

ஸாதாரண௵ தநுரவி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உபோத்காதம்.

மஹேதிஹாஸமாகிய சிவாஹஸ்யம் பூர்வம் பரமசிவனால் உமாதேவியார்க்கு மஹா கைலாஸத்திலும், முருகக்கடவுளால் மஹாதபஸ்வியாகிய ஜைகிஷவ்ய முனிவருக்கு ஸ்கந்தகிரியிலும், அதிரஹஸ்யமாய் உபதேசிக்கப்பட்டது.

பின்னர் அது, முருகக்கடவுளால் நந்திதேவருக்கும், அவர் தம்மை வழிபட்ட நாராயணமூர்த்திக்கும், அவர் தமது புதல்வராகிய பிரம்மதேவருக்கும், அவர் தமது புதல்வர்களாகிய ஸநகாதியர்களுக்கும், அவர் நாரத மஹாமுனிவருக்கும், அவர் வியாஸ மஹாமுனிவருக்கும், அவர் சூதபௌராணிகர்க்கும், முறையே உபதேசிப்ப நிலவுலகில் வந்து நிலவியது.

இம் மஹேதிஹாஸம்,வேதவாக்கியங்களை அநுகரணஞ் செய்வதாயும், உபநிஷதர்த்த விசாரத்தை மேற்கொண்டதாயும், உபாஸநா காண்ட ஞாந காண்ட ரஹஸ்யத்தை விளக்குவதாயும், திரிபுரதாபிநி முதலிய உபநிஷத் விஷயங்களின் உண்மையை விளக்கும் பாஷ்யமாயும், முனிவர்களும் மஹரிஷிகளும் பிறரும் சிவோபாஸனையாலேயே மஹிமை பெற்றவர் என்பதையும், அச்சிவோபாஸனையே வைராக்கிய உற்பத்தி ஹேதுவாயுள்ள தென்பதையும், புராதன ஸ்தல தீர்த்த அரண்யாதிகளின் மஹிமைகளையும் பிரகாசப் படுத்துவதாயும், சிவாபராதம், யமலோகம், யமதண்டனை முதலியவற்றை விவரணஞ் செய்வதாயும், நந்தியாதி பிரமத மஹா கணங்களின் அத்புத சரித்திரங்களையும், உண்மை நாயன்மார்களாகிய அறுபத்துமூவரது சரித்திரங்களையும் தன்னகத்தே கொண்டதாயும், பாணலிங்கம், பில்வ பத்திரம், விபூதி, ருத்திராக்ஷம் முதலிய சிவஸாதனங்களையும், பிரதோஷ முதலிய சைவ விரதங்களையும், சிவபூஜை, சாம்பவ பூஜை, சிவதர்மம் முதலிய வற்றின் பிரபாவங்களையும் விஸ்தரிப்பதாயும், தனக்கு ஒப்புயர்வின்றிப் பிரகாசிக்கும் பெருமையுடையதாம்.

இப்பரமேதிஹாஸம், ஓரிலக்கத்துக்கு மேற்கொண்ட கிரந்த ஸங்கியையுடையதாயும், ஸஹஸ்ராத்யாயி என்னும் ஆயிரம் அத்தியாயங்களாலான மஹேஸம், பவம், ஹாரம், சிவம், பர்க்கம், சங்கரம், உக்ரம், பீமம், ஸதாசிவம், ஈஶ்வரம், மஹா தேவம், ஈஶம் எனப்பெயரிய பன்னிரண்டு அம்சங்களை யுடையதாயும் சொல்லப்பட்டிருக்கிறது.

இனி யிப்பன்னிரண்டு அம்சங்களும் முறையே திக், லோக, அமர, பிரம்ஹவேத, ருத்ர, திங்நாக, ஷண்முகநேத்ர, சங்கர, ஷண்முக நேத்ர, மூர்த்தி இவைகளின் ஸங்கியா கிரந்தங்களைக்கொண்டனவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ஆயினும் வட மொழியில் கிரந்தத்துக்கு அக்ஷர சங்கியை முப்பத்திர ண்டாகச் சொல்லப்பட்டிருப்பினும், இச் சிவரஹஸ்யத்தில் பலவேறு வகைப்ப ட்ட ச்லோகங்களும், கத்தியங்களும் விரவி யிருத்தலானும், திக் முதலிய பத ங்களுக்குப் பலபடி அர்த்தம் பண்ணக் கூடியதாயிருத்தலானும், அத்தியாயங் கள் ஒன்றோடொன்று விரவி யிருப்பதாக வேறுபடுகின்றமையானும், இப் போது கிடைத்துள்ள பிரதிகளின் ஸங்கியைகளோடு அவை பொருந்தாமை யானும், அத்தியாய ஸங்கியையும் அம்சங்களின் கிரந்த ஸங்கியையும் நிஷ்கர் ஷை செய்ய முடியவில்லை.

இவ்விதிஹாஸ ரத்னாகரத்திற் காணப்படும் ஸ்துதிகளெல்லாம் மஹாத் புதமாயும், வேதஸார ரஹஸ்யமாயும், நித்ய பாராயணாறு குணமாயு மிருப்பதால் அவையிற்றை யெல்லாம் தொகுத்து அச்சிட்டுபகரிக்க வேண்டுமென்னும் அபி ப்பிராயத்தினால் அவற்றின் விஷயங்களே மொழி பெயர்த்து எழுதப்பட்டன.

இவ்வரிய பெரிய நூல் இருமொழிகளினும் வெளிப்படாததும், வேதாந் தார்த்த விசாரமுடையதும், மீமாம்ஸா பரிபாஷைகள் நிரம்பப் பெற்றதும், அதியத்புதமான சைவையுடைய ச்லோகங்களாலாகியதும், வேறு நூல்களிற் காணப்படாத எண்ணிறந்த நூதன விஷயங்களைக்கொண்டது மாயிருக்கின்ற மையின் சிற்சில விடங்களில் அர்த்த நிச்சயம் செய்வது சிரமமாகக் காணப்படி னும், அபுத்தி பூர்வமாய் நேர்ந்தவைபோக மற்றப்படி ஒன்றும் விடாமல் உள்ள வாறே ச்லோகார்த்தங்களைப் பிண்டமாய்த் திரட்டி எழுதப்படுவதன்றித் திரி த்தல், விலக்கல், கூட்டல் முதலியவையாதொரு தோஷத்தையும் உரையாசிரியரி டத்தும் ஏழையேனிடத்தும் ஆரோபணஞ் செய்தற்கு இடமிராது.

உண்மை நாயன்மார்களாகிய அறுபத்துமூன்று நாயன்மாரது சரித்திரம் சிவரஹஸ்யத்தில் நவமாம்சத்தில் சிவபெருமானாரால் உமாதேவியார்க்கு முன் னமே கூறப்பட்டுளது என்று ஸாதுக்கள்பாற் கேட்ட வளவிலேயே, இந்நூல் வெளிவந்து நிலவவேண்டுமென்னும் ஓரவா நாயினேனுக்குப் பலவாண்டுகளு க்கு முன்னரே தோன்றிற்று. எனினும் பிரதிகளைத் தேடிக்கிடைக்கப்பெறாது வருந்தியபோதெல்லாம் அவ்வவா சிறிதுங் குறைவுபடாமல் நாளுக்குநாள் வள ர்ந்தோங்கி நின்றது. இப்படி நிகழு நாட்களில் வேண்டுவார் வேண்டுவதே ஈந் தருளும் பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமானது திருவருட் சகாயத் தால் நிரம்பாத பிரதி யொன்று காஞ்சீபுரத்திற் கிடைக்கப்பெற்றேன். பிறகு இதன் பொருட்டே மேற்கொண்ட சிவத்தல யாத்திரைக் காலத்தில் தஞ்சை யில் சமக்ரமான ஒருபிரதி கிடைக்கப்பெற்றுப் பெருநிதியுடையவ னாயினேன். மேல் அதனைப் பலர்க்கும் பிரயோஜனப்படுத்தவேண்டு மென்னும் அவாவி னால் மொழி பெயர்த்து அச்சிடத்தொடங்கிப் பொருட் குறை முதலியவற்றால் மடங்கினேன். இதனால் இடையிடையே காலம் வீணே கழிந்தது. திருவ ருட் பிரகாசப் பரவெளி மண்டபத்திற் றிருநடனஞ் செய்கின்ற எம்பெருமானா ரது திருவருட் பிரவாக வெள்ளத்தின் வழிச்செல்லும் துரும்புகளாகிய ஆத் துமவர்க்கத்துட் கடைப்பட்ட ஏழையேன் செயயத்தக்கது யாது !

எய்ப்பிடத்துதவும் வைப்பாகிய இறைவன் இந்நூல் இனிது முடிவுற வேண்டுமென்பதனாலோ அன்றி ஏழையேனை நன்னெறிப் படுத்தவேண்டு மென்பதனாலோ, செய்யுஞ் செயலொன்றின்றித் துயர்க்கடலு ளாழ்ந்திருந்த வென்னைக் கரையேற்றும் பொருட்டுத் திருவாவடுதுறையில் ஞானதேசிக மூர்த்தியாயெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீலஸ்ரீ - **அம்பலவாணதேசிக சுவாமிகளது** மஹா சந்நிதானத்தை யடைவித்தருளினன்.

ஏழையேனும் அவ்வாறே மஹா சந்நிதானத்தை யடைந்து திருவருணோக்கஞ் செய்யப்பெற்றுச் சிவரஹஸ்ய விஷய விண்ணப்பஞ் செய்து பணிந்து நின்றேன். மஹா சந்நிதானமும் இப்பரமேதிஹாஸத்தைத் தாங்களே பிரசுரஞ்செய்யவேண்டு மென்று திருவுளங்கொண்டிருந்த தாகக்கட்டளையிட்டு, ஏழையேனது முயற்சியை எவ்விதமான சஹாயங்களையுஞ் செய்து முன்னின்று முடிப்பதாக அநுக்கிரகஞ் செய்து வடமொழி மூலத்தையும் வெளிப்படுத்தவேண்டுமென்று குறிப்பித்து, ஆதீனத்து மூலப்பிரதியையும் உவந்து உதவியருளினார்கள்.

பிறகு மஹா சந்நிதானங் கட்டளையிட்டவாறே சிவரஹஸ்ய மஹேதிஹாஸத்தை மொழி பெயர்த்துத் தமிழிலும், மூலத்தை வடமொழியிலும் வெளிப்படுத்துவதே பிறவியாலாய பெரும்பய னென்று கருதிச் சிவஸ்தலயாத்திரை செய்துப் பிரதிகளுக்கான நன்முயற்சியைச் செய்து, சென்னைக்குத் திரும்பி எனது லௌகிகத்தினின்றும் விடுதலை யடைந்து, இவ்வேலையொன்றையே செய்வேனாய் முதல் இரண்டாவது அம்சங்களையும் மூன்றாவது அம்சத்தின் பூர்வபாகத்தையும் அச்சிட்டு முடித்து ஒரு புத்தகமாகக் கட்டி முதற் புத்தகமாக வெளிப்படுத்துவ தாயினேன்.

இப்புத்தகம், வடமொழியினின்றும் மொழிபெயர்த்ததாகலானும், அநேக ஸ்தல தீர்த்த அரண்யமுதலிய மாஹாத்மியங்களைக் கூறுவதாகலானும், வைதிசைவ பரிபாஷைகளும், மீமாம்ஸா நியாயங்களும் நிரம்பப் பெற்றதாகலானும், ஏராளமான தோத்திரங்களையுடைய தாகலானும் வடமொழிப் பதங்களும் அரும்பதங்களும் ஆங்காங்கு விரவப்பெற்றுள்ளது. ஆகையால் இதற்கு ஒரு அரும்பதவுரை யகராதி எழுதிச் சேர்க்க விரும்பினேனேனும் ஸாவகாச மின்மையானும், சிலஸ்தல முதலியவை நன்கு விளங்காதிருக்கின்றமையானும் மூன்றாவதுஅம்ச உத்தரபாக முடிவிற் சேர்க்கலாமென நிறுத்தினேன்.

இனி யிப்புத்தகத்தை மிக்கசுலபமானவிலைக்கு யாவரும் எளிதிற்பெறுமாறு ஸஹாயஞ் செய்யவேண்டுமென்னும் அபிப்பிராயம் என்னகத்துக் குடிகொண்டுளதெனினும் கிரந்த விஸ்தீரணத்தினாலும், மொழி பெயர்ப்பு முதலிய செலவினாலும் அது அநுகூலப்படாதிருக்கின்றமையின் பொருட்பேறுடைய அபிமானிகள் யாவரும் ஸஹாயஞ் செய்ய முன்வருவரேல் அச் சஹாயங்களைக் கொண்டு பின்வரும் புத்தகங்களை மிக்க குறைந்தவிலைக்குக் கொடுப்பதன்றி வட மொழி மூலத்தையும் அச்சிட்டு முடிக்கும் அநுகூலமுடையவனாவேன்.

ஒன்றிற்கும் பற்றாத சிறியனேன் இப்பெருமுயற்சியை மேற்கொண்டது அவாகாரணமன்றி மற்றெதனாலுமன்றென்று ஸாதுக்கள் அறிவர். இம்முயற்சியில் இவ்வேழையேன் சிற்றறிவிற் கெட்டாத பல குறைபாடுகள் இப்புத்தகத்துட் காணப்படுவதியல்பேயாமாகையால் "குணநாடிக்குற்றமுநாடி யவற்றுண் மிகைநாடி மிக்க கொளல்" என்னும் பிரமாணப்படி இதனைப் பொருணடிக் கொண்டு இவனை ஆசீர்வதித்தருளுவர் பெரியோரென்று அன்னவர் பொன்னடிக்கமப் பொடியணிந்தடிமை பூண்டவனாகின்றேன்.

இங்ஙனம்:

**கயப்பாக்கம் - சதாசிவன்,**

"சிவரஹஸ்ய மந்திரம்"

நெ. 497, தங்கசாலைத்தெரு,

சென்னை.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா.

வைதிக சைவீர் வைதிக சைவீர்
ஐதிக மிறும்பூ தறைகுதுங் கேண்மின்
நாமுன் னிழைத்த நயத்த சுகிர்தந்
தாமுன் றோன்றிச் சமைந்தவாக் கேண்மதி
குமுத விதர்ப்புக் குலாஅய் நிமிரும்
அமுதவம் பரமே யாகா ரமெனத்
தவளச் சாயையின் றமிழ்மண மோச்சிச்
சிவவரு ளுன்னதஞ் சிகரியிற் றெரிக்கும்
இரசதா சலத்தி னிறைவ னனுதியிற்
பிரச நுவற்சியாற் பெரிது முவந்து
மெச்சிய மறையின் விளைவைத் தொகுத்துப்
பச்சிளங் கிள்ளைப் பராபரை யார்க்கும்
ஒருதிரு முருக னுபயசம் புக்குந்
திருநந்தி தேவன் றிருநா தனுக்கும்
பதும நாபன் பரமேட் டிக்குஞ்
சதுர்மறை வேதன் சனகா தியர்க்கும்
நகமுறை யத்தவர் நாரத முனிக்குஞ்
சுகமிகு மகதியன் றுவைபா யனற்குஞ்
சுருதி வகுத்தோன் சூதன் றனக்குங்
கருதி யிசைத்த கனகப் பொக்கிஷம்
மாதவர் தழூஉ மகேதி காசம்
வேத வூகம் விளங்கு நிலயம்

உபநிட தார்த்த முறைக்கும் பாஷியஞ்
சுபசிவோ பாசனை துளிர்கற் பகத்தரு
உண்மைநா யன்மா ருயரிய சரிதை
திண்மை மிளிர்தரு சிவசா தனங்கள்
நவநவ மாக நலக்கப் பயக்குந்
தவமா ராற்ற றழங்கு மிருநிதி
இத்தகு மந்தண மினிது மிழற்றுந்
தத்துவ முறுசிவ ரகசியந் தன்னைக்
கடணிகர் விபுலக் கலைய தான
வடமொழி யாட்சியின் மல்கக் கண்டு
மோன முனிவர் மொய்த்துப் பரசும்
ஞான ராஜ தானியாத் தோன்றும்
ஒருவாக் கலைவிரை யொருங்கு கம்மெனுந்
திருவா வடுதுறைத் தெய்வப் பதியிற்
கடுவர வொடுசெழுங் கடுக்கை யொரீஇ
மடலவிழ் குவளை மலர்த்தார் தரீஇப்
பால லோசனம் பனிமதிக் கோடும்
நீலக் கறையு நேராது பொதிந்து
வந்த குருமணி வரேந்திர ரத்தினஞ்
சுந்தரப் பெம்மான் சுஞ்ஞான பானு
அருநிதி யிரண்டு மழக்கா றடைவான்
பெருங்கொடை பொழிந்து பிறங்கும் வள்ளல்
ஆசி றாய வம்பல வாண
தேசிகன் றிருவடி திருவருள் பெற்றுத்
தன்னுள் ளத்தைத் தகவி னியம்ப
அன்னதே செய்கவென் றரிய னறைந்து
மூலப் பிரதியை முறைமையி னளித்துச்
சால சகாயந் தருவமென் றருளக்
கேட்டா னந்தக் கிளர்ச்சி பொங்க
ஈட்டா நிதிய மெய்ந்த தென்னக்
கருவூர் கருமாங் கலக்கியாட் கொளுஉம்
மருவூர் வைப்பு வந்த விப்பிரர்
குலத்திற் கனியாக் குலவிய தினமணி
நலத்திற் சிறந்த நவமணி யென்ன
ஆரிய வம்பர வருநீ ருண்டு

பேரிய வையம் பெய்கொண் டூறற்
குணேசன் கஞ்சக் குரவனை நிகர்த்த
கணேசக் கலைஞனுங் காவலற் கொண்டு
கண்டு சீனிதேன் கன்ன லுடன்முப்
பண்டு பாகு பாலினு மினிக்க
அமிழ்தச் சுவையினு மதிக மேய்ந்த
தமிழிற் பெயர்த்துச் சதிருற வச்சில்
ஏற்றிமே தாவிய ரினிதுமீக் கூற
நாற்றிசை முற்று நல்கின னம்ம
இந்திர னுலகிற் கிடரியற் றிடுவான்
பந்தியி னிவர்ந்த பன்மா டத்தில்
அயர்ப்பொன் றில்லா வான்றோர் வதியுங்
கயப்பாக் கத்திற் கனதன வைசியர்
நாடற் குரிய நற்றபோ தனரிற்
கூடற் கிழாநற் கோத்தி ரத்திற்
சிரத்தை யுடனே சிவப்பணி யாற்றிய
இரத்தினக் கோமா னிருந்தவத் தோன்றல்
இலக்கண விலக்கிய மெனும்பயோ ததியில்
நலக்க வாடு நற்றமிழ்க் குஞ்சரஞ்
சைவசித் தாந்தத் தனிப்பெருஞ் சாகரந்
தெய்வத் தொண்டிற் றிளைத்த புனிதன்
பொய்மை மறுத்த புலவர் சிகாமணி
மெய்ம்மை நிறுத்து மேட்டிமை யாளன்
கங்கை வேணிக் கண்ணுதன் மூர்த்தி
மங்கை பாகன் மருவிய மனத்தன்
சிவனடிச் செல்வரைச் சிவமென வுன்னி
அவர்பதம் பராவு மரும்விர தத்தன்
பூதிருத் திராக்கம் பொருளெனக் கொடூஉ
நீதியைந் தெழுத்தை நிகழ்த்து நாவினன்
திருமுறை பாரா யணமே சீர்த்தித்
தருமெனுங் கொள்கைத் தவறாத் திறலோன்
பகர்சுதந் தரனும் பரசிவ முதலெனப்
புகல்பவர் தொடர்பைப் பொருந்தி யுறைவோன்
மரகதக் கெழுமை மகரா லயத்துத்
தரளத் திரளைத் தண்டிரைக் கொழீத்

தத்துஞ் சென்னையிற் சைவ சமய
பக்த ஜனசபை பண்பிரு பித்தோன்
இன்பு வாய்ந்தா னியைபு வாய்ந்தான்
அன்பு வாய்ந்தா னடக்கம் வாய்ந்தான்
புத்தியிற் சிறந்தான் புகழிற் சிறந்தான்
பத்தியிற் சிறந்தான் பண்பிற் சிறந்தான்
உதார வண்மை யொருங்கே நிரம்பிய
சதாசிவ வறிஞன் றக்கநா வலனே.

ஓம்

ஸ்ரீ கணேசாயநம:

மஹேதிஹாஸமாகிய

# சிவரஹஸ்யம்

## விஷய சூசிகை.

### முதலாம் அம்சம்.


| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| க | ஸூதாகமனம் ... ... | க |
| உ | ஜைகிஷவ்ய தபச்சரியை ... ... | ௩ |
| ௩ | சிவோபாஸனமகிமை ... ... | அ |
| ச | விஷ்ணுவாதிதேவர் வாக்கியம் ... | கஉ |
| ரு | இறைவன் ஜைகிஷவ்யருக்குப் பிரசன்னராதல் | கரு |
| சா | ஜைகிஷவ்ய வரப்பிரசாதம் ... ... | ககூ |
| எ | ஜைகிஷவ்ய ஸ்கந்தஸமாகமம் ... ... | உச |
| அ | ஸ்கந்த தரிசனம் ... ... | உசா |
| கூ | ஸ்கந்த சிவகண சமாகமம் ... ... | உகூ |
| க0 | சிவாஜ்ஞை ... ... ... | ௩உ |
| கக | பன்னிரு அம்சவரலாறு ... ... | ௩ச |
| கஉ | கைலாஸவர்ணனம் ... ... | ௩அ |
| க௩ | கைலாஸேஶ்வர பிரதோஷ பூஜாவர்ணனம்... | ச௩ |
| கச | கைலாஸப்ராகாரவர்ணனம் ... ... | ரு0 |
| கரு | சைலப்பிராகாரவர்ணனம் ... ... | ருஉ |
| கசா | பஞ்சப்ரம்ஹப்ராகாரவர்ணனம் ... | ருரு |
| கஎ | கைலாஸப்ரசாதவர்ணனம் ... ... | ருஅ |
| கஅ | கைலாஸமௌளிவர்ணனம் ... ... | சாஉ |
| ககூ | கைலாஸவர்ணனம் ... ... | சாச |
| உ0 | க்ஷேத்ரவர்ணனம் ... ... | சாசா |
| உக | பிராணிகதி நிரூபணம் ... ... | எ0 |
| உஉ | கைலாஸலிங்கவர்ணனம் ... ... | எச |
| உ௩ | கைலாஸவர்ணனம் ... ... | எஎ |
| உச | கைலாஸவர்ணனம் ... ... | எகூ |

| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| உரு | கைலாஸவர்ணனம் ... ... | அ0 |
| உசா | கைலாஸவர்ணனம் ... ... | அஉ |
| உஎ | தேவிபூஜா சரிதம் ... ... | அசா |
| உஅ | கைலப்பிராஸாதவர்ணனம் ... ... | அஎ |
| உகூ | அஷ்டசைவேஶவர்ணனம் ... ... | அகூ |
| ங0 | அஷ்டசைவேஶவர்ணனம் ... ... | கூக |
| ஙக | சதுர்த்துவாரவர்ணனம் ... ... | கூஉ |
| ஙஉ | ஸபாவர்ணனம் ... ... | கூங |
| ஙங | சபாநடனவர்ணனம் ... ... | கூரு |
| ஙச | சதுர்விதபுருஷார்த்த மண்டபவர்ணனம் ... | கூஎ |
| ஙரு | கைலாஸ லிங்கவர்ணனம் ... ... | கூஅ |
| ஙசா | கைலாஸேஶ்வரலிங்க பூஜா கதனம் ... | க00 |
| ஙஎ | கைலாஸவாஸ மஹிமை ... ... | க0ங |
| ஙஅ | கைலாஸ லிங்க மண்டல பூஜாகதனம் ... | க0ரு |
| ஙகூ | லிங்கவைபவ கதனம் ... ... | க0சா |
| ச0 | கைலாஸ ப்ராக்த்வார லிங்கநாமகதனம் ... | க0அ |
| சக | கைலாஸ தக்ஷணத்வார லிங்க கதனம் ... | கக0 |
| சஉ | பச்சிமத்வார லிங்க கதனம் ... ... | ககஉ |
| சங | கைலாஸ உத்தரத்வார லிங்க நாமகதனம் ... | ககரு |
| சச | கைலாயகிரி தவமியற்றல் ... ... | ககஅ |
| சரு | கைலாஸகிரி வரப்ரதானம் ... ... | கஉ0 |
| சசா | கைலாஸ கர்வபங்கம் ... ... | கஉஉ |
| சஎ | வேதரஹஸ்ய கதனம் ... ... | கஉசா |
| சஅ | லிங்கோற்பவ ரகஸ்யகதனம் ... | கஉஅ |
| சகூ | சிவஸ்வரூப கதனப்ரார்த்தனை ... | கஙக |
| ரு0 | விபூதி கதனாரம்பம் ... ... | கஙச |
| ருக | விபூதி கதனம் ... ... ... | கஙஎ |
| ருஉ | விபூதி கதனம் .. ... ... | கஙகூ |
| ருங | தேவி வெளிப்படுதல் ... ... | கசங |
| ருச | உபநிஷதஸ்துதி ... ... | கசச |
| ருரு | உபநிஷதப்ரதிபாதநம் ... ... | கசசா |
| ருசா | தேவர்கள் சிவபூஜை செய்தது ... | கசகூ |
| ருஎ | மகாலிங்க தரிசனம் ... ... | கருஉ |
| ருஅ | ஆத்மலிங்க கதனம் ... ... | கருங |
| ருகூ | உபநிஷது லிங்க கதனம் ... ... | கருஎ |
| சா0 | உபநிஷது லிங்க பூஜாமகிமை ... | கசாஉ |


முதலாம் அம்சம் முற்றிற்று.

சிவமயம்.

# இரண்டாம் அம்சம்.


| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| ௧ | விநாயகர் வணக்கம் ... ... | ௧-௧௬௭ |
| ௨ | தேவி தவமுரைத்தல் ... ... | ௩-௧௬௯ |
| ௩ | தேவி விப்ரசம்வாதம் ... ... | ௪-௧௭௦ |
| ௪ | அம்பிகேசாலய தரிசனம் ... ... | ௧௭௭ |
| ௫ | அம்பிகேச பூஜாகதனம் ... ... | ௧௮௧ |
| ௬ | ஈசுவராகமனம்... ... ... | ௧௮௫ |
| ௭ | இறைவன் தேவியை உபசரித்தல் ... | ௧௮௮ |
| ௮ | மணித்வீப சிருஷ்டி ... ... | ௧௯௦ |
| ௯ | மணித்வீப கமனம் ... ... | ௧௯௨ |
| ௧௦ | மணித்வீப கமனம் ... ... | ௧௯௫ |
| ௧௧ | அமராபய தானம் ... ... | ௧௯௭ |
| ௧௨ | மணித்வீப வர்ணனம் ... ... | ௨௦௧ |
| ௧௩ | மணித்வீபப் பிரவேஸம் ... ... | ௨௦௪ |
| ௧௪ | ஸ்ரீ சக்ராலய தரிசனம் ... ... | ௨௦௫ |
| ௧௫ | இறைவனும் இறைவியும் காமேஸ்வர காமேஸ்வரியாய்க் கிரீடித்தல் ... ... | ௨௦௮ |
| ௧௬ | ஸ்ரீ சக்ராலயஸ்வரூப வர்ணனம் ... | ௨௧௧ |
| ௧௭ | ஸ்ரீ சக்ராலய வாசம் ... ... | ௨௧௨ |
| ௧௮ | ஹிமவான் கைலாயகிரி யடைதல் ... | ௨௧௩ |
| ௧௯ | ஹிமவானது சிவதரிசனம் ... ... | ௨௧௭ |
| ௨௦ | தேவி மேனையோடு கைலாயத்தில் சஞ்சரித்தல் | ௨௨௧ |
| ௨௧ | தேவி விலாசம் ... ... | ௨௨௨ |
| ௨௨ | ஹிமவான் கைலாயப் பிரதேச தரிசனம் ... | ௨௨௪ |
| ௨௩ | ஹிமவான் கைலாயப் பிரதேச தரிசனம் ... | ௨௨௭ |
| ௨௪ | ஹிமவான் சப்தத்வீபங்களையும் பார்த்தல் ... | ௨௨௯ |
| ௨௫ | ஹிமவானது ப்ரார்த்தனை ... ... | ௨௩௩ |
| ௨௬ | இறைவன் இமவானுக்கருளுதல் ... | ௨௩௫ |
| ௨௭ | தூர்வாச தபோவர்ணனம் ... ... | ௨௩௭ |
| ௨௮ | தேவி ஹிமாலயாகமனம் ... ... | ௨௪௧ |
| ௨௯ | தூர்வாசர் செய்த தேவிஸ்துதி .. | ௨௪௪ |
| ௩௦ | தேவஸ்திரீகள் தேவியை யடைந்து துதித்தல் | ௨௪௭ |


இரண்டாம் அம்சம் முற்றிற்று.

சிவமயம்.

# மூன்றும் அம்சம்-பூர்வபாகம்.


| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| க | சிவரகசிய வரலாறு ... ... | உ௫உ |
| உ | காயத்திரீ வரப்ரசாதம் ... ... | உ௫அ |
| ௩ | வியாசமுனி சம்வாதம் ... ... | உ௬௫ |
| ௪ | தேவி கைலாஸஞ் செல்லுதல் ... ... | உ௭0 |
| ௫ | தேவி கைலாயஞ் செல்லுதல் ... ... | உ௭௪ |
| ௬ | தேவி கைலாயஞ் செல்லுதல் ... ... | உ௭௬ |
| ௭ | தேவி கைலாயஞ் செல்லுதல் ... ... | உஅக |
| அ | தேவி நாட்டியங்காணல் ... ... | உஅ௭ |
| ௯ | நந்தீசகணாதிப சம்வாதம் ... ... | உ௯௩ |
| க0 | கணேச சிவசந்நிதான சமாகமம் ... | உ௯௭ |
| கக | கணேச பிரார்த்தனை ... ... | உ௯௯ |
| கஉ | சிவகணேச சம்வாதம் ... ... | ௩0௩ |
| க௩ | சிவகணேச சம்வாதம் ... ... | ௩0அ |
| க௪ | ஸ்கந்தர் சிவசந்நிதான மடைதல் ... | ௩கக |
| க௫ | ஸ்கந்த கணேசர் தேவியை யடைதல் ... | ௩க௫ |
| க௬ | நந்தீஸ்வர குமார சம்வாதம் ... ... | ௩உ0 |
| க௭ | குமாரர் சிவாபராத முரைத்தல் ... | ௩உ௭ |
| கஅ | பிருங்கிமுனிவரது வருகை ... ... | ௩௩௪ |
| க௯ | தண்டி வருகை ... ... | ௩௩௭ |
| உ0 | சிவகேளி விலாசம் ... ... | ௩௪0 |
| உக | இறைவன் குமாரர்களுக் கருளுதல் ... | ௩௪௪ |
| உஉ | சிவநிவேதன மகிமை ... ... | ௩௫உ |
| உ௩ | சிவநிவேதன மகிமை ... ... | ௩௫௯ |
| உ௪ | சிவபெருமான் ரேவாநதிக்கரையை யடைந்தது ... ... ... | ௩௬௫ |
| உ௫ | சாம்பசிவபூஜை ... ... | ௩௭0 |
| உ௬ | சிவபூஜாமகிமை ... ... | ௩௭௪ |
| உ௭ | சிவபூஜாமகிமை ... ... | ௩அக |
| உஅ | நந்திகேசர் தேவர்களுக்குச் சிவமகிமை யுரைத்தது ... ... | ௩அ௬ |
| உ௯ | நந்திகேசர் சிவதர்ம முரைத்தது ... | ௩௯க |
| ௩0 | சிவபக்தர் மகிமையுரைத்தது ... ... | ௩௬அ |

| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| ௩௧ | சிவபக்தர் மகிமையுரைத்தது ... ... | ௪௦௨ |
| ௩௨ | சிவபக்தர் மகிமையுரைத்தது ... ... | ௪௦௮ |
| ௩௩ | சிவநைவேத்ய போஜனபலன் ... ... | ௪௧௩ |
| ௩௪ | நாரதர் சிவதர்மங் கூறியது ... ... | ௪௧௮ |
| ௩௫ | அகஸ்தியர் ஸ்ரீ சைலநாதரைத் துதித்தது ... | ௪௨௫ |
| ௩௬ | தீர்த்தேச லிங்கமஹிமை யுரைத்தது ... | ௪௨௫ |
| ௩௭ | தக்ஷயாகம் ... ... ... | ௪௨௯ |
| ௩௮ | தக்ஷயாகம் ... ... ... | ௪௩௬ |
| ௩௯ | தக்ஷயாகம் ... ... ... | ௪௪௨ |
| ௪௦ | தீர்த்தேஸார்ச்சகர்களுக்கு அனுக்கிரகித்தது | ௪௫௨ |
| ௪௧ | கமலலோசனையின் சிவோபாசனை ... | ௪௬௪ |
| ௪௨ | நந்திதேவர் சாம்பவரை அறிவித்தது ... | ௪௭௧ |
| ௪௩ | யாக்ஞவல்கிய ஜனக சம்வாதம் ... | ௪௭௭ |
| ௪௪ | ஜனகன் முத்திஸாதனம் வினவியது ... | ௪௮௨ |
| ௪௫ | ஜனகன் சிவோபாசனை செய்யாமைக் கிரங்கல் | ௪௮௮ |
| ௪௬ | யாக்ஞவல்கியர் சிவஞ்ஞான ஹேது கூறியது | ௪௯௪ |
| ௪௭ | குரு சதாநந்த சம்வாதம் ... ... | ௫௦௧ |
| ௪௮ | சூரசேன சரித்திரம் ... ... | ௫௦௭ |
| ௪௯ | பிரதோஷ பூஜாமஹிமை ... ... | ௫௧௨ |
| ௫௦ | தர்மதர்மங் கூறியது ... ... | ௫௧௭ |


மூன்றும் அம்சம் பூர்வபாகம்

முற்றிற்று.

ஸ்ரீகணேசாயநம:

மகேதிகாசமாகிய

# சிவரகசியம்.

## முதலாம் அம்சம்.

### முதலாம் அத்தியாயம்.

ஸ்ரீ ஸூதாகமனம்.

[illegible]
[illegible]

வாசனையாகிய இருளுக்கு ஆதித்தியர்களாய் விளங்கும் சாம்பவர்களது பாதாரவிந்ததூளிகளை யாம் சிரசால்வணங்குகின்றோம்.

பூர்வம் மாகேஸ்வரமெனும் மகா வேள்வியானது நடந்தேறி வருங் காலத்தில் அங்குதெய்வகதியாய் எழுந்தருளிய பைப்பலாதரெனும் சூதரை வாஜஸ்ரவசர்களாகிய அவ்யாககர்த்தர்களான முனிவர்கள் எல்லோரும் கண்டு மகிழ்ச்சியெய்தினர். கிருஷ்ணாஜினமெனும் மான்றோலைத்தரித்தவர்களும் பஸ்மோத்தூளன திரிபுண்டரங்களால் விளங்கும் மேனியுடையவர்களும், உருத்திராக்ஷாபரணங்களைத்தரிப்பவர்களும், யக்ஞேஸ்வரனாகிய மகாருத்திரனை வேள்வியாலும், சிவலிங்கத்திலும், அக்னியிலும், ஆதித்தியனிலும் மகா பக்தியுடன் பூஜிப்பவர்களும், ருத்திர சூக்த ஜபத்தில் பேராவலுடையவர்களும், பஞ்சாக்ஷரத்தை ஆவர்த்திசெய்பவர்களும், சிவநாமபாராயணர்களும், பஞ்சவக்திரராகிய பரமேஸ்வரனைத் தியானம்செய்பவர்களுமாகிய அம்முனிவர்கள் சூதரை அர்க்கியம் ஆஸனம், போஜ்யம் முதலியவைகளால் பூஜித்துக் குசலப்ரஸ்னம் செய்து வணங்கி நிற்கையில் அவர்களுள் மகாதபஸ்வியாகிய மௌனிபார்க்கவர் என்னும் முனிவர் சூதரைநோக்கி, ஓ பைப்பலாதரே! மாகேஸ்வரமாகிய யாகத்தைச் செய்கின்ற யாங்கள் உமது வரவினால் தன்யரானோம். நீர் ஸ்கந்தர் நந்தி இவர்களுக்கு நிகரான சிவபக்தரன்றோ? பூர்வம் ஜைகிஷவ்யரெனும் மகாதபஸ்வியாகிய சந்நியாசியானவர் ஸ்கந்தரிடம் சிவாக்ஞாப்பிரபாவத்தால் சிவரகஸ்யமெனும் இதிஹா

ஸோத்தமத்தை சிரவணம் செய்தாரன்றோ? முக்கண்ணரது அபார சரிதம் அடங்கியதும்,பன்னிரண்டு அம்சங்களுடன் கூடியதும் ஆகிய அவ்விதிகாசத்தை மகோபாசகராகிய நீர் அபாரபக்தியால் எளிதில் யறிந்தீரன்றோ? எண்ணிறந்த முனிவர்கள் இருக்க நீரொருவரே யதனை யறிதற்கு அருகரானீர். சிவசம்பந்தமான ரகஸ்யமும், சிவ மகிமாரத்தினங்களுக்கு மஹா கோசமுமாகிய அவ்விதிகாசமானது பூர்வம் சிவபெருமானால் உமாதேவியாருக்கும், பிறகு அவ்வுமாதேவியாரால் ஸ்கந்தருக்கும், பின்னர் ஸ்கந்தரால் மகாசாம்பவரும் உமது குருவுமாகிய ஜைகிஷவ்யரின் பொருட்டும் உபதேசிக்கப்பட்டுளது என்னும் விருத்தாந்தத்தை நாங்கள் கேள்விப்பட்டிருக்கின்றோம். அதனை நீர் எங்களிடம் கருணைகூர்ந்து உபதேசித்தருளல் வேண்டும். அதுமிக்க ரகஸ்யமாயினும் சிவபெருமானிடம் மகா பக்தியுடையவர்களாகிய எங்களுக்கு உரைக்கத்தக்கதே. யாங்கள் மாகேஶ்வரயாகத்தால் பாவனராயிருக்கின்றோம். எங்களுக்கு சுவர்க்கமுதலிய உலகங்களிலும், சரீரத்திலும், புத்திரமித்திர களத்திராதிகளிலும் விருப்பமில்லை. விரக்தர்களாகிய எங்களுக்கு அச்சிவரகஸ்யத்தைக் கூறியருளும். நீர் ஞான தானஞ்செய்யும் குருவாதலின் சிவசமானராகின்றீர். நீரே எங்களுக்குத் தாய்தந்தையராதலின் கருணைகூர்ந்து எங்களுக்குக் கூறுங்களென்று வேண்டிக்கொண்டனர். அவ்வாறு அஞ்சலிபந்தஞ்செய்து கேட்டுக்கொள்ளும் முனிவர்களது ஒப்புயர்வற்ற சிவபக்தியைநினைத்து அகமகிழ்ந்தவராய் சூதர் சொல்வாராயினர்.

ஓ முனிவர்களே! மகேஶ்வரனது கிருபைக்கு பாத்திரராகிய நீங்கள் யாகத்தாலும், தானங்களாலும், தவத்தாலும் பரிசுத்தமானவர்கள். அன்றியும் இப்பொழுது தீக்ஷாவிருதங்களால் மிகத்தூய்மையுடையவர்களாய் வேதாந்த சாரார்த்த விசாரத்தில் நிஷ்டைபெற்றிருக்கின்றீர்கள். உங்களுக்கு உரைப்பதில் யாதுதடையுளது? அதனுள் முதலாம்அம்சத்தைக் கேட்பீராக. பகவானது பேருளுக்காளாகிய ஜைகிஷவ்யரெனும் எனது குரு பூர்வம் மகாருத்திரனைக்குறித்து அபாரபக்தியுடன் ஆஹாரமின்றிப் பதினாயிரவருடகாலம்அருந்தவம்புரிந்து அற்புதமாகியசிவப்பிரஸாதத்தைப்பெற்றனர்.

முதலாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

கஜாநநாயநம:

# இரண்டாம் அத்தியாயம்.

## ஜைகீஷவ்யதபச்சரியை.

[illegible]

[illegible]

தேவீஸ்துதி:

[illegible]

[illegible]

[illegible]

சிவஸ்துதி:

[illegible]

சூதர், ஓ முனிவர்களே! பஞ்சவக்த்திரராகிய பரமசிவனது வதனகமலங்களில் மகரந்தம்போல்வனவும் மரணமென்னும் பிணியையகற்றுவனவுமாயுள்ளன ஐந்து சுருதிகளாம். இவ்வைந்து சுருதிகளின் சாரமும் ஏனைய சகல வேதபாகங்களின் கருத்துமாயுள்ள சிவரகஸ்யாமுதசாரத்தை, ஓ அந்தணவரர்களே! வேண்டுமளவும் அருந்துவீர்களாக. பஞ்சவதனனை தியானிப்பதால் பரிசுத்தமுள்ளவர்

களாகிய ஓ முனிவர்களே! இதனைச்சிரவணஞ்செய்தால் பஞ்சபாதகங்களினின்று விடுபட்டு முத்தியடையலாகும். பஞ்சபூதங்களையும்பஞ்சகோசங்களையும் கடந்தவனாகிய பரசம்புவினது கிருபைக்குக் காரணமாயுள்ள இச்சிவரகஸ்யத்தைக்கேட்டு ஜன்மம்ஜரைமுதலிய துக்கங்களினின்று விடுவித்துக்கொள்ள முயலாதவன் தன் வாய்க்கெட்டிய பாயசான்னத்தை விடுத்து அசுத்தமாகிய எலிமூத்திரத்தைப் பானம்பண்ணினவனாகின்றான். அவன் மகாமோகங்கொண்டவனாய்க் காமக்குரோத ஜராதிகளால் பீடிக்கப்பட்டவனாய்,பாபங்களை யார்ச்சித்து யமன் வசப்பட்டு அல்லற்படுவானென்று கூறினார்.

அதனைக்கேட்ட முனிவர்கள் அதிகசந்தோஷத்துடன் சூதரை நோக்கி, ஓ சூதரே! சர்வ குருவாகிய ஜைகிஷவ்யமகாமுனிவர் எப்படிப் பரமசிவனைத் தவத்தினால் திருப்திசெய்வித்து என்னபயனைப் பெற்றனர்? அதனை எங்களுக்கு விஸ்தாரமாகக்கூறியருளும். சாம்பவ சரித்திரத்தைக் கேட்பதில் நாங்கள் மிகவும் விருப்பமுற்றிருக்கின்றனம் என்று பிரார்த்திக்க, அதனைக்கேட்டு மிகவும் மனமகிழ்ந்தவராகிய சூதர் தமது ஹ்ருதயகமல மத்தியத்தில் பரமேஸ்வரனைத் தியானித்து, அபாரமான ஞானத்தை யளிப்பதான அத் திவ்ய சரித்திரத்தைக்கூறுகின்றேன். ஓ முனிவர்களே! வாயு சலிப்பதும், சூரிய சந்திர நக்ஷத்திரங்கள் சுற்றிவருதலும், சமுத்திரம் அணைகடவாதிருத்தலும் சம்புவினது லீலாப்பிரபாவமேயன்றோ? ஜைகிஷவ்யரது தவவரலாற்றைக் கேட்டவர்களுக்கு ஜன்மதாரணமாமன்றோ என்று கூறலாயினர்.

பூர்வம் ஜைகிஷவ்ய மகாமுனிவர் ஹிமயகிரியையடைந்து,பாசுபதவிரதம் பூண்டு, அக்கினிரிதி என்றற் றொடக்கத்தனவாகிய மந்திரங்களால் விபூதிபூசித் திரிபுண்டரமணிந்து, சிரம் கண்டம் கை முதலிய விடங்களில் ருத்திராக்ஷ கிரீடஹார கங்கணங்களை யணிந்து பஞ்சாக்ஷரத்தைத்தியானித்து, ருத்திரத்தை யாவர்த்திசெய்துகொண்டு வேனிற்காலத்தில் பஞ்சாக்னி மத்தியிலும்,மாரிக்காலத்தில் வெளியிலும், பனிக்காலத்தில் ஜலமத்தியிலும் நின்றும், கனி, இலை, ஜலம், காற்று இவற்றைப் புசித்தும் மிக்க கடூரமாய்ப் பதினாயிர வருடம் தவஞ்செய்தனர். இங்ஙனம் ஸ்ரீ ருத்திரமூர்த்தியிடம் மிக்க தீவிரமாய் லயித்த சித்தமுடையவராகிய அம்முனிவரது கோரிக்கையை இன்னதென்றறிய பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய சகலதேவர்களும் வந்தனர். அப்படி வந்தவர்களைச் சிறிதும் பாராது சிவ

பராயும், ஜிதேந்திரியராயும், ஊர்த்துவரேதஸராயும், ருத்திராக்ஷத்தைச் சிந்தித்தவராயுமிருந்த முனிவரை அவர் யாவரும் தத்தம் வாகனங்களின் மீதிவர்ந்து சர்வாபரண பூஷிதர்களாய்ச் சூழ்ந்து நின்று அவரது அருந் தவத்தைக்கண்டு ஆச்சரியமுற்று இருக்கும் போது அவர்களுள் பிரம்மதேவர், ஓ பிள்ளாய்! எழுந்திரு. உனது தவத்தால் மிக்க திருப்தியடைந்தோம். உனக்குக் கொடுக்கக்கூடாத பொருள் முவுலகிலும் ஒன்றும் இல்லை. உனக்கு நிகராகிய ஜிதேந்திரியனும் மகாதபஸ்வியும் ருத்திராவர்த்திசீலனும் உலகில் எவனுமில்லை. நீஜராமரணமற்றவனாய் எம்முலகினும் வைகுண்டசுவர்க்க முதலிய விடங்களினும் இஷ்டப்படி போகங்களைப் புசித்துக்கொண்டு சஞ்சரிப்பாயாக. சுவர்க்கலோகத்தில் நந்தனவனத்தில் எந்த அப்சரஸ்திரீகளோடுங் கூடியவனாய்ப் பலகாலும் ரமித்துக்கொண்டு அமுதத்தையும் புசிப்பாயாக. பற்பல யக்ஞங்களால் அடையக்கூடியதாகிய இந்திரசதசில் நிகரற்றவனாய் விளங்குவாயாக. எண்ணிறந்த பசுக்களையும் அறுவகையுண்டிகளையும், ஏனையவைகளையுங் கொடுத்தலாகிய பதினாறு வகைத்தானங்களாலும், சத்திரம், மண்டபம், மடம், படித்துறை, உத்தியானம் இவைகளைக் கட்டுதல், சாலை மரங்கள்வைத்தல், பில்வம் முதலிய புண்ணிய விருக்ஷங்களை வளர்த்தல், எண்ணிறந்த கன்னிகைகளைத் தானஞ்செய்தல், பற்பல விரதங்களை யனுஷ்டித்தல் இவை முதலிய புண்ணியங்களாலுமே கிடைக்கக்கூடியதாகிய எம்முலகிலும் போகங்களை யனுபவிப்பாயாக. ஓ பிள்ளாய்! வஜ்ஜிரதரனாகிய இந்திரனும் ஐராவதாரூடனாய் உனக்குவேண்டியவைகளைக்கொடுக்க வந்திருக்கின்றனன். இனி யான் எப்படிப்பட்டவனென்று நினைக்கின்றனை? சர்வஜகத்தையும் உண்டாக்குகின்றவனும் வாக்தேவிக்குக்கணவனுமாகிய உத்தமன்யானென்பதையறியாயோ? எனது புதல்வர்கள் சகலலோகங்களையும் சிருஷ்டிக்கும் புலஸ்தியன், புலகன், அத்திரி, கஶ்யபன், மனு, அங்கிரஸன், நாரதன், தக்ஷன், வீதிஹோத்திரன் என்னும் பிரசித்திபெற்ற நவப்பிரஜாபதிகளன்றோ? சாக்ஷாத் நான்முகனாகிய யானே உனக்கு வரமுதவவந்திருக்கின்றேன். எழுந்து வேண்டியதைப் பெற்றுக்கொள்வாயென்று கூறினார்.

அப்பொழுதுகருடாரூடராகிய விஷ்ணுமூர்த்தி அருகில்வந்து ஓ ஜைகிஷவ்யா! உனக்கு வேண்டியதுயாது? சகலாதாரனும் சங்க சக்ரகதாதரனுமாகிய யானே உனக்கு வரமளிக்கவந்தேன். எனது மகிமையை நீயறியாயோ? எனது சாரங்கத்தின் தொனி

யைக் கேட்டமாத்திரத்தில் சகல அசுரர்களும் நடுங்கிஒடுங்குகின்றனர். வராகம், நரசிம்மம் முதலிய உருவத்தோடு ஹிரண்யாக்ஷ கசிபுக்களை வதஞ்செய்தும், முரன், மது, கைடபன், இராவணன் முதலிய பலகொடியரையும் யுத்தத்தில் செயித்தும் தேவர்களைக்காப் பாற்றியவன் லக்ஷ்மீபதியாகிய யானே! பாற்கடல் நிலயமும், ஆதி சேஷப்பாயலும் எனக்கன்றோ வாய்ந்துள்ளன? எத்திசையும் பரவிய காந்தியுடைய கௌஸ்துபமென்னும் மணி மார்பிலும், ஆயிரம்ஆரங்களுடைய சக்ராயுதம் கையிலும் தரித்திருக்கின்றேன். சிறகுக்காற்றினால் சப்தசமுத்திரங்களையும் வற்றச்செய்யும் பராக்கிரமசாலியாகிய கருடனே எனது வாகனம். எனது நாபிகமலத்தில் தோன்றியவனே சகலசராசரங்களையும் சிருஷ்டிப்பவன். எவ்வுலகிலும் எனது கீர்த்தியே வியாபித்துளது. எனது பிரசாதத்தாலேயே சகலருக்கும் சகலசித்திகளும் உண்டாகின்றன. அப்படிப்பட்ட யான் உனதுகோரிக்கையை நிறைவேற்ற எதிர்வந்திருக்கின்றேன். சற்று கண்விழித்துப்பார்ப்பாயாக. யான்உனதுதவத்தால் பிரசன்னமானேன். இனி உனக்குத்தவம் யாதுக்கென்றனர்.

இவ்வார்த்தைகளைக்கேட்ட காமாரியினது தியானத்தினால் சகலகாமங்களையும் உதறிய சுந்தரராகிய ஜைகிஷவ்யமாமுனிவர் சகல தேவர்களையும்,முன்னேநிற்கும்விஷ்ணுவையும் பார்த்துஓவிஷ்ணோ! நீரும், பிரமனும் கூறியனவெல்லாம் உண்மையே. இந்திரனுடைய ஐஸ்வர்யமும் ஆச்சர்யகரமானதேயாயினும் அவை நிஷ்காமனாகிய எனதுசித்தத்தை பிரமிக்கச்செய்யா. மகாமேருவை சாமானியவாயு வேர்களைந்து எறியமாட்டாததுபோல உமதுவார்த்தையால் என் மனம் சிறிதுஞ்சலிப்பிக்கப்படுவதல்ல. ஹேவிஷ்ணோ! செப்படவா கந்திகையின் புதல்வனும், ஏனையசித்தர், அசுரர், அரசர், பாலர்முதலியவர்களுமே உமது அவதாரமகிமையையறிவார்! நாங்கள் அறிகின்றிலம்! ஹரரதுபாதாரவிந்தத்தைத்தியானித்துச் சுத்தசத்துவமாதல் ஒன்றையேயறிவோம். ஓ கதாதரரே! சாம்பவர்களிடம் நீர்கர்விக்கக்கூடாதன்றோ? யாம் நித்தியாநித்தியத்தை நன்கறிந்து சகல காமங்களையும் துச்சமென்று தள்ளியவர்களன்றோ? காமங்களைக் கருதியவர்களே நீர்கூறிய உலகங்களையடைதல்வேண்டும். உம்முலகிலும் சத்தியலோகத்திலும், சுவர்க்கத்திலும் வசிப்பவர் காலாந்தரத்தில் கீழ்நழுவுகின்றவரேயன்றோ? பலகோடி ஜன்மங்களில் பற்பலதுக்கங்களை யநுபவித்துப் பின்னர் ஏதோ புண்ணியவசத்தால்

கிடைத்த மானுடப்பிறவியில் விஸ்வேசனது கிருபாவசத்தால் வித்தையும் ஞானமும்வாய்ந்தவனன்றோ முத்தியடைபவன்? விஷ்ணுப்பிரமேந்திராதிகளது லோகபோகம் புண்ணிய லேசத்தினாலேயே கிடைக்கக்கூடியது. அரம்பைமுதலியவர்களோடு போகித்தலாலும், மாலை, சந்தனம், வஸ்திரம், ஆபரணம்முதலியவைகளாலும் என்ன சுகம்? ஹே விஷ்ணோ! உமதுபோதனையால் நிஷ்காமர்களாகிய ஸ்ரோத்திரியர்களது மனஞ் சலிக்கப்பெறுதன்றோ? சம்சாரத்தில் மூழ்கிய மனதுடைய பாமரர்களே காமவசர்களாய்க் கலக்கமுற்று எப்போதும்போகத்தையேவேண்டுவர். வீணில்போககோலாஹலஞ் செய்து நரகவாயிலில் அகப்பட்டுத்தவிக்கும் செய்கையுடையவர்களுக்குத் தத்துவத்தில்புத்திசெல்லாது. சந்திரமௌளியினதுபாதாரவிந்தத்தில் செலுத்திய மனமுடையவர்களுக்குக்காமவசனங்களால் சலனமும்நரகதுக்கமும்எப்படிவரும்? அவர்களே நிர்ப்பயர்களான அமரர்களாவார். ஹரனது பாதத்தில் விருப்பமுடையவர்களும் விஸ்வபூதான்மாக்களுமாகிய எங்களுக்குக் காணவிஷயமாய்க் கிடைக்கும் போகங்களில் சிறிதும் விருப்பமில்லை. இந்திரனும், பிரமாவும், நீரும் பிரகிருதிபரவசர்களே. நீங்கள் அனைவரும் பசுபதியின் பிரசாதத்தாலேயே இப்பதங்களைப்பெற்றிருக்கின்றீர் என்பதைநான்அறிந்திருக்கின்றேன். பசுக்களுட்சிறந்தவராகிய உங்களது வரத்தால் எனக்குவேண்டியது யாது? பசுபதியின் சரணாரவிந்தத்தைத்தியானிப்பதில் விருப்பமுள்ள மனமுடைய எனக்குப்பவத்தில் ஆசை எங்ஙனம்வரும்? திரிநேத்திரனிடஞ்சென்று பிரசன்னமாகிய மனமுடைய எனக்கு உங்களதுபதங்களால் என்னபயன்? சகலமும் விஸ்வேஸ்வரனிடமிருந்து உதித்து நின்று அவனிடமேமீண்டும் ஒடுங்குகின்றன. தேவர்களும் சகலசராசரமுங் கயிற்றிற்கற்பிக்கப்பட்ட அரவம்போன்றது. முக்காலத்தினும் உள்ளது கயிறொன்றே. அதனிடந்தோன்றிய அரவம்போல இவ்வுலகெல்லாம் எனும் புத்தியானது முக்தியின்பொருட்டாகும். அப்படிப்பட்ட புத்தியானது சம்புவின் கிருபையால் உதிப்பதாம். சங்கரகதாமுதபானம், சிவலிங்கார்ச்சனை, விபூதிதாரணம், ருத்திராக்ஷமாலாதாரணம், சதருத்திரநாமார்த்த விசாரம்முதலியவைகளுக்கு அந்நியமாய வேறெதனையும் விரும்பாத சாம்பவர்களே ஜன்மதவங்களால் இப்பூமண்டலத்திற் பாவனர்களாயுள்ளவர்கள். மாரனது அபாரமாகிய சரங்களாகிய குங்குமங்களுக்குச் சிலைபோன்றவரும், சராசரத்தைவிசாரித்துத் தீரமாகிய சித்தமுடையோரும், விஸ்வாதீசனைப் பூசிப்

போரும், பாபங்களைத் தொலையச்செய்பவர்களுமாகிய ஹரபக்தர்களே சம்சாரஸாகரத்தினின்றுந் தாரணஞ்செய்விப்பவர். அங்ஙனமாகிய எங்களிடம் நீர்காம்யபோகங்களைச் சிறப்பித்துக்கூறி மயக்க முடியுமா என்றனர்.

இவ்வாறுகூறியஜைகிஷவ்யருடைய உதாரமாகிய வசனாமுதத்தைக்கேட்டு விஷ்ணுவாதி சகலதேவர்களும் பரமானந்தமடைந்து அஞ்சலிபந்தஞ்செய்து அருகில்வந்து நின்றுவணங்கி அவரதுசித்தம் சிவனிடம்சென்றிருப்பதையும் உணர்ந்து, ஓ முனிவரே! சர்வேசனது பாதாரவிந்தத்திற் சென்ற மனமுடைய நீரே சாம்பவபுங்கவர். உமதுமனதைப் பரிக்ஷிக்கவெண்ணி ஏதோதவறாய்ச் சில சொன்னோம். நிஷ்காமரும் நிரங்குசரும் ஸ்வாத்மாராமரும், சகல போகங்களையுந் துச்சமாய்த்தள்ளியவருமாகிய நீர் எங்களது அபராதத்தை க்ஷமித்துக்கொள்ள வேண்டுமென்றுகூறி தங்கள்தங்கள் வாகனங்களினின்றுமிறங்கி முனிவரை யாலிங்கனம்செய்து யாமே தன்யர்கள் என்றுமகிழ்ந்து, ஆனந்தபாஷ்பம்பெருக நமஸ்கரித்து அம்முனிவர்வாக்கினால் சிவசரித்திரத்தைக்கேட்க விரும்புகின்றோம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு நின்றனர்.

இரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

கணாத்யக்ஷாயநம:

## மூன்றாம் அத்தியாயம்.

### சிவோபாஸனமஹிமை.

ஜைகிஷவ்யர் விஷ்ணுவாதிதேவர்களை நோக்கி, ஓ தேவர்களே! எனது மனதிலுள்ள பொருள் இன்னதென அறியக்கூறுகின்றேன், கேட்பீராக. ஸர்வக்ஞத்துவமானது எவனிடத்துளதோ அவனே என்மனதிலுள்ள பொருளாகின்றான். எவன் சகல வேதாந்தங்களாலும் அறியப்படுகின்றவனோ, எவனை முமுக்ஷுக்கள் தியானிக்கின்றனரோ, எவனது மூச்சுக்காற்று நான்குவேதங்களோ, எவன் பிரம்மவிஷ்ணுருத்திரர்களுக்கு ஜனகனோ, சூரியாக்கினி சந்திரேந்திரவாயுவாதி தேவர்களைத் தோன்றச்செய்தவனோ பரமேஸ்வரனாகிய அவ்விறைவனுக்குக்காரணம் யாதுமில்லை. அவனே சகலத்

திற்குங் காரணம். எவன் விப்பிரர்களாற் பற்பல வேறுபட்ட கிரியைகளால் ஆராதிக்கப்படுகின்றானோ, எவன் அக்கினிஷ்டோமத்தால் அருளுகின்றானோ, எவன் சகல பூதங்களிலும் அசங்கனாய் உள்ளவனோ, விகாரப்பொருள்களுள் நிர்விகாரனாய் உள்ளவனோ, எவனை ராகமற்றவர்கள் சூக்ஷ்மபுத்தியாற் காண்கின்றனரோ, எவன் தியான ஜபயக்ஞ உபவாசங்களாற் காணப்படுகின்றானோ, எவன் இந்திரியங்களையும் மற்றுமறியப் படும் பொருள்களையும் அறிகின்றானோ, எவன் மனோவாக்குகளுக்கு அகோசரனோ, எவனிடமிருந்து சராசரங்கள் தோன்றி நிலைபெறுகின்றனவோ, கற்பாந்தத்தில் எவனிடம் ஒடுங்குகின்றனவோ அவன் ஒருவனே பரமேஸ்வரன். எவனுக்குக்கால் கைகள் இல்லையோ, எவனுக்குக் கண்காதுகள் இல்லையோ, எவன் அருகிலும் தூரத்திலும் உள்ளும்புறம்பும் உள்ளவனோ அவன் சத்தியக்ஞானானந்தன்; ஹேயகுணங்களற்றவன்; குணங்கடந்தவன்; ஸ்வதந்திரன்; பூர்ணன்; அவனாலேயே இச்சகமெலாம் நிரம்பியுள்ளது; அவன்நித்யன்; சேதனர்களுக்குச் சேதனன்; பதிகளுக்கும் பதியாகிய ஈஸ்வரன்; எவ்விறைவனொருவனே சிலந்திப்பூச்சி நூற்களை உண்டாக்குதல்போல சராசரமாகியஜகத்தையுண்டாக்குகின்றானோ, எவனது சொரூபத்தை யறியாததனால் தேகத்தை யான்மாவென்று எண்ணுகின்றனரோ, எவனது உருவத்தையறியாது இந்திரியங்களையும் மனதையும் ஆன்மாவாயெண்ணுகின்றனரோ, எவனது சொரூபத்தை யறியாமற் பூதங்களை யான்மாவென்கின்றனரோ, எவனது சொரூபத்தை யறியாமல் எல்லாவற்றையும் ஆன்மாவென்கின்றனரோ, எவனுக்கு ஆகாசம் சரீரமோ, எவனை ஆகாசம் அறிந்திலதோ, எவனுக்குப் பூமிசரீரமோ, எவனை பூமியறிந்திலதோ, எவன் மனம் சக்ஷுமுதலியவைகளை நியமனஞ்செய்கின்றவனோ, எவனது காந்தியால் சோமசூர்யாக்கினிகளுடன் கூடிய ஜகம்விளங்குகின்றதோ, எவனிடத்தில் பயத்தினால் வாயுமுதலியவர் தத்தந்தொழிலின் முகத்தனராகின்றனரோ, எவனது மாயையின் விலாசமானது சராசரமாகிய ஜகமோ, அவனே மாயையையுடைய பரமேசானன்; அவனாலேயே இச்சகம் நிலைபெறுகின்றது. அசரீரனும் அலிங்கனுமாகிய யாதொருவன் யோகிகளால் காணப்படுகின்றானோ, எவனையறிந்தமாத்திரத்தில் சகலமும் அறியப்பட்டதாகின்றதோ, ஞானமாயும், ஆன்மாவாயும், யானையும் உள்ளவனவனே. பரமான்மா அவன் ஒருவனே. ஏனைய பற்பலவிதமான பின்னப்பொருள் யாதுமில்லை. எவனொருவனே ஞானவானாய் ஈசானிகளாகிய சத்திகளால் ஆளுகின்

உ

றானோ, மகாருத்திரனாகிய எவனொருவனே எங்கும் வியாபித்துள்ள புருஷனோ அவ்வான்மா ஒருவனையே ஏனைய பொருள்களை விடுத்து அறியவேண்டும். எவனை யறிந்தமாத்திரத்தால் மனிதர்களுக்கு மனோமோகம் நீங்குகின்றதோ, எவனது ஏகத்வத்தை யறிந்து மனிதன் துக்கத்தைத் தாண்டுகின்றானோ ஜோதிகளுக்குச் சோதியும் தமஸுக்குத்தமஸும் அவனே. அவனொருவனே சகல பூதங்களினுமிருந்து மாயையால் பலவாய்த்தோன்றுகின்றான். எவன் ஜாக்கிரம் சுவப்னம், சுழுத்தி முதலியவைகளில் மறைபட்டுக் காணப்படுவதில்லையோ, எவன் தனதருளாலேயே சூக்ஷ்மமாகிய புத்தியைத்தந்து தன்னைக்காண்பிக்கின்றனனோ, அவன் தவத்தினாலேயே யறியவேண்டியவனன்றி ஏனையகர்மங்களால் அறியப்படுபவனல்லன். எவன் வேதாதியில் ஸ்வரமெனும் பிரணவமாயுள்ளவனோ, எவன் வேதாந்தங்களில் நிலைபெற்றுள்ளவனோ, சகல பூதங்களும் சுஷுப்தியடைந்திருக்கும்போது எவனொருவனே விழித்திருக்கின்றனனோ, எவனிடமிருந்து பிராணமனங்கள் உதித்தனவோ, எவன் எக்காலத்திலும் மாறாதவனோ, எவனிடமிருந்து பஞ்சப்பிரம்மங்கள் உதித்தனவோ, எவனிடமிருந்து சகலதேவர்களும் பிரமவிஷ்ணு ருத்திரேந்திராதியர்களும்பிறந்தனரோ, எவனொருவன் பிரம்மமோ, பிரம்மவித்தோ, எவனையறிந்தமாத்திரத்தினால் இம்மையிலேயே பிரம்மத்தை யடைகின்றனரோ அவனே பிரமா விஷ்ணு மற்றுமுள்ளதேவர்களுமாய்விளங்குகின்றான். அவ்விறைவனேஹேது. அம்மகாதேவனொருவனே இந்திரன் மித்திரன்முதலிய தேவர்களென மாயையால் எண்ணப்படுகின்றனன். இச்சகத்தை எவன்சிருஷ்டித்து அதனுட்பிரவேசித்து நாமரூபங்களை நிலவுவித்து விவகாரமுடையவன்போல் தோன்றுகின்றானோ, எவன் போக்தாவாயும் போக்கியமாயும், சகலங்களையும் நடாத்துவானாயும் உள்ளவனோ, எவனுக்கு அன்னியமாய் வேறாகதியில்லையோ, அசரீரியாயினும் தன்மாயையால் சரீரிபோல் இருக்கின்றானோ, எத்தேவன் அன்னபானாதிபோகங்களை அடைந்து போகிபோற்றோன்றுகின்றானோ, சர்வேந்திரியாதீதனும் அவ்யக்தனுமாயினும் எவன் வியக்தனாய்த்தோன்றி லீலையாகவே ஜகத்தைப் போஷிக்கின்றானோ, அவித்தையினின்றும்முத்தியடைவிக்கின்றானோ, எவன் ஆதாரமற்றவனாயினும் சகலத்திற்குமாதாரனோ, எவன் தனதுமகிமையில் நிலைபெற்றவனோ, யதிகள் வேதாந்தங்களால் எவனைச் சிரவணஞ்செய்தும் மோகிக்கின்றனரோ, எவனொருவன் அவ்விறைவனை அடைகின்றனனோ அவனுக்கே ஆன்மாவிளங்குகின்றான். பண்

டிதர்களுக்கும்பாமரர்களுக்கும் யாதொருவன் ஆத்மபூதனாய் இருக்கின்றானோ, ஜகத்தின் ஜன்ம மரணங்களால் எவன் சிறிதும்மாறுபாடடைவதில்லையோ, ஜகத்தின் சுகதுக்கங்களோடு எவன் சிறிதும் சம்மந்திப்பதில்லையோ, எவனை யறிந்தால் அறியவேண்டியது யாதுமில்லையோ, எந்த விஸ்வேச்வரனை அறியாது துக்கத்தைத் தொலைப்பதில்லையோ, யாதொருவன் ஸ்தாணுபோற்சலனமற்றுளனோ, யாதொருவன் ஜீவனல்லனாய் எவ்வுபாதியுமற்றவனாகின்றானோ, எவன் எப்போதும் ஆனந்தகரனோ, யாதொருவன் இரண்டாவன் மூன்றாவன் முதற்பலவானவனுமல்லையோ அவனே பரமானந்தன். ஓ சுரர்களே! இச்சகமெல்லாம் பொய்யாய்ப்போவதே. யாதொருவன் தமசுகடந்தவனும், மனோவாக்குக்கு அதீதனுமானவனோ, எவனது பலவாகிய சக்தியானது சுபாவமாய் ஞானமளிப்பதோ, யாதொருவன் சதசத்பக்ஷமற்று வேதாந்தமொன்றிற்கே கோசரனாய் மகாமேதாவிகளால் சூக்ஷ்மமாகிய புத்தியால் காணப்படுகின்றவனோ, யாதொருவன் ஜீவகோடிகளின் முத்தியின்பொருட்டு முக்கண்ணனும் கறைக்கண்டனும் பெண்ணொருபாதியனும், பிரமதநாதசேவியனும் விநாயகசுப்ரமண்ய ஜனகனுமாய் ஸ்ரீகைலாசகிரியையடைந்து அருளிக்கொண்டிருக்கின்றானோ, எவ்விறைவனது லிங்கார்ச்சனத்தினால் திரிலோகாதிபத்தியம் கிடைக்கின்றதோ, ஓ விஷ்ணோ! எவனது அருளால் உம்மால் விஷ்ணுத்வமும், சக்கராயுதமும், பிரம்மனால் சிருஷ்டிசாமர்த்தியமும், இந்திரனால் அசுரஜயமும்தேவராஜ்யபோகமும் அடையப்பட்டுளதோ, எவன் ஹிரண்யபாகுவும் ஹிரண்யபதியும் தேவதேவனுமான ஈசானனோ, அவ்விறைவனொழிந்த ஏனைய பிரம்ம விஷ்ணு ருத்திராதிதேவர்களெல்லோரும் கர்மதேவர்களாய் அவனது ஆணைக்கடங்கி இருக்கின்றவர்களன்றோ? பிரமனது சிரசு லீலையாகவே அவனால் சேதிக்கப்பட்டது. இந்திரனதுபுஜமும் எந்த தயாளுவால் ஸ்தம்பமாய்ச் செய்யப்பட்டதோ, எவனது பக்தனுடைய சாபத்தால் ஓ விஷ்ணோ! உமக்குப் பத்துப்பிறவிகள்வந்தனவோ, வராகம், நரசிம்மமுதலிய அவதாரங்களும் எவனால்சிக்ஷிக்கப்பட்டனவோ, அவையெல்லாம் யானறிகின்றேன். நீங்களெல்லோரும் ஞானமிகுந்த பசுக்களேயன்றோ? பசுபதியே எம்மிறைவன். அவனையே சரணமடைந்துள்ள என்போன்றவரிடஞ் சிறிதுங் கர்வங்கொள்ளாதேயுங்கள். இனியான் தியானத்தைவிடுத்து உங்களோடுவசனிப்பதுந் தகுதியல்ல என்றுசொல்லி அம்முனிவர் முன்போல் தியானபரராகவிரும்பி அவ்விறைவனது மகிமையைநினைந்து

ஆனந்தபரவசராய், ஓ பகவனே! பிரம்மமாகிய யாதொருவனின்றி ஜகமில்லையென்று எவர் ஈஸ்வரனாகிய உம்மையறிகின்றனரோ அவர் சம்புபதத்தையடைந்து சுகிப்பாரன்றி துக்கஹேதுவாகிய இவ்வுலகையடைவதில்லை. உமது பாஹுக்களுக்கும் தனுஸுக்கும் கையிற்கொண்ட பாணங்களுக்கும் பயப்படாதவர் யாரிருக்கின்றனர்? உமதுபாணங்களுக்கும் லக்ஷ்யமாயிருக்கிறவர்களுக்கும் நமஸ்கரிக்கின்றேன். ஓ சுவாமி! உமதுநாணை தனுஷ்கோடியினின்றும், இறக்குங்கள். சரங்களையும் ஆயுதங்களையும் அம்பராத்தூணிகளையும் தூரத்தில்வைத்தானிட்டுக் கருணையுடன்நோக்குங்கள். சிவசம்மதர்களாகிய சாம்பவர்கள் பயப்படக்கூடாதன்றோவென்று துதித்து, விஷ்ணுவை நோக்கி, ஓ விஷ்ணோ! சாம்பவர்களுக்கு உமதுவரங்களால் என்ன பயன்? ஈஸ்வரனது பாதாரவிந்தத்தைத்தவிர வேறொன்றையுஞ் சிந்திப்பாரில்லை. யாம்அற்பமாகியபயன்களை நாடுகின்றிலேம். என்போன்ற சந்திரசூடார்ச்சகர்களாகிய மகாபாக்கியவான்களுக்கு உமதுபதத்திலாவது பிரம்மேந்திரலோக போக்கியத்திலாவது வாசனைசிறிதும் நிகழுவதில்லை. மகாபர்வதத்தின் கொடுமுடியில்வசித்து மதயானைகளைப்பிளந்துகொண்டிருக்கும் சிம்மமானது புல்லைப்புசிக்குமோ? அதுபோலவேயன்றோ உம்மிடம் வரங்களை விரும்புதலாமென்று சொல்லி நின்றனர்.

மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
விக்நராஜாயநம:

## நான்காம் அத்தியாயம்.

### விஷ்ணுவாதிதேவர்வாக்கியம்.

தேவர்கள் முனிவரைப்பார்த்து ஓ முனீச்வரரே! உமது மனோபாவத்தை அறியவந்தனம். இதுகாறும் நீர்போற்றிய இறைவனே சகலவேண்டுதலையும் நிறைவேற்றுவோன். அங்ஙனமாகிய இறைவனைச் சரணமடைந்த உமக்குக்கூடாதகாரியம் இம்மூவுலகில் யாதுளது? உமதுமனம் எப்பொழுதும் சிவபாதாரவிந்தத்தையே தியானிக்கின்றதன்றோ? எவர்மனதில் விஸ்வேசனது பாதாரவிந்தம்விளங்குமோ அவர்களுக்கு விநஸ்வரங்களாகிய காமபோகங்களில் விருப்பம்வருமோ? அவர்கள் மஹேஸ்வரனது கிருபையால் அபாரமான

பக்தியுதித்தவர்களாய் முத்திபெறுவார்கள். எந்தபக்தியினால் முக்தர்களாய் ஏனையோர்களையும் முக்தியடைவிக்கலாகுமோ அத்தகையபக்திவாய்ந்த சைவர்களே பெரியோர்களாவார். விரூபாக்ஷனிடம் பக்தியுடன் சிவலிங்கத்தில் பில்வபத்திரம் கனி விபூதி இவைகளுள் ஒவ்வொன்றாலும் பூஜித்தால்அது மஹாஐஸ்வர்யத்தையும் முக்தியையும்அளிக்கும்.பஸ்மம்பூசி திரிபுண்டரந்தரித்து ருத்திராக்ஷங்களாலாகிய கிரீடங்களையும் மாலைகளையும் அணிந்து பஞ்சாக்ஷரஜபாவர்த்தியும் ருத்திரஜபத்தையும் செய்பவர்களாய்ச் சிவலிங்கார்ச்சகராய் சிவக்ஷேத்திரவாசிகளாய் சிவநைவேத்தியம் புசிப்பவர்களாய் மனோவாக்குக்காயங்களால் வேறொன்றையும்நாடாது சிவத்தியானத்தால் ஆனந்தமெய்தி சிவகதாசிரவணஞ்செய்யும் மஹாசாம்பவர்கள் கர்மதேவராகிய எங்களை ஓர்பொருளாக எண்ணுவதில்லையே. ஓ முநிவரே! உமது மனோநிலைமையைப்பெற்றமுநிவர் யாவருமில்லை. இரத்தினநிதியை ஏராளமாய்க்கிடைக்கபெற்றவன் மண்கட்டியையும் விரும்புவனோ?சிறந்த பெரியயானையின் முதுகிலிருப்பவன் கழுதைமேலேற விரும்புவனோ? கற்பகவனம் கிடைக்கப்பெற்றவன் எருக்கஞ்செடி நிறைந்தபூமியை விரும்புவனோ. இரத்னமயமாகிய ஹாரத்தையணிந்தவன் பித்தளைக்காசுமாலையை விரும்புவனோ. காமாரியைத் தியானிக்கும் புண்ணியவான் கர்மதேவராகிய எங்களது போகத்தைவிரும்புவனோ? ஓ முநிவரே! சைவோத்தமர்களுள் நீரே பரமதன்யர். உம்மைத் தெரிசிப்பதனால் சகலபாதகங்களும் நீங்கும். உலகவியாபாரத்தில் விஸ்வேசரது ஆணையால் ஏவப்பட்ட நாங்கள் எப்பொழுதும் கஷ்டப்பட்டுக்கொண்டு சிறிதும் சாந்தியின்றி சம்சாரவிஷயங்களையே பரமென்று நாடுகின்றோம். ஓ முநிவரே! உமது திவ்ய வசனாமுதத்தை யருந்தி இப்பொழுது சாந்தியடைந்து ஆனந்த நிலைமையைப்பெற்றிருக்கின்றோம். சாம்பவசிரேஷ்டர்களது சங்கமே பிரஹ்மவிஷ்ணு இந்திராதிகளாகிய எங்களாலும் விரும்பப்படுகின்றது. சம்புவினது மகிமை யபாரமன்றோ? காலகூட விஷஜ்வாலையால்தகிக்கப்பட்ட எங்களிடங்கருணையால் அவ்விஷத்தையுண்டு ரக்ஷித்தவரும், மிக்க குரூரத்தன்மைவாய்ந்த திரிபுரர்களை வதைக்க மாகாமேருவை வில்லாகவும், விஷ்ணுவாகிய என்னைப் பாணமாகவும், சர்ப்பராஜனை நாணாகவும், பிரமனைச்சாரதியாகவும், வேதங்களைக்குதிரைகளாகவும், சூரியசந்திரர்களைச் சக்கரங்களாகவும், பூமியைத் தேராகவும், சகலதேவர்களையும் சேனைகளாகவும், வாயுவைக்குதிரைக்கயிறாகவும், ஆக்கிக்கொண்டுப்புறப்பட்டு அப்

புரங்களை யெறித்தவனுமாகிய தேவனை விஸ்வாதிகன் என்பதில் என்னதடையுள்ளது? நாங்கள் பசுக்கள். சிவன்பசுபதி. பசுக்களாகிய எங்களை மாயையாகிய பாசத்தால் கட்டியிருப்பவன் அந்தசங்கரனே. எவனது லிங்கத்தைச் சகல தேவர்களும் யாமும் பூஜிக்கின்றோமோ அவனுக்கு யாங்களெல்லோரும் பரதந்திரர்களே. அவ்விறைவனே கருணையால் ஜீவர்களை முக்தியடையச் செய்கின்றான். பூர்வம் யான் நேத்திரகமலத்தால் அர்ச்சித்து அவ்விறைவனிடமிருந்தே சகலாசுரர்களையும் தகிக்கும் சக்கராயுதத்தைப்பெற்றுக் கொண்டேன். காலனுக்கு வசப்பட்ட மார்க்கண்டேயனையும், அரசன் புதல்வனாகிய ஸ்வேதனையும் காலபாசத்தினின்றும் விடுவித்துக்காத்தருளியவன் சிவனேயன்றோ? யானும் பிரமனும் லிங்கரூபியாகிய எவனது அடிமுடிகளைத்தேடித் தேடிக்காணாது வாட்டமுற்றனமோ, பூர்வம் உபமன்யுவுக்குக் காணாதிபத்தியத்தையும், சிலாததனயனுக்குச் சாரூப்யத்தையும், மிக்க பக்தியுடையவனும், அதற்கிடையூறு செய்வானிடம் பெருங் கோபமுடையோனுமாகிய சண்டேசனுக்கும், அசுரன்புதல்வனாகிய பாணனுக்கும் காணாதிபத்யத்தை யருளியவனும் அந்த ஈஸ்வரனேயன்றோ. நிந்தைசெய்த பிரமனை வீரபத்திரரால் சிக்ஷித்தவனும், எனது அவதாரங்களாகிய மத்ஸிபம் கூர்மம் வராகம் நரசிம்ஹம் முதலிய வுருவங்களை சரபாதி வுருவங்களைப்பெற்று சிக்ஷித்தவனும் சிவனே. இன்னும் எண்ணிறந்த தேவாசுரமுநிவர்களது விபத்துகளை நீக்கியருளியவனும், மன்மதன் அந்தகாசுரன் கஜாசுரன் முதலியவர்களையும் சிக்ஷித்துவதைத்தவனும் அவ்விறைவனே. அவனருளே இந்த இந்திரனது கையை வபிரத்தானுக்கு நிகராய்ச்செய்தது. அபாரமகிமையுடையோன் அவனே. யாதொருவன் அபரிச்சின்னனென்றும், வேதாந்தமொன்றுக்கே விஷயனென்றும் உபநிடதங்கள் கூறுகின்றனவோ, எவனை மஹாஸத்திரமென்னும் யாகத்தால் பூஜிக்கின்றனரோ, எவனைத்தானங்களாலும் தவத்தாலும் பக்தியாலும் பூஜையாலும் உபவாசத்தாலும் திருப்திசெய்வித்து தேவருஷிமுநிவர்கள் விரும்பிய சித்திகளைப்பெற்றிருக்கின்றனரோ, அவனே விஸ்வனும், விஸ்வத்தைக்கடந்தவனும், விஸ்வேசனும், விஸ்வபாவனனுமாம். அவனுக்குக் காரியமுமில்லை. காரணமுமில்லை. கிரியையுமில்லை. விசித்திரமாகிய அவனது சத்தியே எல்லாமாய்த்தோன்றுகின்றது. அவனது மாயையாலேயே சகல சுராசுரர்களும் மோகித்து நிற்கின்றனர். ஜன்மஜராமரணதுக்கங்களை யனுபவிக்கின்றனர். அவனது

ஆஜ்ஞையாலேயே ஜகத்தாகிய சக்கரம் சுற்றுகின்றது. அக்னி சகல தேவர்களுக்கும் அவிர்ப்பாகங்களைக்கொடுப்பதும், சூரியசந்திர நக்ஷத்திரங்கள் சுற்றிவருவதும், காற்றுசலிப்பதும், மேகம்வருஷிப்பதும், பூமி சகலத்தையும் தரிப்பதும், பதினன்கு உலகங்களையும் சேஷன் சுமப்பதும், யான் சகல ஜகங்களையும் ரக்ஷிப்பதும், பிரமன் சிருஷ்டிப்பதும், உருத்திரனழிப்பதும், இந்திரன் அசுரர்களை யடக்கிச் சங்கரித்துத் தேவர்களைக்காப்பதும், யமன் பாவிகளைவாட்டுவதும், குபேரன் நிதிகளைக்காப்பதும், வருணன் சகல தீர்த்தங்களையும் ஆளுவதும், ஈசானன் ருத்திரர்களையும், நிருதி அரக்கர்களையும் ஆளுவதும், அவ்விறைவனது ஆணைக்குப்பயந்தேயன்றோ? சாமவேதத்தாலும் சதருத்திரீயத்தாலும், மஹோபநிஷத்வாக்கியங்களாலும் சிவனே பரம்பொருளென்றும் நன்றாயறியலாகின்றதே. அப்படிப்பட்ட இறைவனைப்பற்றிய உமது மகிமையை என்னவென்று கூறுவோமென்றுபோற்றி சகலதேவர்களும் அம்முநிவரை வணங்கித் தத்தமிடஞ்சென்றனர்.

நான்காம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

விநாயகாயநம:

## ஐந்தாம் அத்தியாயம்.

### இறைவன் ஜைகிஷவ்யருக்குப் பிரஸந்நராதல்.

சூதர் கூறுகின்றார். ஓ ருஷிகளே! இவ்வாறு போற்றப்பட்ட ஜைகிஷவ்யமாமுநிவர் பின்னும் நெடுங்காலம்முன்னினும் தீவிரமாகிய தவத்தை இயற்றிக்கொண்டிருந்தனர். அவர்மேல் புற்றுவளர்ந்து புற்பூண்டுகளும் வியாபித்துக்கொண்டன. அவரது தவத்தால் சகலலோகங்களுந்தபிக்கப்பட்டன. அப்படியிருக்க நாரதர் வீணையைக்கையிலெடுத்துக்கொண்டு சிவநாமங்களைப்பாடிச் சஞ்சரித்துக்கொண்டு தற்செயலாய் இமயமலையின் சிகரத்தில்வர, அங்குபுற்றடியிலிருந்து தவஞ்செய்யும் ஜைகிஷவ்யரைப் புற்றின் துவாரத்தாற் கண்டு அவரது உருத்திரத் தியானத்தையும், உருத்திராத்தியாய அர்த்த விஞ்ஞானத்தையும் அறிந்து ஆச்சரியமுற்றவராய் அம்முநிவரைநோக்கிக் கூறியதாவது:

நாரதர், ஓமுநிவரே! உமது தவத்தால் உலகெல்லாம் தகிக்கப் படுகின்றன. நிஷ்காமராகிய உமக்கு வேண்டப்படும்பொருளொன் றுளதோ? உம்மைப்போன்ற நிஷ்காமபரிபாகியை யான் கண்டு மிலேன், கேட்டுமிலேன். குமாரப்பருவமுதல் பிரமசரியத்திலேயே உமது மனம் நிலைபெற்றுளது. ஊர்த்துவரேதஸ்தன்மையானது உமக்கேயுளது. உம்மைத் தெரிசித்ததனால் கிருதார்த்தனாயினேன், உமது பிரபாவமானது பிரமலோகம் விஷ்ணுலோகமுதலிய விடங் களிலும் பரவிவிளங்குகின்றது. உமது உக்கிரமாகிய தபோநிஷ்டை யைப்பார்த்துச் சகல முநிவர்களும் திகைத்திருக்கின்றனரென்றார். இவ்வாறு நாரதர் கூறியதைக்கேட்டதும் அம்முனிவர் ஜரேலென வெழுந்துவந்து மரியாதைசெய்து உட்கார வுபசரிக்கவே, நாரதர் உட்கார்ந்தனர். உடனே ஜைகிஷவ்யர் ஓ நாரதமஹாமுனிவரே! எவ்வுலகினும் சஞ்சரிப்பவரும், அபாரதபோமகிமை பெற்றவரு மாகிய நீர் யாதானும் விசேஷஞ்செய்திருந்தால் அதை எனக்குக் கூறுங்களென்றனர். அதற்கு நாரதர் ஓ முனிவரே! வைகுண்டம் சத்தியலோகம் சுவர்க்கலோகமுதலிய உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றேன். அங்கு புண்ணிய போக்யங்களை யனுபவிக்க வந்திருக்கும் எண்ணிறந்த அரசர்களையும் முநிவர்களையும் பார்த் திருக்கின்றேன். புண்ணியபோக முடிந்தவுடன் வீழ்ந்து பற்பல யோனிகளிற்பிறந்து அல்லற்படாதவனைக்கண்டிலேன். எவர்களது பிரசாதத்தால் அபார ஐஶ்வர்யமாகிய சுவர்க்காதி போகங்களைப் புசிக்கலாமோ அப்படிப்பட்ட பிரஹ்மவிஷ்ணுவாதிதேவர்களை நீர் திரஸ்கரித்துவிட்டீர். காமாரியின் பாதாரவிந்தத்தையே தியானஞ் செய்து சகல காமங்களையும் துச்சமாய்நினைத்துத் தள்ளிவிட்டீர். உமது மனநிலைமையைக்கண்டு பிரஹ்மவிஷ்ணு முதலிய தேவர் களும் முனிவர்களும் திகைத்திருக்கின்றனர். இதோ யான் கைலா யஞ்சென்று உமதுதவச்சிரமையை ஜகதீஶ்வரனிடம் விஞ்ஞாபனஞ் செய்கின்றேனென்றுகூறி உடனே அவ்விடம்விட்டுப் புறப்பட்டு எண்ணிறந்த ருத்ரகணங்களாலும், நந்தி பிருங்கி மஹாகாளர்முதலிய கணநாதர்களாலும், உருத்திரகன்னிகைகளாலும், அப்சரஸ்களா லுஞ் சூழப்பட்டும், கணபதி ஸ்கந்தர்களது ஆலயங்களாலும், பாண சண்டேஶ்வராலயங்களாலும், சுவர்ணமயமாயும் ரத்னமயமாயுமிலங்கு கின்ற கோபுரகும்பங்களாலும்விளங்குவதும்பற்பல புஷ்பபலமுடை ய விருக்ஷவகைகளாலும், மலர்ந்தபங்கஜ நீலோத்பலங்களால் அழ கிய சரசுகளாலும், விருக்ஷபக்ஷிகூட்டங்களாலும், கிளி மயில் குயில்

முதலியபறவைகளின் ஒலிகளாலும், சங்கம்பேரி மட்டு மத்தளம் துந்துபிமுதலியவாத்தியங்களின் முழக்கத்தாலும் குகையெல்லாம் எதிரொலியிடப்பெற்றதும், இறைவனருகிலுள்ள மாளிகைகளில் கந்தர்வர் முதலியவர்களின் கானங்களாலும், வீணாநாதங்களாலும், முரளிவாத்தியத்தால் சரளிலீலாவிலாசகானஞ்செய்யும் அப்சரக்கூட்டங்களாலும், கின்னரமங்கையர்களின்நடனங்களாலுந் திவ்யானந்தவிலாசம்பொருந்தியதுமான கைலாசத்தையடைந்து நாரதமாமுனிவர் அதன் துவாரவாசலருகிற் செல்ல அங்குசடைமுடி புனைந்து விபூதி பூசித்திரிபுண்டரமணிந்து கையிற் பொற்பிரம்பேந்தியவரும், பிரமத கணங்களால் சேவிக்கப்பட்டவரும், சோதியே வுருக்கொண்டு வந்ததோவெனக் காணப்படுவோருமாகிய நந்தீஸ்வரரைக்கண்டு அவரால் மரியாதைசெய்யப்பெற்று குசலவினாவினவி நந்தீசுவரருடன் மிக்கசந்தோஷங்கொண்டு உட்செல்லுபவராய் வீணையை மீட்டிக் கொண்டு,

சிவசிவஹரதேவ ஶாஸநேஶ நகஶரபாஹிதயாகடாக்ஷஸாரைஃ
பவபவஜநிதாம்ருஜம்ஹராஸ- ப்ரமதாதீஸ்வரவீர தீரபாஹி.
ஹரிகிரிதநயாஸதோபகண்ட ப்ரபலகராஶ நீலநீலகண்ட [கண்ட.
ஹ்ருதிபவயதிநாம் கிலோபகண்ட ப்ரதிதமஹோரகஶோபிஶோபி

என்பனவாதிகானத்தைப்பாடவே நந்தீஸ்வரரும் ஏனையகணத்தலைவரும் அதைக்கேட்டுப் பரமானந்தமெய்தினர். உடனே நந்தீஸ்வரர் கைகட்டி யஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு பராத்பரனாகிய பரமேஸ்வரன் சந்நிதானத்தையடைந்து சர்வசராசரங்களுக்கும் அதீசராகிய சம்போ! தேவரீரது திவ்ய நாமாமுதத்தை எவ்வுலகினும் பரவச்செய்யும் தேவமுநிவராகிய ஸ்ரீ வீணாநாரதர் தேவரீரது பாதாரவிந்தத்தைத் தரிசிக்கப் பேராவல்கொண்டுவந்திருக்கின்றனர். அவர் கோரிக்கையை நிறைவேற்ற ஆக்ஞாபித்தருள வேண்டுமென்று விஞ்ஞாபனஞ்செய்துகொள்ள அதனைக்கேட்டு சர்வேஸ்வரன் நாரதமுநிவரைக்கடாக்ஷத்தினால் நோக்கியருள உடனே நாரதரும் ஆனந்தபரவசராய் ஜயஜய தேவ மஹேசதூர்ஜடே! என்பதாதி நாமங்களைக்கூறிக்கொண்டு சகல வேதாந்தங்களாலும் போற்றப்படும் பாதாரவிந்தமுடைய பரம்பொருளே! சம்போ! மஹாதேவா! தேவரீரது பாதாரவிந்தங்களினின்றும் சிறிதுஞ் சலியாதசித்தமுடையோராய் வெகுகாலந் தொட்டு இமயகிரி சிகரத்தில் தவஞ்செய்துகொண்டு தேவரீரது திவ்ய திருவுருவத்தைத் தெரிசிக்க ஆவல்கொண்

டிருக்கும் ஜைகிஷவ்யமுனிவருக்கருளத் திருவுளங்கொள்ளவேண்டு
மென்று வேண்டிக்கொண்டனர். மஹேஸ்வரர் மிகவுந் திருப்தி
யடைந்தவராய் உடனே ஜைகிஷவ்யருக் கருள்செய்யத் திவ்யவிருஷ
பாரூடராய்ச் சகலவாத்தியங்களு முழங்க சத்திரசாமரத்வஜங்களைத்
தாங்கும் கணங்களாலும், சகல தேவர்களாலும் சூழப்பெற்றவரா
ய்க் கணபதி ஸ்கந்தர்களுடன் ஓர் நொடிப்பொழுதில் இமயகிரிக்கு
வந்து தவஞ்செய்துகொண்டிருக்கும் ஜைகிஷவ்ய முனிவருக்கெதி
ரில் பிரசன்னராய்நின்று தமது திவ்யகடாக்ஷமுதலானது அம்
முனிவரிடம் பாலிக்கவருள்செய்தனர். உடனே ஜைகிஷவ்யமுனிவர்
தவத்தினின்று மெழுந்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அஞ்சலி
பந்தஞ்செய்து ஓ மஹேஸ்வரா! மஹா பாபங்களையுமகற்றும் பரம
னே! த்ரிபுரமாரதகனனே! பவமென்னும் கானகச்சுடருக்கு மஹா
மேகம்போன்றவனே! சந்திரகலாதரா! காளதரகண்டனே! ஸகல
தேவவந்திய சரணாரவிந்தா! மஹா விருஷபவாகனா! தக்ஷயாக
சிக்ஷகா! பகநேத்ரஹரா! சங்கரா! அமரவரோத்தமா! காலகர்
வஹரா! ம்ருகண்டுதனயபூஜிதா! அந்தகாசுர சூதனா! அஹீந்திர
கங்கணா! அர்க்க சந்திராக்னிநேத்ரா! அகிலவேதகீதா! அகிலா
மரேசா! ஆசாம்பரா! யோகீந்திரஹ்ருதயசப்தித மட்டுநாதப்ரியா!
க்ருத்திவாஸா! போகிபூஷணா! முராஹரநயனார்ச்சிதபாதா! ரமார
மணசரா! மகாமேருசாபா! சந்திரார்க்கசக்ராயுதரதா! வேதாஸ்
வனே! விதிசாரதே! அடியேனைக் காத்தருளுங்கள். அடியேனது
பாக்கியமேபாக்கியம். என் தந்தையே! என்னிறைவா! என்னு
யிரே! என்கண்ணே! கருணாநிதே! அடியேனைக் காத்தருளுமென்
றுஸ்தோத்திரஞ்செய்தனர். ஈஸ்வரன் மிக்கதிருப்தியடைந்தவராய்
அவ்வாறு துதித்த முனிவரைநோக்கி ஓ ஜைகிஷவ்யா! உனதுசித்தத்
தின் திடபரிபாகம்போல் உலகில் யாருக்குமில்லை. முமுட்சுவாகிய
நீ ஸகல முனீஸ்வரர்களுக்குஞ்சிறந்தவனாய் வேதாந்தநிஷ்டைபெற்ற
வனாய் ஊர்த்துவரேதஸாய் மதமானலோபமோகமற்றவனாய் எனது
திருவருளுக்காளாய் விபூதிருத்ராக்ஷந்தரித்தவனாய் விமலனாய் விள
ங்குகின்றனையாதலின் உனது பாக்யமேபாக்யமென்றருளினர்.

ஐந்தாம் அத்தியாயம்

முற்றிற்று.

---

உ

த்வைமாதுராயநம:

# ஆறாம் அத்தியாயம்.

## ஜைகிஷவ்யவரப்பிரசாதம்.

இவ்வாறு இறைவன் அருளவே ஜைகிஷவ்யமுநிவர் அவ்விறைவனைநோக்கி ஓதேவதேவேசா! தேவரீரே மாதாவும் பிதாவும், தேவரீரே ஸகலமும், ஓ விஸ்வேஸ்வரா! தேவரீருக்கன்னியமாயாதையுங் காண்கிலேன். தேவரீரது சரணாரவிந்தத்தைச் சரணமடைகின்றேன். தேவரீர் அடியேனுக்கருளவேண்டியவரம் விநாயகரும் ஸ்கந்தரும் எனக்குச் சகோதரர்களாகவும் கணாதிபர்கள் தோழர்களாகவும் கௌரி அன்னையாகவும் தேவரீர் தந்தையாகவும் இருத்தல்வேண்டுமென்பதே. இதற்கு அன்னியமாகிய வேறு எவ்வரமும்வேண்டாம். இப்படிப்பட்ட பெரும்பாக்யத்திற் கேதுவாகிய தேவரீரது சரணாவிந்த பக்தி மேன்மேலும் வளர்ந்தோங்கவேண்டும். எந்தபக்தியால் ஸகலதேவர்களும் அசுரர்களும் முக்தர்களாய் ஏனையோர்களையும் முக்திபெறச் செய்கின்றவர்களாயிருக்கின்றனரோ அப்பக்தியையே வேண்டுகின்றேன். பிரமதேவன் தேவரீரிடம் வேதத்தை உபதேசம் பெற்றவராய் ஸத்யலோகாதிபராய் ஸகல லோகங்களையுஞ் சிருஷ்டிப்பவராயினதும் அத்தகைய பக்தியினாலன்றோ? ஸ்ரீமஹாவிஷ்ணு வைகுண்டாதிபத்யத்தையும் லக்ஷ்மீநாதத் தன்மையையும் நேத்ராம்புஜார்ச்சனையால் சக்கிரத்தையும்பெற்றுத் தைத்யர்களைவதைத்து உலகைக்காத்தலும் தேவரீரது பக்தியினாலன்றோ? ருத்ரருக்குச் சூலாயுதத்தை யளித்து ருத்ராதிபத்யத்தி லபிஷேகித்து இறுதியில் சராசரங்களையும் அழிக்கச்செய்வதும் உமதுபக்தியினாலன்றோ? இன்னும் இந்திரன் சசிபதித்வம் த்ரிலோகராஜ்யம் முதலியவையும் குபேரன் நிதிபதித் வத்தையும் யமன் லோகபாலத்துவத்தையும் வருணன் ஜலாதிபதித் வத்தையும் சூரிய சந்திர வாயு வக்னிகள் தத்தம் பதப்பேற்றையும் அடைந்தது உமதுபக்தியினாலேயே. ஸகல தேவாசுரர்களும் சிவலிங்கத்தையேயன்றோ பூசிக்கின்றனர்? அகில கணமுக்யனாய் ஆயிரம்பாஹுக்களை பாணன்பெற்றதும், பௌலஸ்திய ஸுதனாகிய ராவணன் ஸகலலோகங்களையுஞ் ஜெயித்ததும், அகஸ்தியர்சமுத்திரத்தை ஆசமனஞ்செய்ததும், ததீசிவிஷ்ணுவுக்கு விஸ்வரூபங்காட்டியதும், பிருகுவிஷ்ணுவைச்சபித்ததும், குழந்தையாகிய உபமன்யு பாற்கடலைப் பெற்றதும், மிருகண்டுபுதல்வரும்

ஸ்வேதரும் கழுத்திற்சுற்றிய பாசத்தினின்றும் விடுபட்டுக் காலனை யடக்கியதும், சிலாசனர் அயோனிஜரும் தேவரீர் முன்னிலையில் நின்று ஸகல தேவாஸுரருஷி முனிகணர்களை ஆக்ஞாபனஞ்செய்ப வருமாகிய புதல்வரைப்பெற்றதும், தந்தையைக்கொன்ற சண்டேசர் தேவரீருக்கருகில் ஈஸ்வரத்வம்பெற்று விளங்குவதும், மங்கணகர் பூர்வம் மஹாஸித்திமஹிமைபெற்றதும், சந்திரன் ராஜயக்ஷ்மரோகத்தினின்றும்விடுபட்டதும், யாகத்தில் தீக்ஷிதனாகிய தக்ஷன்சிக்ஷிக்கப்பட்டவனாயினும் அநுக்கிரகம்பெற்றதும், சதர்ச்சனர் வியாக்கிரபாதர் துர்வாஸர் தத்தாத்திரேயர் முதலியவர்களும் பரசுராமர்எனையவர்களாகிய ஸோமசூர்யவம்சத்திற்றோன்றிய அரசர்கள் தேவர் அசுரர்களுமாகிய இவர்களெல்லோரும் அபாரமஹிமைபெற்றிருத்தலுமாகிய இத்தகையபாக்யங்களெல்லாம் தேவரீரது சரணாரவிந்தத்திலுள்ள பக்தியினாலன்றோ? அஃதொன்றினாலேயே சுவர்க்கமோக்ஷங்கள் கிடைக்கின்றன. இவ்விமயகிரியில் என்னால் ஸ்தாபிக்கப்பட்டு கேதாரத்துக்கு மேற்குப் பாகத்தில் விளங்கும் இவ்விலிங்கமானது ஜைகிஷவ்யேஸ்வரர் என்னும் நாமம்பெற்றுளதாய் தெரிசிப்பவரை அக்கணமே தேவரீரது திருவருளுக் காளாக்குவதாயிருக்கும்படிச்செய்து இவ்விலிங்கத்திலேயே தேவரீர் நித்யசந்நிதி பெற்றிருந்தருளவும் வேண்டுகின்றேனென்று வேண்டிக்கொண்டனர். இவ்வாறு ஜைகிஷவ்யர் கூறியதும் ஸ்ரீ மஹாதேவர் ஜகதீஸ்வரியைநோக்கி ஓ கிரிஜே! ஜைகிஷவ்யரது மஹிமையைப்பார்த்தனையா? சம்சாரசமுத்திரத்தில் மூழ்கியிருப்பவர்களைக் கரையேற்றுவதின்பொருட்டு ஓர் திவ்யலிங்க ஆலயத்தை ஸ்தாபித்திருக்கின்றான். ஓ தேவி! எவர்களால் சிவாலயம் ஸ்தாபிக்கப்பட்டுளதோ அவர்களில்லமே லக்ஷ்மிதேவிக் கிருப்பிடமாகும். அவ்வாறேயே சருகுகளைப்புசித்துப் பலகாலஞ்செய்யுந் தவங்களும் ஸகல யாகங்களும் ஸகல வேதாத்யயனங்களும் செய்யப்பட்டனவாம். ஓ சிவே! உன் தந்தையின் சிகரத்திலுள்ள கேதாரேசரென்னும் லிங்கம் முக்திஹேதுவாம். அவ்விலிங்கத்துக்கு வடக்கில் இம்முனிவனால் பிரதிஷ்டிக்கப்பட்டதும் என்னால் அவன் சம்பந்தமான பெயரைப்பெற்றதும் ஆகிய லிங்கத்தைப்பார். எவனால் பிரதிஷ்டிக்கப்பட்டாலும் அவ்விலிங்கத்தில் யான்அதிஷ்டித்திருப்பவனாவேன். ஓ பவானி! முக்திக்குச்சாதனமாயுள்ள பிரதோஷசமயத்தில் மனதினாலாவது காயத்தினாலாவது எவன் என்னைப்பூஜிப்பானோ அவனே சர்வோத்தமமாகிய பரிபாகம்பெற்றவனாய் என்னிடம் வேண்

டியவரங்களைப்பெற்றுக்கொள்வதற் குசிதனுவான். யாவராயினும் இம்மூவுலகில் உத்துங்கமாகிய லிங்கத்தை மிக்கவழகானகோபுரத்து வாரகதவு தோரணப்பிராகார மண்டபங்களைச் சொர்ணமயமாகிய கும்பங்களோடுகூட ஜ்வலிக்கும்படி யமைக்கின்றானோ அவன் அநேககோடி ஜன்மங்களிற் செய்த மஹாபாபங்களினின்றும் முக்தியடைகின்றான். அழகியமலையிலாவது நதிக்கரையிலாவது கிராமத்திலாவது புரத்திலாவது திவ்யதீர்த்தத்திலாவது வனத்திலாவது கங்காதடத்திலாவது நர்மதாநதி தீரத்திலாவது மஹா க்ஷேத்திரங்களிலாவது லிங்கப்பிரதிஷ்டைசெய்வானாயின் அவனதுமஹிமை அபாரமேயாகும். வெகுகாலமாய் உள்ளதாயினும் நவீனமாயினும் இந்துசேகரனாகிய என்னிடம் பக்தியுடன் சிவலிங்கத்திற்கு மண் மரம் சிலை செங்கல் முதலியவைகளா லமைத்துச் சுண்ணாம்புச் சாந்திட்டு திவ்யரத்னத்தால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய சிவாலயஞ் சமைப்பானாயின் உடனே முக்திபெறுவான். உத்துங்கமாகிய சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து சிவாலயத்தையுங்கட்டி வஸ்திரம் சந்தனம் பில்வமுதலியவைகளால் அர்ச்சிப்பானாயின் சிறந்தயானை சுவர்ணம்பூமி குதிரை பசு ரத்னம் இவைகளின் தானங்களாலும் எண்ணிறந்த யாகங்களாலும் யோகங்களாலும் விரதாதிகளாலும் தவத்தாலும் தீர்த்தாடனத்தாலும் கன்னியாதானத்தாலும் ஆகவேண்டியதுயாதுள்ளது? அத்தருமங்களெல்லாம் சிலகாலம் வரையில் சுகமாய்த்தோன்றுமன்றிப் பயனை அநுபவித்தபின்னர் எந்த கஷ்டத்திற்கு ஹேதுவாகிய கதியை யடையலாகுமோ? ஹேதேவி! சிவாலயம் தாபித்தவனுக்குப் பின்னர் துக்கபயமே யில்லை. சந்திரன் நக்ஷத்திரம் நதி சமுத்திரம் முதலியவுள்ளகாலம் வரையில் எனது கணத்தலைவனாயிருந்து பரமானந்தமெய்துவான். அன்னியனால் பிரதிஷ்டிக்கப்பட்டுப் பின்னர் கண்டமாயினும் பிளந்திருப்பினும் ஜீர்ணமாயினும் சிதறுபட்டதாயினும் லிங்கத்தை எவன் உத்தாரணஞ் சிரத்தையோடுசெய்கின்றானோ அவனது ஹ்ருதயத்திலேயே எப்பொழுதும் யான்வசிப்பேன். அவனுக்கு யான் முத்திதருவதிலையமேயில்லை. இது ரஹசியம். எவன் பிரதோஷசமயத்தில் பில்வபத்ரங்களால் சிவலிங்கத்தை அர்ச்சிப்பானோ அவன் திரிலோகத்துக்கு மீசனாய்ப் புத்ரமித்ரகளத்திரசகிதனாய் தனதான்னியங்களோடு ஸமிர்த்தனாய்ச் சுகித்திருந்து பின்னர் முக்தியடைவான். தைலங்களாலாவது நெய்யாலாவது கவ்யத்தினாலாவது மிக்க பிரகாசமாகிய தீபவரிசைகளை நக்ஷத்திரங்கள் விளங்குவனபோல எனது ஆலய கோபுர

பிராகாரங்களில் அலங்கரித்து அகரு குங்கிலியம் சாம்பிராணி முத லியவைகளால் பரிமளிக்கச்செய்பவன் ஸகல பாபங்களையு மொழித் தன்யனாய் வேதாந்தவாக்கியத்தால் கிடைப்பதாகிய திவ்ய ஞானத் தையும் பெற்று முக்தனாவான். கற்பூரக் குவியல்களை மஹாலிங்கத் துக்கெதிரில் தீபித்து விளங்கச்செய்தவன் பாபமஹாபர்வதங்களுக் கு வச்சிராயுதமாகின்றான். சிறு கற்பூரத்தைத் தீபமாக்கி அதனு லென்னை ஆராதிப்பானாயின் அவனது குலம் சத்புத்ரர்களால் ஸகல ஸம்பத்துகளும் வாய்த்ததாய் விளங்கும். கபிலகோவின் கவ்யங்க ளாலும் அல்லது இதர கோக்களின் பாலாலும் நெய்யாலும் தயி ராலும் கனிரசத்தாலும் தேனாலும் கருப்பஞ்சாற்றாலும் பரிமள தீர்த்தத்தாலும் புஷ்பரத்ன சொர்ண தீர்த்தத்தாலும் சிவலிங்கத் தை அபிடேகித்தவன் முக்தியடைகின்றான். கதலிக்கனியாலும் இளநீராலும் எலுமிச்சை ரசத்தாலும் பலாக்கனியாலும் பக்தியு டன் காலையிலும் மாலையிலும் அபிடேகித்தவன் முத்தியடைகின் றான். கிரீஷ்ம (வேனிற்) காலத்தில் சிவலிங்கத்தில் இடைவிடாது திவ்யதீர்த்த தாரையாலும் புஷ்ப ரசத்தாலும் அபிஷேகிப்பவ னுக்குக்கிடைக்கும் பயனின் மஹிமையைமொழிய யாவரால் முடி யும்? பலசென்மங்களிற் செய்தபாவங்களெல்லாம் பறந்துபோம். மலர்ந்த தாமரைமலர்களாலும் மல்லிகை மாலதி சாதி குந்தம் பா டலி வெள்ளெருக்கு கல்ஹாரம் நீலோத்பலம் செவ்வரத்தை மாத ளை புன்னைகை அர்ச்சுனம் சண்பகம் வகுளம் மந்தாரம் வால்ஹார்த கம் மருதாணி கருநீலம் நந்தியாவர்த்தை வாகை பில்வம் ரக்தாம் வதரம் நாகை வன்னி அறுகம்புல் விஷ்ணுகிராந்தி குசம் முதலிய மலர்களால் அர்ச்சிப்பவன் முக்தனாகின்றான். ஹே கௌரீ! பிர தோஷ சமயத்திலும் மற்றுமுள்ள புண்ணியகாலங்களிலுந் தினந் தோறும் சிவலிங்கத்தை மவுத்கல்லியர் சதர்ச்சனர் அத்திரி பிருகு தௌமியருக்கு மூத்தவராகிய கௌதமர் மார்க்கண்டேயர் ததீசி கர்க்கர் சுக்ரர் முஞ்சர் கபி சௌனகர் ஜமதக்னி துர்வாஸர் அங் கிரர் தத்தாத்திரேயர் வியாக்கிரபாதர் ஜாபாலி அகஸ்தியர் முத லிய ருஷிகளும் பலி முரபிது சக்கரன் சூரியன் அக்னி வாயு வரு ணன் குபேரன் யமன் நிருதி ஈசானன் முதலியவர்களும் ஸ்கந்தர் கணபதி நந்தி பிருங்கி தண்டு சண்டி ருடி சுபத்திரகன் வீரன் மஹாபைரவன் முதலியவர்களும் விபூதிருத்ராக்ஷம் தரித்தவராய் ருத்திராவர்த்தி செய்கின்றவர்களாய் லிங்கத்தை அருச்சித்து மஹி மைபெற்றனர். மற்றுமுள்ள முனிவர்களும் சம்சாரத்தினின்று விடு

பட்டனர். பற்பல தெய்வங்களைப்பூஜிக்கும் துர்ப்புத்திகள் என்னை யறிவதில்லை. ஹே உமே! வியாசன் பூர்வம் காசியையடைந்து என் சந்நிதியில் விதிவசத்தால் கைகளைத்தூக்கிக்கொண்டு ஹரியே தெய்வமென்றான். ஆதலின் எனது ரகஸ்யத்தை சற்பாத்திரங்களாகிய சிஷ்யர்களுக்கே உபதேசிப்பது நலம். நீ விபூதி பூசி என்னிடம் அபாரமாகிய பக்தியுடையோராய் விளங்குவோருக்கே எனது ரஹஸ்யத்தைக்கூறுவாயாக. நீ சைவரஹஸ்யத்தை இந்த ஜைகிஷவ்ய முனிக்குச்சிரவணஞ்செய்து வைப்பாயாக. இவனது மனம் சகல வுலகப்பொருள்களையுந் துச்சமாய் வெறுத்துத்தள்ளியது. ஞானம் வேண்டுமென்று சாந்தர்களாயும் தாந்தர்களாயும் வேதாந்தவாக்யங்களை விசாரிக்க விரும்புகின்றவர்களுமாகிய எனது பக்தவரர்களை நீ எப்போதும் ரக்ஷிப்பாயாக. ப்ராக்ஞர்களென்பார் அவர்களே. இம்முனிவனும் அப்படிப்பட்டவனே. சிவபக்தியற்றவனுக்கு இதனை யுரைத்தால் மஹாபாதகமேயாம். ஆதலின் அது வீணையாபாசஹேதுவாமென்றுகூறி இறைவன் தேவியின் முகத்தை நோக்கி ஹே புவனேஸ்வரி! இம்முனிவனை உனது புதல்வனாகப் பார்த்தருளுவாயாக. இவன் ஸகலவேத ரகஸ்யத்தையு மறிந்தவனாக வருளுவாயாக. இப்போது இவன் நமது குழந்தையாகிய ஷண்முகனிடம் அதனை உபதேசிக்கப்பெறுவானாகுக. பூர்வம் யான் இச்சிவரகஹஸ்யத்தைக் கூறும்பொழுது உனது மடிமீதிருந்து ஸ்கந்தனும் அதைக்கேட்டிருக்கின்றான். அவன் அறுமுகங்களினின்றும் வெளிப்படும் அமிர்தரஸமாகிய சிவரஹஸ்யவாக்யங்களால் இம்முனிவனைத் திருப்திசெய்விப்பானாக. இச்சைகிஷவ்ய முனிவன் வாயிலாக மஹா சாம்பவர்களாகிய முனிவரர்கள் உபதேசம் பெறுவார்களாக. வேதாந்தார்த்த விசார ரகஸ்யசாரமாகிய இதனை ஓ ஜைகிஷவ்யா! உன்னை நினைத்தே தேவிக்குக்கூறி யிருக்கின்றேன். அசுரரை அடக்கினவனாகிய ஸகந்தனுக்குத் தேவியின் மூலமாய் உபதேசிக்கப்பட்டது. நீ இப்பொழுது ஸ்கந்தனை யடைந்து அதனைக் கேட்டுணர்வாயாக வென்றருளினார். உடனே ஜைகிஷவ்யமுனிவன் அகிலாண்டகோடி பிரமாண்டங்களுக்குந் தாய் தந்தையர்களாகிய அவ்விருவரையும் வணங்கி சகல முனிவரும் போற்றிப்பின்வர ஸ்கந்தரிடஞ் சென்றனர். ஈஸ்வரனும் தேவியோடுகூடியவராய் ஸகலதேவருஷி முனிகணங்களால் போற்றப்பெற்றவராய்க் கைலாஸஞ் சென்றனர்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

உ

த்விமுகாயநம:

# ஏழாம் அத்தியாம்.

## ஜைகிஷவ்ய ஸ்கந்தஸமாகமம்.

சூதர் கூறுகின்றார். ஓ முனிவர்களே! இவ்வாறு அருளிச் சிவ பெருமான் கைலாயமடையவே ஜைகிஷவ்யமுனிவர் ஸ்கந்தர்சந்நிதியையடையப்போவதையுணர்ந்து பரமசாம்பவர்களாய் அக்கினிரிதி என்பது முதலிய மந்திரங்களால் விபூதிபூசுவோர்களும் த்ரியாயுஷ மந்திரங்களால் த்ரிபுண்டரமணிவோர்களும் ருத்திராக்ஷங்களையே ஆபரணங்களாய் அணிவோர்களும் பஞ்சாக்ஷர ஜபதர்ப்பரர்களும் அதர்வசிரசாலும் அதர்வசிகையாலும் கைவல்லியத்தாலும் பிரணவாக்ஷரத்தாலும் ஜாபால உபநிடதத்தாலும் ப்ருஹதரதந்தரம் வாமதேவ ஸாம முதலியவைகளின் ஜபத்தாலும் சம்ஹிதைகளாலும் ருக்யஜுஸ்ஸம்ஹிதைகளாலும் ருத்ராத்யாயத்தாலும் பஞ்சப்பிரம்ஹத்தாலும் பரமேஸ்வரனைத் தோத்திரஞ்செய்கின்றவர்களும் முப்பொழுதும் லிங்கார்ச்சனைசெய்கின்றவர்களும் பஞ்சருத்திரபாராயணர்களும் பில்வாதிமலர்களால் மஹேசனை அர்ச்சிக்கின்றவர்களும் சிவநிவேதனசேஷத்தைப் புசிக்கின்றவர்களும் மஹாவைராக்யபாக்யம்பெற்றவர்களும் நித்யாநித்ய வஸ்து விவேக முடையவர்களும் வேதவேதார்த்த தத்வ முணர்ந்தவர்களும் அக்னிஹோத்ரர்களும் யக்ஞாதிகளையியற்றியதனால் மிக்கதூய்மைவாய்ந்தவர்களும் மஹா தபஸ்விகளுமாகிய மார்க்கண்டேயர், மவுத்கல்யர், ஜமதக்னி, பிருகு, துர்வாஸர், ச்யவனர், கர்க்கர், வீதஹவ்யர், அனலாசனர், கௌதமர், அத்திரி, பரத்வாஜர், தால்ப்யர், ஹயவிரர், மநு, உசித்தர் அக்கினித்வஜர், ததீசி, மௌனிபார்க்கவர், வியாசர், பராசரர், குண்டர், கவி, அங்கிரர், மது, உபமன்யு, விசாகர், துகண்டர், கலசோடுபர், ஜாபாலி, காஸ்யபர், தும்புரு, நாரதர், பர்வதர், ஆணிமாண்டவியர், தண்டர், வியாக்ரபாதர், ஹநுவேதகர்ப்பர், வீதிஹோத்ரர், கண்வர், மேகாதிதி, தது, சௌநகர், தாண்டகர், மித்ரர், விந்தர், நமித்ரகர், ஹயக்ரீவர், பிப்பலாதர், தத்தாத்திரேயர், அவிகத்தனர், அகஸ்தியர், அநிலாசர், சதர்ச்சர், ஆச்வலாயனர், ஸநந்தர், சநகர், ஸநற்குமாரர், ஸநாதனர் முதலிய மஹாமுநீஸ்வரர்களும், மனைவியோடுகூடியவரும், சிஷ்யபிரசிஷ்யவர்க்கங்களோடுங்கூடியவர்களாய்ஸரஸ்வதிதீரத்தில் நீலாத்திரிசிகரத்தி

னுள்ள ஸ்கந்தாஸ்ரமத்தையடைந்தனர். பற்பல கணங்களாலும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் விளங்குவதும், பற்பல புண்ய விருக்ஷங்களாலும் கோகில சுக சாரிகா கபோதமுதலிய பறவைகளின் சப்தத்தாலும் ம்ருதங்கமுரசமுதலிய வாத்யங்களின் ஒலிகளாலும் தாளலயங்களுடன்கூடிய வீணாவாத்யத்வனிகளாலும் கின்னரமங்கையரின் நடனங்களாலும் கல்யாணமே உருக்கொண்டுவிளங்குகின்றதோவெனத்தோன்றுவதுமான ஸ்கந்தாலயத்தைக்கண்டனர். ரத்னமயமாகியகோபுரம் அட்டாலம் கொடிங்கை பிராகாரம் முதலியவைகளால் ஜ்வலிப்பதுமாகிய அவ்வாலயத்துக்குள்ஜைகிஷவ்யர் முன்னரும் ஏனையமுநிவர்கள் பின்னருமாய்ப் பிரவேசித்தனர். திவ்யரத்னங்களால் ஜ்வலிக்கும் மஹாமஞ்சஆசனத்தில் வீற்றிருப்போரும் கந்தர்வர்களால் பாடும் தோத்திரங்களால் துதிக்கப்பட்டவரும் திவ்யகிரீடங்களால் ஜொலிக்கும் அறுமுகமுடையோரும் சுவர்ணபீதாம்பரத்தைத் தரித்தவரும் திவ்ய சாமரங்களால் விசிறி உபசரிக்கப்பெற்றவரும் திவ்ய ரத்னஹாரங்களை யணிந்தவரும் சக்தியைக் கையிற்பிடித்தவருமாகிய பராசக்தியின் புதல்வரைத் தரிசித்தனர். அவரது ஆணைக்குநடுங்கி ஒடுங்கி மிக்கவிநயத்துடன் அருகிற்சென்று ஜைகிஷவ்யர்முதலிய முநிவர்கள் ஸ்கந்தமூர்த்தியைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அஞ்சலிபந்தஞ்செய்துநின்றனர். உடனே ஸ்கந்தபகவான் முநிவர்களை ஆசனத்திலிருக்க ஆக்யாபித்து ஜைகிஷவ்யரை மிக்கஅன்புடன் இறைவன் தம்மிடம் அனுப்பினரென்பதையுணர்ந்து அறுமுகநயனகமலங்களாலும் நோக்கி ஆனந்தமடைந்து அவரதுவைராக்யத்தை நினைந்து மிக்கமகிழ்ந்து கூறுவாராகுர். ஸ்கந்தர் ஓ ஜையகிஷவ்யமுனிவரே! உமதுவரவால் நான் மிக்கசந்தோஷமடைகின்றேன். பூர்வம் சிவரஹஸ்யதர்மம் இறைவனுலுபதேசிக்கக் கேட்டிருக்கின்றேன். அதனைமீண்டுஞ் சிலனைசெய்வதில் என்மனம் மிக்க ஆவலுடையதாயிருந்தது. அவ்வாறு அதனைமீண்டுஞ் சிலனைசெய்து ஆனந்திப்பதற்கு நீர்ஹேதுவாய்வந்திருக்கின்றீர். அபாரபுண்யம் பெற்றுள்ளோராகிய உமது தவமேதவம். இறைவனுல் மிக்ககருணையுடன் என்னிடம் அனுப்பப்பட்டவரன்றோ? உம்மிடம் மஹேசனுக்கு இருக்குந்தயைபோல எப்புவனங்களுள்ளும் யாரிடமுமில்லை. நீர்சிவலிங்கார்ச்சனு துரந்தரன்றோ வென்று ஸ்லாகித்து மகிழ்ந்தனர்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

௨

ப்ரமுகாயநம:

# எட்டாம் அத்தியாயம்.

## ஸ்கந்ததரிசனம்.

இவ்வாறு ஸ்கந்தர் கூறியதைக்கேட்டதும் அம்முனிவர்களெல்லோரும் மிக்க ஆனந்தமெய்தி ஸ்கந்தரைநோக்கி ஓஸ்வாமி! திரிபுரசம்ஹாரகதநயரே! க்ரௌஞ்ச சூரவிதாரண! சிவக்ஞானநிதியே! சக்திதரரே! ஓ குமாரக்கடவுளே! மாரநிப்ரே! பக்தவத்ஸலா! தேவியின் திருமடிமீது விளங்கும் திவ்யமாணிக்கமே! ஸர்வபூதஹ்ருதய குகையில் விளங்குங்குகனே! வீரபாகு முதலிய கணங்களால் சேவிக்கப்படும் இறைவா! மயில்வாகனரே! தேவஸேனாபாலகா! மஹாப்ரபோ! ப்ரணவாதி மஹாவாக்ய ஸாரதத்வ முணர்ந்தவரே! பக்தர்களது சித்தவிருளை நீக்குஞ் சோதிபுருஷனே! உமதுபாதாரவிந்தங்களைத் தெரிசித்த எங்களது பாக்யமே பாக்யம். ஜைகிஷவ்யரின் தவத்தாலேயே தேவரீரைத் தெரிசிக்கப்பெற்றோம். தேவரீரது வதனகமலங்களினின்றும் சிவரகஸ்ய அமிர்தசாரத்தைச் சிரவணஞ் செய்ய ஜைகிஷவ்யரோடு வந்திருக்கின்றனம். பவமெனும் காட்டுத்தீயிலகப்பட்டுக்கொண்ட எங்களைத் தேவரீரது கருணாமுதப்பிரவாகத்திருஷ்டியா லருளுங்களென்று வேண்டிக்கொண்டனர். இவ்வாறு பிரார்த்திக்க ஸ்கந்தர் மஹாசாம்பவர்களாகிய முனிவர்களுக்கருளுவாராயினர். ஸ்கந்தர் ஓமுனிவர்களே! நீங்களெல்லோரும் மஹேஸ்வர பக்தியிற் சிறந்த மஹான்கள். உங்களைக்காணுவதினால் எனது மனமெனுங்கமலம் மலர்கின்றது. ஜைகிஷவ்யரது தவத்தையும் அவருக்கு மஹா தேவனருளியதையும் நினைக்க மிக்க மகிழ்கின்றேன். சிவாக்ஞையால் இம்முனிவர் மஹா சாம்பவர்களாகிய உங்களோடுகூட வந்திருக்கின்றதை யானறிந்தேன். நீங்களே சற்பாத்திரர்கள். மிக்கரஹஸ்யமாயுளதாயினும் உங்களுக்குரைக்கத்தகும். சிவனது ஹ்ருதயத்திலுள்ள அவ்விரஹஸ்யத்தைப் பூர்வம் இறைவன் எனதன்னைக்குரைத்தனர். அன்னைமடிமீதிருந்தயான் பன்னிரு அம்சத்தோடுகூடியதும் மிக்க பாவனமும் ஸகலவுபநிடத ஸாரமும் பிரணவார்த்தமும் மஹாபாதகங்களைத் தொலைப்பதும் தர்மகாமார்த்தமோக்ஷங்களுக்கு ஸாரமாயுமுள்ள அத்திவ்யகதாநகத்தைக்கேட்டுணர்ந்தேன். அதனை ஜைகிஷவ்யர் முதலிய வுங்களுக்குக்கூறுகின்றேன். இச்சரிதையைத்தவிர வேறெதனையுங்கேட்கப் பரமேஸ்

வரனுக்குப் பிரியமில்லை. ஏனெனின் ஏனையவைகளெல்லாம் பிராகிருதமாகிய சரிதங்களென்பதேயாம். ஸ்ருஷ்டி ஸ்திதிலயமடைந்தவர்களாகிய அரசர்களின் சரிதங்களையுடையவும் வர்ணாசிரமங்களையேகூறி ஆயாஸமாய் முடிவனவும் தர்மாபாசத்தைவிளக்குவனவுமாகிய ஏனையசரித்திரங்களைக்கேட்பதினா லென்னபயன்? இருளடர்ந்தபாழ்ங்கிணற்றில் வீழ்ந்த குருடன் மற்றயகுருடர்களைக் கரையேற்றுவதுமுண்டோ? அதுபோலவே ஏனையசரிதங்களுமாம். ஓ முநிவரே! புராணங்களுள் பிறப்பிறப்புடையோர்களாகிய தேவர்களைக்கூறும் சரிதங்களே யுள்ளன. அவைகள் ஜன்மஜராமரணமுடையோர்களைத் தாரணஞ்செய்து வைப்ப தெங்ஙனம்? ஸ்ரீமிருத்யுஞ்சயனது கதைகளே மிருத்யுவின் வசமாய் அல்லற்படுதலையொழிக்கும். சாம்பவர்களாகிய அந்தணர்களே சிவரகஸ்யத்தை அறியவிரும்புவார்கள். அமுத ஸமுத்திரத்தின் நடுவில் ஆனந்திக்கின்றவன் கிணற்றுநீரையருந்த விரும்புவானோ? திவ்ய வீணாநாதத்தைக்கேட்டுக்காக்கையின் துவனியையுங் கேட்கவிரும்புவனோ? திவ்யரத்னப்புதையலைப் பெற்றவன் வளையல் துண்டத்தை விரும்புவனோ? யானைபோலிருந்தவன் மலத்தைப்புசிக்கும் பன்றியைப்போலாக விரும்புவனோ? சிம்ஹத்துக்கு நிகராயிருக்கின்றவன் வானரம்போலாகவிரும்புவனோ? சிவகதாரஸத்தில் விருப்புற்றவன் இதரகதையை விரும்புவனோ ஸகல தேவர்களுள்ளும் மூவர்களுள்ளும் ஸகல சராசரங்களினும் ஸகல வேதாந்தங்களால் தெரிசிக்கப்பெற்ற மகாதேவனெப்படியோ அப்படியே இதிஹாஸசிரேஷ்டமாகிய சிவரஹஸ்யமுமாம். சிவகண்டத்துக்கு ரத்னாபரணமா யுள்ளது இஃதே. பூர்வம் கைலாஸசிகரத்தில் தேவனால் தேவியின்பொருட்டு இஃதுரைக்கப்பட்டது. அப்போது அம்பிகை மஹாதேவரை நோக்கிக்கூறியதாவது: ஹே சம்போ! விசவேசா! பர்க்கா! த்ரிநயனா! புரஹரா! காலகாலா! அந்தகாரே! பாபாரே! பாலநேத்ரா! ஸ்மரஹரா! கரதரா! தேவர்களையும் அந்தணர்களையும் ரக்ஷியுங்கள். உமது ரஹஸ்யத்தைக் கூறியருளினல் அதனுல் அவர்கள் நற்கதியடைவார்கள். ஓ ஸ்வாமி! ஸகல வேத சிரசுகளினுமுள்ள சாரம்யாது? எனது செவிகளை ஸாரரகஸ்யத்தைக் கூறுவதனுல் களிக்கச்செய்யுங்கள். உலகம் துக்கம் நீங்கிச் சுகிப்பதின்பொருட் டெனக் குபதேசியுங்கள். உமது பாதாரவிந்த பக்தியில் மிக்க நிலைபெற்றுளேன். ஆதலின் இதனை அருளுங்களென் றிங்ஙனங்கூறிய தேவியின் வார்த்தைகளைக் கேட்டதும் அவ்விறைவன் தம்துமடிமீதிருந்த மஹாதேவியைநோக்

கிக்கூறியதை அவ்வம்மை மடிமீதிருந்து யானுங்கேட்டேன். அவர் கூறியதாவது ஒதேவி! உனக்குக்கொடுக்கக்கூடாதது இம்மூவுலகில் யாதுமில்லை. தேகத்தினுடைய பாதியையும் அதிகரித்துக்கொண்டவள் நீயே. ஸகலத்தையும் உண்டாக்குகின்றவளும் காக்கின்றவளும் ஸகல சக்தியும் நீயே. உன்னால் யான் சக்திமானென்றும் நிரீந்திரியனாகிய யான் உன்னாலேயே தேகம்பெற்றிருக்கின்றேனென்றும் சுருதிகள் கூறுகின்றன. யான் கால் கை யற்றவனாயினுங் குன்றாத சக்தியுடையவன். கண்ணில்லாதவனாயும் பார்க்கின்றேன். காதில்லாதவனாயினுங் கேட்கின்றேன். யான் இவைகளெல்லாவற்றையும் அறிகின்றவனாயினும் என்னைத் தேவர்களுமறிந்திலர். ஜீரணங்களுள் யான் அஜீரணனாயிருக்கின்றேன். யானே பிறவாதவன். சரீரஹீனன். எப்பொழுதும் சகல வேதவேதாந்தங்கள் என்னிடம் வரச்சக்தியற்றனவாய் மனதோடுகூடத்திரும்புகின்றன. இங்ஙனமிருக்க வானரங்களைப்போல் எப்பொழுதும் காமலோபமாச்சர்ய முதலிய பாவசேஷ்டைகளையுடையவர்களான பாமரர்கள் எங்ஙனமறிவார்? சுராசுரபூசுரர் யாவர்களும் வீணிற்புலம்புகின்றனரேயன்றி வேறியாதையுமடைவதில்லை. ஸகந்த நந்தீசன்முதலியவர்களால் ஆச்ரயிக்கப்பட்ட நீயொருத்தியே என்னை யறிந்து ஆனந்தமுறுகின்றனை. பாவமொன்றிற்கே கிடைக்கக்கூடிய மூர்த்தியையுடையோனும் வேதவேதாந்த வாக்யங்களால் லக்ஷியில் காணக்கூடாதவனும் சதாசுத்தபுத்த சிதானந்த ரூபனும் ஆகிய என்னை நீயேயறிகின்றனை. முக்கண்ணனும் நீலகண்டனும் உன்னோடுகூடியவனுமாகிய எனதுருவத்தை யோகீந்திரர்கள் காண்கின்றனர். யான் லோகதிருஷ்டியாய் இச்சைப்படி தேகத்தைச் சிருட்டித்து இறுதியில் உபஸம்ஹரித்துக்கொண்டு தேவர்களாலு மறியக்கூடாத அவ்யக்த ரூபத்தை யடைகின்றேன். எனது தத்வத்தை யுள்ளபடி போதனைசெய்யு மிக்கதையை சாமான்யர் கேட்க முடியாது. இதனை அசாம்பவனுக்குக் கொடுக்காதே. இது ஓர் திவ்ய பலமுடைய விருக்ஷமாகும். இதனை அசாம்பவராகிய மறு பூமியில் (பாலைவனத்தில்) ஸ்தாபிக்க விரும்பற்க. சாம்பவராகிய தாமரைத்தடாகத்திலுள்ள ஹ்ருதயமாகிய செந்தாமரைமலரை மலரச்செய்வதில் ஆதித்தியனாகும். சைவர்களுக்கே ஸந்தோஷத்தை யளிப்பதுமாம். ஹ்ருதயத்திலுள்ள தமோகுணமாகிய மேகங்களுக்குப் பிரசண்டமாருதமாகும். பாபமார்க்க ஹேதுவாகிய காமமெனுஞ் சேற்றை வற்றிவறண்டுபோகச் செய்யும். ஆகலின் இதனைப் புண்யவான்கள் தமது செவிக்ரு மங்கள

மாக்கிக்கொள்ளட்டும். வேதஸாரமாகிய மதுவாயிருக்கு மிதனை சிவார்ச்சகர்களும் சம்சாரமாகிய கடலை வற்றச்செய்கின்றவர்களு மான பெரியோர்களெனும் வண்டுகளே விரும்பும்.

எட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
ஸாம்முகாயநம:

# ஒன்பதாம் அத்தியயாம்.

## ஸ்கந்தசிவகணசமாகமம்.

ஸூதர்கூறுகிறார். இந்தப்படி பரமேஸ்வரன்தேவிக்குக்கூறியதை ஸ்கந்தர் ஜைகிஷவ்யாதி முநிவர்களுக்குக் கூறலாயினர். இதற்குமுன் னரே ஸ்ரீ நாரதர் ஸகலதேவர்களிடமும் பிரமவிஷ்ணுவாதி லோகங் களிலுஞ்சென்று ஜைகிஷவ்யருக்கு ஸ்கந்தரால் சிவரகஸ்யோபதே சஞ் செய்விக்கும்படி மகேஸ்வரன் அருளியதைச் சகலருக்குந்தெரி வித்தனர். உடனே ஸகலதேவர்களும், கருடன்மீதேறிக்கொண்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவும், திவ்விய ஹம்சத்தின்மீதேறிக்கொண்டு பிரம னும், ஐராவதத்தின்மீதேறிக்கொண்டு அமரேசனும் தத்தந்தேவி மாரோடு சிவரகஸ்யத்தைச் சிரவணஞ்செய்யுமாறு ஸ்கந்தசபைவந் துசேர்ந்தனர். அங்குவந்ததும் பிரம விஷ்ணு இந்திரர்கள் ஸ்கந்த ரைநோக்கி அஞ்சலிசெய்துகொண்டு ஓ பகவானே! ஸகலதேவருஷி முனிகணங்களாலும் வணங்கப்படும்பாதாரவிந்தமுடைய ஸ்வாமின்! தேவரீரது வதனத்தினின்றும் சிவரகஸ்ய சரிதங்களைக்கேட்க விரும் பும் எங்களுக்கு அங்ஙனம் அருள்புரியுமென்றனர். உடனே ஸ்கந் தர் ஸப்யர்களாய் அங்குவந்துள்ளவர்களும் விபூதி ருத்திராக்ஷந்த ரித்துச் சொலிக்கின்றவர்களும் சபாபதியைப் பூசிக்கின்றவர்களும் சிவபாதாரவிந்தங்களிற்சென்ற சித்தமுடையோர்களுமாகிய விஷ் ணு பிரம்ஹாதிதேவர்களையும் முநீந்திரர்களையும் மகருஷிகளையும் பார்த்து அளவிலடங்காத ஆனந்தமுடையோராய் ஸகந்தர் ஓ ஜைகி ஷவ்ய முநிவரே! நீரே சாம்பவர், உமது பக்திமகிமையால் இங்கு வந்திருக்குந் தேவர்களும் முநிவர்களும் கேட்கலாகின்றது என்று கூறிக்கொண்டிருக்கும்போது கைலாஸகிரியினின்றும் ஓர் திவ்வி யவிமானத்திலேறிக்கொண்டு அநேககணகோடிகளால் சேவிக்கப் பட்டவராய் ஸ்ரீ விக்கின விநாயகராகிய மஹா கணபதி அங்குவந்

தருளினர். அப்பொழுது நந்தி பிருங்கி மஹாகாளர் பாணர் சண்டேசர் தகண்டர் குண்டர் ஸாநந்தர் மஹாநந்தர் ஆனந்தபைரவர் துந்தர் காலாக்கினி ருத்ரர் சோமநந்தி முதலிய கணநாதர்கள் பற்பல கணகோடிகளால் சூழப்பெற்றவர்களாய் மஹேசராலேவப்பட்டு வந்துசேர்ந்தனர். இங்ஙனம் ஸ்ரீ விக்னவிநாயகராகிய பராத்பரமூர்த்தியையும் ஜடைமுடி பாலசந்திரர்களால் ஜ்வலிப்பவர்களும் விபூதி ருத்திராக்ஷங்களால்விளங்குகின்றவர்களும் ஸகல திக்குகளிலும் ஒலிக்கச்செய்யும் திவ்யநாதமுடைய டமருவை ஒலிக்கச்செய்கின்றவர்களுமாகிய மஹாருத்ரகணேசர்களையுங் கண்டவுடன் ஸ்கந்தமூர்த்தி சரேலென அங்குள்ள தேவருஷி முநிகணங்களோடெழுந்து மிக்கபரபரப்புடனோடிவந்து விக்கினராஜராகிய முதற்றெய்வத்தைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அர்க்கியம் ஆசனமுதலியவைகளாலுபசரித்து மோதகம் அபூபமுதலிய பிரியபக்ஷணங்களை நிவேதித்து கந்தாக்ஷாதிகளால் அர்ச்சனைசெய்த பின்னர் ஏனைய நந்தியாதிருத்திரகணேசர்களை ஸந்தோஷத்தோடு கட்டிக்கொண்டு அவரவருக்குத்தக்க ஆசனத்திலிருக்கச்செய்தனர். முநீந்திரரெல்லோரும் ஸ்கந்தரைநோக்கி அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டிருந்தனர். அப்போது நந்திகேசர்முதலிய ருத்திரகணேசர் கிரௌஞ்சவிதாரணனாகிய ஸ்கந்தமூர்த்தியைநோக்கி ஓ ஸ்வாமி! ஜைகிஷவ்யரது தவத்தால் திருப்தியடைந்த இறைவன் உமாதிவ்விய வசனாம்ருதத்தால் வெளிவரும் சிவரகஸ்ய சரிதத்தைச் சிரவணஞ்செய்ய ஆவலுடையோர்களான எங்களைத் தேவரீரிடமனுப்பினார். பூர்வம் தேவியின்பொருட்டு இறைவனால் கூறப்பட்ட சிவரஹஸ்யத்தை அவ்வம்மை மடிமீதிருந்து தேவரீர் கேட்டவரன்றோ? பன்னிரு அம்சங்களோடு கூடியதும் பசுபாசமுக்திக்கு ஹேதுவாயுள்ளதும் அஃதே. வேதம் ஸ்மிருதி புராணம் பாரதம் ஆகமங்கள் முதலிய நூற்களில் பசுதர்மங்களுங் கூறப்பட்டுள்ளன. பசுதர்மங்கள் ஸம்ஸாரஹேதுவேயாம். பதிதர்மமொன்றையே கூறுவதும் வேதவேதாந்தஸாரமாயுள்ளதும் ஸகலபாபங்களையும் நீக்குவதும் ஜாபாலவுபநிஷதசாரமும் நேரில் முத்தியளிப்பதுமாகிய சிவரகஸ்யம் கூறப்பட்டுள்ளது. அத்தருணத்தில் அவ்வுபதேச இடத்தின்சமீபத்திலுஞ் செல்லுவதற்கின்றி ஏழுபிராகாரங்களின் வெளியிலேயேயிருக்கும்படி நாங்களாக்ஞாபிக்கப்பட்டோம். அப்போதுகேட்கவேண்டுமென்று எங்களுக்கிருந்த ஆவலைக்கூறமுடியாது. அதனைத் தேவரீர் கேட்டிருந்தவராதலால் இப்போது எங்களுக்குபதேசித்

தருளுங்கள். ஜைகிஷவ்யமாமுனிவரின் தவத்தினல் திருப்தியடைந்த சம்பு அம்முனிவரை முன்னிட்டு யாங்களுங்கேட்கும்படியருளினர். இனி அதனையுரைத்தருளுங்களென்று பிரார்த்தித்தனர்.

இவ்வாறு நந்திசர்வாக்கியத்தால் ஸ்கந்தர் சந்திரோதயகாலத்தில் சமுத்திரம்போல ஆனந்தம்பொங்கியவராய் அங்குள்ள ஸகலமான முனிவரையும் கணேந்திரர்களையும் அவ்வாறு ஆனந்திக்கச்செய்து ஸகலத்திற்கும் ஆதிபரமூர்த்தியாகிய ஸ்ரீமஹா கணபதியை நமஸ்கரித்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு தோத்திரஞ்செய்வாராய் ஸகலதேவ முனிவர்களையும்பார்த்து ஓ தேவர்களே! கஜசர்மதாராகிய இறைவரது புத்ரரும் த்ரிபுண்டரத்தினல் ஜ்வலிக்கின்றவரும் யானைமுகத்தினரும் ஸகலகாரியங்களுக்கும் நிகழும் விக்கினங்களை சூரியனைக்கண்ட இருள்போலப் பறக்கச்செய்கின்றவருமாகிய இறைவனைநமஸ்கரியுங்கள். சிந்தூரம் தூர்வாமுதலியவைகளால் அர்ச்சிக்கப்பட்ட மஸ்தகத்தை யுடையோரும் கபோலத்திற்றொங்குகின்ற சாமரங்களையுடையோரும் கர்னகுண்டலமாகச்செய்யப்பட்ட தாமரைமொக்கால் விளங்குவோருமாகிய விக்கினராஜனை நமஸ்கரிக்கின்றேன். கன்னத்தினின்றும் பெருகும் மததாரையின் வாசனையால் மயங்கிச் சிக்குண்டிருக்கும் வண்டுக்கூட்டங்களை யுடையோரும் நாககர்னபூஷணரும் நாகயக்ஞோபவீதரும் பசுபதியின் முதற்புத்திரரும் ஸகலவேதசாரமாயுள்ளவருமான விக்கினராஜரை யாம் நமஸ்கரிப்போமாக. அங்குசம் கோடரி இவைகளைக்கையிலுடையோரும் கிரிஜையின் அருமைப்புதல்வரும் விக்ஞானத்தை யளிப்பவரும் மோதகராசிகளில் மிக்கப்பிரியமுள்ளவரும் யானைமுகத்தினரான தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். பெருச்சாளியின்மீது வீற்றிருப்பவரும் பிரமன் விஷ்ணு இந்திரன் முனிவர்முதலியவர்களால் சேவிக்கப்பட்டவரும் வேதராசிகளால் துதிக்கப்பட்டவரும் ஆதிபுருஷரும் யானைமுகத்தோருமாகிய தேவரீரை சத்தியபத்தியவுருவமான வாக்கியங்களால் நமஸ்கரிக்கின்றேன். ஸூதர் ஓ முனிவர்காள்! இவ்வாறு கஜமுகரை அறுமுகர்தோத்திரஞ்செய்து பரமேஸ்வரனையும் பராசக்தியையும் மனதினல் வணங்கி ருத்திரகணங்களையும் தேவகணங்களையும் ருஷிகணங்களையும் பார்த்து அவர்களுள் முக்யராயிருக்கின்ற ஜைகிஷவ்யரையும்பார்த்து கணநாதரும் தாய் தந்தையருமாகிய மூவர்களது அநுமதியைப்பெற்று கூறுவாராயினர். ஸ்கந்தர் ஓ முனிவர்காள்! பரமேஸ்வரனுகிய ஸமுத்திரத்தின்

சக்தியாகிய காற்றினுல் சலிக்கப்பெற்ற திவலைகளே பிரம இந்திர நாராயணர்களாகின்றனர். அவர்களது சுதர்களால் ஸ்ருஷ்டிகள் நடக்கின்றன. அப்புதல்வர்களின் வம்சத்திற் றேன்றினவர்களே இவ்வரசராதியர்கள். இவர்களின் கதைகளால் என்னபயன்? இவை களெல்லாம் மஹாபூதவிகாரங்களே யாதலால் பொய்யேயென்க. பொய்யாகிய பிரபஞ்சவாழ்க்கையி லடங்கியவர்ணுஶ்ரமதர்மங்களை யே பெரிதாய் நினைத்து விசாரித்துத் திரியுஞ் சீலமுடையோர்களா கிய அவ்வரசர்களது சரித்திரம் வீண் ஸ்ரமத்தின்பொருட்டேயா கும். அதனைக்கேட்பதினுல் ஞானமுதிக்குமோ? ஸகலதர்மங்களி லுங் கடந்துள்ளவரும் ஸகல தவங்களாலு மடையக்கூடியவருமா னவர்சிவனொருவரே. ஜைகிஷவ்யர்முதலியவராகிய முனிகணங்களும் விஷ்ணுவாதிகளாகிய தேவேசர்களுமாகிய வுங்களுக்கு ஸ்ரீமஹாக ணபதியினெதிரில் ஸ்ரீகைலாசத்தில் நடந்தபடி அபாரமான சிவ சரித்திரத்தைச் சொல்லுகின்றேன்.

ஒன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
க்ருதிநேநப:
## பத்தாம் அத்தியாயம்.

சிவனது பாதாரவிந்த ஸ்ரீயாகிய யாதொருதேவி ஸ்ரீயையும் ஸ்ரீபதியையும் பிரமனையும் இந்திரனையும் சந்திரனையும் மற்றுமுள்ள தேவர்களையுமுண்டாக்குகின்றனளோ அத்தேவியே சிவை எனப் படுபவளாம். சூதர் ஓமுனிவர்களே! ஸ்கந்தர் இவ்வாறு வஸ்து நிர் த்தேசம்செய்து பின்னர் மகாஷ்டபத்யங்களால் தனது ஹ்ருதயகம லத்திலுள்ள சிவபெருமானைத்துதித்துப் பின்னர் அகில ஜகங்களுக் குமன்னையாகிய பராசக்தியையும் திவ்யபத்தியங்களால்த்யானித்து வழிபட்டவுடனே அவ்வாறுமுகக்கடவுளுக்கெதிரில்திவ்யஜோதியால் ஸகல திக்குகளையும் ஜ்வலிக்கச்செய்கின்றவரும் சத்ரசாமரங்களால் உபசரிக்கப்பெற்றவரும் எண்ணிறந்த கணங்களால் ஸ்தோத்திரஞ் செய்யப்பெற்றவரும் திவ்ய புஷ்பவருஷங்கள் எங்கும் வருஷிக்கப் பெற்றவரும் வ்ருஷபத்வஜரும் நகாபரணபூஷிதரும் நீலகண்டரும் த்ரிணேத்ரருமாகிய பரமேஶ்வரன் பார்வதியோடுகூட திவ்யரிஷபா

ரூடராய் ஸ்கந்தருக்கு முன்னிலையில் திவ்யகோலாகலமாய்த் திருவுரு வங்கொண்டருளினர். மலர்ந்த திவ்ய தாமரைமலர்மாலை விளங்கும் மார்பினரும் ஸகல திக்குகளிலும் பரவும் திவ்யவாசனையுடையோ ரும் திவ்யரத்னமுத்துமாலைகளால் ஜ்வலிப்பவரும் கங்கணமாகிய நாகரத்னங்களின் ஒளியால் ஜ்வலிக்குங் கைகளையுடையவருமாகிய சதாசிவமூர்த்தி வெள்ளிமலைபோன்ற வ்ருஷபத்தின்மீது வீற்றிரு ப்பவராயங்குதோன்றவே அங்குள்ள ஸகலதேவருஷி முனிவர்களும் ருத்திரகணாதீசர்களும் ஸ்கந்தரும் ஸ்ரீமஹாகணபதியும் தத்தம் ஆசனத்திலிருந்து சரேலெனவெழுந்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரி த்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு ஆனந்தவாரிபெருகி பரவச ராய்நின்றனர். ஜைகிஷவ்யமுனிவரும் ஸ்கந்தரும் மற்றுமுள்ளவர்க ளும் பரமேஸ்வரனைத் தோத்திரஞ்செய்தனர். பரமேஸ்வரனும் பார் வதியும் அவ்வாறு நிற்கும் ஸகலகணங்களையும் ஜைகிஷவ்யமுனிவரை யும் ஸ்கந்தரையும் ஸ்ரீமஹாகணபதியையும் கருணாரஸஸாரமாகிய கடாக்ஷத்தாற் பார்த்துத் தமது புதல்வர்களைத் தழுவிமுத்தமிட்டு ஸ்கந்தரைப்பார்த்துக் கூறுவாராயினர்.

பிள்ளாய்! நீசெய்ததோத்திரத்தினால் நாங்கள் திருப்தியடை ந்தோம். நீ பூர்வங்கேட்டபடி சிவரஹஸ்யத்தை மஹாபக்தராகிய இச்ஜைகிஷவ்யரை முன்னிட்டு ஸகலசுரமுனிகண சமூகத்துக்குங் கூறுவாயாக. ஸ்கந்தா! இவ்விதிகாசத்தைக்கூறுவதில் இடையூறு யாதும்வாராது. உனதுமூத்தவனாகிய விக்நராஜன் எதிரிலிருக்கின்றா னன்றோ வென்றுகூறி சிவன் மஹாதேவியைநோக்கி புன்னகைகொ ண்டு ஓ தேவி! எண்ணிறந்த புற்பூண்டு பசுபக்ஷியாதி ஜன்மங்களிற் சிக்குண்டு பலகோடிகாலஞ் சுழன்றுழன்று இம்மனிதப்பிறவிகிடை ப்பதாகும். அங்ஙனங் கிடைப்பினும் விப்பிரனாய் வேதமோதின வனாய் ஸதாசாரமுடையோனாய் யாகம் அன்னசத்திரம் வாபி கூபஸ்தாபனமுதலிய புண்யங்களைச்செய்பவனாய்ச் சிவலிங்கத்தை மிக்கபக்தியுடன் பூஜிக்கின்றவனா யிருப்பானாயின் அவன் முக்தனா வான். பற்பலவேதவிதிகளிற் காணப்படுவனவும் முக்குணங்களுக்கு வயப்படுத்துவதுமான கர்மங்களையே பரமெனநினைத்து காமஸாகர லீலையில்மூழ்கினவர்களாய் மனனவிசாரஞ் சிறிதுமற்றவராயிருக்கு மூடர்கள் நரகவாயிலையோ சுவர்க்கத்தையோ வடைந்து சிலகால மங்கிருந்து யாதனைபட்டுக்கொண்டு கர்மசேஷத்தால் மனிதலோகத் தையடைந்து எண்ணிறந்த யோனிகளிற்பிறந்து துர்ப்புத்தியுடைய வர்களாகின்றனரே! ஸகலவேதங்களாலும் ஒன்றுக்கொன்று பேதி

க்கும் புராணராசிகளாலும் சண்டையைக்கூறும் பாரதாதிகளாலும்
அற்பமாகிய தர்மங்களாலும் ஸாரமாகிய ஈசானனது சரிதமற்றவை
களாலும்ராமனது கதையைக்கூறும் காவியத்தாலும் என்னபயன்?
மகாதுக்கமேயன்றி வேறுபயன் யாதென்றருளினர். அதனைக்கேட்
டதுந் தேவி அஞ்சலிபந்தஞ்செய்தவளாய் ஸநாதனரும் ஜகதாதார
ரும் அநாதரருமாகிய ஜகதீஶ்வரனைப்பார்த்து ஸ்வாமி! தேவரீரது
கிருபைக்குப் பாத்திரமானவர்களுக்குத் துக்கம்யாதுமில்லை. ஸ்கந்
தன் என்னிடமிருந்து வேதார்த்தமாகிய சிவரகஸ்யத்தைக்கேட்டி
ருக்கின்றான். அதனைத் தேவர் ருஷிகள் முனிவர் ருத்திரகணங்கள்
இவர்களோடுகூட உமதுபக்தனாகிய ஜைகிஷவ்யனுக் குபதேசிக்கும்
படி பிரஸாதஞ்செய்யுங்களென்றுபிரார்த்தித்தனள். அதனைக்கேட்ட
இறைவன் உடனே மிக்கசந்தோஷங்கொண்டவராய் தமதுதிருக்கர
த்தை ஸ்கந்தருடைய ஶிரசிலும் முனிவர்சிரசிலும் ஸ்பரிசித்தருள
லும் அவ்விருவர்களும் சிவசரணாரவிந்தத்தை நமஸ்கரித்தனர். அவ்
விருவருள் ஸ்கந்தர் சிவசரணாரவிந்தத்தைத்தமதுகரங்களாற் றொட்
டுக்கொண்டு "அயம்மேஹஸ்த" என்ற மந்திரத்தை ஜபித்துக்கொ
ண்டு கண்களிலிருந்துபெருகும் ஆனந்தவெள்ளத்தால் இறைவனது
திருவடிகளை அபிடேகஞ்செய்பவராய் வேறெதனையுஞ் சிறிதுஞ் சிந்
திக்காது அவ்வடிகளிலேயே மனம்லயிக்கப்பெற்றனர். அங்ஙனமா
கிய ஸ்கந்தரையும் ஜைகிஷவ்யரையும்பார்த்து ஈஶ்வரன் ஓ ஸ்கந்தா!
இம்முனிவன் எனக்கு மிக்கதிருப்தியுண்டுபண்ணி யிருக்கின்றான்.
எனது கிருபாபிரவாகத்தால் நன்கு நனைக்கப்பட்டவனென்று
கூறி கௌரியுடன் ஸகலதேவர்களாலுந் தோத்திரிக்கப்பட்டவராய்
கைலைசென்றனர்.

பத்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸ்வப்ரதீபாயநம:

## பதினோராம் அத்தியாயம்.

### பன்னிரு அம்ஶவரலாறு.

ஸூதர்கூறுகின்றார். ஓ முனிவர்களே! சிவதரிசனத்தால் ஆனந்த
பரவசராகிய ஸ்கந்தர் ஜைகிஷவ்யரைப்பார்த்து ஓ ஜைகிஷவ்யரே!
தேவியின்பொருட்டு சிவபெருமானால் ரகஸ்யத்திலுரைக்கப்பட்ட

சிவரகஸ்யத்தை அப்பிரமேயராகிய மஹாதேவனையும் தேவியை யும் மஹா கணபதியையும் சைவாசாரியர்களையும் நமஸ்கரித்துக் கூறுகின்றேன். ஸகலதேவருஷி முனிகணங்களோடுங்கேட்பீராக. இவ்விதிஹாஸத்தில் முதலாவதுஅம்சமானது மாஹேசாம்சமென்று கூறப்படும். ஓ ஜைகிஷவ்யரே! இதில் மஹேஸ்வரன் உமக்கு அருளியதும், தேவர் முனிவர் சிவகணம் இவர்களின் ஸமாகமமும், என்னால் இறைவன் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டதும், கைலாஸ வர் ணனமும், தேவி மஹேசசம்வாதமும், கிரிசிரேஷ்டத்தில் நடந்த தேவி தேவசரிதமும், கைலாஸகிரீஸ்வர பூஜையும், ஈஸ்வரன் கணங் களுக்கும் எனக்கும் மஹாகணபதிக்கும் தேவிக்கும் துவாரப்பிரா காரங்களோடுகூடியஸ்தானத்தில் இருக்கும்படியருளியதும்,ஸகஸ்ர லிங்காத்யாயமும்,கைலாயம் தவம்புரிந்ததும்,இறைவன் அவனுக்கரு ளியதும், அவனதுசிகரத்தை வாசஸ்தானமாய்க்கொண்டதும், பர மேஸ்வரன் ஸகல பர்வதங்களாலுங் கைலாஸத்திற்கு அபிஷே கஞ்செய்வித்ததும்,தேவர்கள் ஞானத்தைவிரும்பியதும்,தேவி ஆவி ர்ப்பாவமாய்ஞானார்த்தத்தைக்கூறியதும்,ஆத்மலிங்கபூஜையும் ஆகிய இவ்விஷயங்க ளடங்கிய கதைகள் மஹேஸ்வரனாற் கூறப்பட்டுள் ளன. இதில் * திக்சங்கியை கிரந்தங்களடங்கியுள்ளன. இரண்டா வது அம்சம் பவாம்சமெனப்படும். அதில் தேவிதவஞ்செய்தலும், மணித்வீபம்வருதலும்,கல்பவாடீ நீபவனத்வீபங்களைவர்ணித்தலும், சிந்தாமணிமஹாமண்டபம் ஸ்ரீபுரம் இவைகளின் வர்ணனமும், கை லாயஞ்சென்றதும்.ஹரனும் தேவியும் காமேச காமேசியுருவத்தோ டிருத்தலும், தேவி இமாசலம்வருதலும், துர்வாஸரது மஹிமையும், அவர் தவம்புரிதலுங்கூறப்பட்டுள்ளன. இது மூவாயிரம் ஸ்லோகங் களைக்கொண்டது. ஓ முனிவரே! மூன்றாவது அம்சத்தின் பூர்வ பாகத்தில் முனிவர்கள் வியாசரைப் பிரார்த்தித்தல், காயத்திரி தவம் புரிதல், தேவிவருதல், கணங்களையனுப்புதல், தீர்த்தேசமஹிமை, ஸ்ரீ சைலமஹிமை, மானதபூஜை, யாக்ஞவல்கியஜனகசம்வாதம், பத்மாவதி ரத்னநிதிசம்வாதம் இவைகளும் உத்தரபாகத்தில் ரத்ன நிதியின்பூஜை, பார்வதி பரமேஸ்வரர் யமலோகவிருத்தாந்தமறிதல்,

* வடமொழியில் கிரந்தத்துக்கு அக்ஷரசங்கியை முப்பத்திரண்டாகச் சொல்லப்பட்டிருத்தலாலும்,இச்சிவரகசியத்தில் பல வேறுவகைப்பட்ட ஸ்லோ கங்களும் கத்தியங்களும் விரவியிருத்தலாலும் திக் முதலிய பதங்களுக்குப் பல படி அர்த்தம் பண்ணக்கூடியதா யிருத்தலாலும் இப்போதுள்ள சங்கியையோடு பொருந்தாமையாலும் பின்னர் நன்கு பரிசோதித்து விளக்கப்படும்.

பார்வதி பரமேஸ்வரசம்வாதம், பஸ்மருத்ராக்ஷமஹிமை, கங்கையும் நர்மதையும் தவஞ்செய்துவரம்பெறுதல், மஹேஸ்வரவிரதம், சைவார்ச்சனுதிகதனம், சிவதுண்டிசரிதம் ஆகிய விஷயசரிதங்களு மடங்கியுள்ளன: இம்மூன்ருவதுஅம்சம் முப்பத்தேழுவாயிரம் கிரந்த சங்கியைகொண்டதாம். பின்னர் நான்காவது அம்சமானது சிவாம்ச மெனப்பெயரியது. அதில் பிருஹச்ஜாபாலதர்ப முதலிய தசதர்ம முரைத்தல், பஸ்மருத்திராக்ஷமஹிமை, சிவலிங்கார்ச்சனுமஹிமை, சிவபக்தமஹிமை, சாம்பவருக்கன்னமளிப்பதின்மகிமை, சிவக்ஷேத்திரவாசமஹிமை, பில்வார்ச்சனுமஹிமை ஆகிய இவைகள்கூறப்பட்டுள்ளன. அதன் கிரந்தசங்கியை நாலாயிரமுள்ளது. பின்னர் பர்க்காம்சமெனப்பெயரிய ஐந்தாபம்சத்தில் பன்னிருஜோதிர்லிங்கமஹிமை, வாமதேவோபதேசம், சுருதி சித்தாந்தம், சங்காஸாகரம் பிரயாஸம் புஷ்கரம் எனும் தீர்த்தமஹாத்மியம், ஹரித்துவாரப்பிரபாவம், சிவசஹஸ்ரநாமம் எனுமிவ்விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. அவ்வம்சம் ஆருயிரம் கிரந்தசங்கியைகொண்டது. பிறகு சங்கராம்சமெனும் ஆரும் அம்சம் திக்சங்கியா கிரந்தசங்கியை கொண்டதும் ருத்ரோபவர்ணனம், சிவலிங்கார்ச்சனவர்ணனம், பஸ்மருத்திராக்ஷதாரிகளாகிய சாம்பவர்களின்மஹிமை இவைகளை விஸ்தாரமாய்க் கூறப்பட்டதுமாகவுள்ளது. ஏழாம் அம்சம் உக்ராம்சமெனப்பெயரியது. அதில் மஹேஸ்வரதேவி சம்வாதம், சஹஸ்ரநாமம், அவிமுக்தமஹிமை, சதர்ச்சனர்தவம், அஷ்டோத்தரநாமமஹிமை, ஹரிசெய்தமஹிமாஸ்துதி, புஷ்பதந்தர்செய்த மஹிமாஸ்துதி, காடகோடரஜர்சரிதம், க்ஷேத்திரங்களின்மஹிமை, ஸ்ரீசைலம், அருணுசலம், விருத்தாசலம், தக்ஷிணகைலாசம், புண்டரீகபுரம், ஸ்ரீகாஞ்சி, கும்பகோணம், மத்யார்ச்சனம் இவைகளின் மஹிமை எனும் விஷயங்களடங்கியுள்ளன. அது பதினுலாயிரம் கிரந்தசங்கியைகொண்டதாகும். எட்டாவது அம்சம் பீமாம்சமெனப்படுவதாம். அது திக்நாகசங்கியாசஹஸ்ர கிரந்தமுள்ளது. அதில் பாதாளலோகலிங்கமஹிமை, ஹாடகேசமஹிமை, சேஷன்தவம்புரிதல், மஹேஸ்வரன் சேஷனுக்குப் பூபாரதாரணத்தையருளுதல் எனும் விஷயங்களடங்கியுள்ளன. ஒன்பதாமம்சம் ஸதாசிவாம்சமெனப்படும். அதில் சம்புவின்சரிதம், தேவியின்பொருட்டு சிவபெருமான்கூறிய ஸஹஸ்ரநாமம், கலியில்சைவாசாரத்தால் முக்தியளித்தல், மஹாசாம்பவதர்மம் ஆகிய இவ்விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. அது எனதுமுகங்களின் சங்கியைகொண்டது. பத்தாமம்சம் ஈஸ்வராம்சமெனப்பெயரியது.

அதில் தசதர்மகீர்த்தனம் பில்வார்ச்சனம் ருத்திரஜபம்பஞ்சாக்ஷரம் சிவலிங்கார்ச்சனம் பஸ்மருத்திராக்ஷம் சாம்பவர்கள் சிவக்ஷேத்திரம் சிவபக்தார்ச்சனம் சிவநாமஸ்மரணம் இவைகளின் மஹிமைகூறப் பட்டுளது. ஓ முநிவரே! அது சங்கராக்யசங்கியா கிரந்தசங்கியையுள் ளது. பதினொராவது மஹாதேவாம்சமெனப்படும். அதன்கிரந்தம் எனது நேத்ரசங்கியா சங்கியைகொண்டது. அதில் சிவபூஜாக்கிர மம் அபிஷேகபலன் புஷ்பகீர்த்தனம் பத்துவித பக்தியின்விளக்கம் எனும் விஷயங்களடங்கியுள்ளன. கடைசி அம்சமானது முனிசங்கி யா கிரந்தங்கொண்டது. அப்பன்னிரண்டாம் அம்சத்தில் சிவநாம சஹஸ்ரமுரைத்தல், சங்கராநுக்ரஹம், எனதநுக்கிரஹம், சிவரத் னகரகதாமகாத்மியம், முநிவர்மகிழ்தல் எனும் விஷயங்களடங்கி யுள்ளன. * ஆயிரம் அத்தியாயமுள்ள சிவரஹஸ்யமெனும் இவ் விதிஹாஸம் சிவபெருமானால் தேவிக்குக்கூறப்பட்டுள்ளது. ஸதா சிவனுக்குச் சமானமானதெய்வம் மூவுலகிலு மிராதது போலவே சிவரகஸ்யத்துக்கு நிகராகிய கிரந்தம் யாதுமில்லை. இது சைவா சார மஹாரத்னங்களுக்கு ஓர் கோசமாகும்; பரமபாவனமும் பக் திஸாரமுமாகிய கதையையுடையது; ஸம்ஸாரத்துக்குளடங்கிய வர் ணாச்சிரமவிசாரமுதலிய சிரமஹேதுவாகிய கதைகளற்றதும் அத்யா ஶ்ரமதர்மங்களுக்கு இருப்பிடமும் பரமானந்தஹேதுவுமாய் லக்ஷத் திற்குமேற்பட்ட கிரந்தசங்கியையுடையதுமான இதிஹாஸோத்தமு மாயுள்ளது. சைவஸாரகதாரத்னமாகிய இவ்விதிஹாஸத்தில் மஹே ஶ்வரனுக்குள்ள பிரியம் ஸ்கந்தரிடமும் கஜானனரிடமும் கௌரி யிடமுமுள்ள பிரியம்போன்றது. இதை ஓ முநிவரே! அபரிபாகிகளு க்குக்கூறலாகாது. அங்ஙனம் எமதடிகளில் பிரமாணஞ்செய்வீ ராக. இல்லாவிடில் உமதுதலை சிதறிவிடும். வேதாந்தஸார ரகஸ்ய மும் சிவபக்தியைவிளக்குவதுமாகிய இதனைப் பக்தனாகியபுத்திரனும் அகங்காரமற்றவனும் ஸாம்பவனுமாயுள்ள விப்ரனுக்குக்கூறவேண் டும். சிஷ்யனாயிருந்தால் ஒருவருஷங் கூடவிருந்துபார்த்துத் தக்கபரி பாகி, சிவத்யானஞ்செய்யத்தக்கவன் என்பதைத் தெரிந்துகொண்டு பின்னருபதேசிக்கவேண்டும். ஸகலஜகத்துக்கும் தந்தையாயுள்ள இறைவன் சராசரமாதாவாகிய தேவியைநோக்கி ஸகலதுக்கப்பிரள யங்களையும் வற்றச்செய்யும் சூர்யனாகிய இச்சிவரஹஸ்ய ரத்னத்தை க்கூறினர். ஸம்ஸாரமெனும் கானகத்தீயையொழிப்பதாகிய அதனை

*அத்தியாயங்கள் ஒன்றோடொன்று விரவியிருப்பதாக வேறுபடுகின்றமை யின் அத்தியாய சங்கியை பேதிக்கின்றது.

யே உங்களுக்குக்கூறுகின்றேன். சிவரஹஸ்யத்தை அரைக்ஷணமா
வது மிக்கசிரத்தையுடன் கேட்கின்றவனெவனோ அவனே ஸகலஸம்
பத்துக்குமிருப்பிடமானவனும் மஹாபுண்யாவானும் ஸகலவேதாத்
யயனஞ்செய்தவனும்எண்ணிறந்ததானங்களாலும் கடல்சூழ்ந்தவுலக
முழுதுந்தானஞ்செய்வதாலுங் கிடைக்கும் புண்ணியமுடையோனும்
சிவகணநாயகனுமாவான். பற்பலவர்ணாஶ்ரம தருமங்களைக்கூறும்
கதைகளாற்பயனுண்டோ? மலைபோன்ற நெல்லுமிக்குவியலைச் சேதி
ப்பதால் அரிசிகிடைக்குமோ? சிவகதையின்றி மனிதருக்குச் சுபம்
கிடைக்குமோ? சிவானந்தரஹஸ்ய ஸமுத்திரத்திற்கு மஹாத்வீபம்
போலுள்ளது இப்பன்னிரு அம்சங்களும். அவற்றிற்குச் சங்கரராலி
டப்பட்ட நாமங்களைக்கூறுகின்றேன். முதலாவது மாஹேசம், இரண்
டாவது பவம், மூன்றாவது ஹாரம், நான்காவது சிவம், ஐந்தாவது
பார்க்கம், ஆறாவது ஸங்கரம், ஏழாவது உக்ரம், எட்டாவது பீமம்,
ஒன்பதாவதுஸதாசிவம், பத்தாவதுஈஶ்வரம். பதினோராவதுமஹா
தேவம், பன்னிரண்டாவது ஈசமெனப்படும். வேதாந்தஸாரமாகிய
தும் மஹாபாபங்களையெல்லாந் தொலையச்செய்வதுமாகிய சொற்
களாலும் அழகியவாக்யங்களாலும் அற்புதமாகிய அத்யாயங்களா
லும் திக், லோக, அமர, பிரம்ஹவேத, ருது, திங்நாக, எனதுமுகம்,
நேத்திரக்கிரமம், சங்கர, எனதுநேத்ரம், முனி இவைகளின் சங்கியை
யுங்கொண்ட சங்கியையோடு கூடிய அம்சங்களாலுந் தேவிக்குக்
கூறப்பட்டுளது என்றருளினர்.

பதினோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

சுகநிதயேநம:

## பன்னிரண்டாமத்தியாயம்.

### கைலாஸவர்ணனம்.

சூதர்:-ஓ முனிவர்காள்! சிவனால் நிர்மிக்கப்பட்டுள்ள கைலாஸ
மாளிகைகள் கோபுரங்கள் இவைகளின் பிரமாணத்தையும் லிங்கசமூ
கங்களது பிரமாணத்தையும் ஆலயங்களின் நிர்மாணத்தையும் ஸ்கந்
தர் ஜைகிஷவ்யருக்குக் கூறியபடி யுங்களுக்குக்கூறுகின்றேன். கே
ளுங்கள். ஸ்கந்தர் ஜைகிஷவ்யரைப்பார்த்து ஓமுனிவரே! சிவன் ஸர்வ
வியாபகராயிருப்பாராயினும் அவருக்கு ஸ்தானமாய் அநேக சிகரங்

களோடுகூடி விளங்கும் கைலாயமென்றோரிடமுளது. ஈசானர் முதலிய கணத்தலைவர்க்கிடமாயுள்ள கைலாயம் தக்ஷிணாச்ரமமென்று கூறப்படும். ஓ முனிவரே! தேவர்களுக்கிருப்பிடம் மேரு எனப்படும். கீழே பதினாறுகிளையாயும் மேலே முப்பானிரண்டு வகையாயும் பிரிந்துள்ள இம்மேருவானது மஹாகைலாஸத்தினெதிரில் ஒருசிறு அணுபரிமாணமுடையதாகிய ஸ்தம்பமெனப்படும் பூச்சியை யொக்கும். இஃது கைலாயத்தின்கிழக்கில் ஐம்பதினாயிரம் யோஜனைகளுக்கு அப்பாலுள்ளதும் பற்பல ஸுரகணங்களுக்கு வாசஸ்தானமாயும் ஜ்வலிக்கும் நெருப்புப்போன்றதும் ஆயிரம் யோசனைதூரமுடையதுமாகிய ஓர் ஸ்வர்னமயமான பர்வதம். கைலாயமானது அடிமுதல் சிகரமீறாக லக்ஷம் யோசனை யுயரமுள்ளது. அதனுள் ஏழுகுலாசலங்களும் நூறுபிராகாரகோபுரங்களும் உள்ளன. பிராகாரத்திற்கிடையில் கோட்டை, ஸமுத்திரங்களோடுகூடிய ஏழுத்வீபங்களிருக்கின்றன. அதுஸப்தசமுத்திர ஸுதாசமுத்திரங்களின் அலைக்காற்றுவீசப்பெற்று கோடியோசனை பிரமாணமுள்ளதுமாகிய ஓர் ரஜிதமயமாகிய மஹாபர்வதமாயுள்ளது; கீழேழுலோகங்களும் மேலேழுலோகங்களுஞ்சென்று ஐம்பது லக்ஷம்மானமுடையதாய் கோடி சந்திரனைப்போல் ஜ்வலிப்பதாய் நிகரற்றகாந்தியுடையதாய்ப் பதினான்குலோகங்களுங் கொடுமுடிகளிலடங்கப்பெற்றதாய் ஸுதாஸமுத்திரத்தின் நுரையின் ஸாரம்போல் விளங்குவதாயுமுள்ளது. ருத்ரர்விஷ்ணு பிரம்மாமஹேந்திரன் முதலிய தேவர்களாவது கருடன் உரகர் யக்ஷர் கந்தர்வர் அசுரர் இவர்களாவது பார்க்கச் சக்தியுடைவர்களல்லர். அங்ஙனம் போவதற்குயாரால்முடியும்? அதனது காந்தியினால் ருத்ரவிஷ்ணு பிரமர்களின் உலகம் வியாபிக்கப்பட்டுளது. ஸூரியேந்துஅக்னிவாயுக்களும் அவ்வொளியிலடைக்கப்பட்டுள்ளார். கைலாயத்தை ஸ்பரிசித்த வாயு அமுதஸமுத்திரத்தின் அலைகளால் ஸம்பந்திக்கப்பெற்று ருத்ரவிஷ்ணு பிரம இந்திரர்களையும் ஸகலலோகங்களையும் பாவனஞ்செய்கின்றது. அதன் மஹிமையை வேதங்களாலுங் கூறமுடியாது. அதன்மஹிமாலேசத்தை யுரைப்பதற்கு ஆதிசேஷனாலும் மாளாதாயின் மிக்க அதமர்களாகிய ஸுராஸுரர்களாற்கூறமுடியுமோ? நூறுகுலாசலங்கள் அற்புதமாகிய கோபுரங்கள் போன்று உன்னதமாகிய கொடிமுடிகளுடன்கூடிப் பிராகாரம்போல் விளங்குகின்றன. அவைகளுக்கிடையில் ஏழுசமுத்திரங்களும் அகழிகளைப்போல்விளங்குகின்றன. பிராகாரங்கள்போல விளங்கும் அப்பர்வதங்களையும் கூறுகின்றேன் கேளும். குமுதம்

பாரியாத்ரம், மைநாகம், இவைகள் கிழக்கிலிருக்கின்றன. தர்த்தரம் மலயம் விந்தயம் இவைகள் மேற்கிலிருக்கின்றன. உதயம் அஸ்தம் முஞ்சமுமாகிய மூன்றும் வடக்கிலுள்ளன. நீலம் தக்ஷிணகைலாசம் ஹிமவான் இம்மூன்றும் தெற்கிலிருக்கின்றன. இவைகளெல்லாம் ஸமுத்திரம்வரையிற் சென்று எத்திசையிலும் பரவியிருக்கின்றன. அகழிபோன்ற ஏழுசமுத்திரங்களின் இடையில் ஏழுத்வீபங்களும் ஏழுபர்வதங்களுமிருக்கின்றன. அங்கு தேவர் கந்தர்வர் அப்சரசுகள் ஸாத்தியர், நாகர், யக்ஷர், கருடர், கின்னரர், கிம்புருஷர், வித்யாதரர், சாரணர் முதலியவர்களும் முனிவர்களும் பற்பலவிடங்களில் வசித்துச்சஞ்சரிக்கின்றனர். அங்குபாற்கடலின் கரையாகிய த்வீபத்தில் விஷ்ணு பிரமாமுதலியவர்களும் ருத்திரமூர்த்திகளுஞ் சஞ்சரிக்கின்றனர். அதற்கப்பால் ஸுத்தோதக ஸமுத்திரக்கரையாகிய த்வீபத்தில் பிரமதகணங்கள் சஞ்சரிக்கின்றனர். அதற்கப்பால் ரத்னமயமாகிய ஓர் பிராகாரம் பதினாயிரம் யோசனை பரிமாணமுள்ளது. அதன் காந்தியால் எங்குஞ் சோதிமயமாய்க் காணப்படுகின்றது. அங்கு நூறுயோசனையுயரமுடைய பத்மாரகரத்நமலை ஒன்று விளங்குகின்றது. அதற்கப்பால் சந்திரகாந்த மணியால் விளங்கும் ஓர் பிராகாரமுளது. அது ஐம்பதினாயிரம் யோசனை விஸ்தாரமுடையதாய்க் காந்திப் பெருக்கால் எங்கும் அமுதப்பிரவாக மயமாய் விளங்கும் பிரதேசமுடையதாயிருக்கின்றது. அதற்கப்பால் பதினாயிரம்யோசனை பரிமாணமுடைய வச்சிரபர்வத மிருக்கின்றது. அதற்கு வெளியில் இந்திரநீல மணிமயமான பிராகாரமொன்று ஐம்பதுயோஜனை விஸ்தாரமுள்ளது. நீலோற்பலம்போல் விளங்கும் இந்திரநீலமயமான பர்வதமொன்றுபதினாயிரம்யோஜனைவிஸ்தாரமுடையதாயிருக்கின்றது. அதற்கு வெளியில் பச்சைரத்னமயமாகிய பிராகாரமொன்றிருக்கின்றது. அதனது காந்தியால் அவ்விடமெல்லாம் பச்சை ஜ்யோதியாய் விளங்குகின்றது. அதற்கப்பால் இருபதினாயிரம் யோஜனை யுயரமுடையதும் அப்பிரதேசங்களைக் கொவ்வைக்கனியின் நிறம்போன்ற நிறமுடையதாய்ச் செய்வதுமாகிய பவளமலையொன்றிருக்கின்றது. அப்பால் கோமேதகமணியால் நிர்மிக்கபட்ட பிராகாரமொன்று முப்பதினாயிரம் யோசனை அகலமுடையதாயிருக்கின்றது. அங்கு பதினையாயிரம் யோசனை யுயரமுடைய குருவிந்தமணிமலை யொன்றுளது. அதற்கப்பால் புஷ்பராகத்தாலிழைக்கப்பெற்ற பிராகாரமொன்று நாற்பதினாயிரம் யோசனை அகலமுள்ளதாயிருக்கின்றது. அதற்கப்பால் முத்தாமணிக்கூட்டங்

களால் விளங்கும் ஓர் மலை விளங்குகின்றது. அதற்கப்பால் மஞ்சள் மயமான கற்களாலிழைக்கப்பெற்று விளங்கும் இருபதினாயிரம் யோசனை அகலமுள்ள பிராகார மிருக்கின்றது. அப்பிரதேசங்கள் முழுதும் வைடூரியங்களாலமைந்துள்ளன. அதற்கப்பால் நவரத்ன மயமான ஓர் மலையிருக்கின்றது. அது ஓர் பக்கத்தில் மரகதக்காந்தியும் ஓர்பக்கத்தில் பவளக்காந்தியும் ஓர்பக்கத்தில் வச்சிரக்காந்தியும் ஓரிடத்தில் வைடூரியக்காந்தியும், ஓர்பக்கத்தில் மதித்தகுயிலின் கண் போற்குருவிந்தக்காந்தியும், ஓர்பக்கத்தில்புஷ்பராகக்காந்தியும் ஜ்வலிக்கப்பெற்றதும் ஓர் பக்கத்தில் நீலமயமாயும் ஓர் புறத்தில் சிறந்த தேன்போல் நிறம்வாய்ந்த கோமேதகமயமாயும்ஓர்பக்கத்தில் முத்து மயமாயும் ஓர் பக்கத்தில் சுத்தஸ்படிகமயமாயும் ஓர் பக்கத்தில் பற்பல நிறம் வாய்ந்த இந்திரசாபமயமாயும் விளங்குவதாயிருக்கின்றது. இவ்வாறு ஆச்சரியமாய்விளங்கும் அந்த நவரத்னமலையில் ஓர் அற்புதமாகிய மண்டபமுளது. அது பற்பலரத்னங்களால் விளங்கும் பதினாயிரம் ஸ்தம்பங்களுடையது. அக்கம்பங்கள் சிங்கம் சார்த்தூலம் சரபம் யானை ஹம்சம் கிளி யாளி முதலியனபோலியற்றப்பட்ட பற்பல சித்ரப்ரதுமை வாய்ந்தனவும், நவரத்னங்களிழைக்கப்பெற்று அடிப்பீடமுதல் கொடுங்கை குறுக்குவட்டம்வரையில் மிக்க ம்ருதுவாயுள்ளனவும், நிர்மலமாகிய கண்ணாடி போன்ற பூர்பாகத்தையுடையனவும், சூரிய சந்திர அக்னி நக்ஷத்திரங்களின் காந்திகளையும் அடக்கும் ஒளிவாய்ந்தனவும், இராப்பகலென்கிற பேதமின்றிச்செய்வனவும், வரிசைக்குப்பதினாயிரமாய் லக்ஷஞ்சங்கியையுடையனவுமாய் விளங்குகின்றன. அம்மண்டபத்தின் கோடிகளில் நவரத்னமயமான மாளிகையுடன்கூடிய பதினாயிரங்கோபுரங்கள் விளங்குகின்றன. கோபுரங்களின் பிரமாணத்தை மனதினாலும் நினைக்கமுடியாது. அக்கோபுரங்கள் ரத்னங்களால் நிர்மிக்கப்பட்ட ருத்ராவதார மூர்த்திபோன்ற பதுமைகளையுடையன; தேவதேவனாகிய இறைவன் தேவி ஸ்கந்தர் விநாயகர் நந்திமுதலியவர்கள் போன்ற எண்ணிறந்த ரத்னப்பதுமைகளுடையனவாய் மேலேழுலகத்துக்கும் அப்பாற் சென்றனவாய் விளங்குகின்றன. அங்கு ஓரிடத்தில் லிங்கோற்பவமூர்த்தியும் ஓர்பக்கத்தில் வ்ருஷபவாகன மூர்த்தியும் ஓர்பக்கத்தில் கஜசர்மதரமூர்த்தியும் ஓர்பக்கத்தில் உமா கணபதியுடன்கூடிய மூர்த்தியும் ஓர்பக்கத்தில் உமாஸ்கந்த கணபதியுடன்கூடியமூர்த்தியும் ஓரிடம சிவகணங்களால் சூழப்பட்டமூர்த்தியும் ஓர்பக்கத்தில் தேவியை விவாகஞ்செய்யுமூர்த்தியும் ஓரிடம்

பிக்ஷாடனமூர்த்தியும் ஓர்பக்கத்தில் சூலபாணியுருவமும் ஓரிடத்தில் ம்ருகபாணியுருவமும் ஓர்பக்கம் த்ரிபுரசங்காரமூர்த்தியும் ஓரிடம் அந்தகாஸுரசங்கார மூர்த்தியும் ஓர்பக்கம் சின்முத்ரைதரித்து முநிவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்யும் தக்ஷிணாமூர்த்தி யுருவமும் ஓரிடம் தற்புருஷரும் ஓர்பக்கம்வாமதேவரும் ஓர்பக்கம் ஈசானரும்ஓர்பக்கம்அகோரரும் ஆகியதிவ்யமூர்த்திகளும்விளங்கப்பெற்றது. அம்மூர்த்திகளெல்லாம் ஜடை சந்திரகலைதரிப்பனவும் திவ்ய ரத்னாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றனவும் திக்பாலகபாலிகைகளோடுகூட விளங்குவனவுமாய் பரமேஶ்வரனால் நிர்மிக்கப்பட்டுள்ளன. அன்றியும் அக்கோபுரத்தின்மேல் உயர்ந்த கொம்புகளுடையனவும் கண்டமுதலியவிடங்களில் மணிகளாலலங்கரிக்கப்பட்டு திவ்ய ரத்னங்களால் ஜ்வலிப்பனவுமான வ்ருஷபங்கள் விளங்குகின்றன. கோபுரத்தினுச்சியில் சலிக்கும்த்வஜங்களாலலங்கரிக்கப்பெற்ற அழகியமஹா ரத்னகலசங்கள் ஜ்வலிக்கின்றன. அங்ஙனமான கோபுரங்களால் விளங்கும் அம்மண்டபத்துள் ஓர் கர்ப்பக்கிருகம் நவரத்னங்களால் நிர்மிக்கப்பட்டு ஜ்வலிக்கின்றது. அதற்குள் அழகிய ரத்னபீடமும் அதன்மீது சந்திரஸ்படிக வுருவமான மஹாலிங்கமொன்று ரத்நமயமாகிய நாகங்களின் படங்களோடுகூடியதும் மஹாரத்னவனத்திலுண்டாகிய மலர்ந்த மலர்மாலையால் அலங்கரிக்கப்பட்டு ஸ்வர்னகசிதமான எண்ணிறந்த பில்வ சண்பகமலர்களாலர்ச்சிக்கப்பட்டதும் லோகாநுக்ரஹார்த்தமாய் சம்புவாலும் மஹா தேவியாலும் முப்பொழுதும் பூஜிக்கப்பட்டதுமாய் விளங்குகின்றது. அங்கு ஶம்புகணங்கள் காகளம் முரசம் மட்டு டிண்டிபம் ஜர்ஜ்ஜரம் சங்கம் மத்தளம் பேரி நிஸ்ஸாணம் படகாநகம் கோமுகம் ஸ்வஸ்திபாதாளம் வேணு வீணை முதலிய வாத்யங்களை முழங்குகின்றனர். எண்ணிறந்த ருத்திரகன்னிகள் அற்புதமாய் நடனஞ்செய்கின்றனர். ஹாவபாவங்களால் மிக்கஅழகாகிய நடனங்களாலும் யௌவனமத நடனத்தால் கல்லெனச்சத்திக்கும் நூபுரங்களினோசையாலும் தூபங்களின் கந்தங்களாலும் அற்புதமாய் விளங்குகின்றது. ஸகல கணங்களையும் ஏவிக்கொண்டிருக்கும் நந்தீஶ்வரர் அம்மண்டபத்தின் வெளியிலிருக்கின்றனர். பூஜிக்கப்பட்ட அம்மஹாலிங்கத்தைப் பரமேஶ்வரனும் பரமேஶ்வரியும் பார்த்துக்கொண்டு ஆநந்தமாய் ருத்திரகன்னிகைகளின் விரலால் மீட்டப்பட்டுண்டாகும் இனியநாதமுடைய வீணாகானத்தோடுகூடியதாகிய கந்தர்வர்களது கானத்தைக்கேட்டுக்கொண்டு சிவகருணாமுதத்தை யருந்திக்கொண்டிருக்கின்

றனர். ஈச்வரன் சந்தோஷபரவசராய் தேவியைநோக்கி ஓ தேவி! இக்கைலாசேச்வரலிங்கத்தை பூஜித்தவுடன் தெரிசித்தால் அது எனது ஹ்ருதயத்தையும் அமுதபோகபரவசமாகும்படிச் செய்கின்றதென்று சொல்லுபவராய் அந்தலிங்காலயத்தைப்பார்த்து மகிழ்கின்றனராதலின் அவ்வாலயத்தை எப்படிப்பட்ட அபாரபுண்ணியங்களாலும் பார்க்கமுடியாது. விஷ்ணு பிரம்மா ருத்திரர் மற்றுமுள்ள சுராசுரர்முதலிய யாவரும் அங்கு செல்வதற்கில்லை. ஸ்ரீ மஹாதேவனும் அம்பிகையுமே திவ்யரத்னங்களால் பூஜித்து அற்புதமாய் விளங்கும் அக்கைலாசேச்வர லிங்கத்தைத்தெரிசிக்கின்றனர்.

பன்னிரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ஸாம்பாத்மஜாயநம:
# பதின்மூன்றும் அத்தியாயம்.

## கைலாசேச்வரபிரதோஷ பூஜாவர்ணனம்.

சூதர் ஓ முனிவர்காள்! இவ்வாறு மஹாதேவன் ஸகலதேவாஸுரகணங்களோடு பூஜிக்கின்றன ரென்றார். உடனே ருஷிகள் சூதரைநோக்கி ஓ மஹா முனிவரே சகல லோகங்களாலும் பூஜிக்கப்படும் பரமேச்வரனும் லிங்கபூஜைசெய்கின்றாரென்றது மிக்க விந்தையாயிருக்கின்றது. அவருக்கும் பூஜித்தாகவேண்டியதொன்றுண்டோ? அன்றியும் தமது ரூபத்தையே பூசித்துக்கொள்வதுந் தகுதியோ? அதனது ரஹஸ்யத்தை எங்களுக்குரைக்கவேண்டுமென்று பிரார்த்திக்க சூதர்கூறுகின்றார். ஓ முனிவர்காள்! இச்சந்தேகத்தைக் கொண்டு ஜைகிஷவ்யரும் ஸ்கந்தரைக் கேட்டனர். அப்பொழுது ஸ்கந்தர் ஓ ஜைகிஷவ்யரே! சிவபெருமான் ஸர்வரூபராய் ஸர்வவியாபகராயிருக்கின்றவரேயாயினும் லிங்கார்ச்சனை புக்தி முக்தி தருமென்றவுண்மையை உலகத்தாரெல்லோருக்கும் போதித்து ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கியவர்களைக் கரையேற்றுவதின்பொருட்டுத் தாமும் பூஜித்தருளுகின்றனர். ஆனதனாலேயே விஷ்ணு பிரம்மா முதலிய சகலதேவர்களும் முனீந்திரகணங்களும் ஶாம்பவர்களாகிய அந்தணர்களும் பக்தியுடன் பூஜிக்கின்றனர். பூஜையே மிக்க ச்ரேயஸ்என்பதைக் காண்பிப்பதற்காகவே மஹாதேவன் தேவியோடுகூட அவ்விலிங்கத்தைப்பூஜிக்கின்றனர். காலசங்கமத்திலும் நடுப்

பகலிலும் சாயங்காலத்திலும் ஸ்ரீ சதாசிவன் நந்திகேசர் முதலிய கணத்தலைவர்களும் ருத்திரமங்கையர்களும் பூஜாசாமக்கிரியைகளைச் சேகரித்தல் முதலிய பணிவிடைகள் செய்யக் கைலாசேஸ்வரலிங்கத்தைப் பூஜிக்கு முறையைக்கூறுகின்றேன் கேளும். அவர்பூஜிக்கும் பொழுது தீர்த்ததாரைகள் வீழ்தற்குரிய பாத்திரங்கள் ஏழு ஸமுத்திரங்களேயாம். மனதினாலு மெண்ணுதற்கு முடியாத அபாரபூஜா சம்பாரங்களைக் கணங்கள் கொண்டுவர அச்சம்பாரங்களால் கைலாசேஸ்வரலிங்கத்தை ஈஸ்வரன் பூஜிக்கின்றனர். அதைக்கேட்டாலும் முத்திபெறலாம். சாவதானமாய்க்கேளுங்கள். ஸம்பு கைலாஸகங்கையில் தேவி நந்தீசர் முதலியவர்களோடு ஸ்நானஞ்செய்து விபூதி பூசித் திரிபுண்டரமணிந்து ருத்ராக்ஷஹாரந்தரித்து பஞ்சாக்ஷரபராயிருந்தருளுகின்றனர்.

அங்கு ஐந்துமுகத்தினராகிய பரமேஸ்ரவனது ஆகிர்திபோல் பஞ்சவக்திரேஸ்வரலிங்கமொன்று தனது ஐந்து முகங்களினின்றும் ஐந்து கங்காநதி பிரவகிக்கப்பெற்றதாய் விளங்குகின்றது. அந்நதிகள் அக்கைலாஸாசல மண்டபங்களினின்றுந் திவ்ய ரத்னப்படிக்கட்டுகளால் விளங்குகின்றனவாய் அமுதசமுத்திரம்போய்ச் சேருகின்றன. கிழக்கில் ரத்னகங்கையெனும் பெயரியதும் மேற்கில் தேவகங்கையெனும் பெயரியதும் வடக்கில் கைலாஸகங்கை யெனும் பெயரியதும் தெற்கில் உக்ரகங்கையெனும் பெயருடையதும் மத்தியில் பிரமகங்கையெனும் பெயரியதுமாய் ஸ்படிகம்போல் நிர்மல தீர்த்தத்துடன் செல்லுகின்றது. இவைகள் ரத்னலிங்கத்தின் ஐந்து முகங்களினின்றும் வெளிப்பட்டு அம் மண்டபத்தினின்றும் புறப்பட்டு அழகாகிய அலைகளோடும் மிக்கக் குளிர்ச்சிபொருந்திய பிரவாகத்தோடும் நவரத்னமயமாய் நிர்மிக்கப்பட்ட படிக்கட்டுகளால் ஜ்வலிக்கின்றவைகளாய் வில்வவனங்களாலும் மலர்ந்த நறுமலர் மரங்களாலும் பக்ஷி ஸமூகங்களாலும் விளங்கும் இருகரையுடையனவாய் இருக்கின்றன. அக்கரைகளில் விளங்கும் மண்டபத்தில் ரத்னமயமாய் நிர்மிக்கப்பட்ட சிம்ஹாசனத்தில் தேவியோடு இறைவன் வீற்றிருக்கின்றனர். நந்திமுதலிய கணேஸ்வரர்கள் அஞ்சலிபந்தஞ்செய்து நிற்க அந்நதிப்பிரவாகங்களையும் பஞ்சமுகேஸ்வரலிங்கத்தையும் பார்த்துச் சங்கரர் மிகக்களிப்பெய்தினவராய் அந்நதிகளுக்கேதுவாகிய லிங்கமுகங்களைத்தோத்திரஞ்செய்து மகிழ்கின்னர். அத்தோத்திரமாகிய ஐந்துஸ்லோகங்களையும் எவர் விடியற்காலத்திற் பாராயணஞ்செய்கின்றனரோ அவர்கள் அழியவிமானங்

களால் கைலையடைந்து சிவனெதிரில் சங்கர கணங்களோடு ஆனந்த மநுபவிக்கின்றனர். ஒருக்கால் பரமேஸ்வரன் அவ்விடமிருந்து கைலாசேஸ்வர ஆலயத்துக்குவந்து மிக்க ஆனந்தஹேதுவாகிய கைலாஸலிங்கேஸ்வரரைப் பிரதோஷகாலத்திற் பற்பல பூஜாசம்பாரங்களாற் பூசித்துபவானியைநோக்கிக்கூறியதாவதுதேவி! எனது பூஜாசம்பாரச்சிறப்பைப்பார்ப்பாய். ஸ்படிகமயமாகியபெருங்குடங்களில் அடங்கியுள்ளக்ஷீரப்பிரவாகத்தைப்பார். இவ்வாறுகோடிக்கணக்கிலுமடங்காத குடங்களிலுள்ள க்ஷீரதாரைகளால் யான் பூஜிக்கின்றேன். சக்திக்கியன்றவாறு க்ஷீராபிஷேகஞ்செய்கின்றவனுக்குச் சகல கஷ்டங்களையும் போக்கி அபார புண்யராசியைத் தந்து அவன் விரும்பும் பொருள்களையெல்லாம் கொடுப்பேனென்பதைவிளக்கப் பூசிக்கின்றேன். ததிசமுத்திரத்திலுள்ள ஆடைமிகுந்ததயிரை ஏராளமாய்க்கொண்டுவந்து இங்ஙனம் யான் சிவலிங்கத்தை யபிஷேகித்துப் பூஜிக்கின்றேனன்றோ? பசுகறக்குந்தருணமாகிய இப்பிரதோஷ சமயத்தில் சகல ஸுரர்களும் சிவலிங்கத்தைப் பூஜிக்கவேண்டியது. உன்னதமாகிய ரத்னகுடங்களில் நிறைந்துள்ள சிறந்தநெய்யைப்பார். நெய்க்கடலிலிருந்து எனதுகணங்களால் கொண்டுவரப்பட்டிருக்கின்றது. எத்திசையும் பரவும் பரிமளவாசனைவாய்ந்த இவ்வாஜ்யப்பிரவாகங்களால் கைலாசேஸ்வரலிங்கத்தைப் பூஜிக்கின்றேன். திவ்விய குடங்களால் மதுக்கடலினின்றும் முகந்துகொண்டு வந்துசேகரித்திருக்கும் மதுக்குடங்களைக் கவனிப்பாயாக. இம்மதுவின்நிறம் சிறந்த கோமேதகங்களின் நிறம்போல் விளங்குகின்றதன்றோ? இதைத் தாராப்பிரவாகவுருவமாய்க்கொண்டு சிவலிங்கத்தை அபிஷேகிக்கின்றேன். பனிவரையின் சிகரங்கள்போல் சேகரித்துவைத்திருக்கும் சர்க்கரைராசிகளைப்பார். இவ்வளவையும் இவ்விலிங்கசிரசி லபிஷேகிக்கின்றேன். லக்ஷக்கணக்கான குடங்களில் நிரம்பியிருக்குந் திவ்யநாரிகேள தீர்த்தத்தைக் கவனிப்பாயாக. இத்தீர்த்தம் அபிஷேகஞ்செய்யப்பட்டு மஹாநதிகள்போல் பிரவகிக்கின்றது. ஏழிலம்பாலையின் கனிகளை மலைபோல் சேகரித்துவைத்து மேருவினும் மிகுந்த பரிமாணத்தோடு விளங்குகின்றன. அளவிலா திவ்யமாங்கனியின் ரஸங்களால் நிறையப்பெற்று விளங்கும் எண்ணிறந்தகுடங்களும் இந்தலிங்கத்தை அபிஷேகிப்பதின் பொருட்டேயன்றோ? ஓ தேவி! மாதர்களின் தனங்கள்போல் விளங்கும் எலுமிச்சம்பழங்களின் ரஸப்பிரவாகத்தாலும் மிக்கநிர்மலமும் ஸுகந்தமுமாகிய பரிமள தீர்த்தங்களாலும் கருப்பஞ்சாற்றுக்கடலிலிருந்து

வரவழைத்து வைத்திருக்கும் ஆயிரக்கணக்காகிய மஹாகலசங்களி லடங்கியிருக்கும் ரஸப்பிரவாகங்களாலும் இந்த லிங்கத்தை அபி ஷேகஞ்செய்கின்றேன். திவ்யமாகிய கஸ்தூரி குங்குமசந்தனம் நிறை ந்தகுடங்களை இப்பிரதோஷத்தில் அபிஷேகத்துக்கு எடுத்து என் னிடம் கொடுப்பதில் நமதுகணங்கள் கையலுத்துப்போயினர். இவ் வாறு நான் அபிஷேகிப்பதினால் பிரவகிக்குந் தீர்த்தத்தை விஷ்ணு பிரமன் இந்திரன் வருணன் முதலியவர்கள் மஹாபுண்யமாகிய திவ்ய தீர்த்தமென்றறிந்து சம்ஸாரதுக்கத்தினின்றும் கரையேறி ஆனந்த மடைய விரும்பியவர்களாய் எப்பொழுதும் வந்து சேவிக்கின்றனர். இன்னம் ஆயிரக்கணக்காய சங்கங்களாலும் கோஶ்ருங்கங்களாலும் ஆயிரக்கணக்காகிய ஸ்வர்ணகும்பங்களாலும் ஸ்வர்ணரத்னங்களால் நிர்மிக்கப்பட்ட குடமூழைகளாலும் க்ஷீராஜ்ஜியதைலகந்த தீர்த்த முதலியவைகளால் இந்த திவ்ய லிங்கத்தை ஸகல வாத்திய முழக்கத் தோடு அபிஷேகிக்கின்றேன். தூபம் மதுபர்க்கமுதலியவைகளைச் சமர்ப்பித்துப் பூஜிக்கின்றேன். அன்றியும் நான்குவேதங்களும் உரு வத்துடன் நின்று சதருத்திரத்தைத் தோத்திரஞ்செய்யவும் தேவர்க ளால் காணப்படாத திவ்யபரிமள சந்தனத்தால் அலங்காரஞ்செய்து திவ்யரத்னங்களால் ஜ்வலிக்கும் மிருதுவாகிய வெண்பட்டாடைக ளால் லிங்கத்தை அலங்கரித்திருக்கின்றேன் பார்ப்பாயாக. இதன் காந்தியை விஷ்ணுபிரமன் குபேரன் முதலியயாவராலும் காணமுடி யாது. இப்படிப்பிரதோஷ சமயத்தில் பூஜிக்கப்பட்ட லிங்கத்தைத் தரிசிப்பதில் எனக்குள்ள ஆனந்தத்தை இவ்வளவென்று கூறமுடி யாது. மலர்ந்த வெண்டாமரை ரத்னதாமரை நீலோற்பலம் மந்தா ரம் தும்பை கதம்பமலர் சாயங்காலத்தில் விகசிக்கும் மலர்வகை கள் வாஸந்திகை மல்லிகை இவைகளாகிய அழகிய மாலை வரிசைகள் லிங்கத்தின் சிரசிலிருந்து பாதபீடம்வரையில் அழகாய் விளங்குவை தப்பார்ப்பாயாக. இங்ஙனம் பிரதோஷத்தில் தரிசிப்பதே கண்க ளின் பயன். அச்சிவலிங்கம் பில்வம் ரத்னகமலம் புன்னாகம் நாகை சண்பகம் அறுகு நீலோற்பலம் அரலி தும்பை வெள்ளெருக்கு செவ்வரத்தை வெண்டாமரை வகுளம்கருநீலம் முல்லை இவைகளால் பூஜிக்கப்பட்டு அம்மலர்களின் நற் பரிமளமாகிய ரசத்தில் விருப் புற்று ஜங்காரஞ்செய்து சுற்றிக்கொண்டிருக்கும் வண்டுகளால் எவ்வளவு அழகாய் விளங்குகின்றதுபார். நெய்யை நிரம்பவார்க் கப்பெற்று திவ்யவர்த்திகளோடு விளங்கும் ரத்னதீபஜாலங்களால் ஜ்யோதிமயமாய் விளங்கும் இச்சிவலிங்கத்தினழகைப்பார்க்க என

க்குப் பேரானந்தமுண்டாகின்றது. ஓ கிரிஜே! பற்பல அன்ன ராசிவகைகளையும் நெய் பருப்பு முதலிய உபபக்ஷியவகைகளையும் இமயகிரிக்குச் சமானமாய் விளங்கும் க்ஷீரான்னம் தத்யன்னம் சர்க்கரான்னம் முதலியவைகளையும் நாரிகேளம் எலிமிச்சை இலந்தை மாதளை கதலி மா பேரீச்சை விளா நாரத்தை சுராதனம் ராஜாதனம் முதலிய பழவகைகளையும் நிவேதனஞ் செய்திருப்பதனைப் பார்த்தனையோ? இவைகளெல்லாம் எனக்கு அபாரமாகிய சந்தோஷத்தை யளிப்பன வென்றறிவாய். ஜாதிக்காய் லவங்கம் முதலியவைகளுடன் கூடியதும் முத்துச்சூரணம்போல் பச்சைக்கற்பூரமுதலியவைகளால் வாசனைசெய்யப்பெற்று விளங்கும் இனிப்பான பாக்குச் சீவல் வகைகளோடு மலைமலையாய்ச் சேகரித்து வைத்திருக்கும் நாகவல்லி (வெற்றிலை) வரிசைகளையும் பிரதோஷகாலத்தில் யான் நிவேதனஞ்செய்கின்றேன். அன்றியும் பிரதோஷகாலத்தில் செவிக்கமுதமாய் திவ்ய கீதங்களை ருத்திரகன்னியர்கள் ருத்திரவீணையை மீட்டிகொண்டு சம்போசங்கர தூர்ஜடே த்ரிணயன காலாந்தகாரே! ஹரா! பாஹீசப்ரமதாதிநாத பகவன் லிங்காக்ருதேபாஹிநஃ என்பதாதி நாமங்களைக் கானஞ்செய்யவும் ரத்னமயமாகிய மத்தளம் சங்கம் காகளம் மட்டு துந்துபி வேணு தாளம் ஜல்லரி முதலிய வாத்யங்கள் முழங்க அதன் நாதத்தைக்கேட்டு மிக்க ஆனந்திக்கின்றேன். ஓதேவி, கைலாசேஸ்வர லிங்கசந்நிதியில் மத்தளம் வேணு வீணை இவைகளினாதத்தோடு ஏழு வகையான லயத்தோடுகூட இறைவனைத் துதிப்பதாகிய கீதத்தோடும் ருத்திரகன்னியாகூட்டங்கள் திவ்ய ஹாவபாவங்களை விளக்குகின்றவர்களாய் நூபுரத்தின் அழகிய இனிய வொலிகள் கலீர் கலீரென்று சப்திக்க நடனஞ்செய்யுஞ் சிறப்பைப்பார்ப்பாயாக. நக்ஷத்திரவரிசைகள்போன்ற அழகிய முத்து ஜாலங்களால் அலங்கரிக்கப்பட்டும் பூரணசந்திரமண்டலம்போன்ற மேல் விதானத்தையுடையனவுமாகிய திவ்யசத்திரங்களை சிலகணத்தலைவர்பிடித்துக்கொண்டு நிற்கவும், பற்பல சாமரங்களை கணத்தலைவர் வீசவும் திவ்யரத்னமயமான பிடியோடுகூடிய விசிறிகளால் சிலகணங்கள் விசிறவும் சில பிரமதகணங்கள் ரத்னமயமான துவஜங்களைப்பிடித்து நிற்கவும்இங்ஙனம் அற்புத வுபசாரங்களோடு பூஜிக்கப்பட்டுவிளங்கும் அவ்விலிங்கத்தை அஹம்ஸஹ என்றபாவனையுடன் பூஜித்து பரமானந்தமடைகின்றேன். ஹேதேவி! ஸகலப்பிரபஞ்சஜாலமும் என்னினும் சிறிதேனும் பின்னமல்ல. ஜகத்முழுவதும் எனது சங்கல்ப ஜாலமேயாம். இவையெலாம் இறுதியில் என்னிடமே ஒடுங்குகின்றன. யான் எப்

பொழுதும் ஏகன் அத்வயனென்று வேதங்களெல்லாங்கூறுகின்றன. எனது ஸ்வரூபம் மனோவாக்குகளுக்கெட்டாதது. யோகிகள் வேதங்கள் விஷ்ணு பிரம்ஹாதி தேவகணங்கள் முதலியாவரும் எனதுண்மையையறிகின்றவர்களல்லர். ஞானஞேயவுருவமாயுள்ள இப்பிரபஞ்சம் தோற்ற நிலையொடுக்கங்களைப் பெறினும் யான் அஸங்கனே. இவ்வாறு விஸ்வத்துக்கு அதீதனாயினும் யானில்லாதவிடம் ஒன்றுமில்லை. ஓ கிரிஜே! இஃதே எனது ஹ்ருதயம். இந்தரகஸ்யத்தை உனக்குக்கூறினேன். இதை மிக்க சாக்கிரதையாய் மனதிலேயே வைத்துக்கொள்ளவேண்டுமென்று கூறி விஸ்வநாதர் திவ்யமலர்களால் பூஜிக்கப்பட்டு விளங்கும் அவ்விலிங்கத்தைப்பார்த்து ஆனந்தவசராய் தேவியையும் நோக்கிக்கொண்டு அந்தத்திவ்யமண்டபத்தில் லிங்கசந்நிதியில் ஆனந்தநடனஞ்செய்ய வாரம்பித்தனர்.

அண்டங்களைக் கண்டனஞ்செய்யும் கோஷமுடையவராய் சண்டதாண்டவத்தால் சலிக்கும் பிரம்ஹமுண்ட முடையவராய் குண்டலீசனாகிய கர்னகுண்டலத்தால் ஜ்வலிக்கும் கண்டம்(கன்னம்) உடையோராய் தண்டுவின்மண்டுநாதத்தோடு லயித்தசரணக்கிரமமுடையோராய் நந்தி பிருங்கிகள் முழங்கும் டிண்டிமநாதத்தோடும் துண்டிராஜரது சங்கநாதத்தோடும் ஷண்முகர்செய்யும் தூரியநாதத்தோடும் மண்டிதராய் தேவிசிவையோடு நடனமாடுவாராயினர். அகிலாண்டங்களுக்கும் ஈசனாகிய அமலன் சண்டதாண்டவஞ்செய்யும் போது அவரது ஜடாமுனையாலுரையப்பெற்று நக்ஷத்திரகணங்கள் பூமியிலுதிரவும் அஷ்டமஹாகஜங்களும் முகங்களால் உதிரத்தைக்கக்கவும் விஷ்ணுபிரம்ஹேந்திராதி சுரரும் முநிவரும் நடுநடுங்கவும் நிகழ்ந்தது. அவனது ஆனந்தநடனத்துக்குச்சலிக்காத ஜகம்யாதுமில்லை. அழகிய தாமரைமாலையானது சலிக்கப்பெற்ற மார்பினையுடையவராய் லீலாசலனம்பெற்ற கங்கணங்களாகிய நாகர்களது மகுடங்களிலுள்ள திவ்யரத்னங்கள் ஜவலிக்கப்பெற்ற கைகளையுடையவராய் உதயகாலசூரியன்போல் விளங்கும் ஜடா முடி சலிக்க அங்கு விளங்கும் கங்கையும் ஜ்வலிக்க ஜல் ஜல் என்று ஒலிக்கப்பெற்ற கங்கணமுடையவராய் கலீர் கலீர் என ஒலிக்கும் நூபுர முடையவராய் கிண் கிண் என ஒலிக்கும் ரத்ன ஒட்யாணமுடையவராய் புன்னகையுடையவராய் சகல சராசரங்களையும் மோகிக்கச்செய்யும் திவ்யசௌந்தர்யமுடையவராய் மின்னல்போல் பளபளவென வொலிப்பதாகிய சந்திரகலையால் விளங்குஞ் சடையுடையோராய் ஸகல ஜகத்துக்கும் ஆதிபுருஷராய் அகில இஷ்டங்களையும் அளிப்பவராய்அஷ்டமூர்த்தி

யாய் கஷ்டஹரராய் சிஷ்டசரணராய் திவ்யஸௌந்தர்யமூர்த்தியாய் விளங்கும் நடராஜனது திருவுருவத்தைக்கண்டு தேவி ஆனந்தவசை யாய் நின்றனள். அவ்வாறு காணக்காணத் திருப்தியடையாது கண் களால் தமது திவ்ய சௌந்தர்யாமுதத்தைப் பானஞ்செய்து கொண்டிருக்குந் தேவியை மஹாதேவன் புன்னகைகொண்டவரா ய்ப்பார்த்துச் சகலருத்திரகணங்களுக்கும் லோகங்களுக்கும் அபார ஆனந்தத்தையுந்தந்து பின்னர் கிரிராஜதநயே! ஸகல சராசரங் களுக்கும் தாயாகிய அம்பிகே!யாம் இக்கைலாசேஸ்வரலிங்கத்தைப் பலகோடிகாலம் பூஜித்திருக்கின்றோம்.இந்த லிங்கத்தின் அடியையும் முடியையும் வேதங்களுங் கண்டதில்லை. தேவர் முனிவர் முதலிய யாவருமறிந்திலர். இதனைப்பூஜிக்க யாரால் மாளும்? பூஜை பூஜகன் பூஜ்யன் என்பது அற்றுவிளங்கும் எனது ஸ்வரூபமே இந்தலிங்கம். இதனைத் தெரிசிப்பதினிமித்தம் ஸகல சுராசுரமுனிவர்களும் இன்ன முந் தவம்புரிகின்றனரென்றார்.அதற்குத்தேவி ஸ்வாமியை நோக்கிப் பரமேஸ்வரா! உம்மாலும் பூஜிக்கப்படுகின்றதே. எனக்கதுமிக்க ஆச்சரியமாயிருக்கின்றது. உமக்கும் லிங்க பூஜைபாலாகவேண்டிய தொன்றுண்டோ? அவ்வுண்மையை எனக்குக் கூறுங்களென்று வேண்டிக்கொண்டனள். அதனைக்கேட்ட பரமேஸ்வரன் ஓ தேவி! கர்மங்களாலும் ஸமாதிகளாலும் ஜபங்களாலும் தபங்களாலும் பற் பலயக்ஞங்களாலும் விரதங்களாலும் தானங்களாலும் நியமங்களா லும் அடையக்கூடியது யாதுமில்லை. அவைகள் எனதுபாதாரவிந்த பூஜையோடுகூடச் சேர்ந்தாலன்றிப் பயன்படா. ஆகலால் எனது பூஜையே ஸகல பயன்களையுந்தந்து முக்திஹேதுவுமாகுமென்றவுண் மையை லோகங்கள் தெரிந்துகொள்வதின்பொருட்டு யான் பூஜிக் கின்றேன். இது எனக்கு மிக்கசந்தோஷஹேதுவே. வேதசிரசுக ளாலடையக்கூடியதும் ஓங்காரத்தினால் கிடைக்கின்றதாகிய பரமா ர்த்தசதத்வமும் ஸ்வபோதமும் அனந்தரூபமும் அத்வைதமும் ஸத்ய மும் ஞானமும் ஏகமும் சாஸ்வதமும் அவ்யயமும் ஆகிய சிவபரம் பொருளையே யான் தியானிக்கின்றேன். இவைகளெல்லாம் உண்டா தற்கு முந்தி எது இருந்ததோ எதைக்காட்டிலும் பரம் அபரம் வே றொன்றில்லையோ எதிலும் குருவாகியது யாதுமில்லையோ எதனா லேயே காணப்படும் பிரபஞ்சமெலாம் பரிபூரணமோ அதனையே இப்பொழுது யான் தியானிக்கின்றேனென்றுகூறிப் பரமசிவன் அப்பொருளையே தியானித்துக்கொண்டு ஓர் வியாபாரமுமின்றி

ஸ்தாணுபோல் சலனமற்றிருந்தனர். தேவியும் மற்றுமுள்ள கணங்களும் ஆனந்தவசராயினர். ஓ முனிவர்களே! இதுஸத்தியம்.

பதின்மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
ஸுதராரிக்நாயநம:

# பதிநான்காம் அத்தியாயம்.

## கைலாஸபிராகாரவர்ணனம்.

உடனே முநிதேவகணங்கள் ஓ ஸ்கந்தபகவானே! மாரமாரஸுதரே! அமராரிமஹாசூரஸிம்ஹதாரக ஸூதனா! தேவரீர் வாக்கியங்களாகிய அமுதப்பெருக்கை அருந்தி எங்களது மனம் தன்னியமாயிற்று. கைலாசேஸ்வர பூஜாசரித்திரத்தைக் கேட்கக் கேட்க ஆனந்தமாயிருக்கின்றது. மீண்டும் இதுபோன்ற சரித்திரத்தைக்கேட்பதில் பேராவலுடையோராயிருக்கின்றோமென்று பிரார்த்தித்தனர். இவ்வாறு தேவருஷி முநிகணங்களால் பிரார்த்திக்கப்பட்ட குமாரக்கடவுள் எதிரிலுள்ள ஜைகிஷவ்ய முநிவர்முன்னதாக அவர்களைநோக்கி ஓ முனிவர்களே! பர்ணசாலர்களாகிய நீங்களெல்லோரும் சாவதானமாய்க்கேளுங்கள். அபர்ணபதியின் மகிமையைக் கூறுகின்றேன். ஓ ஸுபர்ணவாகனர்முதலிய தேவர்காள்! கர்ணமுதமாகிய ஸ்வர்ணசலவாசியினது சரித்திரத்தைச் சிரவணஞ்செய்யுங்கள். ஐந்துகோடி பிரமாணமுடைய மஹாகைலாஸ பூப்பிரதேசத்தில் மலைப்பிராகாரங்களின் மத்தியில் கணங்களுக்கு வாசஸ்தலமுளது. அதில் கிழக்குத்துவாரகோபுரம் ஒன்பதுலக்ஷம் பிரமாணமுடையதும் நீலக்கற்களாலியற்றிய எண்ணிறந்தருத்திரகணங்களோடுகூடியதும் பற்பலதேவகோடிப்பதுமைகளையுடையதும் ஆகாயத்தைக்கிழிப்பதுபோன்றதும் பதினாயிரம் பலகணிகளோடு கூடியதும் சிலாமயமாய் விளங்கும் வ்ருஷபங்களால் சூழப்பட்டதுமாய் மிக்க அற்புதமாய் விளங்குகின்றது. அங்கு நந்தீசராலயம் ஸ்வர்ணமயமாயும் வெள்ளிமயமாயும் ஜ்வலிக்கின்றது. பற்பல மேல் மாளிகைப்பிரதேசத்தை யுடையதும் புஷ்பவுத்யானங்களால் விளங்குகின்றதுமாயுள்ளது. த்வஜம் கும்பம் ஆயிரம் ஸ்தம்பம் இவைகளையுடைய ஓரற்புதமண்டபத்தில் திவ்ய சிம்ஹாசனத்தின் மீது

பொற்பிரம்பைக் கைபிற்பிடித்தவரும் நவரத்னமயமாய் ஜ்வலிக்கும் கிரீடமணிந்தவரும் சந்திரன்போன்ற முகமுடையோரும் பாலேந்துகலா சேகரரும் நான்கு புஜங்க ளுடையோரும் விபூதி த்ரிபுண்டரத்தால் ஜ்வலிக்கின்றவரும் ஜடைமுடிதரித்தவரும் ரத்னகுண்டல மணிந்தவரும் இடையிடையே நன் முத்துக்கள் கோர்த்த ருத்திராக்ஷமாலையணிந்தவரும் சுயசாபதியும் எப்போதும் சிவத்தியானத்தால் தூய்மைபெற்ற சித்தமுடையோரும் கணேந்திர முனீந்திரஸுரேந்திரர்களாலும் கந்தர்வ அப்சரக்கூட்டங்களாலும் நாக சித்தர்களாலும் உபாசிக்கப்படுவோரும் பிரமதகணங்களால் சூழப்பெற்றவருமாய நந்திகேசர் விளங்குகின்றனர். அங்கு நவரத்னங்களால் ஜ்வலிப்பதும் சுவர்ணப்பிராகாரமுடையதும் எண்ணிறந்த விருஷபங்களால் விளங்குவதுமாகிய ஓர் மஹேசாலயமிருக்கின்றது. அவ்வாலயத்தின் கர்ப்பக்ருகம் ஸ்ப்டிகக்கற்களாலேயே நிர்மிக்கப்பட்டிருக்கிறது. அங்கு நந்தீஸ்வரமென்னும் ஓர் சிவலிங்கமிருக்கின்றது. அதனைத் தெரிசித்தாலும் பரிசித்தாலும் மஹா பாதகக்கூட்டங்கள் சூரியனைக்கண்ட விருள்போற்றொலையும். தூபதீபபக்ஷ்ய போஜ்யங்களாலும் கமல நீலோத்பலமாலைகளாலும் பில்வங்களாலும் சண்பகபுந்நாக தத்தூர பாடலங்களாலும் ஸகஸ்ர பில்வபத்தரங்களாலும் பஞ்சாமிர்தங்களாலும் சாம்பிராணி அகரு தூபங்களாலும் கற்பூரதீபங்களாலும் அந்நந்தீஸ்வரலிங்கத்தை நந்திகேசர் தினந்தோறும் முப்போதும் பூஜித்துத் தோத்திரஞ்செய்து கிழக்குப்பிராகாரகோபுரத்தில் கணங்களோடு வசிக்கின்றார். கிழக்குப்பிராகாரத்தில் நிடதமென்றும் ஹேமகூடமென்றும் பெயரிய இரண்டுபர்வதங்களிருக்கின்றன. பின்னர் ஆக்னேயதிக்கில் ஐந்து லக்ஷம் பிரமாணமுடையதும் ருத்திராவதார சரிதபதுமைகளாலும் வ்ருஷபங்களாலும் விளங்குவதுமாய் ஓர் கோபுரமிருக்கின்றது. அங்கு லக்ஷங்கணங்களால் சூழப்பெற்றவனான சுகேசனெனும் கணநாதனிருக்கின்றான். அவன் அங்குள்ள ஓர் திவ்ய ஆலயத்தில் விளங்கும் ஸுகேசேஸ்வரமென்னு மிலிங்கத்தை முப்பொழுதும் பூசித்து வழிபடுகின்றான். நீலமென்றும் மந்தாரமென்றும் பெயரிய இரண்டு மஹாபர்வதங்கள் தெற்குப்பிராகாரத்திலிருக்கின்றன. அங்கு பத்துலக்ஷம் பிரமாணமுடையதாயும் பற்பல ருத்திரகணங்களோடு கூடியதாயும் தேவமார்க்கத்தைப் பிளந்துகொண்டிருப்பதுபோல் காணப்படுவதும் எண்ணிறந்த ருத்திராவதார சரிதங்களாலும் வ்ருஷபஸ்தம்பங்களாலும் ஜ்வலிப்பதுமாகிய கோபுரமிருக்கின்றது.

அந்த சண்டீசனது ஆலயம் சுவர்ணமயமாய் விளங்குகின்றது. ஆயிரம் ஸ்தம்பங்களோடுகூடியதும் முத்துத்தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றதும் நீலமணிகளால் நிர்மிக்கப்பட்ட பற்பலகட்டுகளையுடையதும் ரத்னமயமாகிய சோபானவரிசைகளால்விளங்கும் சிம்ஹாசனமுடையதுமாகிய ஓர் மண்டப மிருக்கின்றது. அச்சிங்காசனத்தின்மீது மின்னல்போல்விளங்குஞ் சடையுடையோனும் சந்திரகலைதரிப்போனும்விபூதித்திரிபுண்டரமணிந்தவனும்ருத்திராக்ஷாபரணமணிந்தவனும் அற்புதமான ரத்னமயமாகிய திவ்யவஸ்திரந் தரிப்பவனும் கண்களைமூடிக்கொண்டு சம்புவின்பாதாரவிந்தத்தைத் தியானிக்கின்றவனும் கிம்புருடசித்த சாத்தியமுநீந்திரர்களாலும் கணேந்திரர்களாலும் சேவிக்கப்பட்டவனும் ருத்திரசங்கங்களோடு கூடியவனுமாகிய சண்டீசன் வீற்றிருக்கின்றான். அங்குநவரத்னமயமாகிய பிராகார கோபுரங்களுடையதாகிய ஓர் திவ்யாலயமிருக்கின்றது. அங்கு சண்டிசேஸ்வரமெனும் ஓர் திவ்யலிங்க மிருக்கின்றது. அந்தலிங்கசோதியால் அத்திசைமுழுதும் சோதிமயமாய்க் காணப்படுகின்றது. அந்த சண்டிசேஸ்வரலிங்கத்தைச் சண்டீசன் முக்காலமும் பில்வம் மந்தாரம் மல்லிகை அலரி கர்ணிகாரம் முதலிய மலர்களாலும் தூபதீப நைவேத்யங்களாலு நடனகரதாள ஸ்தோத்திரங்களாலும் பூஜித்துவழிபட்டு எப்போதும் பரமசிவ பாதாரவிந்தத்தையே தியானித்துக்கொண்டு பரமானந்தாநுபவம் பெற்றிருக்கின்றான்.

பதினான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

மஹாகணபதயேநம:

## பதினைந்தாம் அத்தியாயம்.

### சைலப்பிராகார வர்ணனம்.

ஸ்கந்தர் ஓ முனிவரே! நிருதிதிக்கில் ஐந்துலக்ஷம் பிரமாணமுடைய ஓர் கோபுரமானது அநேகருத்திரசரிதங்களை விளக்குவதாகிய விசித்திர அமைப்புடன்கூடிய சிகரங்களால் மிக்க ஆச்சரியமாய் விளங்குகின்றது. அங்குபாணன் அநேக க்ஷேத்ரகணங்களோடு ஸ்ரீ மஹாதேவனை யுபாசித்துக்கொண்டிருக்கின்றான். அங்கு நவரத்னமயமான ஆயிரம் ஸ்தம்பங்களோடுகூடிய திவ்யமண்டபத்தால்

விளங்கும் ஓராலயமுளது. அவ்வாலயத்தில் பாணேஸ்வரரெனும் லிங்கமூர்த்தியைப் பாணன் பில்வதளங்களால் முப்போதும் பூசித்துத் தோத்திரஞ்செய்து மகிழ்கின்றான். மேற்குப்பிராகாரத்தில் அஸ்தாத்திரி பாரியாத்திரமெனும் பெயரிய இரண்டுகிரிகளிருக்கின்றன. அங்கு பத்துலக்ஷம்யோஜனைப் பரிமாணமுடைய கோபுரமொன்று எண்ணிறந்த வ்ருஷபங்களாலும் ருத்திரலீலாவிலாசங்களாலும் கும்பங்களாலும் கைலாயத்தினும் மிக்கச்சுந்தரமாய் விளங்குகின்றது. அங்கு ஆயிரம்ஸ்தம்பங்களுடையதும் மாணிக்கங்களாலிழைக்கப்பெற்றதுமாகிய ஓர் மாளிகையில் பஸ்மோத்தூளிதராய் திரிபுண்டரத்தால் விளங்கும் நெற்றியுடையோராய் மணிமாணிக்க கங்கணமுடையோராய் பிறையணிந்தோராய் ஜடாதரராய் பெருஞ்சோதிபோல் ஜ்வலிப்பவராய் ஸ்ரீ பிருங்கிவீற்றிருக்கின்றனர். அவர் அந்தப் பிராகாரத்திலுள்ள நவரத்னமாகிய ஓரற்புத ஆலயத்திலுள்ள பிருங்கீஸ்வர ரெனும் இலிங்கத்தை வாசுகி, சங்கபாலன், கம்பளன், அஸ்வதரன், சேஷன், தக்ஷகன் முதலியவர்களோடு முப்போதும் பஞ்சாமிர்தம் கனிரஸம் சந்தனம் பில்வம் தூபதீபநைவேத்ய தாம்பூலாதி சாதனங்களால் பக்தியுடன் பூஜித்துப்போற்றி மகிழ்கின்றார். வாயுபாகத்தில் ஐந்துலக்ஷம் யோஜனை பரிமாணமுடைய ஓர் திவ்ய கோபுரமும் ஆயிரம் ஸ்தம்பங்களால் விளங்குமண்டபமுமுளது. அவ்விடத்தில் விபூதிருத்திராக்ஷந்தரித்தவனும் சந்திரகலையணிந்தவனும் மகாபக்தனும் சிவத்யானத்தால் பேரானந்தமடைவோனும் இரண்டுலக்ஷம் கணத்தலைவர்களாலும் எண்ணிறந்த கணங்களாலும் போற்றப்பெற்றவனுமாய் ருடியென்பவனிருக்கின்றான். அங்குள்ள திவ்யாலயத்தில் ருடீஸ்வரமென்னும் பெயருள்ள லிங்கத்தை அந்த ருடியானவன் மிக்கப்பக்தியுடன் முக்காலமும் பூஜித்துப் போற்றி மகிழ்கின்றான்.

ஓ முனிவரே! இனி வடக்குப்பிராகாரத்தில் துந்துபி மந்தரம் ரைவதம் எனும் மூன்றுகிரிகளிருக்கின்றன. அங்கு பத்துலக்ஷம் யோசனையுயர்ந்ததும் எண்ணிறந்த மணிவேதிகைகளாலும் சிகரத்துவஜங்களாலும் அழகிய கோபுரமொன்றிருக்கின்றது. அங்கு ஆயிரம் சுவர்ணஸ்தம்பங்களால் விளங்குவதும் திவ்யரத்னமயமாய் ஜ்வலிப்பதுமான ஓர் திவ்யமாளிகையிருக்கின்றது. அதனில் பஸ்மருத்திராக்ஷந்தரித்தவரும் முத்துமாலையணிந்தவரும் சிரசில் சந்திரகலை தரித்தவரும் திரிபுண்டரரேகைகளால் விளங்கும் நெற்றியுடையோரும் கையில் முச்சூலமும் வரதானமுத்திரையுந் தரிக்குங்கையுடை

யோரும் குபேராதி தேவருத்திரகணங்களால் தோத்திரஞ்செய்யப் பெற்றவருமாய் ஸ்ரீ காலாக்னிருத்திரர் வீற்றிருக்கின்றார். அங்கு ஓர் மிக்க அற்புதமாகிய ஆலயத்தில் காலருத்திரேஸ்வரமெனும் லிங்கம் விளங்குகின்றது. காலாக்னிருத்திரர் பில்வமுதலிய அபாரமாகிய பூஜாசாதனங்களால் ஸ்ரீ காலருத்திரேஸ்வரரை முப்போதும் பூஜித்துப்போற்றி வழிபடுகின்றனர். ஈசானபாகத்தில் ஐந்துலக்ஷம் யோஜனைப் பரிமாணமுடையதும் எண்ணிறந்த சுவர்ணரத்னகலசங்களால் ஜ்வலிப்பதுமாகிய ஓர்கோபுரமிருக்கின்றது. அங்குள்ள ஆயிரம் ஸ்தம்பங்களால் விளங்கும் மஹாமாளிகையில் ஈசானனாலும் ருத்ரகணத்தலைவராலும் சேவிக்கப்பட்டவரும் விபூதிருத்திராக்ஷந் தரிக்கின்றவரும் திரிபுண்டரமணிந்தவரும் ரத்னமயமாகிய கங்கண தோள்வளைகளாலும் ரத்ன ஹாரங்களாலும் விளங்கும் மேனியுடையோருமாய் ஸ்ரீ நீலருத்திரரிருக்கின்றனர். அவர் அங்கு நவரத்ன மயமாகிய ப்ராகாரகோபுரங்களால் விளங்கும் திவ்யாலயத்தில் வீரபத்ரேஸ்வரமெனும் பெயரிய லிங்கமூர்த்தியைமுக்காலமும் ஒப்பற்ற பூஜாத்திரவியங்களால் பூஜித்துப் போற்றி மகிழ்கின்றனர்.

ஓ முனிவரே! இவ்வாறு சைலாவரணத்தின் வைபவத்தைக் கூறினேன். இதுதான் சிவகணங்களிருக்குமிடம். பத்துலக்ஷம்யோஜனைப் பிரமாணமுள்ள அகழிகளும் எண்ணிறந்த கோபுரங்களும் ஆயிரம்பதினாயிரங்கணக்காகிய ஸ்தம்பங்களால்விளங்கும் மண்டபங்களும் அற்புதமாகிய சிவலிங்காலயங்களுமாகிய இச்சைலாவரணத்தின் மஹிமை அளவிடங்காது. இவ்வாறே உட்பிராகாரங்களிலும் பிராகார கோபுரங்களிருக்கின்றன. அவை எண்ணிறந்த பிரமதகணநாதர்களாலும் சைலத்வீப நதீநதங்களாலும் அற்புதமாகிய உத்யானவனங்களாலும் அழகாய் விளங்குகின்றன. இவ்வத்தியாயத்தைச் சிந்திக்கும் விப்பரன் சிவகணனாவான். ஓ முனிவரே! ருத்திர பிரம்ஹவிஷ்ணு முதலிய தேவர்களும் காற்று சந்திரன் சூரியன் அக்னிமுதலிய யாவர்களும் செல்லுதற்கரிய இந்த சப்தப்ராகாரமத்தியில் ஸ்ரீமஹாதேவன் அம்பிகையோடு விளங்குகின்றனர். அதன் சிறப்பை வேதங்களாலுங்கூறமுடியவில்லை. நிஸ்வாஸமாகிய வேதத்தோடும் அம்பிகையோடும் விளங்கும் அவ்விறைவனது ஸ்வபாவ சித்தமாகிய சக்திகளே ஸகல ஜகத்தையுமுண்டாக்குகின்றன. அவரது பாதாரவிந்தத்தில் பக்திசெய்தவர்களே பரமசிவகணங்களாவர். பிரமன் இந்திரன்முதலியவரது பதங்களையடைவதற்கும் அவ்விறைவனது பாதாரவிந்தார்ச்சனையே ஹேதுவாகும் என்றருளினர்.

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

மான்யாயநம:

# பதினொரும் அத்தியாயர்.

## பஞ்சப்ரம்ஹப்ராகாரவர்ணனம்.

ஜைகிஷவ்யர் ஸ்கந்தரைநோக்கி ஸ்வாமி! இதுகாறும் தேவரீர் சைலப்ராகாரத்தின் ஸ்வரூபத்தைக் கூறியதைக்கேட்க மிக்க ஆனந்தமாயிருக்கின்றது. இன்னம் எவ்வளவு பிராகாரங்கள் மஹேசாலயத்திலிருக்கின்றன. கோபுரங்களும் எவ்வளவு? அதனைத்தேவரீர் கருணைகூர்ந்துரைத்தருளுங்களென வேண்டவே ஸ்கந்தர் ஜைகிஷவ்யரைநோக்கிக் கூறியதாவது:-ஓ முனிவரே! பிரம்ஹவித்வரர்களே! ஓ கணநிபர்களே! கேளுங்கள். மஹேசாலயத்துக்குக்கீழ்த்திசையில் க்ஷீரசமுத்திரமாகிய அகழியோடுகூடிய கோட்டை ஒன்றுளது. அப்பிராகாரமானது அநேகரத்னமயமாகிய கோபுரங்களின் பிரபையை அத்திசை முழுதும் பரவச்செய்வதும் வெள்ளிக்கொம்புகளையுடைய மஹாவிருஷபப்பதுமைகளையுடையதும் ஸ்படிகமயமாகிய அழகிய மாளிகைகளையுடையதுமாயிருக்கிறது. அங்கு வைடூரியமயமாகிய கோபுரத்துடன்கூடிய ஓர் மாளிகையிருக்கின்றது. அம்மாளிகையில் நவரத்னங்களால் விசித்திரமாயமைக்கப்பட்டுள்ள சிம்ஹாசனத்தில் சூலமுதலிய ஆயுதங்களையேந்தியவர்களும் சடைமுடியில் சந்திரகலைதரிப்பவர்களும் திரிபுண்டரத்தால் ஜ்வலிக்கும் நெற்றியில் கண்ணையுடையவர்களும் இடையே ரத்னங்களைக் கோர்த்தருத்திராக்ஷமாலைகளைக் கண்டத்திலணிந்தவர்களும் மேகம் போலும் நீலோற்பலம்போலும் விளங்குங் கண்டத்தையுடையவர்களும் சர்ப்பங்களையே ஆரங்களாயணிந்துள்ளவர்களும் பெரியவுடுக்கையின் நாதத்தால் திசையை நடுங்கச்செய்கின்றவர்களும் நாகங்களையே நூபுரம் தோள்வளை கங்கணம் முதலிய ஆபரணங்களாகக் கொண்டவர்களும்சிம்ஹம்போன்றவர்களும் புலித்தோலைத்தரிக்கின்றவர்களும் யானைத்தோலையுத்தரீயமாகக் கொண்டவர்களும் யானைத்துதிக்கைபோன்ற கைகளையுடையோரும் ஆகியகணநீசர்களால் சூழப்பட்டவரும் சந்திரன் தும்பைமலர் முதலியன போன்றகாந்தியுடையோரும் ஜடாமகுடத்தில் விளங்குஞ் சந்திரகலையைத் தரித்தவரும் விபூதிபூசி முப்புண்டரமணிந்தோரும் நான்குகைகளையுடையோரும் முக்கண்ணரும் கறைக்கண்டரும் அநேககோடி பாலசூரிய

ருகித்தாற்போல் தோன்றுவோருமாகிய தத்புருஷர் வீற்றிருக்கின்றார். அவர் அங்குள்ளதும் அற்புதமாகிய ஆலயத்தில் தத்புருஷேச்வர மகாலிங்கத்தைப் பூஜித்துத் தோத்திரஞ்செய்து வழிபடுகின்றனர். இவ்வாறு கிழக்குத்திசையை தத்புருஷரெனும் ருத்ரகணேசர் பாலனஞ்செய்துகொண்டிருக்கின்றனர். தென்திசையில் உவர்க்கடல் அகழியுடன்கூடியதும் காலாயஸ (இரும்பால்) த்தால் அமைக்கப்பட்டதுமாகிய கோட்டையிருக்கின்றது. அன்றியும் அந்தப் பிராகாரமானது இந்திரநீல மணிகளாற் சொலிக்கும் எண்ணிறந்த கோபுரங்களையுடையது. அங்கு நாகமணிகளால் அமைக்கப்பட்ட மாளிகையின் திவ்யபீடத்தில் புருவத்தை நெறிப்பதனால் பயங்கரமாகிய முகத்தினையுடையோரும் மகாகோதண்ட முடையோரும் ஜடாமண்டலத்தில விளங்குஞ் சந்திரகண்டத்தையுடையோரும் நீருண்டமேகத்தினிடையிற் காணப்படும் மின்னற்கொடிபோன்ற சற்றுப்பற்களையுடையோரும் காளமேகத்தினடுவில் காணப்படும் மின்னற்கொடிபோற் கருநிறம்வாய்ந்தநெற்றியில் விளங்குந் திரிபுண்டரமணிந்தோரும் வில் கத்தி முதலியவைகளைத் தரிப்பவரும் தன்னைப் போல் காணப்படுவோர்களும் மஹா பயங்கரர்களுமாகிய ருத்திரகணத்தலைவர்களால் சூழப்பட்டவரும் கோரவதனருமாகிய அகோரர் அத்தென்திசையைக்காத்துக்கொண்டு அங்குள்ள அகோரேச மஹாலிங்கத்தைப் பக்தியுடன் பூஜித்துத்துதித்து வழிபடுகின்றனர்.

மேற்குத்திசையில் புஷ்பராகமணியமயமாகிய கோட்டையிருக்கின்றது. புஷ்பராகமணிகளாலாகிய ருத்திரகிரீடாவிலாஸபதுமைகளாலும் விருஷபங்களாலும் திவ்யகலசங்களாலும் விளங்கும் அழகிய கோபுரங்களையுடையதாகிய ஓர் மஹா மாளிகையுளது. அங்குள்ள ஓர் திவ்ய சிம்ஹாசனத்தின்மீது சுகமாய் வீற்றிருப்பவரும் விபூதி பூஷிதரும் சந்திரகலையால் விளங்கும் பொன்மயமாகிய ஜடாமுடியோரும் நீலோற்பலம்போன்ற கண்டமுடையோரும் புஷ்பராக மணியால் இயற்றப்பட்ட மாலைகளைத்தரிப்பவரும் புலித்தோலை இடையிற்கட்டியவரும் அஹிமன்யு முதலிய பற்பல கணங்களாற் சூழப்பட்டவரும் பாசாங்குச அபயங்களால் விளங்கும் கரத்தினையுடையோரும் பாசதரனல் சேவிக்கப்பட்டவரும் அகழியாகிய தயிர்க்கடலின் அலைக்காற்றால் வீசப்பட்டவருமாகிய ஸத்யோஜாதர் மேற்குத்திசையைக் காத்துக்கொண்டு ஸத்யோஜாதேச்வர மகாலிங்கத்தை மிக்கபக்தியுடன் பூஜித்துத் தோத்திரஞ்செய்து வழிபடுகின்றனர். வடக்குத்திசையில் நெய்க்கடலாகிய அகழியால் சூழப்

பட்டதும் கோமேதமணியால் அமைக்கப்பட்டதும் எண்ணிறந்த கோபுரங்களால்விளங்குவதுமானபிராகாரம் ஒன்றிருக்கிறது. அங்கு மிக்க அற்புதமாகிய மாளிகையிலுள்ள திவ்ய ஸிம்ஹாசனத்தின்மீது முக்கண்ணரும் பஸ்மோத்தூளன திரிபுண்டரமணிந்தவரும் மின்னல் போன்ற ஜடையுடையோரும் கத்திகேடயந்தரிப்பவரும் பிரசந்நரும் நீலகண்டரும் சந்திரகலாதரரும் திரிபுண்டரமணிந்தவர்களும் சந்திர கலாதரர்களும் தநுர்ப்பாணங்களைத் தரிப்பவர்களும் வீணைமுரசுமி ருதங்கமுதலியவாத்தியங்களை முழக்கிக்கொண்டு பரமானந்தமுடை யோர்களுமாகிய கணுதீசர்களால் சூழப்பட்டவரும் ஸர்ப்பபூஷண ரும் வெண்பட்டாடை தரிப்பவருமாகிய வாமதேவர் அத்திசையைப் பாலனஞ்செய்துகொண்டு வாமதேவேஸ்வர மஹாலிங்கத்தைப் பூஜி த்துத் தோத்திரஞ்செய்து வழிபடுகின்றனர். இனி உச்சியில் வச் சிரமணிமயமாகிய ஓர் திவ்யமாளிகை மிக்க அற்புதமாயிருக்கிறது. அங்குள்ள திவ்யமாளிகையில் கோடிசூரியன்போல் ஜ்வலிக்கும் ஸிம் ஹாசனத்தின்மீது மத்யானகாலத்துச் சூரியன்போல் ஜ்வலிப்பவ ரும் சந்திரகலை தரித்தவரும் விபூதி பூஷிதரும் கஜசர்மவஸ்திரமணிந் தோரும் வயிரமணிமாலையால் ஜ்வலிக்கின்றவரும் கவசம் அம்பறுத் தூணிகத்திமுதலிய ஆயுதங்களைக்கையிலேந்தியவர்களாகிய ருத்திர கணங்களாற் சூழப்பெற்றவருமாகிய ஸ்ரீ ஈசானர் உச்சித்திசையைக் காத்துக்கொண்டு ஈசானேஸ்வர மகாலிங்கத்தை மிக்க பக்தியுடன் பூஜித்துத்துதித்து வழிபடுகின்றனர். ஓ முனிவர்களே! இவ்வாறு மஹேசனது ஆலயத்துக்கு நான்குபக்கத்திலும் உச்சியிலுமிருக்கும் பஞ்சப்ரம்ஹ பிராகாரங்களின் நிலைமையை ஸ்ரவணஞ்செய்தால் ஸகலபாபங்களு நீங்கும். இவ்வைந்து பிராகாரங்கள் ரத்னப்பிரா காரமெனப்படும். இவை சிவனுல் நிர்மாணஞ்செய்யப்பட்டுள்ளன. சிவநிர்மாணமஹிமை அபாரமன்றோ? மஹாமாயராகிய அவ்விறைவ னதுமாயை விசித்திரமாயுள்ளது. அம்மாயையின் சேஷ்டைமனோ வாக்குக்கெட்டாதது. எவனது அம்சலேசத்தின் லவலேச சதாம்ச லேசலேசங்களால் ஜகத்தின்தோற்ற நிலையொடுக்கங்கள் நிறைவேறு கின்றனவோ எவனது இடப்பாகத்தினின்றும் விஷ்ணுவும் வலப் பாகம் நேத்ரங்களினின்று முறையே பிரமருத்திரரு முண்டானார்க ளோ அவ்விறைவனது சரிதமானது மனோவாக்குக்கெட்டாததே. அவ்விறைவனே ஸ்வதந்தரன்; ஸகலகுணங்களற்றவனுயினும் சகுண னுய்த் தனது சக்தியால் ஜகத்வியாபாரத்தை நடாத்துகின்றனன்.

பதினொரும் அத்தியாயம் முற்றிற்று.

௨

பவாத்மஜாயநம:

# பதினேழாம் அத்தியாயம்.



## கைலாஸப்ராசாதவர்ணனம்.

ஸ்கந்தர் ஓ முனிவரே! இவ்வாறு பஞ்சப்பிரம்ஹப்பிராகாரத்துள்ளும் சந்திரகாந்தமணிமயமாய் ஓர் பிராகாரமிருக்கின்றது. அது ஐந்துலக்ஷம் யோஜனையுயரமும் அவ்வளவு அகலமும் உடையது. அதனைச்சுற்றி அமுதசமுத்திரமே அகழியாக அமைந்துவிளங்குகின்றது. அது அமுதசமுத்திரத்தின் அலைகள் உல்லாசமாய் நான்கு பக்கத்திலுமோதப்பெற்றதும் நான்குதிசைகளிலும் நான்குத்துவாரகோபுரங்களையுடையதும் ஸ்வர்ணகும்பங்களாலும் ரத்னங்களாலுஞ் சொலிக்கப்பெற்றதும் அநேக கோடிசந்திரன்போல்விளங்குவதும் சகலஜகங்களும் பிரதிபிம்பிக்கப்பெற்றதும் எத்திசைகளையும் சந்திரகாந்திமயமாய் விளங்கச்செய்வதும் சந்திரகிரண சம்பந்தத்தால்அமுதப்பெருக்கெடுக்கப்பெற்றதும்கைலாஸபர்வதசௌந்தரியஸாரம்போன்றதுமாய்விளங்குகின்றது. அந்தக்கோட்டையின்மேற்பிரதேசத்தில் ஸ்படிகத்தால் நிர்மிக்கப்பட்ட விருஷபங்களின்சிறப்பை யாவராற்கூறமுடியும்! கறுத்தகண்களும் திவ்யாபரணமணிந்த வால்கொம்புமுதலிய அங்கங்களும் குருவிந்தம்போல்விளங்கும் நாக்கும் அழகியதிமிலும் காதின்முனையில் தொங்கும் அழகிய சாமரை வரிசைகளு முடையனவாய் சிற்சில ஆனந்தத்துடன் ஒன்றையொன்று நோக்குவனவும் சிற்சில பசுவின் பின்பக்கத்தைப் போகசம்பிரமத்துடன் நோக்குவனவும் சிற்சிலசிறந்தவைரத்தினல் நிர்மிக்கப்பட்ட தந்தவரிசைகளைக்காட்டுவனவும் சிலபவழத்தினல் நிர்மிக்கப்பட்ட விருஷணம்தொங்க வுல்லாஸமாய் நான்குதிக்கையும் நோக்கிக் கர்ச்சிக்கின்றனவுமாய் மிக்க அழகாயிருக்கின்றன. அக்கோட்டையிலுள்ள வுத்யானவனத்தின்சிறப்பு மிக்க ஆச்சரியம். கற்பகவனம் அங்குதானுளது. அவ்வனத்தில் ஆறுபருவத்திலும் உண்டாகும் தளிர் இலை காய்கனிமுதலியவைகள் ஸகலமும் எப்போதுமிருக்கின்றன. அங்குள்ள மலர்களின்பரிமளத்தைப்பெற்றதும் சுகசீதமான மலர்த்தேன்துளிகளை எங்கும்இறைப்பதுமாகியகாற்று மிக்க ஆச்சரியகரமாயுள்ளது. நவரத்னமணற்றூள்களால் மூடப்பட்ட ரத்னமேடைகளும் மந்தாரம் பாரிஜாதம் சந்தானம் அரிசந்தன முத

லிய விருக்ஷங்களின் சோலைகளும் பார்ப்பதற்குப் பேரானந்தத்தை யுண்டுபண்ணுவன. அம்மரங்களின் மலர்வாசனையால் எங்கும் குமுகுமுவென திவ்யபரிமளவாசனை வீசுகின்றது. அவ்வனத்தை நினைத்த விஷ்ணுபிரம்ஹேந்திர தேவர்களும் முநிவர்களும் தத்தம் நந்தனவனத்தை விரும்புகின்றதுமில்லை. அவ்வனத்திலுள்ள சுகாம்சத்தின் நூற்றிலொருபங்கின் நூற்றிலொரு அம்சங்கூட ஏனையவனங்களிலில்லை. அவர்கள் ஸ்ரீ மஹேசனது பிரசாதமில்லாமல் அங்குசெல்ல முடியுமோவென்று ஒருவரோடொருவர்வியந்துபேசிக்கொண்டிருக்கின்றனர். அன்றியும் அவ்வனமத்தியில் அற்புதமாகிய நவரத்னங்களாற் கட்டப்பட்ட படித்துறைகளோடு கூடியதும் சுத்தமாகிய ஸ்படிகக்கல்போன்ற தீர்த்தமுடையதும் சுவர்ணமயமாகிய கொடிகளில் மலர்ந்து விளங்கும் ரத்ன கல்ஹார (தெய்வத்தாமரை) மலர்களால் எங்கும் வியாபிக்கப்பெற்றதும் இந்திரநீல மணிமயமான நீலோற்பல மலர்களாலும் செந்தாமரையாலும் விளங்குவதும் மலர்களின் பரிமளகந்தம் நான்குதிசைகளிலும் பரவப்பெற்றதுமாகிய ஓர்திவ்யசரசு மிக்க வுல்லாசமாயிருக்கின்றது.

ஓ முனிவர்களே ! அந்தத்திவ்யசரசின் கரையில் திவ்யரத்னமயமாய் ஜ்வலிக்கும் எண்ணிறந்த மாளிகைகளிருக்கின்றன. விசித்திரமாகிய திவ்ய ரத்னங்களால் நிர்மிக்கப்பட்ட ஸ்தம்பவரிசைகள் ஜன்னல் கொடுங்கை கவாட்சம் முதலியவைகளுடன் கூடியும் உன்னதமாகிய ரத்னகும்பங்களாலும் எண்ணிறந்த சித்ரப்பதுமைகளால் விசித்திரமாயும் ஜ்வலிக்கும்மண்டபமுளது. அது ஓரிடத்தில் நவரத்னமயமாகிய திவ்ய சிம்ஹாசனமும் ஓரிடத்தில் ரத்னபாதங்களும் ஸ்படிக பலகையுமுடைய திவ்யமஞ்சங்களும் ஓரிடத்தில் இந்திர நீலமணி மேடைகளும் ஓரிடத்தில் முத்து ஜாலவரிசைகளால் மேல்விதானம் அமைக்கப்பெற்றும் ரத்னமயமாகிய சங்கிலிகளோடு கூடியதும் தலையணைதிண்டுமுதலிய ஸாதனங்களுடன்கூடிய தொங்குமஞ்சங்களும் ஓர் பக்கத்தில் புஷ்பராக கோமேதவைடூரியங்களால் அமைக்கப்பட்ட பீடங்களும் ஓரிடத்தில் மின்னல்போல் ஜ்வலிக்கும் ஆசனங்களும் விளங்கப்பெற்றதாய் மிக்க ஆச்சரியமாயிருக்கின்றது; அன்றியும் மேடு பள்ளமாகவும் பள்ளம் மேடாகவுங் காணப்படும் விசித்திரபிரமைப் பிரதேசங்கள் ஏராளமாயிருக்கின்றன. அங்கு கஞ்சுகிகள் பிரமித்து மயங்கிவீழ்கின்றனர். கரைபோற்றோன்றும் ஜலப்பிரதேசமும் சலம்போற்றோன்றும் கரைகளுமிருக்கின்றன. கிளிகளுடன்கூடிய ரத்னக்கூண்டுகளின் வரிசைகளாலும் லீலா

விலாஸமயில்களாலும் மிக்க அழகாயுள்ளது; அங்குள்ள பக்ஷிக ளெல்லாம் சிவசங்கர பாஹி நஃ என்று கூவுகின்றன. தூபங்களின் புகையால் எங்கும்திவ்யகந்தம்வாய்ந்ததும் ஸோமஸூர்யர்களைப் பரி கசிக்கும் காந்தியுடையதும் உன்னதமாகிய சிகரங்களுடன் கூடியது மாய் விளங்குகின்றது.

அன்றியும் அந்தத்திவ்ய ஸரஸின் நடுவில் ஓர்அற்புதமண்டப மிருக்கின்றது. ரத்ன ஸ்தம்பங்களோடும் ஸ்வர்ணவஸ்திரங்களா லாகிய மேல்விதானங்களோடும் முத்துஜாலங்களோடும் கூடிவிளங் கும் அம்மண்டபநடுவில் ஒப்பற்றமிக்க அற்புதமான வயிரமணியால் அமைக்கப்பட்ட சிம்ஹாசன மொன்றுளது. ஸ்ரீ மஹா தேவன் தேவியோடுகூட ஒவ்வோர்சமயத்தில் அங்கு உல்லாஸமாய்வீற்றிரு ப்பார். ஓர் சமையத்தில் இறைவன் தேவி கையால்விசிறப்பெற்று அங்குள்ள பீடத்தில் பற்பல லீலாவிலாசங்களைச் செய்தார். தேவி யுடன் திவ்யமாளிகையடைந்து அங்குள்ள சிறப்பை மஹாதேவன் தேவிக்குக்கூறியதைக் கூறுகின்றேன். ஓ முனிவரே கேளும், ஸகி கணங்களோடுங்கூடிய தேவியைநோக்கி இறைவன் அக்கைலாயத்தி லுள்ள தென்னை, மா, பனை, கிருதமாலம், தமாலம், நெல்லி,வகுளம், மருதை, பாடலம்,பலா, எலுமிச்சை, மாதுளை, கடம்பம், பெருங்கா யம், நாவல், வேம்பு, தக்கோலம், ஹிந்தாலம், அழிஞ்சில், ஆனை வணங்கி, அசோகம், திலகம், திந்தூகம், பில்வம், புன்னாகம், கிரிநா கம், சர்ஜ்ஜம், சாம்பேயம், இலுப்பை, ப்லக்ஷம், அரசு, விளா, புளி, தவம், கிரிமல்லி, குரண்டம், கர்ணிகாரம், அம்லமாரம், சிவந்தை, புரசு, சந்தனம், செவ்வரத்தை, சுகதுண்டம், சிம்சுபம், மணிபுங்கம், நொச்சில்,தேவதாரு, அகில், மந்தாரம், பாரிஜாதம், வகஜம்,எழிலைம் பாலை, கமுகு, பேரீச்சை, நாரத்தை, ஜாதி, அத்தி, பூதாவாஸம், வன்னி, சிந்தரம், காரகில், வாகை முதலிய விருக்ஷங்களாலும், மல் லிமாலதி ஜாதிசண்பகம் முல்லை செவ்வரத்தை தாழை கௌஸும் பம் கமுகு முதலிய மலர்களாலும், திராக்ஷை கரும்பு வெற்றிலை முதலிய இனிய செடிகொடி வரிசைகளாலும் இன்னும் கௌஸும் பம், மாதுளை, மந்தாரம், புரசு, முள்ளிலவம், புன்னாகம் முதலியவிரு க்ஷங்களின் மலர்களாலும் இவ்வனம் எவ்வளவழகாயிருக்கின்றது பார். இன்னும் இத்தடாகத்திலுள்ள மலர்ந்ததாமரை நீலோற்பலம் செந்தாமரை ரத்னதாமரை முதலிய மலர்களையும் இதைச்சுற்றி விள ங்கும் பில்வ விருக்ஷங்களின் அடியிலுள்ள சிவலிங்கங்களையும் ஆங் காங்கு ஆனந்தமாயுட்கார்ந்து கொண்டிருக்கும் சக்கரவாகம் ராஜ

ஹம்ஸம், கொக்கு, வண்டாழ்வான் முதலிய பறவைவரிசைகளை யும் விருக்ஷங்களில் ஆனந்தமாய்சஞ்சரித்துக்கொண்டிருக்கும் கபிக் கூட்டங்களினால் உதிர்க்கப்பட்ட புஷ்பரேணுக்களையும் பார். எவ் வளவழகாயிருக்கின்றது பார்த்தனையோ? இன்னும் ஆங்காங்கு உல்லாஸமாய் நடனஞ்செய்யும் மயில்களாலும் இனிமையாய்க்கூவும் கோகிலங்களாலும் இவ்விடம் எவ்வளவு சிறப்புற்றிருக்கின்றதுபார். இன்னும் குகைகளிலுள்ள சிம்ஹங்களின் கர்ச்சனையால் கதறும் யானைகளின் தொனியாலும் பற்பல மிருகங்களின் தொனியாலும் ஒரேநாதமயமாய் இவ்வனம் விளங்குகின்றது; மலர்வரிசைகளிலும் தேனடைகளிலும் தடாகமலர்களிலும் ஜங்காரஞ்செய்துகொண்டு சஞ்சரிக்கும் வண்டுகளின் நாதத்தாலும் எங்கும் வியாபிக்கப்பட் டுள்ளது. இன்னும் சிங்கங்களின் நகங்களால் பிளக்கப்பட்ட யானை மஸ்தகத்தினின்றுஞ் சிதறிய முத்துகளால் மூடப்பட்ட பிரதேசத் தையுடைய வனப்பக்கங்களைப் பார். ஓரிடம் புற்றுகளினின்றும் வெளிவந்து படமெடுத்தாடும் பாம்புகளின் பெருமூச்சுக்காற்றால் வியாபிக்கப்பட்டும் ஓரிடம் சிங்கங்களின் நாதத்தால் குட்டிகளை விடுத்தோடும் மான்களின் அடிச்சுவடு நிறைந்தும் ஓரிடம்சவரிமான் களின் வாலின் சலனத்தால் சாமரைமயமாய்க் காணப்பட்டும் ஓரிடம் பசுக்களின் க்ஷீரப்பிரவாகத்தாலும் பில்வபத்திரங்களாலும் பூஜிக்கப்பட்ட லிங்கங்கள் காணப்பட்டும் அற்புதமாய் விளங்குவ தாகிய இவ்வனத்தினழகைப் பாரென்றிவ்வாறு ஆனந்தமாய்க்கூற அதனைக்கேட்டுத் தேவி இறைவனது மஹிமையை நினைந்து ஓ ஸ்வாமி! உமது மஹிமையை என்னவெனக்கூறலாம். பாணம் விஷ்ணு, வில் மஹாபர்வதம், குதிரைகள் வேதங்கள், பூமிரதம், பிர மன்சாரதி, இப்படிப்பட்ட சாதனங்களோடுகூடிய வுமது லீலையா னது விஸ்வாதிகமேயன்றோ? ஓ ஸ்வாமி! தேவரீரது இச்சையினாலே யே ஸகல சராசரங்களும் தோன்றி நின்றொடுங்குகின்றன. தேவரீ ரது பார்வையாலேயே மன்மதனும் திரிபுரரும் எரிக்கப்பட்டனர். மஹாமுனீந்திரர்களுக்கு ஞானமளிப்பவர் தேவரீரன்றோ? ஈஸ்வரா! நாதா! தேவரீரது திவ்யலீலாவிலாசத்தாலாகிய இவ்வனத்தின் சிறப் பை எங்ஙனங்கூறலாகுமென்று போற்றி மகிழ்ந்தனளென்றனர்.

## பதினேழாம் அத்தியாயம்

### முற்றிற்று.

உ

புராணபுருஷாயநமஃ

# பதினெட்டாம் அத்தியாயம்.

## கைலாஸமேளிவர்ணனம்.

ஸ்கந்தர், இவ்வாறு தேவியாரால் போற்றப்பட்டவராய் சங்கரர் அந்த வச்சிர மஹாமாளிகையில் சிறிது வெய்யிலால் வாட்டமுற்றவர்போல் அங்கிருந்து தேவியோடுகூட தடாகத்தருகில்வந்து அங்குள்ள வோர்ரத்னசிம்ஹாசனத்திலுட்கார்ந்து கொண்டு திவ்ய சந்தனம்பூசி மஹா அகருதூபப் (காரகில்) புகையால் சிகையைப் பரிமளிக்கச்செய்து ரத்னபாத்திரத்தில் வைத்திருந்த திவ்யபோஜ்யத்தைப் புசித்தனர். பின்னர் தேவியும் கற்பகக்கனியைப் புசித்தனள். சிறிது நேரங்கழித்து அமுதத்தையும் புசித்தனர். திவ்யரத்னக்கண்ணாடியில் தமது திருமுகப்பிரதி பிம்பத்தையும்பார்த்து, மிக்க சந்தோஷத்தோடு தேவியின் நெற்றியில் ரத்னத்திலகப்பொட்டிட்டு, திவ்யகஸ்தூரிபரிமளம்வாய்ந்த சந்தனத்தைத் தேவியின் தேகத்திற் பூசி,கூந்தலுக்குக் கற்பகப்பூ முதலிய மலர்களைச்சூட்டி ஹாரகேயூர ரத்னகங்கணமுதலிய ஆபரணங்களையணிவித்து, தாம் தமது சடையினின்றும் பயங்கரமாயுள்ள சர்ப்பத்தை விடுத்து திவ்யரத்னாபரணமணிந்து, கண்டத்தில்காணப்படும் விஷவடுவை நீக்கித் திவ்யரத்னாபரணத்தையணிந்து, தேவியோடு உல்லாஸமாய் சிருங்காரலீலைசெய்வாராயினர். இவ்வாறு ரமிக்குங்காலையில் பிரமகற்பங்களில் நூறுசென்றன. காலாதீதனும் ம்ருத்புஞ்சயனும் ஆகிய அவ்விறைவனுக்கு அது அரைக்ஷணமாயிருந்தது. அந்தக்கிரீடையை எவனால் கூறத்தகும். பின்னர் சிறிது வாட்டமுற்றவர்போல் தாராகிருகத்திற் சென்று தேவியோடுகூட அங்கு சிறிது நேரமிருந்து பின்னர் வைரமணிமண்டபத்திலுள்ள ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டு சீதோபசாரம்பெற்றுச் சந்தோஷமடைந்தவராய் அம்பிகையை நோக்கிக் கூறுவாரானர்.

ஓ அம்பிகே! மணித்வீபத்தைப்பார். ஸுதாசமுத்திரத்தினலைகள்வந்துமோத திவ்யபரிமளக்காற்றுவீச உல்லாசமாயிருக்கின்றது. உனது அங்கங்களின் திவ்யசவுந்தரியத்தை இங்குள்ள கண்ணாடியில் பார்த்துக்கொள்வாயாக. எமதுசிரசிலுள்ள சந்திரகிரணத்தாலும் தனதுகாந்தியாலும் இந்தக்கைலாஸமுழுவதும் ஒரேசோதியயமாய்

ஜ்வலிக்கின்றது; இனிமையாய்க்கூவுங் கோகிலங்களாலும், ஆனந்தமாய் நடனஞ்செய்யும் மயில்களாலும், மான்களாலும், வால்களை உயர்த்திக்கொண்டு அங்குமிங்குஞ்சஞ்சரிக்கும் சவரிகளாலும், கட்கமிருகங்களாலும், காட்டெருமைகளாலும், நரிகளாலும், வெள்ளிபோன்ற மாடப்புறாக்கள் இரத்னபாதமுடையனவாகிய நெருப்புக்கோழிகள் அன்னம் சக்கிரவாகமுதலிய பறவைகளாலும் பார்க்கப்பார்க்க மிக்க ஆனந்தத்தைவிளைவிக்கின்றது. இன்னுஞ் சிலபறவைகளைப்பார். தாமரைமலர்களின்மீது நிச்சலமாயும் மௌனமாயுமிருக்கின்றன. கஸ்தூரிமிருகங்களது மடமையைப்பார். தமதுதேகத்திலுள்ள கஸ்தூரியின்பரிமளவாஸனையைத் தன்னிடமுள்ளதெனவறியாமல் எங்கிருந்தோவருகிறதென மயங்கித் திசைதிசையாய் அப்பரிமளவஸ்துவையடைய வோடி வாடிமயங்குகின்றன. தனதுதேகத்தினுள்ளிருக்கும் பரமானந்தஸ்வரூபனாகியஎம்மையறியாமல் ஆனந்தலேசாபாசமாகிய பற்பலவிஷயங்களிற் சென்றுழன்று பிரமிக்கும் மூடர்களுக்கொப்பாயிருக்கின்றன. ஓ தேவி! ம்ருதுவாகிய தாழம்பூத்தூளிகளால்மூடப்பட்ட பிரதேசத்தையுடையஇந்தகிரியை வந்தடைந்தவன் தேவலோகத்தைப் பரிகாசஞ் செய்யாதிருப்பனோ? இந்திரநீலமணிபோன்ற காந்தியுடைய கிளிக்கூட்டங்கள் ஆங்காங்கு கொடுமுடிகளிலும் விருக்ஷங்களிலும் வரிசைவரிசையா யுட்கார்ந்துகொண்டு சிவசிவசிவபோ ஜகதீசவிபோ சசிபூஷணபோ சங்கரஹரபோ அகிலேஸ்வரபோ அமராஸ்ரிதபோ ஸ்ருதிஸாரவிபோ ஹரசங்கரபோ என்று இனிமையாய்க்கானஞ்செய்யும் நாமோச்சாரணச்சிறப்பை நோக்குவாயாக. கோகிலங்கள் வரிசைவரிசையா யுட்கார்ந்துகொண்டு ஹரஹர சிவவிஸ்வேஸ்வரபோ அநாதஜனகணவத்ஸலபோ என்று இனியகுரலோடு பாடுகின்றன வென்றிவ்வாறுகூறிக்கொண்டு ஊசலில் இருவரும் உல்லாஸமா யாடிக்கொண்டிருந்தனர். ருத்ராணிகள் திவ்யசாமரங்களாலுபசரித்தனர். அம்பிகை சிறந்தமாதுளம்பழத்தைத் தமது திருநகத்தாலுரித்து பத்மராகம் போல் விளங்கும் அம்முத்துகளை இறைவன் கையிற்கொடுக்க அதைத்தேவியாரது கையிலிருந்த கிளியானது புசிக்க ஆவலுடையதாய்ப் பரமேஸ்வரன்கையில் கொடுக்கும்போது அதைத்தடுத்துத் தனதுவாயைத்திறக்கப் பரமசிவனுந் தேவியும் அதனைப்பார்த்துச் சிரித்து முகமலர்ந்தவராய் அக்கிளியைநோக்கி ஓ கிளியே! அற்புதமாய் சிவநாமகீதஞ்செய்வாயாயின் புசிக்கலாமென்றருள அதைக் கேட்ட கிளியானது அவ்விருவரையும்வணங்கி இளமொழியால்

தேஹீஸம்ஸங்கரவிபோ! ஶசிகண்டசூடா! ஶம்போ! மஹேசசரணாகத தீனபந்தோ என்று தோத்திரஞ்செய்ய பரமானந்தமுடையோர்களாயிருந்தனர். சிறிதுநேரங்கழித்து இந்திரநீலமணிமயமாகிய மாளிகைசென்று திவ்யமஞ்சத்தையடைந்து இறைவன் சயனஞ்செய்து கொள்ள தேவி தமது தாமரைமலர்போன்ற கரங்களால் அவரது பாதாரவிந்தங்களைப் பிடித்துப் பின்னர் வீணையைக்கையிலெடுத்துச் சங்கரநாமங்களைக் கானஞ்செய்த வப்பொழுது ருத்திராணிகளெல்லோரும் எதிரில்வந்துநின்று வீணையைமீட்டி நடனமாடிக்கொண்டு "விஶ்வேச விஶ்வாதிக தீனபந்தோ பாஹீசஶங்கரவிபோ தயயார்த்ர த்ருஷ்டியா பாஹிப்ரஸீத மதமத்தமராள ராஜமாதங்கஜித்ர கமனே ஜகதாம்ஜனித்ரி" என்று ஸ்தோத்திரஞ்செய்ய அச்சமயத்திலிருந்த சிறப்பை எங்ஙனங்கூறலாம்? ஸகலசராசரங்களிலும் சஞ்சரிக்கும் சந்திரசூரியர்களும் பயந்து நிச்சலமாய்நின்றனர். அங்கு இரவுபகலென்கிற பேசமுண்டோ? மற்றையதேவராவது சஞ்சரிக்கமுடியுமோ? காற்றும் தன்னிச்சையாய்ச்சஞ்சரிக்குமோ? "ஏகோ ருத்ர" என்றல்லவோ சுருதிகூறுகின்றது. அவரொழிந்த மற்றுயாவரும் அங்குசஞ்சரிப்பதற்கில்லை. தேவியும் இறைவனுமே அங்கு உல்லாஸமாய்சஞ்சரிக்கின்றனர். தேவியின் ஆக்ஞையையெதிர்பார்த்திருக்கும் ருத்திராணிகள்மாத்திரமே சஞ்சரிக்கலாகும். பிராகாரத்தின்மேல் ருத்திரகணாதிபகோடிகள் சஞ்சரிக்கலாகுமென்றருளினர்.

பதினெட்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

ஶ்ரீஷ்ணேநம:

# பத்தொன்பதாம் அத்தியாயம்.

## கைலாஸவர்ணனம்.

ஸ்கந்தர் ஓ முனிவரே! இங்ஙனங்கூறிய பிராகாரத்துள்ளும் வைடூரிய மணிப்பிரகாரமொன்றுளது. அது வைடூரிய மணியாற் செய்யப்பட்ட விருக்ஷங்களால் ஜ்வலிக்கின்றது. அதனுடையகாந்தியால் உருக்கியவெள்ளியும் மஞ்சள்நிறம் பெறுமாயின் அதன்சிறப்பை என்னவென்று கூறலாம்! அந்தக்கோட்டையிலும் நீலம் கோமேதகம் வைரம் புஷ்பராகம் பவளம் மரகதம் மாணிக்கம் முத்து முதலியவைகளால் நிர்மிக்கப்பட்ட கரைப்பிரதேசமுடைய திவ்ய

தடாகமிருக்கின்றது. அத்தடாகத்தில் நீலோற்பலம் பவளக்கொடிகள் முதலிய பற்பல மலர்க்கொடிகள் மிக்க வற்புதமாயிருக்கின்றன. இனியகாற்று அவ்வனத்திலுள்ள சண்பகமலர்த்தூளிகளை எத்திசையும் வாரியிறைக்கின்றதெனின் அம்மலர்மிகுதியை எவ்வளவென்றாகிக்கலாம். அக்காற்றைவெகுதூரத்திலிருந்துபரிசிக்கப்பெற்றுபிரம விஷ்ணு ருத்ரர்கள் கிருதார்த்தர்களாகின்றனர். அவ்வனமலர்களின் காந்தியினால் ஆகாயமுழுதும் சுவர்ணமயமாய்க் காணப்படுகின்றது. ரத்தாக்ஷ மணிமந்தாரங்களாலும் கொன்றைமலர்க்கொத்துகளாலும் புரசைப்பூங்கொத்துகளாலும் புன்னைகமலர்களாலும் ஆகாயமுழுதும் புதிய நக்ஷத்திரங்களுடன் கூடியதுபோல் விளங்குகின்றது. தேவதாரு கருநொச்சில் ஒட்டுமா வகுளமுதலிய மரங்களின் பூங்கொத்துகளால் அபூர்வ சந்திரகிரணங்கள் வியாபித்தனவோவென் றெண்ணுதற்கிடமாகின்றது. பாரிஜாதம் பல்லாதகம் (சிராமரம்) ஸல்லகம் (ஆனைவணங்கி) தமாலமுதலிய விருக்ஷங்களின் மலர்களால் எங்கும் பரிமளமயமாயிருக்கின்றது. மரங்களிலிருந்து கீழுதிர்ந்துகிடக்கும் மலர்கள் ஆகாயத்திலிருந்து உதிரும் நக்ஷத்திரங்கள்போலும் பக்குவமாய்க் கீழ்வீழ்ந்துள்ள கனிகள் புண்ணியமுடிந்து சுவர்க்கத்தினின்றும் வீழ்ந்த சீவர்கள்போலும் காணப்படுகின்றன. கனிகளைச்சுமக்க முடியாது பலா எலுமிச்சை மா நெல்லி நாவல் மாதுளை முதலிய மரங்களெல்லாம் தலைவணங்கி அடியை ஸ்பரிசித்துக்கொண்டிருக்கின்றன. அங்கோலம் (அழிஞ்சில்) வாகை மருதைமுதலிய மரங்கள் அழகிய மலர்க்கொத்துகளால் ஆகாயத்தை அலங்கரிக்கின்றன. பக்குவமாகிய கனிகளாலும் திவ்யபரிமளமுடைய புஷ்பங்களாலும்வியாபிக்கப்பட்ட பில்வம்நாரத்தை வாதாபேரீச்சை ஜாதி முதலிய விருக்ஷங்கள் பார்க்கப்பார்க்க ஆச்சரியமாயிருக்கின்றன. மல்லி முல்லை சாதி சண்பகம் செவ்வரத்தை குந்தம் வகுளமுதலிய செடி கொடி விருக்ஷங்கள் அங்கு விளங்குவதுபோல் மற்றெவ்விடத்திலுமில்லை. மூங்கில்கள் ஒன்றுக்கொன்று உரைந்து கொள்ளும் நாதமானது வீணைகானம்போலும்,மல்லிகைமுதலிய பூங்கொத்துகள் மந்தமாருதத்தால் அசைக்கப்படுவது மாதர்நடிப்பதுபோலும், பக்ஷிகள்பாடுவது வந்திகள் துதிப்பதுபோலும்,பொன்னிறமாகிய வண்டுக்கூட்டஞ்சஞ்சரிப்பது திவ்யநீபாராதனம்போலும் விளங்குகின்றது. திவ்யபடிக்கட்டுகளுடன்கூடியதும்அழகியநீலோற்பலமலர்களால் வியாபிக்கப்பட்டதும் ஒப்பற்ற அழகுவாய்ந்ததுமாகியதிருலீலாஸ லீலாதடாகமிருக்கின்றது. அதன் மத்தியில் ஜோதி

மயமாய்க்காணப்படும் ரத்னகலசத்தோடு விளங்கும் உன்னதமாகிய உப்பரிகையுடன் கூடிய மாளிகையொன்று ஆயிரம் ஸ்தம்பங்களால் கட்டப்பட்ட மண்டபமுடையதாயிருக்கின்றது. அற்புதமாகிய ரத்னங்களாலிழைக்கப்பட்ட கொடுங்கையும் ஆகாயமளாவிய உன்னதமாகிய துவஜமுமுடைய அம்மண்டபத்தில் ரத்னமேடையின்மேல் திவ்ய சிம்ஹாசனமொன்றிருக்கின்றது. அதில் தேவியோடுகூட இறைவன் ஒவ்வோர்சமயம் வீற்றிருக்கின்றார். ருத்திரகணகோடிகள் சூலத்தைக்கையிலேந்தியவர்களாய்ப் பிராகாரத்தின்மீதிருப்பார்களேயன்றி அவ்வனத்திற்குள்ளாவது மாளிகையின் சமீபத்திலாவது செல்லக்கூடாது. அதன் பக்கத்தில் திவ்ய பில்வ விருக்ஷங்களிருக்கின்றன. அதனடியிலிருக்கும் சிவலிங்கத்தை இறைவன் அம்பிகையுடன் அபாரமான அபிஷேகவர்க்கங்களாலும் புஷ்பவகைகளாலும் தூபதீப நைவேத்யவகைகளாலும் பூஜித்து ஆனந்தபரவசராகின்றனர்.

பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

புஷ்கரோத்க்ஷிப்தவாரிணே நம:

# இருபதாம் அத்தியாயம்.

## க்ஷேத்ரவர்ணனம்.

ஸ்கந்தர்கூறுகின்றார். ஓ முனிவரே! அதற்குள்ளும் வச்சிரமயமாகிய லக்ஷம் யோசனை விஸ்தாரமுடையதுமாகிய ஓர் பிராகாரமிருக்கின்றது. அப்பிராகாரகாந்தியாலும் சைலாயத்தின் காந்தியாலும்திசைகளெல்லாம் ஜோதிமயமாய்க்காணப்படுகின்றன. அப்பிராகாரத்தில் ஓர் கோபுரம் ஐந்துலக்ஷம் பிரமாணமுயரமுடையதும் அடிமுதல் உச்சிவரையில் வயிரரத்னமயமாய் ஜ்வலிப்பதும் விருஷபம் மாடப்புறு தேவக்கூட்டம் ருத்திராவதாரவிலாஸமுதலியசித்ரப்பதுமைகளாலுங் கலசங்களாலுமிக்க அற்புதமாயும்விளங்குகின்றது. அந்தக்கோபுரத்தினுச்சியிலுள்ள ஓர் திவ்ய சிம்ஹாசனத்தில் தேவியுடன் இறைவன் வீற்றிருப்பவராய் அம்பிகைக்கு அங்குள்ள சிறப்பைக்காட்டுவார். ஓ தேவி! கைலாஸ கிரியின் சிகரத்திலிருக்கும் திவ்யலிங்கங்களை ஹரிப்பிரம்ஹ இந்திரர்களாலும் ஆதிசேஷனாலும் கணக்கிட முடியா. ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களையும் நதியின்

மணல்களையும் வருஷாகாலத்து மழைத்தாரைகளையும் கணக்கிட்டாலு மிடலாம். இவ்விலிங்கங்களைக்கணக்கிடமுடியாது. ஓ கிரிஜே! இதோகாணப்படுகின்றனபார். மந்தாரமாலை பில்வதளம் தூர்வாங்குரம் முதலியவைகளால் மிக்கப் பக்தி சிரத்தையுடன் பிரதோஷ சமையத்தில் அர்ச்சிக்கப்பட்டும் திவ்யகீதாதிகளால் உபசரிக்கப் பட்டும் விளங்குகின்றனபார். சர்வதேவாசுரமனிதர்களும் பக்தியுடன் சிவலிங்கத்தைப்பூஜித்து நற்கதியடையவேண்டுமென்று கருணையால் யானிவ்வாறு பூஜித்துக்காட்டுகின்றேன். கைலாஸாசலலிங்கமண்டலமென்பதிஃதே. இந்தலிங்கங்கள் விளங்குஞ்சடைமுடியும் கங்காதரமும் நீலகண்டமுமான வுருவத்துடன் திவ்யரத்ன மண்டபங்களுள் விளங்கின்றன. விருக்ஷங்களிலுள்ள மலர்களையும் பில்வதளங்களையும் காற்று லிங்கங்களின்மீது அருச்சிப்பதுபோலுதிர்க்க கோகிலங்கள் ருத்திரஜபஞ்செய்வதுபோல் இனிமையாய்க்கூவ அபிஷேகஞ் செய்வதுபோல் சந்திரகாந்தக் கற்களினின்றும் தனது சிரசிலுள்ள சந்திரகலையின் கிரணத்தாலூற்றுங்கொண்டு பெருகும் தீர்த்தங்கள் நனைக்க நிவேதனஞ்செய்வதுபோல் திவ்ய விருக்ஷங்களிலிருந்து பக்குவமாகிய கனிகள் லிங்கங்களினெதிரிலுதிர்ந்து குவிய மாதர்கள் நடனஞ்செய்வதுபோல் மயில்கள் தமதழகிய தோகைகளை விரித்து நடனமாட சாமரம் வீசுவதுபோல் சவரிமான்கள் பில்வவிருக்ஷங்களினடியில் திவ்யலிங்கங்களின் அழகைப்பார்த்துக் கொண்டுல்லாசமாய் வால்களைவீசத் தெய்வீகமாய் நடக்கும் சிவ பூஜா சிறப்பினைப்பார். ஓ உமே! எனதுஸ்வரூபமாகிய லிங்கத்தை அர்ச்சிப்பது ஒன்றேமுக்தி சாதனமாகும். மற்ற யக்ஞவிரததான ஜபங்களால் என்னபயன்? இவைகள் முக்தி ஹேது என்கிற எண்ணம் துக்கத்தின்பொருட்டேயாகும். சகல தேவகணங்களும் திக்பாலகர்களும் பிரம்ஹவிஷ்ணு ருத்ரர்களும் சப்தருஷிகளும் இக்கைலாயத்துச் சிவலிங்கத்தின் மஹிமையை நினைத்து மிக்க ஆச்சரியப்படுகின்றனர். ஓ தேவி! இன்னும் ஸப்தருஷிகளும் கிருகங்களும் நக்ஷத்திரங்களும் மேருவைச்சுற்றிச் சுற்றி வருகின்றனர். இவையெல்லாம் பூஜாநிமித்தமேயன்றோ? அந்தந்தகாலத்தில் மூன்றுவித வாத்தியங்களும் பேரிமுதலியவைகளுமுழங்க நடக்கும் சிவலிங்கார்ச்சன விசேடத்தைப்பார். ஹே கௌரீ! இதோ எதிரில் மிக்க கீழ்ப்பிரதேசத்தில் தோன்றுகின்றதே அதுதான் மஹாமேரு. யாமிருக்கும் இக்கைலாயத்திற்கு எவ்வளவு கீழிருக்கிறதுபார். மஹாமேருவின் சிகரத்திலுள்ள வுலகங்களையும் திக்பாலகராது ஆலயங்க

ளையும் பிரமவிஷ்ணு முதலியவரதுலகங்களையும்பார். அவை அதோ அடியில்காணப்படுகின்றன. ஹே தேவி! அதோ காணப்படுவதே சுவர்க்கம். அதோயமகரம். அதோகங்கை பிரவகிக்கின்றது. அதோ ஈசானனதுபுரி. அதோ எனது புரியும் எண்ணிறந்த சிவலிங்கங்களுமுடைய வாராணசியைப்பார். அன்னபூர்ணியென்னும் பெயருடைய உனது ஆலயத்தையும் விஸ்வேசராகிய எமதாலயத்தையும்பார். அதோ ஸகல சுராசுரர்களும் மஹருஷிகளும் முக்தியின்பொருட்டு அவ்விடம் வந்துவசிக்கின்றனர். ஆனதுபற்றியன்றோ வேதங்களும் அதனை அவிமுக்தமெனக்கூறுகின்றன. வேதங்களும் அதன் மஹிமையைக் கூறச்சக்தியுள்ளனவல்ல. இதோ உனது தந்தை சைலராஜனது சிகரத்தில் காணப்படுகின்றதே அதுதான் கேதாரம். அதுதான் கங்காத்வாரம். அதோகங்கையும் யமுனையுஞ் சேருமிடத்தைப் பார். அங்கு ஸ்நானம்செய்த மனிதருக்கு முக்தி சித்தம். அதோ கங்கா சாகர சங்கமம் காணப்படுகின்றது பார். அதோ சோமேஸ்வரர் தெரிசிப்பவர்களது தாப பாபங்களை நீக்கி வேண்டும் வரங்களையருளுகின்றனர். அதோ கங்கையும் யமுனையும்கூடிவரும் பிரயாகையெனும் புண்ய க்ஷேத்திரத்தைப்பார். அங்கு ஸ்நானஞ்செய்பவர்களுக்குப் பலகாலம் சுவர்க்கவாஸ சுகமும் முக்தியும் கிட்டுவது நிச்சயம். அதோ பிரமனது வேதியாகிய கயையெனும் புண்ய க்ஷேத்திரத்தைப்பார். ஓ பவானி! அந்தத்தலம் பிதுர்க்களது பேரானந்தத்தின்பொருட்டாகின்றது. எனது பதம் அங்கு காணப்படுகின்றது. அப்படியே விஷ்ணுபதமுமுளது. அதோ மகருஷிகளால் வசிக்கப்படும் புண்ணியவனமாகிய நைமிசாரணியங் காணப்படுகின்றது. அதோ சகல தேவர்களாலும் சேவிக்கப்படும் சித்ரகூட கிரியைப் பார்ப்பாயாக. ஓ தேவி! ஏழு புரிகளே முக்தி ஹேதுவாயுள்ளன. துவாதச லிங்கசங்கமென்பது அந்தந்தப்புரிகளிலுள்ளது. ஓங்காரர் குசுர்ணேஸ்வரர் ஸ்ரீகாமநாதர் ஸ்ரீமகா காளவர் நாகேஸ்வரர் வேணுவநசப்ஸ்ரயர் ஆகிய இவர்கள் விளங்குகின்றனர். அதோ எண்ணிறந்தகோடிக்கணக்கிலுமடங்காத சிவலிங்கங்களோடுகூடிய பரமபுண்யையாகிய ஸ்ரீ நர்மதாநதியைப்பார். அதோ சோணநதி பிரவகிக்கின்றது. அதோ ஸ்ரீருத்ரர், அதோ அமரகோடி, அதோ பிண்டாரசம், அதோ விந்தியகிரி, இவைகளினழகைப்பார். அதோ சம்சார மஹாதாபத்தைத் தொலைப்பதாகிய ஸ்ரீசைல சிகரத்தைத்தெரிசிப்பாயாக. அதோ திரியம்பக சைலத்திலுண்டாகிய கோதாவரி நதி பிரவகிக்கின்றது. அதோ கிருஷ்ணாநதியையும் அதன் கரையில்

என்னால் பூர்வமெனப்பட்ட அகஸ்தியர்வசிப்பதையும் பார். அதோ கோகரணம் விளங்குகின்றது. ஹே தேவி! மகாமேருவுடன் கோபங்கொண்டு அமரமார்க்கத்தைத் தகைந்துகொண்டு விளங்கிய உனது வாசஸ்தானமாகிய விந்தியகிரியைப்பார். கோலாசுரனை ஜயித்து உனக்குச் சுவாதீனமாகிய அந்தப்புரியைப்பார். ஹே தேவி! சற்று தென்திசையை நோக்குவாயாக. அதோ மகா மஹிமைபொருந்திய அருணாசலமும் எனது வாசஸ்தலமாகிய விருத்தாசலமும் அதோ சோ பர்வதமும் காணப்படுகின்றன. அதோ ஜகத்பிரசித்தமாகிய லிங்கத்தாலும் உனது வாசத்தாலும் உன்னை அர்ச்சிப்பதின் பொருட்டுவந்த ஹரியினாலும் ஜ்வலிக்கும் காஞ்சியைப்பார்.

காஞ்சீஜகத்கஞ்சிதலிங்கசய்யுதா த்வதாஸ்ரயாத்காந்ததமாசசைவ
த்வதர்ச்சனார்த்தம்ஹரிணாசஸேவிதா சேஷாசலஸ்த்வேஷதாசஸ்ரயோமம:

எமதுசுதன் வாசஸ்தானமாகிய சேஷாசலத்தைப்பார். ஹே தேவி! அதற்கு வடக்கில் தக்ஷிணகைலாயங் காணப்படுகின்றது. அதற்குமேற்கில் சஹ்யபர்வதம் காணப்படுகின்றதுபார். அக்கிரியினின்றும் பிரவகிக்கும் அபார மஹிமைபெற்ற கவேரகன்னிகையாகிய மஹாபுண்யநதியையும் அதனிருபக்கத்திலும் விளங்கும் சிவலிங்கமண்டலத்தையும், ஸ்ரீகண்டம், ரத்னாசலம், மாத்ருபூதம், ஜம்புகேசம், ஸ்ரீஹரி ஆகிய இவைகளையும், அதோ பஞ்சாபகேசர், கும்பேஸ்வரர், அருச்சுனர்முதலியலிங்கங்களையும், மயூரலிங்கர், ஸ்வேதேஸ்வரர்முதலிய புண்ய லிங்கங்களையும், அதோ சற்று வடக்குத்திக்கில் மிக்க பிரசித்திபெற்றதும் விரஜமாயும் விசோகமாயும் ஹ்ருத்புண்டரீகமாயும் எமது நடனஸ்தலமாயுமுள்ள சிதம்பரத்தையும்பார். ஓ தேவி! எனது நர்த்தனத்தை நீ எப்போதுந் தரிசிக்கின்றனையன்றோ? அதோ உவர்க்கடற்கரையிலுள்ள மிக்க புண்யமாகிய வேதாரண்ய ஸ்தலத்தையும் கமலாலயத்தையும் ஸ்ரீ சுந்தரத்தையும் விஷ்ணுபுரத்தையும் பார். ஓ தேவி! அதோ கந்தமாதன பர்வதத்தில் ஸ்ரீ ஹரி பிருகு சாபத்தால் மனைவியைவிட்டுப் பிரிந்து தேடிச்சென்று ராவணனைக் கொன்றனரே. அங்ஙனம் வதஞ்செய்யப்போய்போது அவர் பூஜித்த லிங்கத்தைப்பார். அஃதன்றோ ஸேதுவாமெனப் பெயர்பெற்றுளது? அதன் வடக்கில் மிக்கபுண்யமும் எமக்குப்பிரியமுமுள்ள ஹாலாஸ்யத்தைப்பார். ஹே தேவி! அதோ தாம்பிராசலத்தோடு சமுத்திரம் சம்பந்தித்திருக்கிறது. அங்கு எண்ணிறந்த க்ஷேத்திரங்கள் காணப்படுகின்றன. அதோ பாபமலைகளைப் பிளந்தெறியும் க்ஷேத்திரங்களைப்பார்ப்பாயாக. க்ஷேத்ராணாம்பதி: (க்ஷேத்திரங்களுக்கிறைவன்)

என்று வேதங்களுட்கூறப்பட்ட எனக்கு மிக்க பிரியமான க்ஷேத்திரங்கள் பஸ்மருத்திராக்ஷதாரியாய் மிக்க ஆதரவோடு எவனால் தெரிசிக்கப்பட்டனவோ அவனுக்கு முக்தியை யருளுவேமென்பதி லையமில்லையென்றனர்.

இருபதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

அத்ரகண்யாயகா:

## இருபத்தோராம் அத்தியாயம்.

பிராணிகதி நிருபணம்.

இவ்வாறு இறைவன் கூறவே தேவி ஓ ஸ்வாமி! அதோ சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு சிலர் செல்லுகின்றனரே, அவர்கள் யாவர்? அதோசிலர் சந்திரமண்டலத்திற்பிரவேசித்தவர்களாய்ப் பின்னர் அங்கிருந்து திரும்பிப்புகைபோற்செல்லுகின்றனரே, அவர்கள் யாவர்? அதோ சில மங்கையர்கள் சூரியனைப்போல் ஜ்வலிக்கும் விமான மூர்ந்து மிக்கவானந்தமாய்ச் செல்லுகின்றனரே, அவர்கள் யாவர்? ஓ ஸ்வாமி! அதோ கோரமான புருஷர்களால் கசையாலடிபட்டுக்கொண்டும் இருப்புலக்கைகளால் புடைக்கப்பெற்றும் பாசக்கட்டோடு தென்திசையை நோக்கிச்செல்லுகின்றனரே, அம்மனிதர்களும் ஸ்திரீகளும் பாலர்களும் யாவர்? முத்தொழிலையும் நடாத்துந் தேவரீர் அதனைக்கூறியருளுங்களென்று பிரார்த்தித்தனள். ஸ்கந்தர் ஓ முநிவரே! இவ்வாறு பிரார்த்திக்கப்பட்ட மஹாதேவன் தேவயானங்களையும் பிதுர் யானங்களையும் காட்டிக்கொண்டு தேவியைநோக்கி ஓ தேவி! கமலமுகி! நீலோற்பலலோசனே! உலகிற் குருமுகமாய் வேதாந்தார்த்தத்தை விசாரித்துத் தத்வமசி என்ற மகாவாக்கியத்தின் தாத்பரியத்தையுணர்ந்த யதிவரர்கள் பிரமலோகஞ்செல்லுவோர்களாய்ச் சூரியமண்டலத்தைப் பேதித்துச்செல்லுகின்றனர். ஓ உமே! அவ்வந்தணர் இனித்திரும்பிப் பிறப்பதில்லை. பிரமலோகத்திலிருந்து முத்தியடைவார்கள். இனிப் பூவுலகில் யாதொருவர் சப்தபிரப்ஹ பரர்களாய் உயிர்துறக்கின்றார்களோ அவர்கள் மந்திரமஹிமையால் சூரியமார்க்கம்வந்தாலும் அங்கிருந்து மின்னல்போற் கீழ்வீழ்ந்தவர்களாய்ப் பிராமணர்களாய்ப்பிறந்து சந்நியாச ஆஸ்ரமத்தைப்பெற்று குருமுகமாய் வேதாந்தார்த்தத்தையுண

ர்ந்து உபாஸனை செய்துகொண்டு இவ்வழியாய்ச்சென்று பிரமனை யடைந்து வேதாந்தோபதேசம்பெற்று முக்தராகின்றனர். அதோ சந்திரமண்டலஞ்செல்லுகின்றனரே அவர்கள்பூவுலகில் அச்னிஆகுதிகளைச்செய்து யாகத்தையுஞ்செய்து மின்னல்போன்ற காந்தியுடையவர்களாய்வாருங்கள் வாருங்களென்று பிரார்த்திக்கப்பட்டவர்களாய்ச்செல்லுவோர்களென்றறிவாயாக; நித்யாக்னிஹோத்ரம் பூர்ணமாஸம் தெரிசம் ஆக்ராயணம் பசுபந்தம் சாதுர்மாஸ்யம் சவுத்ராமணி இஷ்டிகள் சோமம் அக்னிசயனம்முதலிய வேள்விகளைச்செய்த கர்மசுத்தர்கள் அச்சந்திரமண்டலம்செல்லுகின்றார்கள். ஒதேவி! யாகங்க்ஞங்களாலும் ஸ்மிருதி தர்மங்களாலும் என்னபயன்பெறலாம்? இஷ்டாபூர்த்தாதிதர்மங்களை எவன் எமதுபாதாரவிந்தபூஜையின்றிச் செய்கின்றானோ அவன் மேசம்புகை ராத்ரி கிருஷ்ணபக்ஷம் இவைகளின் வழி சந்திரனை யடைகின்றான். எவர் வர்ணாஶ்ரமதர்மங்களில் பிரீதியுடையவராயினும் என்னையுபாசிக்கின்றனரோ அவர்கள் கர்மப்பற்று நீங்கினவர்களாய் குருவேதாந்தங்களைச்சேவித்தவர்களாய்அக்னி பகல் உத்தராயணம் சுக்லபக்ஷம் இவைகளிற்சென்று சூரியமார்க்கஞ்செல்லுகின்றனர். பின்னர் அங்கிருந்து சந்திரன் மேகம் புகை வாயு மின்னல் மழை ஔஷதி என்னும் இம்முறையாயிறங்கி அன்னமாய் புருஷரேதஸாய் ஸ்திரீயின்கர்ப்பத்திற்செல்லுகின்றனர். எவர் பாபமுடையோர்களோ அவர்கள் நாய் சண்டாளன் சர்ப்பம் பன்றி முதலிய யோனிகளிற்பிறக்கின்றனர். எவர் புண்யவான்களோ அவர்கள் பிராமணர்க்ஷத்திரியர் வைசியர் சூத்ரர்முதலியவர்களாய் புண்ய கர்ப்பங்களிற்சென்று பிறக்கின்றனர். எவர் இஷ்டாபூர்த்தங்களிலேயே முக்யமாய்ச்சென்று அன்யதேவதையையே பூஜித்துத் தியானித்துக்கொண்டு இதனிலும் பரம் யாதுமில்லையென் றெண்ணுகின்றனரோ அவர்கள் மஹா அதமர்கள். ஒ தேவி! இந்த தர்மங்களெல்லாம் அல்பங்களே. ஸகலவேள்விகளும் அங்ஙனமே. இவைகளைக்கொண்டு பவக்கடலைத்தாண்டுதற்கில்லை. தீக்ஷைகளாலும் தவத்தாலும் விரதங்களாலும் கிருச்சிரங்களாலும் தானங்களாலும் யோகங்களாலும் வேதாத்தியானஞ்செய்தலாலும் செய்துவைப்பதாலும் யாகங்களாலும் சத்திரம் தடாகம் முதலியவைகளைப் பிரதிஷ்டித்தலாலும் சித்தசுத்திவந்து வேதாந்தார்த்த விசாரஞ்செய்வதால் ஆனந்தமாயிருக்கும் மனிதன் பிரமசாரியாயினும் கிருகஸ்தனாயினும் வானப்பிரஸ்தனாயினும் தனதாஶ்ரம தர்மத்தினின்றும் வழுவாது இருப்பவன் எந்த பலத்தையனுபவிப்பவனோ அதனிலும் சிறந்தபல

யை எமது பாதாரவிந்த பூஜையினால் அடையலாம். விநாயகன் சுப்பிரமணியன் ஹரி பிரமா இந்திரன் முதலிய சகலதேவர்களும் பூவுலகில் நடக்கும் யாகத்திலுள்ள அவிர்ப்பாகத்தைப்புசித்து விமானமூர்ந்து சொர்க்கஞ்செல்லுகின்றனர். அக்கூட்டம் அதோ காணப்படுகின்றது. ஓ தேவி! யாகஞ்செய்த கர்மடர்கள் அதோ தூமமார்க்கத்தின்வழிச் சென்று சந்திரனையடைந்து கர்மங்களின் பயனைப்புசித்து இறுதியில் கீழ்வீழ்கின்றனர். அதோயாகத்தைச்செய்த கர்மடர் தவளையின் பின்பக்கம்போன்ற ரம்பையின் அல்குலுக்கு ஆசையுடையோர்களாய் அவர்களது தனதடங்களையே பரமென்றுநினைப்போர்களாய் அவர்களது உதட்டெச்சிலைப் புசிப்பவர்களாய் மயங்குகின்றனர்பார். ஓ கிரிஜே! அதோ திவ்ய யவ்வனத்தோடு சகல சவுந்தர்யமும் வாய்ந்தவர்களாய் திவ்ய ரத்னாபரணங்களை யணிந்தவர்களாய் அழகிய விமானமூர்ந்து செல்லுகின்றனரே அவர்கள் தமது கணவரோடு அநுமரணஞ்செய்த மங்கையர்களன்றோ? அதோ திவ்ய சாமரங்களாலுபசரிக்கப்பட்டு சந்தோஷமாய் விமானத்தின்மீது செல்லுகின்றனரே அவர்களைக் கோ பூமி வஸ்திரம் அன்னம் சுவர்னம் வெள்ளி ரத்ன முதலியவைகளைத் தானஞ்செய்த புண்ணியவான்களென்றறிவாயாக. பூவுலகில் யுத்தகளத்தில் மிக்கவீரர்களாய் யுத்தஞ்செய்து இறந்தவர்கள் அதோசூரியமண்டலத்தின்வழிச்சென்று பலகாலஞ் சுவர்க்கசுகமனுபவித்துப்பின்னர் தீர்த்தத்திலாவது ஒஷதியிலாவதிறங்குகின்றனர். ஓ தேவி! யமபடர்கள் பாசங்களாற்கட்டி உலக்கையாற்புடைக்க உதிரம் தாரைதாரையாய்ப்பெருகி ஓவென அலறிப் போகின்றனரே அவர்கள் பாபிகள். அவர்களை யமலோகத்திற் பழுக்கக்காய்ச்சிய நெருப்புச்சட்டியிலிட்டுவறுத்தும் கும்பிபாகமுதலிய கிருமிகளால் வியாபிக்கப்பட்ட மலமயமாகிய நரகங்களிலும் ஈ கொசுகு காக்கை தேள் பாம்பு இவைகளாற் கடிக்கப்படுதற்குரிய விடமாகிய நரகங்களிலுந் தள்ளி மிக்கவருத்துவார்கள். ஓ தேவி! அதோ நரகத்தில் மிக்ககொடுந்துயரத்தை யனுபவிக்கின்றனர்கள் பார்த்தனையோ அவர்கள் எப்போதும் வயிற்றுக்காரியத்திலும் பரன்மனைவியோடு சேருவதிலுங் காலங்கழித்தவர்களும் குருசைவ நிந்தகர்களும் வழியில் செல்லுவோர்களையடித்துத் திருடுவோர்களும் பரான்னத்திலாவலுடையவர்களும் சூதாட்டமுதலிய கொடியசெயலுடையவர்களுமாகிய பாஷண்டர்களென்றறி. எவர்களது நெற்றி விபூதியின்றியுளதோ எவர் ருத்திரஜபமற்றவர்களோ எவர் லிங்கார்ச்சனஞ்செய்யாதவரோ எவர் சிவநாமோச்சாரணஞ் செய்யாதவர்

களோ எவர் ருத்திராக்ஷதாரணத்தில் விருப்பற்றவர்களோ எவர் பஞ்சாக்ஷரமற்றவர்களோ எவர் எமதுபக்தர்களை நிந்திக்கின்றன ரோ விஸ்வாதிகனும் ஈஸ்வரனும் ஸகலஜகங்களுக்கும் ஆதாரனுமாகிய எம்மை விஷ்ணு பிரமாமுதலிய தேவர்களோடு சமமெனவெண்ணுகின்றனரோ எவர் பிரதோஷ பூஜையற்றவர்களோ எவர் எமது நிவேதனமின்றிப் புசிக்கின்றனரோ அவர்களெல்லாரும் அடைவது இக்கதியே. அவர்கள் அதோபார், இக்கொடிய நரகங்களிலிருந்து கற்பாந்தத்திலுங் கரையேறுதற்கில்லை. ஓ சிவே! சிவாலயத்தையிடிப்பவர்களும் சிவோத்யானபுஷ்பங்களை யபகரிக்கின்றவர்களும் சிவத்துரோகியைச் சிலாகிக்கின்றவர்களும் எம்மை நிந்திப்பவர்களுமாகிய பாபிகள்யாவரோ அவர்கள் யமாலயத்தில் கொடுநரகங்களில் சீழ் முதலியவைகளைப் புசிக்கின்றவர்களாய் கிருமி முதலிய வாய்க்குட்சென்று கடிக்கப்பெற்றவர்களாய் அபார கொடும் யாதனைகளை யடைகின்றனர். எவர் ருத்திராக்ஷ விபூதி திரிபுண்டரமணிவோர்களும் சிவநிவேதனமுதத்தைப் புசிக்கின்றவர்களும் சிவமஹாதேவாதி நாமங்களில் விருப்புற்றவர்களும் சிவலிங்கார்ச்சன தற்பர்களும் ருத்திரார்த்த விசாரஞ்செய்தவர்களும் எமது திவ்யசரித சிரவணத்தில் மிக்க விருப்பமுடையோர்களுமா யிருக்கின்றனரோ அவர்களிங்குவருவதில்லை யாய் நமது கணங்களாய்வருவார். அவர்களே நமக்குச்சம்மதர்கள். அவர்களே சாம்பவர், அவர்கள்வசிப்பது இவ்விடமே. ஓ தேவி! வேதங்கூறிய ஆசாரத்தை விடாதவர்களும் நமது சரணாரவிந்தத்தில் அபாரபக்தியுடையோர்களும் சுத்தமாகிய மனமுடையோர்களும் இந்த சம்சார மகாசமுத்திரத்தில் வெறுப்புள்ளவர்களுமாகிய சாதுக்கள் சிறிதுந்தடையின்றி நமதாலயம் வருகின்றனர். சந்திரகலாபூஷிதர்களும் நீலோற்பலம்போன்ற முக்கண்ணுடையோர்களும் நீலகண்டர்களுமாகிய ருத்திரகணமூர்த்திகளாய் நமது பார்சுவத்தில் வசிப்பார்களென்று சத்தியமாய்க்கூறுகின்றேமென்றனர். ஸ்கந்தர் ஓ முநிவரே! இவ்வாறு ஸ்ரீ மஹாதேவன் கைலாயகோபுரத்தில் தேவிக்குக்கூற அதனைக்கேட்ட தேவி இறைவனைநோக்கி ஓ ஸ்வாமி! வேதங்கள், மங்கை பிரஜை பசு சுவர்ண முதலியவைகளைக் கூறுகின்றனவாயினும் முக்குணவயப்பட்ட பிரவர்த்திசீலர்களாகிய மூடர்களை நோக்கியேயன்றி யுண்மையிலல்ல. மீன்கள் தம்மைப்பிடிப்பதினிமித்தம் விடப்பட்ட தூண்டிலிலுள்ள ஆகாரத்தைத்தமக்கு ஸுகஹேதுவென்றுமயங்கி எங்ஙனம்அல்லற்படுகின்றனவோ அதுபோல மூடர்களும் பெருந்துக்க ஜாலமாகிய

இப்பிரபஞ்சவாழ்க்கையை சுகமென நினைத்துக் கிலேசப்படுகின்றனர். அவர்கள் முக்திஹேதுவாகிய தேவரீரது பாதாரவிந்தத்தை எங்ஙனமடையக்கூடும்? சிதானந்தரூபனும் சத்யனுமாகியதேவரீரை அசத்தியத்தில் பிரவர்த்திக்குமூடர் சிறிதும் சிந்திக்கமாட்டார்களன்றோ? முயலினிடம்கொம்பு எனும் வார்த்தைக்கும்பாலைவனத்தில் பால் எனும்வார்த்தைக்கும் இடமிராததுபோல பிரபஞ்சத்தில் சுகமெனும்வார்த்தைக்கு மிடமில்லையன்றோ? அந்தோ! பாலைவனத்தில் நின்றுகொண்டு பால்வேண்டுபவன்போல் பிரபஞ்சத்தில் சுகத்தை விரும்புகின்றனர். பிரபஞ்சத்தில் ஸுகந்தோன்றுவது மனோமாத்திரமன்றி வேறல்ல. எது மனோகற்பனைக்கிடமின்றோ அஃதன்றோ பூமாவாகிய தேவரீர்? அந்த சிவதரமாகிய பொருள் தேவரீரே. சந்திரகலாதரரும் மங்கைபாதியருமாகிய மூர்த்தியாய்க் காமனையெரித்து காமனையற்ற சித்தமுடைய பெரியோர்களைக் கரையேறச் செய்கின்றீரன்றோ? ஓ ஸ்வாமி! தேவரீரையடைந்து அநுபவிக்கும் ஆனந்தத்தில் சிறிதும்விருப்பமின்றி மூடர்களாய் வீணில்கெடுகின்றனரே யென்றனளென்றனர்.

இருபத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

அத்ராபூஜ்யாயநம:

## இருபத்திரண்டாமத்தியாயம்.

### கைலாஸலிங்கவர்ணனம்.

ஸ்கந்தர்: ஓ ஜைகிஷவ்யரே! இவ்வாறு அடிக்கடி தேவிமஹாதேவ சம்பாஷணம் வாசமுதலியதிற்கிடமாகிய கைலாயத்திற்கெதிரில் ஸ்வர்ணமயமாய் விளங்கும் கிரியே மஹாமேருவெனப்படும். அது கைலாயத்திற்கு மூன்றுலக்ஷம் யோஜனைக்கு அப்பாலுள்ளது. அது சகலதேவர்களுக்கு மிருப்பிடமாம். அங்குள்ள விருஷபஸ்தம்பத்தில் துருவன் முதலியவரிருக்கின்றனர். காலசக்கிரத்தினடுவில் துருவன் சப்தருஷி திரிசங்கு முதலியவர்கள் இடைவிடாது சம்வராக்ஞையால் சுற்றிவருகின்றனர். அம்மேருவில் மிக்க அழகிய வனமிருக்கின்றது. அங்கு மிக்கவிஸ்தாரமும் மலர்ந்த கல்ஹாரம் பொற்றாமரைமுதலிய மலர்களடர்ந்ததும் நிர்மலமாகிய தீர்த்தமுமுடையது மான்மானதமெனும் சரஸிருக்கின்றது. அந்த மேருவின்சிகரத்தில்

பிரம விஷ்ணு ருத்திரர்களுக்கு வாசஸ்தானமாகிய சத்தியலோகம் வைகுண்டம் ருத்திரபுரங்களிருக்கின்றன. திக்பாலகர் கந்தர்வர்முதலியவர்களும் அம்மலையிலேயே வசிக்கின்றனர். அந்தமேருவின் சிகரத்தில் ரத்னசால வனமென உத்தியான மொன்றிருக்கின்றது. அதனடுவில் ரத்னமயமாகிய கோபுர மாளிகையொன்றிருக்கின்றது. அதில் ஒவ்வோர்சமயத்தில் ஸ்ரீ மஹாதேவன் தேவியோடு கிரீடிப்பார். அதன் சுற்றுப்பக்கத்தில் எவன் பிரவேசிப்பானோ அவன் பெண்ணாவானென்று ஈஸ்வரனால் சபிக்கப்பட்டமையால் அங்கு யாரும்போவதில்லை. ஓ முனிவரே! அம்மேரு கைலாஸத்திற்கு விருஷபஸ்தம்பம்போல் எதிரிலிருக்கின்றது. மேருவின் சிகரத்தில் மேர்வீசமென்னும் ஓர் மஹாலிங்கமிருக்கின்றது. அதன் கோபுரம் மாளிகை முதலியவைகளெல்லாம் மிக்க அற்புதமாயிருக்கின்றன. அவ்விலிங்கத்தை பிரம விஷ்ணு ருத்திரர்கள் பில்வம் சுவர்ண தாமரைமுதலிய மலர்களாலும் தூபதீபநைவேத்யங்களாலும் ஆராதித்து பிரதக்ஷிண பிரணாமாதிகளைச்செய்து துதித்து வழிபடுகின்றனர். அதுநிற்க, ஓ முனிவர்களே! கைலாஸத்தின் செய்தியைக்கூறுகின்றேன். இக்கைலாயத்தில் ஸ்ரீ மஹாதேவன் தேவியுடன் எப்போதும் வசிக்கின்றனர். அற்புதமாகிய ரத்னமயமாளிகையில் தேவியுடன் இறைவன் கிரீடித்துக்கொண்டிருக்கின்றனர். அதனிற் சிறிது கூறுகின்றேன். மஹா சௌந்தர்யமும் நவயௌவனமுமுடையோர்களாய் திவ்ய ரத்னாபரணங்களாலலங்கரிக்கப்பட்டு மின்னல்போல் ஜ்வலிப்பவர்களாய் கல் கல் என்று சப்திக்கும் நூபுரமுதலியவையுடையோர்களாய் பக்தியானந்தபரிதர்களாய் விளங்கும் ருத்திரகன்னியர்களும் ருத்திரர்களும் ஸர்வலோகாதாரருமாகிய மஹாதேவி மஹேஸ்வரனை எவ்வெச்சமயத்தில் எவ்வண்ணஞ் சேவிக்கவேண்டுமோ அவ்வண்ணஞ்சேவித்து வழிபடுகின்றனர். சிறிதுஞ் சிரமமற்றவர்களாய் திவ்ய தீர்த்தங்களானிறைந்த ரத்னகலசங்களைக் கையிலெடுத்து சுகமாய் ஸ்நானஞ்செய்வித்தல் திவ்யகந்தத்தை ஸ்மர்ப்பித்தல் கேசங்களைப் பரிமளவாசனைப்புகையால் ரஞ்சிப்பித்தல் படுக்கையைச்சரிசெய்தல் சத்ரசாமரங்களால் உபசரித்தல் கண்ணாடிமுதலியவைகளைக்காட்டுதல் திவ்யதாம்பூலத்தைச் சமர்ப்பித்தல் வீணையைவாசித்தல் முதலிய பணிவிடைகளைச் செய்துகொண்டு ஒன்பது கோடி ருத்ரகன்னியர்கள் ஸ்ரீமஹாதேவியைச்சேவிக்கின்றனர். அங்ஙனமே பத்துகோடி ருத்திரர்கள் இறைவனைச் சேவிக்கின்றனர். பைரவி திகம்பரர் இவர்கள்கோடிசங்கியையுடையவர்களாயிருக்கின்

றனர். மூன்றுகோடி யோகினிகளும் சுற்றுப்பக்கத்தில் டாகினி கோடிகளும் தேவிதேவர்களைச்சேவிக்கின்றனர். ஸ்ரீ கைலாயத்தில் நவசக்தி ரத்தினங்களால் விளங்குவதும் ஒருகோடிதத்வவாக்குடன் கூடியதுமாகிய திவ்யபீடத்தில் ஸ்ரீசக்ரமத்தியிலுள்ள பிந்துவில் ஓர் பக்கம்சந்திரனும் ஓர்பக்கம் சூரியனுமாய்விளங்குவதும் நான்கு பீடமுடையதும் பஞ்சப்பிரம்ஹமயமாயுமுள்ள மஞ்சத்தில் தேவி வீற்றிருப்பதை நாம் எப்போதும் தியானிக்கின்றோம். ஒவ்வோர் சமயம் திவ்யரத்னமயமாகிய ஓடத்தின்மீது இறைவன் அம்பிகையுடனடைந்து உல்லாஸமாய் வீற்றிருக்க அதை அலைகள் விநோதமாய் இங்குமங்குமிழுக்க ஆனந்தபரவசராயிருப்பர். ஓர்சமயம் கைலாசகிரியின் காந்தியைக்காட்டினும் மிக்க வெண்ணிறம்வாய்ந்ததும் காதருகில் விளங்குஞ் சாமரங்களால் வீசப்பெற்றதுமாகிய மஹா விருஷபத்தின்மீது தேவியோடுகூட வீற்றிருப்பாராய் ருத்திரகணங்களெல்லோரும் ஆனந்தவசமாய் "பாஹீசசங்கரவிபோசிவ சந்திரசூடமஹாதேவ" என்று துதிக்கக்கைலாயசிகரங்களிலுள்ள சிவலிங்க சமூகங்களைத்தெரிசித்து அம்பிகைக்கும் தெரிசிப்பித்து மகிழ்வார். ஓர்சமயம் சுவர்ணமயமாய்ச்சொலிப்பதும் மிக்க வுன்னதமாயுள்ளதும் அற்புதமாகிய துவஜகும்பமுடையதுமாகிய திவ்யரதத்தில்தேவியோடுகூட வீற்றிருப்பாராய் அந்தரதமானது தமது திருவுளத்தையநுசரித்துச்செல்ல உல்லாஸமாயிருப்பார். ஓர் சமயம் அநேகரத்னங்களாலும் முத்துகுச்சங்களாலும் அற்புதமாகிய மேல்விதானத்தாலும் திவ்யதுவஜத்தாலும் சத்ர சாமரங்களாலும் மிக்க அழகுவாய்ந்த விமானத்தின்மீது தேவியோடு வீற்றிருக்க அது உல்லாஸமாய்ச்செல்ல தேவர்களையும் அவருலகங்களையும் பார்த்துக்கொண்டு தேவியைநோக்கி ஓ தேவி! தேவலோகத்தில் சுகம்புஜிக்கவேண்டுமென்று பெரிய விமான மூர்ந்துவரும் கர்மதேவர்களைப்பார். ஓ தேவி! அதோதேவலோக வுத்யானவனத்தில் தேவமங்கையர்களது கையிலுள்ள கங்கணமணிகளினொளியானது எத்திசையும்பரவ திவ்யபரிமளக்காற்றுவீச அவர்களது அதரத்தைப் புசிப்பதினால் ஆனந்தபரவசர்களாய் போகமேபெரிதெனமயங்கிக்கிடக்கும் தேவர்களைப்பார். ஓ தேவி! விஷ்ணு பிரம்ஹா முதலியவர்களோடென்னைச் சமமாய்ப்பார்க்கும் அதமன் அடைந்திருக்குங்கதியைப்பார். அவன் எச்சில் நீர் மலம் மூத்திரம் முதலியவை நிறைந்தமடுவில் மூழ்குகின்றவனாய் ஓவென்று வாய்திறந்து கதற, கிருமிகளோடு மல்முட்டிக,அத்துக்கத்தைச்சகிக்காமல் மீண்டுங்கதற,அவனை நீண்ட

கசைச்சாட்டையால்யமதூதர் அடித்துவதைக்க மஹாகோரயாதனை யநுபவிக்கிறான். ஓதேவி! என்னை நிந்தித்தவர்கள் சிவலிங்கதெரிசனஞ்செய்யாதவர் முதலியவர்களெல்லோரும் பெரிய இருப்புக்கடாகத்தில் தீயால்கொதிக்குந்தைலத்திற்றள்ளப்பட்டு கஷ்டப்படுகின்றனர்பார். அதோ ருத்திராக்ஷகுண்டல கிரீடஹாரங்களையணிந்து ஜ்வலிப்பவர்களாய் பிரதோஷகாலத்தில் லிங்கார்ச்சன லிங்கதெரிசனஞ்செய்து மகிழ்ந்த புண்ணியவான்கள் நமது கைலாயம் வருகின்றனர்பார். கைலாயகிரியிலுள்ள திவ்விய மகாலிங்கங்களைத் தரிசிப்பதில் மிக்க ஆவலுள்ளவர்களாய் சூரிய சந்திரர் ஜ்வலிப்பது போல் வருகின்றனர்பார். ஓ தேவி! எமக்கு இவர்களே சம்மதர்கள். எனக்குச்சம்மதமில்லாதவர் அபாரமஹிமையுடைய இவ்விடம் வரக்கூடுமா? ஓ கிரிஜே! இங்கு ஆங்காங்கு பூஜிக்கப்பட்டு விளங்கும் லிங்கங்களைப்பார். கரதாளம் சங்கம் மத்தளம் டிண்டிம முதலியவைகளின் நாதங்கள் முழங்க புதிதாகிய பில்வபத்திரங்களால் பூஜிக்கப்பட்டு விளங்கும் சிவலிங்கசமூகங்களை வகித்துக்கொண்டிருக்கும் இக்கைலாயத்தின் பாக்கியமே பாக்கியம். இந்தக் கைலாயகிரியினால் பூர்வம் மிக்கதீவிரமாகிய தவஞ்செய்யப்பட்டது. ஆதலால் இங்ஙனம் இவனுக்கு அருள்புரிந்திருக்கின்றோம். இவனைப்போல் எந்தத்தேவரும் முனிவரும் தவமியற்றியதில்லை. ஆதலின் எமது அபாரமாகியதயவுக்கு இவனேபாயினனென்று தேவியைநோக்கி ஸ்ரீமஹாதேவன் ஆனந்தங்கொண்டவராய் கைலாசகிரியின் குணங்களை வர்ணித்தனர்.

இருபத்திரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
அக்ரகாமிநேநம:

# இருபத்து மூன்றாம் அத்தியாயம்.

கைலாஸவர்ணனம்.

ஸ்கந்தர்: ஓபிரம விஷ்ணுவாதி தேவர்களே! ஜைகிஷவ்யரே! இதுகாறுங்கூறியபிராகாரத்துள்ளும் கோமேதகமணிமயமான பிராகாரமொன்றுளது. அதன் நான்கு திக்கிலும் லக்ஷம்பிரமாணமுள்ளதாகிய கோமேதகமணிமயமான கோபுரங்களிருக்கின்றன. அந்தக் கோபுரமாளிகைகள் ரத்னதோரணகும்பத்துவஜங்களாலும் ருத்திரா

வதாரசரிதம் விருஷபமுதலிய ஸ்படிகமயமாகிய சித்ரங்களாலும் தேவகோஷ்டிப்பதுமையாலும் சுவர்ணமயமாயும் ரத்னமயமாயும் நிர்மிக்கப்பட்ட கணங்களாலும் மிக்க அற்புதமாய்விளங்குகின்றன. அன்றியும் அந்தப்பிராகாரத்தில் ஆயிரம்ஸ்ம்பங்களுடன்கூடிய எண்ணிறந்த மண்டபங்களும் சரஸுகளும் சரஸின்மத்தியிலுள்ள மண்டபங்களும் மிக்க அற்புதமாயுள்ளன. அதற்குள் தென்திசைக்கோபுரத்தருகில் எமதுஆலயமிருக்கின்றது. அது லக்ஷம்ஸ்தம்பங்களோடுகூடியதும், நவரத்னமயமாகிய அநேக மேல்மாளிகையுடையதும், திவ்வியபதுமைகளால் விளங்குவதும், திவ்வியரத்ன கவாக்ஷங் (ஜன்னல்)களாலும் இந்திர நீலமணிகளால் நிர்மிக்கப்பட்ட மயில் கோழிப்பதுமைகளாலும், மணிமயமாகியதுவாரம் கதவு முதலியவைகளாலும் மஹா அற்புதமாயுள்ளது. அதனருகில் ஓர் உத்தியானவனமிருக்கின்றது. அது நவரத்னமணல்களோடுகூடிய ரத்னமேடைகளாலும் தேவவிருக்ஷ வரிசைகளாலும் ஆச்சரியமாயுள்ளது. அங்கு கௌமாரமென ஓர் திவ்வியஸரஸிருக்கின்றது. அது மணிமயமாகிய படிக்கட்டுகளுடன் பக்கங்களிலுள்ள ரத்தின மண்டபங்களால் ஜ்வலிக்கின்றது. அன்றியும் அது மான்முதலிய மிருகங்களும் ஹம்சமுதலிய பக்ஷிகளும் வசிக்கப்பெற்றது. அந்தத் தடாகத்தினருகிலுள்ள மண்டபங்களுள் மிகச்சிறந்த ஓர் மாளிகையுளது. அதின் உப்பரிகை கோபுரம் மிக்கவுன்னதமாயுள்ளன. அம்மண்டபத்தின் உப்பரிகை மாளிகையில் ஐந்துயோசனை விஸ்தாரமுள்ள திவ்வியரத்ன சிம்ஹாசனமுளது. அங்கு பற்பலவாயுதங்களையுடையவரும் சிங்கம்போன்ற பராக்கிரமமுடையவர்களும் மதயானையின் துதிக்கைபோல் நீண்டு பருத்தகையுடையோர்களும் திவ்வியவஸ்திராபரணமணிந்தவர்களும்உலகமெங்கும்பிரஸித்திபெற்றவர்களுமான வீரபாகுமுதலிய நவவீரர்களாலும் லக்ஷவீரர்களாலும் சேவிக்கப்பட்டவனாய் யான் வல்லிதேவசேனையோடு அறுமுகத்தோடும் பன்னிருகண்களோடுங்கூடிய மூர்த்தியாய் அந்த சிம்ஹாசனத்தின்மீது வீற்றிருப்பேன். ஓ முனிவரே! முற்கூறிய தக்ஷிணகோபுரத்தருகில் குமாரபுரமெனும் எனது நகரமிருக்கின்றது. அது எண்ணிறந்த மாளிகைகளாலும் கௌமார கௌமாரிகணங்கள் வசிக்கப்பெற்றதாய் ரத்னங்களால் பெருஞ்சோதியாயும் ஜ்வலிக்கின்றது. அந்நகரில் கௌமாரேஸ்வரர் ஆலயமிருக்கின்றது. அவ்வாலயம் மிக்கவிஸ்தாரமாயுள்ள பிராகாரங்களோடும் நவரத்னமயமான மஹாமண்டப வாகனமண்டப அர்த்தமண்டப கர்ப்பக்கிரகங்களோடுகூடியதாய் நவரத்

தினங்களின் காந்தியினால் ஆகாயமுற்றுஞ் சோதிமயமாய் விளங்கச்செய்யுங் கோபுரத்தோடுகூடியதா யிருக்கின்றது. அவ்வாலயத்தில் எனதிஷ்டதெய்வமாகிய கௌமாரேஸ்வர லிங்கமிருக்கின்றது. அந்த லிங்கத்தை யான் பஞ்சாமிருதங்களாலும் தூபதீப நைவேத்தியங்களாலும் வீணாவேணு ம்ருதங்கசங்க காகளங்களாகிய வாத்யநாதங்களாலும் அற்புதமாகிய கீதங்களாலும் கௌமாரகன்னிகைகளின் நடனத்தாலும் முப்போதும் ஆராதித்துத்தோத்திரஞ்செய்து ஆனந்தமடைகின்றேன். இங்ஙனம் கௌமாரபுரத்திலிருந்துகொண்டு சக்திதரர்களாகிய எண்ணிறந்த வீரர்களாலும் கணங்களாலும் சேவிக்கப்பட்டவனாய் யான் தென்திசைத்துவாரத்தைக் காத்துக்கொண்டிருக்கின்றேன்.

இருபத்துமூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

மந்திர க்ருதேநம:

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

### கைலாஸவர்ணனம்.

ஸ்கந்தர்: ஓ முனிவரே! கைலாய சிவாலயத்திற்கு மேற்குத்திக்கில் ஐந்து லக்ஷம் பிரமாணம் விஸ்தாரமுடைய பிராகாரத்தில் எண்பத்தெட்டாயிரம் யோஜனையுயரமுள்ள வோர்கோபுர மிருக்கின்றது. அங்கு மரகதமயமாகிய மஹா மண்டபம் தேஜோமயமாய் ஜ்வலிக்கின்றது. அம்மாளிகையின் நடுவில் ஏழுலக்ஷங்கண சிரேஷ்டர்களால் சேவிக்கப்பட்டவரும் விக்னமலைக்கு மஹாவச்சிராயுதமாயிருக்கின்றவரும் பற்பல ரத்னாபரணமணிந்தவரும் ஸிந்தூரத்தால் ஜ்வலிக்கும் நெற்றியுடையோரும் ரத்னாபரண முடையோரும் திவ்யமாணிக்க கிரீடமுடையோரும் அழகிய துதிக்கையுடையோரும் திவ்யகுண்டலங்களால் ஜ்வலிக்குங் காதுகளையுடையோரும் திவ்ய ரத்னாபரணமணிந்த தந்தமுடையோரும் விபூதித் திரிபுண்டரமணிந்த கும்பமுடையோரும் கன்னத்தினின்றும் பெருகும் மதபரிமளவாசனையிலாவலோடுவந்து பிரமித்துக்கொண்டிருக்கும்வண்டுகளை திவ்ய முத்துக்குச்சங்களுடைய காதுகளின் அசைவால் ஓடச்செய்பவரும் சிவபாதாரவிந்தத் தியானத்தால் பரமானந்தமுடையோரும் மிக்க கருணையோடு கணங்களை கடாக்ஷிப்பவரும் மஹா

நாகத்தால் கடிசூத்ரமுடையவரும் பெருத்த வுதரமுடையோரும் மலர்ந்த செந்தாமரைமலர்போன்ற சரணமுடையோரும் பாசம் அங்குசம் மோதகம் தந்தம் இவைகளையுடைய கரத்தினையுடையோரும் ரத்னமயமாகிய தோள்வளையுடையவரும் திவ்ய மஞ்சீரமணிந்த கால்களுடையோரும் ரத்னஹாரமணிந்தவரும் இருபக்கத்திலும் சித்திபுத்தி எனும் தேவிகளால் ஸேவிக்கப்பட்டவரும் தண்டம் சத்ரம் சாமரமுதலியவைகளோடுகூடிய கணேந்திரர்களால் சேவிக்கப்பட்டவரும் விஶ்வேஶ்வரரும் ஆகிய ஸ்ரீகணேசானர் திவ்ய சிம்ஹாசனத்தின்மீது வீற்றிருக்கின்றனர். அவ்விறைவனது திருவுருவம் போன்ற வுருவமுடையவர்களான ஏழுலக்ஷங்கணாதிபர்கள் குடார முதலிய ஆயுதங்களைக் கையில்வைத்துக்கொண்டு அந்தப்பிராகார கோபுரத்தைக்காத்துக்கொண்டிருக்கின்றனர். அதனருகில் மஹா கோபுரத்தோடு கூடிய ரத்னமயமான ஆலயமொன்றுளது. அவ்வாலயத்தில் அவரது இஷ்டதெய்வமாகிய கணேசானேஶ்வரரென்னும் லிங்கமுள்ளது. அதனை அவர் முப்போதும் பில்வபத்திரம் மந்தாரம் சண்பகம் கமலமுதலிய மலர்களாலும் அறுகம்புற்களாலும் தூபதீப நைவேத்திய தாம்பூலங்களாலும் சத்ரசாமரகீத நிருத்தவாத்தியங்களாலும் ஆராதித்துப் போற்றி மகிழ்கின்றனர்.

இருபத்துநான்காம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

சாமீகரப்பிரபாயநம:

# இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## கைலாஸவர்ணனம்.

**ஸ்கந்தர்:** ஓ முனிவரே! கைலாயசிவாலயத்திற்குக் கிழக்குத் திக்கில் புஷ்பராகத்தினால் நிர்மிக்கப்பட்டதும் ஐந்துலக்ஷம் பிரமாணமுடையதுமாகிய பிராகாரகோபுரமிருக்கின்றது. உதய காலத்திலுள்ள சூரியன்போல் ஆயிரஞ் சூரியர்களது காந்திக்கு நிகராகிய காந்தியுள்ளதும் புஷ்பராகமணியால் நிர்மிக்கப்பட்ட விருஷபம் ருத்திராவதார சரிதமுதலிய பதுமைகளோடுந் திவ்ய துவஜமுடையதுமாகிய அக்கோபுரத்தருகில் சிறந்த ரத்னங்களால் நிர்மிக்கப்பட்டதும் பதினாயிரம் ஸ்தம்பங்களோடுகூடியதும் விசித்திரமான கொடுங்கைகள் அழகிய ரத்னமேடைகள் ரத்தினபீடம் ரத்தின ஜா

லம் முதலியவைகளுடன்கூடியதுமான ஓர் மண்டபமிருக்கின்றது. அம்மண்டபத்தில் ஓர்திவ்ய சிம்ஹாசனம் நவரத்னமயமாய் விளங்குகின்றது. அதில் அறுபதினாயிரம் ருத்திரகணாதிபர்களாலும் அஹிமன்யுமுதலியவர்களாலும் சேவிக்கப்பட்டவராய்த் தர்மஸ்வரூபராகிய ஸ்ரீ விருஷபர் வீற்றிருக்கின்றார். தர்மத்துக்காதாரமாயுள்ள சரணங்களையுடையவரும் யுகத்தை நாபியாகவுடையவரும் யுகங்களின் சந்தியம்சங்களைக் குளம்புகளாக வுடையவரும் தர்மசாத்திரங்களை மணிமஞ்சீரநாதமாக வுடையவரும் நான்குவேதங்களும் உபவேதங்களும் வேதாந்தங்களும் புராணநியாய மீமாம்சங்களும் தந்திரமும் ஆகிய இவைகளைப்பெருமணிகளா யமையப்பெற்றவரும் பூர்வபக்ஷ சித்தாந்தங்களைக் கண்டாநாதமாகவுடையவரும் கைலாயந்தான் ஐங்கம வுருவம்பெற்றதோ என்று தோன்றக்கூடிய இரண்டுகொம்புகளோடுகூடியவரும் அமுதத்திரளின் மண்டலம்போல சுத்தவெண்மைநிறமுடையவருமாகிய அந்தத்தர்ம விருஷபர் ஐந்துலக்ஷம் பிரமாணமுடையவராயிருக்கின்றார். கற்பூரம்போன்ற நிறமுடையவர்களால் சேவிக்கப்பட்டவரும் லக்ஷம் யோஜனை விசாலமுள்ள முதுகும் பதினாயிரம்யோஜனையுயர்ந்த திமிலும் முப்பதினாயிரம் யோசனையுள்ள முகமும் இரண்டாயிரம்யோசனை பரிமாணமுடைய நேத்திரமும் ஐயாயிரம் பிரமாணமுடையகாதும், ஆயிரம் யோசனைப் பிரமாணமுள்ள கொம்பும், ஐயாயிரம் யோசனைப்பிரமாணமுடைய நாசியும், ஆயிரம்யோசனைப்பிரமாணமுள்ள நாவுமுடைய தேகமுடையோராய் அவர் இமைகொட்டாது கண்களால் ஈஸ்வரனைத் தரிசித்துக்கொண்டிருக்கிறார்; அன்றியும் திவ்ய முத்து ஜாலர்கள் தொங்கும் ரத்னகம்பளத்தால் முதுகையலங்கரித்துக்கொண்டு விளங்குவோரும் தமது மூச்சுக்காற்றால் மகாகிரிகளையும் நடுங்கச்செய்வோரும் சமுத்திரம் நதி தடாகமுதலியவைகளைக் குளம்படியால் கலங்கச்செய்கின்றவரும் பூமியைக் கலகலவெனக் குலுங்கச்செய்கின்றவருமா யிருக்கின்றனர்; ஐம்பதுலக்ஷம்பிரமாணமுள்ள கால்களோடும் பதினாயிரம் பிரமாணமுள்ள இந்திரநீலமணிபோன்ற குளம்புகளோடும், ஐயாயிரம் யோசனையுடைய கழுத்துத் தாடியோடும் நூறு யோசனை பருத்த விருஷணத்தோடும் முப்பதினாயிரம் யோசனை நீண்டவாலோடுங்கூடியவராய் காமதேனு கணகோடிகளால் சூழப்பட்டவராயிருக்கின்றனர். அங்கு ஓர் சிவாலயத்தில் வ்ருஷபேஸ்வரரெனும் ஓர் மகாலிங்கமானது அவருக்கிஷ்டதெய்வமாயிருக்கின்றது. நந்தி காமதேநுவின் மடியினின்று அப்போதைக்கப்போது

புதிதாய்க் கறக்கப்பட்ட க்ஷீரப்பிரவாகத்தால் பரமேஸ்வரனை அபிஷேகித்துப் பில்வம் மந்தாரம் தாமரை தூபதீபநைவேத்தியம் பாயசம் அபூபம் தாம்பூலம் சத்திரசாமரம் இவைகளாலாராதித்துப் பரமானந்தவசராய்த் துதித்து வழிபடுகின்றனர். ஸ்கந்தர் ஓ முனிவரே! அந்தத்தர்ம விருஷபமூர்த்தியே தேவதேவனாகிய இறைவனை வகித்துச் செல்லுகின்றனரன்றியும் அங்கு சகல கணங்களாலுஞ் சூழப்பெற்றவராய் அகத்துவாரத்தைக் காத்துக்கொண்டிருக்கின்றனர். இவ்வாறு ஸ்ரீ கைலாய சிருங்கத்தில் கஜானனகணங்களாலும் கௌமாரகணங்களாலும் விருஷபேந்திர கணங்களாலும் ருத்திரர்களாலும் சூழப்பெற்றதாய் பிரமவிஷ்ணு இந்திரர்களாலும் சுருதிகளாலும் முனிவர்களாலும் மனதினாலுஞ் சிந்திக்கமுடியாததாய் மிக்க அற்புதமாய் ஸ்ரீ கைலாய ஆலயம் விளங்குகின்றது.

இருபத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

ஸர்வாயநம :

## இருபத்தாறும் அத்தியாயம்.

### கைலாஸவர்ணனம்.

ஸ்கந்தர்:-இனி அங்கு வடக்குப்பிராகாரமானது வைடூரிய மணிமயமாயிருக்கின்றது. அதன் காந்தியால் அத்திசை முழுதும் மஞ்சள்நிறமாய் விளங்குகின்றது. அங்கு அடிமுதல் சிகரம்வரையில் ஆச்சரியகரமாகிய ருத்திராவதார சரிதப்பதுமைகளால் சித்திரிக்கப்பட்டும் பற்பல பக்ஷிவகைப் பதுமைகளால் ரஞ்சிக்கப்பட்டும் ஐந்துலக்ஷம் பிரமாணமுள்ளதுமா யோர் கோபுரமிருக்கின்றது. அதன் சிகரத்தில் அற்புதமாய் ஐந்நூறுரத்ன கும்பங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அந்தப்பிராகாரகோபுரத்தை அஸ்திராயுத தநுசுகளைக் கையிலுடையோரும் திரிபுண்டரம் விளங்கும் நெற்றியுடையோரும் சந்திரகலை விளங்குஞ்சடாமுடியுடையோரும் திவ்ய குண்டலமணிந்தோரும் ஸர்வாபரணமணிந்தோருமாகிய ஒன்பது கோடி ருத்திரகணங்கள் காத்துக்கொண்டிருக்கின்றனர். அங்கு ரத்னமயமான எண்ணிறந்த மாளிகைகளுடன் கூடியவோர் அரண்மனையிருக்கின்றது. அது மாணிக்கங்களிழைத்த ஆயிரம் ஸ்தம்பங்களோடுகூடியதும் அரிய வைரம் புஷ்பராகம் நீலம் வைடூரியம்

கோமேதகம் முத்து பவளம் இவைகளாலாகிய மேல்தளமுடைய தும் இந்திரநீலக் கற்களாலாகிய கொடுங்கைகளும் முத்துமணிக்குச் சுகளும் விளங்கப்பெற்றதுமாய் மிக்க விநோதமாய்ப் பிரகாசிக்கின் றது. அங்கு சந்திரகாந்தக்கல்லால் நிர்மிக்கப்பட்ட ஓர் பிராகார மிருக்கின்றது. அது இருபதினாயிரம் யோசனைப்பிரமாணமுடைய தும் கோபுரங்களோடுகூடிய நான்கு கோட்டைவாசலுடையதும் தேவிக்கு வாகனமாகிய ரத்னஸிங்கப்பதுமைகளுடையதும் ஆகாய முழுதும் ஒளிமண்டலமாய் விளங்கச்செய்வதுமாயிருக்கின்றது. அதற்குள் பதினாயிரம் யோஜனைப்பரிமாணமுடையதாய் நவரத் தினத்தினால் விசித்திர வேலையுடையதாய் கோடிசந்திரனுதித்தது போல் ஆனந்தகரமாய் கோடிசூரியனுதித்ததுபோல் ஜ்வலிக்கின்ற தாயுள்ள யோர் மஹா மாளிகையில் சோதிமயமாய் திவ்ய பீட மொன்றிருக்கின்றது. அருகிலுள்ள திவ்ய ஸரஸிலிருக்கும் தாம ரைமலர்களின் பரிமளவாசனையோடுகூடிய காற்று வீசப்பெற்றதா கிய அவ்விடத்தில் ஓர் ரத்ன ஸிம்ஹாசன மிருக்கின்றது. அதில் தேவி எண்ணிறந்த யோகினிகணங்களால் ஸேவிக்கப்பட்டவளாய் வீற்றிருக்கின்றாள். ஓர் சமயம் பவளமயப்பீடத்திலும் ஓர் சமயம் மாணிக்கமயமாகிய மாளிகையிலும் வீற்றிருந்து அழகிய பந்தை யெடுத்து விளையாடுகின்றாள்; ஓர் சமயம் புஷ்பவுத்தியானவனத் தால் சூழப்பட்ட ரத்னமாளிகையில் புஷ்பமஞ்சத்தில் வீற்றிருக்கின் றாள். ஓர்சமயம் திவ்ய தாம்பூலங்களைக்கையிலெடுத் தணிந்து கொண்டு புஷ்பராகமாளிகையிலும் ஓர் சமயம் கதம்பவனத்தின் மத்தியிலுள்ள வைரமணிமாளிகையிலும்வந்து லீலார்த்தமாயுள்ள கிளியைக் கையிலுடையவளாய்ச் சாரிகையின் அழகிய மொழியைக் கேட்டு மகிழ்கின்றாள்; ஓர்சமயம் நீலரத்ன மஹாமாளிகையடைந் துல்லாஸமாயிருக்கின்றாள்; ஓர்சமயம் திவ்யரத்ன பூஷணங்களை யணிந்துகொண்டு சந்திரகாந்தமாளிகையடைந்து ரத்னபாத்திரத்தி லுள்ள பற்பல கனிகளையும் அமுதத்தையும் புசித்துத் திவ்ய புஷ்ப ஹாரத்தையணிந்து ஜ்வலிக்கும் சந்திரகலையோடுகூடிய கிரீடமுடை யவளாய் யோகினிகளால் காண்பிக்கப்படும் ரத்தினக்கண்ணாடியைப் பார்க்கின்றவளாய் ரத்ன சலாகையால் திவ்யாஞ்சனமணிபவளாய் மிக்க அற்புதமாய் சுவர்ணநூற்களானிர்மிக்கப்பட்ட வஸ்திரத்தைத் தரிக்கின்றவளாயலங்கரித்துக்கொள்கின்றாள்; ரத்னமயமாகிய வே றொருமாளிகையை யடைந்துமலர்க் குச்சங்களுடைய திவ்யமணி பீடத்தில் வீற்றிருப்பவளாய் ருத்திராணிகளா லுபசரிக்கப்படுகின்

ருள்; மந்தாரம் புன்னாகம் தாழை சண்பகம் அசோகம் மல்லிகை மாலதீ ஜாதீ முதலிய மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கேசபார முடையவளாய் கஸ்தூரி பரிமளமுடைய கஞ்சுகமுடையவளாய் ருத்திராணிகளால் சிந்தூரரேகையால் அலங்கரிக்கப்பட்ட கேச சீமந்த மூடையவளாய் எத்திசையும் பரவும் காந்தியுடையமணிமோ திரங்களை யணிந்தவளா யுல்லாஸமாய் வீற்றிருக்கின்றாள்; ஓர் சமயம் வைடூரியமாளிகையடைந்து ருத்திராணிகளின் நடனத்தைப் பார்த்துக்கொண்டு நீலரத்னத்தாற் செய்யப்பட்ட சுரைக்குடுக்கை யோடு கூடிய திவ்ய வீணையைக்கையிலெடுத்து மீட்டிக்கொண்டுல் லாஸமா யிருக்கின்றாள்; ஓர்சமயம் ஆனந்தபரவசையாய் சிவநாம கானஞ் செய்கின்றாள்; ஓரிடத்தில்திவ்ய சாமரங்களாலும் மணிமய மாகிய பிடியோடும் மயிற்றோகையுடனுங்கூடிய விசிறியாலும் உப சரிக்கப்படுகின்றவளாய் பூர்ணசந்திரன்போன்ற திவ்யசத்திரம்பிடிக் கப்பட்டவளாய் தாம்பூலரஸபரிமளத்தோடுகூடிய முகமுடையவ ளாய் தாம்பூலத்தைக் கையில் தரிக்கின்றவளாய் சித்திரதரிசனஞ் செய்துகொண்டு அற்புதமாயெழுதியிருக்கும் சதாசிவ ரூபத்தைத் தரிசித்து ஆனந்தமுற்றிருக்கின்றாள்; ஓர் சமயம் பவளம் கொவ் வைக்கனி முதலியன போன்ற அதரமுடையவளாய் ரத்தினமயமா கிய ஹாரமணிந்தகண்டமுடையவளாய் இனியநாதமுடைய மணி யால் விளங்கும் ரத்னஸரமும் அழகிய வங்கியு மணிந்தகையுடைய வளாய் சூரிய சந்திரர்கள்போல் ஜ்வலிக்கும் தாடங்கமணிந்த கா துடையவளாய் உதிக்கும் சுக்கிரன்போல் விளங்கும் முத்துடன் கூடிய நாஸிகாபரணந்தரிப்பவளாய் திவ்ய ரத்னஹாரமணிந்த மார் புடையவளாய் ரத்தின ஒட்யாணமணிந்த இடை யுடையவளாய் அற்புதமணிகளாற் செய்யப்பட்டு இனிமையாயொலிக்கும் நூபுர மணிந்த கால்களுடையவளாய் அன்னப்பறவைபோன்ற நடையு டையவளாய் நெற்றியிலணிந்த ரத்தின திலகமானது பளீர் பளீர் என மின்ன கேசாபரணங்களாகிய ரத்தின சூரிய சந்திர பிரபாப ரணங்கள் ஜ்வலிக்க திவ்ய சௌந்தர்ய ரூபமுடையவளாய் ஸ்ரீ பர மேஶ்வரியானவள் யோகினிகோடிகளால் அங்கு சேவிக்கப்படு கிறாள்; ஓர் சமயம் இந்திரநீலமணிமயமாகிய மஹா மாளிகையடை ந்து அங்கு தூபங்களால் பரிமளிக்கப்பெற்றதும் மணித்தீபங்க ளால் ஜ்வலிக்கப்பெற்றதும் முத்துவிதானங்களா லலங்கரிக்கப்பட்ட மேற்பிரதேசமுடையதும் அற்புதமாகிய திண்டு தலையணை யுடன் கூடியதுமாகிய மஞ்சத்தையடைந்து வீற்றிருக்கின்றாள்; ஓர் சமயம்

பவளமணி மண்டபத்தையடைந்து ருத்திராணிகளால் வீணாவாத்தியத்துடன் கானஞ்செய்யப்படும் சிவநாமங்களைக் கேட்டுக்கொண்டானந்தமாயிருக்கின்றாள்; ஓர்சமயம் சுவர்ணவாழைகளாலும் திவ்ய விருக்ஷங்களாலுஞ் சூழப்பெற்ற ஸ்படிகமணிமாளிகை யடைந்து லாவபக்ஷி மயில் கோழி முதலியவைகளின் சண்டையையும் ஆடு மான் இவைகள் முட்டிக்கொண்டு சண்டையிடுவதையும் பார்த்துக் கொண்டுல்லாஸமாயிருக்கின்றாள்; ஓர் சமயம் செந்தாமரைத்தடாகத்தருகிலுள்ள மணிமண்டபத்தை யடைந்து அங்குரத்ன கூண்டிலிருக்கும் கிளிகளுக்கு மாதளம்பழமுத்தைக் கையாலெடுத்துக் கொடுத்துக்கொண்டும் பக்கத்திலுள்ள தாராஸாரயந்திரத்திலிருந்து விழும் தீர்த்தத்தால் நனைந்ததும் திவ்ய பரிமளமுடையதுமான கமுகுத்தோட்டத்தின் மத்தியிலுள்ள அழகிய மேடையை யடைந்து மயில்கள் நடனமாடுவதைப் பார்த்துக்கொண்டிருக்கின்றாள்; ஓர் சமயம் பற்பல விசித்திர சித்திரங்களெழுதிய வஸ்திரத்தாலமைக்கப்பட்ட மாளிகை யடைந்து சகிகளோடுகூட வுல்லாஸமாய் சல்லாபஞ் செய்துகொண்டிருக்கின்றனள்; ஓர் சமயம் ரதம்போல் நிர்மிக்கப்பட்டுள்ள மஹாமாளிகையடைந்து அதன் பக்கத்தில் வீற்றிருக்கின்றனள். ஓ முனிவரே! இவ்வாறுதேவி வுல்லாஸமாயிருக்கின்றனள். [தேவியின் அரண்மனைக்குள் ஓர் திவ்ய கிருகமிருக்கின்றது. ஈசன் அவ்விடத்தில் தேவியோடுரமிக்கின்றார்] அந்தக்கிருகம் ஸ்ரீ சக்கரம்போன்றதும் ஆயிரம்யோசனை விஸ்தீரணமுள்ளதும் ரத்ன கவாக்ஷமுடையதும்சித்திரக்கொடிங்கையுள்ளதும்திவ்ய விதானமுடையதும் முத்துஜாலருடையதும் சந்திரமண்டலம்போல் ஜ்வலிக்கும் மெத்தை திண்டுதலையணையுடையதும் பக்கத்தில் தூபதீபப்பாத்திரம் தாம்பூலபாத்திரம் ரத்னகெண்டி கனிக்கலம் சாமரம் விசிறி கண்ணாடி முதலிய சாமக்கிரியைக ளோடுங்கூடியதும் ருத்திரகணம் சகி முதலிய யாருமின்றி ஏகாந்தமாயுமுள்ளது. ஓ முனிவரே! இவ்விதம் கைலாயத்தில் நவசக்தி மயமாகிய ரத்ன பீடத்தில் ஸ்ரீ சக்கிரமத்தியில் விளங்கும் பிந்துஸ்தானத்தில் சூரியசந்திர வுருவமாகிய இரண்டு கோடிகளுடன் கூடியதும் பஞ்சப்பிரம்ஹமயமுமாகிய மஞ்சத்தில் தேவியுடன் மஹாதேவன் கிரீடிக்கின்றார்.

இருபத்தாறும் அத்தியாயம்

முற்றிற்று.

ஸர்வோபாஸ்யாயநம ঃ

# இருபத்தேழாம் அத்தியாயம்.

## தேவி பூஜா சரிதம்.

ஸ்கந்தர்:-ஓ முநிவரே! அங்கு தேவிக்கு இன்னுமோரரண்மனையிருக்கின்றது. அது மரகதத்தினால் நிர்மிக்கப்பட்டு நூறு யோஜனை விஸ்தீரணமுடையதாய்க் கொடுங்கை கவாக்ஷம் கும்பம் மணிபீடமுதலியவைகளால் ஜ்வலிக்கின்றதும் திவ்ய சித்ரங்களால் சித்திரிக்கப்பட்ட கம்பங்களுடையதாயு மிருக்கின்றது. அம்மாளிகையில் புஷ்பமெத்தை கூடிய மஹா மஞ்சமிருக்கின்றது. மேல்விதானமானது இலாமிச்சை வெட்டிவேர் முதலியவைகளோடுகூடிய சுத்த வஸ்திரத்தால் நிர்மிக்கப்பட்டிருக்கிறது. ஒருகாலத்தும் வாடாத ரத்னதாமரைமலராலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. அங்கு நல்ல புஷ்பாபரணங்களை யணிந்த கேசபாரங்களை யுடையவர்களும் சந்திரன்போன்ற முகமுடையவர்களும் மிக்க சவுந்தரியமுடையவர்களும் நித்ய யௌவனமுடையவர்களும் யானையின் கும்பம்போன்ற தனதடங்களையுடையோர்களும் ரத்ன கண்டாபரணம் முத்தாரம் ரத்னதோள்வளை முத்து நாஸிகாபரணம் சப்திக்கும் மஞ்சீரமுதலிய ஆபரணமணிந்தவர்களும் சந்திரகலைதரித்த கேசபாரமுடையோர்களுமாகிய ருத்ராணிகளாற் சூழப்பட்டவளாய் ஸ்ரீ மஹேஶ்வரி வீற்றிருக்கின்றனள். சாமரபாணிகளாய் நிற்பவர் சிலரும் சந்தனத்தைக் கையில்வைத்துக்கொண்டிருப்பவர்கள் சிலரும் காளாஞ்சியேந்தி நிற்பவர் சிலரும் குடை பிடிப்பவர் சிலரும் தாம்பூலப் பெட்டியை யேந்திநிற்பவர் சிலரும் மையைக் கையிலெடுத்து நிற்பவர் சிலரும் சீப்பைக்கையிலுடையோர்கள் சிலரும் ஆபரணப் பெட்டியை வைத்திருப்பவர் சிலருமாய் ருத்திராணிகள் தேவியைப் பற்பல வுபசாரஞ்செய்துகொண்டு சேவிக்கின்றனர். அன்றியும் ருத்திராணிகளுட் சிலர் தனித்தனி அரித்திரா குங்குமம், சிந்தூரம், ரத்னபாதுகை, ரத்னவஸ்திர ரவிக்கை, ரத்ன வீணை, லீலாசுகம், இந்திரநீல மணிமயமாகிய மயில், ரத்தின கண்ணாடி, மலர்கள், ரத்ன கெண்டி, பந்து, சொக்கட்டான் பெட்டி ஆகிய இவைகளையும், சிலர் கத்திகேடகம் பாணமுதலிய ஆயுதங்களையும், சிலர் அம்பறாத்தூணியையும், சிலர் ரத்ன சூலங்களையும், சிலர் தூபங்களையும், சிலர் ரத்ன தீபங்களையும், சிலர் பரிமளவாசனையுடைய தைலம் நிறைந்த ரத்ன

கும்பங்களையும், சிலர் வெற்றிலை மடிப்பையும், சிலர் கனிகளையும், சிலர் தாமரை மலர்களையும், சிலர் அமுதம் நிறைந்த ரத்தின குடங்களையுங் கையிலேந்தியவர்களாய் இவ்வாறு தத்தமக்கேற்ற பணி விடைகளைச் செய்துகொண்டு அந்தருத்திராணிகள் அம்பிகையின் தயவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர். இவ்வாறு தேவி வீற்றிருக்கும் அரண்மனையில் நவரத்தினத்தால் விசித்திரமாய் நிர்மிக்கப்பட்ட ஆலயமொன்றிருக்கின்றது. அதில் தேவீஸரெனும் லிங்க மூர்த்தி விளங்குகின்றார். அந்த லிங்கமூர்த்தியை அம்பிகை எண்ணிறந்த ரத்னகலசங்களில் நிறைந்துள்ள அமுதத்தாரையாலும், பஞ்சாமுததாரையாலும் பரிமள தீர்த்தத்தாலும் அபிடேகித்து பில்வம் சண்பகம் துத்தூரம் ஜாதி மல்லிகைமுதலிய மலர்களால் அர்ச்சித்துத்தக்கோலம் அகருமுதலியவைகளாலாகிய தூபத்தாலும் ரத்னமணி தீபத்தாலும் தாமரை நீலோற்பலமுதலிய மலர் மாலை ரத்னமலர் மாலை இவைகளாலும் பூஜித்து ஆயிரம் பில்வதளங்களால் அர்ச்சித்து பட்சியம் போஜ்யம் தாம்பூலமுதலிய நிவேதனவகைகளாலும் திவ்யகற்பூர நீராஜனத்தாலும் சங்கம் காகளம் மத்தளம் வீணை புள்ளாங்குழல் மட்டு துந்துபிமுதலிய வாத்தியமுழக்கங்களாலும் ருத்திரகன்னியர்களின் நடனத்தாலும் யோகினிகணங்களின் வாத்தியத்தாலும் முப்போதும் ருத்திராக்ஷம் விபூதிதரித்து ஆராதித்து பிரதக்ஷண நமஸ்கார அஞ்சலி தோத்திரங்களைச்செய்து வழி படுகின்றனள்.

இருபத்தேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸர்வகர்த்ரேநம:

## இருபத்தெட்டாம் அத்தியாயம்.

சைலப்பிராஸாத வர்ணனம்.

**ஸ்கந்தர்:**-அந்தக் கோட்டைக்குள்ளும் ரத்னமயமாகிய ஓர் பிராகாரம் ஈஸ்வரனது மனதினால் நிர்மிக்கப்பட்டுளது. அது தேவர் கந்தர்வர்யக்ஷர் முதலிய எவராலுங் காணக்கூடாததும் பிரமாண்ட அடியிலிருந்து முடிவுபரியந்தம் செல்வதாயு முயர்ந்திருக்கின்றது. அதன் எட்டுத்திக்கிலும் நிஷதம் ஹேமகூடம் விந்தியம் மலயம் தர்த்துரம் மந்தரம் ஹிமவான் நீலம் எனும் எட்டுக்கிரிகளிருக்கின்

றன. அந்தப்பர்வதங்கள் பூர்வம்பலகாலந் தவஞ்செய்தனர். அதனால் திருப்தியடைந்து பரமேஸ்வரன் பிரஸந்நராய்த்தோன்ற அப்போது அப்பர்வதங்கள் ஓ ஸ்வாமி! தேவரீரருகில் வசிக்கவேண்டியதையே விரும்புகின்றோம். இவ்வரத்தை எங்களுக்குத் தரல்வேண்டுமென்று பிரார்த்திக்க அவைகளை அவ்வாறே தம்மருகிலும் ஓ ருருவத்துட னிருந்து ஆராதித்துய்யும்படி இறைவ னனுக்கிரகித்தனர். ஆதலின் அம்மலைக ளெங்குமிருக்கின்றன. இவ்விடங்களில் அம்மலைகள் சிலா வுருவத்தோடும், அவ்விடத்தில் ரத்னமயமாயு மிருக்கின்றன. அவ் வெட்டுப்பர்வதங்களும் ரத்னமயமாய் விளங்கினும் அதிஷ்டான தே வருவத்தோடு அவ்விடத்தில் விளங்குகின்றன. அப்பிரகாரத்தின் கீழ்த்திசையில் நிஷதமும் அக்னி திசையில் ஹேமகூடமும் தென் றிசையில் விந்தியமும் நிருதி திசையில் மலயமும் மேற்றிசையில் தர்த்துரமும் வாயுதிசையில் மந்தரமும் வடதிசையில் ஹிமவானும் ஈசானதிசையில் நீலபர்வதமும் இருக்கின்றன. இவ்வெட்டுரத்ன மலைகளின் சிகரங்கள் மிக்கவுயர்ந்தும் விஸ்தாரமாயுமிருக்கின்றன. நிஷதசைலமானது மாணிக்கமயமாய்க் கீழ்த்திசையில் மிக்க வுன் னதமாய் அழகியரத்னகோபுரமுடையதாய் விளங்குகின்றது. அக் கோபுரத்தின் விருஷபம் ருத்திரசரிதம் பீடம் வேதிகை ரத்ன கல சம் முதலிய சித்ரப்பதுமைகள் மிக்க ஆச்சரியகரமாயுள்ளன. உச் சிவரையிலேறுதற்குரிய அழகிய ரத்னப்படிக்கட்டு முடையதாய் ஆயிரம் ஸ்தம்பங்களோடுகூடிய ஓர் மஹா மாளிகையோடுங்கூடிய தாயிருக்கின்றது. அம்மஹாமாளிகை மண்டபத்தி னடுவிலுள்ள ஓர்திவ்ய சிம்ஹாசனத்தில் ஸ்ரீமஹேஸ்வரன் தேவியோடுகூட ஸகல கணங்களாலுஞ்சேவிக்கப்பட்டவராய்க்கிழக்குத்திசையிலுள்ள அம ராவதி எனும் நகரத்தையும் இந்திராதி தேவர்களையும் ஸமுத்திரங் களையும் நதீநத பர்வதங்களையும் வனங்களையும் ஸ்வர்க்கபோகத் தின் பொருட்டுச் செல்பவரையும் பூசித்தபின் கீழ்வீழ்வோரையும் பார்த்துக்கொண்டு வீற்றிருக்கின்றார். அங்கு நிஷதசைலம் திவ்ய தேகத்தோடு மூர்த்திமானாய் வசித்துக்கொண்டிருக்கிறான். அவன் அங்குள்ள திவ்யாலயத்தில் விளங்கும் நிஷதேசுவரலிங்கத்தைப் பர மபக்தியுடன் முப்போதும் பூஜித்துத் துதித்து வழிபடுகின்றான். இனி அக்னி திக்கில் ஹேமகூட பர்வதமானது கோமேதரத்ன மய மாய் ஜ்வலிக்கின்றது. மஹர்லோகத்தையுங்கடந்துயர்ந்துள்ளகொடி முடிகளோடும் ரத்னமயமாகிய கும்பங்களுடைய கோபுரத்தோடுங் கூடியுளது. அங்குள்ள கோமேதமயமாகிய ஆயிரக்கால் மண்டபத்

திநடுவில் அழகிய சிம்ஹாசனத்தின்மீது ஜகதீஸ்வரன் அம்பிகை யோடுகூடியவராய் அக்னிதிசையிலுள்ளமஹாபரிமளவாஸனை வீசுந் தமாலசுந்தரவனத்தையும் மற்றுமுள்ள விநோதங்களையும் தரிசிப் பவராய் வீற்றிருக்கின்றார். அக்கினிலோகத்தில் அக்னீஸ்வரனெனு மோர் லிங்கத்தை அக்கினிதேவன் முதலியவர் பூஜித்து வழிபடுகின் றனர். பூர்வம் அக்னி யதனைப் பூஜித்ததினாலேயே எல்லாவற்றை யும் புசிக்கும் பாபத்தினின்றும் முக்தனாயினான். அவ்வாலயத்தை அம்பிகையுந் தாமும் பார்த்து மகிழ்கின்றனர். அந்த ஹேமகூட பர்வதத்தில் அச்சைலராஜன் மூர்த்திமானாய் மிக்கபக்தியுடன்ஹேம கூடேசலிங்கத்தைப் பூஜித்துத் துதித்து மகிழ்கின்றான்.

இருபத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ஸர்வநேத்ரேநம:

# இருபத்தொன்பதாம் அத்தியாயம்.

## அஷ்டசைலேச வர்ணனம்.

ஸ்கந்தர்: ஓ முனிவரே! பூர்வம் மகாமேருவோடு மாச்சரியங் கொண்டு மிக்க வுன்னதமாய் வளர்ந்து சூரியசந்திரர்களதுவழியைத் தகைந்ததும் உனது இருப்பிடமாயிருக்கின்றமையால் உலகில் பிர ஸித்தி பெற்றதுமாகிய விந்தகிரியானது கைலாயமாளிகைக்குத் தென்திசையில் இந்திரநீலமணிபோல் விளங்குகின்றது. அது எண் ணிறந்த சித்திரப்பதுமைகளால் சித்திரிக்கப்பெற்ற கோபுரம் மே டை ஜன்னல் கொடுங்கை முதலியவைகளுடன் கூடி அற்புதமான ஆயிரம் ஸ்தம்பங்களுடைய மண்டபத்தால் ஜ்வலிக்கின்றது. அம் மண்டப மாளிகையிலுள்ள அழகிய மஞ்சத்தில் ஈஸ்வரன் நீலலோ கித வுருவமுடையோனாய் தேவியோடுகூடியவனாய் ஸகல கணத்தலை வர்களாலுஞ் சேவிக்கப்பட்டவனாய் வீற்றிருந்து தென்றிசையி லுள்ள யமபுரத்தையும் பஸ்மருத்திராக்ஷந்தரிக்காதவரும் லிங்கார்ச் சனைசெய்யாதவரும் சிவநாமமற்றவர்களும் உருத்திராத்தியாய பஞ் சாக்ஷரங்களை ஜபிக்காதவர்களும் சிவநைவேத்தியஞ் செய்யாததால் மலத்திற்குச்சமானமாகிய அன்னத்தைப்புசிப்பவர்களும் இன்னும் பற்பல பாபங்களைச் செய்பவர்களுமாகிய பாவிகளைப் பலவாறாய் வாட்டி வதைக்கும் நரகங்களையும் அதன் பக்கங்களிலுள்ள பூமி

களையும் அத்திசையில் மற்றுமுள்ள புண்ணியநதி மலை உத்தியான வனம் முதலியவைகளையும் பார்த்துக்கொண்டிருக்கிறார். அம்மலையில் விந்தகிரி மூர்த்திமானாயிருந்து அங்குள்ள விந்தியேஶ்வரரெனும் லிங்கத்தை மிக்க பக்தியுடன் முப்போதும் பூசித்துத்தோத்திரஞ்செய்து வழிபடுகின்றான். நிருதித்திக்கில் மலயபர்வதமானது புஷ்பராகமணிமயமாய் அருவி வனம் கொடுமுடி முதலியவைகளுடையதாய் அழகிய ஆயிரம் ஸ்தம்பவரிசையுள்ள மண்டப கோபுரங்களையுடையதாயிருக்கின்றது. அம்மண்டபத்தில் ரத்தினகுச்சங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள ஓர் சிம்ஹாசனத்தின்மீது தேவியோடு சங்கரர் ஸகலாபரணபூஷிதராய் திவ்யபரிமள சந்தனந் தரித்தவராய் சந்தனபரிமளம் பொருந்திய மந்தமாருதம் வீச அந்த நிருதிதிசையிலுள்ள சமுத்திரம் நதிபர்வதம் நகரமுதலியவைகளையும் நிருதி நகரத்தையும் அரக்கர்களையும் பார்த்துக்கொண்டுல்லாஸமாய் வீற்றிருக்கின்றார். அங்கு மலயகிரி மூர்த்திமானாய் மலயேஶமென்னும் மகாலிங்கத்தை மிக்க பக்தியுடன் முப்போதும் பூசித்து வழிபடுகின்றான். மலத்தைத் தொலையச்செய்கின்றதெனும் பொருள்பற்றிவந்த மலயமெனும் பெயரின்ஸம்பந்தமுடைய அந்தலிங்கமானது மிக்க மஹிமைபெற்றுளது. இனி மேற்றிசையில் தர்த்துரமெனும் கிரியானது வைடூரியமாகிய பற்பல கொடுமுடிகளோடும் ரத்ன கலசம் கவாட்சம் விசித்திரப்பதுமை த்வஜம் முதலியகளால் ஜ்வலிக்குங் கோபுரம் ஆயிரக்கால்மண்டப முதலியவைகளோடும் விளங்குகின்றது. அங்குள்ள அழகிய ரத்னமண்டபத்தில் முத்துவிதானத்தோடுகூடியதும் ஐந்துயோசனைப் பரிமாணமுடையதுமாகிய வைடூரிய மணி சிம்ஹாசனத்தில் மகேஶ்வரியோடு ஸ்ரீ மஹேஶ்வரன் வீற்றிருக்கின்றவராய் மேற்றிசையிலுள்ள ஸமுத்திர நதிவன நகரங்களையும் வருணபுரத்தையும் பாஶத்தைக் கையிற்றரித்துப் பயங்கரமான வுருவமுடைய வருணதூதர்களையும் வருணனையும் பார்த்துக்கொண்டிருக்கின்றார். அங்கு தர்த்துரகிரி மூர்த்திமானாயிருந்து மிக்க பக்தியுடன் அங்குள்ள தர்த்துரேஶ்வரலிங்கத்தை ஸகல பூஜா சாமக்கிரியைகளுடன் முப்போதும் பூஜித்துப் போற்றி மகிழ்கின்றான்.

இருபத்தொன்பதாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

ஸர்வஸித்தி ப்ரதாயகம ?

# முப்பதாம் அத்தியாயம்.

## அஷ்டசைலேச வர்ணனம்.

ஸ்கந்தர்: ஓமுநிவரே ! வாயுதிசையில் மந்தரகிரியிருக்கின்றது. அங்கு எண்ணிறந்த மந்தாரவிருக்ஷங்களுடைய வனமும் அற்புதமாகிய கவாட்சம் கொடுங்கை கும்பம் த்வஜமுதலியவைகளுடைய வுன்னதமாகிய கோபுரத்தால் ஜ்வலிக்கும் அழகிய மண்டபமுமிருக்கின்றது. அம்மலையின் காந்தியால் ஆகாயமுற்றும் இந்திரநீலமணிபோல் ஜ்வலிக்கின்றது. அங்குள்ள இந்திரநீலமணி ரத்னமயமாகிய ஆயிரக்கால் மண்டபத்தினடுவில் அழகிய ஸிம்ஹாசனத்தின்மீது தேவியோடுகூடிய இடப்பாகமுடைய மஹேசன் கணத்தலைவரால் சேவிக்கப்பெற்றவராய் வாயுதிக்கிலுள்ள ஸமுத்திரநதி நகரங்களைப் பார்த்துக்கொண்டு விளங்குகின்றார். அங்கு மந்தரகிரிமூர்த்திமானாய் மந்தரேஸ்வரரெனும் லிங்கத்தை மிக்க பக்தியோடு சகலசாமக்கிரியைகளுடன் பூசித்துப் போற்றிமகிழ்கின்றான். ஓ முநிவரே ! இனி வடதிசையில் எனது அன்னையின் தந்தையாகிய ஹிமவான் வைரமணிமயனாய் விளங்குகின்றான். அங்குமிக்க வுன்னதமாகிய கோபுரத்தோடும் சந்திரகாந்தமணிமயமாகிய கம்பங்களோடும்எண்ணிறந்த சித்திரப்பதுமை கும்பம் த்வஜம்முதலியவைகளோடும் ஜ்வலிப்பதும் ஆயிரம்ஸ்தம்பங்களுடையதுமாகிய மண்டபமொன்றிருக்கின்றது. அதன்காந்தியால் வடதிசைமுழுமையும் வச்சிரமணிச் சோதிமயமாய் விளங்குகின்றது. அங்கும் கங்கை பிரவாகிக்கின்றது. இவ்வாறு விளங்கும் ஹிமவான் அகிலசராசரங்களுக்கும் தாய் தந்தையர்களாகிய பார்வதி பரமேஸ்வரர்களைத் தியானித்துக்கொண்டு ஆனந்தபாஷ்பம் பிரவகிக்கும் நேத்திரமுடையோனாய் மூர்த்திமானாய் விளங்குகின்றான். அம்மண்டபத்தில் வச்சிரரத்னக்கால்களோடும் ஆச்சரியமாகிய விமானங்களோடுங்கூடிய மஹாமஞ்சத்தில் பார்வதிசமேதராய் பரமேஸ்வரன் வீற்றிருக்கின்றார். தேவியும் உலகில் தந்தைவீட்டில் கணவனோடுகூடிய பெண்போல் மிக்க சந்தோஷமாய் ஜகதீஸ்வரனோடு விளங்குகின்றாள். பரமேஸ்வரன் அம்பிகையோடு அங்கு வீற்றிருக்கின்றவராய் அத்திசையிலுள்ள அளகாபுரியையும் பொன்மயமாகிய பூமியையும் தேவோத்தியானங்களையும் பொன்பனைமரங்களையும் அமுதசமுத்திர மத்தியி

னுள்ள மணித்வீபத்தையும் அங்குள்ள நீபவனத்தையும் அதன் மத்தியிலுள்ள மாளிகையையும் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஹிமவானும் அங்குள்ள ஹிமசைலேஸ்வரரென்னும் லிங்கத்தை மிக்கபக்தியுடன் முப்போதும் போற்றிமகிழ்கின்றான். ஈசானதிக்கில் எண்ணிறந்தசிகரம் வனம் தடாகம் முதலியவைகளோடு கூடிய நீலபர்வதமிருக்கின்றது. அங்கு த்வஜம் கலசம் கவாட்சம் கொடுங்கை சித்ரப்பதுமை முதலியவைகளால் மிக்க ஆச்சரியமாயும் உன்னதமாயுமுள்ள கோபுரத்தோடும் அழகிய பவளமணியால் செய்யப்பட்ட ஆயிரங்கம்பங்களோடுங் கூடிய மண்டபமிருக்கின்றது. அங்கு ஓர் அழகிய சிம்ஹாசனத்தில் ஸ்ரீமஹேஸ்வரன் தேவியோடு கூடி ஈசானதிசையிலுள்ள அளவிறந்த ருத்திர கணங்களால் சேவிக்கப்பட்ட ஈசானனையும் ஆகாயத்திலும் பூமியிலும் சுவர்க்கத்திலும் விருக்ஷங்களிலும் ஓஷதிகளிலும் அன்னத்திலும் மார்க்கத்திலும் மலைகளிலுஞ் சஞ்சரிப்பவர்களாய் பாசத்தைக் கைபிற்றரித்தவர்களாய் பயங்கரர்களாயுள்ள ருத்திரகணங்களையும் பார்த்துக் கொண்டிருக்கின்றார். அங்குள்ள நீலேஸ்வரலிங்கத்தை நீலன் பக்தியுடன் முப்போதும் பூசித்துப்போற்றி மகிழ்கின்றான். ஓ முநிவரே ! இவ்வாறு கைலாய ஆலயத்தின் சுற்றுப்பக்கத்து அஷ்டகிரிகளிலுள்ள சிவலிங்கங்களின் நாமதேயத்தை ஸ்ரவணஞ்செய்தால் மஹாபாபங்களுந்தொலையும். அவைகளை மீண்டுங் கூறுகின்றேன். அவை நிஷதேசர், ஹேமகேசர், விந்தியேசர், மலயேசர், தர்த்துரேசர், மந்தரேசர், ஹிமசைலேசர், நீலேசர், எனும்பெயர்பெற்ற அபாரபுண்ணியலிங்கங்களாம்.

முப்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸர்வஸித்தயேநம:

# முப்பத்தோராம் அத்தியாயம்.

## சதுர்த்துவார வர்ணனம்.

ஸ்கந்தர்: ஓமுனிவரே! இங்ஙனமாகிய பிராகாரத்திற்குள்ளும் ஓர்அற்புதமாகிய பிராகாரமானது ஈஸ்வரனது மனதினால் சிருட்டிக்கப்பட்டுளது. அதன் சிறப்பையானும் விஸ்வகர்மாமுதலிய எவரோரும் மனதினாலும் நினைக்கமுடியாது. அதனைப்பதினோராயிரம் ருத்திரகணங்கள் வில் அம்புப்புட்டில் முதலியவைகளைத் தரிப்பவர்க

ளாய் பிறையணிந்த சடைமுடியர்களாய் சிங்கம்போன்ற தேகமுடையவர்களாய் ஜ்வலிக்குங் குண்டல முடையவர்களாய் ஆகாயத்திலிருந்து காத்துக்கொண்டிருக்கின்றனர். அந்தப்பிராகாரத்தின் கீழ்த்திசையிலுள்ள கோபுரத்தின் திவ்யமண்டபத்தில் மணிபத்திரேஸ்வரலிங்கத்தை மிக்க பக்தியுடன் அவர்கள் பூசித்துப்போற்றி மகிழ்கின்றனர். தென்றிசைக் கோபுரத்தோடு கூடியமண்டபத்தில் திவ்யருத்திரேஸ்வரமெனும் லிங்கமிருக்கின்றது. அதனை அங்குள்ள பதினோராயிரம் ருத்திரகணத்தலைவர்கள் பூசித்துப்போற்றி மகிழ்கின்றனர். மேற்றிசையில் அற்புதமாகிய கோபுரத்தோடு கூடியமண்டபமின்றது. தக்ஷயக்ஞ நாசத்தின் பொருட்டு இறைவனது ரோம கூபத்திலுண்டான ரௌம்யரெனும் பிரஸித்திபெற்ற பதினோராயிரம் ருத்திரகணங்கள் அங்குள்ள ரௌம்மியேஸ்வர லிங்கத்தைப் பூசித்துப்போற்றி மகிழ்கின்றனர். வடதிசையில் ரத்ன கோபுரத்துடன் கூடிய மண்டபத்தில் பௌமரெனும் பதினோராயிரம் ருத்திரகணங்கள் பௌமேச ரென்னும் சிவலிங்கத்தைப் பூசித்துப் போற்றி மகிழ்கின்றனர். ஓ முனிவரே! இவ்வாறு கைலாயத்திலுள்ள உட்பிராகாரமானது திசைதோறும் பதினோராயிரம் ருத்திரகணத்தலைவர்களால் பூசித்துப்போற்றப்பட்ட திவ்யலிங்கங்களுடன் கூடியதாயிருக்கின்றது. அந்தப்பிராகாரத்தைக் காக்கும் ருத்திரகணங்கள் பிர்மவிஷ்ணு இந்திரர்களையும் கதறச்செய்யும் வல்லமைவாய்ந்தவர்களாய் சூலமுதலிய ஆயுதங்களைக் கையிலேந்தியவர்களாய் விபூதிருத்திராக்ஷந்தரிப்பவர்களாய் பொற்கவசதாரிகளாய் பன்னகபூஷணர்களாய் தலைப்பாகை தரிப்பவர்களாய் கிரீடந்தரிப்பவர்களாய் ஆகாயம் பூமி சுவர்க்கம் விருக்ஷம் ஔஷதி அன்னம்மார்க்கம் மலை முதலியவைகளிற் சஞ்சரிக்கின்றவர்களா யிருக்கின்றனர்.

முப்பத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

மஹாகாலாயநம:

# முப்பத்திரண்டாம் அத்தியாயம்.



## ஸபாவர்ணனம்.

ஸ்கந்தர்: ஓ முனிவரே! இவ்வாறாகிய பிராகாரத்திற்குள் ஈஸ்வரனது மனதினால் கற்பிக்கப்பட்டுள்ள ஸபாமண்டபங்கள் கிழக்கு

தெற்கு மேற்கு வடக்குப் பக்கங்களாகிய நாற்பக்கங்களிலும் நான்கிருக்கின்றன. ஒவ்வொன்றும் விஸ்தாரமுடையதும் கைலாய பர்வதத்திற்குத் திலகம்போன்றதும் நான்கு புருஷார்த்தங்களையும் நான்கு வேதங்களையும் நிகராகக்கொண்டதும் சாயங்கால நடனஞ்செய்யுமிடமாயும் ஆயிரம் சுவர்ணகலசமுடையதும் ரத்னமயமாகியசோபான வரிசைகளுடையதும் ஆயிரம் சுவர்ணஸ்தம்பங்களுடையதும் மணிமயமாகிய மேடைகவாக்ஷம் கொடுங்கையுடையதும் முத்துக்களால் ஹம்ஸங்கள்போலவும் பவளங்களாலும் இந்திரநீலமணிகளாலும் கிளிபோலவும் புஷ்பராகமணிகளால்சிம்ஹம்போலவும் நீலமணிகளால் யானைபோலவும் சுவர்ணத்தால் வாழை தாழை முதலியனபோலவும் மரகதத்தால் ஏழிலைப்பாலைபோலவும் பற்பல ரத்னங்களால் பலா மாதளை எலுமிச்சை முதலிய மரங்கள் போலவும் நிர்மிக்கப்பட்ட சித்திரப்பதுமைகளுடையதும் இரத்தினவ்ருக்ஷபருத்திரவிலாஸபதுமைகளை யுடைதுமாய் தூபதீபஜாலங்களாலும் சகஸ்ரதீபபாத்திரங்களாலும் ஜ்வலிக்கின்றது. அச்சபாமண்டபம் ஒவ்வொன்றும் ஆயிரம் ஸ்தம்பங்களோடும் தொண்ணூற்றாறு தத்துவஜாலத்தோடும் ரத்தின கும்பங்களோடும் ரத்தினப் பிடியுடைய சத்திரசாமர வரிசைகளோடும் ரத்தின கண்டா மணிகளோடும் சங்கம் துந்துபி நிஸ்ஸாணம் பணவம் ஆனகம் கோமுகம் காகளம் வேணு வீணை முதலியவாத்தியங்களின் முழக்கத்தோடும் ரத்தினமந்தாரவகுளபாடல அசோக சண்பகமலர் மாலைகளோடும் புன்னைகை கொன்றை குந்தம் மல்லிகை ஜாதி முதலியமலர்க்கொம்புகளோடும் நக்ஷத்திரங்கள்போற் காணப்படும் முத்து வரிசைகளோடும் கணத்தலைவர்கள் முழக்கும் தாளம் மட்டு இவைகளின் நாதத்தோடும் நடனஞ்செய்வதால் இனிமையாய்ச் சப்திக்கும் நூபுரமணிகளின் னோசையோடும் பிரமனது நான்கு முகங்களால் துதிக்கப்பட்ட வேதசிகையின் நாதத்தோடும் வாமதேவ மந்திரமுதலிய வேத முழக்கத்தோடும் மஹாகணேசுவரர்ஸ்கந்தர் செய்யும்காகளவாத்திய முழக்கத்தோடும்நந்திபிருங்கிகளின் திக்தான் திக்தான் என்னும் மத்தளவாத்திய முழக்கத்தோடும் தண்டுவின் டிண்டிம நாதத்தோடும் சிவநாமாவளிகளை ராகம் மூர்ச்சையோடினிமையாய் மீட்டும் ஸரஸ்வதியின் மஹா வீணைகானத்தோடும் நாரதர்முதலிய முநிவர்களது தோத்திர கீதத்தோடும் ஹா ஹா ஹூ ஹூ முதலியவர்களின் சுருதிலயங்களோடு கூடி மூன்றுஸ்தாயி மூர்ச்சனைகளைக் காட்டும் கானத்தோடும் மயில் குயில் கிளி முதலிய பறவைகளின் இனிய குரலோசையோடும் மந்தமாரு

தத்தினால் சலிக்கப்பெற்ற ரத்தினவல்லி தோரணங்களோடும் பரமானந்த வுல்லாஸமாய் விளங்குகின்றது. இவைகளில் கீழ்த்திசையிலுள்ள சபையானது சுவர்ணத்தாலும் தெற்கிலுள்ளது மஹாரத்தினத்தாலும் மேற்கிலுள்ளது வெள்ளியாலும் நிர்மிக்கப்பட்டுள்ளது. இனி வடக்கில் மிக்க அற்புதமாய் நிர்மிக்கப்பட்டுள்ள ஸபை சிற்சபையெனப்படுவதாம். இங்ஙனமாகிய நான்குசபைகளையும் பிரம விஷ்ணு ருத்திரர்களாலும் வேதங்களாலும் வர்ணிக்கமுடியாது. ஆயினும் ருக்வேதமானது இருபத்தொரு சாகைகளாலும் யஜுர்வேதமானது நூறுசாகைகளாலும் ஸாமவேதமானது ஆயிரஞ்சாகைகளாலும் அதர்வணவேதமானது இருபதுசாகாசிகைகளாலும் முறையே நான்குதிசைச்சபைகளில் மூர்த்தியோடு நின்று இறைவனைத்துதிக்கின்றன. ஓ முநிவர்களே! இப்படிப்பட்ட மஹாசபைகளில்பிரமத கணத்தலைவர்களால் ஸேவிக்கப்பட்வராய் சபாபதியானவர் நடனஞ்செய்கின்றனர்.

முப்பத்திரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
மஹாபலாயநம:

## முப்பத்துமூன்றாம் அத்தியாயம்.

### சபாநடன வர்ணனம்.

ஸ்கந்தர்: ஓமுநிவரே! அச்சபைகளில் மகாகணபதி யான் நந்தி பிருங்கி ருடேஶ்வரர் தண்டு குண்டர் துகண்டர் பாணன்ராவணன்சண்டி சநாதனர் சனந்தனர் முதலியவர்களால் ஸேவிக்கப்பட்டவராய் சபாபதியாகிய இறைவன் தேவியின் எதிரில் சாயங்காலந்தோறும் தாண்டவஞ் செய்கின்றார். அதனைக்கேட்பாயாக. அபஸ்மாரத்தை யழுத்திய பாதாரவிந்தமுடையவராய் கஜசர்மவஸ்திரராய் மின்னற்சடைமுடியராய் கங்காதரராய் காரீலகண்டராய் குண்டலீப்ரவரகுண்டலராய் சந்திரன்போன்ற முகத்தினராய் மலர்ந்த தாமரைபோன்ற மூன்றுகண்களுடையவராய் திரிபுண்டர ரேகையால் விளங்கும் நெற்றியுடையவராய் பஸ்மம் பூசிய மேனியராய் செம்பஞ்சூட்டிச் சிவந்தரத்னம்போல் விளங்கும் நகங்களுடையதும் தாமரையிதழ்போல் விளங்குவதுமாகிய விரல்களால் மிக்கஅழகிய இட

துகையுடையவராய் மஹாவைரமணிகளும் முத்து மணிகளுங்கூடிய ருத்திராக்ஷமாலையணிந்தவராய் நாகங்களின் சிரோ ரத்னங்களாலாகிய மாலைகளால் விளங்குங்கழுத்துடையவராய் ரத்னகங்கணமணிந்த கரமுடையோராய் இனியநாத மணியுடைய ஒட்டியாணமணிந்த இடையுடையவராய் ஓர் கையில் உடுக்கையும் ஓர் கையில் அக்னியும் ஓர்கையில் அபயமுத்திரையும் தரிக்கின்றவராய் இடையில் புலித்தோலுடுத்தவராய் பிரமமுண்ட மாலைகளைக் கழுத்திலணிந்தவராய் கலீர் கலீர் என்று சப்திக்கும்மணித்தண்டையணிந்த பாதமுடையோராய் ஆகுஞ்சிதமாகிய (சிறிது வளைந்ததாகிய) நடனத்தால் மூவுலகங்களையும் கோஷிக்கச்செய்கின்றவராய் இறைவன், மகாரத்னங்களால் நிர்மிக்கப்பட்ட பீடத்திலுள்ளவளும் சந்திரமண்டலத்தைப் பழித்த முகமுடையவளும் அழகிய அளகத்தோடு விளங்குந் திலகமுடையவளும் ரத்னதாடங்கமுடையவளும் உதிக்கும் சுக்ரன் போன்ற முத்துடன்கூடிய நாசியுடையவளும் மும்மடிப்புள்ளதும் ரத்னமாலையால் ஜ்வலிக்கின்றதுமாகிய கண்டமுடையவளும் உன்னதமாகியமதயானையின் கும்பம்போன்ற தனமுடையவளும் மூவளிமடிப்புடையதும் மூவுலகங்களுக்கும் சம்புடமுமாகிய உதரமுடையவளும் சிம்ஹத்தினிடைபோன்ற இடையுடையவளும் அற்புதமாகிய ரத்தின ஒட்டியாணம்மணிந்தவளும் சுவர்ண சரிகைமயமாகிய வஸ்திரந்தரித்தவளும் சண்பகம் அசோகம் புன்னை முதலிய நறுமணமலர்களைத்தரித்த கேசமுடையவளும் கேசவேணிமண்டலத்தின் நடுவில் ரத்னசீமந்த ஆபரணமணிந்தவளும் நெற்றியில் ஜ்வலிக்கும் சிந்தூரரேகையுடையவளும்கரத்தில் கிண்கிண்ணெனசப்திக்கும் திவ்யரத்னகங்கணமணிந்தவளும் விரல்களில் பளீர் பளீர் என ஜ்வலிக்கும் ரத்தினமோதிரமணிந்தவளும் நடனசபை முழுதும் செஞ்சோதிமயமாகச் செய்யும் சரணாரவிந்தமுடையவளும் கால்விரல்களிலணிந்த மணிமஞ்சீர ஆபரணத்தால் அச்சபாமண்டபத்தை ஒலிக்கச்செய்கின்றவளும் அகரு கஸ்தூரி கர்ப்பூர சந்தன மணிந்தவளும் சௌந்தர்ய ஸாரமாயுள்ளவளும் பாசாங்குச வரதாபயந்தரிக்கின்றவளும் இறைவனது முகத்தை ஆனந்தமாய் பார்த்துக்கொண்டிருப்பவளுமாகிய தேவியின் முகத்தைப் பார்த்துக்கொண்டு ஆனந்தநடனமாடுகின்றனர்.

நந்திபிருங்கி மஹாகாளர் ஸ்கந்தர் ஹேரம்பர் முதலியவர்களால் சூழப்பெற்றவராய் வாத்தியகோஷங்களும் வேதகோஷங்களுமுழங்க இறைவன் செய்யும் நடனக்கிரமத்தை யான் நினைக்கிறேன். அவ்வாறு நடனஞ்செய்யும் மிறைவனையே நினைக்கப்பரமானந்தமா

யிருக்கின்றது. அவ்விதமே தென் பக்கத்திலுள்ள ரத்னஸபையிலும் மேற்கிலுள்ள வெள்ளிசபையிலும் தேவியின் முன்னிலையில் நடனமாடுகின்றனர். இனிவடக்கிலுள்ள சிற்சபையில் அம்பிகையைப்பார்த்துக்கொண்டு இறைவன் நடனம் செய்யும் அழகை என்னவென்றுரைப்பேன். இவ்விதம் அபாரமஹிமைபெற்றதாகிய நடனத்தை இறைவன் தேவியின் சந்தோஷத்தின் பொருட்டுச்செய்து உலகத்திற்கருள்புரிகின்றனர். ஹரிப்பிரமாதிகளாலும் சநந்தன சநாதனர்களாலும் ஹர சுநந்தி நந்தி முதலியவர்களாலும் முழங்கப்பெற்ற மத்தள முதலியவாத்தியநாதத்தோடும் தாளக்கிரமத்தோடும் இறைவன் சபைகளில் திவ்ய நடனஞ் செய்தருளுகின்றனர் என்றுகூறி இறைவனை மனதில்நினைந்து ஸ்கந்தர் ஓ வேதாதீஸ்வரா! உமது நடனம் விளங்கப்பெற்ற சபைகளை மிக்க பக்தியுடன் வேதமே வணங்கித் துதிக்கின்றது. உமது மஹிமையை அவ்வேதமும் முழுது மறியமாளாது. இங்ஙனமிருக்க ஏனையோர் எங்ஙனமறிவது? என்று போற்றினர்.

முப்பத்து மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஹேரம்பாயநம:

## முப்பத்து நான்காம் அத்தியாயம்.

### சதுர்விதபுருஷார்த்த மண்டபவர்ணனம்.

ஸ்கந்தர்: ஓமுநிவரே! முற்கூறிய மண்டபங்களுக்கப்பால் சந்திரகாந்தக் கல்லாலமைந்த பற்பலமாளிகைகளிருக்கின்றன. அம்மாளிகைகளிருக்கும் பிராகாரத்தில் நான்கு மண்டபங்களிருக்கின்றன. அவை இருபதினாயிரம் யோஜனைப் பிரமாண முடையனவாய்ப் பற்பலரத்னங்களால் விருஷபங்கள்போலும் ருத்ராவதார விலாஸங்கள் போலும் பின்னும் பற்பல மிருகபக்ஷி விருக்ஷகொடி செடி முதலியனபோலும் சித்திரிக்கப்பட்ட பதுமைகளும் துவஜம் கும்பம் கவாட்சம் முத்துக்குச்சம் கொடுங்கை முதலியனவுமுள்ள கோபுரங்களோடு கூடியனவாயிருக்கின்றன. அவைகளுள் கிழக்கிலுள்ள மண்டபமானது கர்ப்பக்கிரகமுதல் கோபுரம் வரையிலும் ரத்னமயமாகிய ஸ்தம்பங்களுடையதாய் தூபதீபங்களால் ஜ்வலிக்கின்றதாய் சந்தனம் கற்பூரம் முதலிய பரிமளவாசனைத் திரவியங்களாலும் மல்லி

கை மந்தாரம் முதலிய மலர் வகைகளாலும் முத்துச்சரங்களாலும் ஆச்சரியமாய்க்காணப்படும் மணி மேடை சுவர் முதலியனவோடுங் கூடியதாய் சாமீப்பியமுத்தி மண்டபமெனப் பெயரியதாயிருக்கின்றது. தெற்கிலுள்ள மண்டபமானது பதினாயிரம் ஸ்தம்பங்களோடு கூடியதாய் கோமேதகத்தா லிழைக்கப்பட்டதாய் ரத்னங்களால் வாழைகமுகு பற்பல புஷ்பவகைச்செடி கொடியடர்ந்த உத்யானவனம் போலியற்றப்பட்ட சித்ரவேலைகளுடையதாய் உன்னத கோபுரமுடையதாய் சாரூப்பிய மோக்ஷதானமண்டப மெனப்பெயரியதாயிருக்கின்றது. மேற்கில் பதினாயிரம் கம்பங்களாலமைக்கப்பட்டதும் உன்னதமாகிய கோபுரமுடையதும் வைடூரிய ரத்னமயமாயுள்ளதும் சாலோக்கிய மோக்ஷதானமண்டபமென்னும் பெயருடையதும் மிக்க அற்புதமாகிய சித்ரசிற்ப முடையதும் தூபதீபங்களால் பரிமளவாசனையும் திவ்யசோதியும் வாய்க்கப்பெற்றதும் ரத்னபீடம் சிம்ஹாசனம் மஞ்சமுதலியனவுள்ளதும் ருத்ரவீணாகானத்தாலும் துந்துபிமுதலிய வாத்திய நாதங்களாலும் முழங்கப்பெற்றதுமாய் ஓர் மண்டபமிருக்கின்றது. இனிவடக்கில் புஷ்பராகமணியா னிர்மிக்கப்பட்டுப் பவளத்தாலாகிய மான் யானை சுகம் முதலியனபோல் சித்ரவரிசையுடையதும் ரத்னோத்யானவனம் ரத்னதடாகம் ரத்ன விமானம் முதலிய சிற்பசித்திர முடையதும் சாம்பிராணி அகரு முதலிய தூபங்களால் மிக்க பரிமள வாஸனை பெற்றுளதும் ரத்ன தீபவரிசைகளால் ஜ்வலிக்கின்றதும் சாயுச்சியதானமெனும் பெரியதும் துவஜகும்பங்களோடு ஜ்வலிக்கும் உன்னதமான கோபுரமுடையதுமாயோர் மண்டபமிருக்கின்றது. அம்மண்டபத்திலுள்ள திவ்ய சிம்ஹாசனத்தின்மீது அம்பிகையோடு கூடி இறைவன் ஸகலகோடி கணங்களாலும் சேவிக்கப்பட்டவராய் வீற்றிருக்கின்றார்.

முப்பத்து நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
லம்பஜடாராயநம:

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்.

### கைலாஸ லிங்கவர்ணனம்.

**ஸ்கந்தர்:** ஓமுநிவரே! இனி அதற்குள் உன்னதமாகிய கோபுரத்தோடுகூடியதாய் பதினாயிரம் யோஜனை விஸ்தீர்ணமுள்ள ஓர் பிரா

காரமிருக்கின்றது. அது ஓர் பக்கத்தில் பச்சைமணிபோல்வும் ஓரிடம் குருவிந்தமணி போலவும் ஓரிடம் கண்மைபோலவும், ஓரிடம் மின்னல் போலவும் ஓரிடம் நீலமேகம் போலவும் ஓரிடம் பால சூரியன்போலவும்ஓரிடம் புரசம் பூப்போலவும் ஓரிடம் இந்திர நீலமணி போலவும்ஓரிடம்மயிலின்கழுத்துப்போல்வும் ஓரிடம்மாடப்புறவின் கழுத்துப்போலவும், ஓரிடம் சந்திரன்போலவும் ஓரிடம் வச்சிரமணி போலவும் ஓரிடம் கோமேதகம் போலவும் ஓரிடம் புஷ்பராகம் போலவும் ஓரிடம் வைடூரியம் போலவும் ஓரிடம் ப்வளம்போலவும் ஓரிடம்முத்துப்போலவும் ஜ்வலிக்கின்றதாய் மாணிக்கத்தால் நிர்மிக்கப்பட்டு ருத்திராவதாரசரிதம் வ்ருஷபம் கலசம் துவஜம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட கோபுரமுடையதா யிருக்கின்றது. அந்தப்பிராகாரத்தின் நாற்றிசைகளினும் நான்குகோபுரத்துவாரங்களிருக்கின்றன. இங்ஙனமான பிராகாரத்துள் நவரத்னகண்டமாய் அமைக்கப்பட்ட கர்ப்பக்கிருகமும் அதற்கெதிரில் சிந்தாமணியாலமைக்கப்பட்ட ஆயிரம் கம்பங்களோடு கூடிய மண்டபமொன்றுமிருக்கின்றது. அதுமுக்திமண்டபமென்று பெயரியதும்ஸர்வவேதசிகைகளால் துதிக்கப்பெற்றதும் தனது காந்தியால் ஸகலலோகங்களையும் விளங்கச்செய்வது மாயிருக்கின்றது.

அது பிரமவிஷ்ணுருத்திரர் திக்பாலகர் யக்ஷர் ரக்ஷர் நாகர் உரகர் கின்னரர் அப்சரஸ் முதலியவர்கள் போலும் நிர்மிக்கப்பட்ட சித்ரகம்பம் ரத்னதோரணம் ரத்னகொடுங்கை கவாட்சம் கும்பம் துவஜமுதலியவைகளோடு கூடியதாய் எண்ணிறந்த ரத்ன தீபவரிசைகளால் ஜ்வலிக்கப்பெற்றதாய் செந்தாமரை வெசந்தாழை மந்தாரை சண்பகம் கதம்பமுதலிய மலர்களாலாகிய தோரணத்தால் அலங்கரிக்கப்பட்டதாய் மனோவாக்குகளுக்கெட்டாச் சிறப்புடையதாய் விளங்குகின்றது. கர்ப்பக்கிருகத்தின் தென்பக்கம் தக்ஷிணாமூர்த்தியாலும் ஏனைய மூன்று பக்கங்கள் அந்தகாராதி திரிபுரசங்காரகர் பிர்மவிஷ்ணுத்பவர் தாண்டவேசர் கஜசர்மதரர் ஸ்கந்த ஹேரம்பசஹிதர் பிக்ஷாடனர் கங்காளர் சூலதரர் சோமாவதம்சர் அக்ஷபாதர் உமாசஹிதர் கௌரியின் முகத்தின்கீழ் கரத்தை வைத்துக்கொண்டு ஸமாதானம் செய்விக்கு முருவமாகிய கௌரீப்பிரஸாதனபரர் அர்த்தநாரீஸ்வரர் வ்யாக்ரசர்மாம்பரர் விஷகண்டர் சந்திரகலாகங்காதரர் இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் பிரமவிஷ்ணு சேவிதர் யமனுக்குப்பயந்து ஆலிங்கனம் செய்த முனிவனுக்கருளிய மூர்த்தி அலைதிரையோடு கூடிய கங்கையை யடக்

குஞ் சடையுடையோர் விஷ்ணுநேத்ரார்ச்சித சரணகமலர் கண்டதலத்தில் பிரகாசிக்கும் பிரமமுண்ட கர்ணகுண்டல சோபிதர் முதலிய சிவமூர்த்திகளாலும் விளங்குகின்றன.

அன்றியும் அந்தக்கர்ப்பக்கிரகத்தின் நாற்பக்கத்திலும் இந்திர நீலக்கல்லாலமைந்த அம்பிகா மூர்த்தியும் திவ்யரத்னங்களாலாகிய பிரமவிஷ்ணுஇந்திரன்திக்பாலகர் முதலியவர்போன்ற பதுமைகளும் விருஷபஸ்தம்பங்களும் விளங்குகின்றன. இங்ஙனம் திவ்யமூர்த்திகளால் சூழப்பட்டதும் மனதினால் சிந்திப்பதற்கு முடியாத சிறப்புடைய வயிரமணியால் நிர்மிக்கப்பட்டதும் ஐம்பது யோஜனை விஸ்தாரமுடையதும் கோடி சூரியனைப்போல ஜ்வலிக்கின்றதுமாகிய அந்தகர்ப்பகிரகத்தில் மணிபீடத்தில் சோதிமயமாய் விளங்கும் ஓர் ஸ்படிக லிங்கமிருக்கின்றது. நவரத்னமயமாகிய மலர்களாலும் பில்வங்களாலும் அர்ச்சிக்கப்பட்டதாய் ஆயிரம் தலையுடைய ஆதிசேஷனது பணாமணிகளால் மறைக்கப்பட்டதாய் விளங்குகின்றதும் திரிபுண்டரமணிந்ததுமாகிய அந்தலிங்க மூர்த்தியின் மஹிமையையார் கூறவல்லவராவர்? கைலாஸேஸ்வரமெனும் பெயரிய அம்மூர்த்தியின் மஹிமையை ஓர் சிறிதும் வேதங்களாலும் பிரமவிஷ்ணு ருத்திரர்களாலும் முனிவர்களாலும் அறியமுடியாது. அதனைச்சொல்லுவதில் வேதங்களும் ஊமைத்தன்மையடைகின்றன.

முப்பத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஹயக்ரீவாயநம:

## முப்பத்தாறும் அத்தியாயம்.

### கைலாஸேஸ்வரலிங்க பூஜாகதனம்.

ஸ்கந்தர்: ஓ முனிவரே! பதினான் குலகங்களும் அந்தலிங்க மூர்த்தியினின்று முண்டாயின. பிரமவிஷ்ணு ருத்திரர் முதலிய தேவர்கள் அதனின்றே தோன்றினர். ஈரேழுலகங்களும் சகல சராசரங்களோடு பிரளய காலத்தில் அவ்விலிங்கமூர்த்தியிடமே யொடுங்குகின்றன. ஸகல ஜகமும் அதனிடம் லீனமாகின்றமையால் லிங்கமென்று கூறப்பட்டது. எங்குமனோவாக்குகள் செல்லமுடியாது திரும்புகின்றனவோ எது ஏகமாகிய பிரமமோ அப்பரம்பொருள் அலிங்கமாயினும் கைலாஸேஸ்வர லிங்கமூர்த்தியாயிருக்கின்றது.

அஃதேஜ்யோதிகளுக்குச் சோதியும் சேதனத்துக்குச் சேதனமும் ஸத்யமும் ஆனந்தமும் அகண்டைகரஸமுமாகியது. அந்த லிங்கத்தைத் தரிசிப்பதில் மனோவாக்குகள் சிறிதுஞ் சக்தியுடையனவல்ல. நேதி நேதி (இல்லை இல்லை) என்று விலக்கி வேதாந்தங்களால் அந்த லிங்கமே பிரதிபாதிக்கப்படுகின்றது. அதனையே பிரம்ஹமென்றறி. இங்குபேதஞ் சிறிதுமில்லை.ருதமும் ஸத்யமுமாகியது பரப்பிரம்மம். அந்த ஆன்மா மனதுக் கெட்டாதது. அது நிரிந்திரியமும் நிஷ்களங்கமும் அசங்கமும் அசலமுமானது. சர்வதர்மமற்றதும் பிரபுவும் ஆகாசமும் அநாகாசமும் ஸாகாரமும் நிராகாரமும் காரணங்களுக்குங் காரணமுமாகிய பிரம்ஹமானது அந்த லிங்கமே. நாமரூபமற்றதும் சாந்தமும் குணாதீதமும் குணாஸ்பதமும் பாணிபாத மற்றதும் சுவச்சமும் ஆனந்தகனமும் அத்புதமுமாகியசிவபெருமானது நிர்க்குணரூபமானது மஹான்கள் தவிர ஏனையோர்களால் காணக்கூடியதல்ல. அஃதே வியாபகமாய் விளங்குகின்றது. அஃதே தமஸைக்கடந்தது. அதனைவேதவேதாந்தங்களாலும் குருவாலும் மற்ற எச்சாதனங்களாலுங் காண்பதற்கும் அடைவதற்கு முடியாது. அஃதே தேவதேவனது நிர்க்குணரூபம்; அங்ஙனமாயினும் ஸகல லோகங்களுக்கும் திருஷ்டிகோசரம் போன்ற லிங்கமூர்த்தியாயிருக்கின்றது. அந்த லிங்கமூர்த்தியை தேவியோடு சம்புவானவர் பாஹ்யமாயும் ஆந்தரமாயும் பூஜிக்கின்றனர். முக்கண்ணரும் நீலகண்டரும் சந்திரசேகரரும் அகம்பாவமுதலிய வற்றவரும் பாவாபாவமற்றவருமாயுள்ளவர் அவரே.பனிதரும் தேவரும் எவனைஅகப்பிரம்ஹமென்று கூறுகின்றனரோ எவன் த்யானம் த்யேயம் இவைகளைக் கடந்துள்ளவனோ அவன் கேவலம் சிவனொருவனே. தமஸைக்கடந்தவராகிய அந்த மஹாதேவர் சகுணநிர்க்குணராய்த்தேவியோடுகூடி பாஹ்யபூஜையை பற்பலவுபசாரங்களாற் செய்கின்றனர். அவ்விறைவன் எப்பொழுதும் மனதினுலேயே நடந்தேறுவதாகிய ஆந்தர பூஜையைச் செய்கின்றவராயினும் பிரதோஷகாலங்களில் மிக்கச்சிறப்பாய் பூஜிக்கின்றனர். அவரது பூஜையின் ஸ்வரூபத்தைக் கூறுகின்றேன். அதனைப் பக்தி சிரத்தையுடன் கேட்பீர்களாக. அதாவது:-

நான்குதேகங்களையுங் கடந்தவனும் சகல இந்திரியங்களற்றவனும் அகங்காரமற்றவனும் அத்வயனுமாகிய சிவன்யானே. வ்யாப்பியங்களில் வியாபித்திருக்கின்றவன்யானே. குணமற்றவன் யானே. எனக்கு ஆதியந்தமில்லை. யானே ஸகலன். யானே விஃவன். யானே விஃவாதீதன். அஜரனும் அசங்கனும் வியாபகனும்

பூர்ணனும் குணமற்றவனும் நீரூபனும் யானே. விஸ்வபூதான்மாவும் தேகதர்மமற்றவனும் யானே. ஆகாசனும் வியாபகனும் சிதறுவனவற்றுள் சிதறுதலற்றவனும் சத்தியனும் ஞானனந்தனும் பேதகமற்றவனும் யானே. என்னிடமே எல்லாந் தோன்றின. என்னிடமே எல்லாம் நிலைத்திருக்கின்றன. என்னிடமே ஒடுங்குகின்றன. ஆதலின் அத்வயனுகிய பிரம்ஹம்யானே. என்று இவ்வாறு பாவிக்கின்றனர். ஸ்கந்தர் ஓ முநிவரே! இவ்வாறு முதலில் தீரனாய் (இந்திரியங்களை யடக்கி) பாவித்து வெளியிலுள்ள லிங்கத்தை யர்ச்சிக்கவேண்டும். விபூதித்திரிபுண்டரமணிந்து ருத்திராக்ஷாபரண மணிந்து பஞ்சாஸ்ய த்யானத்திலும் பஞ்சாக்ஷர ஜபத்திலும் தற்பரனாய்க் கொண்டு கிழக்கு முகமாகவாவது வடக்குமுகமாகவாவது சுகாசனபந்தத்தோடிருந்து தனது ஹ்ருதய கமலத்தில் வீற்றிருப்போனும் சுத்தஸ்படிகம் போன்றவனும் கருணுமுகனும் முக்கண்ணனும் த்ரிபுண்டரசோபிதனும் சந்திரசேகரனும் நீலக்ரீவனும் உமாபதியுமாகிய இறைவனை ஸ்படிகலிங்கத்திலாவது பாணலிங்கத்திலாவது பொன்வெள்ளி முதலிய லோகத்தாலமைக்கப்பட்ட லிங்கத்திலாவது ம்ருத் (பிருத்வி) லிங்கத்திலாவது மணலிலாவது ஸ்தாவர (புல் பூண்டுசெடிகொடி) லிங்கத்திலாவது ஆவாஹனஞ் செய்துகொண்டு பூஜிக்கவேண்டும். பஞ்சாமிர்தங்களாலும் பஞ்சகவ்யங்களாலும் தீர்த்ததாரைமுதலியவைகளாலும் பஞ்சப்பிரஹம் பாவமானம் ருத்ரம் ஸாமம் முதலிய வேதமந்திரஜபத்தோடு சிவனை அபிஷேகித்துப் பின்னர் வஸ்திரங்களை மஹேஸ்வரரூபமாகிய அவ்விலிங்க மூர்த்திக் குடுத்தி சந்தனத்தை யணிவித்து அக்ஷதைகளாலும் ரத்னங்களாலும் அலங்கரிக்கவேண்டும். பின்னர் பில்வபத்ரங்களாலும் கல்ஹாரங்களாலும் சண்பகம் அலரி முதலிய புஷ்பங்களாலும் மற்றும் கானகத்திலுள்ள பரிமளமலர்களாலும் அர்ச்சிக்கவேண்டும். பின்னர் தூபதீபநைவேத்தியங்களாலும் தாம்பூலங்களாலும் ரத்தின தீபங்களாலும் நீராஜனங்களாலும் ஆராதித்துச் சத்ர சாமரங்களாலுபசரித்து நமஸ்காரம் ஸ்தோத்திரபடனம் பிரதக்ஷணம் நடனம் மீண்டும் பிரதக்ஷணம் ஆகிய இவைகளை முறையேசெய்து பின்னர் தனது ஹ்ருதயகமலத்தில் இறைவனை வீற்றிருக்கச்செய்து பூஜோத்வாஸனஞ் செய்யவேண்டும். இவ்வாறு பூஜாக்கிரமத்தோடு பரமேஸ்வரனை ப்பூஜிக்கவேண்டும். இங்ஙனம் பூஜையை எந்தமனிதன் திரிகாலம் அல்லது ஓர்காலமாவதுசெய்கின்றானே அவனே திவ்யக்யானமுதிக்கப்பெறுவான். ஓமுநிவரே! கைலாஸேஸ்வர லிங்கத்தின் மஹிமை

யின் லேசேலேசத்தின் கோடியினோர் பங்கின்லேசமும் வேதங்களா லும் ஈஸ்வரனாலும் தேவியாலும் கஜானனனாலும்ஸ்கந்தனாலும் இந்திரர்களாலும் பிரமவிஷ்ணு ஹரர்களாலும் முனிகணங்களாலும் தந்திரங்களாலும் ஆகமங்களாலும் கூறுவதற்கு முடியாது. ஓ முனிவரே! அதனைக்கேட்பதற்கும்அறிவதற்கும் இம்மூவுலகில் யாருமில்லையென்றெண்ணுகின்றேன்.

முப்பத்தாறும் அத்தியாயம்
முற்றிற்று.

உ

மஹோதராயநம:

## முப்பத்தேழாம் அத்தியாயம்.

### கைலாஸவாஸ மஹிமை.

ஸ்கந்தர்:- ஓ முநிவரே! கைலாஸசைலமானது அபாரமஹிமையுடையதாயிருக்கும்படி சூலபாணியாகிய இறைவனால் அருளப்பட்டது. அனேக ரத்ன ப்ராகார கோபுரமாளிகைகளும் அநேக ரத்னசிகரங்களும் அனேக மண்டபங்களுமுள்ள அவ்விடத்திலேயே ஸகலருத்திரகணங்களி னிருப்பிடமும் இறைவன திருப்பிடமுமிருக்கின்றன. எல்லாம் அவன திருப்பிடமாயினும் தேவிஸ்கந்தர் கணபதி நந்திகேசர் முதலியவர்களோடுகூட மஹேசன் அவ்விடத்திலேயே விசேஷமாய் விளங்குகின்றார். காசியிலாவது ஹிமகிரியிலாவது மந்தரகிரியிலாவது நிஷதகிரியிலாவது கந்தமாதனகிரியிலாவது மற்றுமுள்ள கிரிகளிலாவது மஹேஸ்வரன் அவ்வளவு பிரீதியுள்ளவரல்லர். ஸர்வதீர்த்த மயமாயும் ஸர்வலிங்கமயமாயும் ஸர்வக்ஷேத்திரமயமாயும் ஸர்வஔஷதமாயும் ஸர்வவனமயமாயுமுள்ளது கைலாஸகிரியாதலால் அஃதேசிவனுக்கு எப்போது மிருப்பிடமாயிருக்கிறது. கைலாயசிகரத்தில் சம்பந்தித்த காற்றானது மிக்கப்பாவனமாதலால் விஷ்ணுபிரமாதி தேவர்களாலும் முநிவர்களாலும் பிரார்த்திக்கப்படுகின்றது. அவர்கள் கைலாயத்தைத் தரிசிக்கும்படியான தவத்தைச் செய்தோமில்லையே; எப்பொழுது கைலாயசம்பந்தமான காற்றானது நம்மிடம் சம்பந்தித்துப் பாவனஞ்செய்யுமோ என்று நினைத்து காத்துக்கொண்டிருக்கின்றனர். பறவைகளும் சூர்யசந்திராக்னிகளும் அவ்விடஞ் செல்லக்கூடாதென்று ஈஸ்வரனால் நியமிக்கப்பட்டுளது. கைலாயமாளிகையில் ஒருக்ஷணமிருப்ப

தனுல் எச்சுகமுளதோ அச்சுகாம்சத்தின் கோடியிலொருபங்கும் விஷ்ணுபிரம இந்திரலோகங்களிலும் மற்றுமுள்ள பதினுன்கு புவனங்களிலுங்கிடைக்காது. அங்கு சம்புவின் அநுக்கிரகத்தினுலேயே செல்லலாகும்.கர்மத்தினுலும் தவத்தாலும் மற்றுமுள்ள தர்மங்களாலும் அங்கு செல்லமுடியாது. விஷ்ணுபிரமாதி தேவர்களும் முனிவர்களும் கைலாஸகிரியைத்தரிசிப்பதற்கு மிக்க ஆவலுடையோர்களாய் சிவப்ரஸாதசித்தியின் பொருட்டுப் பஞ்சாக்னி மத்தியினின்றவர்களாயும் காற்றைப் புசிக்கின்றவர்களாயும் புகையைப்புசிக்கின்றவர்களாயும் விபூதிபூசி ருத்திரத்தைச் செபிக்கின்றவர்களாயும் பஞ்சாக்ஷரபராயணர்களாயும் ருத்திராக்ஷகிரீடந் தரிப்பவர்களாயும் சிவநாமபராயணர்களாயும் முக்காலும் லிங்கார்ச்சனை செய்கின்றவர்களாயும் மிக்கவுக்ரமாய் இன்னமுந் தவம்புரிகின்றனர். இன்னம் சகல உலகங்களிலும் சஞ்சரிக்கின்ற முனீஸ்வரர்களும் ஸதாசிவப்ரஸாதத்தின் பொருட்டே தவஞ்செய்கின்றனர்.அவர்களுக்கு இறைவனருள் கிடைக்கும். கைலாயஞ் சென்றவருக்குப் புனராவர்த்தியில்லை. சம்புவைமிக்க சிரத்தையுடன் பூசித்தபெரியோர்கள் மஹாமேருவின் சிகரத்திலுள்ள கைலாயமாகிய ஈசானபதத்தையடைந்து ஆனந்தமநுபவிக்கின்றனர். அநேககோடி கற்பங்களிற் செய்ததவத்தினுலேயே அஃதடையக்கூடியது. மலை மலையாய் சொர்னத்தைத்தானஞ்செய்வதாலும் யாகாதி கர்மங்களாலும் அஃதடையக் கூடியதல்ல. ஓ முனிவரே! அநேகயுககாலம் தவம்புரிந்து சிவானுக்கிரகத்தால் நாங்களும் அக்கைலாஸத்தில் வசிக்கப்பெற்ருேம்.தேவியாலும் என்னுலும் கணேசராலும் நந்தியாதியராலும் கைலாஸத்தின் வெளிப்பிராகாரத்திலேயே வசிக்கும்படி பிரார்த்திக்கப்பட்டுளது. கைலாஸ சிகரங்களிலுள்ள சிவலிங்கங்களைக் கணக்கிடமுடியாது. ஆதலின் கோடிலிங்கம்லக்ஷலிங்கம் ஸகஸ்ரலிங்கம் ஆகிய இவ்வுத்தமலிங்கங்களை தேவிக்குக்கூறினுராயினும் அவைகளை இறைவனே இவ்வளவென்று கணக்கிட்டுக் கூறினுரில்லை.அங்ஙனமாயின் மற்றெவனுலெண்ணமுடியும்? அநிர்வசனமாயையுடையோனுகிய இறைவனது மஹிமையை எவனறிவான்? வேதமே நிஸ்வாசமாயுடையவனும் சர்வக்ஞனும் சந்திரசேகரனுமாகிய அவ்விறைவனே அதனையறிய வேண்டும். அவ்விறைவனது திருவுளத்தினுலேயே அவ்வளவுலிங்கங்கள் அமைந்திருக்கின்றன என்றனர்.

முப்பத்தேழாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

மதோத்கடாயநம:

# முப்பத்தெட்டாம் அத்தியாயம்.

## கைலாஸலிங்க மண்டல பூஜாகதனம்.

ஸூதர்-கூறுகின்றார். ஜைகிஷவ்யர் ஓ தாரகாராதே! சிவபக்த வரா! அமலா! உமது பாதார விந்தத்தை நமஸ்கரிக்கின்றேன். இறைவன் தேவியாருக்குக் கூறிய விஷயமானது ரகஸ்யமாயினும் பிரகாசமாயினும் எனக்கதனை யுரைத்தருளு மென்று பிரார்த்திக்க ஸ்கந்தர் புந்நகை கொண்டவராய் ஸ்ரீ மஹாதேவனை ஹ்ருதயக மலத்தில் தியானித்துக்கொண்டுஸகலதேவமுனி கணங்களையும் நோக்கிக்கூறலாயினர். ஓ சாம்பவ சிரோ மணிகளே! பூர்வம் கைலாயசிகரத்தில் பரமேஸ்வரன் தேவியோடு ஏகாந்தமாயிருக்கும்போது ஆச்சரியமடைந்தவர்போல் சிரித்தனர். அதைக்கண்டு தேவிஇறைவனை வணங்கி ஓ ஸ்வாமி! தேவதேவா! மஹாதேவா! சங்கரா! கருணாலய! ஏணாங்கமௌளே! ஸர்வக்ஞ! கங்காசலசடாதரா! ஸகல ஜகங்களுக்கும் பிரமவிஷ்ணு ருத்திரர்களுக்கும் தோற்ற நிலையொடுக்கங்கள் உமது கடாக்ஷத்தினாலேயே நடந்தேறுகின்றன. லீலையாகவே பிரளய உதயங்களை நடத்துவோராகியவுமக்கும் ஆச்சரியத்திற்கேது ஒன்றுளதோ? எந்த ஆச்சரியத்தைக்கண்டு தேவரீர் நகைத்தீர்? அதனை யுரைத்தருளவேண்டு மென்றனள்.

அப்போது ஈஸ்வரன் ஓ தேவி! உன்னிடம் கூறக்கூடாத ரகஸ்யமொன்றுளதோ? அதனைக்கூறுகின்றேன். இக்கைலாய சிகரங்களில் என்மனதா லமைக்கப்பட்டுள்ள லிங்கங்களை நினைத்து ஆச்சரியங்கொண்டேன். யானே கோடிலிங்க ஸ்வரூபமாயிருக்கின்றேன். அவைகளைப் பூஜிப்பவனும்யானே. தேவர் முனிவர்கந்தர்வர் முதலியயாவராலும் இங்கு பூஜிக்கப்படுவதில்லை. இதனைத்தரிசிக்கவுமுடியாது. இங்குவருகிறதற்கும் ஒருவராலும் முடியாது. அப்படிப்பட்ட இந்த லிங்கங்க ளெல்லாவற்றையும் யான் பார்த்தமாத்திரத்தில் யாவும் பூஜிக்கப்பட்டு விளங்குகின்றன. ஓதேவி! உனது கடாக்ஷம் நிகழ்ந்ததும் இந்தலிங்கமண்டலமெல்லாம் சந்திரகலாதரமாயும் குண்டலீச பூஷிதமாயும் புண்டர சோபிதகபாலமாயுமுள்ள திருவுருவத்தோடு விளங்குகின்றவுமாய் பில்வசண்பக தாமரைமலர்களால் அர்ச்சிக்கப்பட்டிருக்கின்றன. இக்கைலாஸமானது ரத்ந கிருக்ஙகளில்விளங்கும் லிங்கங்களாலும் பில்வம் முதலிய புண்யவிரு

க்ஷங்களாலும் பரிமள மலர் விருக்ஷசெடி கொடிகளாலும் மிக்கஅற்புதமாயிருக்கின்றமையால் இவ்விடத்தில் எனக்குமிக்கப்பிரீதியுளது. ஓதேவி! லிங்காலயங்கடோறும் தூபங்களின் கந்தமும் தீபங்களின் பிரகாசமும் திவ்யமலர்களின் பரிமளவாசனையும் வியாபித்திருக்குஞ்சிறப்பினைப்பார். நைவேத்யராசிகளும் ஆங்காங்கு லிங்காலயங்கடோறும் விளங்குகின்றதைப்பார். அர்ச்சிக்கப்பட்டு மலைமலையாய்க்குவிந்திருக்கும் புஷ்பராசிகளைப்பார். சாமரம் போடுதலையும் மயில்கள் நடனமாடுதலையும் குயில்கள் ராகத்தோடு கூவுதலையும்பார். இவைகள் பூஜையின் பொருட்டே நியமிக்கப்பட்டிருக்கின்றன வாய்க்காணப்படுகின்றன வென்றனர்.

முப்பத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
மஹாவீராயநம:

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்.

### லிங்கவைபவகதனம்.

ஸ்ரீ கந்தர்: ஓமுனிவரரே! ஈஸ்வரன் பின்னும் தேவியைநோக்கி ஓசங்கரி! எனக்கு லிங்கபூஜையில் எவ்வளவு பிரீதிசிரத்தை யிருக்கின்றதோ அவ்வளவு சகத்தின்சிருஷ்டியிலும் ஸ்திதியிலும் அழிப்பதிலுமில்லை. பூர்வம் இந்த கிரியானவன் என்னைக்குறித்து மிக்கவுக்கிரமானதவம் புரிந்தான். அப்போதுயான் இங்ஙனமருளினேன். ஓகிரீந்திரா! உனது கிரியின் சிகரங்களில் எண்ணிறந்த லிங்கங்களோடியான் வசிக்கின்றேன். உனக்குளனது சந்நிதிமஹிமையால் பிரளயத்திலும் நாசமில்லையென்று வரமளித்தேன். ஓதேவி! பிரளயத்தில் மஹாப்பிரவாகமாய் ஒன்றுசேர்ந்து புரண்டுவரும் சப்தசமுத்திரங்களும் இக்கைலாயத்தின் அடிப்பிரதேசத்தி லடங்கிநிற்கும். ஓகிரிஜே! யான் கேதாரேஸ்வரரெனும் பெயருடன் ஹிமாசலத்திலும் மந்தரத்திலும் வசிப்பேன். மகாமேருவின் சிகரத்திலும் எனது வாசஸ்தலமுளது. சகலதேவர்களால் அங்கும்யான் பூஜிக்கப்பட்டு வசிக்கின்றேன். ஓதேவி! யான் ஏகனும் அத்வைதனும் நிரூபனும் ஆயினும் எல்லாமெனக் கிருப்பிடமாயினும் இக்கைலாயசிகரத்தில் உன்னோடுமிக்க திருப்தியுடன் வசிக்கின்றேன். இக்கைலாயத்தில் மண்டபமாளிகை கோபுரங்களோடு கூடிய திவ்யரத்னலைய

ங்களில் விளங்கும் கோடிலிங்கங்களைக் கணக்கிடமுடியாதாயினும் இவைகளுள் ஸகஸ்ரலிங்கமானது எனக்கு மிக்கத்திருப்திக்கு ஹேதுவாயிருக்கின்றது. அந்தலிங்கமானது தவத்தாலும் யாகங்களாலும் யோகங்களாலும் கிடைக்கக்கூடியதல்ல. ஓதேவி! கைலாஸேஷ்வரமுதலிய லிங்கங்களையான் முப்போதும் பூஜிக்கின்றேன். அந்தந்தலிங்கங்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக. இந்த திவ்யலிங்க நாமத்தை உச்சரித்தாலும் ஸ்ரவணஞ்செய்தாலும் மனிதர் ஸகலபாபங்களு நீங்கி ஸ்வர்க்காப வர்க்கங்களைப் பெற்றுமகிழ்வார். கைலாயத்தின் தெற்குமேற்கு வடக்குச்சிகரங்களிலுள்ள லிங்கங்களின் எண்ணிக்கையை சொல்லுவதற்கு பதினாயிரம் கல்பம்வரையிலும் ஆதிசேஷன் முயன்றாலும் முடியாது. ஆகாயத்தை ஊடுருவிச்சென்ற அற்புதமாகிய கும்பங்களாற் சொலிக்கும் கோபுரரத்னமண்டபமுடைய ரத்னாலயகர்ப்பக் கிரகங்களில் திவ்யமணி பீடங்களில் விளங்கும் ஸ்படிகலிங்கங்களைப்பார். இந்தலிங்கங்கள் பில்வமந்தாரம் முதலிய மலர்களால் அர்ச்சிக்கப்பட்டும் திவ்யதூபதீபங்களால் பூஜிக்கப்பட்டும் விளங்குகின்றன. ஒவ்வொன்றும் சந்திரகலாதரமும் சர்ப்பமணியால் மறைக்கப்பட்டும் வச்சிரமணியால் திரிபுண்டர மணியப்பட்டும் கஸ்தூரிதிலகம் ஜ்வலிக்கப்பெற்றும் விளங்குகின்றது. ஓதேவி! இந்தலிங்காலயத்தின் மாளிகையின் கும்பத்தைத் தெரிசிப்பதாய் நினைத்தாலு முக்திபெறலாம். இதனை நமஸ்கரிப்பாயாக. பூலோகத்திலாவது பாதாளத்திலாவது சத்தியலோகத்திலாவது இப்படிப்பட்டலிங்கமில்லை.

ஓகிரிஜே! பூலோகலிங்கத்திலும் பாதாளலோகலிங்கம் சிறந்தது. பாதாளலிங்கத்திலும் ஸ்வர்க்கலோகலிங்கம் உத்கிருஷ்டமானது. அதனினும் ஸத்யலோகத்திலும் வைகுண்டத்திலுமுள்ளலிங்கங்கள் சிறப்புப்பொருந்தியவை. இத்திசையிலுள்ள லிங்கங்கள் எண்ணிறந்தனவாயினும் இவைகளில் இருநூற்றைம்பது லிங்கங்கள் மிக்க அபாரமஹிமை பெற்றுள்ளனவாதலின் அவைகளின் நாமங்களைக்கூறுகின்றேன். இவைகளுள் முதன்மைபெற்றது கைலாஸேஷ்வரலிங்கம். இதன்மஹிமையை ஸகலவேத வேதாந்தங்களும் அறியச்சக்தியுடையனவல்ல. பிரம்ஹவிஷ்ணு மஹேஷ்வரர்கள் இதனிடமே லயிக்கின்றமையால் லிங்கமெனப்படுகிறது. ஓமஹேஷ்வரி! நிற்குணமாகிய எனதுருவமே இஃதென்றறி. இதனாலேயே ஸகலலோகங்களும் விளங்குகின்றன. இதன் சேதனத்தினாலேயே சகங்கள் சைதன்ய முடையனவாகின்றன. இதன் ஆனந்தலேசத்தினாலேயே ஸகல

மும் ஆனந்தமயமாகின்றது. இஃதேபிரம்ஹம். சூக்ஷ்மமயமாயுள்ளதும் ஸகலேந்திரியங்களுக்கு மெட்டாததும் ஸகலதர்மமற்றதும் சக்ஷுவுக்கு சக்ஷுவும்பிராணனுக்குப் பிராணனுமாயுள்ளது. உலகில் எதனைப்பூசித்தாலும் த்யானஞ்செய்தாலும் முக்தனாகின்றானோ அஃது இந்தலிங்கமே. இனி ஏனையலிங்கங்களையுங் கூறுகின்றேன் கேட்பாயாக.

முப்பத்தொன்பதாம் அத்தியாயம்.

முற்றிற்று.

உ

மந்த்ருணோநம:

## நாற்பதாம் அத்தியாயம்.

•

### கைலாஸ ப்ராக்த்வாரலிங்க நாமகதனம்.

ஈச்வரர் ஓதேவி! ஸ்ரீகைலாசேஸ்வரர் பூதேஸ்வரர் அம்பிகேஸ்வரர் சூதேஸ்வரர் கணேசேஸ்வரர் ஸ்கந்தேஸ்வரர் தாரகேஸ்வரர் கங்கேஸ்வரர் நந்திகேஸ்வரர் பிருங்கீஸ்வரர் பாணகேஸ்வரர் சண்டேஸ்வரர் முண்டிகேஸ்வரர் ரத்னேஸ்வரர் கந்தகேஸ்வரர் பர்க்கேஸ்வரர் வீரேஸ்வர்ர் ஜ்யேஷ்டேஸ்வரர் குஸுமேஸ்வரர் வீரபத்ரேஸ்வரர் கந்துகேஸ்வரர் பணீஸ்வரர் ஸூதேஸ்வரர் கபஸ்தீஸ்வரர் ருத்ரேஸ்வரர் பைரவேஸ்வரர் கரவீரேஸ்வரர் நிஷதீஸ்வரர் வடேஸ்வரர் கச்சபேசர் கஸ்யபேசர் ஆபத்தீஸ்வரர் க்ரிணீஸ்வரர் கலசேஸ்வரர் தேவிகேஸ்வரர் பத்மேஸ்வரர் மகதேஸ்வரர் துண்டேசர் ஹூண்டேஸ்வரர், ஸௌரேஸ்வரர் வருணேஸ்வரர் வாருணேஸ்வரர் வைக்ரதீஸ்வரர் மோக்ஷேஸ்வரர் தண்டகேஸ்வரர் மண்டலீசர் குண்டலீஸ்வரர், பாண்டலீஸ்வரர், பிண்டேஸ்வரர் கருடேஸ்வரர் சந்திரேஸ்வரர் மாருதேஸ்வரர் விதீஸ்வரர் ஸூதீஸ்வரர் தண்டகேஸ்வரர் முநீஸ்வரர், உமேஸ்வரர் கபர்த்தீஸ்வரர் பத்ரகணேஸ்வரர் வேகேஸ்வரர் விஷ்ணுவீசர் வைராஜேஸ்வரர் மநேஸ்வரர் அஹிர்புத்நேஸ்வரர் ஜமதக்னீஸ்வரர் விஸ்வாமித்ரேஸ்வரர் ராவணேஸ்வரர் பலீஸ்வரர் மனோன்மநீஸ்வரர் ஸூதாதாமேஸ்வரர் மார்த்தண்டேஸ்வரர் லலிதீஸ்வரர் ஸ்வலீநேஸ்வரர் த்ருவேஸ்வரர் கந்தர்ப்பசோதி வீஸ்வேஸ்வரர் பாரிபத்ரேஸ்வரர் கர்ப்பேசர்ம்ருதங்கேஸ்வரர் தேர்ணேஸ்வரர் த்ரிதீஸ்வரர் உத்பலேஸ்வரர் மஹேந்திரேஸ்

வரர் ஸ்தாண்வீஸ்வரர் பலிதேஸ்வரர் அநங்கேஸ்வரர் கர்த்தபேஸ்
வரர் ம்ருடேஸ்வரர் வம்ரகேஸ்வரர், வாகுரீஸ்வரர் வப்ருகேசர்
வடபத்ரேஸ்வரர் ஸ்ரீராமகேஸ்வரர் ம்ருகேந்திரேஸ்வரர் ஹிரண்
யேசர் பபீஸ்வரர் ஆக்னீத்ரேஸ்வரர் சங்கதீஸ்வரர் ப்ரஹதீஸ்வரர்
ரணேஸ்வரர் கிராதேஸ்வரர் கர்ஜகேஸ்வரர் வேணுதாரேஸ்வரர்
ஜயந்தேஸ்வரர் மத்யமேஸ்வரர் ஸங்கமேஸ்வரர் கதீஸ்வரர் வித்யுத்
கர்ப்பேஸ்வரர் திரிபுரேஸ்வரர் ஹரீஸ்வரர் பலப்ரமதநேஸ்வரர் உகீ
நரேஸ்வரர் கர்க்கேஸ்வரர் மந்திரேசேஸ்வரர் தந்திரேஸ்வரர் லாம
வ்யோமகேஸ்வரர் திகீஸ்வரர் கபாலமோசனேஸ்வரர் மணிகர்ப்பே
ஸ்வரர் ஜாது கர்ணேஸ்வரர் ந்ருகேஸ்வரர் பாடலேஸ்வரர் கர்ணி
கேஸ்வரர் சத்ரகேஸ்வரர் பிங்களேஸ்வரர் சிலேஸ்வரர் மத்வீஸ்வ
ரர் வாமகேஸ்வரர் யௌவநேஸ்வரர் ஸ்திரேஸ்வரர் ப்ராந்தீஸ்வரர்
ஜந்துகேசேஸ்வரர் கோமேதேஸ்வரர் அகிலேஸ்வரர் விசாலேஸ்வ
ரர்சிம்ஹிகேசேஸ்வரர் கண்டாகர்ணேஸ்வரர் வ்யாக்ரேஸ்வரர்ஜம்பு
கேஸ்வரர் லலிதேஸ்வரர் த்ருதீஸ்வரர் வேதேஸ்வரர் துண்டிகேஸ்வ
ரர் கஹ்லாரேசர் அத்வநேஸ்வரர் பிந்து சேஸ்வரர் கண்டகேசர் நர்
மதேஸ்வரர் நீலேஸ்வரர் பிசண்டலீஸ்வரர் அத்ரீஸ்வரர் கனகேஸ்
வரர் அத்வரேஸ்வரர் ஸத்யோஜா தேஸ்வரர் குலிசேஸ்வரர் ப்லவே
ஸ்வரர் ஸோமேஸ்வரர் வாருணேஸ்வரர் சரபேஸ்வரர் ஜடேஸ்வ
ரர் பாககாரேஸ்வரர் முக்தகேஸ்வரர் ராகேஸ்வரர் பல்லகேஸ்வரர்
வீரகேஸ்வரர் க்ருதநேஸ்வரர் தநேஸ்வரர் உரகேஸ்வரர் கடோரேச்
வரர் தர்க்ஷ்ரேசர் வரீஸ்வரர் க்ஷிப்ரேஸ்வரர் தால்பேஸ்வரர் விந
தேஸ்வரர் சசீஸ்வரர் ககுதேஸ்வரர் முகுந்தேஸ்வரர் பவாநீஸ்வரர்
சநீஸ்வரர் வ்ருஷபேஸ்வரர் ரூக்ஷேஸ்வரர் சந்திரேஸ்வரர் மத்ஸ
யேஸ்வரர் பாவநேஸ்வரர் தூரங்கேஸ்வரர் மதங்கேஸ்வரர் கணுதீஸ்
வரர் பரீஸ்வரர் ஜலந்தரேஸ்வரர் ஸ்வேதாஸ்வேஸ்வரர் பிகேஸ்
வரர் ரைப்பியேஸ்வரர் முசுகுந்தேஸ்வரர் கங்கணேஸ்வரர் ப்ரதேஸ்
வரர் வித்யாதரேஸ்வரர் நீலேஸ்வரர் கக்ஷியேஸ்வரர் ப்ரபேஸ்வரர்
மருதேஸ்வரர் சக்திஸ்வரர் ஸ்வர்க்கேஸ்வரர் மலயேஸ்வரர் மங்க
ணேஸ்வரர் ஜாகநீஸ்வரர் விபுதேஸ்வரர் கிரீஸ்வரர் வரவணேஸ்வரர்
விகூர்ணேஸ்வரர் கோக்ஷவாகஜேஸ்வரர் கந்தர்ப்பேஸ்வரர் சூர்ய
கேஸ்வரர் புஷ்டேஸ்வரர் துஷ்டகேஸ்வரர் விநாயகேஸ்வரர் மணி
கண்டேஸ்வரர் திரேஸ்வரர் வதீஸ்வரர் வித்ருமேஸ்வரர் . வதேஸ்
வரர் விரிஞ்சீஸ்வரர் பத்ரகேஸ்வரர் சநேஸ்வரர் விஸ்வசேஸ்வரர்
பராபூதேஸ்வரர் லோகேஸ்வரர் பிராணிகேஸ்வரர் அந்த கேஸ்வரர்

முக்திகேஶ்வரர் ஹரிசேஶ்வரர் ருஷீஶ்வரர் கருடேஶ்வரர் பதங்சேஶ்வரர் கன்னியேஶ்வரர் தவளேஶ்வரர் கந்தபத்ரேஶ்வரர் சகரேஶ்வரர் அருணேஶ்வரர் அதால்ப்பே யவரர் கசேஶ்வரர் திரியம்பகேஶ்வரர் கைளதபேஶ்வரர் கலேஶ்வரர் விதண்டேஶ்வரர் கண்டேஶ்வரர் வராஹேஶ்வரர் குலேஶ்வரர் கேதாரேஶ்வரர் பலேஶ்வரர் கிங்கரேஶ்வரர் அமிர்தேஶ்வரர் என்னும் லிங்கங்கள் திவ்யாலயத்தில்பிரதிஷ்டிக்கப்பட்டனவாய் கைலாயத்தின் கிழக்குபக்கத்திலிருக்கின்றன. ஒதேவி! இந்த திவ்யலிங்கங்களை ஸ்பரித்தாலும் லிங்கநாமங்களை ஶ்ரவணஞ்செய்தாலும் உடனே ஸகலபாபங்களு நீங்குமென்றனர். ஸ்கந்தர் ஒ முனிவர்களே! இவ்வாறு கூறியதைத்தேவி கேட்டு ஆனந்தவசமாயினள் என்றனர்.

நாற்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

மங்களஸ்வராயநமஃ

## நாற்பத்தோராம் அத்தியாயம்.

### கைலாஸதக்ஷிணத்வார லிங்ககதனம்.

ஸ்கந்தர்:- ஒ முனிவர்களே! ஈஶ்வரன் மறுபடியுந் தேவியை நோக்கி ஒதேவி இனிக்கைலாயத்தின் தென்சிகரங்களிலுள்ள லிங்கநாமங்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக. அகோரேஶ்வரர் கபாலீஶ்வரர் குருடேஶ்வரர் நளேஶ்வரர் இந்திரேஶ்வரர் யமேஶ்வரர் நைருதேஶ்வரர் நடேஶ்வரர் உத்தராவர்த்தகேஶ்வரர் தக்ஷிணாவர்த்தகேஶ்வரர் விகுண்டேஶ்வரர் மௌலிகேஶ்வரர் அர்ச்சுநேஶ்வரர் கநீஶ்வரர் பகதந்தேஶ்வரர் நகுஷேஶ்வரர் ம்ருதேஶ்வரர் தங்கணேஶ்வரர் ஶாந்தீஶ்வரர் மத்தமேஶ்வரர் கலேஶ்வரர் வித்யேஶ்வரர் பந்நகேஶ்வரர் க்ருதநேஶ்வரர் கிஶேஶ்வரர் திவோதாஸேஶ்வரர் ராதிரதேஶ்வரர் சௌநகேஶ்வரர் கணபத்ரேஶ்வரர் சேஷேஶ்வரர் வாஸுகீஶ்வரர் ஶங்கபாலேஶ்வரர் சித்ரகுப்தேஶ்வரர் தண்டபாணீஶ்வரர் துர்க்கேஶ்வரர் ஶாரஸேஶ்வரர் ஹம்ஸேஶ்வரர் மயூரேஶ்வரர் சக்ரவாகேஶ்வரர் மதாங்நேஶ்வரர் மன்மதேஶ்வரர் ரதீஶ்வரர் சுந்தசேஶ்வரர் பாண்டீரேஶ்வரர் வநேஶ்வரர் புரந்திரீஶ்வரர் பலேஶ்வரர் காரணேஶ்வரர் தாரணேஶ்வரர் கிருத்திவாசேஶ்வரர் ஜநார்த்தநேஶ்வரர் விஶ்வேஶ்வரர் மஹாகாளேஶ்வரர் சரஸ்வதீஶ்வரர் லக்ஷ்மீஶ்

வரர் சசீஸ்வரர் சக்ரகேஸ்வரர் புலஹேஸ்வரர் புலஸ்தியேஸ்வரர்
ருருத்தகாளேஸ்வரர் பரத்வாஜேஸ்வரர் ஸாகரேஸ்வரர் ரமேஸ்
வரர் விலேகநேஸ்வரர் சித்ரேஸ்வரர் பாதகேஸ்வரர் பிண்டாரேஸ்
வரர் வஷீஸ்வரர் திலகேஸ்வரர் த்ருவேஸ்வரர் பலேஸ்வரர் அர்ண
வேஸ்வரர் க்ஷிப்பிரணீஸ்வரர் தளேஸ்வரர் கரந்தமேஸ்வரர் கிருஷ்
ணேஸ்வரர் ரமேஸ்வரர் கரணகேஸ்வரர் கங்காதரேஸ்வரர் மௌ
நேஸ்வரர் குருபத்ரேஸ்வரர் கந்தளேஸ்வரர் சாலேஸ்வரர் தா
லேஸ்வரர் பில்வசேஸ்வரர் அப்சரேஸ்வரர் மோக்ஷகேஸ்வரர் பூதா
ரேஸ்வரர் பதேஸ்வரர் விராதேஸ்வரர் கோகரேசர் ராஸேஸ்வரர்
சலேஸ்வரர் ஹரித்ரேஸ்வரர் குங்குமேஸ்வரர் நரகோத்தாரணேஸ்
வரர் ஸௌகேஸ்வரர் க்யானசேஸ்வரர் பக்தீஸ்வரர் முக்திகேஸ்
வரர் ரணமோசேஸ்வரர் காந்தீஸ்வரர் பவநேஸ்வரர் புரஞ்ஜேஸ்
வரர் கோகர்ணேஸ்வரர் வடேஸ்வரர் சரல்சேஸ்வரர் விசா
லேஸ்வரர் வீதிஹோத்ரேஸ்வரர் விம்லேஸ்வரர் பீமேஸ்வரர்
சங்கரேஸ்வரர் மிதேஸ்வரர் பாரிஜாதேஸ்வரர் மந்தாரேஸ்வரர்
ஜடேஸ்வரர் த்ரிஜடேஸ்வரர் சிகண்டேஸ்வரர் பர்ஹீஸ்வரர் பங
ஸேஸ்வரர் பணாமணீஸ்வரர் ராமேஸ்வரர் லக்ஷ்மணேஸ்வரர் அரு
ந்ததீஸ்வரர் வாகீஸ்வரர் பத்மகர்ப்பேஸ்வரர் ஹரிந்மணீஸ்வரர்
பக்ஷயேஸ்வரர் குசலீஸ்வரர் தரீஸ்வரர் உத்தாலகேஸ்வரர் நக்தஞ்
சரேஸ்வரர் பர்ணகேஸ்வரர் சாண்டில்யேச்வரர் காலேஸ்வரர் நிரி
சேஸ்வரர் குசேஸ்வரர் தூர்வேஸ்வரர் மநித்ரேஸ்வரர் கர்கநேஸ்
வரர் குணேஸ்வரர் குருவிந்தேஸ்வரர் பதீஸ்வரர் குடஜேஸ்வரர்
ஸ்ரீசைலேஸ்வரர்கவேஸ்வரர் ஹரித்வாரேஸ்வரர் கங்காத்வாரேஸ்
வரர் குருக்ஷேத்ரேஸ்வரர் ஸௌராபாண்டேஸ்வரர் யயாதீஸ்வரர்
குதேஸ்வரர் வாராணசீஸ்வரர் அவிமுக்தேஸ்வரர் காலஹஸ்தீஸ்
வரர் விஷ்ணுசக்ரப்ரதேஸ்வரர் ரோமந்தேஸ்வரர் அகஸ்தீஸ்வரர்
மாலவேஸ்வரர் பகேஸ்வரர் அங்கோலேஸ்வரர் ப்ரதரணேஸ்வரர்
மாருதேஸ்வரர் பவேஸ்வரர் நக்ஷத்ரேஸ்வரர் தாலகேஸ்வரர் பல்லி
கேஸ்வரர் குஹேஸ்வரர் ரோகஹாரீஸ்வரர் த்ரிஜடேஸ்வரர் கநேஸ்
வரர் ஸௌபர்ணேஸ்வரர் தாண்டவேஸ்வரர் மண்டலேஸ்வரர்
மதீஸ்வரர் தக்ஷகேசேஸ்வரர் ப்ரவாளேஸ்வரர் ஹரிபத்ரேஸ்வரர்
விரோதேஸ்வரர் தும்புரேஸ்வரர் நாரதேஸ்வரர் கரேஸ்வரர் ரம்
யேஸ்வரர் வித்ருமேஸ்வரர் கர்த்தமேஸ்வரர் த்ருணேஸ்வரர் சூல
டங்கேஸ்வரர் சத்மகேஸ்வரர் பலீஸ்வரர் மருதாமேஸ்வரர் ஹிங்
தூரேஸ்வரர் க்ரிமீஸ்வரர் ப்ராதேஸ்வரர் ப்ரயாகேஸ்வரர் ப்ரதிஷ்

டாபுரேஸ்வரர் கோதாவரீஸ்வரர் தாம்ருபரணீஸ்வரர்ப்ருதவநேஸ்வரர் பம்பேஸ்வரர் பங்கிலேஸ்வரர் யேநேஸ்வரர் புத்புதேஸ்வரர் ஆவர்த்தேஸ்வரர் ஸுவேஸ்வரர் குலேஸ்வரர் விராடேஸ்வரர் பலாசேஸ்வரர் ஸ்திதீஸ்வரர்ப்ரளதேஸ்வரர் ஜாகதீஸ்வரர் த்ரிலோகேஸ்வரர் க்ஷிதீஸ்வரர் பஞ்சகேஸ்வரர் வ்ரதீஸ்வரர் யக்ஞேஸ்வரர்பலீஸ்வரர் பகவீஸ்வரர் பவப்ருகேஸ்வரர் கந்தத்வாரேஸ்வரர் கண்டேஸ்வரர் வருணேஸ்வரர் ப்ரபாஸேஸ்வரர் ருத்ரகோடீஸ்வரர் வல்மீகேஸ்வரர் ஸுதாரேஸ்வரர் த்ரிணஜ்யோதீஸ்வரர் காயத்திரீஸ்வரர் சவித்ரீஸ்வரர் காலத்வாரேஸ்வரர் துங்கேஸ்வரர் பீமசண்டேஸ்வரர் ரத்னகர்ப்பேஸ்வரர் தேவேஸ்வரர் ஹீரகேஸ்வரர் ரந்திதேவேஸ்வரர் காலஞ்சரேஸ்வரர் அப்தீஸ்வரர் பைப்பிலாதேஸ்வரர் கந்தர்வேஸ்வரர் திரிசூலேஸ்வரர் ரஜநீஸ்வரர் திநேஸ்வரர்சித்ரகண்டேஸ்வரர் த்வாரபீடேஸ்வரர் திரிகூடேஸ்வரர்மங்களேஸ்வரர் மாலகேஸ்வரர்முத்ரேஸ்வரர் தாடகேஸ்வரர் திரிதண்டீஸ்வரர் கஜேஸ்வரர் காத்யாயநீஸ்வரர் யாக்ஞவல்கேஸ்வரர் த்வஷ்டேஸ்வரர் விஸ்வகர்மேஸ்வரர் யமேஸ்வரர் ரதிசேஸ்வரர் வசுந்தரேஸ்வரர்க்ஷௌமேஸ்வரர் நாளகேஸ்வரர் மித்ரேஸ்வரர் கர்த்தீஸ்வரர் காவ்யேஸ்வரர் விபுதேஸ்வரர் பௌமேஸ்வரர் பரத்ருகேஸ்வரர் காஹுட்டேஸ்வரர் கர்த்ரேஸ்வரர் ககதீஸ்வரர் காவ்யேஸ்வரர் சுவர்ணதேஸ்வரர் என்னும் இப்போது கூறிய ஒவ்வொரு லிங்கமும் ரத்ன ஆலயத்தில் அற்புதமாய் ஜ்வலிக்கின்றன பார்த்தனையோ என்றருளினார்.

நாற்பத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

ப்ரமதாயநம:

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்.

### பச்சிமத்வாரலிங்க கதனம்.

ஸ்கந்தர் ஓ முநிவரே! பின்னர் இறைவன் தேவியை நோக்கி ஓ தேவி! இனி மேற்பக்கத்திலுள்ள லிங்கங்களைக் கூறுகின்றேன் கேட்பாக. தத்புருஷேஸ்வரர் ஸ்தாண்வீஸ்வரர் பைகேஸ்வரர் குடஜேஸ்வரர் ஸாலேஸ்வரர் ஸ்தானகேஸ்வரர் வைநதேஸ்வரர் ஸகலேஸ்வரர் முசலேஸ்வரர் ஹாடகேஸ்வரர் ருத்ரதன்வீஸ்வரர் ஜ்வராபஹாரகேஸ்வரர் க்ஷயஹரேஸ்வரர் ப்ராணேஸ்வரர் விதர்ப்

பேஸ்வரர் தேவேஸ்வரர் அதலேஸ்வரர் அநங்கேஸ்வரர் சம்பரேஸ்வரர் உக்ரேஸ்வரர் தான்யகேஸ்வரர் வக்ரேஸ்வரர் கனகோஷேஸ்வரர் வேதகர்ப்பேஸ்வரர் ஓங்காரேஸ்வரர் சிகிஸ்வரர் கேதாரேஸ்வரர் பில்வமூலேஸ்வரர் ஸத்ரேஸ்வரர் பாரதீஸ்வரர் துங்கபத்ரேஸ்வரர் சநாதனேஸ்வரர் வைத்யேஸ்வரர் குலிங்கேஸ்வரர் ப்ரஜேஸ்வரர் மாண்டவ்யேஸ்வரர் ஸ்தம்பகேஸ்வரர் போதேஸ்வரர் விகஸேஸ்வரர் பிரகஸேஸ்வரர் ருப்வீஸ்வரர் கணகிதேஸ்வரர் சுக்ரேஸ்வரர் பிரஹித்தேஸ்வரர் சித்தேஸ்வரர் சநேஸ்வரர் பக்ஷீஸ்வரர் பத்ரிகேஸ்வரர் குலீஸ்வரர் வநீஸ்வரர் பர்வேஸ்வரர் பர்வதேஸ்வரர் ஸர்வேஸ்வரர் காந்திகேஸ்வரர் பர்ஹித்வஜேஸ்வரர் கபோதேஸ்வரர் கணீஸ்வரர் சதேஸ்வரர் ரோமகேஸ்வரர் காவ்யேஸ்வரர் வர்ஷகேஸ்வரர் ஸோமநந்தீஸ்வரர் கரேஸ்வரர் ஹநேஹதீஸ்வரர் சதர்ச்சேஸ்வரர் பவேஸ்வரர் விக்ருதேஸ்வரர் கரம்பீஸ்வரர் ஸ்ருவேஸ்வரர் கணேஸ்வரர் வர்த்திகேஸ்வரர் ஸத்ரீஸ்வரர் த்ரிகேஸ்வரர் சித்ரவ்யாதேஸ்வரர் ரௌப்யேஸ்வரர் பந்தகேஸ்வரர் பசுபதீஸ்வரர் பயஹாரீஸ்வரர் ஜன்மஹாரீஸ்வரர் துக்கஹாரீஸ்வரர் பிரம்ஹயோநீஸ்வரர் விஷ்ணுகர்ப்பேஸ்வரர் ருத்ரலோமேஸ்வரர் இந்திரதாபேஸ்வரர் சந்திரசூடேஸ்வரர் அக்னிகர்ப்பேஸ்வரர் வாயவீஸ்வரர் ஜலேஸ்வரர் மேகேஸ்வரர் வைத்யுதேஸ்வரர் ஆமோதேஸ்வரர் தித்திரீஸ்வரர் த்யாவாபூமீஸ்வரர் கஜாஜினதரேஸ்வரர் நரஸிம்ஹேஸ்வரர் ஔபாசநேஸ்வரர் ஹவ்யேஸ்வரர் கணகேஸ்வரர் கர்ணிகேஸ்வரர் தகீசிஸ்வரர் ஜங்கேஸ்வரர் கர்க்கேடீஸ்வரர் ஜாபாலேஸ்வரர் ஸௌபாலேஸ்வரர் புரத்தாரேஸ்வரர் ருக்வேதேஸ்வரர் அதர்வகேஸ்வரர் புராணேஸ்வரர் ஊர்வசீஸ்வரர் இதிஹாஸேஸ்வரர் தர்மஸாரேஸ்வரர் சாங்கியேஸ்வரர் யோகேஸ்வரர் மௌலீஸ்வரர் பாலிகேஸ்வரர் குஜம்பேஸ்வரர் ஜம்பேஸ்வரர் ராஜராஜேஸ்வரர் கௌதமீஸ்வரர் விசாகேஸ்வரர் ஸ்கந்தேஸ்வரர் பலிகேஸ்வரர் தகலீஸ்வரர் ப்ரஷ்டகீஸ்வரர் பிருத்வீஸ்வரர் கார்முகேஸ்வரர் அந்தரிக்ஷேஸ்வரர் மைத்ரேஸ்வரர் குந்தயேஸ்வரர் உதாவஸேஸ்வரர் மல்லேஸ்வரர் பிரம்ஹகேஸ்வரர் தாங்கேஸ்வரர் குராங்கேஸ்வரர் மகரந்தேஸ்வரர் ஸௌதாதரேஸ்வரர் த்ருதகேசேஸ்வரர் வியாலேஸ்வரர் விதர்க்கேஸ்வரர் காநநேஸ்வரர் முநீஸ்வரர் பத்ரமாலேஸ்வரர் கேதுமாலேஸ்வரர் மந்தரேஸ்வரர் விந்தகேஸ்வரர் ஹிமேஸ்வரர் நீலகேஸ்வரர் மஹேந்திரேஸ்வரர் கர்மகேஸ்வரர் ருத்வீஸ்வரர் தூநநேஸ்வரர் வீதஹவ்யேஸ்வரர் அஸ்வத்தா

மேஸ்வரர் சிகரேஸ்வரர் ஸ்தீர்த்தகேஸ்வரர் த்ரிநவேஸ்வரர் அப்ஜகேஸ்வரர் அபஸ்மாரஹரேஸ்வரர் ஸோமசண்டீஸ்வரர் மார்க்கஸஹாயேஸ்வரர் தேவீஸ்வரர் அர்ணஜேஸ்வரர் ஜ்வலநேஸ்வரர் பாவகேஸ்வரர் ஆங்கிரஸேஸ்வரர் தக்ஷேஸ்வரர் விதக்ஷேஸ்வரர் மைநாகேஸ்வரர் ஸதீஸ்வரர் ப்ரமதேஸ்வரர் ப்ரமாதீஸ்வரர் போஜ்யேஸ்வரர் விக்ரயேஸ்வரர் ஈட்யேஸ்வரர் யாக்ஞேஸ்வரர் கர்ணவேதேஸ்வரர் தர்ணகேஸ்வரர் பாண்டரேஸ்வரர் மேகவாஹேஸ்வரர் கனிஷ்டேசர் ஜ்யேஷ்டேஸ்வரர் தாம்ரேஸ்வரர் சௌநகேஸ்வரர் அநாஹதேஸ்வரர் பீதேஸ்வரர் தூம்ரகேஸ்வரர் பந்தமோசநகேஸ்வரர் சதேஸ்வரர் ப்ரமரேஸ்வரர் காண்டகேஸ்வரர் த்ருமசண்டீஸ்வரர் விசாலாக்ஷேஸ்வரர் வஸந்தேஸ்வரர் ககேஸ்வரர் கஜாஸுரஹரேஸ்வரர் நீலகண்டேஸ்வரர் சுமித்ராவருணேஸ்வரர் களஹம்ஸேஸ்வரர் சாவித்ரீஸ்வரர் கோமதீஸ்வரர் கோநர்த்தேஸ்வரர் வ்ருஷபேஸ்வரர் கதிப்ரதேஸ்வரர் வியாஸேஸ்வரர் கோளகேஸ்வரர் மஹாபூதேஸ்வரர் ரமேஸ்வரர் கந்தகேஸ்வரர் பாடபேஸ்வரர் படேஸ்வரர் ஸர்வபிராணுதிகேஸ்வரர் தடாதகேஸ்வரர் கர்ப்பகோசேஸ்வரர் தோரணேஸ்வரர் ரதீஸ்வரர் ஆதபேஸ்வரர் சசீஸ்வரர் துந்துபீஸ்வரர் விந்துரீஸ்வரர் ஜவநேஸ்வரர் கூபேஸ்வரர் வரபத்ரேஸ்வரர் கர்ணதாரேஸ்வரர் தாம்ருத்வஜேஸ்வரர் கோவிதாரேஸ்வரர் சத்திரிதீஸ்வரர் மஹாரோகஹரேஸ்வரர் காமதாநேஸ்வரர் பில்வாதேஸ்வரர் நீபீஸ்வரர் ருத்ரேஸ்வரர் நாககேஸ்வரர் தாரணேஸ்வரர் அம்பிகேஸ்வரர் எனும் நாமமுடையனவாம். ஓ தேவி! சரத்காலசந்திரன்போலும் அமுதப்பிரவாகம்போலும் மிக்க வெண்ணிறமுடையனவும் இந்திரநீலம்போன்ற நிறமுடைய பில்வங்களால் அர்ச்சிக்கப்பட்டனவும் சந்திரகலையணிந்தனவும் நாகபடங்களால் மறைக்கப்பட்ட சிரமுடையனவும் விபூதித்திரிபுண்டரமணிந்தனவும் பரிமளசந்தனத்தாலும் வஸ்திரத்தாலும் அலங்கரிக்கப்பட்டனவும் ஆகிய இந்தவிலிங்கங்களைத் தரிசிப்பாயாக. கண்கள் இதனாலேயே ஸபலமாகவேண்டும். இந்தலிங்கங்களில் ஒவ்வொன்றிற்கும் அற்புதமாகிய ரத்னாலயம் காணப்படுகின்றது. ஓ தேவி! இந்த லிங்கக்கூட்டமானது மகாபாவங்களையும் நீக்குவனவும் ஸகல துக்கங்களையும் தொலையச்செய்கின்றனவும் ஸகல கோரிக்கைகளையுந் தருவனவுமாம் என்றனர்.

நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

———

உ

ப்ரமதாயநம:

# நாற்பத்துமூன்றாம் அத்தியாயம்.



## கைலாச உத்தரத்வார லிங்க நாமகதனம்.

ஸ்கந்தர் ஓ முநிவரே! மறுபடியும் ஈஸ்வரர் தேவியை நோக்கிக்கூறியதாவது:- ஈஸ்வரர் ஓ தேவி! இப்போது மேற்குத்திசையிலுள்ள லிங்க நாமங்களைக் கூறினேன். இனிவடக்குப்பக்கத்திலுள்ள லிங்கங்களைக்கூறுகின்றேன். பக்தியுடன் கேட்பாயாக. வாமதேவேஸ்வரர் கிரிகேஸ்வரர் ஸாகேஸ்வரர் பிரஹஸ்பதீஸ்வரர் வர்த்தனீஸ்வரர் பிகேஸ்வரர் கோகிலேஸ்வரர் பிசண்டேஸ்வரர் வாமகர்ணேஸ்வரர் ஆனந்தேஸ்வரர் கர்மரேஸ்வரர் சாமரேஸ்வரர் பதீஸ்வரர் வைராக்யேஸ்வரர் கல்யகேஸ்வரர் ஹரிப்பிரம்ஹேஸ்வரர் கணேஸ்வரர் குணேஸ்வரர் பிரம்ஹாண்டேஸ்வரர் சடேஸ்வரர் விலாசேஸ்வரர் சுகேசேஸ்வரர் ஆமகேஸ்வரர் ப்லவேஸ்வரர் அன்னகோஶேஸ்வரர் பிராணகோஶேஸ்வரர் விக்ஞானேஸ்வரர் கநாசேஸ்வரர் ஆத்மேஸ்வரர் ரக்ஷகேஸ்வரர் ஆகாத்யேஸ்வரர் முத்தேஸ்வரர் கோஷசேஸ்வரர் விஸர்ப்பீஸ்வரர் நாமநேஸ்வரர் ஆம்ரேஸ்வரர் கமடேஸ்வரர் சநாசநேஸ்வரர் குருகாயேஸ்வரர் கபிஞ்சலேஸ்வரர் கர்க்கேஸ்வரர் ஷண்டகேஸ்வரர் அசங்கேஸ்வரர் ஸங்கேஸ்வரர் ஜ்யோதீஸ்வரர் கரணேஸ்வரர் ஹரிருத்ரேஸ்வரர் க்ருபாணேஸ்வரர் நிஷீஸ்வரர் கனகாவர்த்தகேஸ்வரர் ஹரிசோபாருணேஸ்வரர் ஆம்ரேஸ்வரர் அதர்ப்பகேஸ்வரர் ரந்தகுசேஸ்வரர் உதாரேஸ்வரர் இந்துமௌளீஸ்வரர் மகேஸ்வரர் ஸபேஸ்வரர் ஹரிகேஸ்வரர் கிஶோரேஸ்வரர் உத்தாலேஸ்வரர் அர்ப்பகேஸ்வரர் யுவேஸ்வரர் வ்ருத்தேஸ்வரர் தர்த்துரேஸ்வரர் ப்ரலீஸ்வரர் மதீஸ்வரர் வனஸ்தேஸ்வரர் க்ருஹஸ்தேஸ்வரர் ருஜேஸ்வரர் ஸஹஸ்ரேஸ்வரர் ஸதேஸ்வரர் லக்ஷேஸ்வரர் கோடிகேஸ்வரர் சாஷேஸ்வரர் பாநுகேஸ்வரர் ஆவர்த்திகேஸ்வரர் கஸ்தூரீஸ்வரர் மதந்தீஸ்வரர் மநஸ்வீஸ்வரர் புதேஸ்வரர் ஐராவதேஸ்வரர் தஞ்சேஸ்வரர் விடுகேஸ்வரர் அகங்காரேஸ்வரர் பலநேத்ரேஸ்வரர் ஜலிவிலீஸ்வரர் க்ருசேஸ்வரர் சர்கேஸ்வரர் பத்மாஸநேஸ்வரர் வாரேஸ்வரர் தர்கேஸ்வரர் வடமூலேஸ்வரர் த்ரசந்நேஸ்வரர் ஆதீஸ்வரர் நகுலேஸ்வரர் வம்சேஸ்வரர் பத்மநேத்ரேஸ்வரர் உபசாந்தேஸ்வரர் தநேஸ்வரர் வ்ருதகேஸ்வரர் உலூகேஸ்வரர் ருண்டேஸ்வரர் காலேஸ்வரர் கமலேஸ்

வரர் பகந்தரேஸ்வரர் பத்ரேஸ்வரர் பரணீஸ்வரர் அகிநீஸ்வரர் ரோஹீஸ்வரர் பங்கஜேஸ்வரர் அவடேஸ்வரர் நிதநேஸ்வரர் ஊர்த்தேஸ்வரர் பஸ்மேஸ்வரர் ஸமேஸ்வரர் பவேஸ்வரர் சர்வேஸ்வரர் வேதேஸ்வரர் சாஸ்வதேஸ்வரர் ஜ்வாலேஸ்வரர் சாலகேஸ்வரர் தமாலேஸ்வரர் புண்யகேஸ்வரர் உபத்யேஸ்வரர் அணிமாண்டேஸ்வரர் ஸர்வரக்தேஸ்வரர் சுனஃபங்கேஸ்வரர் மாதநேஸ்வரர் ப்ரதேஸ்வரர் சிபிவிஷ்டேஸ்வரர் அம்சேஸ்வரர் ம்ருகேஸ்வரர் கஜானனேஸ்வரர் பாணேஸ்வரர் வீரகேஸ்வரர் சண்டேஸ்வரர் முண்டேஸ்வரர் சுக்ரேஸ்வரர் பணிகேஸ்வரர் அவகூரேஸ்வரர் கந்தமாதேஸ்வரர் ஈஸ்வரர் பண்டேஸ்வரர் ப்ரஜங்கேஸ்வரர் காலகண்டேஸ்வரர் ம்ருத்யுஞ்சயேஸ்வரர் சைலேஸ்வரர் சாரசேஸ்வரர் கதீஸ்வரர் ஸ்வப்நேஸ்வரர் ஜாக்ரதீஸ்வரர் சுஷுப்தீஸ்வரர் ஹநீஸ்வரர் சிதிகண்டேஸ்வரர் சூர்யேஸ்வரர் காந்திகேசேஸ்வரர் ஸ்படிகேஸ்வரர் ஸ்வருத்ரேஸ்வரர் வரதேஸ்வரர் ந்ருணீஸ்வரர் சார்த்தூலேஸ்வரர் ரபஸ்யேஸ்வரர் புண்டரேஸ்வரர் நடனேஸ்வரர் ருத்ராக்ஷேஸ்வரர் கவீந்திரேஸ்வரர் கவசேஸ்வரர் மணீஸ்வரர் பிலிப்பிலேஸ்வரர் ஆமர்த்தேஸ்வரர் க்ருணேஸ்வரர் பிதாமஹேஸ்வரர் குடிலேஸ்வரர் ஜஷேஸ்வரர் பரதேஸ்வரர் கேஸரீஸ்வரர் சக்ஷுஸ்ரோத்ரேஸ்வரர் தண்டகேஸ்வரர் லிங்கேஸ்வரர் மணிபத்ரேஸ்வரர் கடோத்கனேஸ்வரர் புரேஸ்வரர் நடேஸ்வரர் கரமர்த்தேஸ்வரர் அப்ராதகேஸ்வரர் பணிபூதேஸ்வரர் ரத்னபூதேஸ்வரர் பிடாளகேஸ்வரர் அணீஸ்வரர் மகதீஸ்வரர் புருஷேஸ்வரர் பரம்பேஸ்வரர் கிரீஸ்வரர் ரமணீஸ்வரர் கவங்கேஸ்வரர் கரீந்திரேஸ்வரர் மாகேஸ்வரர் பாஷ்கனேஸ்வரர் மஹாநாதேஸ்வரர் மண்டபேஸ்வரர் பலீஸ்வரர் நாரிகேஸ்வரர் கூர்மசேஸ்வரர் சதுர்ப்பர்த்ரேஸ்வரர் புஷ்பாராகேஸ்வரர் கோமேதேஸ்வரர் லவேஸ்வரர் க்ரதீஸ்வரர் க்ஷபேஸ்வரர் ஸ்வரப்ரஸாதேஸ்வரர் குலேஸ்வரர் வச்சிரேஸ்வரர் க்ஷேத்ரகேஸ்வரர் கர்ணிகாரேஸ்வரர் கரவீரேஸ்வரர் புண்டரீகேஸ்வரர் வீணாபாணீஸ்வரர் தந்திரீஸ்வரர் நாககேஸ்வரர் ஹாஹாஹூவீஸ்வரர் பயோதேஸ்வரர் க்ருதேஸ்வரர் குணஸாரேஸ்வரர் ஸ்வேததானப்ரதேஸ்வரர் ப்ரதானேஸ்வரர் சிலாதேஸ்வரர் கந்தேஸ்வரர் பததேஸ்வரர் திரிலோசநேஸ்வரர் பாவாக்ஷேஸ்வரர் ஸ்தூலகர்ணேஸ்வரர் ப்ரகடேஸ்வரர் தாரகேஸ்வரர் கோசாதிதேஸ்வரர் யந்திரேஸ்வரர் மந்திரேஸ்வரர் கநகலேஸ்வரர் கர்க்கரேஸ்வரர் ப்ரதாபேஸ்வரர் ஆதாரியேஸ்வரர் குணீஸ்வரர் பகீரதேஸ்வரர் திலீபேஸ்வரர் குதீஸ்

வரர் அநாதீஸ்வரர் மந்திரவிதீஸ்வரர் கணஹரேஸ்வரர் சங்கேஸ்வரர் பிசங்கேஸ்வரர் பார்யேஸ்வரர் தாரணேஸ்வரர் ககாரேஸ்வரர் மாத்ருகேஸ்வரர் குஷ்டஹாரீஸ்வரர் ஹாரிதேஸ்வரர் அக்ஷேஸ்வரர் பகதாலப்யேஸ்வரர் லோபாமுத்திரேஸ்வரர் ஸுராபாண்டேஸ்வரர் மணிஹஸ்தீஸ்வரர் சித்ரத்வஜேஸ்வரர் ரத்னத்வஜேஸ்வரர் காமேஸ்வரர் ருத்ரணீஸ்வரர் அவந்தீஸ்வரர் கர்ப்படீஸ்வரர் த்வஜேஸ்வரர் சத்ரகேஸ்வரர் தேவகன்னியேஸ்வரர் நாககன்னியேஸ்வரர் ஸத்யேஸ்வரர் ஸுநாதேஸ்வரர் குவிரேஸ்வரர் வநேஸ்வரர் பவித்ரேஸ்வரர் வலக்ஷேஸ்வரர் மஹாக்ஷேஸ்வரர் நகேஸ்வரர் அதேஸ்வரர் விசுதீஸ்வரர் புல்லசௌலாலிகேஸ்வரர் சபாநேஸ்வரர் தாவகேஸ்வரர் ஸமாஹிநேஸ்வரர் ஸர்வகாமஸமர்த்தீஸ்வரர் சச்சிதீஸ்வரர் சுகேஸ்வரர் ப்ரணதார்த்திஹரேஸ்வரர் பஞ்சகவ்யேஸ்வரர் பத்பநாபேஸ்வர் பஞ்சவக்திரேஸ்வரர் பஞ்சாக்ஷரேஸ்வரர் சந்தேஸ்வரர் சுதேஸ்வரர் கௌசிகேஸ்வரர் ஆதர்சேஸ்வரர் காலகேஸ்வரர் காலவர்த்தேஸ்வரர் தாம்ரத்வஜே வரர் ஹம்ஸத்வஜேஸ்வரர் வ்ருஷபத்துவஜேஸ்வரர் சிம்ஹதுவஜேஸ்வரர் பிஞ்சேஸ்வரர் குமாரேஸ்வரர் நிபங்கேஸ்வரர் குலீஸ்வரர் ஈசானேஸ்வரர் விகர்த்தேஸ்வரர் சுரபீஸ்வரர் அனுகேஸ்வரர் ஸாரங்கேஸ்வரர் கட்கேஸ்வரர் பந்துகேஸ்வரர் கமேஸ்வரர் சசீஸ்வரர் மாதுரேஸ்வரர் ருத்ரகணேஸ்வரர் எனும்நாமமுள்ள லிங்கங்கள் வடதிசையிலிருக்கின்றன. ஓ தேவி! யாதொருவன் இந்தலிங்காத்யாயத்தைக் காலையில் படிக்கின்றானோ அல்லது பூஜிக்கின்றானோ அவன் கைலாயத்திலுள்ள லிங்கங்களைப் பூசித்ததினாலடையவேண்டியபயனைப்பெறுவான். மிக்க புண்ணியமாகிய இந்த லிங்காத்யாயத்தைப் படித்தவன் ருத்ரகணனாவான். ஓ தேவி! கைலாயத்திலுள்ள லிங்கங்களைக்கணக்கிடமுடியாது. ஆயினும் அவைகளுள் மிக்க சிரேஷ்டமாகிய ஆயிரம் லிங்கமூர்த்தி நாமங்கள் கூறப்பட்டன. கைலாயமானது ஸர்வலிங்கமயமென்று கூறத்தகும். ஓதேவி! இக்கைலாயமானது சிவலிங்காலயத்தின் சிகரத்திலுள்ள கலசவரிசைகளால் எண்ணிறந்த ஸூர்யசந்திரகோடிகளுதித்திருக்கின்றனபோல் காணப்படுகின்றது. இந்தக்கைலாயமானது சந்திரகலாஸ்வரூபமாகிய லிங்கத்தை அர்ச்சித்து ஸகல பாபங்களுநீங்கிய பெரியோர்களாலேயே அடையக்கூடியது; யோகத்தாலும் யாகத்தாலும் பற்பல தவங்களாலும் அடையக்கூடியதன்று. பூர்வம் இக்கைலாய சைலன் என்னைக்குறித்து வெகு தவஞ்செய்து பிரஸந்நமாகிய எம்மிடம் தன்

னிடத்திலேயே வசிக்கவேண்டுமென்ற வரத்தைப் பெற்றுக்கொண்டானென்றருளினர். ஸ்கந்தர் ஒழுகிவரே! இப்படி இறைவன் கூறியதைக்கேட்டுதேவி லிங்கசங்கங்களைப்பார்த்துப் பரமானந்தமுடையவளாய்ச் சந்திரசூடனது சரணாரவிந்தங்களில் நமஸ்கரித்துக் கூறலானள். ஹேற சம்போ! ஜகதீஸ்வரா! நாதா! கைலாஸன் என்ன தவமியற்றினன்? இங்ஙனம் திவ்ய லிங்காலயங்களுக் கிருப்பிடமாயிருக்கும் பாக்யம் பெற்றனன்ரே? இவனே தன்யன். ஸகலலோகேஸ்வரராகிய உமக்கும் திவ்யலிங்கங்களுக்கும் இருப்பிடமாயிருக்கும் இக்கைலாயசம்பந்தமாகிய வசனத்தாலும் முக்திபெறலாமன்றோ?

நாற்பத்துமூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ப்ராக்ஞாயநமஃ

## நாற்பத்து நான்காம் அத்தியாயம்.

கைலாயகிரி தவமியற்றல்.

ஈஸ்வரன் ஓ தேவீ! கைலாயந்தவஞ்செய்ததைக் கூறுகின்றேன் கேட்பாயாக. பூர்வம் யானே மிக்க அற்புதமாயிருக்கும் இக்கைலாயத்தை மனதினல் சிருட்டித்தேன். சிருஷ்டித்தமாத்திரத்திலேயே எனக்கு இவனிடம் ஓர் பிரீதி யுண்டாயிற்று. மேலும் இவன் எனதநுக்கிரகத்திற்காளாகவேண்டுமென்று பத்து யுகம் அருந்தவமியற்றினன்; பஞ்சாக்னிமத்தியிலிருந்து சதருத்ரீயத்தை ஜபித்துக்கொண்டு ஆயிரவருடமும் சருகுகளைப்புசித்துக்கொண்டு ஆயிரவருடமும் வாயுவைப்புசித்துக்கொண்டு ஆயிரம் வருடமும் நீரைப்புசித்துக்கொண்டு ஆயிரம்வருடமும் ஆகாரமின்றி ஆயிரவருடமும் எப்போதும் விபூதி பூசித் தவம்புரிந்து வந்தான். பின்னர் ஓர்யுகம் சைலேஸ்வரன் என்னும் லிங்கத்தை முப்போதும் பக்தியோடு பூஜித்து வந்தான். அன்றியும் என்னை முக்கண்ணனும் கண்டங்கறுத்தவனும் பிறையணிந்தவனும் கங்கை தரித்தவனும் ஜடைமுடியனும் விபூதி பூசியவனும் ஸர்ப்பபூணூலுடையவனும் சர்ப்பாபரணமணிந்தவனும் விபூதித்திரிபுண்டரத்தால் விளங்குவோனும் உமையோடுகூடியவனும் மந்தாரம் குந்தமுதலிய மலர்மாலையைக் கழுத்தி

லணிந்து விளங்கும் மார்புடையவனும் யானைத்தோலைத் தரித்தவனும் ரத்னத்தால் விளங்கும் ஸர்ப்பத்தையே குண்டலமாகவணிந்தவனும் மிக்க அற்புதமாகிய வைரபத்மராக மணிகளாலாகிய சங்கணந்தரிக்கின்றவனும் திவ்யவஸ்திரந் தரிக்கின்றவனும் மலர்ந்த தாமரைபோன்ற புன்னகைபுரியும் முகமுடையோனும்அஷ்டமிசந்திரன் போன்ற நகங்களையுடையோனும் மாதுளைக்கனியின் விரைபோன்ற பற்களையுடையோனும் பக்குவமாகிய கொவ்வைக்கனிபோன்ற உதடுடையோனும் நீலோற்பலம்போன்றதும் அழகாய்ச் சிறிது சிவந்துள்ள கண்களையுடையோனும் அருணைக்கங்கொண்டவனும் ஸகல நாகங்களுக்கும் சாக்ஷியாயுள்ளவனும் ஈஸ்வரனுமாய் விளங்கும் எம்மையும் எமது மடிமீது வீற்றிருக்கும் இந்திரநீலமணிபோல் சுவலிக்கின்றவளும் திவ்யமலர்களோடுகூடிய கேசபாரமுடையவளும் உதிக்கும் சுக்ரன்போன்ற முத்தாரணமணிந்த மூக்குடையோளும் கேசமகுடபிளப்பலங்காரத்தோடுகூடிய அலங்காரத்தால்விளங்கும் நெற்றியுடையவளும் மணித்வஜமஹாசாபம்போன்ற புருவங்களையுடையவளும் கஸ்தூரி திலகத்தாலழகிய நெற்றியுடையவளும் நீலோற்பலம்போன்ற கண்களையுடையவளும் வச்சிரமணிபோன்ற நிர்மலமாகிய பல்வரிசையுடையவளும் மாதுளம்பூப்போன்ற அதரமுடையவளும் தாம்பூலந்தரித்துவிளங்கும் முகமுடையவளும் பிரஸன்னையும் மந்தஹாஸமுடையவளும் ஸோமசூர்யர்போல் விளங்கும் கர்ணதாடங்கமுடையவளும் கர்ணாபரணரத்னத்தால் ஜ்வலிக்குங் கன்னமுடையவளும் கன்னமாகிய கண்ணாடியால் ஜ்வலிக்கும் திசையுடையவளும் சண்பகம் கல்ஹாரம் வகுளம் அசோகம் மல்லிகைமுதலிய மலர்மாலைகளை யுடையவளும் கூந்தலில் ரத்னசந்திர கண்டமணிந்தவளும் ரத்னபதக்கம் ரத்னஹாரம் அணிந்த கழுத்துடையவளும் நவரத்னஹாரத்தால் விளங்கும் மார்புடையவளும் மதத்தயானையின் கும்பம்போன்ற தனதடமுடையவளும் மும்மடிப்புகளோடுகூடிய வுதரமுடையவளும் கஸ்தூரி சந்தனப் பூச்சுடையவளும் ரத்னமயமாகிய ரவிக்கையணிந்தவளும் தாமரைத்தண்டுபோன்ற இரண்டு கைகளையுடையவளும் பற்பல நவரத்னங்களால் நாகபந்த சித்ரவேலைசெய்யப்பட்டு ஜ்வலித்துக்கொண்டிருக்கும் முத்துக்குச்சங்களோடுகூடிய அற்புதமாகியவங்கிரத்னபங்கஜம் மணிமாணிக்ககங்கணமுதலிய ஆபரணங்களை யணிந்தவளும் ரத்ன அங்குளீயங்களாற் பிரகாசிக்கும் விரல்களை யுடையவளும் அழகிய மணிகளோடு கூடிய திவ்யரத்ன ஒட்டியாணந்தரிப்பவளும் மாதுளம்பூவின் நிறம்

போன்ற காந்தியுள்ள வஸ்திரந் தரிக்கின்றவளும் மணிமஞ்சீரத்தால் ஜ்வலிப்பதும் செம்பஞ்சூட்டியதுமான பாதாரவிந்தமுடையயவளும் இந்திரப்பிரம்ஹ விஷ்ணுக்களையுண்டாக்கியவளும் எமது மடியாகிய மேகத்துக்கு மின்னலாயுள்ளவளுமாகிய உன்னையும்தனதுஹ்ரு தயகமலத்தில் தியானஞ்செய்துகொண்டு வெகு வருஷங்களைக்கழித்தான்; விபூதி ருத்ராக்ஷபஞ்சாக்ஷர ருத்ராத்தியாய ஜபத்தோடு தியானஞ்செய்துகொண்டு பின்னும் பற்பல காயக்கிலேசங்களோடு தவஞ்செய்தான். தேவர்களெல்லோரும் அவனது தவத்தைக்கண்டு ஆச்சரியமுற்றனர். அவன் இந்திரியங்களையடக்கி நாசிமுனையில் கண்களைச்செலுத்திப்பிராணாயாமஞ் செய்துகொண்டு பிரணவத்யானத்தோடு அஷ்டாங்கயோகத்தையு மநுட்டித்தான். தனது மனதைத் தூர்ஜடியாகிய எமக்குப் பிரீதிகரமாகிய வீடாக்கிக்கொண்டு புற்றுகளால் தேகம் மறைபட்டதையு மறியாது பத்துயுகம் தவம் புரிந்தான். சூரியன் அவனுக்கு மின் மினிப்பூச்சுபோலும் மஹாமேரு மண்ணுங்கட்டிபோலும் கற்பகவிருக்ஷம் கட்டைபோலும் சிந்தாமணிகற்பாறைத்துணுக்குபோலும் அரசர் வேலைக்காரர்போலும்ஸம்ஸாரம் துரும்புபோலுமிருந்தவேயன்றி அவை பொருளாக மதிக்கப்படவில்லை. ஆனால் தேகமொன்று மாத்திரம் சுமைபோல் தோன்றியது. ஓ தேவி ! இவ்வாறு ஒப்பிலாத்தவத்தைக் கைலாயகிரியானவனியற்றினான்.

நாற்பத்துநான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ப்ரமோதாயநம:

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்.

### கைலாஸகிரி வரப்ரதானம்.

ஈஸ்வரர் ஓதேவி ! அப்படிப்பட்ட தவநிலைமையைக்கண்டு களிப்படைந்த நீ அவனுக்கு அருளவேண்டுமென்று கூறினையன்றோ ?. உடனே யான் சரத்காலத்து மேகம்போன்றதும் ரத்நஸிம்ஹாசநத்தோடுகூடியதும் ரத்னகம்பளத்தால் அலங்கரிக்கப்பட்டதும் முத்துக்கடிவாளத்தால் விளங்கும் நாசியுடையதும் அழகிய கிரீடத்தோடுகூடிய கொம்புகளையுடையதும் காதில் தொங்கும் சாமரமுடையதும் உதிக்கும் சூரியன்போன்ற நேத்ரகாந்தியுடையதும்

அழகியமணிகளா லலங்கரிக்கப்பட்ட கழுத்துடையதுமாகிய திவ்ய வ்ருஷபத்தின்மீது நாமிருவரும் ஆரூடர்களாய் ஸகலகணக்கூட்டங்களால் சேவிக்கப்பட்டவராய் நந்தி கைகொடுத்துபசரிக்க முனிவரர்கள் தோத்திரஞ்செய்ய துகண்டர் ரத்னக்குடைபிடிக்க சோமநந்தி துகண்டு எனுமிருவரும் ரத்னசாமரம் வீச சண்டி விசிறியாலுபசரிக்க பாணன் ஆயிரங்கரங்களிலும் வில்லேந்திந்திவர அழகிய கலாபத்தைத்தரித்துக்கொண்டு சண்டிநடனஞ்செய்ய தண்டு டிண்டிமத்தை முழக்க ஸாநந்தர் சங்கம் வாசிக்க ஏரம்பரும் சண்முகரும் காகளமுழக்க பைரவர் ரத்னபாதுகையேந்திவர நாரதர் மதுரமாய் வீணையை மீட்டிக்கொண்டு ஸ்தோத்திரஞ்செய்ய ஜல்லரிமுதலிய வாத்தியங்களைக் கேசரியானவன் வாசிக்க ஸுகேசன் கொம்பு வாத்தியம் வாசிக்க ஸுபத்திரன் ஆனகவாத்திய முழக்க விஷ்ணு பிரம்ஹா இந்திராதிகள் ஸ்தோத்திரஞ்செய்ய மிக்க கருணையோடு சென்று தவஞ் செய்துகொண்டிருக்கும் அக் கைலாஸனெதிரில் பிரஸன்னரானோமன்றோ? கைலாஸகிரியை யாம் கரத்தால் தொட்டு ஓ கைலாஸா! உனது தவத்தால் திருப்தியடைந்தேம். நீ வேண்டியவரங்களைப் பெற்றுக்கொள்வாயாக வென்று யாமருளியதும் அதனைக்கேட்டு எமது கரத்தால் ஸ்பரிசிக்கப் பெற்றுப் பரமானந்தமடைந்த கைலாஸன் எழுந்து நமஸ்கரித்தான்; பின்பு அஞ்சலிபந்தஞ்செய்து கொண்டு கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பெருகநின்று தன்னை மறந்தான்; கைகளைக்கொட்டிக்கொண்டு தழுதழுத்த சொல்லுடையவனாய் மயிர்ச்சிலிர்ப்புடையவனாய்க் கூத்தாடி "பவசிவபகவந்பிநாகபாணே ஸுரவர கின்னர மௌளி சோபிதாங்க்ரே நிரவதிகருணபயோதி ராஜத் சசிதாமன் ப்ரணதோஸ்மிதேபதாப்ஜம்" ஓ இறைவனே! சந்திரனாகிய கண்ணால் நோக்கி அடியேனைக் காத்தருளுங்கள். எனது சிரசில் தேவரீர் வசிக்கவேண்டும், ஓ இறைவனே! அப்படிப்பட்ட பாக்கியத்தையும் கணேந்திரத்துவத்தையும் அடியேனுக்கருளுங்களென்று எம்மைப் பிரார்த்தித்தான். ஓ மஹேஸ்வரி! அவனுக்கு எவருக்குங்கிடைக்காத பாக்கியத்தோடுகூடிய காணபத்தியந் தந்தேம். கிரீந்திர சக்ரவர்த்தித்துவம்கொடுக்க நினைத்தேம். உடனே ஹிமவான் நிஷதன் விந்தயன் மந்தரன் மேருநீலன் மஹேந்திரன் ருஷபன் சித்திரகூடன் அங்கதன் ரைவதன் பாரியாத்ரன்கேஸரி ஐராவதன் பத்ரன் மைநாகன் கந்தமாதனன் ஹிராவான் ஹஸ்திசைலன் மலயன் தர்த்தரன் சஹ்யன் கோவர்த்தனன் உதயன் அஸ்தமயன் ஆகிய இக்கிரீந்தி

நர்களெல்லோரும் யாம் நினைத்தமாத்திரத்தில் எதிரில்வந்து நமஸ்கரித்து அவர்கள் ஓ பகவானே! பூதநாதனே! சர்ப்பஹாரனே! தேவரீர் எங்களிடம் செய்யவேண்டிய ஆக்ஞாபனத்தை அருள்புரியவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்பொழுது யான் ஓ கிரீந்திரரே! கைலாஸனுக்கு யாம் எமக்கு வாசஸ்தானமாயிருக்குந்தன்மையையும் கிரிச்சக்கிரவர்த்தித்துவத்தையு மருளினேம். நீங்கள் அவனுக்கு திவ்வியதீர்த்தங்களால் விதிப்படி சக்கிரவர்த்தித்வ அபிஷேகஞ்செய்து வணங்குங்களென்றுக்கியாபித்தோம். அவ்வாறே ஸகல கிரி சிரேஷ்டர்களும் தேவர்களும் கைலாஸனுக்குச் சக்கிரவர்த்தித்வ அபிஷேகஞ்செய்து ஓ கைலாஸ கிரீந்திரரே! நீரே தன்னியர். ஜகதீஸ்வரனதுஅபார கருணைக்கு நீரே பாத்திரரானீர். உமது புண்ணியபாக்கியத்தை என்னவென்று சொல்வோமென்று பிரார்த்திக்க கைலாஸனும் எல்லாம் சிவனது அருளேயென்றுகூறி அவ்விறைவனை நினைந்து பூரித்து விருத்தியடைந்து ஆனந்தபரவசனாய் மனமுருகி, ஈஸ்வரா! தேவதேவா! தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். தேவரீர் எனது சிகரங்களில் எண்ணிறந்ததிவ்ய லிங்கஸ்வரூபராயு மிருந்தருளுங்கள். ஓ இறைவனே! வேதங்களும் தேவரீரை யன்றோநமோந்தமாகவுடைய எண்ணிறந்தவாக்யங்களால் வணங்கி சர்வாத்மத்தன்மையை நிரூபிக்கின்றது? அப்படிப்பட்ட பராத்பரனாகிய தேவரீர் என்னிடம் அபாரகருணையுடையவரா யிருக்கும் பாக்கியத்தைப்பெற்றவனாகிய எனது புண்ணியமே புண்யம். எனக்கருளுங்களென்று பிரார்த்தித்து நிற்கும் கைலாயனைப்பார்த்து ஓ கிரீந்திரா! உனது சிகரங்களில் அற்புதமாகியமாளிகை மண்டப கோபுரங்களோடு கூடிய திவ்வியாலயத்தில்எண்ணிறந்த சிவலிங்க வுருவமாயும் ஸ்வரூபமாயும் வசித்தருள்கின்றோமென் றருளினோம்.

நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

மோதகப்ரியாயநம:

## நாற்பத்தாறும் அத்தியாயம்.



### கைலாஸ கர்வபங்கம்.

ஈஸ்வரன். ஓ தேவி! இவ்வாறு கைலாஸகிரியானவன் எம்மாலனுக்கிரகிக்கப்பெற்ற சகலகிரிராஜர்களுக்கும் கிடைக்காத மஹா பாக்கியத்தைப்பெற்று மகிழ்ந்திருந்தான். ஆனால்அவன் "யானேகிரா

ற்றபாக்கியம் பெற்றிருக்கின்றேன், பார்வதியாருக்குயானே மிக்க பிரிதிஹேதுவாயுள்ளவன், ஸகலலிங்கங்களுக்கு மிருப்பிடமாயிருக்கின்றேன், என்மீதே அற்புதமாகியரத்னமாளிகையில் ஈஸ்வரன் வீற்றிருக்கின்றார். மேரு பாரியாத்ரன் மைநாகன் மந்தரன் விந்தயன் நிடதன் ஹிமவான் நீலன் ஹஸ்தன் உதயன் பத்ரன் சதசிருங்கன் ரைவதன் வாமன் ஸ்ரீகன் குமுதன் கந்தமாதனன் மஹேந்திரன் மலயன் சஹ்யன் தர்த்தரன் சித்ரகூடன் ஆகிய இந்த கிரிகளெல்லாம் எனக்கு எவ்வளவு" என்று மிக்க கர்வங்கொண்டு சற்போன்ற மனமுடையவனானன். ஓ தேவி! பூர்வம் விஷ்ணு பிரம்ஹா ருத்திரன் இந்திரன் முதலியதேவர்களையும் தக்ஷனையும் வீரபத்ரனால் சிக்ஷித்திருக்கின்றேம். ஓ தேவி! அவர்கள் சிவ நிந்தனை செய்தமையால் பின்னும் யுகந்தோறும் அசுரர்களால் ஹிம்சிக்கப்பட்டவர்களாய் துக்கசமுத்திரத்தில் மூழ்கிக் கிலேசப்படும்படிச் செய்தேம். எம்மிடம் பக்தியில்லாதவர்களை நரகத்திலும் வாட்டச்செய்கின்றேம். சுவர்க்கத்திலும் அசுரர்களால் தொந்தரைப் படும்படிச்செய்கின்றேம். ஓ தேவி! எம்மிடத்திலும் விபூதி ருத்திராக்ஷத்தினிடத்திலும் சைவர்களிடமும் சிவலிங்கத்திலும் சிவக்ஷேத்திரத்திலும் வேதவழிப்பட்ட திரிபுண்டரத்திலும் எமதுபக்தனிடத்திலும் எவன் தூஷித்து அபராதஞ்செய்வானே அவன் தேவனாயினும் அரசனாயினும் யதியாயினும் மற்றெவனாயினும் மகா துக்கங்களில் மூழ்கும்படிச்செய்கின்றேம். வேதாந்தம் குரு அவிமுக்தம் பஞ்சாக்ஷரம் ருத்திராத்தியாயம் எண்ணிறந்த சாகைகளில் கேட்கப்பட்ட எமது மந்திரம் இவைகளைத் தூஷிக்கின்றானே அவனினும் கோரமாகிய யாதனைகளையனுபவிக்கவேண்டிய பாபிவேறுண்டோ? ஓ தேவி! மஹா ருத்திரனொருவனே பூஜ்யன் என்றல்லவோ சுருதிகூறுகின்றது? ருத்திரனும் விஸ்வாதிகனுமாகிய என்னை ஏனையோருக்குநிகராய்க்கூறுவோன் மஹாபாபியேயன்றோ? ஏனைய எல்லாவற்றையும்விடுத்து பார்வதிபதியாகிய எம்மையே தியானிக்க வேண்டும். எமக்குச்சமானனாவது மேலானவனாவது காணப்படுவதுமில்லை. கேட்கப்படுவதுமில்லை. அணுவுக்கும் அணுவாயும் மஹத்துக்கும் மஹத்தாயும் இந்திரமித்திர முதலியவாக்கியங்களால் ஸகலத்துக்கும் அந்தர்யாமி என்றுகூறப்படுகின்றவனும் ஆகிய எம்மையே ஸகலவேதங்களும் வேதாந்தங்களும் கூறுகின்றன. துரியன் யாமே. சிவாத்வைதனும் சத்யக் ஞானனந்தனும்யாமே. எம்மை மோஹமடைந்த மனிதர் வேதத்திற்கூறப்பட்ட வாக்கியங்களால் வேறுவித

மாய்க்கொள்ளுகின்றனர். அப்படிப்பட்ட துற்புத்திகளை நரகத்திலும் பாபயோனிகளிலும் வீழ்த்துகின்றேம். ஸகலஜகத்காரணியாகிய நீ எனது பராசத்தியேயன்றோ? உனது நோக்கத்தாலேயே ஸகல ஜகங்களுந்தோன்றுகின்றன. எமதுலிங்கத்தைப்பூஜிப்பதில் கலியில் பாபிகளுக்கு புத்தியுதிக்காது. ஓதேவி! அவர்கள் துக்கஸமுத்திரத்தில் மூழ்கித்தவிப்பார். எம்மிடம் பக்தியற்றபிராமணர் ஸங்கரஜாதியாய்ப்பிறந்து பலமுறை எப்போதும் மஹாதுக்கங்களையநுபவிப்பார். மஹேசார்ச்சனை யற்றவர்களும் சதருத்திர ஜபஞ்செய்யாதவர்களும் பஞ்சபிரம்ஹ மந்திரம் லிங்கசூக்தம் பஞ்சாக்ஷரம் இவைகளைச் ஜபிக்காதவர்களும் சிவத்யானஞ்செய்யாதவர்களும் விபூதி பூசாதவர்களும் திரிபுண்டரமிடாதவர்களும் ருத்ராக்ஷந்தரிக்காதவர்களும் சிவலிங்க தரிசனஞ் செய்யாதவர்களும் பிரதோஷார்ச்சனைசெய்யாதவர்களும் பூதார்ச்சனையற்றவர்களும் சோமவார பூசையில்லாதவர்களும் அஷ்டமியிலர்ச்சிக்காதவர்களும் எமதுக்ஷேத்திரம் விடுத்தவர்களும் ஏனையக்ஷேத்திரத்தி லிருக்கின்றவர்களும் எமது நாமத்தை யுச்சரிக்காதவர்களும் எமக்கு நிவேதனஞ்செய்யாதவர்களும் எமது லிங்கத்தோடு விஷ்ணுவாதிகளைச் சமமாய்ப்பூசிக்கின்றவர்களும் ஆகிய அசைவ துரான்மாக்களாகிய பாவிகளுக்குத் துக்க விபத்துகளும் கோரமாகிய நரகயாதனையும் மிக அபாரமாயுள்ளது. பில்வபத்திரமற்றவர்களும் எம்மை விஷ்ணுவாதியரோடு ஸமமாய்ப்பார்க்கின்றவர்களுமாகியபாவிகளைவிட்டு ஆபத்துகள் ஒருபோதும் நீங்கா. எனது பக்தர்களை ஏனையபக்தர்களோடு சமமாய்ப்பார்க்கின்றவர்கள் பேராபத்துகளில் மூழ்கும் பாபிகளே. ஓ தேவி! தர்மமார்க்கத்தைவிடுத்து இப்படிப்பட்ட மஹாபாதகங்களைச்செய்த சுரர்களும் மனிதர்களும் கழுதையாய்ப்பிறந்திருக்கின்றனர். எவர் மிக்கபடித்தவர்களும் பிரஸித்திபெற்றவர்களுமாயிருந்தும் அசைவமூடமதிகளாய்மண்ணினால் ஊர்த்துவ புண்டரந்தரித்துக்கொள்ளுகின்றனரோ அவர்களே எமனுக்கு அதிதிகளாய் நரகஞ்செல்லும் பாபிகள். ஹேதேவி! எவருக்கு விபூதிருத்திராக்ஷதாரணத்திலும் சிவார்ச்சனையிலும் லச்சையிருக்கின்றதோ அவர்களே நரகில் வீழ்கின்றவர்கள். எவர்ஸகல சுருதிகளாலுங் கூறப்பட்ட திவ்ய சிவலிங்கார்ச்சனத்தைவிடுத்து இதர தேவபூஜை செய்கின்றனரோ அவர்கள்பலகோடிகாலம் நரகத்தை யனுபவித்துக் கழுதைகளாய்ப் பிறக்கின்றனர். மண்ணை நெற்றியிலுடையோர்களும் கொளுத்திய சக்ரமுத்ரை தரிக்கின்றவர்களுமாகிய விப்ரர்கள் மஹா ஆசாரவான்கள்

போல் காணப்படினும் அவர்கள் கர்மத்திற்கும் தக்கவரல்லர்; சண்டாளரே யாவர். எவர் எம்மை இதர தேவரோடு சமம்என்று ஓர் கணப்போதாவது சிந்திக்கின்றனரோ எவர் எமது லிங்கத்தை ஏனையலிங்கங்களோடு பூஜிக்கின்றனரோ அவர்களெல்லோரும் லிங்கத்தால் கொளுத்தப்பட்ட அங்கமுடையோர்களாய் பன்றியோனியிற் பிறக்கின்றனர். ஆதலால் வைதிகர்கள் எமது தியானத்தையும் அர்ச்சனையையும் விடக்கூடாது. எமது லிங்கார்ச்சகர்களுக்கே ஆத்மக்யானங்கிட்டும். எவர் விபூதிதரிக்கின்றனரோ எவர் ருத்ர அத்யாயப்பொருளை யறிகின்றனரோ எவர் பஞ்சாக்ஷரஞ்செபிக்கின்றனரோ எவர் ருத்ராக்ஷம் தரிக்கின்றனரோ எவர் எமது க்ஷேத்திரத்தில் பிரியமுடையவரோ அவர்கள் எமது மிகுந்தகருணைக்காளாய்ப் பேரானந்தமடைவார். ஓ தேவி! இப்படிப்பட்ட எமது தர்மத்தினறிவையிழந்து பிரமிக்கின்றவர்களைப் பலகாலம் வருத்துகின்றேனன்றோ? ஆதலின் கர்வித்த தேவர்களை யடக்குதலின்பொருட்டு விஸ்ரவசின் புதல்வனாகிய ராவணனை யுண்டாக்கினோம். விஷ்ணுவும் பிருகுசாபத்தினால் மாநுடராய்ப்பிறப்பார். அவன் ஸகலமுனிவர்களையுந் தொந்தரைசெய்து மிக்க கர்வத்தோடு நமது கைலையைக் கைகளால் அசைத்துப் பெயர்க்க வாரம்பித்தான். பற்பல லிங்கங்களுக்கிருப்பிடமாகிய கைலையைப் பெயர்க்கமுயன்றதும் மஹாமன்யு(பெருங்கோபமுடையோன்)ஆகிய யாம் சிறிதழுத்தினோம். எமது பெருவிரலின் முனையாலழுத்தப்பட்ட கைலாஸகிரியினடியில் அவனது கைகளகப்பட்டுக்கொண்டு நசிக்கவே அவன் மிகுந்த கிலேசமடைந்தவனாய் ஸாமவேதத்தை பத்துமுகங்களாலுமுச்சரித்துக்கொண்டு ஆயிரம் வருடமெம்மைத் தோத்திரம் புரிந்தான். அதனால் அவனிடம் திருப்தியடைந்து அத்துக்கத்தினின்றும் விடுவித்தேம். அவன் எம்மைத்தோத்திரஞ்செய்து வணங்கிக் கர்வமற்றவனாய்ச் சென்றான். பின்னர் அவன் இத்திசையையும்பார்ப்பதில்லை. அவ்விராவணன் சிவபூஜை செய்வதில் சிரத்தையுடையவனாய் ஸகலதேவர்களையுஞ்செயித்துச் செயமுடையோனாயிருந்துபின்னர் சிவகணனாயினன். ஓதேவி! அவனைப்போல் தவஞ்செய்தவர்யாவருமில்லை. தனது சரீரத்தை வெட்டி எமக்கு ஹோமஞ்செய்தான். தனது தலைகளைத் தாமரை மலர்மாலைபோற்செய்து சிவலிங்கத்துக்கணிந்து பூஜித்தான். இங்ஙனமாகிய ராவணன் அசைத்ததனால் கைலாயனும் கர்வம் நீங்க மிக்க வணக்கமுடையோனா யிருந்தான்.

நாற்பத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

உ

சாந்திமதேநம:

# நாற்பத்தேழாம் அத்தியாயம்.

## வேதரஹஸ்ய கதனம்.

ஸ்கந்தர்:-இவ்வாறு கூறிய இறைவனைநோக்கித் தேவி! தேவ தேவா! மஹாதேவா! கருணைக்கடலே! சந்திரசேகரா! யான் ஓர் விண்ணப்பஞ்செய்துகொள்ளுகின்றேன். அதற்குத் தேவரீர் அருள் செய்யவேண்டும். ஸகல வேதங்களின் ரகஸ்யார்த்தம் யாது? அதனை யுரைத்தருளுங்களென்று பிரார்த்தித்தனள். அதனைக்கேட்டதும் ஈஸ்வரன் உடனே அங்குள்ள திவ்ய ரத்னமஞ்சத்தின்மீது வீற்றிருப் பாராய் சாளரவழியாய் லோகசேஷ்டையைச்சிறிது நோக்கலாயினர். சுவர்க்கத்திலுள்ள தேவர்களது நிலைமையையும், பூவுலகில் ஒருவரையொருவர் ஜயிக்கவேண்டுமென்று விரும்புகின்றவர்களாய் யுத்தசந்நாகராயுள்ள அரசர்களின் நிலைமையையும், தவஞ்செய்து கொண்டிருக்கும் ஆச்சிரமிகளின் தர்மத்தையும், புண்ணியகர்மஞ் செய்து போகவிருப்பமுடையோர்கள் சுவர்க்கஞ் செல்வதையும், அவர் போகமுடிந்தபின் கீழ்வீழ்ந்து ஜன்மங்களெடுத்தலையும்,பாபிகளது நரகயாதனையையும்,ப்ரஜைகளின்போக்குவருத்தையும், பிறத்தல் வளருதல் நசித்தல் இவைகளையும் தமது திருக்கண்களாற் சற்றுபார்த்தனர். இவ்வாறு மாளிகையில் தேவியோடுகூட சர்வபூதங்களுக்கும் நாதனாகியும் காலவரையற்றவனுமாகிய மஹாதேவன் சற்றுல்லாஸமாயிருந்தனர். காலவரைக்குள்ளடங்கினவராகிய பிரம்ஹவிஷ்ணு ருத்திரர் இந்திரன்முதலியதேவர் முனிவர் கிரகங்கள் ருஷிகள் சாத்தியர் பிதுரர் ஆகிய இவர்களையும் தோன்றினவும் தோன்றுவனவுமாகியபொருள்களையும் அச் சங்கரரேயுண்டாக்கி நிலைபெறுவித்து அழிக்கின்றனர். அவ்விறைவனே மாயையால்மோஹித்தவராகிய பிரம விஷ்ணு ருத்திரர்களது சரீரத்திற்பிரவேசித்து ஸகலசராசரங்களின் ஸ்ருஷ்டி திதிலயங்களை நடாத்துகின்றனர். அவனே மங்கை அன்னபாநமுதலியவைகளைப்புசிப்பதால் அவ்வத்தேகங்களினின்று மிக்கப்ரீதியடைகின்றான். அவ்விறைவனே ஜடங்களுள் ஜடமல்லாதவன். அவன் சாக்கிரமுதலிய அவஸ்தைகளில் யாதும் அவஸ்தையற்றிருக்கிறான். அம் மஹேஸ்வரனொருவனே ஸகலபூதங்களினு முறங்குகின்றான். அவனே ஆனந்தமூர்த்தியாயுள்ளவன். அவனது ஆனந்தலேசத்தினாலேயே ஜகத்தின் சுகங்காணப்

படுகின்றது. இச்சடமான பிரபஞ்சமெல்லாம் அசத்தியமே. அவ்விறைவனது சத்தியத்தாலேயே சத்தியம்போற்காணப்படுகின்றது. அவன் சேதனர்களுக்குச் சேதனன். இச்சகங்களில் அச்சங்கரனெப்பொழுதும் அசங்கனுய்க்காணப்படுகின்றான். சம நிலைமையுடையோனுயினும் விஸ்வேசனுயிருக்கின்றான். சகலத்திற்கும் உள்ளிருப்பவனுகியசிவனே புத்தியைப்போதிப்பவனும் மனதையெண்ணச்செய்கின்றவனும் அப்பிராணனுயும் பிராணரூபனுயும் ஆகாசத்திலுமேற்பட்டவனுயும் பிரம்ஹஸ்வரூபராயுமிருக்கின்றான். உண்மையாய்ப்பார்க்கின் அவனுக்குக்காரணமும் காரியமும் கிரியையுமில்லை. தேகம் ஜீர்ணமாயினும் அவன் எப்பொழுதும் ஜீர்ணமில்லாதிருக்கின்றான். விகாரமாகிய ஜகத்தில் நிர்விகாரமாயிருக்கின்றான். நசிக்காதவனும் கிலேசமுறுதவனுமாகிய அவன் கேவலம் சிவனே. அவனே பிராணிகளின் ஹ்ருதயகுகையிலுள்ளவனும் இச்சையற்றவனுமாயிருக்கின்றான். அவன் எப்பொழுதும் பேதமற்றவன். காரணங்களுக்குங் காரணன். தமஸுக்கு அப்பாலுள்ளவனுகிய மஹான். எவனிடமிருந்து பிரம்ஹ இந்திர விஷ்ணு ருத்ரர்களும் ஸகலதேவர்களு முண்டானர்களோ அவ்விறைவனுகிய மகாதேவனிலும் அதிகன் யாருமில்லை. பற்பலசாகைகளோடுகூடிய வேதங்கள் எவனது மூச்சுக்காற்றோ, எவனது ஞானத்தினல் எல்லோருக்குமுத்தியோ, அவனே அஸாரமாகிய இச்சம்சாரத்தைத் தாண்டுவிக்கின்றான். அவனது ரஸத்தினலேயே இச்சகம்ரஸமாயிருக்கின்றது. அவனே சோதிகளுக்கெல்லாம் ஜோதி. அவனே சக்ஷுஸஸு. அவனே தவவுருவன். அவனே கேவலானந்தஸ்வரூபனுகியபூமான். அவன் கேவலம்போதவடிவனுகிய சிவன். அவனேபெரிதற்றவன். அவனே அணுவல்லாதவனும் ருத்திரனும் ஸகலரதுதுக்கத்தையுமொழிக்கின்றவனுமாம். அவனே இந்திரியமற்றவனும் இந்திரியங்களுக்குக் கதியாயுள்ளவனும் அவனே சாஸ்தாவும் மஹேஸ்வரனும் நிராபாஸனும் நிராசங்கனும் எல்லாவற்றையும் விளங்கச்செய்கின்றவனுமாயுள்ளவன். அந்த மஹாதேவனுகிய பிரமத்தினிடமே ஸகல ஜகமும் மாயையாற் காணப்படுகின்றது. அவனது அருளால் அவனையறிந்தால் எல்லாம் சிவமாகவே தோன்றுகின்றது. அவனே சோடசான்மாவாகிய புருஷன். அவனிலும் பேதம் இங்குயாதுமில்லை. அவிகாரனுகிய அவனிடம இஃதெல்லாம் விகாரப்பட்டதேயன்றோ? அவனது தவத்தாலும் அவனைத்தியானித்தலாலும் லிங்கார்ச்சனையாலும் ஸகல சோகங்களும்

நீங்குமென்பதிற் சிறிதுமையமில்லை. விஸ்வாகாரமாயிருக்கும் அந்த மஹா தேவனாகிய ஆன்மாவை ஏகத்துவமாய்க் காண்போனுக்கு மனோமோகங்களெல்லாந் தொலையும். அக்னிவாயு ஜலம் பிருத்வி ஆகிய இவைகளாய் அம்மஹேஸ்வரனிருக்கின்றான். இவைகள் முறையோடும் முறைபிறழ்ந்தும் அம்மஹேஸ்வரனிடம் தோன்றி மறைகின்றன. சராசரமெல்லாம் ஈசனிடமே யிருக்கின்றது. அவனிடமே எல்லாம் பிரவர்த்திக்கின்றது. எவன் பரமேஸ்வர பிரஸாதத்தாலும் குருவின் பிரஸாதத்தாலும் வேதவேதாந்தங்களால் சிரத்தையோடு இவ்வாறறிகின்றானோ அவனே சர்வக்ஞன். அவனே சாம்பவன். அவனே முநிவன். அவனே சிவன். அவனே சிவக்கியான முணர்ந்த பெரியோன். ஓமுநிவர்களே! அப்பரம்பொருளினது மஹிமையை என்னவென்று கூறலாகும் என்றுகூறி, ஸ்கந்தர் ஓ பரம்பொருளே! நீயே தேகமற்றதும் இந்திரியமற்றதும் சப்தஸ்பரிசரூபரஸகந்தாதி சகலத்தையு மறிகின்றதுமாயுள்ளாய். உன்னை யாது மறிந்ததில்லை. திருஷ்டிக்கும் த்ருஷ்டாவாகிய வுன்னை யாது மறிகின்றதில்லை. கிழவனும் பாலனும் யுவாவும் நீயே! பெண்ணும் நீயே! அலியும் நீயே! நிற்கின்றதும் போகின்றதும், தோன்றியதும் தோன்றுவதுமாகிய சகம் நீயே. தேகங்களோடுகூடி நீயே விளங்குகின்றாய். ஆதலின் உன்னை நமஸ்கரிக்கின்றேன் என்றனர்.

நாற்பத்தேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
த்ருதிமதேநம:

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்.

### லிங்கோற்பவரகஸ்ய கதனம்.

சூதர்:- ஓமுநிவர்காள்! இவ்வாறு கூறிப்பின்னுங் கூறுவாரானார். ஸகந்தர்:-ஓ முநிவரே நிரூபனாயினும் (உருவமற்றவனாயினும்) உருவமுள்ளவன்போலிருக்கும் இங்ஙனமாகிய மஹாதேவனை தேவி மீண்டும் நமஸ்கரித்து அஞ்சலிசெய்து நின்று ஓ ஸ்வாமி! கருணைக் கடலே! கலையணிந்தசடையனே! அநாதாரனே! ஜகங்களுக்காதாரனே! நாதனே! இக்கைலாய சிகரங்களில் இவ்வளவு லிங்கங்கள் காணப்படுகின்றனவே. இந்த லிங்கங்களினுற்பத்தியைக்கேட்க மிக்க ஆவலுற்றிருக்கிறேன். அதனைத் தேவரீர் கருணைகூர்ந்துரைக்

கவேண்டும் என்று பிரார்த்தித்தனள். அதனைக்கேட்டு மஹேசன் மிக்க திருப்தியடைந்தவராய்த் தேவியைநோக்கிக் கூறியதாவது:-ஓ தேவி! கேட்பாயாக. இது மிக்க ரகசியமாயுள்ளது. என்னிடம் பக்தியுள்ளவனுக்கே கூறவேண்டியது. மற்றவற்குரைத்தால் பதிதனுவான். எவன்விபூதிபூசுவதிலும் திரிபுண்டரமணிவதிலும் ஆவலுள்ளவனோ, எவன் ருத்திராக்ஷங்களைக் கைகளில் அலங்கரித்துக்கொள்ளுகின்றனோ, எவன்ருத்திரஜபத்தில்பிரீதியுடையவனோ, எவன் எனது லிங்கத்தை யர்ச்சிப்பதில் ஆவலுடையவனோ, எவன் பஸ்மத்தில் படுப்பவனோ, எவன் பஞ்சாக்ஷரஜபத்தில் ஆதரவுடையவனோ, எவன் பில்வார்ச்சனையில் பிரீதியுள்ளவனோ, எவன் எனதுபக்தியமுத சரித்திரத்தை சிரவணஞ்செய்வதில் சிரத்தையுடையவனோ, எவன்எனது நிவேதனசேஷத்தைத்தவிர வேறு புசியானோ, எவன் என்னைத்தவிர மற்றவரைத்தியானியானோ, எவன் எனது நாமம் தவிர வேறு நாமத்தை யுச்சரியானோ, எவன் எனதுக்ஷேத்திரம்தவிர வேறு க்ஷேத்திரத்தில் வஸியானோ, எவன் எனது நாமங்களையே உச்சரிக்கின்றனோ, எவன் எனது க்ஷேத்திரங்களிலேயே வசிக்கின்றனோ, எவன் எனதுபக்தர்களிடமேபிரீதியுள்ளவனோ, எவன்எனதுபக்தர்களையே தனத்தால்போஷிக்கின்றனோ, எவன்யமமுதலியநியமமுடையவனும் எப்போதுஞ் சிவபூஜை செய்கின்றனோ, எவன் வேதாந்தஸார முணர்ந்தவனோ அவனிடமே இந்தரகஸ்யத்தைக்கூற வேண்டும். மற்றவனிடம் கூறவே கூடாது. கதாஸாரத்தை வித்யாவரனிடம் கொடுத்தால் முக்தியடையலாம். நல்ல பூமியில் ஆலம் விதையை விதைத்தால் அது எப்படி விருத்தியடையுமோ அப்படியே இஃதும். அல்ப ஆராய்ச்சியுடைய மூடனுக்கு இந்தரகஸ்யத்தைக் கொடுத்தால் வீணாய்ப்போகின்றமையால்அதுமிக்கபாபத்துக்கிடமாகும். நல்லவாசனைபொருந்திய சந்தனத்தைக்கழுதைக்குப் பூசினால் அது தெருவிலுள்ளசாம்பல் சாணமுதலிய புழுதிகளில் கிடந்துருண்டு வீணாக்கிக் கொள்வது போலவே அசாம்பவனிடங்கொடுப்பதுமாம். ஓதேவி! ஜலத்தில் விடுத்த தைலமானது எப்படிவிஸ்தாரமடைகின்றதோ அப்படியே சாம்பவனுக்குக்கொடுப்பது விஸ்தாரமாகும். ஆதலின் ஓ தேவி! அதுஸாதுக்களிடமேகூறவேண்டியது. அதாவது இக்கைலாஸமானதுஎனதுமனதினாலேயேசிருஷ்டிக்கப்பட்டது. இதுகோடியோசனை விஸ்தாரமுடையதாய் பற்பலரத்னமாளிகை கோபுரம் தடாகம் முதலியவைகளோடு கூடியதாயினும் சிவலிங்கமிருக்கப்பெறாதாயின் இவ்வளவுஞ் சூன்யமேயாமன்றோ? ஓதேவி! எந்தக்கிராமத்திலாவது

நகரத்திலாவது சிவலிங்க மில்லையோ அது அமங்கலமேயன்றோ? சிவலிங்க மெங் கிருக்கின்றதோ அவ்விடமே மங்களமுள்ளது. ஓ சிவே! எனது லிங்கமிராதவிடம் ஸ்மசானஸிகரேயாம். எவ்விடத்தி லாவது உன்னதமாகிய ஆலயத்தோடுகூடிய லிங்க மிருக்குமாயின் அவ்விடமே அவிமுக்தக்ஷேத்திரமாம். கிராமமாயினும் அரண்யமாயி னும் எங்கு சிவலிங்க மிருக்கின்றதோ அஃதே தன்யம். எங்கு லிங்கார்ச்சனையில் பிரியமுடையவர்களும் விபூதிருத்திராக்ஷந்தரிப்ப வர்களுமாகிய சாம்பவப் பிராமணரிருக்கின்றனரோ, எங்குருத்திர ஜபத்தில் பிரியமுடையவ ரிருக்கின்றனரோ, எங்கு பஞ்சாக்ஷரஜபஞ் செய்கின்றவரிருக்கின்றனரோ, எங்குபில்வவனமுளதோ, ஓதேவி! அஃதேபரமபுண்யஸ்தலமாம். அதனைத் தரிசித்தாலும் ஸகலபாதகங் களுநீங்குகின்றன. விபூதியற்றநெற்றியைச்சுடுக. ஆலயமற்றகிராமத் தைச்சுடுக. சிவார்ச்சனையியற்றாத ஜன்மத்தைச்சுடுக. சிவசம்பந்தமில் லாத வித்தையையுஞ்சுடுக. ஓபத்ரே! யான்வியாக்ரசர்மந்தரித்தவ னும்விபூதித்திரிபுண்டரமணிந்து விளங்கும் நெற்றியுடையோனுய்கங் காசந்திரகலைகளால்விளங்குஞ்சடையுடையோனுய் மூக்கின்முனையில் செலுத்திய நேத்திர முடையோனுய் என்னில் ஆன்மாவையே தியா னித்துக்கொண்டிருப்பவனுய் நூறு வருடம் சமாதி நிஷ்டைபெற் றிருந்தேன். ஓதேவி! அதனைச்சொல்லமுடியுமோ? ஸகலத்தையுங்கடந் ததும் சாந்தமும்வியாபகமும் சநாதனமும் அஜமும் அவ்யயமுங்கிரி யையற்றதும் மனோவாக்குகளாலும் வேதங்களாலும் காணவொண் ணுததும் கோசங்கடந்ததும் தேசகாலமற்றதும் அஸங்கமும் அஜட முமாகியதேஜோராசியானதும் தேஜஸற்றதும் குணங்கடந்ததும் வ்யாப்பிய வியாபகத் தன்மையில்லாததும் ஆனந்தமும் போக்ய போகாதியற்றதும்சோகமற்றதும்ரஜஸற்றதும்சூக்ஷ்மமும்ஸத்யகாம மும் ஸத்யசங்கல்பமும் கற்பனையற்றுள்ளதும் சேஷ்டையற்றதுமா கியகேவல ப்ரம்மானந்தமாத்திரமாய்யானிருந்தேன். அப்படியானி ருக்கும்போது எனதுதேகத்தினின்றும் புளகமுண்டாய் ஆனந்தஜல த்திவலைகளுண்டாயின. ஓ தேவர்காள்! அங்ஙனம் எனதுரோமங்களி னின்றும் தோன்றிய ஆனந்தபிந்துக்களேஇப்போது ஸகலாயத்தில் லிங்கங்களாயிருக்கின்றன. ஓ தேவி! காலாந்தரத்தில் சமாதிநீங்கி விழித்தபோதுஅவைகளெல்லாம்லிங்கங்களாயிருக்கக்கண்டேன். சந் திரன்போல்ஜ்வலிக்கின்றனவும் மூன்றுகோடியினும் அதிகமாகியசங் கியையுடையனவும் திவ்யரத்னங்களால் விளங்கும் மௌளிகண்டாங் கள்உடையனவும்மாளிகைகோபுரம் பிராசாரம்முதலியவைகளோடு

கூடியதிவ்யாலயங்களில்பில்வம்மந்தாரம் முதலியவைகளால்அர்ச்சிக்கப்பட்டனவும்நாகங்களின்படங்களால்குடைபோல்மறைக்கப்பட்ட மௌலியுடையனவுமாகிய அவ்விலிங்கங்களைக்கண்டுமிக்க ஆச்சரியங்கொண்டேன். அவைகளையானும் பூஜித்தேன்.ஓதேவி! இப்போதும் பூஜிக்கின்றேன். இஃதோரகஸ்யம். இதனை அசாம்பவருக்குக்கூறற்க. கூறினால் வேதமந்திரங்களால் சாம்பலிலே ஹோமஞ் செய்யப்பட்டது போலும். மருகாந்தாரத்தில் பயிர்செய்தது போலுமாம். விபூதித்திரிபுண்டரமற்றவனும் என்னையர்ச்சிக்காதவனும் எனது கதையை ஸ்ரவணஞ்செய்யாதவனுமாகிய அதமன் எப்போதும் நரகயாதனைக்கே அருகனுவன். மலஜலங்களால் அசுத்தமாயுள்ளபன்றியானது சிங்கம் போலாகுமோ? எனது திவ்யநாமங்களை நாவினுலுச்சரித்தும்,கையினுல் பில்வபத்திரங்களா லர்ச்சித்தும்,காதுகளால் சிவசரிதங்கேட்டும் தம்மைப் பாவனஞ்செய்துகொள்ளும் புண்ணியவான்கள் ஸகலசுகபோகங்களைப்பெறுவதுமன்றி சம்சாரமெனும் மஹாதுக்கம்நீங்கினவர்களாய் முக்தியெய்துகின்றனர். ஓ தேவி! சந்திரசூடார்ச்சகர்கள் இக்கைலாயத்தை வந்தடைந்துசுகம் பெறுவதுநிச்சயமென்றருளினர்.

நாற்பத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

—

உ
காமிநேநம:

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்.

### சிவஸ்வரூப கதன ப்ரார்த்தனே.

ஸ்கந்தர்:-ஓ முநிவர்களே! ஈஸ்வரன்பின்னுந்தேவியை நோக்கிக் கூறியதாவது:-ஓதேவி! பூர்வம் மந்தரகிரியில்எண்ணிறந்தமலர்வகையுடைய செடிகொடி விருக்ஷங்களால்சூழப்பட்டதும்,திவ்யசரசின்பக்கத்திலுள்ளதும், தேவதாருவிருக்ஷங்களால்சூழப்பட்டதும், சித்தர்முநிவர்கந்தர்வர்முதலியவர்களால்ஸேவிக்கப்பட்டதும்,மயில் மான் வானரம் மதயானை ஆண்குயில் முதலியவைகளின் தொனிகளால் வியாபிக்கப்பெற்றதும் மந்தாரமலர்களின் பரிமள மிகுந்த மகரந்தத்தை வாரி யிறைக்கும் காற்றினுல் உல்லாஸமாயுள்ளதும், கின்னர கிம்புருடர்கள் வாசிக்கும் மிருதங்கத்தின் தொனியுடன் கூடியசுற்றுப்பக்கங்களுடையதும்,உயரக்கையைத்தூக்கிக்கொண்ட

வர்களும் விளங்குஞ்சடைமுடியில் பறவைகள் கூடுகட்டப்பெற்றவர்களும் மத்யான காலத்துச்சூரியன்போல் ஜ்வலிக்கின்றவர்களும் மிக்கவுக்ரமாய்த் தவம்புரியும் வைகாநஸ வாலகில்ய முனிவர்களும் மரீசிகளும் மற்றுமுள்ள முனிவர்களும் வசிக்கப்பெற்றதும், திவ்ய தூபதீபங்களால் அற்புதமா யுள்ளதுமாகிய ஓர் மாளிகையிலுள்ள சிம்ஹாசனத்தில் உதயகாலத்துச்சூரியன்போல் ஜ்வலிக்கின்றவனாய் சந்திர சேகரனாய் நாககங்கணனாய் நாகஹாரனாய் நீலகண்டனாய் முக்கண்ணனாய் புலித்தோல் தரித்தவனாய் கங்காஜடாதரனாய் முச்சூலமேந்திய கையனாய் ம்ருகதரனாய்விளங்கும்யான் உன்னோடு கூட வீற்றிருந்தேன். அப்போது தேவர்களெல்லோரும் எனது காந்தியைக்கண்டு பிரமித்தவர்களாய் நமஸ்கரித்தெழுந்து அஞ்சலி செய்து நின்று என்னைப் பார்த்துக் கூறியதாவது:-ஓ ஸ்வாமின்! ஈசா ! தேவரீர் யாவர்? உமதுருவம் மிக்க ஆச்சரியமா யிருக்கின்றதே. நிர்வாணராயுமிருக்கின்றீர்.முண்டத்தால்விளங்குங்கழுத்துடையோரும் முக்கண்ணரும் கறைக்கண்டரும்சர்ப்பாபரணரும் ஸ்மசான பஸ்மாவைத் தரிப்பவரும் சடையுடையோரும் மஹாவ்ருஷப வாகனரும் மீன் ஆமைபன்றிநரசிம்ஹம் ஆகியஇவைகளின் சர்மங்களையும் யானையின் தோலையும் தரிக்கின்றவரும் சிரசில் சந்திரனைத் தரிப்பவரும் மானையும்மஹா சூலத்தையு மேந்தினவரும் இடப்பாகத்தில் ஓர் காமினியையுடையோருமாய் இவ்விடத்தில் காணப்படுகின்றீர்.ஓதேவா!உமது கணங்கள் கணக்கிடமுடியாதுபோற் காண்கின்றனவே. உமக்கிவர்கள்தம்பிகளா? உமது சரித்திரம்யாது? உம்மைப் பார்க்கப்பார்க்க ஆனந்தமாயிருக்கின்றது. ஓஇறைவனே.நீர் கருணாநிதியாய்க்காணப்படுகின்றீர். உமதுதேஜஸைப்பார்த்தால்நீர் உலகங்கடந்த மஹாபுருஷரென்றே காணப்படுகின்றது. இவ்வுலகங்களில்சேதனராசிகளை மயக்கும்மாயை உமக்குள்ளடங்கியிருக்கின்றது எனத்தோன்றுகின்றது.ஓதேவனே!நீர்கணபதிகுமாரன்எனுமிரு புத்திரர்களோடுகூடியவராதலின்சரீரமுடையோரென்றே தோன்றுகின்றதாயினும் தேகதர்மமுடையவரல்லீர்போலும்.எங்களுள் ப்ரம்மன் சிருஷ்டிக்கின்றார். விஷ்ணு பாலனஞ்செய்கின்றார். ருத்திரர்சங்கரிக்கின்றார். இந்திரன் முதலியவர் அசுரர்களை யழிக்கின்றனர்.விசுவதேவர் அஸ்வனிதேவர்கள் எப்போதும் வேள்வியைப்புசிக்கின்றனர்.சூரியன்உலகைக்கிரணங்களால்விளக்குகின்றான்.சந்திரன் நக்ஷத்திரங்கள் அக்கினி யமன் நிருதி வருணன் மருத்துக்கள் யக்ஷர்குபேரன் ஈசானன் மநுக்கள்ருஷிகள் மஹேஸ்வரன்இவர்களெல்லோரும்

தத்தம் காரியங்களைநடாத்துகின்றனர். ஓ தேவா! இவர்களெல்லாம் உமதாக்ஞைக்கடங்கினவரெனத்தோன்றுகின்றது. நீர் இவர்களுக்கெல்லாம் இறைவனேயன்றோ? நீர் யாவர்? உமதுருவம்யாது? உம்மைச் சற்றுகவனித்தால் குணாதீதரென்றே தெரிகின்றது. வேதங்களெல்லாம்உம்மையே போற்றுகின்றனவன்றோ? உமக்குவிபூதிருத்திராக்ஷத்தில்மிக்கபிரியமுள்ளதாகக் காணப்படுகின்றது. அதனைத்தரிப்பவர்களும் பஞ்சாக்ஷரத்தைச் ஜபிக்கின்றவர்களும் ருத்திராத்தியாயத்தின்பொருளையுணர்ந்தவர்களுமாகிய பக்தர்களது ஸகலபாபங்களையுநீக்கி முக்தியளிக்கின்றவரன்றோ? நீர் எங்களைப்போல் ஒருவராய் ஸ்திரீ அன்னம் பசி தாகம்முதலியவைகளையுடையவர்போற்றோன்றினும் உண்மையாய் அத்தன்மைக்கிடமிராது என்று தோன்றுகின்றது. ஓஸ்வாமி! மன்மதன் முப்புரம் யமன் அந்தகன் கஜன் ஆகியஇவர்களையடக்கியது தேவரீரேயன்றோ? உமதுண்மையையுள்ளபடியறிந்து கொள்ளத்தக்க பரிபாகம் எங்களுக் கில்லை. ஆதலின் நீரே அதனைக் கருணைகூர்ந்துரைக்கவேண்டுமென்றனர். ஸ்கந்தர்:-ஓமுநிவரே! இவ்வாறு அத்தேவக்கூட்டங்களால் கேட்கப்பட்டவராய் மஹேசரானவர் அவர்களை நோக்கிக்கூறலானார்.

ஓ முநிவரே! அங்ஙனங்கூறியது ஸகலவேதாந்தங்களின் ரகஸ்யமே. அவ்விறைவனுக்கன்னியராய் மற்றெவரை கூறக்கூடும். அவரே சக்திமான். அவர் ஒருவரேயாயினும் பற்பலவாருகிய பிரபஞ்சத்தைத் தோற்றிவிளக்குகின்றார். பிரபஞ்சத்திற்குட்பட்டவர்போல் அம்பிகையோடுகூடித் தாமும் ஓர்சமயம் திவ்யமாளிகையில் கிரீடிக்கின்றார். ஓர்சமயம் சிவலிங்கங்களைப் பூசிக்கின்றார். ஓர்சமயம் மாளிகையின்மீது ஜன்னலின்வழியாய் ஸகல ஜகங்களையும்பார்த்து ஆனந்திப்பவர் போலிருக்கின்றார். ஓர்சமயம் தேவியோடு கதைகளைச் சொல்லிக்கொண்டு மலர்மஞ்சத்தில் வீற்றிருக்கின்றார். ஓர்சமயம் வில் அம்பு முதலியவைகளை யெடுத்துக்கொண்டு மிருகத்தை விரட்டிச் செல்லுகின்றார். ஓர் சமயம் தேவியோடு உத்தியானவனஞ் சென்றுமலர்கொய்கின்றார். ஓர்சமயம் திவ்யசரஸிலிறங்கி தேவியோடுகூட ஸ்நானஞ் செய்கின்றார். ஓர்சமயம் மலர்சந்தனம் முதலியவை யணிந்துகொண்டு சந்தோஷிக்கின்றவர்போற் காண்கின்றார். ஓர்சமயம் நாட்டியம்பார்ப்பவர்போல் காணப்படுகின்றார். ஓர்சமயம் வீணாவாத்யத்தைக்கேட்பதில் மிக்க அவாவுள்ளவர்போலிருக்கின்றார். ஓர்சமயம் திவ்யபக்ஷயங்களைப் புசிக்கின்றார். ஓர்சமயம் அம்பிகையோடு ஊஞ்லாடுகின்றனர். ஓர்சமயம் தேவியோடு

உன்னதகோபுர மாளிகையில் ரத்னஜன்னலி லுட்கார்ந்துகொண்டு சூதாடுகின்றனர். ஓர்சமயம் அழகியபந்தையெடுத்துத் தேவியுடன் விளையாடுகின்றனர். ஓர்சமயம் தனதாத்மதத்துவத்தைத் தியானித்துக்கொண்டு ஆனந்தவசராயிருக்கின்றனர். ஓ முனிவரே! அவ்விறைவனது மஹிமையை யானெவ்விதங் கூறுவேன். அவனது பாதாரவிந்தத்திலுள்ள பக்திபின்பலத்தாலேயேகூறவேண்டும்.

நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

கபித்தபநஸப்ரியாயநம:

## ஐம்பதாம் அத்தியாயம்.

### விபூதிகதநாரம்பம்.

ஸ்கந்தர்:-அவ்வாறுதேவர்களால் பிரார்த்திக்கப்பட்டவராய் ஈஸ்வரன் மிக்க கருணையோடு தேவர்களைநோக்கிக் கூறியதையம்பிகைக்குரைப்பாராயினர். ஓதேவி! மாயையால் மோகித்தவர்களாகிய அந்தபிரம்ஹவிஷ்ணுமஹேசர்களையும் இந்திரன் முதலியதேவர்களையுமேனையருஷிகளையும் முனிவர்களையும் வஸுக்களையும்நோக்கியான் கூறியதாவது: ஓ தேவர்களே! எனதுமாயையால் நீங்கள்மோகித்திருக்கின்றீர்கள். நீங்களெல்லோரும்பசுக்கள். யான் மாயாமயங்களும் ஈஷணைகளுமாகிய பாசங்களால் ஸகலசுராசுரர்களையுங் கட்டிவிட்டு தேவியோடுல்லாஸ மாயிருக்கின்றேன். யானே பக்தியினால் வழிபடுவோனுக்குமுக்திதருகின்றேன். எனதுரூபத்தையுள்ளபடியறியாமல் என்னைவிஷயங்களில் பிரியமுள்ளவனென்று கருதி மோகங்கொண்டீர்கள். அம்மோகத்தைஇப்பொழுதேபோக்குகின்றேன். ஸகலசுருதிகளுக்கும் சிரஸுபோன்றதாகிய அதர்வசிரசிலுள்ளதும் மிக்கரகசியமுமாகிய தத்துவத்தை யுபதேசிக்கின்றேன். கேட்பீர்களாக. யானே நிராதாரனுயிருக்கின்றேன். ஆகாயம்போன்றவனுய்ச்சிறிதும் ஒன்றிலும்சம்பந்தமில்லாதவன். எனக்கு மனம் இந்திரியம் தேகம் மகாபூதங்கள் காலம் திக்கு வஸ்து இவைகளோடு சிறிதும் சம்பந்தமில்லை. யான் அசங்கனும் நிராமயனும் அவ்யக்தனும் பரமான்மாவும் எல்லாரினுள்ளும் ஆன்மாவு மாயிருக்கின்றவன். யானே ஆதி மத்தி அந்தமுமாயிருக்கின்றேன். என்னுலகின் தோற்ற முதலியவைகளோடு யாதுஞ்சம்பந்தமில்லை. என்னிடமிருந்தே இவைகள்தோன்று

கின்றன. பிரம்ஹவிஷ்ணு ருத்திர இந்திரர்களாகிய நீங்கள்என்னிடமிருந்தே தோன்றிய வர்களன்றோ? உமையோடு கூடியயானே உங்களெல்லோரையுமுண்டாக்குகின்றேன்.உங்களோடு இப்பிரபஞ்சமுமென்னிடமேயுள்ளது. எனக்கந்நியமானபொருள் ஓர்சிறிதுமில்லை. என்னையறிந்தாலிப்பொருளெல்லா மறியப்பட்டவாகும். யாவனொருவனேயென்றறிந்தவனுக்கு மோகம் ஏது? என்னை யறிந்தவர்களுக்கே சாந்தியுண்டாகும்.காமகர்மமயங்களாகிய பந்தங்கள்நீங்கும். எனதுமாயையால்மோகமடைந்துநீங்கள் குணமயங்களாகியவாக்யங்களால் காமகர்மங்களிற்கட்டுண்டவர்களாய்அதனதன் பயனையநுபவிக்கின்றீர்கள். எவர்கள் பற்பலஉபாஸனையால் என்னை ஆராதிக்கின்றனரோ அவர்களது கோரிக்கையையானே நிறைவேற்றுகின்றேன். நானேஸகலத்தையும் ஏவுகின்றேன்.என்னைபிரேரகனென்றறியாதவன் தானே கர்த்தாவென்றெண்ணுகின்றான்.சர்வேந்திரியமற்றவனும்ஸகலத்துக்கும்பிரபுவும் ஆதாரனும் பாணிபாதமற்றவனாயினும் மிக்க வேகமாய்ச் செல்லுகின்றவனும் நேத்ரமில்லாதவனாயினும் ஸகலத்தையும்பார்க்கின்றவனும் காதில்லாதவனாயினும் ஸகலத்தையுங்கேட்கின்றவனும் பிராணன் மனம்இவையில்லாதவனு மாயிருக்கின்றவன்யானே. ஸகலசரீரங்களிலும் விக்ஞானமாயிருக்கின்றவன்யானே. என்னை யோகத்தினாலுங் காண்கின்றவனில்லை. யான்பஞ்சகோசங்களும் பஞ்சபூதங்களும் பஞ்சபிராணன்களுங்கடந்தவன். தேகேந்திரியம்யாது மெனக்கில்லை. பக்ஷபாதமற்றவனாய் ஸகலபூதங்களிலுமிருக்கின்றேன். சூரியன் ஸகலவுலகங்களையும் நடாத்துகின்றனாயினும் உலககாரியங்களோடு சிறிதும் சம்பந்திக்காதிருக்கின்றான்.அவனைப்போல்யானும் பிராணன்மனம் ஆகியஇவைகளின் தர்மங்களோடாவது அகங்காரத்தின் தர்மங்களோடாவது சிறிதுஞ்சம்பந்திக்கின்றேன்இல்லை.யானே ஸகலத்திற்கும் எல்லை. எல்லாவற்றையும் விளங்கச்செய்கின்றேன். என்னிடம் பயத்தினாலேயே காற்று வீசுதலும் சூரியனுதித்தலும் சந்திர யம அக்கினிகள் தத்தந்தொழிலை நடாத்தலுமாமென்றறியுங்கள். ஏகத்துவமாவது த்வியத்துவமாவது பஹுத்துவ மாவது ஒன்றுமில்லை, முக்தியுமில்லை, பந்தமுமில்லை, சாக்ஷியுமில்லை, சாக்ஷிக்குவிஷயமுமில்லை, அணுவுமில்லை, மகத்துமில்லை, நிர்க்குணமுமில்லை, ஸகுணமுமில்லை, மாயையுமில்லை, மாயையுடையோனுமில்லை. ஈஶ்வரனுமில்லை. பின்னையாதெனின் யான் பரமானந்தமாகிய ரஸவுருவனே. ஸகலவஸ்துக்களையுங் கடந்தவன்யானே. நீங்களெல்லோரும் யானேயன்றோ? வேதவாதத்தாலாவது வேதாந்தங்களா

லாவது குருவாக்யத்தாலாவது கர்மத்தினலாவது தவங்களாலா வது என்னை யொருவனுமடைவதில்லை. எனதுபிரஸாதத்தினலேயே அடைகின்றனர். எனது நிஷ்டையையுள்ளபடி வெனுவனொருவனறி கின்ருனோ? இல்லையோ? மூர்க்கர்கள் வேதாந்தங்களுக்கு வேறுவித மாய்ப் பொருள் கொள்கின்றனர். அவர்களென்னை யறிவதுமில்லை. துக்கங்களினின்று விடுபடுகிறதுமில்லை. எனது விபூதி (அம்சமகி மை) யைக் கூறுகின்றேன். ஓதேவர்களே ! அதனைக் கேட்பதிலும் பெரிய லாபம் யாதுமில்லை. எவர் முப்புண்டரத்தால் ஜ்வலிக்கும் நெற்றியுடையோராய் ருத்திராக்ஷந்தரிக்கின்ருேராய் ருத்ராத்தியா யத்தில் விருப்புள்ளவர்களாய் சிவபூஜைசெய்கின்றவர்களாய் பஞ்சா க்ஷரம் ஜபிக்கின்றவர்களாய் சிவக்ஷேத்திரத்தில் விருப்புற்றவர்க ளாய் வேதாந்தத்திலும் குருவினிடத்திலும் என்னிடத்திலும் மிக்க சிரத்தையுடையவர்களாய் வக்ரத்தன்மையற்றவர்களாய் எனது நா மத்தில் விருப்புற்றவர்களாயிருக்கின்றனரோ அவர்களுக்கே இஃது விளங்கும். ஸகல தேவர்களினும் யான் சிறந்தவனென்று எவருக் குத் தோன்றுகின்றதோ அவருக்கு இஃது விளங்கும். எனது தியா னமே ஸகலவேத வேதாந்த தாத்பரியத்தைச் சிந்தித்தலாம். ஏனெ னின் வேதாந்ததாத்பரியத்தைச் சிந்திப்பதில் சக்தியில்லாதவர்கள் உமைபாதியனும் நீலகண்டனும் முக்கண்ணனும் சந்திரசேகரனு மாகிய திவ்யரூபமுடைய என்னைத்தமது ஹ்ருதய கமலத்தில் சிந்திக் கவேண்டியதன்ருே? அப்படியே எப்போதும் சிந்திப்பாராயின் ஞா னமுதிக்கும். பின்னர் நிச்சயமாகிய அபரோக்ஷஜ்ஞானமுண்டாகும். இப்படிப்பட்ட ஸாதனமிலாதவர்களுக்கு ஞானங்கிடைப்ப தரிதன் ருே? தமது புத்தியினல் சப்தார்த்தங்களறிவதினுலும் குரு கூறுவ தைக்கேட்டல் மாத்திரத்தினுலும் கற்பகோடி காலத்திலும் அந்த ஞானங்கிட்டாது. கிருகஸ்தனுயினும் வானப்ரஸ்தனுயினும் சந்நி யாசியாயினும் எனது பிரஸாதமற்றவன் ஞானம்பெருன். விபூதி ருத்திராக்ஷந் தரிக்கின்றவர்களாய் ருத்திராத்தியாயம் ஜபிக்கின்ற வர்களாய் சிவலிங்கத்தை யர்ச்சிக்கின்றவர்களாய் மிக்க பக்தியோடு என்னை யாராதிக் கின்றவர்களுக்கு எனது கிருபையினல் அந்த ஞானமுதிக்கு மன்ருே என்றருளினர்.

ஐம்பதாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

பிரம்மசாரிணேநம:

# ஐம்பத்தோராம் அத்தியாயம்.

விபூதிகதனம்.

ஸ்கந்தர்:-ஈஸ்வரன்மீண்டும் தேவர்களைநோக்கிஓதேவர்களே! எதனையறிந்தமாத்திரத்தில்மீண்டும் அறியவேண்டுவது யாதுமின்றோ அத்தகையஎனது விபூதியைக் கூறுகின்றேன். கேளுங்கள். ஸகலத்திற்கும் ஆதாரமா யிருப்பவன்யானே.இவையெல்லாம் என்னிடமே ஒடுங்குகின்றன. சிலந்திப்பூச்சி எப்படி நூற்களை சிருஷ்டித்து ஒடுக்கிக்கொள்ளுகின்றதோ அப்படியே இந்த ஜகத்தை உங்களோடு உண்டாக்கி யொடுக்கிக்கொள்ளுகின்றேன். யானே காலஸ்வரூபன். ஸகலஜகமும் எனக்கு அன்னம். யமன் ஊர்காய். யான்சகல பூதங்களிலும் பிரவேசித்து பிராணிகளின் ஹ்ருதயகுகையில் எப்போதும் வசிக்கின்றேன். சூரியனை அஸ்தமிக்கவும் சந்திரனைத் தெளிவுற விளங்கவும் வாயுவைச்சலிக்கவும் அக்னியைத்தகிக்கவும் இந்திரன் யமன்முதலியவர்களை ஐஸ்வர்யமுடையவராகவும் குபேரனைத்தனாதிபனாகவும் அஸ்வனி தேவர்களைத் தேவவைத்தியராகவு மிருக்கவும் செய்திருக்கின்றேன். தேவர் அசுரர் இவர்களுக்கு ஒவ்வோர் சிறப்பைக் கொடுத்திருக்கின்றவனும்யானே. யானே முக்குணவுருவனும் குணமற்றவனும் தமசுக்கு அப்பாலுள்ளவனும்ஜலத்திற்கு ரஸமாயுள்ளவனும் சோதிக்குச்சோதியாயுள்ளவனும் வியாபகனும்பிருதிவிக்குக்கந்தமாயுள்ள வனுமாயிருக்கின்றேன். சேதனசேதனமாகிய இப்பிரபஞ்சமானது என்னா லுண்டாக்கப் பட்டதாயினும் அதனாலெனக்குச் சிறிதும் மாறுபாடில்லை.யானேஸகலத்துக்கும்ஸாக்ஷியாகிய சநாதனன். காந்தசந்நிதியில் இரும்பு சேஷ்டிப்பதுபோல எனது சந்நிதியில் உலகெலாம் சேஷ்டிக்கின்றது. இவைகளெல்லாம் எனக்கு விளையாட்டு உபகரணங்களாம். எனதுஸ்வரூபம் உங்களாலறிய முடியாது. யான்பஞ்சகிருத்தியங்களுமற்றுள்ளவன். பிரமனாகவிருந்து ரஜோகுணத்தினால் உலகை சிருட்டித்தும் விஷ்ணுவாகவிருந்து சாத்துவிககுணத்தால்ரக்ஷித்தும் உருத்திரனாகவிருந்து தமோகுணத்தினால் அழித்தும் ஸதாசிவனாயிருந்து உலகை யநுக்கிரகித்தும் ஈஸ்வரனாயிருந்து எனதுமாயையால் உலகைமோகிக்கவுஞ் செய்கின்றேன். எவளால் நீங்களும் ஸகலலோகங்களும் மோகித்து மயங்கு

கின்றீர்களோ அவள் விக்ஷேப ஆவர்ணஸ்வரூபியும் பராசக்தியுமாகிய இவளே. இப்பராசக்தியே சகலவுலகங்களும் தோன்றி நின்றுஒடுங்குவதற்குக்காரணமாயிருக்கின்றனள். இவள் எனது பரமசக்தி. பற்பலவாறுயிருக்கின்றவளும் ஞானத்தைக்கொடுக்கின்றவளும் இவளே. எனது பிரசாதத்தினல் கர்மவிபாகம்வரின் இந்த ஆவர்ணசக்தி நசிக்கின்றது. ஆயினும் எனது அம்சமே தன்னையறியாமையால் ஜீவனுயிருந்து பற்பலயோனிகளிற் புகுந்து துக்கத்தை யநுபவிக்கின்றது. இவ்வாறு சரீர மெனும் விருக்ஷத்தில் இரண்டு பறவைகள்போல் ஜீவேஸ்வரர்களாய் இருக்கின்றது. அதனில் ஒருவன் கர்ம பயன்களாகிய சுகதுக்கங்களைப் புசிக்கின்றான். மற்றொருவன் அதனைப் பார்த்துக்கொண்டு சாக்ஷி மாத்திரமாயிருக்கிறான். இதனையே 'துவா சுபர்ணு' என்கிறமந்திரங் கூறுகின்றது. ப்ரம்ஹமே தனது அவித்தையினல் சம்சாரத்தைப் பெற்றும்தனது வித்தையினல் முத்திபெறுகின்றது. அகங்காரத்தினல்ஸுகதுக்கங்களைப்புசித்துக் கர்மங்களைச் செய்கின்றவனய் ஸ்வர்க்கமும் நரகமுஞ் சென்றுழல்கின்றான். ஓதேவர்காள்! எனது ஞானத்தினலேயே ஜீவன் முக்தியடைவானன்றி ஏனையகர்மங்களினலில்லை. அறுவகை ஊர்மிகளற்றவன் யானொருவனே. அறுகோசமாகிய இத்தேகத்தில் பிரவேசித்து யானே எல்லாவற்றையும் விளங்கச் செய்கின்றேன். யான்ஸத்தியகாமனும் சங்கல்பத்தினலேயே ஸகலவுலகங்களையுஞ் சிருஷ்டிக்கின்றவனுமாம். என்சங்கல்பத்தினலேயே பிதுரர் தேவருண்டாகின்றனர். எனக்கு சோகம் மோகம் பசிதாகம் ஆகிய இவைகளில்லை. யான் சரீரமற்றவனுயினும் எண்ணிறந்த சரீரங்களுள்ளிருக்கின்றேன். விபுவாயும் அழிவற்றவனுயும் முவ்வவஸ்தை கடந்தவனும் அசங்கனும் ஆகிய ஈஸ்வரனுய் என்னையறிகின்றவனே ஸகலமு மறிந்தவன். பிரம்ஹமாகிய என்னையறிந்தவன் பிரம்ஹமே. பிரமமுளதென்று என்னையறிவோனுக்கு முத்திதருகின்றேன். உள்ளறிவன் வெளியறிவனென்பது அல்லேன். யான் பிரக்ஞானமாகிய பிரமமாயிருக்கின்றேன். சாக்ஷிசாக்ஷியம் (காணப்படும்பொருள்) என்பன வற்றவனும் தேசகாலவரையற்றவனுமாகிய இவ்வான்மாவே பிரம்ஹம். அஃதேநீ. தத்வமேதது ஸர்வமஸிஎன்பதாதிவாக்யங்களால்பிரதி பாதிக்கப்படுகின்றவனவனே. எல்லாவாக்யங்களிலும் யானே விளங்குகின்றேன். பிரமமாகியஆனந்தமென என்னையறிந்தவன் பவக்கடலைத் தாண்டுகின்றான். என்னையுபாஸித்தவரே சோக மோகங்களைத்தாண்டுகின்றனர். நீங்கள் என்னையே அறியுங்கள். மற்றவைவீணே. ஸத்யக்ஞானு

னந்தனுயிருக்கின்றேன். எனது சத்தியத்தினாலேயே உலகத்திற்குச் சத்தியதையுளது. என்னாலேயே ஜடமாகிய ஜகத்தானது சேதனம் போலாகின்றது. பேரானந்தக்கடலாகிய எனக்கு ஜகத்தின்ஸுகமெலாம் ஒர்திவலைபோன்றதே. ரஸமெனப்படுபவன்யானே. ஆகாசனாகியஎன்னையின்றி எவன்ஜீவிக்கின்றான்? என்னிடம் மனம் இந்திரியம் இவையாவும் சலிக்கின்றதில்லை. பிரமாணப்பிரமேயமற்றவனும் தர்க்கத்தினாலடையக்கூடாதவனும் ஸகலத்தையுமறிகின்றவனுமா யிருக்கின்றேன். இந்திரியங்கள் வெளிமுகமாகவே நோக்கு வனவாதலின் என்னையறிகின்றதில்லை. எனது திருவருள்பாலிக்கப்பெற்றவனொருவனே என்னைக்காண்கின்றான். இவையெலாம் என்னிடமேயடங்குகின்றன வாதலினானொருவனே அத்வைதன்; துரியன்; சிவன். இச்சகமெலாம் ஊகித்துப்பார்க்கின் கானனீருக்கு நிகராகின்றது. அஃதும் எவனுக்கு சம்புமாத்திரமாய்த் தோன்றுகின்றதோ அவனுக்கே யென் ஆனந்தம். இவ்வாறு இறைவன் தேவருக் குபதேசித்ததை தேவிக்கருளினார்.

ஐம்பத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

பிரம்மரூபிணேநம:

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்.

### விபூதி கதனம்.

ஸ்கந்தர்:-ஓ முநிவரே! பின்னும் இறைவன் கூறியதாவது ஓதேவர்காள்! நித்யனும் அநித்யனும் யானே. பிரமனும் வேதமும், கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, உச்சி, கீழ்த்திசைகளிலுள்ள பொருள்களும் சகல லோகங்களும் இடைத்திசைகளும் புருஷனும் அலியும் பெண்ணும் யானே. யான் ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல. சோதிகளுக்கெல்லாம் எப்போதும் சோதியளிப்பதாகிய ஆன்மச்சோதி யானே. பூதங்களென்னை யறிகின்றதில்லை. சந்தங்களுக்கும் யானே ஆதி. யானே காருகபத்தியம் ஆகவனீயம் தக்ஷிணாக்னி. ஸத்தியனும் கோவும் கௌரியும் பெரியோனும் இளையோனும் யானே. இருக்கு யஜுஸ் சாமம் அதர்வணம் இவை எனது மொழிகளே. யானே அக்ஷரனும் க்ஷரனும் குஹ்யனும் புஷ்கரனும். யானே அணுவில் அணுவானவன். பெரிதில் பெரிதானவன். எங்

கும் கண்ணுடையோனும் எங்கும் காதுடையோனும் எங்கும் தலையுடையோனும் எங்கும் காலுடையோனும் யானே. யானேசகஸ்ராக்ஷனும் சகஸ்ரபாதனுமாம். இவைகளையெல்லாம் ஓர் கோடியிலடக்கிக்கொண்டு அப்பாற் பட்டிருக்கின்றேன். மோக்ஷத்திற்கு ஈசானனும்பொன்னிறமீசை யுடையோனும் ஆகியபுருஷன்யானே. யானறிகின்றவனுமல்ல. அறியாதவனுமல்ல. இருவகையா யறிகின்றவனுமல்ல. ஸகல பூதங்களும் தூங்கும்போதும் யான் விழித்துக்கொண்டிருக்கின்றேன். காரிய காரணமற்றவனும் க்ஷராக்ஷரமில்லாதவனும் இரவு பகலற்றவனும் சதசத்தில்லாதவனுமாகிய ஆன்மா யானே. ஆகாயத்தை யாடைபோல் உடுத்திக்கொள்ளமுடியுமானல் என்னை யறியாது முக்தியடையலாம். ஸகலவேதங்களாலு மறியப்படுகின்றவன் யானே. வேதாந்தங்களில் யான் நிலைபெற்றிருக்கின்றேன். யானே தனதுமஹிமையிலுள்ளவனும் உபநிடதபரனும் வேதாரம்பத்திலுள்ள ஸ்வரமாகிய பிரணவமும் ஸகலமந்திர ஸ்வரூபனும் பஞ்சாக்ஷர மயனும் பாதகமிராதவனும் அஸங்கனல்லாதவனும் சங்கனல்லாதவனும் ஸகலவுருவனும் ஸகலமுங்கடந்தவனும் உமாபதியுமாயிருக்கின்றேன். ஓதேவர்களே! நீங்களெல்லோரும் பசுக்களே. எனதுபிரஸாதத்தினல் முக்தியடையமுயலுங்கள். எனது ஞானமானது வேதவாக்யங்களாலேயே உதிக்கும். ஓதேவர்காள்! அது வொழிந்தயேனையவை சில்பங்களேயாம். பிரம்ஹமாகிய யான் அவித்தையினல் ஸம்ஸாரத்தைப்பெற்று வித்தையால் முத்தி பெறுகின்றேன். தேவாசுர மநிதர்களை முக்திபெறச்செய்கின்றேன். சிரவணத்தினலும் கர்மத்தினலும் என்னையறிதற்கில்லை. எவ்வளவோ மஹா யதிசிரேஷ்டர்கள் சிரவணஞ் செய்துகொண்டே யிருப்போராயினும் என்னையறிகின்றாரில்லை. எனக்கன்னியமாகிய ஸகலமும் பொய்யே. ஓ தேவர்காள்! இந்த ஜகமெல்லாவற்றையும் நீங்கள் ஏன்உண்மையாயெண்ணுகின்றீர்கள். அதன்காரணத்தை என் முன்னிலையிற் கூறுங்கள். இதுகாறும் யான் கூறிய விபூதித்தத்வத்தைப் பரிபாகமில்லாதவனுக்குக் கூறக்கூடாது. அபரிபாகர்க்கு வேதாந்த வாக்யத்தைப் போதித்தவன் தனது முன்னேர்களுடன் நரகையடைகின்றான். இதுகாறும் யான்கூறியது ஸகலவுபநிடதங்களின் ஸாரமாயுள்ளது. சிஷ்யனும்பக்தனும் புத்ரனும் சாம்பவனு மொழிந்த ஏனையோர்க்குக்கூறக்கூடாது. ஓதேவர்காள்! சிரோவிரதம் அநுட்டித்தவர் களுக்கே இதனைக்கூறவேண்டும். சிரோவிரதமாவது அக்னிரிதிஎன்பதாதி மந்திரங்களால் விபூதியை யெடுத்து அங்கங்களிற்பூசவேண்டும். ஓதே

வர்காள்! பசுபாசமோக்ஷஹேது வாகிய இதுமிக்க புண்ணியமானது. சிரத்தையோடு கூடவிபூதித்திரிபுண்டரந்தரித்தவனாய் எனது லிங்கத்தை அருச்சிப்பவன் முக்தியடைகின்றான். பஞ்சாக்ஷரஜபத்தினால் பஞ்சமகாபாபங்களும் நீங்கும். பில்வமூலத்திலிருந்து ருத்திராத்தியாயஞ்ஜபிப்பதாலும் எனது க்ஷேத்ரங்களில் வசிப்பதாலும் வாராணசியில் வசித்து அவ்விடத்திலேயே மரித்தலாலும் எனது மூர்த்தியைத் தியானித்தலாலும் எனதருளைப்பெற்று ஞானமுடையோனாகலாம். ஓ தேவர்காள்! ஸகலவேதங்களிலுமுள்ள ஸாரரகஸ்யமன்றோ இது, இப்படிப்பட்டஞானத்தை விடுத்து மற்றதனாலென்னபயன்? ஓதேவர்களே! உங்களது வீரியம்யாது? ஓ ஹரிஹரபிரம்ஹ இந்திரசூரியசந்திர அக்னிவாயு விஸ்வ அஸ்வினி வசுமுதலிய தேவர்காள்! கூறுங்கள். உமதுபலம்யாது. அதனைச்சற்று காட்டுங்களென்றருளினர். ஸ்கந்தர்:-ஓமுனிவர்களே! இவ்வாறு சங்கரன் கூறியதைக் கேட்டதும் ஸகலதேவர்களும் அவ்விறைவனை வணங்கித் தத்தம்யோக்யதையைக் கூறத்தொடங்கினர். பிரமன் யான்தேவர்மனிதன் ஸமுத்திரம் மலை நதிநதம் வனம் மற்றுமுள்ள ஸகல சகங்கள் ஆகிய இவைகளோடுபிரபஞ்சத்தை யுண்டாக்குகின்றேன். உமது பிரசன்னமாகிய திருமுகத்தினின்றும் வந்தஸகலவேதங்களையு மறிவேனென்றான். விஷ்ணு யான் லோககண்டகர்களாகிய அசுரர்களையெல்லாம் சக்கரத்தாலழுத்துத் தள்ளி ஸகலசராசரங்களையும் ரக்ஷிக்கின்றேன். எனக்குநிகர் யாருமில்லையென்றார். ருத்திரர் எனது சூலமூலத்தால் சகல சரா சரங்களையும்வாட்டி வதைத்து அழித்துப்பிரளயஞ்செய்கின்றேனென்றார். இந்திரன்யான் ஸ்வர்க்கத்தில் வசிப்பவனாய் ஐராவதமெனும் மஹாயானையின்மேல் வீற்றிருப்பவனாய்திவ்யகிரீடமணிந்தவனாய் ஸகலதேவர்களால் போற்றப் பெற்றவனாயிருக்கின்றேன். யான், வச்சிராயுதத்தையெடுத்து விருத்திரன் முரன் ஜம்பகன் முதலிய மகாவசுரர்களைக் கொன்ற வீரன். வேள்விகளிலுள்ள சோமத்தைப் புசிக்கின்றவன். ஆதலின் எனக்கு நிகரானதேவன் யார் என்றான். வாயுஸகலஜகத்திற்குப்பிராணனும் ஸகலகிரிசமுத்திரங்களையும்கலங்கச்செய்கின்றவனும் யானே யென்றான். சூரியன் கடூரமாகியகிரணங்களால் உலகிலுள்ள நீரையெல்லாமிழுத்து மேகமாகச்செய்து அதனால் உலகிலுள்ள செடிகொடிமரங்களையும் மற்றுமுள்ள ஜீவாசிகளையும் வளரச்செய்வோன்யானேயன்றோ வென்றான். அக்னிசுவாலைகளில்ஸகலஜகத்திற்கும் அன்னாதி பாகஞ்செய்வித்தும் தேகத்திற்குள்ளிருந்து அதனை ஜரிக்கச்செய்வித்தும் தேவர்களுக்கு அவிஸைச் சேர்ப்பித்தும்

ஸமுத்திரத்தினுள்ளிருந்து எத்தனைகோடிப் பிரவாகங்கள் வரினும் அவைகளை உறிஞ்சியும் சிவபெருமானது நெற்றிக்கண்ணுயிருந்தும் விளங்குகின்றவன் யானேயன்றோ வென்றான். யமன் ஸகலப்பிராணிகளுக்கும் ஓர்பக்ஷபாதமின்றி அவ்வவர் வினைக்கேற்பப் பயன்களைக் கொடுத்து பாவிகளை எனது படர்களால் வருந்தச்செய்துகொண்டு தர்மஸ்வரூபனும் சிவத்தியானபரனுமிருப்பவன் யானன்றோவென்றான். குபேரன் ஸகலதனநிதிகளோடுங் கூடினவனும் ஜகதீஸ்வரனுக்கு மித்திரனுய்த் தனமற்றவர்களைப் பிரபுவாய்ச்செய்கின்றவன் யானன்றோ வென்றான். சந்திரன் ஸகலஔஷதிகளையும்வளரச்செய்கின்றவனும் தேவரீருக்கு இடது கண்ணுயுள்ளவனும் உமது ஜடையில் விளங்குகின்றவனும் உமது அபாரகருணைக்குப் பாத்திரமாயுள்ளவனும் யானே யன்றோ வென்றான். வருணன் ஸகலபுண்ய நதிகளுக்கு நாதனுய்ப் பாவிகளை பாசத்தாற்கட்டுபவனும் ஸகலகணங்களாலுஞ் சேவிக்கப்பட்டவனும் சிவபூஜாதுரந்தரனு யிருப்பவன் யானன்றோ வென்றான். ஸகலதேவர்களும் ஓஸ்வாமி! நாங்களெல்லோரும் இந்திரனேடு ஸோமபானஞ் செய்துகொண்டு திரிலோகங்களையுங் காத்துக்கொண்டிருக்கின்றோமன்றோவென்றார். ஸ்கந்தர்:-ஓ முனிவரே! இப்படிக்கூறிய தேவர்களைநோக்கி ஈஸ்வரன் சற்றுமுகமலர்ந்து ஓ தேவர்களே! உங்களது பராக்கிரமத்தைத் தெரிந்துகொண்டேன். புல்போன்ற ஓர் புருஷனை இதோ எனது சங்கற்பத்தினல் சிருஷ்டித்திருக்கின்றேன். நீங்கள் கூறியதுண்மையாயின் இவனிடம் உங்களது பலத்தைக்காட்டிஜயம் பெறவேண்டுமென்று கூறி அவ்வாறு அந்த த்ரிணபுருஷனை அவர்களெதிரில் விடுத்து தேவியோடு தானும் அந்தர்த்தானமாயினர். உடனே விஷ்ணு பிரம்ஹருத்திரன் இந்திரன் யமன் வாயு அக்னி சூரியன் சந்திரன் ஈசானன் குபேரன் நிருதி முதலிய தேவர்களெல்லோரும் த்ரிணம் போன்ற அந்தநரனிடம் தத்தம் ஆயுதாஸ்திரங்களைப் பிரயோகித்துத்தங்களால் கூடிய மட்டும் முயன்று பார்த்தனர். ஆனல் அந்தத்ரிணநரனை ஓர் சிறிதாவது சலிக்கச்செய்வதற்கும் சக்தியுடையவராகவில்லை. உடனே ஆச்சரியமுற்றவர்களாய் ஜகதீஸ்வரனைத் தோத்திரஞ்செய்ய வாரம்பித்தன ரென்றார்.

ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

---

உ

பிரம்மவித்யாதீர்த்தாநபுவேநம:

# ஐம்பத்துமூன்றும் அத்தியாயம்.

## தேவி வெளிப்படுதல்

சூதர்:-ஜைகிஷவ்யர் ஸ்கந்தரை வணங்கி ஓஸ்வாமி! இந்தசரித்திரத்தைக்கேட்க மிக்க ஆச்சரியமாயிருக்கின்றது. இறைவன் இவ்வாறு த்ருணநரனை முன்னர் விடுத்து அந்தர்த்தான மடைந்தவுடன் தேவர்கள் தங்களால் கூடியவரையில் முயன்று யாதொரு பயனும் படாமற்போனபின் அவர்கள்யாதுசெய்தனரென்றுகேட்கஅப்பொழுது ஸ்கந்தர்கூறலாயினர். ஓமுநிவரே! தூர்ஜடியினது அற்புதமாகிய சரித்திரத்தைச்சிரவணஞ் செய்வீராக. தேவர்களெல்லோரும் அவ்வாறு சக்தியற்றவராய்ப்போகவே கருணாசாகரரூபிணியும் ஜகன்மாதாவும் விளங்கும் ஆபரணமுடையவளுமாகிய உமாதேவியை நினைத்து அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு தோத்திரஞ் செய்தனர். ஓ சராசர மாதாவாகிய ஈஸ்வரீ! உம்மால் மோகமடைந்தவர்களாய் நாங்கள் மஹேஸ்வரனை யறியாது மயங்குகின்றோம். காரணங்களுக்குங் காரணனும் பதிகளுக்கும் பதியும்சேதனர்களுக்குஞ்சேதனனுமாகிய அவ்விறைவனை ஸகலதேவர்களோடு சமமெனநினைத்து இவ்வாறுயினோம். ஓதேவி! உலகங்களின் தோற்ற நிலை யொடுக்கங்களைச் செய்கின்றவர்களாயினும் யாம் எதிரிலுள்ள இத்துரும்பை அசையச்செய்வதற்கும் சக்தியற்றவர்களாயினோம். ஹேமாதா! உன்னை வணங்குகின்றோம். நீகருணைகடாக்ஷத்தால் இத்தேவக் கூட்டங்கள் சக்தியுடையராகும்படி நோக்குவாயாக. ஓ அன்னையே! உன்னாலேயே இஃதெலாம் வியாபிக்கப்பட்டுளது. உன்னாலேயே காக்கப்படுகின்றது. இறுதியில் உன்னிடமே லயமடைகின்றது. ஓதேவி! நீமஹேசனுக்கு பாதிசரீரமாயுள்ள பரமசக்தியன்றோ? உனதருளுக்காளானவனுக்குப்பவப்பிணியேது? நீயேமாயையும் மாயையுடையோன் மஹேஸ்வரனுமாம். உமது மாயையால் யாங்களெல்லோரும் மோகமடைந்தனம். எங்களது அக்யான விருளை நீங்கச்செய்தருள்வாயாகவென்று வேண்டிக்கொண்டு விஷ்ணுபிரமாதிதேவர்கள் மீண்டும் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நின்றனர். பின்னரெழுந்து நின்று பார்க்கவே ஆகாயத்தில் நீருண்டமேகத்தின் நடுவிலுள்ள மின்னற்கொடிபோல் ஜ்வலிக்கின்றவளும் உருக்கியோடவிட்ட ஆயிரமாற்றுப்பொன்போன்ற தேகமுடையவளும் ஸகலாபரணங்களை யணிந்து

வளும் பாலசந்திரனைச்சேகரமாயுடையவளும் சந்திரன் போன்ற முக முடையவளும் நீலோற்பலம் போன்ற நேத்திர முடைய வளு மாகிய ஜகதீஸ்வரியைக்கண்டனர். உடனே ஈஸ்வரியை சாஷ்டாங்க மாய் நமஸ்கரித்துரக்ஷரக்ஷ என்று கூறிக்கொண்டுநிற்க, அவர்களைத் தயாரூபிணியாகிய உமாதேவி அக்யானத்தைத்தொலையச் செய்வதா கியதிவ்யவாக்யாமுதத்தாலருள் புரியலாயினள். ஓதேவர்களே! யான் மாயையாகிய சக்தி. பிரணவமெனும் பதத்தை யடைந்துள்ளதும் மாத்திரை அமாத்திரை என்பவையற்றுள்ளதுமாகிய ஆன்மாவே பிரம்ஹம். அவ்வான்மாவே மாயீ (மாயையுடையோன்) எனப்படுவ தாம். பிரகிருதிபரவசனுகிய சர்வேசன் சக்திமானெனப் படுவான். அவனேஇஃதெல்லாம். அவனிடமிருந்தே நீங்களெல்லோருந்தோன் றினீர்கள். ஆதலின் அம்மஹேசனையேபஜிப்பீர்களாக. யான் எவ னது சக்தியாயிருந்து ஸகலஜகத்தையும் லீலையாகவே யுண்டாக் கினேனே அப்படிப்பட்ட இறைவனைச் சரணமடைவீர்களாக. எவ னது மாயையால் நீங்கள் மோஹித்திருக்கின்றீர்களோ அவனிலா விடில் இவையெல்லாம் வீணே. ஆகாயமத்தியத்திலுள்ளவனும் ஸக லேந்திரியமற்றவனுமாகிய அவ்விறைவனைப் பஜிப்பீர்களாக வென் றருளினள். ஓமுநிவர்காள்! தேவி இவ்வாறருளி யந்தர்த்தான மாயி னள். தேவியருளியதைக்கேட்ட தேவர்களெல்லோரும் விபூதிபூசித் திரிபுண்டர மணிந்து பாசுபதவிரதம் பூண்டு லிங்கார்ச்சனைசெய்த னர். ருத்திராத்தியாய பஞ்சாக்ஷரங்களை ஜபித்துப்பரமசிவனைத்தியா னித்தனர். எவ்வளவு தியானித்தும் மஹாதேவனையும் தேவியையுங் காணுதவர்களாய் மனவாட்டமுற்று கைகளையுயரத்தூக்கிக்கொண்டு தேவர்கள் ருத்ரத்தால் தோத்திரஞ்செய்தனர்.

ஐம்பத்து மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ஜிஷ்ணவே நம:

## ஐம்பத்துநான்காம் அத்தியாயம்.

### உபநிஷத ஸ்துதி.

ஸ்கந்தர்:-ஓ முநிவரே! கேளுங்கள் தேவர்கள்பரமேஸ்வரனை த்தியானித்துக்கொண்டு ஓ ஜகதீஸ்வரா! எவன் ருத்திரனே அவன்

பகவான். எவன் பிரம்மாவும் விஷ்ணுவும் ருத்திரர்களும் உமையும் விநாயகரும் ஸ்கந்தரும் இந்திரனும் அக்நியும் வாயுவும் சூரியனும் வருணனும் யமனும் நிருதியும் ஈசானனும் குபேரனும் நக்ஷத்திரங்களும் அஷ்டவசுக்களும் துவாதசாதித்தர்களும் பதினொருருத்திரர்களும் பிரிதிவியும் அப்பும் தேயுவும் வாயுவும் ஆகாசமும் பூவும் புவரும் சுவரும் மகரும் ஜனரும் தபரும்சத்யரும் பிராணனும்மனஸும் சகமும் காலமும் மிருத்யுவும் தோன்றியதும் தோன்றுவதும் தோன்றுகின்றதுமாய் உள்ளவனெவனோ அவன் பொருட்டு நமஸ்காரம். விஸ்வனும் விஸ்வாதீதனும் நாராயணர் முதலாயினவரையுண்டாக்கினவனும் சர்வேசனும் சர்வசாக்ஷியும் ஸர்வஸ்வரூபனும் வியாபகனும் சநாதனனும் மஹாதேவனுமாகிய தேவரீரையன்றோ சகரு முபாசிக்கின்றனர். ஓ இறைவனே! உம்மிடமே தோன்றிநின்றொடுங்குகின்றமையின் இச்சகமெலாம் உண்மையாய் உம்மினும் பின்னமல்ல. சத்வரஜஸ்தமோரூபிணியும் எம்மோடு சகல ஜகத்தையும் தோற்றுவிக்கின்றவளும் பிறவாதவளுமாகிய மாயையைப் பிறவாதவராகிய நீரொருவரே கூடிப்புசித்த போகமுடையவளாகிய அம்மாயையை விடுகின்றீர். மாயையென்பது பிரகிருதியே. மாயையுடையோன் மஹேஸ்வரனே. உமது அவயவங்களினின்றும் தோன்றியவைகளாலேயே உலகமெலாம் வியாபிக்கப்பட்டுளது. உம்மினும் அன்னியமாகிய பொருள்யாதுமில்லை. எல்லாம் உம்மாலேயே அதிஷ்டிக்கப்பட்டுளது. உம்மை வேறுவிதமாயெண்ணி மூடர்கள் யாமேதன்யரென்றெண்ணுகின்றனர். யாம் மறுமையின்னதென்றறியாத மூடர்களேயன்றோ? உம்மை யன்றி நாங்கள் ஓர்துரும்பையும் சலிக்கச்செய்யச்சக்தியற்றவர்கள். உம்மையின்றி இவ்வுலகத்தில் எவனறிகின்றான்? நீர் ஸகலகர்த்தாவும் விஸ்வாதீதனும் ஏகனுமாகியருத்ரரன்றோ? ஸகலபூதங்களையும் கோசங்களையுங்கடந்துள்ள பராத்பரனும் பெருங்கவளத்தோனுமாகிய தேவரீருக்கு ஸகலஜகங்களும் அன்னமன்றோ? ம்ருத்யுஊர்காயே.ஸர்வாதாரமாகிய பிர்மஹமும் ஹ்ருதயத்திலுள்ளவனும் மும்மாத்திரையுடைய வோங்காரரூபனும் ஈசானனும் பகவனும் சூரனும் வீரனும் விஸ்வேசனும் அவ்யயனும் மனோபுத்தியறிகின்றவனும் பதிகளுக்குப்பதியும் பசுக்களாகிய எங்களைக் காக்கின்றவனும் நீரேயன்றோ? நீரொருவரே ஜீவனது மாயையால் பலவாறாய்த் தோன்றுகின்றீர்? எள்ளில் எண்ணெய்போலும் தயிரில்நெய்போலும் சலத்தில் குளிர்ச்சிபோலும் அரணிகளில் அக்னிபோலுமுள்ளவர் நீரே. ஓமஹேஸ்வரா! உமக்குக்குணம் கர்மம்

ஞானம் ரூபம்முதலியன யாவுமில்லையன்றோ? நீரே ஸம்ராட்டும் பூமாவும் பிதாவும் மாதாவும். நீரே ஸம்சார ரோகங்கள் நீங்கச்செய்யும் வைத்யன். நீரேநிர்விகாரனும் ஸ்வயம்பிரகாசனு மாகிய ஆன்மா. வேதாந்தங்களும் வேதங்களும் உமது ஞானத்தின்பொருட்டுஹேதுவாகுமன்றோ? ஆகாயம் வாயு அக்னி சலம் பூமிஆகிய பஞ்சபூதமும் நீரேயன்றோ? உம்மையறிந்தால் ஸகலத்தையுமறியலாம். உம்மையறியாது மோஹமடைந்த நாங்கள் ஜகதீஸ்வரியால் போதிக்கப்பெற்றோம். அவஸ்தாதீதனன பரமான்மாதேவரீரே. உமக்கன்னியமாகிய மற்றவை பொய்யே. பார்க்கின்றவன் உமக்கன்னியமாயயாதையும் பார்க்கின்றதில்லை. அங்ஙனங் காண்போனும் நீரே. ஓ இறைவனே! உம்மை வணங்குவாம். உமது பயங்கரமாகிய ஆயுதங்கள் அன்னியர் களைவதைசெய்குக. பக்தர்களிடம் தேவரீர் சுகமளிப்போராகுக. ஓ இறைவனே! எங்களை ஆசீர்வதியும். தேவரீர் பாதார விந்தத்தைப் பூசித்தால் ஸகலமுங்கிட்டுமன்றோ? தேவரீரே எங்களுக்குக்குரு. உமக்கு அன்னியமாயுள்ளது பொய்யே. இப்படிப்பட்டவும்மைச்சில மூடர் காண்போனுக் கன்னியனென்று நினைக்கின்றனர். உமது பக்தியற்றவர்கள் உம்மையறியலாகுமோ என்றிவ்வாறு தோத்திரஞ் செய்தனர். ஸ்கந்தர், ஓமுநிவரே! தேவர்கள் இவ்வாறு துதித்துசாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நிற்க வுடனே ஆகாயத்தில் தேஜோராசிபோல் ஸ்ரீமஹாதேவன் ஆவிர்ப்பவித்தனர் என்றார்.

ஐம்பத்து நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

விஷ்ணு ப்ரியாயநம :

## ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்.

### உபநிஷத் ப்ரதிபாதநம்.

ஸ்கந்தர் :-ஓமுநிவரே! ஆகாயத்தில் உமையோடு கூடினவனும் மந்தஹாஸஞ் செய்வோனும்திவ்யமாலையைக்கழுத்திலணிந்தோனும் நேத்ரமாகிய சந்திர சூரியர்களால் ஸகலதிசைகளையும் விளங்கச் செய்கின்றவனும் சரத்காலத்தின்மேகம் போல் வெண்ணிற மாகிய காந்தி யுடையோனும் நாககுண்டல மணிந்தோனும் சந்திரகலையாலும் கங்கையாலும் ஜ்வலிக்குஞ் சடையுடையோனும் சூலத்தையும் மானையுங் கையிலேந்தியவனும் ரத்னகங்கண மணிந்தவனும் இடை

யிற்கத்தியைத் தரிக்கின்றவனும் புன்னகைபுரியு முகமுடையவளும் மல்லிகை முதலிய மலர்களை யணிந்து பரிமளகந்தம் வீசும் கேச பார முடையவளும் சிந்தூர திலகத்தால் ஜ்வலிக்கு நெற்றியுடைய வளுமாகிய தேவியுடன் கூடினவனும் கோடிமன்மதர்களது கர்வத் தையடக்குஞ் சௌந்தர்ய முடையோனும் கோடி சூரியருதித்தது போலும் கோடிசந்திரன் விளங்குவதுபோலும் அற்புதமாகியவுருவ முடையோனுமாய் ஆவிர்ப்பவித்து இறைவன் மேகம்போல் கம்பீர மாயும் அமுதம்போல் மதுரமாயுமுள்ள திருவாக்கால் தேவர்களுக் கருள்செய்வாராயினர். ஓ பிரம்ஹவிஷ்ணு ருத்ரர்களும் ஏனையோர் களுமாகிய தேவர்காள்! கேளுங்கள். மிக்கபராக்கிரம முடையோர் களும் ஸகல ஜகங்களையுந் தோற்றுவித்தல் முதலிய தொழிலுடை யோர்களுமாயினு நீங்கள்இத்துரும்பைச் சலிக்கச்செய்ய ஆற்றலற்ற வரானீர்களன்றோ?யான்உங்களதுதொழில் யாதெனவினவியபோது உள்ளபடி யுரையாது எனது சக்தியைச் சிறிதுஞ் சிந்தியாதவர்களா ய்க்கேவலம் அகங்காரங்கொண்டு தத்தம் பராக்கிரமத்தைக் கூறினீர் களன்றோ? எனது சக்தியின் கருணையற்றமையால் இந்த த்ருண த்தினிடம் சக்தி யற்றவரானீர்கள். எனது மடிமீது வீற்றிருக்கும் உமையாகிய இந்தச்சக்தியே சகல ஜகங்களையுமுண்டாக்கிநிறுவி யழி க்கும் ஆற்றலுடைய வளன்றோ? இவளே சிலகாரணங்களால்தக்ஷனு க்குங் கிரிராஜனுக்கும் பெண்ணு யுள்ளவள். இவள் உண்மையில் காரண காரியங்க ளற்றுள்ளவளும் பிறவாதவளும் ஸநாதனியுமாயு ள்ளவளென்றறிமின். இவளது ஆற்றலின் மஹிமையன்றோ நீங்க ளெல்லோரும்? இவளே எனது பரமமூர்த்தியாயுள்ளவள். இவளில் லாவிடில் என்னல்யாதுஞ் செய்யமுடியாது.உண்மையில்யான் அகர் த்தாவாகிய அஸங்கனே. யாதொருவனேஆதாரமில்லாதவன்.என்னை இவளாதாரமாய்க் கொண்டவள். ஓ தேவர்காள்!சித்ரமாகிய செயலை யுடையவளான இந்தச்சிவையே உங்களுக்குங் காரணமா யுள்ளவள். இவளது சம்பந்தத்தினாலேயே யான் சக்திமானாகின்றேன். இப்பரம சக்தியானவள் எனக்கியற்கையாகவே வுள்ளவள்.சிலமூடர்கள் கால மென்றும் ஸ்வபாவமென்றும் நியதியென்றும் இச்சை யென்றும் பூதக்கூட்டமென்றுங் கூறிமயங்குகின்றனர். இவளை வணங்குங்கள். இவளது கருணையினாலேயே விக்ஷேப ஆவரணங்களினின்றும் விடு படுவீர்கள். முக்தர் ஆவரணம் நீங்கி எனது ஞானம்பெற்றவர்களா யினும் விக்ஷேபஞ் சிறிதுகாலமிருக்கும். ஓதேவர்காள்! நீங்கள்ஆவர ணத்தினின்றும் விடுப்பட்டவர்களாகுக. எனது பிரஸாதத்தினாலே

யேஉங்களுக்கு ஞானங்கிட்டும் ஓதேவர்காள்! நீவிர் வேதவேதாந்தங்களாலுண்டாகவேண்டிய அபார ஞானத்தை விரும்புவீர்களாயின் எனது கிருபையையே வேண்டுங்க ளென்றருளினர்.

இவ்வாறு இறைவனருளியதைக் கேட்டுத்தேவர்க ளெல்லோரும் இறைவனது திருவருளைப்போய் நமஸ்கரித்து ஜகதம்பிகையாகிய பராசக்தியைத் தோத்திரஞ்செய்யலானர். ஓஜகன் மாதாவாகிய ஈஸ்வரீ! ஸகலதேவாசுரர்களாலும் வணங்கப்பட்டபாதாரவிந்தமுடைய வளாகிய சங்கரீ! சங்கரனது மடிமீதிருக்கும் மஹேஸ்வரீ! பவானீ! பவரோக நாசினீ! கதம்பவனவாசினீ!ஹேரம்பஸ்கந்தர்களுக்கன்னையாகிய ஈஸ்வரீ! கிரிராஜகன்யகே! சந்திரகலாதரே! ஈஸ்வரனது திருவருளுக்கெங்களை ஆளாகவருள் புரிவாயாக. உன்னருளின்றி இறைவனது திருவருளுக் காளாவதுண்டோ? தீனர்களாகிய எங்களை நற்கதியடையச்செய்வாயாகவென்று வேண்டினர். ஸ்கந்தர் ஓ முனிவரே! இங்ஙனம் தேவர்களால் துதிக்கப்பெற்ற பரமேஸ்வரி பிரஸன்னையாய் அவர்களை நோக்கி ஓதேவர்காள்!உங்களதுதுதியால் பிரஸன்னையானேன். நீங்கள் விரும்பியதாகிய சிவக்யானத்தை இதோ அருள்புரிகின்றேன். எனது ஞானத்தால் பரமசாந்தியடைவீராக. யானே எனதுண்மைத் தத்துவத்தைக் கூறுகின்றேன்.அதாவது யானே உலகை யறியச்செய்கின்றேன். இவனே அந்தர்யாமி அமிர்தன் புராணன் சகலப் பிராணிகளின் ஹ்ருதயத்தி லுள்ளவன். புத்திமான்கள்இவனை மிக்கசூக்ஷ்மமாகிய புத்தியாற் காண்கின்றனர். இவனே ஆன்மா. அவனே நான். இவ்வான்மாவே பூதபதி; உலகவரம்பு. சூர்யமண்டலத்தினடுவில் பொன்னிறமாய்க் காணப்படும் புருஷன் சிவனே. அவனே திவ்யன்; புராணன்.ஸகலபூதங்களிலிருக்கும் ஆன்மா அவனே. சந்திரனொருவனாயினும் ஜலத்தில் பலவாய்க் காணப்பட்டு சலம் ஜ்லிக்கும் போது அஃதும் சலிப்பதுபோல சர்வபூதங்களிலு மிருக்கின்றானென்றறிக. ஜலம் சலித்தால் சூரியன்சலிப்பதாய்க் காணப்படுகின்றதுபோல அவன் சகல பூதங்களிலு மிருந்தும் அவைகளின் தர்மத்தோடு சம்பந்திப்பதில்லை. இவனே சுதந்தரனாகியபுருஷன்.ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமாயுள்ளவன்.யோகத்தாலும் காண்ப தரிது. இவனுக்கே யான் பிரகிருதியும் ஆகின்றேன். என்னை மனஞ்சலிக்கின்றவர் காண்பதில்லை. சூரியனுக்கும் காந்திக்கும் சந்திரனுக்கும் சந்திரிகைக்கும் எப்படிப்பேதமில்லையோ அப்படியே எங்களுக்கும் பேதமில்லை. அவ்வான்மாவை அவனது பிரசாதத்தினலேயே அறியவேண்டும். அந்தக்யானப்பேற்றிலும் சிறந்

தலாபம் யாதுமில்லை. வேதாந்தங்களால் போற்றப்படுகின்றவனும் ரஸங்களுள் ரஸமாயிருக்கின்றவனும் குணாதீதனும் ஸகலசராசரஸ்வரூபமாயுள்ளவனும் பாபமில்லாதவனும் ரஜோகுண மற்றவனும் சோகமற்றவனும் மரணமற்றவனும் பசிதாகமற்றவனும் சத்யகாமனுமாகிய ஈஶ்வரன் இவனே. இவ்வான்மாவே சிலந்திப்பூச்சி நூற்களையுண்டாக்குவது போலப் பிரபஞ்சத்தை யுண்டாக்குகின்றான். விப்ரர்கள் செய்யும் வேள்விகளால் திருப்தியடைகின்றவன் அவனே. அவன் எனக்கன்னியனுயில்லாவிடினும் எனக்குப் பர்த்தாவாக விருக்கின்றான். நிரூபனுயினும் உருவமுடையோனும் நீலக்ரீவனுமாகிய மஹேசனு யிருக்கிறான் .அவனே சரீரத்தி லான்மாவாயிருக்கின்றான். சரீரத்தை வதைத்தால் அவன் வதமடையான். அவன் உள்ளறிவுருவன் வெளியறிவுருவன் உள்வெளியறிவுருவன் என்பதல்ல. கேவலம் பிரக்யான கனவுருவன். அவன் தனது ஒளியாலேயே விளங்குகின்றவன். ஹ்ருதயத்தில் மிக்கசூக்ஷ்மனு யணுப்போலிருக்கின்றானென்று மூடர்களா லெண்ணப்படுகின்றான்.இவன் சீவனுமல்ல. ஆதிகர்த்தாவாகியசிவனுமல்ல. எவனிலும்பரமாயுள்ள பொருளாவது அபரமாயுள்ள பொருளாவதில்லையோ சத்யக்யானனந்தமாகிய பிரம்ஹம் அவனே. அவனது ஆனந்தலேசத்தாலேயே உங்களது சுகம் வெளிப்படுகின்றது. அவனேயெல்லே. அவனே பிரம்ஹம். அவனே சிவன். ஸகல வேதமந்திரங்களாலும் அறியப்படுவது இஃதேயென்றனள். ஸ்கந்தர், ஒமுநிவரே! இவ்வாறுலோகமாதா கூறி அத்தேவர்கள் முன்னிலையில் ரிஷபாரூடராகிய மஹாதேவனைப் பார்த்துக் கூறலாயினள். தேவர்கள் தேவிகூறியவாக்யத்தைக்கேட்டுப் பேரானந்த முடையவர்களாய் ஸ்ரீ மஹாதேவனையும் மஹாதேவியையும் நமஸ்கரித்து நின்றுகொண்டிருந்தனர்.

ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

பக்தஜீவிதாயநம:

## ஐம்பத்தாறும் அத்தியாயம்,

### தேவர்கள் சிவபூசை செய்தது.

ஸ்கந்தர்:-ஒமுநிவரே! தேவி,ஒஸ்வாமி!தேவர்களெல்லோரும் எனது பிரஸாதத்தால் உமது ஞானதத்வத்தையுணர்ந்து கிருதார்த்

தராயினர். தேவரீர் அநாதிபுருஷர்; குணங்கடந்தவர்; பரமபாவ னர். உம்மினுஞ்சிறிதும் பேதங்காணப்படுவதில்லை. தேவரீரே விஷ்ணுவும் மஹாநும் அத்விதியனும் ருத்ரனுமாயிருக்கும் ஈஸ்வரன். உமது தென்முகமாகிய திருமுகத்தை வணங்குகின்றவர் ஸம்ஸாரக்கடலினின்றுங் கரையேறுகின்றனர். இவர்களெல்லோரும் பசுக்களே யாதலின் அவர்களது பாசத்தை நீங்கச்செய்யும். பதிகளுக்கும் பதியாயுள்ள வும்மிடமிருந்தே உலகரக்ஷகர்கள் தோன்றியிருக்கின்றனர். தேவரீரது ஐஸ்வர்யத்தால் இவர்கள் ஆப்தகாமராகுக. மாயாபாசங்களினின்றும் விடுபட்டவராகுக. ஓ பகவனே! இங்ஙனம் தேவரீ ரருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். ஸ்கந்தர்:-ஓ முனிவரே! இவ்வாறு தேவி வேண்டிக்கொண்டதும் ஈஸ்வரனை வணங்கிநிற்கும் விஷ்ணுபிரம்ஹாதி தேவர்களைக்கருணையோடு நோக்கி அவர்களது சிரசில்கையைவைத்து அவர்களிடம் சத்திநிபாதனம் (பதியச்) செய்து கூறலாயினர். ஈஸ்வரர், ஓ தேவர்காள்! தேவியால் வேதாந்தஞானத்தை நிச்சயமாயுணர்த்தப் பெற்ற நீங்கள் அரிதாகிய தியானயோகத்தால் ஞானமுதிக்கப்பெறுவீர்களாக. இந்தத்தத்துவமானது கண்களால் காணக்கூடியதல்ல. வேதவாதங்களாலும் சாஸ்திரங்களாலும் தர்க்கங்களாலும் அறியக்கூடியதல்ல. குருவின்பிரசாதத்தாலும் சிவப்பிரஸாதத்தாலுமே காணக்கூடியது. அங்ஙனமாயின் அநாதியாயுள்ள ஹ்ருதயகிரந்திகள் நழுவும். அநாதியாகிய அவித்யா விஷயங்களிற் சென்ற பாலர்களுக்கு இது கிட்டாது. நீங்கள் என்னால் நிர்மிக்கப்பட்டவுலகிலேயேயிருங்கள். ஸகலவேதங்களாலும் போற்றப்படும் மஹேசன்யானே. நீவிர் என்னையே வேதங்களாற்ரெளத்திரஞ்செய்தும் வேள்விதானம் தவம் விரதம் க்ஷேத்ரவாசம் முதலியவைகளால்ஆராதித்தும்திரிபுண்டரந்தரித்தும் சிரோவிரதம்பெற்றும்விபூதிபூசியும் ருத்ரபஞ்சாக்ஷரங்களை ஆவர்த்தி செய்தும் சிவலிங்கத்தைப் பில்வபத்ரங்களால் தினந்தோறும் பூசித்தும் பரமபாவனர்களாய் மோக நீங்கினவர்களாயிருந்து மகிழ்வீர்களாக. தேவியின் பிரஸாதத்தினால் ஸகல காமங்களும் நீங்கினவர்களாய்ச் சந்தோஷமாய்ச் சஞ்சரிப்பீர்களாக. அன்றியும் உங்களுக்கு மற்றுமொன் றுரைக்கின்றேன். அதாவது நீங்கள் ஒவ்வொருவரும் கிரிசிகரத்திலும் மற்றுமுள்ள விடங்களிலும் லிங்கரூபியாகிய என்னைப்பூசிப்பீர்களாக. யான் ஸாகார நிரூபனாக விருக்கின்றேனாதலின்முக்கண்ணனும் சந்திரமௌளியும் அம்பிகாசகிதனும் நீலகண்டனுமாகிய லிங்கவுருவமாயிருந்து ஜகத்தைப்பாவனஞ்செய்

கின்றேன். உங்களுக்குக் கைலாயவாஸம் கிடைப்பதரிது. யான் அம்பிகையோடு கூடியவனாய் ஸகலகணங்களாலும் சேவிக்கப்பட்டவனாய் அக்கைலாயத்திலேயே வீற்றிருக்கின்றேன். ஆதலின் அங்குள்ள லிங்கங்கள் அபார மஹிமையுடையன. அந்தலிங்கங்களை நீங்கள் பூசிக்க முடியாது. ஆதலால் கேதாரம், ஓங்காரம், காசி, மஹாலயம், ருத்ரகோடி, பிரபாஸம், ஹிமாசலசிகரம்,மற்றுமுள்ள புண்யதேசம் ஆகிய இவ்விடங்களிலுள்ள லிங்கத்தி லென்னைப் பூசித்து முத்தி யடைவீர்களாக. ஓ தேவர்களே! இதுகாறும் ரகஸ்யத்தைக் கூறினேனென்றருளினர். ஸ்கந்தர்:-ஓமுநிவரே! இவ்வாறுகூறியதையும் தேவிவசனத்தையுங் கேட்டு விஷ்ணுபிரம்ஹா இந்திரன் முதலியவர்களெல்லோரும் மகேஶ்வரனை சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துதத்தமக்கு விருப்பமாகிய இடத்தையடைந்து இறைவனருளியபடி பூசித்தனர். இமாலயத்தையும் கேதாரத்தையும் விஷ்ணு லக்ஷ்மியோடடைந்து தாமரைமலர்களால் தினந்தோறும் பூசித்தனர். பிரமன் ஓங்காரத்தையடைந்து பூசித்து ஸகலஅக்யானமும் நீங்கி நான்கு முகங்களாலும் இறைவனைத் தோத்திரஞ்செய்துக் கொண்டிருந்தனன். ருத்ரர் வாராணசியை யடைந்து விஶ்வேசனாகிய என்னையும் விசாலாக்ஷியாகியவுன்னையும் வெகுகாலம் பூசித்து விமலமாகிய ஞானத்தைப்பெற்றனர். இந்திரன் அமரசுகண்டகத்தை யடைந்து பூசித்து அகண்டமாகிய ஞானத்தைப்பெற்றனன். யமன் கந்தமாதனத்தில் என்னை அருச்சித்து நற்கதியடைந்து மகிழ்ந்தனன். ஓ தேவி! அந்தத் தென்திசைத் தலைவன் மூன்று தளமுடைய பில்வபத்ரங்களால் என்னைப் பூசித்துப் பாதகங்களினின்றும் விடுபட்டனன். குபேரன் ஸ்ரீசைல நாயகனைப் பிரதோஷத்தில் பூசித்து மோக்ஷஹேதுவாகிய ஞானத்தைப் பெற்றனன். அஸ்வனிதேவர்கள் கரஹட்டபுரமடைந்து பூசித்தனர். வாயு சகல காமங்களையுமருளும் வைத்யநாத விபினேசனாகிய என்னைப் பூசித்து மோக்ஷமடைந்தனன். அக்னி திரிபுவனங்களிலும் சிறந்த புஷ்கரத்தை யடைந்து பூசித்து ஸகலத்தையும் புசிக்கும் பாபத்தினின்று விடுபட்டு முக்தனாயினன். மருத்துக்கள் கோகரணஞ்சென்று பூசித்து மகிழ்ந்தனர். பன்னிரு சூரியர் திரியம்பகத்தை யடைந்து பூசித்து மகிழ்ந்தனர். ருத்ரர்கள் ஹ்ருதய புண்டரீகவாசனாகிய என்னைப் பூசித்து மகிழ்ந்தனர். சூரியன் கோபர்வதமடைந்து என்னைப் பூசித்து முக்திபெற்றனன். தேவர்களெல்லோரும்ஸ்ரீகாஞ்சியை யடைந்து ஏகாம்பரேஶ்வரரையும் காமாக்ஷியையும் பூசித்து முக்திபெற்றனர்.மற்றுமுள்ளகிரகங்கள்முநிவர்தே

வர் அசுரர்மனிதர் கந்தர்வர் உரகர்யக்ஷர்ராக்ஷஸர் ஆகியஇவர்களும் ஸ்ரீகண்டம் திரிணசங்கரம் ரத்னசலம் மாதுர்பூதம் காளஹஸ்தி ஜம்புகேசம் ஜப்யேசம் கும்பகோணம் மத்யார்ச்சுனம் பிரமபுரம் வேதகாப்ஜபுரம் சுவேதாரண்யம் மாயூரம் சாயாவனம் முதலிய விடங்களிற் பூசித்து முக்திபெற்றனர். தேவஸ்திரீகள் ஹாலாஸ்யம் சாலிவாடி முதலியவைகளிற் பூசித்து முக்திபெற்றனர். மார்க்கண்டேயர் அகஸ்தியர் இவர்களும் கடஹரேஶ்வரனைப் பூசித்து நற்கதியடைந்தனர். யமனையுஞ் ஜயித்தனர். ஸ்கந்தன்ஸவாமிகிரியில் என்னைப் பூசித்தனன். தக்ஷிணாவர்த்தத்தில் ஸகலகணங்களும் பூசித்தனர். அந்தணவரர்கள் க்ஷிப்பிராந்திக்கரையிலுள்ள என்னைப் பூசித்துக் கணத்துவத்தைப்பெற்றனர். பிருங்கி நந்தி சண்டேசர் பாணன் ராவணன் ஹுண்டன் முதலியவர்களும் என்னைப்பூசித்து மகிழ்ந்தனர்.

ஐம்பத்தாறும் அத்தியாயம்
முற்றிற்று.

௨

ஜிதமன்மதாயநமஃ

## ஐம்பத்தேழாம் அத்தியாயம்.



### மகாலிங்கதரிசனம்.

ஈஶ்வரர்:-ஒதேவி! அப்போது விஷ்ணுபிரம்ஹா ருத்ரன் இந்திரன் வாயு அக்னியமன் சூர்யன் குபேரன் சந்திரன் வருணன் அஶ்வினர் வசுக்கள் மருத்துக்கள்ருத்திரர்கள் ஆதித்தியர்கணேசர்ஸ்கந்தர் நந்தி சண்டி பிருங்கி முதலியவர்கள் பக்திபரவசர்களா யென்னைத் தோத்திரஞ் செய்யலாயினர். ஒதேவி! அதனல் நான்மிக்கதிருப்தியடைந்தேன். பூர்வம் பாற்கடலில் மந்தரகிரியை மத்தாகவைத்துக்கொண்டு வாசுகியை கயிறுகச்சுற்றிக் கடைந்தகாலத்தில் அதனினின்றும் அற்புதமாகிய மணிகளும் காமதேனுக்களும் தாமரைமலரில்தோன்றியவளும் சந்திரனும் கற்பக விருக்ஷமு முண்டாயின. அதனை அவரவரெடுத்துக் கொண்டனர். பின்னர்காளகூடச்சுவாலை தோன்றிவளர்ந்து அநேககோடி பிரம்ஹாண்டங்களையும் ஓர் நொடிப்போதில் எரித்துத் தஹித்துவிட வந்ததுபோல் வியாபிக்க எல்லாத்தேவர்களும் திக்குவிதிக்கா யோடியும் அந்தகாளகூடச்சுவாலை விடாது தகிக்கத் தலைப்படுவதைக்கண்டு அவர்கள் என்னைத் துதிக்க

வே யான் கருணையோடு அந்த காளகூடவிஷத்தை விளையாட்டாகப் புசித்துக் கண்டத்திலடக்கிக் கொண்டேன். அதனாலேயே நீலகண்டனானேன். இப்படி ஆபத்து வந்தகாலத்திலெல்லாம் நீக்கித் தேவர்களுக் கருள்புரிகின்றவன் யானேயன்றோ? முக்கியலிங்கமாகிய இம்மஹாலிங்கத்தைப் பூசித்தல் யாருக்குக்கிட்டும். இந்தலிங்க பூஜனமானது உபநிஷத்வாக்யசித்தாந்த வழி சென்றவனாலேயே செய்யக் கூடியது. சிவலிங்கத்தை அபாரபக்தி யுடையோர்களாகிய பெரியோர்களே பூசிக்கின்றனர். சூரியனுக்கெதிரில் மின்மினிப்பூச்சுகளெப்படியோ அப்படியே என்முன்னிலையில் ஸகலதேவர்களும். ஓதேவி! வேப்பமரம் கற்பவிருக்ஷத்துக்கு நிகாரகுமோ? அஞ்ஞானம் ஞானத்துக்கு நிகாரகுமோ? விஷ்ணுவாதிதேவர்கள் எனக்குநிகராவரோ? அப்படிப்பட்டவன் யானன்றோ? எனது முக்யலிங்க மூர்த்தியும் ஆகாயத்தையுங் கடந்து சென்றதும் ஆனந்தாமுதத்தையளிப்பதுமாகிய இந்தலிங்கத்தின் காந்தியாலெங்கும் ஜோதிமயமாய்க்காணப்படுகின்றதன்றோ? இந்தலிங்கத்தின் காந்தியைத் தேவர்கள் ஆங்காங்கு கண்டு சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து எப்போதும் போற்றுகின்றனரென்றுரைத்தனர்.

ஐம்பத்தேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஐஶ்வர்யகாரணாய நம:

## ஐம்பத்தெட்டாம் அத்தியாயம்.

### ஆத்மலிங்க கதனம்

சூதர்:- இவ்வாறு ஸ்கந்தர் கூறியதிவ்யசரிதசிரவணத்தால் ஆனந்தபரவசராய் ஜைகிஷைவ்யர் ஸ்கந்தரைநோக்கி ஓஸ்வாமி! ஞானனந்த அமுதத்தின் மூழ்கிப் பரவசமான மனமுடையவர்களான யாங்களே தன்யரென்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஆயினும் இங்கு மஹேஶ்வரரால் புதிதாய் மஹாலிங்க மூளதாய்க் கூறபட்டதன்றோ? அதுயாது? லிங்கியென்பவன்யார்? அந்தலிங்கத்தைப்பூசிப்பவன்யாவன்? அந்தலிங்கார்ச்சனத்தினால் என்ன பயனடையப்படும்? அதனைத்தேவரீர் விஸ்தாரமாய்க் கூறியருளுங்களென்று பிரார்த்தித்தனர். அதனைக்கேட்ட ஸ்கந்தர் மிக்கதிருப்தியடைந்து பூர்வம் தேவிக்குப்பரமேஶ்வரன் உரைத்தபடிக் கூறலாயினர். ஸ்கந்தர் ஓ முநி

வரே! நீர்கேட்டது மிக்க அற்புதமாகிய ரகஸ்யம். பூர்வம் இதனை க்கூறும்படித் தேவிபரமேஸ்வரனைப் பிரார்த்தித்துக்கொண்டனள். அப்போது ஈஸ்வரன்தேவியை நோக்கி அவ்விலிங்கத்தின் மஹிமையை நினைந்து புன்னகைபுரிந்தனர். மீண்டும் இறைவனை நமஸ்கரித்து ஒஸ்வாமி! தேவதேவ! மஹாதேவா! இப்போதுகூறிய லிங்கம்யாது? லிங்கிஎன்பவன் யார்? உலகில் எதுலிங்கமெனக் கூறப்படுகின்றது? அதனை எவன் அருச்சிப்பவன்? அதனைக் கருணையுடன் கூறவேண்டு மென்று பிரார்த்தித்தனள். அப்போது ஈஸ்வரன் கூறியதைச் சாவதானமாய்க்கேளுங்கள். அதனைச் சாமான்ய மானவனுக்குரைக்கலாகாது. மிக்க பரிபாகியாகிய விவேகிக்கே கூறவேண்டிய ரகஸ்யமாயுள்ளது. அதாவது ஈஸ்வரன்தேவியை நோக்கி ஓ தேவீ! லிங்கபூஜாக்கிரமத்தைக் கூறுகின்றேன். அதனை மனதில் நன்றாய்வைத்துக் கொள். இது ஸகலசாஸ்திரங்களின் உண்மைக்கருத்தாயும் எனது முக்யரகஸ்யமாயுமுள்ளது. ஆதலால் எவனுக்காவது உரையற்க.

ஸ்லோகம்.

லயநாத்ஸர்வஜகதாம் லிங்கமித்யுச்யதேசிவே
லீனமர்த்தம்கமயதி தஸ்மாத்தல்லிங்கமுச்யதே.
ஸமுக்ரீடாஞ்ச ஜகதோ கச்சதீதிததுச்யதே
தஸ்மால்லிங்கம்விதுப்ராஞ்ஞா லிங்கஹீனஞ்சதத்ப்ரியே.
அர்ச்சனஞ்சப்ரவக்ஷ்யாமி அர்ச்சகஞ்சவிசேஷதஃ
பீடபீட்யாதிரஹிதம் பூஜ்யபூஜாவிவர்ஜிதம்.
த்யானத்யேயாதிரஹிதம் நிர்க்குணம் தமஸஃபரம்
ஜகஜ் ஜன்மோதயாஸ்தான விநாசனவிவர்ஜிதம்.

ஓதேவி! ஸகலஜகமும் இதனிடம் லயமடைகின்றமையால் லிங்கமெனக் கூறப்படுகின்றது. லயமடைந்துள்ள பொருளை வுதிக்கச் செய்கின்றதாதலின் லிங்கமெனப்படும். ஜகத்தை லீலையாக அடைந்தமையால் லிங்கமெனப்படும். இதனால் பெரியோர் அதனை லிங்கமென்றறிகின்றனர். ஓ தேவி! அது (குறியற்றது) லிங்கமற்றதேயாம். அதன் அர்ச்சனையையும் அர்ச்சகனையுங் கூறுகின்றேன். அது பீடமும் பீடமுடையது மற்றதும் பூஜ்யபூஜையற்றதும் த்யானத்யேயமற்றதும் குணமற்றதும் தமஸைக்கடந்துளதும் ஜகத்ஸம்பந்தமானதோற்றநிலையழிவற்றதும் ஓங்காரத்துக்கு ஆதியும்மும்மாத்திரையற்றதும் பாவாபாவமற்றதும் அறிவானும் அறிதலுமற்றுளதும் வியாபிக்கப் படும்பொருளும் வியாபகமுமற்றதும் ஞானம் ஞேயம்ஞாதா என்பவற்றதும் கண்டமும் அகண்டமுமற்றதும்தோற்

றநிலை யொடுக்கத்திரோதானுதியற்றதும் அலக்ஷ்யமல்லாததும் லக்ஷ க்ஷண மற்றதும் சத்தல்லாததும் அசத்தல்லாததும் சதசத்தற்றதும் சத்தையென்பதற்றதுமாகிய கேவலம் ஆன்மதரிசனமேயாம். தோற்றம் தோன்றுதிருத்தலாகிய இரண்டு மற்றதும் தனது விளக்கத்தாலேயே சகலவிளக்கமுடையதும் க்ஷராக்ஷரமல்லாததும் சராசரமில்லாததும் பிரமாணப் பிரமேயமற்றதும் பிந்துநாத மல்லாததும் சாக்ஷிசாக்ஷிய மற்றதும் பிம்பபிம்பிகளைக் கடந்ததும் காணக்கூடாததும் காணக்கூடாத தல்லாததும் மனோவாக்கு களுக்கெட்டாததும் பிராண னல்லாததும் பிராண போதகமும் சக்ஷுவல்லாததும் ஶ்ரோத்திர மல்லாததும் நாசியல்லாததும் பிருத்வியு மல்லாததும் ஆகாயமல்லாததும் இந்திரியங்களுக்கு விஷயமற்றதும் நிகரற்ற ஆகாயமும் ஜிஹ்வையற்றதும் பாணிபாதபாயு முதலிய வற்றதும் ஆகிய தத்துவத்தைத் தெரிசித்தலே அர்ச்சனையாம். இது ஆகாயமுமல்ல அநாகாசமுமல்ல. ஆகாசத்தையும் விளங்கச்செய்வதாம். தேஜஸுமல்ல. ஸகலதேஜஸுகளையும்விளங்கச்செய்கின்றதாம். இது வாயுவல்ல. வாயுவையுஞ் சலிக்கச்செய்கின்றதாம். இதுஜலமல்ல.ஆனால் ஜலத்துக்கு த்ருவத்தன்மையைக் கற்பிப்பதாம். இந்தலிங்கமானது ஒன்பது துவாரமுடைய வீட்டிற்குள்ளிருக்கிற திவ்யபீடத்தில் காணப்படுகின்றது. அது பிரதிஷ்டிக்கப்படாததும் எங்கும்வதனமுடையதும்எங்கும்கையுடையதும்எங்கும் பாதமுடையதும் எங்குஞ்சிரசுகளையுடையதும் எங்கும்பீடமுடையதும் தமஸைக்கடந்ததுமாயுள்ளது. அங்குயாதுந் தோன்றுவதில்லை. பராபரமற்றதும் வேதாந்தத்தினாலறியக்கூடியதுமாகிய நிர்க்குணஸ்வரூபமே அஃது. அதனிடமிருந்தே விசித்திரபுவனங்களுண்டாய் நின்று ஒடுங்குகின்றன. முக்குணமயமாகிய இப்பிரபஞ்சமெலாம் அதனையே ஆதாரமாயுடையது. ஓதேவி! அந்தலிங்கத்தின் பரிமாணத்தைக்கூற எவனாலுமுடியாது. அதற்குப் பரிமாணமில்லை. அது அகண்டம் ஏகம். பிண்டாண்ட பிரம்ஹாண்டங்களெல்லாம் அஃதே. அதற்காலயமில்லை. ஸகலத்துக்கும் அஃதே ஆலயம். ஸகலப்பிராணிகளின் கோசமாகிய கர்ப்பக்கிருகத்திலுள்ளது அஃதே. அது ஸ்வயம்ப்ரகாசமானது. அது ஜீவன் ஈஶ்வரன் முதலியவற்றது. அஃதே ப்ரத்யக்சைதன்யமாகிய ஆன்மா; ஆனந்தகனம்; அத்வயம். பிரம்ஹ விஷ்ணுருத்ர என்பதாதி ஸம்பந்தமுடைய பீடமுதலியவற்றது. அது ஸ்வாத்மைகவேத்யம் (தனதான்மா வொருவனுக்கே யறியக் கூடியதாகிய) லிங்கமாய்த் தன்னிலேயே யுள்ளது. அஃதே

பரமானந்த மாகும். அதற்குப் பின்னமாகிய வஸ்துயாது மில்லை. அந்தலிங்கங் காணப்பட்ட தாயின் காண்போன் என்னுந்தன்மையு மொடுங்கிவிடும். அதுலிங்கமாயினும் அலிங்கமேயாம். அதனை ஏனையோ ரறியார். அஃதே எல்லோராலும் எப்பொழுது முபாசிக் கப்படுவதாம். அவஸ்தாபேதமற்றதும் அஃதே. அது த்ருக்ரூபம். அது கேவலம் போதஹீனம். கிஞ்சிக்ய சர்வக்ஞர்களும் அகங் கார மாயாபரவசர்களுமாகிய ஜீவேஸ்வரர்கள் அந்தலிங்கத்தை க்காண்பதில்லை. சீவன்பிரமனும் ஈசன்விஷ்ணுவுமாம். ஜீவனாகிய பிரமன் மோகஜாலங்களில் மூழ்கினவனாய் அகங்கிரகவுபாஸனை யெ னும் ஆயுதத்தால் சர்வக்ஞனாகிய விஷ்ணு வோடெதிர்த்து யுத்தஞ் செய்தான். அவ்விஷ்ணுவும் அகங்காரவசனாய் யானே ஸர்வேஸ் வரன் என்று கூறிக்கொண்டு யுத்தஞ் செய்ய ஆரம்பித்தான். இவ் வாறு மித்தை (பொய்) யாகிய சாஸ்திரங்களால் மோகாந்தகர்க ளாய் விகாதஞ்செய்யும் அவ்விருவர்களையும் பார். ஓ பவானி! க்ஷ ராக்ஷரர்களாகிய அந்தப்பிரம விஷ்ணுக்கள் மோகம் நீங்கி அவ்வலி ங்கத்தைக் கண்டு பேரானந்தத்தில் மூழ்கினவராயிருந்தனர். ஆயி னும் மீண்டும் மாயாபாசங்களால் கட்டுண்டவர்களாய்த் தரிசனமிழ ந்து மீண்டும் லிங்கத்தினடி முடியை நாம் காணவேண்டு மென்று பலகாலமுயன்று முடியவில்லை. வராஹ ஹம்ஸவடிவங்கொண்டு தே டியுங்காணாது தோத்திரஞ் செய்யவாரம்பித்தனர். ஓ தேவி! க்ஷரா க்ஷரர்களாகிய அப்பிரம விஷ்ணுக்கள் ஹம்ஸ மந்திரத்தால் அலிங்க மாகிய லிங்கத்தைக்கண்டு ஆகாயம்போல் ஸம்பந்தமற்றவராய் ஸக லமோகங்களு நீங்கினவராய் ஆனந்த நிலை பெற்றனர். அப்படிப்ப ட்ட அந்தலிங்கத்தைத் தவிர வேறு லிங்கமுண்டோ. ஓ தேவி! அஃதே அலிங்கமாகிய முக்ய லிங்கமென்றறி. அதனைப் பூசிக்கமுடி யாதவர்கள் சிலாரூபமாயாவது தாதுரூபமாயாவது பாணரூபமா யாவதுள்ள சிவலிங்கத்தைப்பில் வதளங்களாற் பூசிக்கவேண்டும். ஓப வானி! அங்ஙனம்பூஜித்தால் சம்சாரக்கடலினின்றுங் கரையேறலாம். முக்யலிங்கபூசை சாமான்யமாகிய நரர்களாலுஞ் சுரர்களாலுஞ் செய் யக்கூடியதல்ல. தபோதானங்களாலும் ஏனையதர்மங்களாலும் மற்று முள்ள பற்பல வுபாயங்களாலும் அப்பூஜை செய்ய முடியாது. அந்த முக்ய லிங்க பூஜை யாதெனின் அதனைக் கூறுகின்றேன். கேட்பா யாக. அந்த பூஜை மிக்க பெரியோர்களாலேயே செய்யக் கூடியது. அ துவே மிக்கரஹஸ்யம். அதைப்பூஜிக்க அனந்தகோடி ஜன்மங்களில் புண்யஞ்செய்திருக்கவேண்டும். சர்வக்ஞரூபராகிய ஹரியினாலும்

கிஞ்சிக்ஞ ரூபனாகிய பிரமனாலும் வராஹ ஹம்ஸ வுருவங்கொண்டு காண முயன்று மாகாது தோத்திரஞ் செய்யப்பட்டதன்றோ? அங்ஙனமிருக்க அப்பூசையின் மஹிமை என்னவெனக்கூறுவேன். மனதினால் ததாகாரமாய்ப் பார்ப்பதனாலேயே அப்பூசை சித்திக்கும். அதுமிக்கவிசித்திரமாயுள்ளது.

ஐம்பத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஜ்யாயஸோநம:

## ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்.

### உபநிஷது லிங்ககதனம்.

ஈஸ்வரர்:- ஓதேவி! யாம் ஈசஜீவர் என்ற வபிமானங்கொண்டவர்களாதலின் விஷ்ணுபிரமர்களும் அந்தவிலிங்கத்தின் அடிமுடிகளைக் கண்டிலர். அகங்கார முள்ளவர்களாய் வர்ணாச்சிரம தர்மாபிமான முள்ளவர்களாகிய மனிதர்க ளதனைப் பூஜிக்கவியலாது. அத்தகைய பூஜையின்றி முக்தி கிட்டாது. தேவர்களைப் பூஜிப்பதினும் எனது லிங்கத்தைப் பூஜித்தல் சிறந்ததாகும். ஓதேவி! எனது பௌதிகலிங்க பூஜையானது பில்வபத்ர முதலிய சாதனங்களால் நிறைவேறும். ஈண்டு கூறிவரும் பூஜையானது ஆன்ம ஐக்கியமேயாம். இந்த பூஜைக்கே ஏனையபூஜைகள் ஸாதனமாகும். விபூதிருத்திராக்ஷதாரணம் பஞ்சாக்ஷரஜபம் ருத்திராத்தியாய ஜபம் சிவநிவேதன போஜனம் இவைகள் சித்தத்தைச் சுத்தமாக்குகின்றமையின் ஞானாங்கமெனப்படுவதாம். ஜாபாலம் அதர்வணம் கைவல்யமுதலிய வுபநிடதங்களுள் விபூதிருத்ராக்ஷ தாரணம் லிங்கார்ச்சனை பஞ்சாக்ஷர ஜபம் இவைகளைக் கூறி "த்யாயீத ஈசானம்" (ஈசானனைத்தியானியுங்கள்) "சிவ ஏகோத்யேயஃ" (சிவனொருவனே தியானிக்கவேண்டியவன்) "உமாசகாயம்பரமேஸ்வரம்" (உமையோடுகூடினவனும் பரமேஸ்வரனுமாயுள்ளவனை) என்பதாதி மந்திரங்கள் இவையெலாம் ஹ்ருதயலிங்காராதனத்தின் பொருட்டே என்பது விளங்குகின்றது. யாக தான விரதங்கள் அதன் பொருட்டே சாதனமாகும். இப்பூசையானது பூஜ்யபூஜகர்களற்றுளதும் தூபதீபம்சந்தன புஷ்பம் பஞ்சாமிர்தம் நிவேதனம் முதலிய சாதனங்களால் முடியாது. பாவனையொ

ன்றினுலேயே எளிதிற்கிடைக்கும். யோகிகளுக்குங் கிடைப்ப தரிது. பிரக்ஞையெனும் மஹா கங்காதீர்த்தத்தில் "நித்யசுத்தோஹமஸ்மி" (யான் நித்யசுத்தனுயிருக்கின்றேனென்று) ஸ்நானஞ் செய்து ஸ்வான்மக்யான மஹா விபூதியைப்பூசி ஞானம் வைராக்யம் போதம் எனும் திரிபுண்டர மணிந்து சாந்தி தாந்தி உபரதி முதலியஅப்யாஸமாகிய ருத்ராக்ஷமாலையைத் தரித்து பஞ்சபூத தத்வ பஞ்சீகரணத்தால் நிர்மலனுய் பஞ்சகோசமுங் கடந்துள்ள பொருளாகியபஞ்சாக்ஷரத்திற் பாராயணனுய் ஐந்துபிராணன் மனம் இவைகளின் தன்மையும் சகல இந்திரியங்களுமற்றவனுய் யான் பரப்பிரம்ஹமாகிய ஈசன் வாச்ய வாசகமற்றவன் என்று த்யானித்துக்கொண்டு ஸ்வாத்மைகக்கியான ஆனந்தஸமுத்திரத்தில் மூழ்கினவனுய்மோஹம் நீங்கி மஹாமாயையெனும் கர்ப்பக்கிருகத்தி லிருக்கின்றவனுய்த் தனது நிஜ ஆன்ம லிங்கத்தில் பஞ்சகர்ம இந்திரிய ரசமாகிய பஞ்சகவ்யத்தையும் பஞ்ச கர்மேந்திரியமாகிய பஞ்சாமிர்தத்தையும் அகண்டைக்யானு சந்தானமாகிய ருத்ரஜபத்தோடு கூடினவனுய்அபிடேகித்து மனேலயமாகிய சந்தனத்தைப் பூசுவோனுய் ஸர்வான்மத் தன்மையாகிய வஸ்திரத்தைவுடுத்தித் தனது ஆத்மலிங்கத்தைஸோகமெனும் அக்ஷதைகளால் அர்ச்சிக்கவேண்டும். மகாவாக்யானுசந்தானமாகிய பில்வங்களாலும் அர்ச்சித்து நான்கு வேதசாரமாகிய மஹாவாக்யங்களின் உச்சாரணமாகிய ஆபரணங்களால் அலங்கரித்துதேகஜாலங்களாகியபக்ஷ்யபோஜ்யங்களைநிவேதனஞ்செய்து "அஹமஸ்மி" என்ற தாம்பூலத்தைச் சமர்ப்பித்துச்சமாதியாகிய புஷ்பங்களைச் சாத்தித் தேக சம்பந்தமற்ற பிரதக்ஷண நமஸ்காரங்களைச் செய்து மஹானந்த மாகிய கரதாளத்தோடு யானே விஸ்வமென்ற கீதத்தைப்பாடி சர்வஸங்க பரித்யாகமெனும் சத்ரசாமராதிகளால் ஆராதித்துப்பூஜ்ய பூஜகாதிகளை லயிக்கச்செய்வதால் இப்பூசை நிலைபெறுவதாம். ஓதேவி! இந்தப் பூஜைக்கு ஆவாஹனம் உத்வாஸன மில்லை. காலதேச நியமமுமில்லை. இதற்குச் சாதனமுமில்லை. எப்பொழுதும் சர்வபாவத்தால் (எல்லாமாந் தன்மையால்) ஆன்மலிங்கத்தைப் பூஜிக்கவேண்டும். ஓ தேவி! இந்தப் பூஜைக்கு மஹா நிவேதனமானது திரிசியமாகிய ஸகலப்பிரபஞ்சமுமே. அப்படி நிவேதித்த சேஷத்தைப் புசித்துச் சுகமனுபவிப்பான். பின்னர் குணத்திரயங்களின்மையாகிய சங்கதீர்த்தத்தை "ஸதாசிவோஹம்". (யான்சதாசிவன்) என்று உச்சரித்துப் புசிக்கவேண்டும். ஓ தேவி! இங்ஙனம் ஆத்மலிங்க பூஜையைக் கூறினேன். இவ்விதம்தினந்தோறும் பூஜ்ய

பூஜனத்தன்மையற்றவனுய்ப்பூஜிப்பவன் ஸகலலோகத்திற்கும் பூஜ்யனுய்லிங்கமயனுகின்ருன். ஓ தேவி! இஃது பூஜையாலும் லிங்கத்தாலும் உபாஸனையாலும் வேதாத்யயனத்தினுலும் மற்றுமுள்ளதர்மங்களாலுங் கிடைக்காது. எனது பிரஸாதமொன்றினுலேயே கிடைப்பதாகும். இதனுற் கிடைக்கும் பொருள் பிராணகோசமுமல்ல. ஆனந்தகோசமுமல்ல. விக்ஞானகோசமுமல்ல. அன்னகோசமுமல்ல. மனேகோசமுமல்ல. அணுவுமல்ல. தீர்க்கமுமல்ல. பந்தமுமல்ல. முக்தமுமல்ல. துவைதமுமல்ல. மற்று அனீசமாகிய வோர் பரமேயாம். தேசகால முதலியன வில்லாமையால் வியாபகமுமல்ல. அவஸ்தை முதலியன வற்றுளதும் லிங்கமற்றதும் ரஸாதிகுண மற்றதும் ஏகமும் சிதானந்த ரூபமும் கனமும் அகண்டமும் மனேவாக்குக்கதீதமும் அநாதியும் சூக்ஷமமும் சுத்தமும் போதமும் அஸங்கமுமாயுள்ளது. ஓ தேவி! அந்தலிங்கமேயான். அஃதே ஸகலலோகங்களுமாயுள்ளது. அவ்விலிங்கப் பிரசாதத்தினுலேயே பூமி சலம் அக்னி வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் ஆகிய இவைகள் விளங்குகின்றன. ஜடமாகியஇஃதெல்லாம் எதனுல்விளங்குகின்றன அதனைக்கண்டால் இஃதெல்லாம் காணப்பட்டதாகும். அது பஞ்சேந்திரியங்களுக்கும் விஷயமல்ல. ஸகலதேவர்களின் ஹ்ருதயத்திலுள்ளது அஃதே. அது ஆணுமல்ல பெண்ணுமல்லஅலியுமல்ல. பால்யமுடையதும்யௌவனமுடையதும் வார்த்திகமுடையது மல்ல. அது நீண்டதுமல்ல. குறுகியதுமல்ல. கறுப்புமல்ல. வெளுப்பு முதலியவையுமல்ல. அது வட்டாகாரத்துவமு மல்ல. நாற்கோணமு மல்ல. மேலுள்ளதுமல்ல. கீழுள்ளதுமல்ல. அஃது அகண்ட மேயாம். ஸகலவண்டங்களிலும் விஸ்தார மாயுள்ளதும் அஃதே. அது உலர்ந்தது மல்ல நனைந்ததுமல்ல. அதனிடமிருந்தே பிரமவிஷ்ணு ருத்திரேந்திரர்களும் மஹாபூதசங்கங்களும் தோன்றி நின்று அதனிலேயே வொடுங்குகின்றனர். அதனையே பிரம்ஹமென்றறி. அஃதே பஞ்சேந்திரியங்களால் ஐந்து புலன்களையு மறிகின்றது. அஃதே மனதையெண்ணச்செய்கின்றது. நதிகள் ஸமுத்திரத்தினிடஞ் சேர்ந்து நாமரூபங்களை விட்டொன்ருவது போல் அந்த லிங்கத்தைத் தரிசிப்பதினுல் நாம ரூபங்களை விடுத்ததனே டொன்ருவான். அந்த லிங்கமே தொனி பிந்து மாத்திரை முதலியவைகளைக் கடந்துளதும் வேதாந்தங்களில் ஓமென்று கூறப்படுவதுமாம். அஃதே பூரணத்திலும் பூரணம். எப்பொழுது தமஸுளதோ அப்பொழுது இரவில்லை. பகலில்லை. அந்தலிங்க மொன்றேயுளது. அஃது அக்ஷரமும் சூரியம

ண்டலத்திலுள்ளது மாம். அதனிடமிருந்தே பழமையாகிய பிரக்ஞை பரவியது. அந்தலிங்கத்தை யறியாதசிலர் காலமே பரமென்றும் ஸ்வபாவம் பரமென்றும் புலம்பித் திரிகின்றனர். அந்தலிங்கத்தை யறிந்தவர் துக்கநீங்கி பரமசாந்தி யடைகின்றனர். அந்தலிங்கமே அணுவுக் கணுவாய் மகத்துக்கு மகத்தாயுள்ளது. பராபரமாகிய அந்தலிங்கத்தைக் கண்டால் சித்தபந்தங்களும் ஸகலசம்சயங்களும் ஸகல கர்மங்களும் நசிக்கின்றன. அந்தலிங்கமேசோதிகளுக்குச் சோதியும் சேதனங்களுக்குச் சேதனமுமாயுள்ளது. அந்தலிங்கத்தைக் கண்டவர்களுக்கு சோகமோகம்யாது? அதனைக் காணாதவர்களுக்கே அடிக்கடி ஆபத்துகளும் ஜனனமரண ஜராதுக்கங்களும் வரும். ஆனந்தமாகிய அந்தலிங்கத்தை யறிந்தவர்களுக்கு ஒருக்காலும் பயமில்லை. அந்தலிங்கமொன்றையே யறியவேண்டும். அஃதே தியானத்தியேய மற்றது. ஞானக்ஞேய மற்றதும் நாமரூபமற்றதும் பிறவாதது மாயுள்ளது. அதனை யாரோ ஓர்தீரன் பார்க்கின்றான். எப்பொழுது மனிதர் ஆகாயத்தைதோலைப்போல் போர்த்துக்கொள்வார்களோ அப்போது அவ்விலிங்கத்தையறியாது துக்கநீங்கி முக்தியடையலாகும். அஃது உள்ளறிவாவது அல்லது வெளியறிவாவது அல்லது இருவகையறிவாவது அல்லது அறிவுடைய தாவது அறிவில்லாததாவதுஅல்ல.அது அதிசயமும் கிரகிக்க முடியாததும் ஏகாத்மக்யானமும் பிரபஞ்சம் நீங்கியதுமாம். அஃதே வேதாதியில் ஸ்வரமாயுள்ளதும் வேதாந்தத்தில் பிரதிஷ்டிதமாயுமுள்ளதாம். அந்தலிங்கபிரகிருதியில் பிரம விஷ்ணு ருத்ரர் லீனராகின்றனர். அஃதே பிரம்ஹாவும் சிவனும் விஷ்ணுவும் விராட்டும் சுவராட்டும் ஸம்ராட்டு மாயுள்ளது. அதனை மேதாவிகளாகிய பெரியோர் மனதாற் காணுகின்றனர். சிரவணத்தின் பொருட்டு பலரால் அடையக் கூடாததும் சிரவணஞ் செய்தும் அறியப்படாததும் அஃதே. யாரோஒருவர் அதனை ஆச்சரியம் போல் காண்கின்றனர். ஆச்சரியம் போல் கேட்கின்றனர். ஆச்சரியம் போலறிகின்றனர். அந்தலிங்க மின்றிப்பிராணனாலும் அபானனாலும் ஜீவிக்கின்றானென்பதில்லை. ஸகலபிரஜைகளையும் உண்டுபண்ணுவதும் சத்வரஜஸ் தமஸாயுமுள்ளதும் பிறவாததுமாகிய வொருத்தியைப் பிறவாத வனாகிய லிங்கியானவன் கூடிக்கலக்கின்றான். அந்த லிங்கத்தின் நிலை பெற்றவனாய் அவனை விட்டு விடுகின்றான். அந்தலிங்கமாகிய ஆன்மாவையே தரிசிக்கவேண்டு மாயின் வேதமென்னு மலைகளிலேறி சிரவணஞ் செய்யவேண்டும். ஹேமஹேஸ்வரி! ஆனந்தரச

மும் சுயம்பிரகாசமுமாகிய அந்த லிங்க மீராவிடின் எவன் எத
ஞல் ஜீவிப்பன். அவனிலும் பராபரமும் சிறிதும் பெரிதும் யாதுமி
ல்லை. விருக்ஷம்போல் நிச்சலமாய் பரமாகாயத்திலுள்ளது அவ்வி
லிங்கமே. அதனிடம் மனோவாக்குகள் செல்லாது திரும்புகின்றன.
ஓதேவேசி! அதுபிரமாண்டத்தையுங் கடந்துள்ளது. பூமியில் புதை
யுண்டிருக்கும் புதையலை அறியாது ஜனங்கள் மேற்பிரதேசத்தில்
நடப்பதுபோல் மனிதர்களும் அதன் சம்பந்தமாகவே சகலவிவ
காரங்களையும் நடத்திக்கொண்டிருந்தும் அறிகின்றதில்லை. சாக்ரம்
சுவப்னம் சுழுத்தி ஆகிய அவஸ்தைகளில் எந்தலிங்கமானது மனதி
ஞலடையப் பட்டுளதோ அதனையானென்றறிந்தவன் சம்சார நீங்கு
கின்ருன். சிலந்திப்பூச்சி நூற்களையுண்டாக்கிச் சிலகாலத்திற்குப்
பின் தனது வாயினுல் அந்நூற்களையே புசிக்கின்றது போல அந்த
லிங்கமானது ஸகல ஜகத்தையு முண்டாக்கி யொடுக்கிக் கொள்ளு
கின்றது. ஓதேவி! அந்தலிங்கமானது வாராணசியில் விஸ்வநாதனெ
னும் பெயருடன் விளங்குகின்றது. அங்கு மரித்தவர்களுக்குப் பிர
ணவமாகிய பிரம்ஹமந்திர மெனும் ஓங்காரதாரக முபதேசிக்கப்
படுகின்றது. அவ்வுபதேசம் பெற்றவன் மீண்டும் பிறவாது அந்த
லிங்கமாகின்ருன். நேரில் ஆன்மலிங்கத்தைக்காண முடியாதவர்க
ளுக்கு பௌதிகலிங்கம் முக்திதருகின்றது. அதைத்தரிசிக்கும் மனி
தர் கிரமமாய் முக்திபெறுவார். அந்தமுக்யலிங்கத்தில் பேதபுத்தி
செய்தவர்க்கே பயம் நிகழும். அந்தவிலிங்கமே ஹ்ருத் புண்டரீகத்
தில் எப்பொழுதும் விளங்குகின்றது. வேதாந்த விக்ஞானத்தால்
அர்த்த நிச்சயம் வந்த யதிகளால் சந்யாசயோகத்தால் அந்தலிங்க
மே அடையக் கூடியது. ஓதேவி! இதனையூகித்தறிய முடியாது.
துராசாரங்களினின்று ஒழியாதவனும் சாந்தி சமாதியில்லாதவனு
மான மனிதனுக்கு அந்தவிலிங்கம் விளங்காது. எவர்களது மனம்
தூய்மைபெற்றுளதோ அவர்களுக்கு விளங்கும். ஆதலால் ஆத்ம
காமனுயுள்ளவன் அவ்விலிங்கத்தைப் பூசிக்கவேண்டும். காமனை
யைக்கருதியவன் இந்தலிங்க பூஜையில் அதிகாரியல்ல. ஓ மஹேசி!
இந்த ரகசியார்த்தத்தை சமானியரறியார். ஞான நிஷ்டரே அறி
கின்றனர். இந்த லிங்கபூஜையில் குரு சிஷ்யன் பூஜ்யன் பூஜகன்
பிரதோஷ முதலியதுயாதுமில்லை. இவ் விலிங்கத்துக்கு சர்ப்ப பூஷ
ணமாவது சந்திரகலையாவது இல்லை.

ஐம்பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

யக்ஷகின்னரஸேவிதாயநம:

# அறுபதாம் அத்தியாயம்.

## உபநிஷது லிங்க பூஜாமகிமை.

ஈஸ்வரர்:-ஓ தேவி! மிக்க ஹிதமாயுள்ளதைக் கூறுகின்றேன். இப்போது கூறிய பூஜையானது அனந்தமாகிய பயனையுடையதும் கர்மங்களையழிப்பதுமாகிய மனோலயமென்னும் மஹாக்யான பூஜையேயாம். தேவராயினும் மனிதராயினும் அந்தப் பூசையைச்செய்வாராயின் பிறவி நீங்கிப் பெறும்பேறெய்தலாம். அந்தப்பூசை சாமானியமாயுள்ளவனுக்குக்கிட்டாது. எண்ணிறந்ததவம் யோகம் யாகம் முதலிய புண்ணியகர்மங்களைச்செய்து எனது பிரஸாதம் பெற்றவனெவனோ அவனுக்கே அப்பூஜைகிட்டும். விபூதி ருத்திராக்ஷந்தரிப்பவனும் ருத்திராவர்த்திசெய்கின்றவனும் பஞ்சாக்ஷர பரனும் லிங்கார்ச்சகனும் பிரதோஷம் சதுர்த்தசி அஷ்டமி சோமவாரம் முதலிய காலங்களில் நியமத்தோடென்னைப் பூசிக்கின்றவனும் எனது க்ஷேத்திரமாகிய அவிமுக்தத் (காசி) தில் விஸ்வேஸனை யர்ச்சிக்கின்றவனும் மஹாளயம் ருத்திரகோடி காலஞ்சரம் பிரபாசம் புஷ்கரம் அமரகண்டகம் பிண்டாரகம் குருக்ஷேத்திரம் மஹாகாளம் மாஹேஸ்வரம் தேவதாருவனம் நைமிசம் சித்திரகூடம் கேதாரம் வைத்யநாதம் ஸ்ரீசைலம் ஓங்காரம் வேணுவனம் ஆவடங்கம் ஸோமநாதம் கோகர்ணம் திரியம்பகசைலம் தக்ஷிணகைலாஸம் ஏகாம்பரவனம் விருத்தாசலம் அருணாசலம் கோபர்வதம் சிதம்பரம் சுவேதாரண்யம் கஜாரண்யம் ரத்னகிரி ஸ்ரீகண்டம் மாத்ருசைலம் கோடிகை திருதிவனம் கும்பகோணம் அருச்சுனம் சுந்திரகிரி மாதவிவனம் தேஜினிவனம் க்ஷீரணிவனம் சமீவனம் பில்வவனம் கடேசம் பிரம்ஹவனம் சாயாவனம் ஸ்ரீவாஞ்சியம் வேதவனம் வன்மீகம் வாதபுரி சேது ஹாலாஸ்யம் சாலிகவனம் கஜனசலம் மஹேந்திரகம் இந்தபுண்ணிய க்ஷேத்திரங்களில் வசிப்பவருமாகிய புண்யவான் எவனோ அவனுக்கே எனது பிரஸாதங்கிடைக்கும். எனது பிரஸாதத்தினாலே அந்த ஞானங்கிட்டும். ஓதேவி! அநேககோடி ஜன்மங்களில் எனது பிரஸாதத்திற் காளானவனுய் வைராக்ய பக்தியுடையவனுக்கே சித்தசுத்தியிருக்குமாகையால் ஆத்மலிங்கார்ச்சனை புத்தியுதிக்கும். பிரபஞ்ச சுகத்தில் மனஞ்சென்றவர்களுக்கு அத்தகையமதியுதிக்காது. அநேக மாயிரம் கீழ்ச்சென்றுசனன மெடுத்து ஏதோ

வோர் புண்யவிசேடத்தால் மாநுடஜன்மம் கிடைக்கும். என்னைத்தியானிப்பவனும் அதர்வசிரசு ஜாபாலம் கைவல்யம் காலருத்ரம் முதலிய வுபநிடதத்தை ஜபிப்பவனும் ருத்ராவர்த்தி செய்கின்றவனும் பஸ்மநிஷ்டை பெற்றவனுமாகிய எவனோ ஓர்சிவயோகிக்கே இதில் மதியுதிக்கும். பின்னர் ஞானப்பியாசத்தில் முயலுவோனாயின் அவனுக்கு இந்த ஆத்மலிங்கஞானங்கிட்டும். ஏனையோருக்குக் கிடைப்பதரிது. ஹ்ருதயபத்மத்தில் சதுர்ப்புஜனும் மானையும் பாணத்தையுந்தரிப்பவனும் கர்ப்பூரம் போல் வெண்ணிற மேனியுடையோனும் சடையில் சந்திரகலையையும் கங்கையையுந் தரிப்பவனும் ஸர்ப்பாபரணனும் முக்கண்ணனும் கறைக்கண்டனும் சந்திரன் போன்ற முகமுடையவனும் உமையோடு கூடினவனும் திவ்யரத்ன சிம்ஹாசனத்தில் வீற்றிருப்பவனு மாகிய என்னை க்ஷணமாவது அரைக்ஷணமாவது தியானிப்பானானால் ஆன்மலிங்கத்தியானத்துக்கு வேண்டியசாதனம் பெற்றவனாவான். ஓதேவி! சிவன்ருத்ரன் ஹரிவிதி இந்திரன் அக்னிவாயு யமன் வருணன் சந்திரன் சூரியன் குபேரன் மருத்துக்கள் அஸ்வனிதேவர் ஆதித்தியர் ஸ்கந்தர் விக்நேஸ்வரர்நந்திகேஸ்வரர் முதலியயாவர்களும்யானே. இவர்கள் என்னிடமிருந்தேயுண்டானார்கள். யானே பிரமனுக்கு வேதங்களை யுபதேசித்தேன். விஷ்ணுவுக்குச் சக்கிரம் தந்தேன். எனது ஐஸ்வர்ய ரூபத்தை அகமேவ என்று தியானிக்கின்றவர்களுக்கு எனது ஞானங்கிட்டும். அல்லது சூரியமண்டலத்தில் பொற்கையனும் பொன்மீசையனும் பொன்வண்ணனும் அம்பிகாபதியுமாகிய என்னைதியானிக்கலாம். அவனுக்கும் ஞானமுதிக்கும். இயமநியம ஆசனமுடையோனாய் வாயுவைப் பூரகத்தினாலிழுத்து மூன்று கடிகை கும்பகஞ்செய்து சலிக்காமலிருந்தால் தான்யசூகம்போல் சூக்ஷ்மமாயும் மின்னல் ஸ்படிகம் முதலியனபோல் ஜ்வலிக்கின்றதுமாகிய சோதியானது காணப்படும். அவனே ஆன்மா. அவன்கால் முதல்தலையீறாய் ஸகலசரீரங்களையும் வியாபித்துக்கொண்டிருக்கும் அஸங்கபுருஷனாகிய யான். யாதொருவன் என்னை யோகத்தினால் காண்கின்றானோ அவனுக்கு அஷ்டமஹாசித்திகளும் சித்திக்கின்றன. அவனதுசிரசில் ஆயிரம் இதழ்த்தாமரையில் ஆவின்முலைக்காம்புபோல் அமுததாரையானது கபாலத்தை விட்டு இடையெனும் நாடியில் பிரவகித்துக்கொண்டிருக்கிறது. எப்போதும் தஹராகாசத்திலிருக்கின்றவனாய் இந்திரிய மனோவாக்குகளை ஏவுவோனும் யானே. பராபஸ்யந்தி மத்யமாவைகரி இவைகளில் பிராணவடிவாயிருப்பவன் யானே.

யானே. அலிங்கனும் தேவதிரியக் மனிதர்களு ளிருப்பவனும் நாமரூ பங்கடந்தவனும் அகங்கார மற்றவனும் பதினாறு கலையுடையவனும் நினைப்போனும் அறிவோனும் அநுபவிப்போனுமாயிருக்கின்றேன். ஆனமயின் நாவானது மிக்கநீளமாயினும் குறுகுவதுபோலும் நதிகள் ஸமுத்திரத்தை யடைந்து நாமரூபம் நீங்குவனபோலவும் சூரியனோடு தனது கிரணங்களொடுங்குவனபோலவும் என்னிடம் ஜகமொடுங்குகின்றது. சூரியகிரணத்தால் தாமரைமலர்வது போலவும காந்தசந்நிதியில் இரும்பு சேட்டிப்பதுபோலவும் எனது சந்நிதியில் காலகர்மவிபாகத்தால் ஸகலசகமும்சேஷ்டிக்கின்றது. யானே இவைகளைச் சிருட்டித்து அதிற் பிரவேசித்து நாமரூபகுணங்களால் பிரமாவிஷ்ணு ருத்ரர் எனும் பெயருடையவனாயிருக்கின்றேன். முந்தினயுகத்தில் எப்படிசிருஷ்டித்தேனோ அப்படியே பிந்தினயுகத்திலும் சிருட்டிக்கின்றேன். அக்னியினின்றும் தீப்பொறிகளுண்டாவதுபோல் என்னிடம் ஜகமுண்டாகின்றது. இந்திரன் சூரியன்வருணன் சந்திரன் மநு பிதுரர் அந்தணர் அரசன் கிரகங்கள் இவைகள்யானே. ஸகலசரீரங்களிலு மிருக்கின்றேனாயினும் ஓர்குணமுமின்றி ஸகலத்துக்கும் போக்தாவாயிருக்கின்றேன். உள்ளும்புறம் புமுள்ளவன் யானே. என்னை எவன் அறிகின்றானோ அவன்யானே. யோகம் சாங்கியம் இவ்விரண்டும் எனக்குமிக்கப் பிரியமானவை. எலோருக்கும் பொதுவாய் உபாஸனையையுங்கூறுகின்றேன். ஆவின் சகல சரீரத்திலும் க்ஷீரமிருப்பினும் முலைக்காம்பில் காணப்படுவதுபோல் யான்சர்வவியாபியாயினும் சிவலிங்கத்தில் காணப்படுகின்றேன். ஆன்மலிங்கத்தை ஞானயோகத்தினால் காணச்சக்தி யற்றவர்க்கு லிங்கத்தில் பூசை விதிக்கப்பட்டது. விபூதிருத்திராக்ஷ தாரணம் பஞ்சாக்ஷரஜபம் ருத்திராவாத்திஆகிய இவைகளைச்செய்துகொண்டு ஓர்பில்வபத்திரத்தை எனது சிரசில்வைப்பவனுக்குஞானமளிக்கின்றேன். அது எனக்குப் பிரதிக்ஞை. ஓதேவி! பற்பல விதமாகிய வருணாசிரமதருமங்களாலும் இஷ்டா பூர்த்தங்களாலும் கன்னிகாதானங்களாலும் யான் அவ்வளவு திருப்தியடையேன். இவைகளெல்லாம் என்னைப் பூசிப்பதற்கு பிரியத்தை யுண்டு பண்ணும். இதரபுண்டரந்தரிக்கும அந்தண சந்நியாசியிடம் எனக்குப் பிரீதியில்லை. எனது புண்டரந்தரிக்கும் சந்நியாசியிடமே மிக்கபிரீதியுளது. விபூதித்திரிபுண்டர மணிந்தவனே எனக்குச்சம்மதன். ஊர்த்துவ புண்டரத்தை பிரமத்தினாலுந் தரிக்கக்கூடாது. அப்படித் தரித்தால் அவன் செய்வதெல்லாம் நரகின்பொருட்டேயாம். அவனது பிதுர்

க்களும் அதோகதியடைவர். ஊரத்துவ புண்டரந்தரித்தவனைப் பார்க்கநேரிடுமாயின் கண்களை மூடிக்கொள்வேன். எனதுநேத்ரம் எவன் பொருட்டு மூடுகின்றதோ அவனுக்கு ஞானமுதியாதன்றோ? கைலாய சிகரத்திலுள்ள கைலாசேசுவரமெனும் லிங்கத்தைத் தேவனாயினும் மனிதனாயினும் ஏனைய ஜந்துவாயினும் ஒருக்ஷணகாலம் நினைப்பின் அவனுக்குடனே சாந்நித்யம் தருவேன். இதன்மஹிமையை யாவருமறியார். இது லிங்கராஜமெனப்பெயரியது. எனக்கு அபாரமாகிய ஆனந்தத்தையளிப்பதும் போகமோக்ஷந்தருவதும் பிரமவிஷ்ணு ருத்ரர்களுக்கு லோகவியாபாரத்தை நடத்துவதற்குத் தக்கயோக்யதையைத் தருவதும் இந்தலிங்கமே. ஓதேவி! நானொருவனுக்கு மிதனைக்கூறியதில்லை. இந்தலிங்கத்திலேயே கற்பந்தோறும் ஸகலசராசரமு மொடுங்குகின்றது. ஆகலின் இந்த லிங்கமே ஸகலாதாரமாம். பிரளயகாலத்தில் யான் நீ ஸ்கந்தன்ஹேரம்பன் முதலியவர்களோடு கூட எனதுருவத்தை யொடுக்கிக்கொண்டு இந்த லிங்கத்தில் வசிக்கின்றேன். ஸகலஜகங்களின்தோற்றநிலையொடுக்கத் தொழிலானது எனது லீலையே. காரணங்களுக்குக் காரணனும் பதிகளுக்குப் பதியும் சேதனர்களுக்குச் சேதனனும் கரணங்களுக்கு அதிபாதிபனும் காலவரைக்குளடங்கிய ஸகலங்களையு முண்டாக்குகின்றவனும் தனக்குக் காரணமற்றவனும் ஸகலபூதங்களிலும் வசிப்பவனும் யானே. ஓதேவி! இது மஹாரகஸ்யமாயுள்ளதாயினும் உனக்கு விளக்கிக் கூறினேன். தேவர் முனிவர் முதலியவர்களுக் குரைத்தேனில்லை. இது மிக்க ரகஸ்யமாதலின் மனதிலேயே வைத்துக்கொள்ளவேண்டும். சிவரஹஸ்யமெனும் ஸமுத்திரத்தில் பிரதமாம் சமெனும் ரத்னமானது உனக்களிக்கப்பட்டது. இதனைக்காதணியாக வைத்துக்கொள்வாயாக. சத்யம். இது சத்தியம் என்று கைதூக்கிக் கூறுகின்றேனென்றருளினர்.

இவ்வாறு இறைவன் தேவியை இறுகத்தழுவிக் கூறிமகிழ்ந்து கைலையில் வீற்றிருந்தனர். ஸ்கந்தர், ஓமுனிவரே! கைலாஸத்தில் அபாரமஹிமை பெற்றுள்ளன வாகியலிங்காலயங்களின் சம்பந்தமாகிய சரிதமானது கேட்டவர்களது பாபங்களாகிய பஞ்சுமலைக்குத்தீயாகும். அபாரமாகிய புண்யங்களையுந்தரும். சிரவணஞ்செய்கின்றவர்களுக்கு இதனிலும் ஹிதமாகியசரிதம் வேறொன்றில்லை. இதனைக் கேட்டமாத்திரத்தில் சிவபாதாரவிந்தத்தில் மனம் லயமடையப் பெறுவான். மீண்டும் சம்சாரமாகிய முதலையின் வாயிலகப்படான். ஓஜைகிஷவ்யரே! உமது நிமித்தமாய் மஹேசுவரனாலருளப் பட்ட

வேதாந்த சாரமானதும் இப்போதென்னாற்கூறப்பட்டது மாகியசிவரகஸ்யமெனும் அமுதத்தையருந்தி மகிழ்ந்து சிவபாதாரவிந்தத்தை முக்தியின்பொருட்டுத்தியானிப்பீராகவென்றருளினர். அப்போது ஜைகிஷவ்யர் ஸ்கந்தரை நோக்கி ஒஸ்வாமி! விருப்புவெறுப்பு இவைகளினின்றும் சித்தம் விலகப்பெற்றேன். காறியுமிழ்ந்த எச்சிலுக்கு நிகராய் இவ்வுலகை யெண்ணுகின்றேன். அஷ்டமூர்த்தியின் கதைகளமுதம்போலிருக்கின்றன. எனது மனம் பிரஸந்நமாயிருக்கின்றது. மன்மதனாகிய மதயானையைப் பிளப்பதில் மஹா சிங்கமாகிய பரமேஸ்வரனது பாதாரவிந்தத்தை யர்ச்சித்ததனால் ஸகல பாவங்களையு முதறிவிட்டேன். யான் தேவரீரது திருவாக்காகிய மஹேசசரிதாமுதத்தையே யருந்தி யருந்தி அபாரமாகிய ஆனந்தத்தை யடைவதொன்றையே விரும்புகின்றேன. ஓஸ்வாமி! ஈஸ்வரனது பாதசேவையால் விஷயங்கள் விஷமபோலாயின. தேவரீரது கிருபையினால் இம்முனிவர்களும் பவதாபம் நீங்கியவர்களாய் மகிழ்கின்றனர். தேவரீர் எங்களுக்குச் செய்த கருணைக்குப் பிரதியாய் நாங்கள் நமஸ்காரத்திற் கன்னியமாய் வேறு யாதும் செய்வதற்கில்லை. ஓஸ்வாமி! எங்களிடம் தேவரீர் எப்பொழுதும் கருணைகடாக்ஷஞ் செலுத்தவேண்டுமென்றனர். உடனே ஏனைய முனிவர்களும் ஓஸ்வாமி! சண்முகக்கடவுளே! மஹா சாம்பவராகிய இந்த ஜைகிஷவ்யரது சங்கத்தால் தேவரீரது திருவாக்கால் சிவசரிதத்தைக்கேட்டுப் பாவனர்களாய் முக்திக்காளாகின்றோம். தேவரீர் அபார கருணையால் எப்பொழுதும் நோக்கியருளுமென்று வேண்டிக்கொண்டனர். அப்போது கணங்களும் ஆனந்தபரவசர்களாய் அவ்வாறே போற்றினர். விஷ்ணு பிரம்ஹ இந்திரர்களும்பேரானந்த வமுதத்தால் பூரித்தமனமுடையோர்களாய் ஸ்ரீ குமாரஸ்வாமியைத் துதித்தனர். சூதர்:- ஓ முனிவர்களே! பூதலஞ்சலிக்க நாகநாதன் கிலேசமுற நாகர்கள் கதற ஆதிகூர்மம் தாங்கமுடியாது புரள பர்வதங்கள் சலிக்க நதிநாயகனாகிய சமுத்திரம் பயந்து கதற தரிசனஞ்செய்வோர் பரமானந்தமடைய ஆச்சரியத்தையும் பயத்தையும் பரமானந்தத்தையும் உலகமடையச் செய்யும் பரமேஸ்வரனது தாண்டவமே காத்தருளுக.

அறுபதாம் அத்தியாயம்
முற்றிற்று.

சிவரஹஸ்யம் மஹேஶ்வரமெனும்
முதலம்சம் முற்றிற்று.

கங்காஸுதாயநம:

மகேதிகாசமாகிய

# சிவரகசியம்.

## இரண்டாம் அம்சம்.

## முதலாம் அத்தியாயம்.



### விநாயகர் வணக்கம்.

சூதமுனிவர்:-உமாதேவியாருடைய முகமாகிய தாமரை மலருக்குக் கதிரவன்போலும், விக்கினமாகிய மலைக்கு வஜ்ஜிராயுதம்போலு மிருக்கின்ற கணபதி மூர்த்தியை வணங்குகின்றேன்.

சவுனகாதி மகருஷிகளை நோக்கி, ஓ சாம்பவர்களே! திரிலோக சாம்பிராச்சிய வின்பத்தையும் துச்சமாய் நினைக்கின்ற வைராக்கியச் சிறப்பினை யுடையவரும் நிர்மலமாகிய ஞானமுடையவரும் மலர்ந்த தாமரை போன்ற முகமுடையவரும் வெண்ணிறமாய் விளங்கும் ஆடைதரித்தவரும் விபூதியைமுப்புண்டரமாயணிந்தவரும் உருத்திராக்ஷங்களாலாகிய கிரீடந்தரித்தவரும் சிவத்தியானத்தினால் சுத்திபெற்றமனமுடையவரும், சிவகணங்கள் முனிகணங்கள் தேவகணங்களாகிய இக்கணங்களுள் இவரினும் பெரியோர் யாருமில்லையென்ற சிறப்பினையுடையவருமாகிய ஜைகிஷவ்ய மஹாமுனிவர் பலமுனிவருடன் சிவபெருமானது உள்ளத்தைக் களிக்கச்செய்கின்றவராகிய ஸ்ரீமுருகக்கடவுளைப்பணிந்து, ஓசுவாமின்! சர்வஜ்ஞராகியபசுபதியை மகிழச் செய்யும் முகவிலாச முடையவரே! பார்வதியின் அருமைத் திருமகனாரே! தாரகசம்ஹாரகரே! பிறவிக்கடலைக் கடக்கும் பெரியோரால் உபாசிக்கப்படும் பரமாத்மரே! அகிலஞான நிதியே! தேவரீரை நமஸ்கரிக்கின்றேனென்று பக்தி பரவசராய்ப் பணிந்து போற்றி, ஓ பன்னிருகையனாகிய ஐயனே! தேவரீரது ஆறுதிருமுகங்களாகிய தாமரை மலர்களினின்றும் பெருகாநின்ற சிவசரித்திரங்களாகிய மதுவெள்ளமானது அடியேனுக்கும் மற்று மிங்குள்ள முனிவர்கட்கும் அமுதம்போல் செவிக்குத் தெவிட்டாத வினிப்பைத்தருகின்றது. அன்றியும் இங்குள்ள ருஷிகளும் யானும் திரிநேத்திரருடைய திவ்யசரித்திரங்களைக் கேட்பதில் சோம்பலும் இதுபோதுமென்கிற மனத்திருப்தியுமுடையவர்களல்லேம். ஆகையால் மஹா

தேவராகிய இறைவன் தேவியாருக்கு ரகசியமாகக் கூறியதும் பின்னர்த்தேவியாரால் தேவரீர் கேட்கப் பெற்றதுமாகிய சிவரகசிய மென்கிற மஹேதிகாசத்தில் வருகின்ற சரித்திரங்களை இனிதுகூறல் வேண்டும். எங்கள் தெய்வமாகிய மஹாதேவரும், தேவரீருக்குக்கரு ணைகூர்ந்து யாங்கள் விரும்பும் வண்ணம் உபதேசித்து அனுக்கிர கித்தல் வேண்டுமென்று ஆஜ்ஞையும் ஆணையுந் தந்திருக்கின்றாரா தலால் சிவரகசியத்தை யிவர்களுக்கு எப்படிச் சொல்வதென்று ஐயுறல் வேண்டா மென்று வேண்டிக்கொள்ள, ஆறுமுகக்கடவுள் திருவுளமிரங்கித் தமதிதயமெனுங் குகைக்குள் ஒருவரு மறியா வண்ணம் வைத்திருக்குஞ் சிவரகசியமெனும் பெட்டியைத்திறந்து அதனுள்ளிருக்கும் சிவமணிகளாகியஇரத்னஹாரங்களின் மகிமையை அணியணியாய்முனிவருடையசெவிப்புலனுக்கின்பமாய்ச் சொல்லத் தொடங்கி விக்னமென்கிற மதயானைக் கூட்டங்களுக்குச் சிங்கம் போன்றதும், வணங்கித் தொழுதேத்தும் வானவர் முடியில் விளங் குஞ் செந்தாமரைமலர் போன்றதுமாகிய சிவமுதற்றிருமகனடிகளை வணங்குவாம் என்றுவணங்கி, ஜைகிஷவ்யரை நோக்கி, ஒமுநிவரே! உம்மைப்போல் மிக்கதூய்மை பெற்றமனமும், பரமசாரயாகியபர மார்த்தத்தில் அவாவும், விஸ்வேசரிடம் பத்தியுமுடையோரையானி வ்வுலகின்கண் கண்டிலேன். ஓமுநிவரே! பார்வதீநாதனாகிய இறை வனினும் பரன் எவனுமில்லை யென்பதே சகலவேதசாஸ்திரங்களின் றுணிபு. இஃதன்றி வுமக்கு உரைக்க வேண்டியது யாதுளது? அவ்வி றைவனே சகலதுக்கங்களையுந்தொலையச்செய்பவன். அவரைவிடுத்து உலகவிவகாரங்களிற் சென்றுமிக்க ஆயாசத்தால் அல்லற் படுவதில் யாது பயன்? பர்தாரவிந்தத்தை விட்டகலாத பக்தர்கட்குப் பரம சுகமாகிய மோக்ஷத்தையளிப்போனை அந்தப்பகவானுடைய மகி மைகளே கேட்கத்தகுந்தனவென் றுணர்வீர். அங்ஙனங் கேட்கப் பெறுவதால் சந்திரசூடனுடைய பாதாரவிந்தங்களிற் பக்தியுண்டா கும். அப்பக்தி விசேடத்தால் பஸ்மருத்திராக்ஷங்களிலும், பசுபதி விரதத்திலும் பக்தியும் ஞானமும் வைராக்கியமு முண்டாகும். அவையுடையவராகப் பெறின் பிறவிக்கடல் கடந்து இறைவனடியில் வாழ்வைப் பெறுதற்காம். ஆகலான் இவ்வாழ்வு சாமான்ய அறி வுடையோர் எங்ஙனம் அடையப் பெறுவர்? ஓ ஜைகிஷவ்யரே! நீர் தான் இந்த வாழ்வுக்குரியவர். ஆகலான் சர்ப்பாபரணனைச் சந்திர சேகரனை உமையோர் பாதியனை விளங்குஞ்சிவபெருமானால்சகல வேதசாரமாயும், கேட்போர் மனதைக் கவர்வதாயும், நீர்விரும்பிய

தாயுமுள்ள சிவரகசியத்தை யாரம்பிக்கின்றேனென்று கூறியபடி யானுங்கட்குக் கூறுகிறேன் என்றார்.

முதலாம் அத்தியாயம்.
முற்றிற்று.

உ
விக்ந கர்த்ருநமஃ

## இரண்டாம் அத்தியாயம்.

### தேவிதவ முரைத்தல்.

ஸ்கந்த மூர்த்தி முனிவரைப் பார்த்து ஓ ஜைகிஷவ்யரே! பூர்வம் கைலைமலைச்சாரலில் பார்வதி தேவியார் யாதோ ஒருவேண்டுகோளைவேண்டியவர் போல் லோகானுக்ரக நிமித்தமாய்ப்பரமேஸ்வரனைக்குறித்துத் தாமரைமலர்போலும் மெல்லிய திருமேனியை உஷ்ண காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலும் காற்றடிக்கும் போது வெறுவெளியிலும் மழைக்காலத்தில் தண்ணீரிலும் பனிக்காலத்தில் பனியிலும் நிறுத்திப்பதினாயிரம் வருடம் யாவராலும்செயற்கரிய தவமியற்றிவந்தனர். அதனைக்கண்ணுற்ற பிரம்ஹவிஷ்ணுவாதிதேவரும் இருஷிகள் முதலானவரும் ஓஹோ இது பெரியதோ ராச்சரியம். சகல ஜகத்திற்கும் ஈஸ்வரியாகிய தேவியார் செய்யும் தவத்திற்கு நிகரான தவத்தை யாம் இதுகாறும் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. இஃதென்னகாரணமோ வென்று அஞ்சலி செய்து தொழுதவரா யித்தேவியார் தவத்தால் மெலிந்தவராயினும் சாணைபிடிக்கப் பட்டரத்னம்போல் ஜ்வலித்திருக்கும் திருமேனியை யுடையவராயினர். இலைகளே யாடையாகவும், இறைவனதுபாதாரவிந்தத்தியான மெனுமமுதமே போசனமாகவும், சோதிபோல ஜ்வலித்திருக்குந் திருமேனியின் காந்தியே ஆபரணமாகவும், வனப்பிரதேசங்களே சிங்காரமாகிய ஸ்தானமாகவும், வெண்ணிறமாகிய திருநீறே நறுமணங்கமழும் சந்தனமாகவும், ருத்திராக்ஷங்களே இரத்தினாபரணங்களாகவும்,வியாக்கிராஸனம் கிருஷ்ணாஜினம் முதலியவேசிங்காசனமாகவும் உடையவளாய்ப்பத்மாசனத்தில் ஸ்தம்பம்போல அசைவற்றிருந்து பஞ்சாக்ஷரத்தை ஜபித்து, முக்கண்ணரை இலக்ஷியமாக்கிநாசிநுனியில் நேத்திரத்தைச் செலுத்திப் பரசிவபரவசமாயிருந்னர். ஓமுனிவரே! ஓர்நாமமும் ஒருருவுமில்லாத வரும் உபநிடதங்களால் போற்றப்பெற்றவருமாகிய உமாதேவியானவர் இவ்வண்ண

ந்தியானயோகத்திலிருக்குங்காலத்தில் சிங்கமுதலிய துஷ்டமிருகங்களும் மிக்கவணக்க முடையனவாய்ப் பரிசனங்கள் அரசனைச் சூழ்ந்திருப்பதுபோல் பரமாச்சரிய முற்றுச் சூழ்ந்துகாவலாய் நின்றன. மட மயில்கள் தமதழகிய தோகைகளால் தேவியின் மேல் கதிரவனுடைய கிரணங்கள் தாக்காவண்ணம் மறைத்துக் கொண்டிருந்தன. அன்னப்பேடுகள் அழகியசிறகுகளை விசிறிபோலசைத்தன. கவரிமான்கள் தோகைகளைச்சாமரங்களைப்போல மேலுங்கீழுமாயசைத்தன. ஏனைய பட்சிசாதிகளும் மிருகசாதிகளும் இமைகொட்டாமற் றரிசனார்த்தமாய் வந்த திருக்கூட்டங்கள் போல் நெருங்கி நின்றன. அவைகளுட் சிலமாங்குயில்கள் பரமானந்தத்துடன் தோத்திரஞ்செய்வதுபோல் இசையுடன் கூவின. சிலமிருங்கங்கள் எங்களுடையபாக்கியமே பாக்கிய மென்று ஒன்றுக் கொன்றுள்ள பகைமை நீங்கிப் பரமசாந்தமுடையனவாய் நல்ல காய்கனிவர்க்கங்களைக் கொண்டுவந்தருகில் வைத்துப்பணிந்து நின்றன. ஓ ஜைகிஷவ்யரே! இவ்வண்ணம் பசுபக்ஷியாதிகளும்புண்ணிய பரிபாகமெய்தும் வண்ணமும் போகமோக்ஷங்களை யடைய விரும்பும் மாந்தரெலாம் ஈதேதவம் இஃதே தவமுறைஇத்தவநெறிக்கே இம்மானுடசரீரம் வந்தது இது செய்யா தொழியின் இந்த ஜன்மம் பயன்படுமாறு யாங்ஙனம் என்றுணருமாறும்,உணர்ந்த பின்னர் தேவியாராலும்காண்டற் கரியனு யிறைவனிருப்பானுயின் அப்பெருந்தகையாளனைநாம் எவ்வாற்றால் காணப்பெறுவேமென்றேங்கி அருள் நாட்டமெய்தலே என்னம்மை தவக்கோலங்கொண்ட காரணமென்று அறிமின். அன்றியும் சிவபெருமானைப் பூசிக்கத் தகுந்தவரும் அவனது மகிமையைப் பிரகாசிக்கச் செய்யவல்லவரும் தாமே யென்றுலகினரறியவும் இத்தவத்தைத் தேவியாரியற்றத்தொடங்கினரென்றும் அறியக்கடவீர்.

இரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

விக்நஹந்த்ருநம:

## மூன்றும் அத்தியாயம்.

### தேவி விப்ரசம்வாதம்.

ஸ்கந்தமூர்த்தி கூறுகின்றார்:-ஓ ஜைகிஷவ்யரே! தேவியாரது தவநிலையைச் சிவகணங்களும் முநிகணங்களும் பிரஹ்மவிஷ்ணுவாதி

தேவகணங்களும் யக்ஷகந்தர்வ கின்னர கிம்புருடர்களும் நோக்கி, இவ்வம்பிகையைப்போலும் நம்மினங்களிலாவது, அசுரவினங்களிலாவது தவஞ் செய்தாருமுண்டோ வென்று பேசிக்கொண்டு ஆச்சரியமடைந்தனர். ஓ முநிவரே! பன்னாட்சென்றபின்னர் சிவபெருமான் விருத்தப் பிராஹ்மண வடிவங்கொண்டு அவ்வயோதிகத்தினால் இளைத்தவராய், மீசையுந் தாடியும் நீண்டசடைமுடியுமுடையவராய், என்புநரம்புமன்றித் தசையற்றவாராய், தண்டு கமண்டலத்தோடுயாகாக்னியை வளர்த்தற்குரிய கருவியாகிய ஊதுகுழையுமுடையவராய், பிரஹ்ம சூத்திரந்தரித்தவராய், மெல்லமெல்ல நடந்து வரும்பொழுது காலிடறி அடிக்கடி வீழ்கின்றவராய் அம்மையார் தவஞ்செய்யுமிடத்திற்கு மந்த மாருதம்போல் மெல்லவந்து வில்வமரத்தடியில் பத்மாசனியாய் நூறுகோடி மின்னல் ஏககாலத்திலுதித்தாற்போலும் சௌந்தரியமெல்லாம் ஒருங்குசேர்ந்து உருக்கொண்டாற்போலும் பிரகாசிக்கின்ற சரீரமுடையவளாய், பஸ்மருத்திராக்ஷதாரணத்தோடு தவநிலையினிற்கும் தேவியைப்பார்த்து, ஹர! ஹர! சிவ! சிவ! என்று சிவநாமங்களையுச்சரித்தனர். தேவியார் அந்த நாமோச்சரணையைக்கேட்டு யோகநிலையை விட்டுக் கண்விழித்துப் பஸ்ம ருத்திராக்ஷதாரணராய்த் தள்ளாடித் தள்ளாடிக் கீழேவிழும் நடையினையுடையவராய்வருஞ் சிவவேதியரைப்பார்த்து மனமுருகி, சுவாமிகாள்! வாரும்! வாரும்! என்று அழைத்து ஆசனமிட்டு அதிலவரைஇருக்கச்செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகள் தந்து உபசரித்தனர். தேவியாரது உபசாரத்தைக் கண்ட இறைவர் மிகமகிழ்ந்து ஓ பார்வதீ! நான் கைலாயத்தில் தனியே வாழ்கின்றவன். எனக்கொருதுணையுங்கிடையாது. கிழத்தனத்தில் நிறைந்தவனும், வயதில் நூறுனவனும் இருக்கின்றபடியால் பேசுவதற்கும் நீ சொல்வதைக்கேட்பதற்கும் என்னுடைய ஆசை என்னை வருத்துகின்றது. நான் என் செய்வேன். நீஇவ்விடத்தில் தவஞ்செய்யும் அருமையைச் சிவகணங்களாற் கேள்விப்பட்டு உன்னைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையினால் தள்ளாடித் தள்ளாடி மெல்ல மெல்ல வந்தேன். உனது தவத்தைப் பார்க்க மிக்க ஆச்சரியமாக விருக்கின்றது. குவளை மலர்போன்ற நேத்திரமுடையவளே! உனக்குத்தவமேன்? அதனால் நீ என்ன பிரயோசனத்தை யடையப்போகின்றாய்? உனக்குப் பிரயோசனத்தைக் கொடுப்பவர்யாவர்? தவஞ் செய்கின்றவர்கட்கு அத்தவப்பயனுயுள்ளது உனது பாதாரவிந்தமன்றோ? பிரம்ஹ விஷ்ணு முதலிய தேவர்களும் முனிவர்களும் உனது

பாதாரவிந்தத்தை யடைதலே பலமாக வெண்ணியபடியினாலன்றோ சிருஷ்டியாதி தொழில்களையும், சத்தியலோக முதலிய பதங்களையும் பெற்று வாழ்கின்றனர். இன்னமும் உனது கருணைக்கே எதிர்பார்க்கின்றனர். உனது பெருமை இங்ஙனமிருக்க, நீ தவஞ்செய்யவேண்டிய காரணமென்னை? மிருதுவான உன்சரீர மெங்கே! மிகவும் கடினமான தவமெங்கே! நீ இப்பொழுது செய்யுஞ் செய்கை எனக்குச் சாகசமாய்த் தோன்றுகின்றது. அந்தோ! உன் சரீர சௌந்தரிய மெல்லாம் போயிற்றே! உன்மேனியில் சாம்பற்பூச்சுப் பிரகாசிக்கின்றதே. நீ மஹாஐஸ்வர்யவானான பர்வதராசன் புத்திரியல்லவா? உன் மேனியில் பச்சைக் கற்பூரம் கஸ்தூரி குங்குமப்பூ கலந்த சந்தனம் இவைகளின் நறுமணம் வீசுமே! அந்த மணம்போனவிடந்தெரியவில்லையே! சாம்பல்மணம் வீசுகின்றதே! உன்னுடைய பாதாதிகேசமுற்றும் நவரத்தினங்களிழைக்கப்பட்ட விசித்திரமான பல ஆபரணவகைகளெல்லாம் அணியணியாய்ப் பிரகாசித்து அழகுசெய்து கொண்டிருக்குமே! அவைகட்கு உன்னைவிட்டுப்போகும் தௌர்ப்பாக்யதிசைஎப்படிவந்ததோதெரியவில்லையே! நீகன்மலையிற்பிறந்தவளாயிருந்தும் உன்மனம் உருகும்வெண்ணைபோலிருந்ததே! அந்த மனம் இப்போது அக்கல்லின் குணத்தைப் பெற்றதே! இது விந்தையினும் விந்தையே! நெஞ்சைக் கல்லாகப் படைத்தவர் கடினமான தவத்தைச் செய்து நெஞ்சுருகும் வகையைத் தேடிக்கொள்ளல் வேண்டும். உருக்கமே மனமாகவுடைய நீ இத்தவத்தைக் கைக்கொண்டது யாது கருதியோ? அன்றியும் உனது நாயகனும் உருகியமனத்தைக்கண்டுருகவல்ல திருவுள்ளமுடைய பெருங்கருணையாளன், சகலலோகங்கட்கும் பிரபுவாயுள்ளவன். அந்தப்பிரபுவினால் நீ மிகவும் விரும்பப்பட்டவளாயிருக்கின்றனை. அவனங்கமாயுமிருக்கின்றனை. அவனுடைய பிரியம் உன்னிடத்திலில்லாமற் போனாலன்றோ அதனை வேண்டி இவ்வளவு கஷ்டமான தவத்தை நீ செய்ய வேண்டும்? அங்ஙனமிருக்க நீ தவஞ்செய்யுங்காரண மென்னையோ? அது எனக்குத்தெரியவில்லையே! ஓ பார்வதி! அந்தக்காரணத்தை நான் கேட்கத்தகுந்ததானால் சொல்வாய். அது நானறியக்கூடாத ரகசியமாகவிருந்தால் சொல்லவேண்டாம். இரகசியமாயிருந்தாலும் என்னிடத்தில் சொல்லுவதினால் ஒருதீங்கு முண்டாகமாட்டாது. ஆகையினால் என்னிடத்தில் தயவுவைத்துச்சொல்லவேண்டுமென்று எத்தன்மைத்தான கன்னெஞ்சும் உருகுமாறு மிகவிரக்கத்தோடும் அன்போடும் விருத்த வேதியர் கூறவே தேவியார் அவர் தத்தித்தத்

திக் கூறும் வாய்மொழிகளைக்கேட்டு, ஓவேதியராகிய என்னையரே! தாங்கள்கூறிய தெல்லாம் உண்மையே. ஆயினும் யான் ஓர் கோரிக்கையை மனதில் வைத்துக் கொண்டுதான் தவஞ் செய்கின்றேன். எனது கோரிக்கையை நிறைவேற்ற வேண்டியவர் சகலலோகங்கட்கும் பிரபு வாயும், சகலகிருத்தியங்கட்குஞ் சக்தராயு மிருக்கத்தக்கவர். அத்தகுதியுடையாரையன்றி மற்றொருவரையானெண்ணுவனே? அந்தப்பிரபுவே யாவர்க்குந் தாயாயும் தந்தையாயும் பந்துவாயுமிருக்கின்றவர். நான் அவருக்குத் தேவியாயுஞ் சத்தியாயு மிருப்பதால் நீர் சொல்லியபடி யாவரும் என்னைவேண்டித்தவஞ் செய்யவும் நான் அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்கவும் அவரைப்போல் பிரபுத்வாதி சகல சம்பந்தங்களை யடையவு மாயினேன். ஓ அறிவிற்சிறந்த பெரியோரே! நான் உலகரக்ஷணையின் பொருட்டு இப்பொழுது ஒரு கோரிக்கையை மனதிற் கொண்டு, ஈஶ்வரனை நோக்கி அரிய தவத்தைச்செய்கின்றேன். ஓ சம்புபத்தர்களுட் சிறந்த சிவபத்தரே! நான் தவஞ்செய்யுங்காரணத்தைப்பிறகு சொல்லுகின்றேன். இப்பொழுது உம்மை ஒருரகசியங் கேட்கின்றேன். அதற்கு நீர் உண்மையைச் சொல்ல வேண்டும். நான் சத்தியத்திலாசையுள்ளவள். என்னிடத்தில் நீர் உண்மையைச் சொல்லாமற்போவீராயின் உம்மிடத்தில் எனக்குண்டாயிருக்கும் பிரீதிக்கு ஹானி உண்டாகும். ஓ பிரம்ஹறுருஷியே! இந்தமலையில் உம்மை யொத்தவர்கள் வசித்தற்குரிய ஆஸ்ரமம் ஒன்றுங்கிடையாது. அதனால் முநிவர்கள் இவ்விடத்தில் வருவதில்லை. இது என்னுடைய தவச்சாலையாதலால் சூரிய சந்திராதியர்களும் ஒதுங்கிப்போகின்றனர். திருமால் முதலிய தேவர்களும் இக்கைலாயதரிசனங்கிடைக்க வேண்டு மென்று தவஞ் செய்கின்றனர். அவர்களுக்கு இன்று வரையில் தரிசனமானதில்லை. இவ்வளவு மகிமையோடுங் கூடியிருக்கின்ற இம்மலையில் நீர் எப்படி வந்தீர்? இது எனக்குப்பெருஞ் சந்தேகத்தை விளை விக்கின்றது. இச்சந்தேகந்தீரச் சொல்லுமென்று சொல்லிய தேவியின் வார்த்தையைக் கேட்டு வஞ்சனை எண்ணத்துடன் பெருமான் புந்நகை செய்து, ஓ தாமரை போன்ற முகமுடையாளே! நான் வஞ்சித்துக் கூறுந் தன்மையுடையவனுயுனக்குத்தெரிகின்றதா? தபசியாயிருக்கின்ற உன்னிடத்தில்தானு பொய் வார்த்தை சொல்லப் போகின்றேன். நன்றாயிருந்தது. நான் சொல்வதைக்கேள். நான் பிருகு குலத்திற்பிறந்த பிராஹ்மணன். ஹிமாசலத்தில் வசித்துத் தபசியாய் தியான சீலமுள்ளவனாய் சிவார்ச்சனை செய்துவந்தேன்.

ஒருகாலத்தில் மஹாதேவர் கருணையுடையவராய் எனக்குப் பிரத்தியக்ஷமாய் அதிரகசியமாய் நீ செய்யும் அருச்சனைக்கு மிகவும் மகிழ்ந்தேன். நீ விருத்தனுய் விட்டாய். இனி நீ கைலாயபர்வதசிகரத்தில் வந்து வாசஞ்செய்துக்கொண்டிருப்பாயாக. நீ அங்கிருப்பாயாயின் எனக்குச் சந்தோஷமாயிருக்கும். ஆனல் உனக்கு இந்தக் கிழத்தன்மைமாத்திரம் போகாது. போகாமற்போனலும் பசிதாக முதலியவை உன்னைவருத்தாது. உனக்குக்கியாபகசித்தி நன்றாயிருக்குமென்றனுக்கிரகஞ் செய்து போயினர். அந்த மஹாதேவர் என்னைக் கைலைக்கு வரச்சொன்னலும் இங்குசெய்யுஞ் சிவார்ச்சனையை விட்டுப் போவதற்கு எனக்குமனமில்லாமல் இவ்விடத்திலேயே வசித்திருக்கிறேனென்று அந்தணர் சொன்னதைத் தேவிகேட்டுத் தலையையசைத்துச் சுட்டுவிரலை மூக்கின்மேல் வைத்து அதிக ஆச்சரிய மடைந்து, ஓ கைலாசவாசியாகிய அந்தணப் பெரியோரே! பரமேஶ்வரன் என்னிடம் எல்லாவற்றையுஞ் சொல்லும் வழக்கமுடையராயிருந்தும் உம்முடைய சங்கதியைச் சொல்லாதொழிந்தார். இரகசியமாக வாவது சொல்லியிருக்கலாம். அப்படியுஞ் சொல்லவில்லை. அதுநிற்க, நீர் கைலாயத்தில் இந்த வயதளவும் சிவலிங்கார்ச்சனை விடாதுசெய்து கொண்டிருக்கின்றீரா? இது மிகவாச்சரியம் என்று தேவி அதிசயித்துச் சொன்ன பொழுது சிவபெருமான், ஓ சிவே! நானிப்பொழுது சொல்லிவந்ததில் நீ யோர் குறைகொண்டதாக எனக்குத் தெரிய வருகின்றது. அது என்னை யெனின், உன்னிடத்திற் பிரீதியாயுள்ளசங்கரன் எனக்குச்சிவலிங்கார்ச்சனைசெய்யச் சொல்லிய ரகசியத்தை யுனக்குச் சொல்லாமற் போனரன்றேவென்றோர் பெருங்குற்றத்தை யெண்ணியதாகத் தெரிய வருகின்றது. நீயப்படி யெண்ணுவது முறைமையன்று. உன்னுடைய நாயகன் உன்னிடத்து வைத்த பிரீதியைக்காட்டிலும் தன்னன்பர்களிடத்தில் மிக்க பிரீதியுள்ளவனாகலின், சிவலிங்கார்ச்சனை செய்வதாகிய ரகசியத்தை என்னிடத்தில் சொன்னு ரென்றும்,நீயவனேடு கலந்திருக்குஞ் சத்தியா யிருக்கும் பொழுது நீ லிங்கரூபத்தை யர்ச்சனை செய்யவும் வேண்டுமா என்று எண்ணி யதனை யுனக்குச் சொல்லாமற் போனரென்று மறிவாய்.

இச்செய்தி யிங்ஙனமிருக்க, நீ இப்பொழுதுசெய்துவரும்தவத்தைப் பற்றிச்சில கூறுகின்றேன். கேட்பாயாக. பணச்செலவிற்கும் சரீரசிரமத்திற்கும் ஏதுவாயிருக்கின்ற விரதங்களாலும், தவங்களாலும், தீர்த்தயாத்திரைகளாலும், யோகங்களாலும், வருணச்சிரம

தருமங்களாலும்,ஏனையதருமங்களாலும்அடையத்தகும்பிரயோசன மென்னே? இவைகளில் முயற்சிசெய்வதினல் சிரமம் மீட்டும் மிகுதிப் படுமேயன்றிப் பலனென்றும் மிகுதிப்படாது. இவைகளால் சித்த சாந்தி யொருநாளும் உண்டாகவே உண்டாகமாட்டாது. அற்பபல த்தை விரும்பிச் சமுசாரசாகரத்திலே சுழலும் மனிதர்களுக்கு முற் கூறப்பட்ட விரதமுதலியனவே மோக்ஷசுகத்தை நேரே கொடுப்ப னவாகா. ஆகலானீ இக்கடுந்தவஞ் செய்ய வேண்டாம். ஓபரையே! பிரத்தியக்ஷமாய் மோக்ஷத்தைக் கொடுக்குந் தருமஞ் சிவலிங்கார்ச் சனை யொன்றே. அவ்வொன்றுதான் சம்புவுக்குச் சந்தோஷத்தை விளைவிக்குந் தருமம்.அப்படியானல் சிவலிங்கார்ச்சனையை மாத்திரங் கூருமல் பற்பலசிரௌத தர்மங்களாகிய எக்ஞயாகாதிகளை வேதங் கூறுவானேனென்றல் அவை அதிகாரிபேதமாய்ச் சிவனல் அருளப் பட்டனவென்று அறிவீர். சிரௌதம் ஸ்மார்த்தம் பௌராணிகம் எனும் மூவகைத்தர்மங்களும் பரிபாகபேத நோக்கியே கூறப் பட்டுள்ளன. அவை பிரம்ம க்ஷத்திரிய வைசிய ரெனும் மூவருக்கே உள்ளன.சூத்திரதர்மமானது தந்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.ஓசங் கரி! தாந்திரிகனுக்கு வைதிக தர்மானுஷ்டானங் கூடாது. சிரௌதா திதர்மமானது கர்மவாதமேயாம். எக்ஞம் அத்தியயனம் முதலிய நற் கருமங்களால் மஹாதேவனையாராதித்து அதனல் சுத்தியடைந்து பின்னர் ஈசனை உபாசிக்கவேண்டும். ஹே அம்பிகே! அவ்வுபாச ஞவிஷயத்தில் அவஸ்யமாய் வேண்டியதர்மங்களைக் கூறுகின்றேன். கேட்பாயாக:—

அவை பஸ்மத்தையெடுத்து, "அக்னிரிதி" முதலானமந்திரங்க ளால் உத்தூளனமும், திரியம்பகமாதி மந்திரங்களால் அவகுண்டன மும், திரியாயுஷம் திரியம்பகமந்திரங்களால் சிரமுதலாகச்சொல்லப் பட்டஅங்கங்களில் திரிபுண்டரதாரணமுஞ் செய்து, திரிபுண்டர மந் திரங்களைக்கொண்டே ருத்திராக்ஷ தாரணமுஞ்செய்து பின்னர் ருத் திர பஞ்சாக்ஷரங்களை ஜபித்து மகா மகிமைபொருந்திய பில்வமுத லிய பத்திர புஷ்ப பலாதிகளால் சிவலிங்கார்ச்சனை செய்தல் முதலி யனவேயாம். இதனை எப்பொழுதும் அனுஷ்டிக்கின்றவ னுடைய அறிவானது சிவத்தியான வசமாகும். சூர்யாத்மாவா யிருக்கின்ற மஹேசன் நிராகார(உருவமில்லாதவ)னயினும், சூலபாணியாய்த்திரி நேத்திரனய் நீலகண்டனய் சாம்பசிவனய் விளங்கும் அவனது திரு மேனியைத் தனது ஹ்ருதயகமலத்தினில் தியானிக்கவேண்டும். இவ் வகைத்தியானத்தினல் அவனருளுண்டாம். அவ்வருளினலும் நித்தி

யாநித்தியவிவேகத்தாலும் குருபணியாலும் வேதாந்தார்த்த விசாரத்தாலும் சர்வமும் ஆன்மமயமாய் விளங்கும். இங்குவேறுயாதுமில்லை. ஞானத்தினல் ஞேயத்தையறிந்துகொண்டு அந்த ஞேயத்தில் ஞானத்தை ஒடுக்கவேண்டும். ஞானம் ஞேயம் தியானம்தியேயம் இவையெலாம் ஆன்மாவாகிய பிரம்மமே.ஹே-ஈசானீ ! சிவானுக்கிரகத்தினலே பரமாகியஞானம் உதிக்கின்றது. ஆகையால் உலகினர் சிவலிங்கார்ச்சனையே மேலான சகலபலங்களையுங் கொடுக்கத்தக்கதென்றும் வேருனதருமங்கள் இங்ஙனங் கூறிவந்த சிவானந்தப்பெருக்கைத்தரும் ஆற்றலுடையனவல்லவென்றும் அறியக்கடவர்.

ஹே பார்வதீ! உனக்குக் கடைசியாயொன்று கூறுகின்றேன். வருணச்சிரமதருமங்களும், இயமாதி அஷ்டாங்க யோகங்களும், சாந்திராயண முதலிய விரதாதிகளும், ஏனையதவங்களும், சரீரசிரமத்திற்கிடனுமேயன்றி அவையெல்லாம் பயனுகாவெனவும், பயனுக்குவருவன சரலிங்கத்தையாவது ஸ்திரலிங்கத்தையாவது வில்வத்தால் மூன்றுகாலத்திலும்நியமத்தோடு அர்ச்சனைசெய்வதாமெனவும்,இது வேசிவதருமம், இத்தருமமே சிவனுக்குப்பிரியமானதெனவும், இந்தப்பிரியமானதருமத்தை விட்டுத் தங்களுக்குப்பிரியமானவைகளாகச் செய்யுந்தருமங்களைச்சிவன் பிரியமாகக் கொள்ளானெனவும், தங்களுக்குப் பிரியமானவற்றைவிடுத்துஅவனுக்குப்பிரியமானவற்றைச் செய்கின்றவரையே அவனறிவான் எனவும், அல்லாதாரையவனறியானெனவும் நீ யறிந்து சிவனுக்குப் பிரியமில்லாத தருமங்களைக் கைவிட்டு அவன் விரும்புந்தருமங்களைக்கைக்கொண்டுவாழக்கடவாயென் றனுக்கிரகஞ் செய்து திருவுருக்கரந்தனர். தேவியார் அந்தணராய் வந்து சொல்லிய மகாதேவரது வார்த்தையைக் கேட்டு ஆனந்த பரவசமாயினர்.

மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.

௳

விப்வநேத்ரேநம:

# நான்காம் அத்தியாயம்.

அம்பிகேசாலயதரிசனம்.

ஸூதபகவான் கூறுகின்றார். ஓ மஹருஷிகாள்! ஜைகிஷவ்ய முனிவர் சுவாமிநாதனை வணங்கி எம்பெருமானே! பார்வதி தேவியார் பிராம்ஹண வார்த்தையைக் கேட்டபின்னர் என்செய்தனர்? அந்த ஆச்சரியத்தைச் சொல்லியருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க முருகக்கடவுளும் அதனை அவருக்குச் சொல்லியருளல்வேண்டுமென்னு மாசையுடையவராய்ப் பரமேஸ்வரனைத் தியானஞ்செய்து ஓ முனிபுங்கவரே! என்னம்மை அந்தணர் கூறியவண்ணம் அந்தக்கைலாயத்தில் அந்தக்ஷணமே ஓர்கணநேரமுந் தாமசமுஞ் சோம்பலுமின்றித்தியானஞ்செய்து தேவதேவனாகிய ஓ பரமேஸ்வரா! இன்று வந்த முதியோராகிய அந்தணரால் கேள்வியுற்றவண்ணம் நானுனைப்பூசனைசெய்ய ஆசைப்படுகின்றேனாகலின் அப்பூசனைக்குச்சிறந்த வனவிசேஷமும் பூசனைக்குவிதிக்கப்பட்டுள்ள சகலத்திரவியவிசேஷங்களும் சகலவாத்தியவிசேஷங்களும் பரிவாரவிசேஷங்களும் மற்றுள்ள எல்லாவிசேஷங்களும் என்மனம் ஆனந்தபரவசமாம் வண்ணம் அநுக்கிரகஞ்செய்யவேண்டும். நீ செய்வையோ செய்யாயோ நானென் செய்யகடவேனென்று வேண்டினர்.

வேண்டியாங்கருள்புரியும் வள்ளலாராகிய சிவபெருமானது திருவருளால் அக்கைலாயசிகரத்தின்கண் இரத்னமயமாய்ப் பிரகாசிக்கின்ற பூமியொன்று பார்வதியாரது இருகண்களுங் கூசும்படி கோடிசூரிய ப்ரகாசமாய்க் காணப்பட்டது. அதுவேயுமன்றி அப்பூமியைச் சூழ்ந்தஅகழி நிர்மலமான ஜலத்தோடுங்கூடியதாயும், அதில் மச்சமுதலிய நீர்வாழுயிர்க ளெல்லாம் ரத்னமயமாயும், தாமரைமுதலிய நீர்ப்பூக்களெல்லாம் மதுவைச்சொரிந்து மகரந்தங்களைச் சிந்துகின்றனவாயும், அதன் கரையில் அன்னப்பக்ஷிகளும் பச்சைநிறமுள்ளகோழிகளும்சாகசப்பக்ஷிகளும் சரசமானசப்தமுள்ளசக்ரவாகப்பக்ஷிகளும் உல்லாசமாயுலாவி வருவனவாயும், அவ்வகழியைச்சூழ்ந்து மந்தாரம் திலகம்தமாலம் கடம்பு பலா மகிழம் அசோகு கர்ணிகாரம் குடசம் குரண்டம் அகில் தகரம் தக்கோலம் அங்கோலம் புன்னாகம் அருச்சுனம் சந்தனம் வில்வம் பாடலம் பாரிசாதம்

தேவதாரு நெல்லி பாக்கு தெங்கு வாழை தாழை முதலிய பலவிருக்ஷசாதிளும், லவங்கம் வல்லி இராஜதானம் பில்லாஞ்சி எலுமிச்சை முதலியனவுமாகிய விருக்ஷசமூகங்களும் நிறைந்தடர்ந்துள்ளனவாயும், அச்சோலைகளில் கோகிலம் புறா கிளி மயூரம் நாகணவாய்ப்புள் முதலிய பக்ஷிசாதிகளெல்லாம் தங்கள் தங்கள் பேடுகளோடுங்கிரீடித்துக்கொண்டிருப்பனவாயும், சோலையைச்சூழ்ந்து மரகத முதலிய நவரத்னங்களாலிழைக்கப்பட்ட படிகளோடு கூடியதடாகங்களுள்ளனவாயும், அத்தடாகங்கடோறும் நவரத்னங்களால் தனித்தனியே அமைக்கப்பட்ட பூஜாயோக்யமான பல வேதிகைகளுள்ளனவாயும், அவ்வேதிகைகடோறும் வில்வவிருக்ஷங்களுடைய பரந்த நிழலும் அந்நிழல்கடோறும் இரத்னங்களாலமைக்கப்பட்ட சிவலிங்க மூர்த்திகளோடு அந்தந்தரத்னவிலிங்கங்கட்குமாறுன வேதிகைகளும் சூர்யமண்டலம் சந்திரமண்டலம் நக்ஷத்திரமண்டலம் போலும் பிரகாசிக்கும் பிரகாசத்தன்மையுடையனவாயும், அவ்வேதிகையின் கண்ணுள்ள சிவலிங்கமூர்த்திகள்மேல் சந்திரகாந்தக் கற்களினின்றும் பெருகாநின்றநீரானது அபிடேகஞ்செய்வதுபோல் வீழ்ந்து போவதாயும்,பாரிஜாதமலர்கள் அர்ச்சித்தமலர்கள்போல் மேலே வீழ்ந்து கிடப்பனவுமாகிய அலங்காரத்தையுடையதாயும் அவ்வன விசேஷங் காணப்பட்டது. அவ்வனவிசேஷத்தில் அப்போது முன்தம்மனதில் நினைத்தபடி எதிரில் ஆலயம் காணப்பட்டது. காணப்பட்ட அவ்வாலயமோவென்றால் பவளமாலை முத்துமாலை முதலிய மாலைகளால் அலங்கரிக்கப்பட்டனவாயுள்ள பல ஆலயங்களினடுவில் சுவர்ணமயமாயும் ரத்னமயமாயும் ரஜிதமயமாயும் பிரகாசிக்கின்ற கர்ப்பகிருகங்களுடையதாயும்இன்னும் சொல்லவும் எண்ணவுங்கூடாத பற்பல வற்புதங்களுடையதாகவும் காணப்பெற்றமையால் தேவியார் அன்பும் ஆராமையுமீதூர்ந்து அவ்வற்புதவனத்தைக் காணவெண்ணி அருகிலிருந்த எண்ணிறந்த பல சேடியரெல்லாம் புடைசூழ்ந்துவரச்சென்று சமீபித்து அங்குள்ள ஒவ்வொருஅற்புதத்தையுங்கண்டு களித்துப் பெருமானுக்குத் தம்மிடத்துள்ள அன்பின் பெருக்கையுன்னி இனி நாம் எண்ணியவாறு இவ்வனத்தின்கண் சிவோபாசனையும் சிவாராதனையுஞ்செய்து ஆனந்தமுற்றிருக்கவேண்டுமென்று உள்ளேசென்று பிரதக்ஷிணமாக மேற்புறமாய் வரும்போது கைலாசநாதருக்கு மேற்கில் அம்பிகேசம் என்கிற ஆலயத்தைக்கண்ணுற்று ஆ ஆ! இதுவென்ன வாச்சரியமென்று அவ்வாலயத்துள்ளேபோக அங்கு அற்புதக்கோலத்தோடும் வீற்றிருக்கின்ற அம்பிகேசரைக்கண்டனர்.

ஓமுநிபுங்கவரே! அங்குள்ள அதிசயத்தைக்கேளும். அச்சிவலிங்கமூர்த்தியினுடைய முடியில் சந்திரகலையும், பில்வம் மந்தாரம் வெண்டாமரை முதலிய மலர்மாலைகளும், நெற்றியில் திரிபுண்டரமும் பிரகாசித்தன. அந்த மூர்த்திக்குக் கீழ்ப்பீடம் ரத்னக்குப்பிகளுடன் கூடிய திவ்யமான சந்தன பீடமாய் சுவர்ன பீடம்போற் பிரகாசித்தது. இதுவுமன்றி அவ்விடத்தில் பூஜோபகரணங்களாயுள்ள சத்திரசாமர ஆலவட்ட முதலியவைகளும், பலதூபதீபாதி ஆர்த்திகளும்சங்க முதலியவைகளும் ரத்னமயமாயும், பொன்மயமாயும் பிரகாசித்தன. மத்தளம் பேரிகை புள்ளாங்குழல் வீணை திருச்சின்ன முதலிய வாத்தியகோஷங்களும் ஓயாமல் கோஷித்துக் கொண்டிருந்தன. அநேக உருத்திரகணிகையர் அங்ஙனமான பணிகளைச் செய்வதற்குரிய அடிமைகளாக விருந்தனர். இவ்வற்புதங்களைத் தேவியார் கண்டு மெய்ம்மறந்து கரண சேஷ்டைகளற்று அங்குள்ள அற்புதத்தோடும் அம்மூர்த்தியை இதயத்தில் ஓர்க்ஷணகாலம் தியானித்துக் களித்து அவ்விடம் விட்டு அப்புறஞ் சென்று அம்பிகேஶ்வரலிங்கத்தையும் அதுபோலவே கண்டு களித்து நூபுரமணிந்த சிற்றடிவருந்தப் பிரதக்ஷணமாய் வந்து, பின்னரங்குள்ள அம்பா தீர்த்தத்தை அடைந்து, ரத்னம் போற்பிரகாசிக்கின்ற அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து இரண்டு வெண்பட்டாடைதரித்துக் கரையின்கண் வந்து சுவர்னபாத்திரத்திலுள்ள தீர்த்தத்தால் தோழிகள் தாமரை மலர் போன்றபாதத்தை யலம்பியபின்னர் சிம்ஹாசனத்தில் வீற்றிருந்தனர். தோழிமார்களும் ஸ்நானஞ்செய்து சுத்தமுடையவர்களாய்ச் சர்வாலங்காரத்துடன் அம்பிகையினது பணிவிடைக்கு எதிர்பார்த்தவர்களாய்ச்சூழ்ந்தனர். அவருள் ஜயை என்பவள் அம்பிகையினது கூந்தலிலுள்ள ஈரம்போகவெள்ளாடை சுற்றினள். ஏனையதோழிகள் தனித்தனியே பாதங்களில் செம்பஞ்சுக்குழம் பூட்டுவாரும், குடை பிடிப்பாரும், சாமரைவீசுவாரும், விசிறியை யசைப்பாரும், தூபங்காட்டுவாரும், கண்ணடி காட்டுவாரும், சுகந்தப்பொடிகளை வீசுவாரும், அஞ்சனச் சாந்தை ஏந்தியிருப்பாரும், வெங்கம்சாதிக்காய்முதலியவைகளோடு கலந்த தாம்பூலங்களைத்தாங்கியிருப்பாரும், அணிந்திருக்கும்ஆடைகளில் தூசடையாமல் தட்டுகின்றவராயுமிருந்தனர். தோழியர்களது உபசரிப்பைக் கண்டதேவியார், திருவுள்ளங்களித்தவராய் அச்சிங்காசனத்தை விட்டெழுந்திருக்க வெண்ணினர். அக்குறிப்பறிந்தசில தோழியர் கத்திகளைப் பிடித்துக்கொண்டும், அம்பறாத்தூணியைத்தரித்துக்கொண்டும், பாணங்களைத்தாங்கியும் முன்னே செல்லத் தலை

ப்பட்டனர். சிலதோழியர் கண்ணாடியை எதிரே உயர்த்திக்காட்டிப் பஸ்மத்தாலும் திரிபுண்டரத்தாலும் ருத்திராக்ஷாபரணத்தாலும் அழகுபெற்றிருக்கின்ற திருமேனியின் பொலிவைக்கண்டுகளிக்குமாறு செய்தனர். அதன் பின்னர் சிலர் பாதங்கள் பூமியில் படாவண்ணம் இரத்னமயமாய்ப் பிரகாசிக்கும் திருவடிநிலையாகிய பாதுகையைக் கொண்டுவந்து வைத்தனர். தேவியார் அந்தப்பாதுகைகளின் மேல் திருவடிகளை வைத்துத் தோழியர்களெல்லாம் புடைசூழ்ந்துவரமெல்லமெல்ல நடந்து அம்பிகேஶ்வரருடையஆலயத்தைநோக்கிச்சென்றனர். அம்பிகைபின்பின்னர் சிலதோழியர் பச்சைக்கற்பூரமுதலியவாசனைத்திரவியங்கள் சேர்த்து வடித்தெடுத்த தீர்த்தம் நிரம்பிய பொற்குடங்களையும், சிலர்மாந்தளிர் நிரம்பிய நீர்க்குடங்களையும், சிலர் தேங்காய்களையும், சிலர் கனிந்தவாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி முதலிய கனிவர்க்கங்களையும், சிலர்எலுமிச்சம்பழ முதலிய பழரசங்களையும்,சிலர்திராக்ஷக்கொத்து முதலியகொத்துவகைகளையும்,சிலர் வாழைக்குலை பாக்குக்குலை முதலிய குலை வகைகளையும், சிலர் மஞ்சள்முதலிய பூச்சு வகைகளையும், சிலர்வெண்டாமரை செந்தாமரை மந்தாரை கர்னிகாரம் கருநெய்தல் அலரி வன்னி நாயுருவி அறுகு வெள்ளெருக்கு ஆம்பல்திரிதளாகாரமாகிய வில்வமுதலிய சிறந்தபத்திர புஷ்பங்களையும், சிலர்வீணை கண்ணாடிசத்திர சாமரமுதலிய உபசாரத் திரவியங்ளையும் ஏந்திக் கொண்டு சென்றனர். சிற்சிலர் அம்பிகைக்குமுன்னர் சங்கம்பேரிகை காகளம்புள்ளாங்குழல் மத்தள முதலியவாத்தியங்களைமுழக்கிக்கொண்டு சென்றனர்.இவ்வாறு பூஜாத்திரவியங்களோடு வாத்தியங்கள் கோஷிக்கச் சென்ற அம்பிகை அம்பிகேஶ்வரருடைய கோபுரத்தைச் சமீபித்தவுடன்பாதுகைகளைவிட்டுப் பாதங்களைத்தண்ணீரால் சுத்தி செய்வித்துப் பாதசாரியாய்விதிப்படி ஆலயப்பிராகாரத்தை வலம்வந்து உள்ளே புகுந்து கர்ப்பக்கிருகத்தையடைந்துதம்பெருமானைக்கண்டு ஆராவன்புகொண்டு பூமியில் வீழ்ந்து வணங்கி எம்பெருமானேயென்றுபோற்றிப் பின்னர்பூசிக்க வேண்டிய முறைமையைநாடிச் சிவலிங்கமூர்த்தியினருகில் ஓரரியபொன்னாசனத்திருந்து பிராணாயாமஞ்செய்து தமது இதயத்தின் கண்பிராணேஶ்வரனை நெற்றிக் கண்ணுடைய வராயும், கண்டத்தில் நீலமேகம்போற் பிரகாசிக்கின்ற நிறத்தையுடையவராயும்,பூரணசந்திரன்போல்பிரகாசிக்கின்றமுகமண்டலத்தையுடையவராயும்,யானைத்தோலைத்தரித்த இடையுடையவராயும், இளஞ்சந்திரனைச்சூடிய முடியுடையவராயும்,சர்ப்பா பரணங்களைத்தரித்த திருமேனியுடையவ

ராயும், ஓர்சிறுமானையும் டமருகத்தையும் வரதாபயங்களையுந் தரித்திருக்குந்திருக்கரங்களுடையவராயும், பஸ்ம த்ரிபுண்டர தாரணராயும், புன்னகையோடு கூடினவராயும், கோவைப்பழம்போற்சிவந்த அதரமுடையவராயுந்தியானஞ் செய்திருந்தனர்.

நான்காம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

விராட்பதயேநம :

## ஐந்தாம் அத்தியாயம்.



### அம்பிகேச பூஜாகதனம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். ஓ ஜைகிஷவ்யரே! இவ்வாறு சாந்தமாகிய மனதுடன் பரமேஶ்வரனைத் தியானிக்கவேண்டும். ஆவாஹனம் ஸ்தாபனம் ஸந்நிதானம் நிரீக்ஷணம் இவைகளைச் செய்து தேனுமுத்திரை தரிசிப்பித்துப் பின்னர் பீடபூஜை செய்து சகளநிஷ்களரூபியாகிய சதாசிவனைத்தியானிக்கவேண்டும். அந்தத் தியானமாவது.

#### த்⁴யாநம்.

த்⁴யாயேத்ஸதா³ஶிவம் ஸாக்ஷாத்³தே³வம் ஸகலநிஷ்கலம் |
ஶுத்³த⁴ஸ்ப²டிகஸங்காஶம் த்ரிநேத்ரம் ஶீதலத்³யுதிம் ||
வித்³யுத்³வலயஸங்காஶம் ஜடாமகுடமண்டி³தம் |
ஶார்தூ³லசர்மவஸநம் கிஞ்சித்ஸ்மிதமுகா²ம்பு³ஜம் ||
ரக்தபத்³மத³லப்ரக்²யபாணிபாத³தலாத⁴ரம் |
ஸர்வலக்ஷணஸம்பூர்ணம் ஸர்வாப⁴ரணபூ⁴ஷிதம் ||
தி³வ்யாயுத⁴வரைர்யுக்தம் தி³வ்யக³ந்தா⁴நுலேபநம் |
பஞ்சவக்த்ரம் த³ஶபு⁴ஜம் சந்த்³ரக²ண்ட³ஶிகா²மணிம் ||
[illegible] ஸௌம்யம் பா³லார்க[illegible] |
த்ரிலோசந[illegible] ||
த³க்ஷிணம் நீலஜீமூத[illegible] |
[illegible] த்ரிலோசநம் ||

[illegible]

தேவியார் இங்ஙனமான முறைப்படி சதாசிவ மூர்த்தியைத்தியானித்துத்தனது ஹ்ருதய கமலமத்தியில் அவ்விறைவனைச் சர்வத்தியானுபகரணங்களையும் அமைத்து அன்போடாராதனைசெய்து பின்னர் பஞ்சபாத்திர அஷ்டபாத்திர சம்பந்தமுடையனவாகிய சாமான்யார்க்கிய விசேஷார்க்கியங்களை யமைத்து அவைகட்குச் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரங்களைச் செய்து சுகந்த தீர்த்தங்களை நிரப்பி அக்ஷதை யவை வெண்கடுகு கந்த புஷ்பாதிகளிட்டுச் சம்ஹிதா மந்திர முதலிய மஹா மந்திரங்களா லர்ச்சித்து அபிமந்திராதிகளியற்றிப் பின்னர்ச் செய்யவேண்டிய பூத சுத்தியாதி பஞ்சசுத்திகளையுஞ் செய்து கண்டாநாதத்தை த்வனிப்பித்து அம்பிகேசரது திருமுடிமேலிருந்த நிர்மாலியத்தைக்கழித்து இலிங்கசுத்திசெய்து தூபதீபங் காட்டிப் பாத்யாசமனங்கள் கொடுத்து முறையாயபிஷேகஞ்செய்ய வாரம்பித்தனர். ஓ முனிவர்களே ! அம்பிகை தமது சகிகளால் கொண்டுவரப்பட்ட சுகந்த தைலமுதலிய சகலத்திரவியங்களாலும்

மிகவுஞ் சாவதானமாய்ச் செய்த பூஜா முறைமையைச் சொல்லுகிறேன். நீவிர் ஒருவழிப்பட்ட மனத்துடன் கேட்பீர்களாக.

அம்பிகை அம்பிகேஸ்வரரை அபிஷேகஞ்செய்யத்தொடங்கிய காலத்தில் விநாயகக்கடவுளை முன்னர் வழிபட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்து அவ்வுச்சாரணையோடு பரமேஸ்வரனைத்தியானித்துப் பல பொற்குடங்களில் நிறைத்துள்ள சுகந்ததைலங்களாலும் அதுபோலவே எண்ணிறந்த குடங்களில் நிறைத்துள்ள பால் தயிர் நெய் மது கருப்பஞ்சாறு முதலிய பலரசவர்க்கங்கள் மதுவர்க்கம் பஞ்சாமிர்தம் மலையளவாயுள்ள சர்க்கரை வாழைக்கனி மாங்கனி பலாக்கனி முதலிய கனிவகைகள் இளநீர் ஆகிய இவைகளாலும் பச்சைக்கர்ப்பூரம் குங்குமப்பூ கலந்த சந்தனக்குழம்பாலும் அபிஷேகித்து அதன் பின்னர் சததாரை சஹஸ்ரதாரை இடம்புரிச்சங்கு வலம்புரிச்சங்கு கெண்டிமுதலியவைகளால் தீர்த்தாபிஷேகமும் அதன் பின்னர் ஸ்தபனதீர்த்தம் அர்க்கிய தீர்த்தங்கள் முதலிய அர்க்கியவபிஷேகங்களும் அதன் பின்னர் பிரணவமந்திரப்ரோக்ஷணமும்செய்து "பவேபவேநாதிபவே" என்று பாத்தியமும் ருத்ராயநமஃ என்று ஆசமனீயமும் "வாமதேவாயநமஃ" என்று வஸ்திரமும் "ஜ்யேஷ்டாயநமஃ" என்று யக்ஞோபவீதமும் "கனிஷ்டாயநமஃ" என்று திருநீறும் "காலாயநமஃ" என்று சந்தனமும் "கலவிகரணாயநமஃ" என்று அக்ஷதையும் பலவிகரணாயநமஃ என்று புஷ்பமும் சாத்தி "பலப்ரமதநாயநமஃ" என்று தூபமும் "ஸர்வபூததமநாயநமஃஎன்று தீபமுங்காட்டி "மனோன்மநாயநமஃ" என்று நைவேத்தியத்தையும் சமர்ப்பித்தனர். பின்னர் தாம்பூலம் நீராஞ்சனம் முதலிய உபசாரம் எல்லாவற்றையும் பஞ்சாக்ஷரத்தினாலேயே செய்து பிரணவத்தினாலும் சிவமந்திரத்தினாலும் அர்ச்சித்தனர். திரியம்பகமந்திரத்தினால் ஆதார பீட பூஜை முதலியவகைளைச்செய்து பின்னர்த்தேவியார்மகேஸ்வரனை விஸ்தாரமாகப் பூஜிக்க வாரம்பித்தார். அதன்பின்னர் தமது சகிகளைக்கொண்டு மிருதங்கம் வீணை புள்ளாங்குழல் என்னும் மூவகை வாத்யங்களின் நாதங்களாலும் காகளமுதலிய முழக்கங்களாலும் தண்டை சதங்கை முதலிய வொலிகளாலும் கைத்தாளமுதலிய பக்கவாத்தியங்களோடு ருத்திரகணிகையர் செய்யும் நடனவிநோதங்களாலும் சிவபெருமானுடைய கட்புலனுக்கும் செவிப்புலனுக்கு மின்பஞ்செய்வித்தும் சந்திரனைப்பழிக்கும் வெண்ணிறம்வாய்ந்த குடைவரிசைகளின் நிறைவினாலும் அன்னப்பக்ஷிகளின் சிறகுகளைப் பழிக்கும் அழகிய சாமர வரிசைகளின்

அசைவினாலும் மயிற்றோகைகளால் சித்திரித்திருக்கும் மயில்விசிறிகளின் சாய்வினாலும் பொன்னாலும் பட்டாலும் பற்பல விசித்திர மாயமைந்துள்ள ஆலவட்டங்களின் பொலிவினாலும் திருவுள்ளங் களிக்கச்செய்வித்தும் திரியம்பகமந்திரத்தால் தாம் செய்யவேண்டிய சகல பூஜைகளையுஞ் செய்து அதன் பின்னர் பிரதக்ஷணங்களும் சாஷ்டாங்கநமஸ்காரங்களுஞ் செய்து தாமே இனியநாதமும் வெண்ணிறமுமுடையதாகிய தந்திகளால் விளங்கும் திவ்யவீணையொன்றைக் கையிலெடுத்துக்கொண்டு மலரிதழைப்பழிக்கும் அழகிய விரனுனிகளால் இசைக்கிணங்க மீட்டி அந்த வீணையினொலிக்கும் தமது கண்டத்தொலிக்கும் சிறிதும் வேற்றுமையறிவதற்கின்றி சிவநாமகானஞ் செய்து பரமானந்தபரவசராய் ஹரஹர சங்கர சந்திரசேகரா! பிரம்ஹாதீஸ்வரா! விஸ்வநாதா! ஶம்போ! கருணாரசசாரா! சோபிதீரா! தேவரீர் என்னைக் காத்தருள்க. அம்பிகேசா! ஆகாயத்தையுங்கடந்த முடியையுடையானே! தொங்கி விளங்கும் நீண்ட சடைமுடியுடையானே! வியோமகேசா! பிரண்தார்த்திஹரா! நாகபூஷணா! தநுர்த்தரா! ஹரிபாணா! பத்மநேத்ரா! தக்ஷயக்ஞசிக்ஷகா! தக்தகாமபுரவர்க்கா! கிரிஜாசுதையாகிய என்னைக்காத்தருள்க. ஓ பவா! பீமா! உக்ரா! கபாலமாலாதரா! கரசூல அமல! பூதிபூஷிதாங்க! தேவரீர் கடைக்கண்ணாலென்னை நோக்கியருள்க. கணநாதஷடாநநாதி சேவ்யா! ஸகஸ்ரஶ்ருதி சேவ்யா! தஹரககனவாசா! விஶ்வதாமா! பிரமதாதீசா! தேவரீரது பாதாரவிந்தத்தை வணங்குகின்றேனென்று கைலாசாசலத்தில் சிவலிங்கமூர்த்தியாய் வீற்றிருக்கும் அம்பிகேஶ்வரரைத் தோத்திரஞ்செய்து மஹானந்தானுபவையாய்ச் சாமகானத்துடன் நாடோறும் முக்காலமும் பூசைசெய்தும் மஹாப்பிரதோஷகாலங்களில் சகலத்திரவிய விசேஷங்களாலும் சர்வவுபசார விசேஷங்களாலும் விசேடமாய்ப் பூசித்தும் உபாசித்தும் தோத்திரஞ்செய்தும்வருவார். ஓ முனிவர்களே! அம்பிகையார்இவ்வாறு விசேடபூசைகள் செய்துவருவதுமன்றித்தமது சகிகளோடு நந்தனவனமுதலிய விடங்களிற் சென்று அவர்களினுமிக்க விரைவுடையவராய்ச் சோம்பலின்றிச் சிறந்த வில்வங்களையும் தாமரை முதலிய சிறந்த மலர்களையும் பறித்துவருவார். அப்பத்திரபுட்பங்களை யெடுக்கும்போது கைகளிற்படுமுட்கள் முதலியவற்றிற்குச் சிறிதும் வருந்தார். சிவநிவேதனமாகுந்தீர்த்தங்கனி முதலியவைகளையே அமுதமாயுட்கொண்டு மகிழ்ந்து சகிகளைப்பார்த்து ஓசகிகளே! சிவநிவேதனமானது அமிர்தாசத்தினும்ர

சமுடையது. பாவராசிகளைத்தொலைத்துச் சிவஞானத்தையுண்டாக்குவதென்று சிவப்பிரசாதமகிமைகளை யெடுத்துக்கூறுவர். இவ்வாறு நாட்கழித்துவரும் அம்பிகையினது பக்தி விசேடங்கட்கு மகாதேவர்மகிழ்ந்தவராய் அவ்வம்பிகை காணசகலகணங்களுடன் பிரத்யக்ஷமாய்த்தமது இருகரங்களாலும் தேவியாரை நழுகவிடாமல் திடமாய்த் தழுவியெடுத்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு ஓ கிரிஜே! நீயே தன்யையாகின்றனை. எனக்குமிகவும் பிரியமாய் அர்ச்சனை செய்வதனாற் பெறும்பயனை யாவராற் சொல்லி முடியுமென்றருளினர்.

ஐந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ஸ்ரீபதயேநம:

## ஆறும் அத்தியாயம்.

ஈஸ்வராகமனம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். ஓ முனிவர்களே! சந்திரகலாதரனாகிய பகவான் பிரதமைசந்திரன் போல் தினேதினே தவத்தை விருத்தி செய்கிறவராய் மின்னற்கூட்டம் நிலைபெற்றொளிவிடுந்தன்மைபோல் ஒளிவிடுந்திருமேனி யுடையவரும் ஆபரணங்களில்லாமலேபிரகாசிக்கின்ற சுந்தரமுடையவரும் பொன்போல் மின்னிய கூந்தலையுடையவரும் மரவுரி அஜினமுதலிய ஆடைகளையணிந்தவரும் திருநீறுசண்ணித்ததிருமேனியுடையவரும் முழுமதிபோல்திருமுகமுடையவரும் திரிபுண்டரமணிந்த திருநெற்றியுடையவரும் அக்கமணியணிந்த அழகிய அங்கங்களுடைய வருமாகிய தேவியாரைத் தமது மடித்தலமாகிய சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து சகல சராசரங்கட்கும் சுகமளிக்குந் திருக்கரங்களால் தவத்தால் வாட்டமுற்றிருக்கும் அம்பிகையின் திருமேனியைத் தடவி அத்திருமேனியையேகருணைமிக்கதயை யுடன் கூடிய தமது கடாக்ஷங்களுக்கு இலக்ஷ்யக்குறியாக்கித் திருக்கண் சாத்தியிருப்ப அம்பிகைவிரைந்தெழுந்து இறைவன்திருவடியில் வீழ்ந்து பணிந்து சந்திரோதயகாலத்தில் கடல்பொங்குவதுபோல் ஆனந்தத்தாற் பொங்கி அவரதுபாதார விந்தங்களைத் தமதிருகரங்களாலுந் தழுவிப்பிடித்துத் தோத்திரஞ் செய்து நின்றனர். பரமேஸ்வரன் மீண்டுந்தேவியைத் தமது மடியின்மீ திருத்தி அவரது திருமுகத்தில் பெருகியிருக்குங்கண்ணீரைத் திருக்கரங்களாற்று

டைத்து ஓ கௌரீ! தவத்தினால் வாட்டமுற்றிருக்கு முனது வேண்டு கோளை நானறிவேன். வாகைமலர்போல் மிருதுவாயுள்ள உனது சரீரம் பனிமழை முதலியவற்றால் கிலேசமடைந்து மெலிவுற்றும் செந்தாமரை மலர்போல் மலர்ந்திருக்கும் முகம் பனியால் வாட்டமுற்றும் கருமையாலழகு பெற்றிருக்கும் கூந்தல் திருநீருற்று நுண்டுகளால் அழகுகுலைந்தும் கூந்தற்பின்னலானதுபுற்றிற்சென்றகிருஷ்ண சர்ப்பத்தினுடம்புபோல்மாசடைந்தும்போயினவே. நாவிகையுடன் பூர்ணசந்திரன்போல் பிரகாசிக்கின்ற முகத்தினிடத்தில் காணப்படுமழகிய சிந்தூரதிலகமும் முடியிலணிந்திருக்கும் ஆபரணங்களும்போய் அவை பஸ்மதிரிபுண்டர ருத்திராக்ஷங்களால் விளங்குகின்றனவே. முத்தாரங்களாலும் ரத்னாரங்களாலும் பிரகாசிக்குங் கண்டமானது உருத்திராக்க மணிகளால் மூடப் பட்டிருக்கின்றதே. விரல்களெல்லாம் வில்வத்தின் முட்களால் புண்ணாக விருக்கின்றனவே வென்று திருவுள்ளம் நைந்து ஓகிரிஜே! உன்னுடைய விரல்களால் பரிசிக்கப் பெற்ற வில்வங்க ளெல்லாம் இப்போதுதான் மகிமைபெற்றன. இக்கைலையும் உனது பாதாரவிந்த பரிசங்கிடைக்கப் பெற்ற இப்போது தான்கிருதார்த்தத்தையடைந்து சகல தேவர்களாலும் போற்றுந்தன்மையைப்பெற்றது. ஸ்ரீபஞ்சாக்கரமும் கோவைக்கனிபோன்ற அதரத்துடன் கூடிய உனது நாவினால்ஜெபிக்கப்பெற்ற இப்போதுதான் தன்யத்தையடைந்தது. வேதங்களில் உள்ளுறையாய்விளங்கும் உருத்திரமும்பாவனம் பெற்றது. இப்போது நீசெய்ததபோவிலாசமானது உலகத்தாரிதுபோல்நடத்துவதற்குக் காட்டியசிக்ஷையன்றோ? ஓஅம்பிகே! சிறந்தரத்னங்களாலிழைக்கப்பட்ட மாளிகையின்கண்தீபதூபங்கணிறைந்திருக்க அற்புதமஞ்சத்தின்மேல் திவ்யஸ்தானத்தில் வீற்றிருப்பவளாகிய நீகரடு முறடாகிய மலைப்பிரதேசத்தில் பற்பல தவ நியமங்களை மேற்கொண்டு மிகவும் வருந்தினையன்றோ? அந்தோ! உன்னாலறியப்படாததும் அடையப்படாததும் எவ்வுலகிலாவதுண்டோ? உலகில் தவஞ்செய்வோருக்கெல்லாம் வேண்டியாங் களிப்பவள் நீயேயன்றோ? உனது பாதாரவிந்தத்தைத் தியானித்தேயன்றோ யாவரும் தத்தமனோரதங்களை நிறைவேற்றிக்கொள்ளுகின்றனர்? பிரமன் திருமால்முதலிய தேவர்களும் பிரமதகணங்களும் முனிவர்முதலாயினரும் உன்னை த்யானித்ததனாலன்றோ மஹிமை பெற்று விளங்குகின்றனர்? சகலமும் உன்னாலன்றோ வ்யாபிக்கப் பட்டுளது? சகலதேவாசுரமனிதரும் ம்ருகபக்ஷிபர்வதவனங்களடர்ந்திருக்கிற சகல லோக ஜாலங்களும் உனது கடாக்ஷத்தினாலன்றோ

பாலிக்கப்பட்டும் சங்கரிக்கப்பட்டும் வருகின்றன? உனது கருணை யிருந்த் கடைக்கண்ணோக்கம் பெற்றவர்களே அணிமாதி சகலசித்தி களுஞ் சித்திக்கப்பெறுகின்றனர். அவர்களே தன்யருமாகின்றனர். அவர்ளே சகலசுகமுமுடையவர்களுமாகின்றனர். எவர்கள் உனது கருணாகடாக்ஷம் பெற்றிலரோ அவர்களே மகாபாபிகளும் கோர மாகிய நரகங்களை விட்டகலாதவர்களுமாகின்றனர். நீகண்ணை மூடித் திறப்பதற்குள் ஜகங்களுக்குப் பிரளயமும் உதயமுமுண்டாகின்றன. நீயே ஶ்ருதி ஸ்மிருதி பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் ஆகிய இவையெல்லாமாகின்றனை. சக்தி என்பதும் நீயேயாகின் றனை. உன்னாலேயே சகல ஜகங்களும் வியாபிக்கப்பட்டு விளங்கு கின்றன. சக்தியாகிய நீயில்லாவிடில் சகலமும் சடத்தன்மையைப் பெறுவனவாம். நீயே சூரியனிடம் பிரகாச சத்தியாயும் சந்திர னிடம் சீதளசத்தியாயும் அக்னியிடம் தகன சத்தியாயும் இந்திர னிடம் சம்பத்சத்தியாயும் வருணனிடம் ஜலசத்தியாயும் ஈசான னிடம் மஹா சத்தியாயும் விஷ்ணுவினிடம் பாலன சத்தியாயும் பிர மனிடம் சிருட்டி சத்தியாயும் உருத்திரரிடம் சங்காரசத்தியாயும் ஈஶ்வரரிடம் திரோதானசத்தியாயும் சதாசிவரிடம் அநுக்கிரகசத்தி யாயுமிருக்கின்றனை. யானோ சத்திமான். ஓதேவி! எனக்குள்ளவைய வமெல்லாமுண்மையில் சத்தியாயிருக்கின்ற வுன்னுடையவையவமே. எங்தெந்தமூர்த்திகளிடம் யாது யாது சிறப்புற்றிருக்கின்ற சத்திக ளோ அவைகட்கெல்லாம் சநாதனையாகிய நீயே ஆதாரசக்தியா யிருக்கின்றனை. சாந்திபுஷ்டி திரிதிஸ்வாஹாஸ்வதா என்பவை யெலாம் ஓ பரமேஶ்வரி ! நீயே. உனது கிருபா சம்பந்தமற்றிருக் குமாயின் ஜகம் சக்தியற்றதாகும். நீயே மாயை. உனது மாயையா லேயே சகல ஜகங்களுமுண்டாகின்றன. சகலப்பிரமாண்டகோடி களும் பிரமவிஷ்ணு ருத்திரர்களும் இந்திரன் மநு பிதுர்த்தேவர் துருவன் நக்ஷத்திரங்கள் கிருகங்கள் என்றெண்ணப்பட்டவரெல் லாம் சுற்றிச்சுற்றிவரும் சிலந்திப்பூச்சிகள் போலும் செக்கைச்சுற்றி வரும் மாடுகள் போலும் சுவர்க்கம் நரகம் தேவதிரியக்மாநுடரா கிய இவைகளில் நூல்களில் விதித்திருக்கும் விதி வழியே சுழன்று சுழன்று சுகதுக்கங்களிற் கிடந்துழன்று காமக்குரோத பராயணர்க ளாயுழலுகின்றனர். அந்தோ! இவ்வாறுழல்கின்ற இவ்வுலகினர் உனது கருணாநோக்கம் பெறுதற்கின்றி மோகாந்தகாரத்துக்குள் ளாய்த் திசைதெரியாமல் தடுமாறித் தியங்கித்துன்பக்கடலில் வீழ்ந் தழ்ந்து சாதியபிமான தேகவபிமானங்களாலும் ஆகாரநித்திரை

மைதுனங்களாலும் பரவசராய் நின்று அல்லற்பட்டுப் பரமான்மாவாகிய என்னை யறியாமல் பாழாகிய பிறப்பிலடங்கியுள்ள அறுவகையூர்மிகளிற் சிக்குண்டு உனது மாயாசத்தி வைபவத்தால் பசுக்களாயுலவுகின்றனர். உன்னுடைய மஹிமை இவ்வாறெல்லாமிருக்க நீ தவஞ்செய்வதை நோக்குங்கால் மிக்கஆச்சரியமாக விருக்கின்றது. உனக்குத் தவத்தாலாகவேண்டியவையாதானு மொன்றுண்டோ? நீ அன்னியையல்லாதவளாயிருந்தும் யாதோஒன்றைக் கோரியவர்போல் தவஞ்செய்கின்றனையே. நிர்மலஸ்வரூபிணியும்பராசத்தியுமாயிருப்பவள் நீ. அப்படிப்பட்ட நீஉண்மையில் எனக்கு அன்னியையன்றே. சகலசராசரங்கட்கும் ஈஸ்வரியாகிய நீயும் தவஞ்செய்து பெறக்கூடியது மொன்றுண்டோ? சூதர், முனிவர்களே! பின்னும் ஹரர்தேவியை நோக்கி ஓ தேவி! இங்ஙனம் ஏகாந்தமாய் விளங்கும் கைலாயசிகரத்தில் இலிங்கத்தைத்தாபித்து அர்ச்சித்தது சகல லோகங்களின் அநுக்கிரகத்தின் பொருட்டாம். உன்னால் பூஜிக்கப்பட்ட இந்த லிங்கமானது உனது பெயரின் சம்பந்தமுடையதாய் அம்பிகேசலிங்கமென்று வழங்கப்படும். உனது பூஜையால் மிக்க திருப்தியடைகின்றேன். ஆனால் உனக்குக்கொடுக்கக்கூடியதுயாதுளது? இந்த ஜகமெலாம் உன்னினும் வேறாயில்லையன்றோ வென்றன ரென்று கூறினர்.

ஆறாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
வாக்பதயே நம:

## ஏழாம் அத்தியாயம்.

### இறைவன்தேவியை உபசரித்தல்.

**ஸ்கந்தர்**:-ஓஜைகிஷவ்யரே! இவ்வாறு சங்கரர்கூறியதைக்கேட்டுத்தேவி ஆனந்தமுற்று அவ்விறைவனை நமஸ்கரித்து அஞ்சலிசெய்து தோத்திரம்புரிந்து ஓஸ்வாமி! தேவரீர் கருணை கடாக்ஷத்தால் என்னையருளும். மாரனையடக்கிய இறைவனே! அந்தகாசுரனை வதைத்த ஈசனே! விஸ்வேசா! பர்க்கா! பகாக்ஷனைகொன்றவனே! கங்காதரா! பிநாகபாணே! தீனபந்தோ! தக்ஷனைசிக்ஷித்தபகவனே! உன்னோடு கூடிஸகலஜகங்களையுஞ் சிருட்டிக்கும் சக்தியேயாயினும் யான் லோகாநுக்கிரகத்தின் பொருட்டுத் தவஞ்செய்தேன். தீர்த்த

யாத்திரை விரதாரம்பம் லிங்கார்ச்சனை ஆகியஇவைகளைப் பெண்டிர் செய்ய வேண்டின்கணவனது அநுமதி பெறவேண்டுமன்றோ? அங்ஙனமாயின் புண்ணியமெய்தலாமென்ப துண்மையேயாயினும் யான் சுதந்திரைபோல் இப்பூசை செய்தது லோக ரக்ஷணத்தின் பொருட்டாகியலீலையாம். சந்திர சந்திரிகைகளுக்குப் போலவே நம்மிருவருக்கும் பேதமில்லை. நமக்குள் பேதமெண்ணும் மனிதன் மனிதவுருவமான கழுதையேயாம். நிற்க. யான்உம்மோடு கிரீடிப்பதற்குத் தக்கதும் யோகினிகளால் சேவிக்கப்படுவதுமாகிய அழகான ஓர் கிரீடாஸ்தானத்தைச் சிருட்டிக்க விருபுகின்றேனென்றனர். அப்படிக் கூறிய தேவியைநோக்கி பரமேஸ்வரன் ஓ தேவி! இதுவும் ஓர் பெரிதோ? சகல ஜகங்களையும் நிர்மாணஞ்செய்வதில் பண்டிதையாகிய வுனக்கு அஸாத்தியமாகிய காரியம் யாதுமில்லை. நீ சிறிது நினைத்தமாத்திரத்தினால் வேண்டியதுண்டாகுமன்றோ? அப்படி யுன்னாலுண்டாக்கப்படு மிடமே எனக்கு மிக்க பிரீதியளிக்குமாதலால் தவத்தை விடுத்து அங்ஙனஞ்செய்வாய். ஓ தேவி! நீ இக்கைலாயசிகரத்தில் பூஜித்த அம்பிகேசமெனும் லிங்கத்தில் யான் மிக்க பிரியமாயிருக்கின்றேன். உன்னால் பூஜிக்கப்பட்ட லிங்கத்தைப் பார்த்த எனது சித்தமானது வேறெதனையும் சிந்திக்கவில்லை யென்று கூறி தேவியை ஆலிங்கனஞ்செய்து திவ்யசிம்ஹாசனத்தின் மீது வீற்றிருக்கச்செய்து ஸகலாபரணங்களாலலங்கரித்து அகருகற்பூர சந்தனங்களைப்பூசி திவ்ய வஸ்திரத்தையும் அற்புதமாகிய ரவிக்கையையும் அணியச்செய்து தூபதீபங்களால் விளங்கச்செய்து திவ்யான்னவகைகளையும் பக்ஷயவகைகளையும் கனிவகைகளையும் சுவர்ணபாத்திரத்தில் வைத்து தேவியோடுகூடத்தாமும் புசித்து பழவகைகளைத் தேவியின் வாயினில் தமது திருக்கரத்தாலெடுத்துக்கொடுத்து ஓ கௌரி! ஆகாரமின்றிச்செய்த தவத்தால் மிக்க வாட்டமுற்றனை. இக்கனிகளைப் புசிப்பாயாகவென்றுகூறி இதோ! கைலாஸலிங்கத்திற்கு நிவேதனஞ்செய்த பக்ஷயமாதலின் மிக்க இனிப்பாயுளது, இதனைப்புசிப்பாயாக. எவன் மஹேசநிவேதனத்தைப் பக்தியுடன் புசிக்கின்றானோ அவன் யாகம் யோகம் அபாரமாகியதவம் இவைகளின் பயனைப் பெற்று முத்தியடைகின்றான். ஆதலின் இந்த நிவேதனத்தைப் புசிப்பாயாக. இதனைப் பக்தர்கள் எப்பொழுதும் புசிக்கவேண்டு மென்றுகூறி அந்நிவேதனங்களைப் புசிக்கச்செய்து தேவியின் கைகால்களைத் தீர்த்தத்தா லலம்பிய பின்னர் அழகிய படுக்கை திண்டு தலையணையுடன் கூடிய மஞ்சத்தில் அம்பிகையோடு

ஈஶ்வரன் அடைந்து வீற்றிருந்தனர். பின்னர் இருவரும் தாம்பூலந்தரித்தனர். அதனால் திருப்தியடைந்தவராகிய தேவியின் முகத்தாமரை மலரை இறைவன் தமது திருக்கரத்தால் அடிக்கடி தடவிக்கொடுத்து ஓ தேவி! தவத்தால் மிக்ககிலேசமுற்றனையே என்று கூறிச் சகிகளைக்கொண்டு விசிறியால் விசிறச் செய்தனர். இவ்வாறு அவ்விருவர்களும் அந்த கைலாய சிகரங்களிலுள்ள அழகிய தாழ்வரைகளிலும் உத்யானங்களிலும் தாமரைத்தடாகங்களிலும் மாளிகைகளிலும் அநேகவருஷம் வரையிலும் லீலாபரர்களாயிருந்தனர். பின்னர் லிங்காலயங்களிற்சென்று லிங்கதரிசனஞ்செய்வதாலும் மிருகம் பக்ஷி முதலியவைகளைபார்ப்பதினாலும் மிக்கச் சந்தோஷமுற்று ருத்திராணிகளின் வாத்தியகானத்தாலும் நடனத்தாலும் திருப்தியடைந்தவர்களாய்ப் பின்னர் அழகிய ஓடத்தையடைந்து அமுதசமுத்திரத்தில் உல்லாஸமாய்ச் சஞ்சரித்தனர். ருத்திரவீணாநாதத்தால் உல்லாஸமாகிய மனதுடையராயினர். பின்னர் பந்து சொக்கட்டான் முதலியவைகளைக்கொண்டு விளையாடி ஊசலையடைந்து வெகுகாலமுல்லாசமாயிருந்தனர்.

ஏழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஶ்ரீ ஶங்கராபரிணே நம:

## எட்டாம் அத்தியாயம்.

### மணித்வீபசிருஷ்டி.

**ஸ்**கந்தர்:-ஓமுனிவரே! பரமசிவனது திவ்யசரித்திரத்தைக்கூறுகின்றேன். அஃது ஸகலபாவங்களையுமகற்றுவதன்றோ? மணித்வீபத்தின் உற்பத்தியை விஸ்தாரமாய்க் கூறுகின்றேன். அதனைக்கேட்டே முனிவர்களும் கணங்களும் அபாரமஹிமை பெற்றனர். அதாவது தேவி நமஸ்கரித்து அஞ்சலி செய்து இறைவனை நோக்கி ஓதேவதேவா! மஹாதேவா! தேவரீர் கைலாயத்திலுள்ள ஸ்தானத்திலும் உலகங்களில் மற்றுமுள்ள இடங்களிலுமுள்ள திவ்யஸ்தானங்களிலும் அழகியதாய் மிக்கஆச்சரியகரமாய் ஓர் ஸ்தானத்தைச்சிருட்டியுங்கள். தேவரீரால் பரதகண்டத்தில் ஆனந்தவனமும், சுவர்க்கசத்யலோக வைகுண்டமு முதலிய விடங்களும் சிருட்டிக்கப் பட்டவன்

றோ? ஸ்ரீகாசியில் தேவரீர்விஸ்வேசரெனும் லிங்கரூபத்தோடும் யான் அன்ன பூரணியெனும் நாமத்தோடும் பக்தர்களுக் கன்னத்தையும் முக்தியையும் அருளிக் கொண்டிருக்கின்றனமன்றோ? அன்றியும் ஸகலலோகங்களையும் சங்கல்ப மாத்திரத்தால் சிருட்டிக்கும் பரம காரண மூர்த்தி தேவரீரே. ஜராமரணமற்றுள்ளவர்களும் சந்திரகலையால் விளங்குஞ்சடையுடையோரும்விபூதிபூஷ்தரும் மூச்சூலமேந்தினவருமாகிய ருத்திர கோடிகளையு முண்டாக்கினவர் தேவரீர். அவர்கள் சுவர்க்க அந்தரிக்ஷ பாதாளங்களில் சரிப்பதைப் பிரமதேவன்கண்டு நடுங்கித்தோத்திரஞ்செய்தனன். அன்றியும் தேவரீரை நோக்கி ஓஸ்வாமி! இனி இப்படிப்பட்டவர்களைச் சிருட்டிக்கத் திருவுளங்கொள்ளாதீர்களென்றுவேண்ட அதன்பின்னர் ஸ்தாணுத்வம் அடைந்தனிர். அஃதெலாம் தேவரீரது கருணையே. அப்பொழுது பிரமனைப்பார்த்து ஓபிரமதேவனே! யாம் (அசுபமாகிய) ஜரா மரணமுடையவர்களைச் சிருட்டிக்கமாட்டோம். நீயே அப்படிப்பட்ட பிரஜைகளைச் சிருட்டிப்பாயாகவென்று கூறி யருளியவர் தேவரீர். தேவரீர் மனதிற்கும் ஆச்சரியகரமாகிய இடம் ஒன்று சிருட்டிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குத்தேவன் மிக்க திருப்தியடைந்தவராய் அவ்வாறே ஆகுகவெனக் கூறி ஓர் கணநேரம் சிந்தித்தனர். உடனே அமுதஸமுத்திரத்தினின்றும் கோடி சூரியராசி உதித்ததுபோல் ஓர் சோதிகிளம்பியது. ஆகாயத்திலும் எத்திசையிலும் பரவிய அச்சோதியின் காந்தியால் பதினான்குலகங்களும் திடீரெனச்சோதிமயமாய்க் காணப்பட்டன. பிரம்மன் விஷ்ணு ருத்திரர் இந்திரன் மற்றுள்ள தேவர் திசைத்தலைவர் கிருகநக்ஷத்திர தேவதைகள் முனிவரர் முதலிய ஸகலரும் பயமும் ஆச்சரியமுமடைந்தவர்களாய் ஓஹோ! இதென்ன ஆச்சரியமாயிருக்கின்றது. திடீரென ஓர் ஜோதி தோன்றி நமது கண்ணொளிகளைக் கவருகின்றது. மிக்க பயமாயிருக்கின்றது. அச்சோதியின் கிரணங்கள் நம்மைத் தகிக்கின்றனவே. இதற்கென்னசெய்வோம். ஆலகாலவிஷத்தாலும் அந்தகாசுரனாலும் திரிபுரராலும் வந்த ஆபத்துகளினின்றும் காப்பாற்றிய இறைவனையே சரணமடையவேண்டுமென்று கூறிக் கதறினர். உடனே பிரமாதி தேவர்களெல்லோரும் மகாமேரு சிகரத்தினின்றுகொண்டு அஞ்சலிசெய்தவர்களாய்க்கைலாயத்தில் வீற்றிருக்கும் மஹேஸ்வரனைத்தோத்திரஞ்செய்தனர். அதனைக்கேட்டுமஹேஸ்வரன் திருப்தியடைந்து பக்கத்திலுள்ள கிரிஜையையும் ஸமீபத்தினின்ற நாதியையும் பார்த்தனர். ஓ நாதி! இப்பொழுது மிக்க

பரபரப்புடன் சரணஞ்சரணமென்று தோத்திரகோஷங்கேட்கப் படுகின்றது. அது யாதென்று விரைவிற்சென்று நந்தியைவிசாரித்து வரவேண்டுமென்ற வெண்ணத்துடன் நோக்கினர்.

எட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
ஆம்ரிதவத்ஸலாயநம:

## ஒன்பதாம் அத்தியாயம்.

### மணித்வீப கமனம்.

ஸ்கந்த மூர்த்தி ஜைகிஷவ்ய முனிவரைப்பார்த்துக் கூறுகின்றார். ஓ முனிவரே! மஹாதேவியானவர் மேருசிகரத்திற் றோன்றிய ஓர் பேரொலியைக்கேட்டு அதிசயித்துத் தமதருகிலிருக்கும் ஜயந்தி என்னும் தோழியைப்பார்க்க,அவள் அம்பிகையினது குறிப்பறிந்து அவரடிபணிந்து விடைபெற்று வயிரமயமாயிருக்கும் அவ்வாலயத்தைவிட்டுப், பூர்வகோபுரத்தின் மத்தியில் வசிக்கின்றவராயும், திருநீறு சண்ணித்ததிருமேனியராயும், சிரம் திருமுகமுதலிய வங்கங்கள் திரிபுண்டரங்களால் பிரகாசிக்கப்பெற்றவராயும், சந்திரமண்டலம்போல் பிரகாசிக்கின்ற கிரீடமுடையவராயும், திருக்கரத்தில் பொன்மயமாகிய வேத்திரப்படையைத்தாங்கினவராயும், கோடி சிவ கணங்களால் சூழப்பெற்றவராயும் சிம்ஹாசனத்தில் வீற்றிருக்கும் நந்திதேவரிடம்வந்தனள். ஜயந்திவருவதைக் கண்ட நந்திதேவர், ஆசனம் விட்டிழிந்து அச்சயந்திக்கு ஆசனமளித்து அர்க்யபாத்யாதிகள்தந்து வழிப்பட்டு, இங்குவந்தகாரணமென்னையோ? உமதுவரவைக்கண்டு என்மனம் மிகவுங்களிப்பெய்துகின்றது. யான் தன்யனுயினேன். மஹாதேவிக்கும் மஹாதேவருக்கும் ஏதேனும் அவசரமுண்டோ? என்ன கட்டளையிட்டனுப்பினர்? அக்கட்டளையைக் கூறலாம். அதனைவிரைவில் செய்து முடிக்கின்றேன். காலதாமதஞ் செய்யவேண்டாமென்று கேட்க, ஜயந்தி, ஓ நந்திதேவரே! தேவியுந்தேவனுங் கைலாசசிகரத்திலுள்ள வயிரக்கிரகத்தின் மேல்மாளிகையில் உல்லாசமாயுலாவிக் கொண்டிருக்கும்போது மஹாதேவர் தமது தேவியாருக்கு இதனினும் மேம்பட்டதாகிய ஓர் ஸ்தானம் அமைத்தல் வேண்டுமென்று சற்று திருவுளத்திலெண்ண அவ்வளவில் ஜோதியொன்று தோன்றிற்று. மேருமலையில் ஓர் பெருங்கோஷ

முழுமுண்டாயிற்று. அக்கோஷத்தைக் கேட்டபெருமானுர் அருகிலிருந்த வென்னைப்பார்த்து உம்மிடமனுப்பினர். தேவியினுடையகட்டளையுமப்படியே யாகலான் அம்மையப்பர்கட்கு நீர்அங்கு வரவேண்டுமென்னுந்திருவுளம்போற் காண்கின்றது. நீர்புறப்படும். இரதமும் ஒன்று சித்தஞ் செய்யும். யான் தேவியினது அடியாளாதலால் நெடுநேரம் இங்கிருத்தல் கூடாது. நீரும் ஆணையைக்கடவாமல் விரைவாய் அவ்விடம் வந்து அங்கு ஆகவேண்டிய காரியங்களைப்பாருமென்றனள். நந்திதேவர் சிலகணங்களையழைத்து நீவிர்சீக்கிரமாய் மேருமலைக்குச் சென்று அங்கென்ன விசேடம் இப்போதுண்டாயிருக்கின்றது; அதனைக் கண்டுவாருங்களென்றனுப்ப அவர்களோடிப்போய் அங்கு நடந்த செய்தியை யறிந்து, மீண்டு வந்து நந்திதேவரைப் பணிந்து, ஐயா அமுதக்கடலின்மத்தியில் அகண்டாகாரமாய்ப்பேரொளியொன்று தோன்றியதாம். அந்த ஒளியை மேருவிலிருந்த விஷ்ணுமுதலிய தேவர்களும் பிரகஸ்பதிமுதலாயினோரும் கண்டு இது வென்னஜோதியோ இச்சோதி தோன்றியதற்குக் காரணமியாதோ என்று பயந்தவர்களாய்ச் சிவபெருமானைத் தோத்திரஞ்செய்கின்றனர். அங்கெழுந்த வோசைக்குக் காரணமிதுவாகும். அவ்விடத்தில் அவர்களைத் தவிர வேறொருவருமில்லை. சயந்தியார் சொன்னபடி ரதத்தைத்திட்டஞ் செய்யும் என்றனர். நந்திதேவர் சயந்தியைப்பார்த்து, ஓ அம்மா கணங்கள் சொல்லியதையும், நீர் முன் சொல்லியதையும் இப்போது யோசிக்குமளவில் நம்பெருமானுர் அமுதக்கடலில் நமது அம்மையாரை யுத்தேசித்து சோதிமயமாயிருக்கின்ற மாளிகையொன்றுண்டாக்கினுர் போலும். அங்குச்செல்வதற்கு இப்பொழுது திருவுளங்கொண்டனர் போலுங்காண்கின்றது. ஆகையால் இரதத்தைச் சித்தஞ்செய்து விட்டேன். நீர் சீக்கிரமாகச் சென்று ரதம்சித்தமாயிருக்கின்றதென்று தேவிக்குந்தேவருக்குந்தெரிவித்து அதன் பின்னர் உம்முடைய காரியத்தைப்பார்க்கலாம். இருவர்க்குஞ் செல்லத் திருவுளமிருக்கும் பக்ஷத்தில் யான் சித்தமாயிருக்கிறேனென்று சொல்லவே, சயந்தி அவரது ஜாக்கிரதையைப்பற்றி அதிசயித்தவளாய் அவரிடத்தில் விடை பெற்று மஹாதேவரிடஞ் சென்று நமஸ்கரித்து நின்று ஓ பிரபோ! அமுதக்கடலிற் றோன்றிய பேரொளியை மேருமலையிலிருக்குந் தேவரெல்லாரு் கண்டுபயந்து பேரொலியோடுந் தோத்திரஞ்செய்கின்றனர். தேவரீர் இப்பொழுது உண்டாக்கிய அச்சோதியிடத்துக் கேகத் திருவுளமிருக்கும்பக்ஷத்தில் இரதம்சித்தமாயிருக்கின்றது. அந்தரதத்தின் பொலிவே தேவ

ரீருக்கு விஜயங்கூறுகின்றது. அந்தரதத்தினது விசித்திர வலங்காரத்தை யான் என்னவென்று சொல்லப்போகின்றேன்.

ஓ சங்கரபிரபோ! அந்த ரதத்தின் எட்டுப்பக்கங்களில் எட்டுச் சிங்கமும், எட்டுக் கஜங்களும், எட்டு விருஷபங்களும், மனோவேகத்தை யதிகரித்த எட்டுக் குதிரைகளு முள்ளன. அக்குதிரைகளுக்கு மனமே கடிவாளமாகவுள்ளது. அன்றியும் அந்தரதம் கங்கையமுனை முதலிய திவ்ய நதிசம்பந்த முடையதும், காலைமாலையாகிய சக்கரங்களுடையதும், வாயுதேவன் கூடிவிளங்கப் பெற்றதும், கீர்த்தியே முத்து ஜாலர்களாக வுள்ள சுவர்ன மண்டலம் போன்ற சத்திரமு (குடையு)முடையதும், பிரணவத்தையே ஆசனமாகவுடையதும், காயத்திரியே பீடமாகவுடையதும், சாங்கங்களான வியாஹ்ருதிகளைச் சோபானங்களாகவுடையதும், சூரிய சந்திரர்களைத் துவார ரக்ஷகர்களாகவுடையதும், மகாமேருவைக் கொடிமரமாயுடையதும், கலைகளால் சாமரை வீசப்பெற்றதும், இலக்ஷ்மி தேவியினால் ஓர் வெண்மையான குடையைத் தாங்கி யிருக்கப்பெற்றதுமாயலங்கரிக்கப்பட்டு சந்திரமண்டலம் போற்பிரகாசிக்கின்றது. உலகங்களிலுள்ளாரெல்லாம் வந்துகூடினர். முப்பத்துமுக்கோடிதேவர்கள், இருபதினாயிரங்கோடி கணங்கள், ஒன்பதுகோடிசாமுண்டிகள், கோடிபைரவர்கள், சிவசாரூபம் பெற்ற பதினொருகோடி ருத்திரர்கள், இரண்டு கோடி விநாயகர்கள், சத்தியாயுதபாணிகளாய் மயூரவாகனரூடராய் விளங்கும் அநேகர் ஷண்முகர்கள், வீரவாகு முதலானவர்கள், சத்திகளைத்தாங்கி யிருக்கின்ற ஒன்பது கோடி உருத்திர கணிகையர்கள், கோடரிகளைச் சுமந்திருக்கின்ற ஏழுகோடி யோகினிகள், கோடி நந்திகேஸ்வரர்கள், கதாயுதத்தோடு துண்டிமுகணங்கள், கோடிவீரபத்திரர், கோடிபிருங்கிகணங்கள், பாதலவாசிகளாகியமூன்றுகோடி நாகர்கள், இரண்டுகோடிதானவர்கள், இரண்டுகோடி தயித்தியர்கள், எண்பதினாயிரம் கந்தர்வர், அரைகோடியக்ஷர்கள், ராக்ஷசர்கள், பதினாயிரம் வித்தியாதரர்கள், இரண்டுலக்ஷம் அப்சரஸ்திரீகள், அறுபதினாயிரம் கின்னரர்கள், சங்கம் பேரிகை மிருதங்கம் துந்துமி உடுக்கை இவைகளோடு வீணைவாசிக்கின்றகோடிகந்தர்வர்கள், பிரம்மவிஷ்ணுருத்திரர்கள், வசுக்கள், பன்னிரு சூரியர்கள், அஸ்வனி தேவதைகள் ஆகிய இவரெல்லாம் வந்து கூடினர். இவர்களேயன்றி, எண்ணாயிரங்கோக்கள், நானாவிதமான ரத்தினங்களை வீசுகின்ற சப்த சமுத்திரங்கள், பதினையாயிரம்நதிகள், எண்ணாயிரம்மலைகள், கோடிவனஸ்பதிகள், அஷ்டதிக் கஜங்கள், அஷ்டகுலகிரிகள் ஆகிய இவைகளும் வந்து கூடின.

இங்ஙனமான சர்வான்மகோடிகளும் தேவரீருடைய வரவை யெதிர்பார்க்கின்றவர்க ளாய்த் தோத்திரஞ் செய்கின்றனர் என்று ஜயந்தி சொல்லவே, மகாதேவர் திருவுளமகிழ்ந்து யாவருள்ளமுங் களிகூர ரதத்தின்மேல் தேவியுடன் ஆரோகணஞ்செய்து அத்தேவி யோடு இனிய புன்னகையுடன் இன்சொல்வழங்கிக்கொண்டே அமுதக்கடலிற் றோன்றிய மணித்வீபத்தையடைந்தனரென்றருளினர்.

ஒன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

சிவப்பிரியாயநம :

# பத்தாம் அத்தியாயம்.

## மணித்வீப கமனம்.

ஜைகிஷவ்யர் கூறுகின்றார். ஓஸ்கந்தமூர்த்தி! பேரின்பசுகத்தை விளைவிக்கின்ற கைலாயத்தினின்று பரமேஸ்வரன் புறப்பட்டு மணித்வீபத்தை யடைந்தார் என்றருளிய அவ்வளவில் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை. புறப்பட்டுச்சென்றதாகிய அற்புதவைபவத்தையும் ஏனையவற்றையும் விவரமாய்க்கேட்க ஆவலுற்றிருக்கின்றே னென்று பிரார்த்திக்கவும், ஸ்கந்த மூர்த்தி சந்தோஷித்தவராய் முகமலர்ந்து, ஓபிராம்மணசிரேஷ்டரே? பரமேஸ்வரன் ஜயந்தியினுடைய வார்த்தையினால் திருவுளமகிழ்ந்து சுந்தரமாகிய ரதத்தினின்றும் தேவியார் திருக்கரத்தைப்பற்றிக்கொண்டுவர,இரத்னபாதுகை களின்மேல்திருவடிகளை வைத்து, வெளியே வந்து, பருத்தமுசுப்பினை யுடையதாயும், தர்மரூபமான நான்கு பாதங்களையுடையதாயும் இரத்தின பரணங்களா லங்கரிப்பட்டதாயும், கொம்புகளி னுனியில்பிரகாசிக்கின்ற இரத்தினக்குப்பிகளுடையதாயும்,அவைகளுடன் சாமரங்களையுடைத்தானதாயும், விளங்கும் வ்ருஷபத்திலேறியருளினார். அச்சமயத்தில்சோமநந்தி மகாநந்தி ராவணன் பாணன் பிருங்கி துகண்டர் ஹுண்டர் சண்டேசர் ரிடர் வீரபத்திரர் காலாக்னிருத்திரர் முதலிய இவருட்சிலர் நடனஞ்செய்பவராயும் சிலர்பாணம் அம்பறுத்தூணிகத்தி முதலிய ஆயுதங்களைத்தாங்குகின்றவராயுமுன்செல்ல, தேவியாருடைய உருத்திராணிக் கூட்டங்களுள் பலர் அநேகவிதமானசாமரங்களையும் விசிறிகளையு மேந்தினவர்களா யிருபக்கத்தும் வர அதுகண்டு நந்திப்பெருமான்தமதுபொற்பிரம்பசைக்க ருத்திரர்கள் பைரவர்கள் தண்டி முண்டி முதலியவர்களும் யோகினிகள் டா

கினிகள்யக்ஷர்கள் முதலியவர்களும் மத்தளம்காகளம் சங்கம்படகம் மேகம்போல்சப்திக்கும் துந்துபி டிண்டிபம் மட்டுகம்முதலியவாத்தியங்களைச் சாஸ்திரோக்தமாய்க் கோஷிக்க கணேந்திரர்கள் சாமரைகளையசைப்பதோடு திக்குகளெல்லாஞ்செவிடுபடும்படி ஜயகோஷஞ் செய்யதனர். அவர்களுடன் சிலர் அகிற்புகைத் தூபக் கலயங்களையேந்தினவர்களாயும் சிலர் கர்ப்பூர தீபக்கலயங்களையேந்தினவர்களாயும் சிலர் கனிவர்க்கங்களை யேந்தினவர்களாயும் தாம்பூல முதலியவற்றை யேந்தினவர்களாயும் சிலர் பொற்பாத்திரங்களை யேந்தினவர்களாயும் சிலர் ஆபரணப் பெட்டிகளை யேந்தினவர்களாயும் சிலர் கைகூப்பினவர்களாயும் சிவநாமகோஷஞ் செய்கின்றவர்களாயும் செல்வாராயினர்.

அம்பிகையினுடைய கணங்களாகிய சிலர் சர்வாபரணங்களோடு பஸ்மருத்திராக்ஷதாரிணிகளாய் நீராஞ்சன மெடுத்துக்கொண்டு செல்வாராயினர். ஜயந்தியானவள் அழகிய க்ஷத்திரத்தை பிடித்தனள். இவர்களையன்றி ருத்திராணி, தேவியின் ரத்னபாதுகையை யேந்தியும், தேவஸ்திரீகளிலும் அப்சரஸ்திரீகளிலுஞ் சிலர் மைப்பெட்டி கந்தம் மாலை முதலியவைகளை யேந்தியும், சிலர் பாணம்சூலமுதலியவைகளையேந்தியும், சிலர் ஆபரணவகைகளாலும் வஸ்திரவகைகளாலும் திவ்யாலங்காரமுடையவர்களாய்த் தண்டை சிலங்கைமுதலிய காலணிகள் கலீர்கலீ ரென்றுசப்திக்க தேவியைச் சூழ்ந்து அவரது மங்களங்களைப் பாடியுஞ் செல்வாராயினர். இவர்களையன்றி பிரமதீசகணேசர்களும் யக்ஷேசர்களும் சிவசாரூப்பியம் பெற்ற வுருத்திரர்களும் சர்ப்பம்போற் சீறுகின்ற கோபமுள்ளவர்களும் சிவனுடையகடைக்கண்ணினது அசைவின்மாத்திரத்தில் உலகின்க ணிடப்பட்ட பலிகளைக் கிரகின்றவர்களான கணவீரர்களும் பெரிய கோடரி கட்க முதலிய வாயுதங்களைத் தாங்கினவர் களும் பலங்களிற்சிறந்தவர்களும் உற்சாகத்தையே மேற்கொண்டவர்களும் நானாவிதமானநிறமுள்ளவர்களும் யானை மயில் கிளி புறு பேரண்டம் யாளி சர்ப்பம் பூனை கோழி கோட்டான் குள்ளநரி தவளை காக்கை மேஷம் மகிஷம்மூஷிகம் ஆகிய இவைகளைப்போலு முகமுடையவர்களும் மாம்சமும் தசையுமில்லாதவர்களும் மென்மையான சரீரமுள்ளவர்களும் பருத்தசரீரமுள்ளவர்களும் பெருத்தவயிறுள்ளவர்களும் சிவந்த நிறமும் கற்பூரம்போன்ற வெளுத்தநிறமும் பசுமையான நிறமுமுடையவர்களும் இவ்வகையினர்களையன்றி பயங்கரமானவர்களும் அங்கங்களேற்றக்குறைவாக வுள்ளவர்களும் கோரதந்தங்

களால் விகாரமான பார்வையுடையவர்களும் நாக்கினால் உதட்டை நக்குகின்றவர்களும் நீண்டநாக்குள்ளவர்களுமான அநேக கோடி கணங்கள் முன்னே செல்வாராயினர். இவ்வண்ணங் கைலாயகிரியினின்றும் அணியணியாய்ச்செல்லமின்னல்போன்ற ஸ்திரீகள் சிலர் புஷ்பங்களையும் பொறிகளையும் முத்துக்களையும் சிலர்பரிமளமிகுந்தசந்தனநீரையும் பன்னீரையும் உமாமஹேஸ்வரர்மீது வருஷித்தனர். உருத்திராணிகள் அக்கைலாயத்திலுள்ள ஆலயங்கடோறுமுள்ள திருமாளிகைப்பத்திகளிலிருந்து மேகவருஷங்களைப்போல்புஷ்பங்களைப் பொழிந்தனர். இவ்வகையான பலவுபசாரங்களோடும் இறைவனார் இரத்னகிரீடமுதலிய ஆபரணவகைகளானும் முத்தாரமுதலிய மாலைவகைகளானும் அலங்கரிக்கப்பட்டவராய், மான்மழு வரதாபயங்களோடுங்கூடியதிருக்கரங்களை யுடையவராய், சுராசுரர்கள் நமஸ்கரிக்குந்தோறுங்கிரீடங்களிலிருக்கிறரத்னங்களாற்சிவப்பேறியசெங்கமலபாதமுடையவராய், இவ்வளவினதென்று அளவிடப்படாத அழகானும் அலங்காரத்தாலும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற மரகதவல்லியாகிய பார்வதிதேவியோடு மெழுந்தருளி மேருவைநோக்கி வரும்போது தேவியார் மகாதேவரைப்பார்த்து சற்று நின்றருளவேண்டுமென்று சொல்ல அங்குநின்றருளினர். அப்போது நந்திதேவரும் ஐயையும் தேவி தேவர்களை நோக்கினர். இங்கிருபக்கத்தும்நான்கு வேதம் அங்கம் உபநிடதம் கிரி நதி சுரர்கள் பிரஜாபதியர் மனுக்கள் முதலிய சகல தேவர்களும் நிற்கின்றனர். இவர்களைச் சற்று நோக்கியருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவர் வேண்டுகோளின்படியே மிகவும் கருணையுடையவராய் யாவரையும் பார்த்தனர். இவ்வாறு அம்மையப்பரிருவரும் திருக்கண்வைத்தபோது வேதங்களு மேனையரும் தோத்திரஞ் செய்தனர்.

பத்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

சிக்ரகாரிணேநம:

# பதினோராம் அத்தியாயம்.

## அமராபயதானம்.

சூதர்கூறுகின்றார்:-இறைவனும் இறைவியும் திருக்கண்சாத்தத் தேவர்களெல்லாம் நமஸ்காரஞ் செய்து கைகூப்பி நின்றுஹர ஹர!

புரஹரா! எங்களுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தருளும். தேவக்கூட்டமாகிய எங்களுக்குக்கருணைசெய்தருளும். சரணம் சரணம். பவஹரா! பவ விதிஹரா!யமஹரா!சம்போ! கோரமாகிய கடலிலுண்டான துக்கத்தைப் போக்கி யருளும். அதிகசொரூபத்தினால் கர்விஷ்டனாயமனுடைய மதத்தை யடக்குகின்றவரே! என்று பலவாறாகத்தோத்திரஞ்செய்து பலமுறையுந்தண்டாகாரமாய்ப் பணிந்து பணிந்தெழுந்து மீண்டும் பூமியில் தண்டாகாரமாய் வீழ்ந்துகிடக்கின்ற பரிபவத்தைக் கண்டு கருணைமேலிட்டவராய் ஓ தேவர்களே! எழுந்திருங்கள் எழுந்திருங்கள் என்று வலக்கரத்தைநீட்டி பயப்படாதீர்களென்று அபய முத்திரைகாட்டி நீங்கள் செய்த தோத்திரத்தினால் சந்தோஷமடைந்தேம். அன்றியும் ஓ விஷ்ணு முதலான தேவர்களே! என்னையே யர்ச்சித்துப் பயபக்தியோடு தோத்திரஞ்செய்து வந்தவிசேடத்தால் உங்களுக்குண்டாகிய பயத்தை ஒருக்ஷணத்தில் நாசஞ்செய்து விடுகிறேம். உங்களுக்கெந்தவிடத்திலும் எந்தக்காலத்திலும் எந்தவுயிர்களினாலுந் துன்பம் வந்தணுகமாட்டா. உங்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கின்றேம். உங்களுடைய பதங்களைநோக்கிச் சென்மின்கள். சங்கரனாகிய யாம் உங்களிடத்தில் தயையுடையவனா யிருப்பதால் நீங்களெப்பொழுதும் பயமின்றிச் சந்துஷ்டர்களா யிருக்கலாம். ஓ பிரம்ஹாவே! நீ உலகனைத்தும் சிருஷ்டிசெய்யக்கடவாய். ஓ விஷ்ணுவே! நீ தேவர்களுக்குப் பயமுண்டாக்குபவர்களை என்னாற் கொடுக்கப்பட்ட கூர்மையாகிய சக்கராயுதத்தால் யுத்தமுகத்திற் கொன்று தேவர்களைக்காப்பாற்றுவாயாக. ஓருத்திரனே! நீபிரளயகாலத்தில் சூலாயுதத்தால் உலகங்களை யெல்லாம் நாசஞ் செய்து வருவாயாக. ஓ இந்திரனே! நீ எப்போதுஞ் சந்தோஷித்தனாய்ச் சுவர்க்கத்தில் வாசஞ் செய்து கொண்டு தேவர்கள் மருத்துக்கள் அஸ்வனி தேவதைகள் முதலியயாவர்க்கும் எனதாக்ஞையால் சுகத்தைச்செய்து வருவாயாக. அக்னியே! நீபிதுர்க்கருமங்களிலும்தேவயாகங்களிலும் செய்வதாகிய அவ்ய கவ்யங்களை அவரவர்களுக்குக் கொடுத்து வருவாயாக. சூரியனே! நீ உன்னுடைய கிரணங்களைப் பரப்பி உதயாஸ்தமன காலங்களை நடத்தி நான்குவருணத்தவருக்கும் காலத்தைக் காட்டுவதில் சோம்பலற்றிருப்பாயாக. சந்திரனே! நீ இரவில் உன்னுடைய காந்திகளால் யாவருடைய கண்களையும் தலைவிகளைப்பிரியாததலைவர்களையும் சந்தோஷப்படுத்தி ஓஷதிகளில் ரசத்தை விருத்திசெய்து சாக்கிரதையா யிருப்பாயாக. ஓ வருணனே! நீ உனது பாசத்தினால் பாவிகளையெல்லாம்

பந்தப்படுத்தி அவர்களோடு ராக்ஷசர்களையுங்கூட்டி சமுத்திரசலத்துக்குள் வாசஞ் செய்து கொண்டிருப்பாயாக. யமனே! நீ பஸ்ம ருத்திராக்ஷந்தரிக்காதவர்களையும் இலிங்கார்ச்சனை செய்யாதவர்களையும் ஸ்ரீ ருத்திரபஞ்சாக்ஷரங்களை ஜபிக்காதவர்களையும் அசிபத்திர (கத்திபோன்ற இலையையுடைய) விருக்ஷங்கள் நிறைந்துள்ள வனத்திலும் கும்பிபாகத்திலும் மஹா ரௌரவாதி நரகங்களிலுந்தள்ளி துக்கத்தை யநுபவிக்கச்செய்தும் அக்னிசுவாலை வீசுகின்றபூமியிற்புரட்டிப்பயமுறுத்தியும் அஞ்ஞானத்தினால் விஷ்ணுமுதலான தேவர்களுக்குச் சமானமாக வென்னைப் பூஜிக்கின்றவர்களையும் ஊர்த்துவபுண்டரங்களைத் தரிக்கின்றவர்களையும் தப்த சக்கிரத்தால் அடையாளமுள்ளவர்களையும் நாய்களாற் கடிக்கவிட்டுத் துன்பமுறுத்தி நன்றாய்க் காய்ந்திருக்கும்மெழுகிற் றள்ளிப்புரட்டி யெடுத்து அவர்களுடைய முகத்தில் மலத்தை அடைத்து நீ சந்தோஷித்துக் கூத்தாடியும் சைவரல்லாதவர்களிடத்தும் இதரமான பாபிஷ்டர்களிடத்தும் சிறிதுந் தயையை நினையாதவனாயுமிருந்து உன்னரசியலைச்செலுத்தி வருவாயாக. இப்போது சொல்லிவந்த அசைவர்களுக்கே நரகங்களை யேற்படுத்தி அவைகளில் அவர்களை வீழ்த்திக்கொடூரமான வேதனையை யநுபவிக்கச்செய்யவே உன்னைச் சிருட்டித்தேன். ஓ காலனே! பஸ்மருத்திராக்ஷங்களைச் சைவஅடையாளங்களாகத்தரித்திருக்கின்றவர்களையும் நித்யந்திரிபுண்டரதாரணமுடையவர்களையும் உருத்திராக்ஷங்களைக் கங்கணமாக வுடையவர்களையும் உருத்திர சூக்தத்தைச் செபிக்க ஆவலுள்ளவர்களையும் நாடோறும் திரிசந்திகளிலும் சிவலிங்கத்தை யர்ச்சிக்கின்றவர்களையும் சோமவாரங்களிலும் பிரதோஷகாலங்களிலும் பில்வபத்திரங்களா லர்ச்சிக்கின்றவர்களையும் எப்போது மென்னிடம் அபிப்பிராயமுள்ளவர்களையும் சிவக்ஷேத்திரத்திலேயே வசிக்கின்றவர்களையும் அன்னிய க்ஷேத்திரங்களில் பராமுகர்களாயுள்ளவர்களையும் எனது புண்டரமன்றி இதர தேவர்களுடைய புண்டரங்களைத் தரிக்காதவர்களாயு மிருக்கின்ற சைவர்களைக் கண்ணினாலும் பாராதிருப்பாயாக. அவிமுக்தம் உருத்திரகோடி மஹாலயம் புண்டரீகம் பிரபாசம் புஷ்கரம் பிரயாகை விருத்தாசலம் அருணாசலம் ஓங்காரம் பிருகுதுங்கம் கண்டகீதிரியம்பகம் புண்ணியகரமாகிய சோமேசம் ஸ்ரீசைலம் குருக்ஷேத்திரம் பிண்டாரகம் குரண்டகம் நர்மதை கோகர்னம் நைமிசாரணியம் அமரகண்டகம் நைமிசம் பதரிகாச்ரமம் குப்ஜசைலம் தக்ஷிணகைலாயம் காஞ்சி மத்யார்ச்சுனம் கும்பகோணம் மாயூரம்

ஸ்வேதாரண்யம் திருதிஸ்தலம் ஜப்பியேசம் ஜம்புகேசம் த்ரிணாவர்த்தம் (திருவலஞ்சுழி) வேதேஸ்வரம் ஸ்ரீகண்டம்சைகியபர்வதம் மதுரை கந்தமாதனம் தக்ஷிணசமுத்திரகோடியிலுள்ள வேதாரணியம் ஏனைய காவிரியின் கரையிலுள்ள க்ஷேத்திரம் கமலாலயமுதலிய சிவக்ஷேத்திரங்களில் எவர்கள் ஆவலுள்ளவர்களா யிருக்கின்றார்களோ அவர்கள்பாபஞ் செய்கின்றவர்களாயிருந்தபோதிலும் அவர்களை நீ விட்டுவிடவேண்டியது. நீசரானாலும் சூத்திரரானாலும் சங்கரசாதியரானாலும் பிராமணரானாலுஞ் சைவர்களாயிருப்பரானால் அவர்களுன்னால் பூஜிக்கத்தக்கவர். சைவநெறிகளைக்கைவிட்டு கோஹத்தி நன்றிமறத்தல் விஷங்கொடுத்தல் கோள்சொல்லல் நம்பினவரைக்கெடுத்தல் பரதாரகமனஞ் செய்தலாதிகுற்றங்களைச்செய்பவரும் பிராமணநிந்தைசெய்தலாதி பஞ்சபாதக உபபாதகமுதலியகுற்றங்களைச் செய்பவரும் உன்னால் நாடோறும் விடாமல் தண்டித்துவரத்தக்கவராவர். ஓ குபேரனே! செல்வச்செருக்காலென்னாணையை மறந்து மனம்போல் நடப்பதொழிந்து எனதாக்ஞைப்படி நடப்பாயாக. ஓ ஈசானனே! நீருத்திரகணங்களோடும் பூமியிலும் சுவர்க்கத்திலும் சஞ்சரிக்கிற வசுருத்திரகணங்களோடும் எப்போதுஞ் சத்துருக்களை நாசஞ்செய்து கொண்டிருப்பாயாக. நீ எனது பாதபக்தியினால் எனதனுக்கிரகத்தை யடைந்தவனாயிருப்பதனால் எவர்கள் சைவத்திலாவலுள்ளவர்களாய் உனது கைலாயஸ்தானத்தில் வசிக்கின்றார்களோ அவர்களெல்லாம் கல்பாந்தத்தில் உன்னுடன் புனர்ச்சன்மம் நீங்கி எனது ஸ்தானத்தை யடையப்பெறுவர். ஓ நிருதியே! நீ நிருதகணங்களோடு நித்தியம் சஞ்சரித்திருப்பாயாக. ஓ வாயுவே! நீயு மெவ்விடத்துஞ் சஞ்சரிக்கிறவனாயிருப்பாயாக. ஓ கிருகங்களே! நீங்கள் சகல நக்ஷத்திரங்களோடும் துருவனையாதாரமாகக் கொண்டிருக்க என்னாற் செய்யப்பட்டவராதலால் என்னாக்ஞையின்படி உங்களது சாரங்களால் அவரவர்களுடைய சுபாசுபங்களை விளக்கிக்கொண்டிருப்பீர்களாக. வஸிஷ்டர் கௌதமர் அத்திரி சமதக்னி காசிபர் விஸ்வாமித்திரர் பரத்துவாஜ ரென்னும் பெயருள்ள சப்தருஷிகளே! நீவிர் என்னாக்ஞையினால் மேருபர்வத சிகரத்திலிருந்து தேவலோகத்தி லுலாவிவரத்தக்கவர்களா யுலகத்தார்க்கு நன்மை தீமையை யுண்டாக்குவீர்களாக. ஓவசுக்களே! நீங்கள் எல்லாக்கற்பங்களிலும் என்னாக்ஞையினால் லோக சிருட்டியைச்செய்து கொண்டிருப்பீர்களாக. ஓ ஆதிசேடனே! உன்னுடைய படங்களால் பூமியினுடைய பாரத்தைத் தாங்கிக்கொண்டு

வசித்திருப்பாயாக. ஓ திக்கஜங்களே! நதிகளே! மலைகளே! சமுத்திரங்களே! ஸ்ரேஷ்டமான தடாகங்களே! கந்தர்வர்களே! கின்னரர்களே! யக்ஷர்களே! சித்தசாரணர்களே! உங்கட்கெல்லாம் விதித்தஸ்தானங்களில் எமதாணையைக் கடவாமல் தகுந்தபடி யிருங்களென்று ஆக்ஞையும் அநுக்கிரகமுஞ்செய்து சென்றனர். பின்னர் யாவரும் மஹாதேவப்பிரபுவைப் பணிந்து போற்றி மனங்களித்தவர்களாய்த் தங்கள் தங்களிடம்போய்ச் சேர்ந்தனர். உலகிலுள்ளவர்களெல்லாம் பரலோகத்திலாவலுள்ளவராயும் தேவர்களெல்லாம் உலகத்துக்கு நன்மைசெய்பவராயு மிருந்தனர்.

பதினோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸாம்வதாயநம:

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

உ

### மணித்வீபவர்ணனம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். தேவர்கள் சென்றபிறகு சிவபெருமான் இடபாரூடராய்த்தேவியினாலும்தேவிதோழிகளாலும்பூதகணங்களாலுஞ் சூழப்பட்டவராய்ச் செல்லும் அந்தந்தஸ்தானங்களிலிருக்கிற பைரவி யோகினி டாகினி சாகினி முதலானகணங்களுக்கும் அநுக்ஞைசெய்து கொண்டுபோம்போது பேரலையோடுகூடிய அமுதக்கடலினடுவில் முன்னேதோன்றிய பேரொளிமயமான மணித்வீபத்தைப்பார்த்து அதனைத்தேவிக்குக்காட்டி ஆனந்தமடைந்தவராய்அக்கடலில் இடபத்தை நடத்த அமுதம்போலும்வெண்ணிறம்படைத்தஅவ்விடபத்துக்கு இறைவனதருளால் அக்கடல் முழங்காலளவாயிற்று. அதுபோலவே நந்திமுதலான கணஸ்ரேஷ்டர்களுக்கும் எனக்கும் கணபதியாருக்கும் எனதம்மையாருடைய தோழிகளுக்குமாயின. பின்னர்த்தேவியும் தேவனும் யான் முதலிய சகலரும் அந்தத்வீபத்தைப்பார்த்து ஆச்சரியமடைந்தோம். அப்போது மகாதேவர் தேவியைப்பார்த்து ஓ மங்களே! இக்கடன் மத்தியில் அநேகம் சிறுகுன்றுகள் போல் உயரமான கற்களும் இரத்னமயமான மணற்குன்றுகளும் ஆயிரம் பாலசூரிய ருதித்தாற்போற் பிரகாசமாயும் கோடிசந்திர ருதித்தாற்போற் குளிர்ச்சியாயும் நன்றாய் மலர்ந்தசெந்தாமரை மலர்போன்றுமிருக்கின்ற பத்மராகத்தாற்பிரகாசிக்கின்றமணித்வீப

மானது காணப்படுகின்றது. இந்த த்வீபகாந்தியினால் சகல லோகமும் செந்நிறமுடையனவாய்க் காணப்படுகின்றன. இந்த த்வீபத்தின் பிரகாசத்தின் கோடியி லொருபங்கேனும் சூரியன் சந்திரன் அக்னி நக்ஷத்திரங்கள் முதலியவைகள் பிரகாசமுடையனவாய்க் காணப்படவில்லை. ஓ தேவி! சிலவிடத்தில் பவளம்போலும் சிலவிடத்தில்மரகதம்போலும் சிலவிடத்தில் ஆயிரமின்னல் பிரகாசிக்கின்றது போலும் சிலவிடத்தில் மத்யான்ன சூர்யன் கிரணம்போலும் சிலவிடத்தில் சந்தியாகாலதிற்றோன்றுஞ் செந்நிறப்போலும் சிலவிடத்தில் இந்திரநீலமணிபோலும் சிலவிடத்தில் நீர்கொண்ட மேகம்போலும் சிலவிடத்தில் சிந்தூர மாணிக்கம்போலும் சிலவிடங்களில் செவ்வரத்தை மாதுளம் புஷ்பம்போலும் சிலவிடங்களில் உருக்கப்பட்ட பொற்காந்தியைப்போலும் சிலவிடங்களில் கோடிமின்னலுதித்தாற்போலும் சிலவிடங்களில் அக்னி ஜ்வலிப்பதுபோலும் சிலவிடங்களில் புஷ்பராகக்காந்தியைபோலும் இவ்வாறுநவரத்னங்களைப்போலும் மயிற்கண்டம்போலும் புறாவின்கழுத்தைப்போலும் ஒவ்வோரிடத்தில்ஒவ்வொருவிதமாய்ப் பிரகாசிப்பதைப்பார்ப்பாயாக. இவ்வாறுபார்த்தற்கு அதிவிசித்திரமான இந்த த்வீபத்தைக்கிரீடார்த்தமாக முன்சிருட்டித்தேன். ஓ தேவி! இக்கடலில் சலசலவென்று காற்றுகுளிர்ந்து சுகமாய்வீசுவதையும் அலையானது காணப்படுகின்ற சிங்காதனத்தின் மேல் மோதிமோதியடிப்பதையும்பார்த்து மகிழ்வாயாக. இவ்விடத்தில் தேவகாந்தர்வபைசாசாதிகளும் ஏனையவரும் வரமாட்டார்கள். இவ்விடத்தில் நானாவிதமானரத்னங்களால் பிரகாசிக்கின்ற ரத்னமலைகளையும் பாரிஜாதம் பில்வம் சந்தனம் மா நெல்லிமுதலிய விருக்ஷசாதிகளெவ்வளவுண்டோ அவ்வளவையும் பார்ப்பாயாக. மயில் குயில் முதலிய பக்ஷிசாதிகளெல்லா மொலிக்கின்ற சத்தத்தைக் கேட்பாயாக. இரத்னப்பிரகாசத்தால் விளங்குகின்ற குகைகளையும் நிர்மலமானஜலமுள்ள தடாகங்களையும் அதன் மத்தியில் தாமரை நெய்தல் முதலிய மலர்கள் மலர்ந்தழகு செய்வதையும் வீசுகின்றமந்தமாருதமானது அந்த மலர்களின் வாசனையைக்கிரகித்துக்கொண்டு ஜலத்தின் குளிர்ச்சியையும்பெற்று வீசுகின்ற காற்றையும் அடர்ந்திருக்கின்ற சோலைகளையும் பார்ப்பாயாக. இதுபோலும்பிரமலோக முதலியவிடங்களிலுமிருக்கமாட்டா. இன்னமுமிவ்விடத்தில் ஆகாயத்தையளாவியிருக்கின்ற கோபுரமண்டபபிராகாரங்களையும் மெத்தைமேலேறுகிறபடிகளுக்குப்புஷ்பப்பந்தலிட்டிருக்கிறசிருங்காரங்களையும்பார்ப்பாயாக. இந்தத்வீபத்திலுள்ள மணித்வீபேஶ்வரர் சந்நிதியிலிருக்

கும் ரத்னஸ்தம்பங்களையும் பார்ப்பாயாக. அதுவுமன்றி திராக்ஷ ஏலம் மல்லிகை முதலான கொடிகளையும் ரத்னமயமானபுஷ்பவகை களையும் இதன்சிகரத்திலிருக்கின்ற ரத்னலிங்கங்களையும்நவரத்னங்க ளாற்செய்யப்பட்ட கோபுரங்களையும் ஆயிரக்கால்மண்டப முதலி வைகளையும் அவைகளிலெழுந்தருளி யிருக்கின்ற சிவலீலாபிம்பங்க ளையும் பார்ப்பாயாக. ஆலயங்களின் கர்ப்பக்கிரகங்களிலுள்ளனவா யும் சர்ப்பாபரணங்களையுடையனவாயும் வில்வங்களாலர்ச்சிக்கப்பட் டனவாயும் கற்பூர முதலியவை சேர்ந்த சந்தனத்தாற்பூசப்பட்டபீட ங்களுடையனவாயு முள்ள சிவலிங்கங்களைப்பார்ப்பாயாக. இந்தத் வீபம் லிங்கமூர்த்திகளால் பரிசுத்தமாயும் உத்தமமாயு மிருக்கிறபடி யால் ஓ பார்வதியே! நாம் போய் அவ்விலிங்கங்களைப்பார்த்துப்பூசி ப்போம் வாவென்றுகூறி சிவந்த ரத்னம்போலும் மலர்ந்த செந்தா மரைபோலுமுள்ளபார்வதியாரது திருக்கரத்தைப்பிடித்துக்கொண் டுசென்று இரத்தினகிரியைக்காட்டிச் சந்தோஷ பூரிதராய் ஆலயத் துள்ளேசென்று சிவலிங்கப்பெருமானைப்பரிசித்துஆனந்தித்து நிர்ம லமானகும்பத்திலுள்ள சுத்தோதகத்தாலும் பால் தயிர் தேன் பலர சம் கந்தரசமுதலிய சகலதிரவியங்களாலும் அபிடேகஞ்செய்து வஸ் திரந் தரித்து வாசனைகலந்த சந்தனத்தைக் காப்பிட்டு பில்வத்த ளிர் சண்பகம் மந்தாரை கரவீரம் மல்லிகை தாமரை முதலியவைக ளாலலங்கரித்து அர்ச்சித்து தூபதீபங்காட்டி அபூபம்சித்திரான்னம் முதலியவைகளை நிவேதித்து ஏலக்காய்கலந்த தாம்பூலஞ்சமர்ப்பித்து தேவியாரதுதோழிகளால் நிர்த்தகீதவாத்ய விநோதங்களை நடத்தி பிரகாசிக்கின்ற லிங்கமூர்த்தியைக்கண்ணாரக்கண்டு இரத்ன சிம்மாச னத்தில்வீற்றிருந்தனர். அப்போது என்னம்மை அங்கு நிர்த்தகீத வாத்தியங்களிற் சந்தோஷித்தகணங்களையும் என்னையும் விநாயகரை யும் அழைத்து அவரவருக்குத் தகுந்தபடி போஜனஞ்செய்வித்தார். அதனால் நாங்களெல்லோருஞ் சந்தோஷமடைந்தனம். விநாயகரும் நானும் பரமேஸ்வரனுடைய பாதத்தைத் தியானஞ்செய்வதிலாவ லுள்ளவர்களானோம். சகலபோகத்துக்கும் பிரபுவான மகாதேவர் தேவியோடு மேருபர்வதம் போன்ற ஒருப்பரிகையில் ம்ருதுவான மெத்தை முதலானவை கூடின கட்டிலில் சயனித்து கணேந்திரர்க ளைச்சுற்றிக்காவல்வைத்தருளினர்.

பன்னிரண்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

பலாயநம:

# பதின்மூன்றாம் அத்தியாயம்.

## மணித்வீபப்பிரவேஸம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். ஜைகிஷவ்ய முனிவரே! கட்டிலின் மீதெழுந்தருளியிருந்த மஹேஸ்வரர் தேவியைப்பார்த்து ஓ மஹேஸ்வரியே? இக்கட்டிலில் பரப்பியிருக்கின்றமலர்ந்த புஷ்பங்கள் பலசூரியரைப்போல் பிரகாசிப்பதையும் இவ்வுப்பரிகையின்சுற்றிலுமுள்ள விருக்ஷங்களின் கீழிடங்களில் ரத்ன மேடைகளிருப்பதையும் அம்மேடைகளைச் சுற்றிலும் ரத்னமயமாயிருக்கின்ற கால்வாய்களையும் அதிலோடுகின்ற அமுத வெள்ளத்தையும் எங்கும் வஸ்திரங்கள் விரித்திருப்பதுபோல் பரிமளமுள்ள புஷ்பங்கள் பரந்திருப்பதையும் பார்ப்பாயாக. ஓதேவியே! இனிக்கீழிடங்களிலுள்ள அதிசயங்களையும்பார்ப்போமென்று அம்மையார் திருக்கரத்தைப்பற்றிக்கொண்டு ரத்ன பாதுகையில் பாதங்களைச் சேர்த்து உப்பரிகையி லிருந்து கீழேவந்து அழகுள்ள கற்பக நீழலிற்றங்கி ஓதேவி! உனக்குமிகவுஞ் சந்தோஷத்தையுண்டாக்கத்தக்க இவ்விடத்திலுன்னைப்பார்க்க எனக்குஞ்சந்தோஷம் விளைகின்றது. இரத்னப் பொடிகள் மணலைப்போலிருப்பதையும் செங்கழுநீர் முதலியமலர் வாசத்தோடு காற்று வீசுவதையும் பவளத்தாற்செய்த பதுமையோடுகூடிய ரத்னமண்டபங்களையும் ரத்னதீபத்தோடு பிரகாசிக்கின்ற தடாகங்களையும் அதில்வைரத்தினாற்செய்த மண்டபங்களையும் பார்ப்பாயாக. இங்கு உன்னோடுகூடிச் சந்தோஷிக்க விரும்புகின்றேனென்று சொல்லியருளி அங்கிருக்கும் ஓர்ரத்னமண்டபத்திலெழுந்தருளித் தம்முடையதிருக்கரத்தால் வாசனைப் பூச்சுகளையும் நல்லமலர்மாலைகளையும்பூசி யணிந்து தாம் திவ்யாலங்காரஞ் செய்துகொண்டு மகிழ்ந்து அங்குள்ள கனிவர்க்கங்களை இருவருமாகப்புசித்து அமுதத்தினுமினியகனிகளையருந்தித் திருப்தியடைந்து தேவவிமானத்திலொருதினமிருந்தனர். அப்போதுதேவி ஒன்று சொல்லுகின்றாள். ஓத்ரிணேத்திரரே! இவ்விடமிருக்கும் அதிசயம் போலும் சுகம்போலும் கைலாயத்திலும் மற்ற விடத்திலுங் கண்டதில்லை. இவ்விடத்தி லெனக்கு உண்டான திருப்தி எவ்விடத்திலுமுண்டானதில்லை. இந்தமணித்வீபத்தில் ரத்ன பிராகார மண்டபகோபுரங்களோடு கூடியதிவ்யாலயத்தில்விளங்கும்

சிவலிங்கத்தையும் எனக்காகத் தேவரீர் சிருஷ்டித்திருக்கிற கிரீடாக்கிருகத்தையும் பார்க்குந் தோறும் தேவரீரைப்பார்க்கும் போது எவ்வளவு சந்தோஷமுண்டாகிறதோ அவ்வளவு சந்தோஷமுண்டாகிறதென்று வியந்துகூறியருளினர். ஈஸ்வரன் ஓதேவி! இக்கடம்ப விருக்ஷங்களையும் அமுதசமுத்திரசம்பந்தமான காற்றையும் எவ்வளவு சந்தோஷகரமாயிருக்கின்றனபார் என்றுகாட்டியருளினர்.

பதின்மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.

உ

பலோத்தாயநம:

## பதினான்காம் அத்தியாயம்.

### ஸ்ரீசக்ரர்லய தரிசனம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். ஓஜைகிஷவ்யரே! பிறகு அவ்விடத்திலுள்ள கடம்பவனத்தில்சற்றுநேரம்சிவபெருமான் உல்லாசமாயிருந்து பிறகு அங்குள்ள ஓர் கடம்ப மரத்தின் சாகையில் கட்டித் தொங்கும் சங்கிலி யோடு கூடிய ஓர்மஞ்சத்தில் தேவியும் இறைவனுமாகிய இருவரும் வீற்றிருந்தனர். தேவி கேசச்சுருக்குக்கலைந்துமைமலைபோல் விளங்கும்படி சந்தனம் பூசிச்சொலிக்கும் அழகியதேகத்தினால் சங்கரரை இறுகக்கட்டி ஆலிங்கனஞ் செய்து, நீலோற் பலம்போல் விளங்கும் அழகிய கண்களிற்றீட்டியமையினால் சொலிக்கும் கன்னம் அழகாய் விளங்கும்படி கோவைக்கனியின்சிறப்பைப்பழிக்கும் அதரத்தையுமருந்தி, மீண்டும் தனதடத்தில் பூசியகுங்குமச்சந்தனம் சங்கரரதுமார்பில் நன்றாய்ப்பதியும்படி ஆலிங்கனஞ்செய்து அதனால்பரமானந்த முடையவளாய்த் தேவதேவசனாகிய சங்கரரைப்பார்த்து ஓர்வார்த்தைக்கூறுவாளாயினள். ஓதேவதேவா! மஹாதேவா! சரணாகதவத்ஸலா! மஹேஸ்வரா! கருணாசமுத்திரா! சங்கரா! சந்திரவதனா! சந்திரசேகரா! த்வீபத்தின்மத்தியத்தில் சிந்தாமணியால் நிர்மிக்கப்பட்டுமஹாரத்ன வரிசைகளால் விளங்கும் மாளிகையுடன்கூடிய திவ்யமந்திரத்தைப் பார்க்கவேண்டுமென்று மிக்க ஆசையாயிருக்கிறது. ஆகையால் தேவரீர் அதனையான்பார்க்கச்செய்ய வேண்டுமென்றிங்ஙனம்தேவி பிரார்த்தித்ததும் அதனைக்கேட்டுமஹேஸ்வரர் அவ்வாறே தேவிபிரார்த்தித்தபடி தனது ஹ்ருதய ரூபமாயிருக்கின்ற திவ்யமந்திரத்தைக் காண்பித்தனர். அனந்த

கோடி ரத்னங்களின் ஒளிகளால் ஜோதிமயமாய்ச்சொலிக்கும் அதனைத் தேவிகண்டு இது ஆச்சரியம் இது ஆச்சரியமென்று பிரமித்திருந்தனள். விஸ்வான்மாவாயும் விஸ்வபாவனராயும் தேவதேவனுமாய் விளங்கும் இறைவனது செய்கையையாரறிவார்! அவரது ஒரு சிறுலீலையே சகல சராசர கோடிகளுக்கும்ாதலால்மனோவாக்குக்குகிட்டியதல்ல. மிக்க ஆச்சரிய கரமாய் அப்போது நிகழ்ந்ததைக் கூறுகின்றேன். அக்கடம்பவனமத்தியில் ஓர் சிம்ஹாசனம் போன்றதும் திவ்ய சிந்தாமணியால் செய்யப்பட்டதும் ஸ்ரீசக்ர ஸ்வரூபமாயும் உள்ள மாளிகையைத் தேவிக்குக் காண்பித்தனர். அம்மந்திரமாகிய ஆலயமானது ஸ்ரீசக்கிராகார மாயுள்ளது. அதன் சிறப்பையாரும் கூறத்திறமல்லர். சிந்தாமணி ராசிகளின் சோதியால் ஆகாயமுழுவதும் சோதிமயமாய்ச் சொலிக்கச் செய்வதுமாய் விளங்குவதும் இந்திரநீலமணிமயமாகிய தோரணமாலைகளால் ஜ்வலிக்கும் கொடுங்கைகளையுடையதும் அதன்மீது ஆகாயமளாவி விளங்கும்மேல்மாளிகைகளினுச்சியில் விளங்கும் உன்னதமாகிய மணிகலசவரிசைகளால் அற்புதமாகியதும் அஷ்டமகாசித்திகளுக்கு மிருப்பிடமாயுள்ளதும் இரத்னகல்பவிருக்ஷங்களும் நீபவிருக்ஷங்களுமடர்ந்த திவ்யோத்யானவனத்தைப் பக்கத்திலுடையதும் அவ்வனத்திலுள்ள மரமொவ்வொன்றிற்குங் கட்டப்பட்ட பாத்திக்கரைகளினும் பிராஸாதங்களினும் வீதிகளினும் பிராகாரங்களினும் ஆலய அங்கணங்களினும் கோபுரங்களினும் பலகணி ஜன்னல் களினும் கதவுகளினுமுள்ள மாணிக்கங்களினொளிகளால் ஓர் அபூர்வ சோதி மண்டலமாய் விளங்குவதுமாகிய இம்மந்திரத்தைப் பார்த்திடுக. ஓ தேவி! அநேககோடி பிரமாண்டங்களிலுள்ள ஆகாயத்திலாவது பூமியிலாவது விஷ்ணுலோகத்திலாவது பிரமலோகத்திலாவது ருத்திரலோகத்திலாவது நாகலோகத்திலாவது தைத்யலோகத்திலாவது கைலாயத்திலாவது இப்படிப்பட்ட ஓர் மந்திரம் கண்டிருக்கின்றனையோ? ஓ புவனேஸ்வரி! முடிவுகாணப்படாத உன்னதத்தன்மை பெற்ற மஹாமாளிகையில் மணிமயமாய் விளங்கும் பீடமுடையதும் அற்புதமாகிய விருக்ஷஜாதிகளில்ஆச்சரியமாகிய பரிமளமுடைய மலர்களால்ஆபரணம் செய்யப்பெற்றதும்காற்றினால் அங்குமிங்கும் சலிக்கப்பெற்ற நீபமலர்ப்பரிமளமுடையதும் தூபமயமாகிய அமிர்தசாரங்களாலும் தீபமயமாகிய ரத்னமணிகளாலும் ஜ்வலிப்பதுமாகிய இவ்வாலய மாளிகையைப்பார்.இது ஓதேவி!எனது முழுச்சக்திமகிமையால் உன்பொருட்டுச்சிருட்டிக்கப்பட்டிருக்கிறது. திவ்யரத்னமயமாகிய கண்ணாடி

களால் திக்பிரமத்தையுண்டுபண்ணுவதும் மூவராலும் யாவராலும் விலைமதிக்கத்தகாதவச்சிரமணிகளால் தளவரிசைசெய்யப்பெற்றதும் விசித்திரவைடூரிய மணிகளால் இயற்றிய மாலைகளால் விளங்குவதும் கோமேதங்களால் ஜ்வலிக்கும் சித்திர விசித்திரச் சுவர்களையுடைய தும் அபாரபுஷ்பராக மணிச்சோதிமயமாகிய கம்பங்களுடன்கூடிய தும் திவ்யநற்பவளமயமாகிய ஸ்தம்பமேற்றட்டுகளுடன் கூடியதும் மகேந்திர நீலமணிகளால் செய்யப்பெற்ற ஸ்தம்பபீடங்களுடைய தும் பிரமாண்டமண்டலங்களுள் மற்றோரிடத்திலும் நினைப்பதற்கு மரியமகோத்தம முத்து சாலங்களையுடையதும் கொடுங்கைகளில் விளங்கும் மகாமாணிக்கங்களின்காந்திகள் திக்குவிதிக்குகளெல்லாம் வியாபித்து ஜ்வலிக்கப்பெற்றதும்சந்திரசூரியர்களது தேஜஸைகளை அதிக்கிரமித்ததும் பலகணிகளின் முன்முகட்டில்வைத்து விளங்கும் யாளி சிம்ஹம் சார்த்தூலம் ஹம்சம் முதலியவைகளால் அற்புத மாயுள்ளதும்ஓர்பக்கத்தில் சிம்ஹம் பாய்ந்துபற்றியயானைத்துதிக்கை யால் வளைக்கப்பட்டதும் ஓர் பக்கத்தில் ஹம்ஸவரிசைகளால் சூழ ப்பெற்றதுமாகிய திவ்யரத்னமயகவாக்ஷங்களோடு கூடியதும் சார்த் தூலங்களின் முகத்துவாரத்திலும் மூக்கினிலும் உட்கார்ந்து கொண் டிருக்கும் ஹம்சங்களின் முகத்தினின்றுதொங்கும் திவ்யமுத்துஜால ங்களால் ஆச்சரியமாய்விளங்குவதும் புறாக்களின்காலடிச் சுவடுபோ ல் ரத்னங்களால் சித்திரிக்கப்பட்டதும் ஓர்பக்கத்தில் மயிற்றோகை போல் ரத்னங்களாலலங்கரிக்கப்பெற்றதும் ஓரிடத்தில் வரிசையா ய்ஹம்சங்களிருப்பதுபோல் ரத்னங்களாற் சித்திரித்து அவைகளி ன் தோளினில் விளங்குவதுபோல் திவ்யமாளிகை யமைத்துளதும் ஓர்பக்கத்தில் பருத்து நீண்டு விளங்கும்கைகளுடன் கூடிய மணிமய மாகிய இரண்டுபுருஷர்களுடன் கூடியதும் ஓர் பக்கத்தில் புருஷர் கள் சாமரம்போடுவதுபோலும் ஓர்பக்கத்தில் பிரதிமைகள் விசிறு வதுபோலும் விளங்குவதும் ஓர் பக்கத்தில் ஓர்திவ்யரதம் அழகிய துவஜங்களால் விளங்குவதும் மனோவேகத்தையும் அதிகரித்த வே கத்தோடுகூடிய குதிரைகளால் வகிக்கப்பெற்றதுமாய் ரத்னத்தால் நிர்மிக்கப்பட்டதும் ஓர்பக்கத்தில் சிங்கக்கூட்டங்கள்போலும் ஓர் பக்கம் யானைக்கூட்டங்கள்போலும்விளங்கும்ரத்னமயமாய் நிர்மித்து அதன்மேல் இந்திரநீலமணிகளால் செய்யப்பெற்ற திவ்யகும்பங்க ளோடு ஆகாயத்தையளாவியதிக்கிரமித்து விளங்கும் இத்திவ்யமந்தி ரத்தைப் பார்த்தனையா ? ஓதேவி ! இவ்விடத்திற் சென்று சற்று தங் கியிருப்போமென்று கூறி ஈஸ்வரன் தேவியுடன் அம்மந்திரத்தை

யடைந்து அங்குள்ள அற்புதங்களையெல்லாந் தேவிக்குக் காண்பித்துப்பரமானந்த முற்றிருக்கத் தேவியும் அவ்வற்புதங்களை யெலாம் பார்த்து ஜகதீஸ்வரனது பாதாரவிந்தம் விட்டகலாத மனமுடையவளாயிருந்தனள்.

பதினான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

—

உ

பக்தகிதயோகம் ௬
## பதினைந்தாம் அத்தியாயம்.

இறைவனும் இறைவியும் காமேஸ்வர காமேஸ்வரியாய்க்கிரீடித்தல்.

ஈஸ்வரர் தேவியைப்பார்த்துக் கூறியதாவது:-ஓதேவி! இதோ ஓர் மகாமஞ்சம் விளங்குகின்றதே அதனைச்சற்றுப்பார். ஆயிரங்கோடிமாற்றுடையசுவர்ணதந்துவால் விளங்கும் வஸ்திரத்தோடும் பரிமள மலர்களோடுங்கூடி விளங்குகின்றது. அதற்கு மேற் சிகரத்தில் விளங்கும் துவஜத்தில் அநேககோடி சந்திரமண்டலங்கள் வரிசைவரிசையாய் விளங்குவதையும்பார்.இதன்சுற்றுப்புறம் நான்குபக்கங்களிலும் முத்து ஜாலங்களோடுகூடிய திவ்யவஸ்திரவுரைகளாலும் ரத்னஜாலங்களின் காந்தியோடுங்கூடின திவ்யபரிமளமலர்களாலுங் கூடியதும் சிந்தாமணியால் உன்னதமாய் விளங்கப் பெற்றது மாயிருக்கின்றது.இதன் மேல்விதானத்தினிலிருந்து முத்து ஜாலங்களும் ரத்னஜாலங்களும் தொங்கிக்கொண்டு மெதுவாய்ச்சலிக்கும் அழகினைப்பார். அமுர்தரசத்தால்நிரம்பப்பெற்ற ரத்னமய கெண்டிகளும் கற்பூரசார கஸ்தூரிமுதலியவையுடன் கூடியசந்தனத்தை வைத்திருக்கும்மணிப் பாத்திரங்களும் சுதாரசத்துடன்கூடிய கல்பவிருக்ஷக் கனிவரிசைகளும்தீபங்களுடன் கூடியரத்ன பாத்திரங்களும் வைத்து விளங்கும் உட்பிரதேசத்தையும் பாரென்று கூறித் தேவியுடன் அதனருகிற் சென்று ஈஸ்வரன் தேவியைநோக்கிஓதேவி! இங்கோராச்சரியத்தைப்பார்.அற்புதமாகிய இம்மஞ்சத்திற்குபிரமவிஷ்ணுருத்திர ஈஸ்வரர்களாகிய நால்வர்களும் நான்குகால்களாயிருக்கின்றனர்.சதாசிவனே பலகையாயிருக்கின்றனர். இவ்வற்புதத்தைஎப்படிகூறுவது!மகாபரிமளமலர்களால் சூழப் பெற்ற இம்மஞ்சத்திலிருந்து சற்று சுகிப்பாயாக. ஓ மஹாதேவி! இச்சிந்தாமணி கிருகத்தில் சற்றிருவென்று கூறித்தேவியை ஆலிங்கனஞ் செய்து காமநாசனராகிய இறைவன்

உடனே கோடிகந்தர்ப்ப சுந்தரராய் காமேஸ்வரவுருவத்துடன் கூடியவராயினர். ஜ்வலிக்கும்சந்திரகலாமௌளியும் ஜ்வலிக்கும் த்ரிணேத்ரமுடையவரும் தமாலம் போல் நீலநிறம் பெற்ற கண்டமுடையோரும் செம்பஞ்சூட்டியது போலும் செந்தாமரைமலர் போலும் விளங்கும் பாணித்தல முடையோரும் சிவந்ததாமரைமலர் போன்ற பத்மராகமணி பூஷணமணிந்தோரும் சிவந்த வஸ்திரமணிந்தோரும் சிவந்தவஸ்திரமணிந்து அதன் காந்திகள் திக்குகளெல்லாம்பரவ ரத்நாபரணங்களால் விளங்கும் விசாலமும் உன்னதமுமாகிய மார்பினையுந்தோள்களையுமுடையோரும் கைகளில் மான் பரசு வரம் அபயமெனும் நான்கு முத்திரைகளைத் தரிப்போரும் ஆகிய திவ்யரூபம் பெற்றுத் தேவியின் திருமுகத்தைப் பார்த்துக்கொண்டு அம்மஞ்சத்தையடைந்தனர். சூரியோதயகாலத்தில் மலர்ந்ததாமரைமலர்போன்ற முகத்தினையுடையவளும் அரவிந்தம் போன்றகண்களுடையவளும் முக்கண்ணையும் சந்திரனும் திவ்யரத்ன ஜாலங்களும் ஜ்வலிக்குங்கிரீடந் தரித்தவளும் கோவைக்கனியைப் பழிக்கும் அதரமுடையவளும் திலகத்தால் விளங்கும் நெற்றியினையுடையவளும் திவ்யதாடங்கத்தினது ரத்னங்களின்காந்திகளால் ஜகத்ஜோதியாய் சொலிப்பவளும் மகடுபிளப்புவரியால் அழகிய கூந்தலையுடையவளும் மணிமாணிக்கங்களோடுகூடிய அற்புதமாகிய முத்துமாலைகளால் ஜ்வலிப்பவளும் உதித்தவுடன் விளங்குஞ் சுக்ரனுக்குச் சமானமாகிய நாசிகாபரணத்தோடு விளங்கியவளும் கண்டத்தில் ஜ்வலிக்கும் ரத்னஹாரமுடையவளும் சிந்தாமணியுடன் தொடுக்கப் பட்டிருக்கும் திவ்ய முத்தாரங்களால் பிரகாசிக்கின்றவளும் திவ்யரத்னவைடூரிய கோமேத புஷ்பராக மாணிக்கங்களா லியற்றப்பட்ட அற்புத ஹாரங்களைத் தரித்திருக்கிறவளும் அழகிய மாணிக்கங்களிழைத்ததும் திவ்யநாதஞ் செய்யும் மணிகளுடன் கூடியதும் ஆகிய ஒட்யாணத்தைத் தரித்து விளங்குஞ் சிற்றிடையுடையவளும் மகாநாகம்போல் வளைவாய் திவ்ய சொர்னத்தை யமைத்து அதில் அற்புதமான மாணிக்கங்களிழைத்துவிளங்குங் கையாபரண முடையவளும் ஜ்வலிக்கும் காந்திப் பிரவாகங்களுடன்கூடிய ரத்னக்குச்சுகள் தொடுக்கப்பெற்றதும் திவ்ய ரத்னங்களா லிழைக்கப்பெற்றதுமாகிய வங்கியைத் தரித்தவளும் கேசபாரத்தில் வைத்தலங்கரிக்கப்பட்ட திவ்யரத்னாபரணத்தின் காந்தியால் ஜ்வலிப்பவளும் மல்லிகைமுதலி யபரிமளமலரால் திவ்யகந்தத்துடன் கூடிய கூந்தலுடையவளும் எங்கும் சோதிமயமாய்ச் சொலிக்கச் செய்யும் திவ்யரத்னங்க ளிழைக்கப் பெற்ற

மோதிரங்களுடையவளும் பற்பல ரத்னங்களிழைத்தரவிக்கையணிந்தவளும் ரத்னமயமாகிய வஸ்திரந்தரித்தவளும் கஸ்தூரி முதலியபரிமளத்திரவியங்கலந்த சந்தனரசத்தால் விளங்கும் அங்கத்தையுடையவளும் குமுகுமுவெனப்பரிமளிக்கும் திவ்யவாசனையைப் பத்துத்திக்கும் பரவச்செய்யும் வஸ்திரந்தரித்தவளும் திவ்ய மஞ்சீர மெனும் சலங்கையினது கல்கல் எனுந்தொனியாலும்அழகியசெம்பஞ்சூட்டியிருப்பதாலும் விளங்கும் பாதாரவிந்த முடையவளும் இட்சுகோதண்ட பாசாங்குசங்களால் விளங்கும் நான்கு கைகளையுடையவளும் சௌந்தர்ய சாரூபையாகிய தேவியையாலிங்கனஞ்செய்துகொண்டு அத்திவ்ய மஞ்சத்தில் சிங்கார கேளிக்குரிய சகல சாதனத் திரவியங்களும் விளங்க அவைகளை உபயோகிக்குமுறையுடன் உபயோகித்து அம்மஞ்சத்திலேயே வெகுகாலம் காமேஸ்வரன் காமேஸ்வரியோடு கூடரமித்துக் கொண்டிருந்தனர். இவ்வாறுபலகாலம் காமேஸ்வரனும் காமேஸ்வரியும் லோகானுக்ரஹ நிமித்தம் ரமித்திருந்துகிருபாரசபூரணர்களாய் சர்வலோகங்களையும் ரக்ஷணஞ் செய்து அவரவர் வேண்டும்பொருளைப் பெற்று மகிழ்வதற்கு நிமித்தமாய் அந்நகரத்திலிருந்தனர். மணித்வீபத்தில் நீபவிருக்ஷங்களடர்ந்த திவ்யோத்யானவனத்தில் சிந்தாமணியா லியற்றப்பட்டதும் ஸ்ரீபுரமென்னும் பெயருடையதுமாகிய அந்நகரத்தைக்காமேஸ்வரன்காமேஸ்வரிக்குக்காட்டி ஓகாமேஸ்வரி!சிந்தித்தகாமனைகளையெல்லாம் தானஞ்செய்யும் மணியாகிய சிந்தாமணியால்விளங்கும் இவ்விடத்தைஉன்னிமித்தமாகவே சிருட்டித்திருக்கின்றேன்.நித்யபூதிகளுடன்கூடிய இந்நகரம் உன்னாலனுபவிக்கத்தக்கது என்று பிரமன்விஷ்ணு ருத்திரன்மகேஸ்வரன் சதாசிவனெனும் ஐவர்களால் விளங்கும் மஞ்சத்தினில் தமதுமடியில் விளங்கும் தேவியைப்பார்த்துக் காமேஸ்வரர் இவ்வாறு கூறினார். ஸ்ரீ புரத்தில் மஹா மஹிமைபொருந்திய மஞ்சத்தால்காமேஸ்வரன் மடிமீது பரமசந்தோஷத்துடன் விளங்குபவளும் நித்யைகளால் சேவிக்கப்பட்டவளுமாகிய ஸ்ரீகாமேஸ்வரியாகிய அகிலாண்ட கோடிபிரமாண்டங்களுக்கும் அன்னையாய் விளங்கும் தேவியானவள் என்னை எப்போதுங்காப்பாற்றுக.

பதினைந்தாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ
பாவகம்பாயநம:

# பதினாரும் அத்தியாயம்.

ஸ்ரீசக்ராலய ஸ்வரூபவர்ணனம்.

ஓஸ்கந்தமூர்த்தி! தேவியாருக்கு ஸ்ரீ புரமென்னும் பட்டணம் மகேசனுடைய ஆக்ஞாவசத்தா னிர்மிக்கப்பட்டதென்றருளினீர். அது எவ்வாறு நிர்மிக்கபட்டதோ அதைச்சொல்லியருளல் வேண்டுமென்று ஜைகிஷவ்யர் வேண்ட அதைச்சொல்லுகிறேனென ஸ்கந்தமூர்த்தி கூறுகின்றார்.

பரமேஸ்வரியாயும் லலிதாதேவியாயும் த்ரிபுரசுந்தரியாயும் விளங்குந்தேவியார் காமேசரால் ஆக்ஞாபிக்கப்பட்டவராய் ஸ்ரீபுரத்தை நிர்மித்தார். எவ்வாறெனின், மணிமயமான நூறுபிராகாரங்களாலும் சூரியசந்திர காந்திகளைத்தடுக்கவல்லமலைபோன்ற ரத்னமயமான கோபுரங்களாலுஞ் சூழப்பட்டதாயும் கடப்ப முதலிய விருக்ஷங்களிலும் கடலிலும் படிந்துவருங்காற்றினு லுலாவப்பட்டதாயும் ரத்னதோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட வீடுகளானிறைந்தனவாயும் அநேகமண்டபங்களாற் சூழப்பட்டனவாயும் விளங்கப்படைத்தனர். அந்த ஸ்ரீ புரத்தில் தனித்தனியே பரமேஸ்வரனும் பரமேஸ்வரியும் கிரீடித்தற்குரிய கிருகங்களுள்ளன. கீழ்த்திசையில் தண்டினி என்னுஞ் சத்தியிருப்பதற்கு ஓராலயமும், அவ்வாலயத் துவாரத்தில் காவலாக மலைபோலும் அலங்காரமுள்ள அநேகயானைகள் நிற்பனவாயும், தெற்குக்கோபுரத்தில் மந்திரிணி என்னுஞ் சத்திக்கு ஓராலயமும், அந்தத்துவாரத்தில் உச்சைஸ்ரவத்தினுஞ்சிறந்த அநேக நிறமுள்ள குதிரைகள் கோடிகோடியாய் நிற்பனவாயும், மேற்குக்கோபுரத்தில் உருத்திராணி தேவிக்கு ஓராலயமும், அந்தத் துவாரத்தில் அதிவிசித்திரமான அநேகரதங்கள் நிறைந்திருப்பனவாயும், வடக்குகோபுரத்தில் வாராகிக்கு ஓராலயமும், அந்த துவாரத்தில் கட்ககேடகங்களுடைய நவகோடி யோகினிகள் நிறைந்திருப்பவராயு முள்ளது. இடையில் நித்யைகளுக்கும் நாலு பக்கத்திலும் ஜ்வாலாமாலினிகட்கும் இருப்பிடமுளது. இதனைச்சூழ்ந்து இரவும் பகலும் நீங்காது அனலைவீசும் அக்னிப்பிராகாரமு முள்ளது. மாத்ருகாகணங்களும் வடுகாகணங்களும் டாகினி யோகினிகளும் தேவியினுடைய நாற்றெட்டுப் பிராகாரங்களிலும் நிறைந்திருக்கின்றனர். இதுவன்றி கிழக்கு முதலியநான்கு திக்குகளிலும் மார்த்தாண்ட

பைரவர், ஆனந்தபைரவர், பிரமோத பைரவர், மோதபைரவர் ஆகிய இவர்கள் இருக்கின்றனர். இடந்தோறும் அமுத கூபமும் அமுத வாபியும் பால்தயிர் நெய் தேன் ஆகிய இவை பிரவகிக்கும் நதிகளும் விளங்குகின்றன. இந்த த்வீபம் அமுதக்கடலில் தாமரைப் புஷ்பம் போல் பிரகாசித்துவிளங்கும். இந்த த்வீபத்தின் விசாலம் இரண்டு லக்ஷம் யோசனை தூரமாகும். இதில்காமேஸ்வரி நானுவிதபோகங் களினால் காமேஸ்வரனை உபாசிப்பவராயும் பிரமவிஷ்ணு ருத்திர மஹேஸ்வர சதாசிவரூபமாயிருக்கின்ற மஞ்சத்தில் நூறுமன்மதனை யடக்கவல்ல அழகுள்ள காமேஸ்வரரோடு வீற்றிருந்து யாவருக்கும் வேண்டியகாமங்களைக் கொடுக்குந் திருவுள்ளமுடையவராயு மிருப் பர். செந்தாமரைபோலுந் திருமேனியுடையவராயும் சரஸ்வதி கைலாகு கொடுக்கும்படியான திருக்கரமுடையவராயும் நான்குபக் கமும் தோழிகள் சாமரம் வீசத் தமது நகரத்திலிருந்து பிரமவிஷ் ணுக்களை யுண்டுசெய்யவல்ல தேவியார் பரமேஸ்வரனோடு கிரீடித் துக்கொண்டிருந்தார்.

பதினாறும் அத்தியாயம்
முற்றிற்று.

உ
மங்களபிரதாயநமः

## பதினேழாம் அத்தியாயம்.



### ஸ்ரீ சக்ராலய வாசம்.

ஜைகிஷவ்யர் கூறுகின்றார்:-ஓ ஸ்கந்தமூர்த்தி! மணித்வீபத் தில் ஸ்ரீ புரத்தின் மகிமையைத் தேவரீர் நன்றாய்ச் சொல்லக் கேட் டேன். அங்கு மஞ்சத்தில் வீற்றிருந்த மகாதேவரும் மகாதேவி யும் பிறகு என்ன செய்தருளினரென்று வினவ ஸ்கந்தர் சொல்லு கிறார். சிருட்டி திதி சங்காரமென்னும் பஞ்சகிருத்தியங்களுக் கே துவாயிருக்கின்றவர்களைக் கால்களாகவுடைய மஞ்சத்தில் வீற்றிருக் கின்ற மகாதேவரை தேவி நமஸ்கரித்து கைகூப்பிநின்று ஓ மகா தேவரே! இந்த த்வீபமானது தேவரீரனுக்கிரகத்தால் சிருட்டிக்கப் பட்டதாயிருக்கிறபடியால் இனிக்கைலாயத்தை மறந்து இவ்விடத்தி லேயே யிருக்கப் பிரார்த்திக்கின்றேன். எனக்கு இதைவிட்டுப்போக மனமில்லை. என் பிராணநாயகரே! என்றால் விண்ணப்பிக்கப்பட்ட விதைஅநுக்கிரகஞ் செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க மஹாதேவர்

ஓ தேவியே! கைலாயமெனக்குப் பிரீதியாயுள்ளதென்று தேவர்களா லுஞ் சொல்லப்பட்டிருக்கிறபடியால் கைலாயவாசத்தைவிட்டு இவ் விடத்திலேயே இருக்கவேண்டுமென்று நீவேண்டுவது முறையன்று. ஒரு சூரியன் பல நகரங்களுக்கும் பிரகாசகனுயிருந்து அந்தந்த நக ரங்களுக்கும் ஒவ்வொரு சூரியனைக்காட்டுவதுபோல் நான் சர்வா ந்தரியாமியா யுள்ளவனுகையால் கைலாயமுதலிய விடங்களில் அநுக்கிரக ரூபியாகவே யிருந்து இவ்விடத்திலும் நீ வேண்டியபடி யே வுன்னைவிட்டு நீங்காதிருக்கின்றேன். இதிற் சந்தேகமில்லை. நா னெங்குமுள்ளவன். அநேக ரூபமுள்ளவன். எவர்களுக்கும் அவ ரவர் வேண்டியபடியேயிருந்து திருப்திசெய்யவல்லவன். ஆகையா லுன் னெண்ணப்படி இங்கிருப்பதற்குந் தடையில்லை. இனி நீ இங்கு காமேஸ்வரியாயும் நான் காமேஸ்வரனுயுமிருப்போமென்று சொல் லி அவ்வாறே யிருந்தனர். கைலாயத்திலும் எப்போதும் போல சகல தேவகணங்களாலும் சேவிக்கப்பட்டவராயும் முன்போலவே விளங்கினர்.

பதினேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
அவ்யக்தாயநமஃ

## பதினெட்டாம் அத்தியாயம்.

### ஹிமவான் கைலாயகிரி யடைதல்.

ஒருகாலத்தில் மேனை இமயமலையிலிருந்தவண்ணம் கைலாயத் தைப்பார்த்து பரமசந்தோஷமடைந்து தன்மகளாகிய பார்வதியை நினைத்துக் கவலைப்பட்டு பெருமூச்செறிந்து தனது நாயகனைப்பார்த் துப் பின்வருமாறு கூறலாயினள். ஓநாதரே! நமது குழந்தையாகிய உமையாளது யோகக்ஷேமம் விவாகத்துக்குப்பின் னிதுகாறும் யா தும் புலப்படவில்லை. அவளது சமாசாரத்தை யாரும் இவ்விடம் வந்து சொல்வாருமில்லை. அதனுல் நான் மிக்க விசாரமுடையவளா யிருக்கிறேன். அவள் விஷயத்தைப்பற்றி எனக்கு மிகவும் விசாரமா யிருக்கின்றது. விருத்த விருஷபத்தின்மீதேறிச் செல்வோரும் பஸ் மத்தைப்பூசி சர்ப்ப முதலியவைகளை மாலையாகக் கொண்டவரும் பெருஞ்சுடலையில் வசிப்போரும் திகம்பரருமாகிய அத்தேவர் இப் போ தெங்கிருக்கின்றாரோ? அன்றியும் பிராம்ஹி முதலிய எண்மா

தாக்களும் நமது பெண்ணை ஹிம்சிப்பார்கள். அந்த ருத்திரருக்கும் சமானதிகர் யாருமில்லை. ஏகோருத்திரனென்று சுருதி கூறுகின்றது. ஆதலின் நமது குழந்தையின் சமாசாரத்தை தெரிந்து கொள்ளவேண்டுமென்று சொல்ல பர்வதராஜன் ஓ மேனையே! நீ மஹேஸ்வரிடத்தில் துக்காரோபணஞ் செய்து இவ்வண்ணஞ் சொல்ல வேண்டாம். நம்முடையமகள் மூன்று லோகத்துக்கும் தாய். எப்போதும் சிவனுடைய அர்த்தசரீரத்தி லிருப்பவள். ஓர்காரணத்தால் நமக்குமகளாகப்பிறந்தாள். அவளது கடாக்ஷத்தால்தான் யாவரும் சகல சித்திகளையு மடைகின்றனர். ஆகலான் அவள் நீ சொல்லிய துக்கத்துக்குப் பாத்திர மாவளா? அவள் நாயகனாகிய சங்கரரோநித்யராயுங் குறைவில்லாதவராயும் யாவருக்குஞ் சுகத்தைக்கொடுக்கும் ஆதார பூதராயுமிருக்கின்றவர். அவருடைய சொரூபத்தை யறிய வேதங்களாலு முடியாது. அவரது உருவமாகிய சிவலிங்கத்தைப்பூசிப்பதினாலேயே போக மோக்ஷங்களையடையக்கூடுமாகையால் தேவர்களெல்லாம் அவ்வுருவத்தைப் பூசித்தே தங்கள் தங்கள் பதங்களைப் பெற்றார்கள். அவ்விறைவருடைய முக்கிய ஸ்தானம் வெள்ளிமலை. ஏனையக்ஷேத்திரங்களும் அவருக்கு ஆலயங்களேயாம். மேருமலை அவருக்கு வில். ஆதிசேடனே நாண். வேதங்ளே குதிரைகள். பூமியே ரதம். பிரம்ஹா சாரதி. சூரிய சந்திரர்களே சக்கிரங்கள். இவை வேதப்பிரசித்தமானவை. பிரபவிஷ்ணுக்களுடைய செல்வங்கள் கைலாயத்தின் கோடியிற் கோடியி னொரு பங்குக்குஞ் சமானமாகா. அந்தப்பிரபுவைத்தேட நானே போகின்றேன். ஓ என் மனதுக்கினியாளே! என்மக ளென்றுபோனளோ அன்றுமுதல் என்மனம் வருத்தமடைந்திருக்கிறது. எனது சம்பத்தெல்லாம் போனதாக நினைக்கின்றேன். என்மகள் சொல்லைக்கேட்காததினால் காதில்லாதவனாயும் என்கண் அவளைப்பார்க்காததினால் கண்ணில்லாதவனாயும் நினைக்கின்றேன். என்மகளுடைய பதாம்புஜத்தை எப்போது பார்ப்பேனோ அறியேன். சிவனையும் சிவையையும் பார்த்தால்தான் எனக்குத் திருப்தியுண்டாகும். கிருதார்த்தனுமாய் விடுவேன். நான் கைலாயத்துக்குப்போகப்பெறுவேனாயின் பூஜ்யனாய்விடுவேனென்று சொல்லி அவ்விடம் போவதற்கு எண்ணி மைநாகா! ரத்னங்கள், நானாவிதமான வஸ்திரங்கள், முத்தாரங்கள், ஆறுபட்டை தீர்ந்த தேஜஸுள்ள வயிரமணிகள் ஒன்பதுலக்ஷம் துலாம், நிர்மலமான வைடூரியம் இரண்டுலக்ஷம், புஷ்பராகம் ஐந்துகோடிதுலாம், கோமேதகம் ஒருகோடி துலாம், இந்திரநீலம் இருகோடி துலாம், கருட

ரத்னம் லக்ஷம் துலாம், பவளம் ஒன்பதுகோடி துலாம், (இவ்வக ளைப்போலும் அஷ்டாங்காபரணத்தினுடைய விலையைச்சொல்லிமுடியாது.) கிரீடம் அங்கதம் சிகண்டம் சூடாமணி நாகபந்தம் வங்கி மோதிரம் தலைக்குச் சூட்டும் ரத்னபுஷ்பங்கள் ரத்ன ஆரங்கள் வச்சிரத்தினால் செய்யப்பட்ட பெருவிரல் மோதிரம் இரத்னத்தினால் செய்யப்பட்ட கண்ட பூஷணம் ரத்னபதக்கங்களோடுகூடின முத்தாரங்கள் இரத்னக்காதோலை கைவளை நாசிகாபூஷணம் ரத்னவொட்டியாணம் கால்தண்டை பாம்புபோல் வளைந்த பாடகம் நாகாபரணம் விரன்மோதிரங்கள் கோடிப்பொன்கள் இவைகளன்றி நானாவிதமான வஸ்திரங்கள் பத்மராகம்போன்ற வஸ்திரங்கள் சந்திரனைப்போன்றதும் சூரியனைப்போன்றதுமான ஹம்சம் யாளி யானை சிங்கம் இவைகள் முகப்பில் பிரகாசிக்கின்ற வஸ்திரங்கள் சித்ரவர்னமான வஸ்திரங்கள் தாமரைப்பூப்போல் பொன்னாற்செய்த அநேக வஸ்திரராசிகள் பொன்னிறமான வஸ்திரங்கள் கரையில் முத்து ரத்னம் கட்டின ரவிக்கைகள் முதலியன முந்நூறுபாரம் வாசனைத்திரவியங்கள்கண்ணாடி சீப்பு மைபரணை கோரோசனம் கர்ப்பூரம் கந்தப்பொடி சாந்து கஸ்தூரிஅகரு சாதிக்காய் சாதிபத்திரி லவங்கம்ஏலம் சடாமாஞ்சி மனோசிலை சிந்தூரம் மருதாணி மஞ்சள் குங்குமம் திலகம் பாக்கு மிருதுவான வெற்றிலை முத்துச்சுண்ணம் சந்தனவர்த்தி சிரேஷ்டமான சந்தனம் பாலிகைகள் பொற்பந்து பந்தடிக்குங் கோல் சதுரங்கம் அதற்குரிய பீடம் பலகறை முத்துப்பரணைகள் முத்துச்சிப்பிகள் குடை விசிறி க்ஷாமரம்கிலைக்கண்ணாடி பழவர்க்கங்கள் புஷ்பவர்க்கங்கள் ஆகிய இவைகளோடும் பர்வத ஜனங்கள் பண்டிதர்கள் கோடிதாசிகள் கோடி தாசர்கள் ஆகிய இவர்களைக் கொண்டுவா என்று கூறியவாறே கொணர்ந்த அவைகளைக்கொண்டு புறப்பட்டான்.

அங்ஙனம் புறப்பட்டுப்போகும் வழியில் பஸ்மருத்ராக்ஷ தாரணரும் முனிகணங்களாற் சூழப்பட்டவரும் மூன்றுகாலங்களினும் பில்வங்களாற் பூசிக்கின்றவருமான தூர்வாசரெதிர்ப்பட அச்சைவமுநிவனை மலையரையன் கண்டு மகனோடும் மேனையென்னும் மனைவியோடும் வணங்கினன். அவர்களைத் தூர்வாசமுனிவர்பார்த்து நீங்களெங்குபோகின்றீர்கள். அது நான் கேட்கத்தக்கதானால் சொல்லலாம் என்று கேட்க, அரசன்பணிந்து ஓ முனிபுங்கவரே! ஒருவரிடமும் பிறக்கவறியாத பிறப்பிலியாய் எனக்கு மகளாய்ப்பிறந்த பார்வதியையும் பரமசிவ பாதாம்புஜத்தையும் நெடுநாள் காணாத

குறைதீர்ந்து பேரானந்தமடைவான் கைலாயம் போகின்றேனென முநிவர் மகிழ்ந்தவராய் நீவிர் போகிற மார்க்கத்தில் சந்தோஷமும் உண்டாகக்கடவது. போகிற காரியத்துக்கும் ஒருதடையும் உண்டாகாதிருக்கக்கடவது என் ருசீர்வதித்து ஒ என்னப்பனுக்கு அன்பான மாமனே! நானும் சிவபெருமானைத் தரிசித்து உன்பர்வத சிகரத்திலுள்ள கேதாரத்தில் இம்முனி கணங்களோடு கூடியிருந்து நான் விரும்பி யிருக்கும் வேண்டுகோளைத் தேவியாரது பிரசாதத்தாலடையவிருக்கின்றேன். அவ்வண்ணமேசிவாக்ஞையால் பார்வதி உன்னேடுவந்து எனக்கனுக்கிரகஞ்செய்வரென்று சொல்லிச் செல்ல, பர்வதராஜனும் விரைவாய்க் கைலாயத்துக்குச்சென்றான். அவரைப் பார்த்த ஸ்ரீ கைலாயம் இப்பர்வதராஜன் நம் நாதனாகிய பரமசிவனுக்கு மாமனாரன்றோ? நமது பார்வதிதேவிக்குத் தகப்பனாரன்றோ? மலைகளுக்கரசராயுள்ளவரன்றோ வென்று மகிழ்ந்து மனவாக்குக் காயங்களால் நமஸ்கரித்து நீரும் உமது மனைவிமக்களும் உம்மிடம் வசிக்குந்தவராசிகளும் விருக்ஷங்களும் மிருகபக்ஷிகளும் க்ஷேமமா? உலகிலசைவின்றி யிருப்பவர் நாமே. சிவபக்தர்களாலடையத்தக்கவர்களும் நாமே. வேதாகமங்களால் துதிக்கின்ற பரமேஸ்வரரது ஸ்ரீபாதங்களைத் தாங்குகின்றவர்களும் நாமே என்று ஆனந்த மிகுதியால் கூறிய வசனங்களைக் கேட்டுப் பர்வதராஜன் சொல்லுகின்றான். ஒ கைலாய பர்வதமே! நீ சொல்லியவை யெல்லாம் உன்னொருவனுக்கே வாய்த்திருக்கின்றன. அவற்றில் நானென்ன சிறப்புடையேன். நான் மகருஷிகளாலும் விருக்ஷங்களாலுஞ் சூழப்பெற்றுள்ளேன். நீயோ சிவலிங்கமூர்த்திகளாலும் அம்மூர்த்தங்களுக்கு நாயகனாகிய பரமசிவனாலும் அவனடியை விரும்பியடையும் பக்தர்களாலும் நிறையப்பெற்று வாழ்ந்திருக்கும்படியான பெருஞ்செல்வமுடையோயாகையால் என்னை க்ஷேமமாவென்று நீ கேட்டது போல் நானுன்னைக் கேட்பது யுக்தமாகப் புலப்படவில்லை யென்று இனிய மொழிகூறி ஆலிங்கனஞ் செய்துகொண்டு பிரியாவிடைபெற்றுப் பார்வதியாரை நினைக்குந்தோறும் பூரிக்கும்ஸ்தனங்களைப் பெற்றுள்ள மேனையோடு பரமசிவனிடஞ் சென்றான்.

பதினெட்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ
அபாக்ருத பராக்ரமாயநம:

# பத்தொன்பதாம் அத்தியாயம்.

## ஹிமவானது சிவதரிசனம்.

ஸ்கந்தர் கூறுகின்றார். ஓ ஜைகிஷவ்யரே! பரமசிவனிடஞ் செல்லத்தொடங்கிய மலையரையன் தானூர்ந்து வந்த விமானத்தைப் பார்த்து நீ என்பர்வதசிகரத்துக்குப் போயிருக்கக்கடவாயென் றுத்தரவுசெய்து அதனைப்போக்கிமேனையோடும்தான்கொணர்ந்த சகலத்திரவியங்களோடும் தன்மகன் இடப்புறத்தும் கைலாயம் வலப்புறத்தும் நின்று கைலாகுகொடுத்துவர உள்ளே செல்லும்போது மேனையைப்பார்த்துஓ மேனு!என்கண்களும்புண்ணியமடைந்தன.என்மனோரதமும் நிறைவேறிற்று. இங்குள்ள நானுவித சிகரங்களாலலங்கரிக்கப்பட்ட ஆலயங்களைக் காணவேண்டுமெனின் நீண்டகாலங்கழித்துக் காணப்படுவனவே யன்றிச் சின்னாளிற்காணப்படுவனவன்று. ஓ மேனையே! இங்குசிவலிங்கசமூகங்களும் அச்சிவலிங்கங்களுடைய கிருகங்களும் சிகரங்களும் ரத்னமயமா யொளிவிட்டுப் பிரகாசிப்பதையும் கோபுரம் பிராகாரம் மாளிகைகளெல்லாம் இவ்வளவென்று மதிக்கக்கூடாத நவரத்னங்களா லிழைக்கப்பட்டுப் பார்ப்பவரது கண்களைக் கவரத்தக்க மஹிமையோடு கூடி யிருப்பதையும் நாமெங்கேகாணப் போகின்றோம். நம் புத்திரியாருடைய நாயகனாகிய மகேசன் எவ்விடத்திலு நிறைந்திருப்பவனா யிருந்தாலும் இவ்விடத்தில் பரமசந்தோஷமுடையனாயிருப்பானென்பதே நிச்சயம். இக்கைலாயம் சிறிதாயிருந்தபோதிலும் பெருமையிற் பெரியதாயிருக்கிறது. யாவராலும் வணங்கப்பட்டதாயும் புண்ணிய ஸ்வரூபமாயும் வெள்ளிமயமாயும் விளங்குகின்றது. கைலாயத்தைக்காண்பதற்குப் பிரம விஷ்ணு முனீஸ்வரர்கள் தவஞ் செய்துகொண் டிருக்கின்றனர். இவ்வளவருமையோடுகூடிய இக்கைலாயதரிசனமானது நமக்கு நமது பார்வதி சம்பந்தத்தாலன்றோ எளிமையாய்க்கிடைக்கப்பெற்றது? இக்கைலாயம் பிரம்ஹஸிருட்டியிலகப்பட்டதன்று. சிவஸ்ருஷ்டியாகும். ஏனெனில் பிரம்ஹ சிருஷ்டியிலுள்ளவைகளெல்லாம் அழியக்காண்கின்றோம். இங்குள்ளவர்களொன்றுமழியாமல் சிவனைப்போல் நித்தமாயிருப்பதால் சிவஸ்ருஷ்டி யென்பதற்குச் சந்தேகமுண்டோ? ஓ மேனையே! இந்த நித்யமான மலையை நமது மருகனென்றே நினைந்து மகிழ்வாய். பிரமலோக விஷ்ணுலோக கர்த்தாக்களெல்லாம் இக்கைலாய

சிகரத்திற் படிந்துவருங் காற்றேனும் நமது சரீரத்தின்மீது படியுமா யினும் நாம் சென்மமெடுக்கப்பெற்ற பாபமொழியப் பெறுவோ மல்லவாவென்றெண்ணி அதுவுங் கிடைக்கப்பெறாமல் பரிதபித்துக் காற்றின் பரிசமே கிடைக்கப்பெறாத நமக்குக் கைலாயதரிசனமும் கைலாய பரிசமும் கிடைக்கப்பெறுமாறெங்ஙனமென்று ஏக்கமுற் றிருக்கின்றனர். இப்படிப்பட்ட கைலாயத்தில் நாம் கௌரவமாய்ச் செல்லக்கிடைத்ததன்றோ? நம்மைப்போல் புண்ணியமுடையோர் ஒருவருளரோ? சூரிய சந்திரர்களும் இரத்னமுதலிய வொளியுள்ள திரவியங்களும் புறத்துள்ள இருளையொழிக்குமேயன்றி அகத்திருளை யொழிக்கவல்லனவோ? அவ்வல்லபத்தை யுடையது இவ்வெள்ளி மலை யொன்றே. இதுகாறு மென்னுடைய சரீர காந்தியால் புறவி ருளையறியாது அகவிருளைமாத்திரங் கண்டிருந்தேன். அவ்விருள் இப்போது போனவழி தெரியவில்லை. அதனால் நான் உள்ளும் புறம் புஞ் சுத்தனைப் பிரகாசிப்பவனாயினே னென்பதற்குச் சந்தேக மில்லையென்று சொல்லிக்கொண்டே மலையின்மேற் சென்றான். அங்கு கணேச ஸ்கந்த ராலயங்களையும் ஏனையகணங்களுடைய ஆலயங்களை யும் அவையெல்லாம் அநேகப்பிராகார கோபுர சிகரங்களோடு பிரகா சிப்பதையும் அவ்வாலயங்களுடைய மூர்த்தியின் திருமேனி பிரகா சத்தால் அழகு பெற்றிருப்பதையும் பார்த்துக்கொண்டே மெல்ல மெல்ல பிரதக்ஷணமாகவந்து சிவதீர்த்தத்தில் நீராடி நித்யகர்மா னுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சிவத்தியானஞ்செய்திருக்கும் போது அக்கைலாயத்தைச் சூழ்ந்திருக்கும் நிடதமலை முதலியவெல் லாந் தெய்வவுருக்கொண்டு வந்து பணிந் தஞ்சலிசெய்து நின்று ஓ இமவானே! அநேக காலமாய்க் கைலாயதெரிசனஞ் செய்துவந்த புண்ணிய விசேடத்தால் இக்கைலாயத்துக்கு நாதனையுள்ள சிவபெரு மானை மருகனைப்பெற்ற புண்ணியசொரூபியாகிய வும்மைக் காணப் பெற்றோம். எங்கள்பாக்யமே பாக்யம். இந்த மேனையே எங்கள் தாயாவாள். நீரே எங்கள் தந்தையாவீர். நீங்களிருவரும் உங்கள் பரிவாரத்தோடும் எங்கள் கிருகங்களைச் சிறிதங்கீகரித்து வந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்போது ஹிமவான்பேரன் புடையவனாய் அவர்களைக் கிருபையோடும் பார்த்துத் தம்முடைய புத்திரர்களை ஆலிங்கனஞ் செய்வதுபோல் ஆலிங்கனஞ் செய்துகொ ண்டு அளவளாவி ஓ புத்திரர்களே! உங்களுக்கு ஐஸ்வர்யமுண்டா குக. இக்கைலாயநாதனால் கௌரவஞ்செய்யத்தக்க நற்குணமுடைய வுங்களை நானென்ன குணவிசேஷமுடையவர்களென்று சொ

ல்லவல்லேன். நீங்கள் சத்குண முடையீரென்பதும் ஒரு ஆச்சரிய மன்றென்று உபசார வார்த்தைகள் சொல்லி ஓ பர்வத ஸ்ரேஷ்டங் களே! கைலாயநாதனே உங்கள் சிகரத்தில் வசிக்கும்போது நானொரு விசேடமுடையனோ? ஆயினும் நீங்கள் பிரார்த்திக்கின்றபடியால் உங் களாணையைக் கடவாமல் வருகின்றேனென்று சொல்லி அவ்வப்பர் வதங்களுடைய கிருகங்களுக்குச்சென்று அவ்வப்பர்வதங்கள் செய் யும் உபசாரங்களை யேற்றிருக்கும்போது கைலாயம் தனது கிருகத் துக்கு அழைக்க அங்குஞ் சென்று மாலை கந்தம் புஷ்பம் இவைக ளால் கௌரவத்தோடு பூசிக்கப்பெற்றிருந்தனன். பரமேஶ்வரன் ஹிமவான் வந்திருக்கின்றானென்று கணங்களால் கேள்விப்பட்டு அவனை வரவழைக்க கணபதி நந்திகேஶ்வரர் முதலானவர்களை அனு ப்பினார். யாவரும் விமானத்தின்மீதேறிக்கொண்டு கணங்கள் சூழ் ந்து வரச் சிவாக்ஞையின்படி ஹிமவானை யடைந்து பார்வதியா ரது தந்தையாரையும் தாயாரையும் விநயத்தோடு நமஸ்காரஞ் செ ய்து அவனது புத்திரனாகிய மைநாகனையுந் தழுவிக்கொண்டார்கள். மேனையும் ஹிமவானும் பேரன்மார்களை யுச்சிமோந்து சந்தோஷி த்துப் புளகாங்கிதங்கொண்டு ஆனந்தபாஷ்பம் பொழிந்தனர்.பிறகு அவரவர்களும் ஆசனத்தி லுட்கார்ந்தார். பர்வதராஜன் அவர்க ளைப்பார்த்து உங்களைப்பார்த்து நெடுநாளாயிற்று. ஸ்கந்தகணேச நந்திகேசாதி கணங்களாகிய வுங்களைக் காணப்பெற்ற போதே நான் சிவபெருமானைக் கண்டவனாயினேன். உங்கள் வார்த்தையைக் கேட்டபோதே அவர் வார்த்தையையுங் கேட்டவனாயினேனெ ன்று மகிழ்ந்து சொல்லும்போது கணேசரும் ஸ்கந்தரும் ஓ எங் கள் பாட்டனாரே! எங்களம்மையப்ப ரிருவரும் உம்மைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலுடையவரா யெங்களை யழைத்துவரும்படி யனுப்பினார். ஆகையால் இப்போதே யாவரோடும் புறப்பட்டு வர வேண்டுமென்று பிரார்த்திக்க ஹிமவானுஞ் சிவபெருமானைப் பார் க்க முன்னமே ஆவலுடையவனாகையால் அப்பொழுதே புறப்பட்டு யாவருடனும் போம்போது மேனையைப்பார்த்து ஓ மேனையே! நீ முன் உன் மாப்பிள்ளை சம்பத்தென்பதைச் சிறிது மறியாத மிக வெளியமயானத்திற் றிரிகின்றவனென்றுமிகவும்வருத்தமுற்றனையே! இக்கைலாயத்துக்கு வந்து நாம் மார்க்கங்களிற் கண்ட சம்பத் விசே ஷங்களை நீ என்னவென்று மதித்தனை. அது நிற்க. இப்போது இம் மார்க்கத்திற் காணுஞ் சம்பத்து விசேடங்கள் இவ்வளவென்று மதி க்கத்தக்கனவாயிருக்கின்றனவா? இனியேனும் உன் மருமகனைப்போ

லச் செல்வமுடையவர்க ளில்லையென் றறிவா யென்ன மேனை தன் மகளுடைய புத்திரசம்பத்தையும் பாக்கிய சம்பத்தையுங்கண்டு நாம் முன்னென்ன வெண்ணினேமென்றெண்ணித் தலைசாய்த்துத் தன் னையகனைப்பார்த்து நீர் முன் மருகனுடைய சம்பத் விசேஷங்களைக் கூறிய துண்மையே. நான் ஸ்திரீஜாதியாகையால் பேதமைக்குணத் தினல் அறியாது கூறினேன், மன்னித்தருளுக. இவ்வளவு சம்பத் துள்ளவ ரல்லாதவராயிருப்பின் அவரை யாவரும் மஹேஸ்வரனெ ன்று கூறுவார்களா? அந்தோ! என்மடமையை என்னென்று கூறு வேனென்று தன்னை நிந்தித்துக்கொண்டு உடனே மருகனுடைய சம்பத்தை மகிழ்ந்து அதிவிரைவாய்ச் சென்று கயிலாய நாதர் சமீ பத்திற் செல்லும்போது ஹிமவான் நாம் நமது மருகரைக்காணும் போது இரத்னவகைகளைக் கொடுப்போமா, ஆபரண வகைகளைக் கொடுப்போமா, வஸ்திரவகைகளைக் கொடுப்போமா? பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்வோமா? எதனைக்கொடுப்போம் எதனைச்செய்வோ மென்று சிந்தித்து ஒன்றுந்தோன்றுதலனாய் நந்திதேவரைப்பார்த்து இரத்னங்களைக்கொடுத்து முன்னே செல்லவிட்டுத் தான் பின் செ ன்று திரிலோகாதிபதியாய் விளங்குஞ் சிவபெருமானைக்கண்டு ஆலிங் கனஞ்செய்ய அவரும் ஹிமவானைத் தழுவி ஆனந்த பரவசமுற்றுத் தமதருகிலுள்ள சிம்ஹாசனத்தி லிருக்கச்செய்து வேண்டிய வுபசா ரங்களைச் செய்தனர். அதுபோலும் பார்வதியும் தன்தாயை யருகி லிருத்தித் தன்னினத்தவர் யாவரையும் தக்கவாறுபசரித்து மகிழ்ந் தனர். பின்னர் ஹிமவான் கொணர்ந்தவஸ்துக்களைப் பெருமை யாயங்கிகரித்துத் தன்பிள்ளைகளையும் கணங்களையும் ஹிமவானோடு வந்தகணங்களையும்போஜனம் தாம்பூலம் சந்தன முதலியவைகளால் பார்வதியால் உபசரிப்பித்து பிறகு ஹிமவான் கொணர்ந்த பொரு ள்களை பிள்ளைகளுக்கும் கணங்களுக்குங் கொடுத்து நிருத்தகீத வா த்யங்களால் சந்தோஷிக்கச்செய்தா ரென்றனர்.

பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸத்யதர்மணேநம:

# இருபதாம் அத்தியாயம்.

## தேவி மேனையோடு கைலாயத்தில் சஞ்சரித்தல்.

சூதர் கூறுகின்றார்:-பின்னர் ஹிமவானையும் மேனையையும் சிவபெருமான் அந்தப்புரஞ்செல்லும்படி உத்தரவுசெய்ய அவ்வுத்தரவின்படியே அவ்விருவரும் அந்தப்புரஞ் செல்லும்போது பார்வதியார் அருகேசென்று நமஸ்கரிக்கத் தொடங்குபோது ஹிமவான் உனது நமஸ்காரத்தை நான் ஏற்கத்தகுந்தவனல்லவென்று தடுத்து நிற்கச்செய்து ஓ பார்வதி! உன்னைப்பார்க்க இங்கு வந்தோம். வந்து கண்டு அடைந்த மகிழ்ச்சிக்களவில்லை. அப்படியே நீயும் மகிழ்ச்சியடைந்திருக்கின்றாயென்று தெரியவருகிறதென்று சொல்லும்போது அம்மையார் தன்தாயைக் கட்டிக்கொள்ள மேனையும் பார்வதியைக் கட்டி யணைத்துக்கொண் டானந்த பாஷ்பத்தால் சரீரமுற்றும் நனைத்து ஓ குழந்தாய்! உன்னைக்கண்டு நெடுநாளானபடியால் உன் முகத்தைப்பார்த்து மற்றொன்றைப் பார்க்கவிருப்ப மில்லாதவளா யிருக்கிறேனென்று சொல்லி விளையாடும் பொருள்களையும் ரத்னம் மஞ்சள் குங்குமம் ஆபரணமுதலியவஸ்துக்களையுங்கொடுத்தாள். பார்வதியும் மேனையால் கொடுக்கப்பட்ட வஸ்துக்களை அப்போதேயனுபவித்து மகிழ யாவரும் அங்கிருந்தனர். ஓர் நாள் கைலாயத்தை மேனைக்குக் காட்டும்பொருட்டு சிவாக்ஞையால் பார்வதியார் ரத்ன விமானத்திலேறி அநேகசகிகள் கொடி குடை சத்திரகீத வாத்தியங்களால் உபசரிக்க தூபதீப பக்ஷணங்களோடும் வீணைவேணும்ருதங்கமுதலிய வாத்யகோஷங்களோடும் வெளியே வரும்போது ஆங்காங்குள்ள அற்புதங்களைத்தாயாருக்குக்காண்பித்து மகிழச்செய்து பின்னர்கைலாயத்தைச்சுற்றி வரும்போது மேனையைப்பார்த்து ஓ அம்மா! அங்கங்கு லக்ஷத்துக்குமே லிருக்கிறகோபுரங்களிலும் பிராகாரங்களிலுமுள்ள இடபங்கள் அமுதக்கடல் திரண்டுவந்திருப்பது போலிருப்பதையும் துவஜஸ்தம்பங்கள் பொன்மலைதிரண்டுவந்தது போலிருப்பதையும் ரத்னமண்டபங்கள் லக்ஷம் ஸ்தம்பகளோடுகூடியிருப்பதையும் அதன் மத்தியிலிருக்குந் தடாகங்கள் அன்னப்பக்ஷிகளால் பிரகாசிப்பதையும் மணிமயமான பதினாயிரம் ஸ்தம்பங்களோடுகூடின மண்டபமத்தியில் வில்வவனமிருப்பதையும் இதுபோற்காணப்படும் ஆயிரக்கால்மண்டபவரிசைகளையும் அங்கங்குள்ள மரகதலிங்கமூர்த்

திகளையும்இம்மண்டபங்களைச்சூழ்ந்துதாழஞ்சோலைகளிருப்பதையும் அதிற்படிந்து வீசுங்காற்றுகளையும் பார்ப்பாயென்றுங் காட்டிச்சென்று நந்திகேஸ்வரர் தன்னுலயத்தில் ஸ்கூஷங்கணங்கள் சூழ்ந்திருப்பதையும் அவர் பூசிக்கப்பெற்ற ஆன்மார்த்த சிவலிங்கமூர்த்தியையும் பார்ப்பாயென்று கூறிப் பின்னர் ஓ அம்மணி! நந்திதேவனுகிய பரமேஸ்வரனைச் சதாகாலமும் பூசிக்கும் நிதியுடையவராய் இதோ தோன்றுகின்ற சண்டேஸ்வரர் ஆலயத்தைப் பார்ப்பாய். அங்கே காணப்படுகிற லிங்கம் சண்டேஸ்வரரால் பூசிக்கப்பட்டதாகும். இந்த ஆக்னேயதிக்கில் இரத்னமயமான கோடிலிங்க ஆலயத்தைப் பார்ப்பாய். இது பிருங்கியினுல் பூசிக்கப்பட்டதாகும். அவருடைய கணங்களும் அவ்விலிங்கத்தைப்பூசிக்க வருவதைப் பார்ப்பாய். இதோ மணிமயமான பதினுயிரம் லிங்கவாலயங்களைப் பார்ப்பாயென் றருளிவந்து இவைகளைப்போலவே இங்கிருக்குஞ் சிவாலயங்களையும் கோபுரப்பிராகாரங்களையும் கணக்கிடமுடியா. அவைகளை நீ பார்ப்பதினுல் சகல பாபங்களும் நசித்துப்போயிற்றென்றறிவாயென்று சொல்லிச் சண்பகச் சோலைசூழ்ந்த ஓர் தடாக மண்டபத்தில் மேனையோடும் விமானம் விட்டிறங்கி வீற்றிருந்தனர். பின் சிவார்ச்சனையின்பொருட்டுத் தம் தோழிகளோடு புஷ்பராசிகளைப் பறித்து அம் மண்டபத்தில் மலைபோற் சேர்த்துவிட்டு மேனையோடு சரசமான வார்த்தையாடிக்கொண்டு ஸ்நானத்துக்குப் போயினர்.

இருபதாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

ஸக்யேநமஃ

# இருபத்தோராம் அத்தியாயம்.

## தேவிவிலாசம்.

சூதர் கூறுகின்றுர். ஓ மஹருஷிகாள்! பார்வதிமேனையோடும் சகிகளோடும் அம்மண்டபத்திலெழுந்தருளியபின்னர்த்தடாகத்திலிறங்கி ஒருவர்மேலொருவர் சலத்தைவாரியிரைத்தும் இன்னும்பலவிதமான சலக்கிரீடைகள் செய்தும் ஆனந்தமுற்று அத்தடாகங்களினுள்ளபுஷ்பங்களைப்பறித்துக்கொண்டுகரையேறிவர அத்தேவியைமேனை கண்டுகளித்தவளாய் மயிரைவாரிக்கண்ணுடிகாட்டி சந்தனமுதலானவைகளைக்கொடுத்து மருதாணியணிவித்துத் தானுந் தோழிகளால்

அலங்கரிக்கப்பட்டாள். இவ்வாறு அலங்கரிக்கப்பட்டபின்தேவியார் புறப்பட்டுவனம்போய்ச்சேர்ந்து அங்கோர்மரத்தடியிலுள்ள கட்டிலில் மேனையோடு வீற்றிருந்து சகிகளால் நானாவித புஷ்பங்களையும் பலங்களையும்வரவழைத்தார்.தேங்காய் மாங்கனி பலாக்கனிவாழைக்கனி நாவல் மாதுளை எலுமிச்சம்பழம்கரும்புமுதலியபழவர்க்கங்களையும் நானாவிதமானபக்ஷபவகைகளையும்க்ஷீரான்னம் கிருதான்னம் தத்யான்னமுதலிய அன்னராசிகளையும் அதற்குரிய ஊர்காய் முதலியவைகளையும் தயிர் பால் நெய் பருப்புகூடியசுத்தான்னங்களையும்தனித்தனிவரவழைத்துப்பின்னர்மேனையோடு இலிங்கபூசைக்காரம்பித்து சகிகளால் சந்தனம்புஷ்பம் அநேக ஜலகும்பம் பழவகை கரும்புரசம் தேன் சர்க்கரை வஸ்திரம் பூஷணம் தாம்பூலம் தூபதீப முதலியவைகளைக்கொண்டுவரச்செய்து கண்ணாடியில்திரிபுண்டரத்தைப்பார்த்து முத்து மாலைகளால் மறைபட்ட ருத்திராக்ஷமாலையை யணிந்து தேவீஸ்வராலயமடைந்து கோபுரங்களாலும் பிராகாரங்களாலும் விருஷபங்களாலும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற கர்ப்பக்கிரகத்திற் பிரவேசித்துக் கற்பூரம்போலும் வெண்மையான திரிபுண்டரத்தால் பிரகாசிப்பதாயும் சர்ப்பத்தால் மறைக்கப்பட்ட சிரோபாகத்தையுடையதாயும் அர்த்தசந்திரனால் பிரகாசிக்கப்பட்ட முடியுள்ளதாயு மிருக்கிற சிவலிங்கமூர்த்தியைப்பார்த்துத் தரிசித்துப் பஞ்சாமிர்தம் பலவகையானபழங்கள் சந்தனக்குழம்பு முதலியவைகளாலபிஷேகித்து வஸ்திரம் சந்தனம் அக்ஷதை பில்வம் புஷ்பம் முதலிய இவைகளால் அர்ச்சித்துத் தூபதீபங்காட்டி அன்ன ராசியை நிவேதனஞ் செய்து தாம்பூலம்சமர்ப்பித்து பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து தோழிகளால் செய்யப்பட்ட நிருத்தகீதவாத்யங்களாலும் ருத்திர வீணையாலும் இறைவனைச்சந்தோஷப்படுத்தி த்ரிபுரஹர!பகவானே!கருணைவை. ஸ்மரஹர! சங்கரா! பிரபோ! கரதர! (விஷத்தைதரித்தவனே) ஜகதுத்தாரக! முரஹர பூஜிதபாதா! கஜஹர! யமஹர! மகஹர! ஹரிசர! ஹரஹர! பாஹி (ரக்ஷிப்பாய்). மலையில் பிரகாசிக்கிற அநேகசிவலிங்க மத்தியில் விளங்குகிற ஆனந்தமுள்ளவனே! மலர்ந்ததாமரைப் புஷ்பங்களாலும் பில்வங்களாலும் அலங்கரிக்கப்பட்டவனே! சந்திரனால் அலங்கரிக்கப்பட்டசிரசுள்ளவனே! ஈஸ்வரனே! சங்கரனே! சுந்தரன் முதலானபக்தர்களுக்குப்பிரியமானசம்புவே! பாஹிபாஹி (எங்களை ரக்ஷி). அப்போதுதித்த சந்திரன்போல் பிரகாசிக்கிறசந்தனத்தைஅலங்காரமாகவுடையவனே!பஸ்மத்தாலலங்கரிக்கப்பட்ட த்ரிபுண்டரமுடையவனே! சர்ப்பத்தால் சுற்றப்பட்ட கழுத்துடையவனே! சந்திர

சூரியஅக்னிமூன்றையும்நேத்ரமாகவுடையவனே!வேதங்களையே சுதிரையாகவுடையவனே! வேதத்தில்தோத்திரிக்கப்பட்டகீர்த்தி யுள்ளவனே!தேவனே!தீனையாகிய என்னை ரக்ஷிப்பாய்.புராஹர!முராஹரபூஜிதபாதா! சம்பராஹராஹரா! சம்போ! கங்காதரா! காகந்தரா!காகோதரவரஹரா பாஹி.நிசாகரலோசனு! கிரிவாசா! தயையோடு என்னை ரக்ஷிப்பாயென்று அஷ்டமூர்த்தியைத்தோத்திரஞ் செய்தார். அந்தத் தோத்திரத்தை மேனைமுதலானவர்கள் கேட்டு ஆச்சரிய மடைந்து சித்திரப்பதுமைபோல்நின்றுவிட்டனர்.பின்னர்ச்சிவபெருமானுக்கு நிவேதித்த அன்னராசி முதலியவைகளை மேனையும் தோழிகளும் தாமுமாகப்புசித்தனர்.யாவரும் பக்ஷியங்களாலும் பாயசம் குளிர்ந்தசலம் முதலானவைகளாலுந் திருப்தியடைந்தமையைப் பார்வதியார் கண்டு மேனையைப்பார்த்து ஓ மேனையே!பாபத்தைப் போக்கடிக்கிற சிவநிவேதனத்தை நீபுசிக்கப்பெற்றனையே யென்றுபசரித்துப் பிறகு தேவகங்கைக் கரையிலிருக்கிற ரத்னமண்டபத்தி லுட்கார்ந்து தாம் பூலமும்புஷ்பமும் மேனைக்கும் தோழிகளுக்குங் கொடுத்துத்தாமும் தரித்துக்கொண்டு திவ்ய பூஷணங்களா லலங்காரஞ் செய்யப்பெற்றிருந்துசிறிதுகாலம்நிருத்தகீதவாத்தியங்களாற்கழித்தும்பந்தடித்தும் வனமரத்திலிருக்கிறஊசலில் விளையாடியும் சூரியகிரணம் அதிகமாகவிருக்கிறகாலத்தில் தாரா கிருகத்திலிருந்தும் நானவிதமான அம்சம் கிளிமுதலிய பக்ஷிகளைப்பார்த்தும் மணித்வீபத்தைச்சூழ்ந்திருக்கிற அமுதக்கடலில் ஓடங்களிலேறிவிளையாடியும் கட்டிலி லிருந்து விளையாடியும் ராத்திரி புஷ்பசயனத்தில் மேனையோடு படுத்துத் தோழிகளால் விசிறப்பட்டுங் காலத்தைக்கழித்தனர். இவ்வாறுதேவிமேனையோடும் தோழிகளோடும் கைலாயத்திலும் மணித்வீபத்திலும்நூறு வருஷம் பரமானந்த சந்தோஷத்தையநுபவித்துக் கொண்டுவந்தார்.

இருபத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ

ஸாஸாம்புநிதயேநம:

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

### ஹிமவான் கைலாய பிரதேச தரிசனம்.

சூதர் கூறுகின்றார். அம்பிகை தம்தாயாகிய மேனைக்குச் செய்துவந்ததுபோல், கைலாயத்தில் சங்கரரும் ஹிமவானுக்கும் மை

நாகனுக்கும் நூறுவருடமுபசரித்து வந்தனர். இதனால் சந்தோஷமடைந்த ஹிமவான்பரமசிவனையும் பார்வதியையும்பார்த்துத் திகம்பர! சோமசூர்யாக்கினி லோசனனே! உமாசகாயா! பூதாரதாரா! நாரஸிம்ஹ விதாரணேசா! கஜஹரீ! (யானைத்தோலை வஸ்திரமாகத் தரித்தவனே!) கங்கைநாதா! அர்த்தசந்திர சேகரா! மஹா சர்ப்பாபரணகங்கணா! சப்திக்கிற நூபுரங்களையுடையவரே! ருஷபசிரேஷ்டத்தை வாகனமாக வுடையவரே! நாசமில்லாதவரே! பூமியையே ரதமாக வுடையவரே! சந்திர சூரியர்களைச் சக்கரமாக வுடையவரே! வேதமாகிய குதிரைகளையுடையவரே! சம்புவே! எனக்கிப்போது க்ஷேமத்தைக் கொடுப்பீர். சர்வேஸ்வரனே! ரக்ஷிப்பீர். பிரம்ம சிரசைக் கொய்தவரே! என்னுடைய சங்கடத்தை அபகரிப்பீர். விஷ்ணு நேத்ரத்தால் பூசிக்கப்பட்ட பாதமுடையவரே! மேருவைத் தநுசாகவுடையவரே! ஆதிசேடனை நாணாகவுடையவரே! பர்வததுனியிலிருக்கும் லிங்கத்தில் வசிக்கின்றவரே! பார்வதி பதியே! குலாசலத்தை வில்லாகவுடையவரே! இந்திரனுக்குப் போகத்தைக் கொடுக்கிறவராயும் விஷ்ணுவைப் பாணமாகவுடையவராயும் மன்மதனுடைய அகங்காரத்தை யழித்தவராயும் குபேரவனுக்கு வரங்கொடுத்தவராயும் எமனுடைய மதத்தைப் போக்கடித்தவராயும் வட்டியில் சீவிக்கிறவர்களுக்குத் தூரமாயிருப்பவராயும் துஷ்டர்களுக்குத் துக்கத்தைக் கொடுக்கின்றவராயும் உள்ள உம்மை நமஸ்கரிக்கிறேனென்று துதிக்கச் சிவபெருமான் கேட்டுச் சந்தோஷித்து நந்திகேஸ்வரரைப்பார்த்துஇப்பர்வதராஜனுக்கு இக்கைலாயத்துள்ள ஆலயங்கள் முதலானவைகளைக் காண்பிப்பாய். காண்பிக்கும்போது பசிதாக முதலியவைகளுக் கிடமின்றிச்சுகமாய் விமானத்திலேற்றிக்கொண்டு போவாயென்று கட்டளையிட அவர் மலையரையனை மேனையோடும் மைநாகனோடும் கைலாகு கொடுத்து அழைத்துக்கொண்டுபோய்ச் சூரியனைப்போல் விளங்குகின்றதாயும், டக்கயங்களாலும் முத்தாரங்களாலும் புஷ்பமாலைகளாலும் அலங்கரிக்கப்பெற்றதாயும், பக்ஷ்யபோஜ்யங்களோடு கூடினதாயும், ந்ருத்த கீத வாத்யங்களோடும் உருத்திரகணிகைகளோடும் கூடினதாயுமுள்ள விமானத்தில் இரத்னமயமாகிய சிங்காதனத்தி லுட்காரவைத்து வேறொரு சிங்காதனத்தில் தாம் தங்கணங்களோடு முட்கார்ந்து சந்துஷ்டராய் ஹிமவானைப்பார்த்து ஓ மலையரசனே! இக்கைலாயத்தின் ஒரு சிகரத்தைப் பார்ப்பவருடைய புண்ணியத்தையளவிட்டுச்சொல்ல என்னால் முடியாது. சிவபெருமானொருவரால்

தான் முடியும். கொடிகளால் சூழ்ந்த விருக்ஷசமூகங்களாலும் பல வகைப்பட்ட மிருக பக்ஷி சமூகங்களாலும் மலையருவிகளாலும் பொன்மயமான புஷ்கரணிகளாலுஞ் சூழப்பட்டதாயும் ஆகாயத்தைபளாவிக்கொண்டிருக்கிற சிகரங்களையுடையதாயு முள்ளகைலாயத்தை உனது புண்ணியநேத்திரத்திறைற் பார்ப்பாய். கோபுரங்களையும் பிராகாரங்களையு முடைய இவ்வாலயம் என்னுடையது. இரத்னமயமான ரிஷிபத்தைப் பார்ப்பாய். பரமசிவனுடைய உப்பரிகையையும் மணிமயமான ஆயிரக்கால் மண்டபத்தையும் கோடிலிங்கங்களின் ஆலயசிகரங்களையும் பார்த்தமாத்திரத்தில் பாவத்தை நசிக்கச் செய்ய வல்ல சண்டீஸ்வர ராலயத்தையும் பார்ப்பாய். அந்தசிகரத்துக்கு நமஸ்காரஞ்செய்வாய். அது பதினுயிரஞ் சிவலிங்கங்களோடு கூடியது. இந்தரத்னமயமான தாமரைத் தடாகத்தைப்பார்ப்பாய். இதன்மத்தியில் கைலாயசிகரத்தைப்பார்ப்பாய். அங்கு மகாதேவர் எப்போதும் பூசித்துக்கொண் டிருக்கிறார். அவர் பூசிக்கிற மகாலிங்கத்தைப்பார்ப்பாய். மஹாப் பிரதோஷ காலங்களில் திருத்தஞ் செய்கின்ற ஆகாயத்தை யளாவிய மண்டபத்தைப்பார். இதோதெரிகிற ரத்னசிங்காதனத்தில் தேவியாரை யுட்காரவைத்துத் தாம் நாடோறும் பிரதோஷ காலத்தில் புள்ளாங்குழல் மத்தளம் காகளம் முதலிய சப்தங்களோடு திருத்தஞ்செய்கின்றார். இதுவன்றி வெள்ளிமயமான சபை ஒன்றும் பொன்மயமான சபையொன்றும் இரத்னமயமான சபையொன்றும் இருக்கிறதைப்பார். இவைகளில் சிலசமயம் திருத்தஞ்செய்கின்றார். சஹஸ்ரலிங்கத்தினுடையவுத்தமமான ஆலயத்தைப் பார்ப்பாய். கோடி ஸ்தம்பங்களுடைய மண்டபத்தைப் பார்ப்பாய். தூபதீபங்களும் ரத்னதீபங்களும் நிறைந்தகிரீடாஸ்தானத்தைப்பார்ப்பாய். பால் அமுதம் போன்ற ஜலமுடையநடபாவிகளைப் பார்ப்பாய். தேவகங்கையின் கரையைப்பார்ப்பாய். இலிங்கங்களுடைய பிராகாரங்களையும் மெத்தைகளையும் பார்ப்பாய். இதோ ஓடுகின்ற கங்கையானது அமுதக்கடலிற் சேருகின்றது. ஐந்துமுகமுடைய லிங்க வாலயங்களையும் அதனுடைய சிரசிலிருந்து பெருகுகிற சிவகங்கை, தேவகங்கை, இரத்னகங்கை, கைலாயகங்கை, மதுகங்கை என்னும் ஐந்து நதிகளைப்பார்ப்பாய். அவற்றின் ரத்னமயமானகரைகளையும் கரையிலிருக்கிறமண்டபங்களையும்பார்ப்பாய். இந்நதிகளின்கரைகளில்சிறப்பாய் விளங்கும் சிவாலயங்களையும் நவரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளரத்நேஸ்வரருடையஆலயத்தையும் சிவந்த தளிர்களுடைய வில்வவனங்களையும் அம்மரத்தடி

கடோறும் இருக்கும் சிவலிங்கங்களையும், கற்பகவிருக்ஷ வனங்களையும் பார்ப்பாய். மனோகரமாகிய கந்தளேஸ்வரருடைய ஆலயத்தையும் தேன் நெய் பால் பெருகுகிற கால்வாய்களையும் தேவிக்குப் பிரியமானதேவீஸ்வரர் ஆலயத்தையும் ஆயிரம் நிலையுடையமேற்குக் கோபுரத்தையும் பாபத்தை நசிக்கச்செய்கிற உக்கிரேஸ்வரருடைய ஆலயத்தையும்பிருங்கியினுடைய உப்பரிகையையும்ஹரிகேசராலயத்தையும்ஸ்கந்தராலயத்தையும் அம்பிகேசனுடையசிகரத்தையும்பார்த்து நமஸ்காரஞ் செய்வாய். அநேகபர்வதசிகரங்களிலிருக்கும் கிருகங்களையும் உத்தமேச ஆலயத்தையும் கர்ப்பேசனுடையகர்ப்பகிருகத்தையும் பதினாயிரங்கலசங்களும் பதினாயிரம் ஸ்தம்பங்களு முள்ள மண்டபத்தையும் அதன்மத்தியில் மணிமயமானகட்டில் இருப்பதையும் கலிசேஷாலயத்தையும் பாபமலைக்கு வச்சிராயுதம் போன்ற சந்திரகாந்தக்கற்களுள்ள குலசைலத்தையும் அந்த ஆயிரம் யோசனை விஸ்தீரணமுள்ள சந்திரேஸ்வரராலயத்தையும் குலாசலங்களுடைய கிருகங்களையும் ஈஸ்வரனுக்குப் பிரியமான பதினாயிரம் லிங்கங்களுடையஆலயங்களையும் கைலாயபர்வதனுடையகிருகத்தையும்க்ஷீரேஸ்வரர் ஆலயத்தையும் மயூரேசருடைய ஆலயத்தையும் பார்ப்பாய். ரிடியான் தண்டி பிருங்கி ஆகிய நாங்கள் சிவாஞ்ஞைபின்படி வசிக்கும் நான்கு திக்கிலுமுள்ள ஆலயங்களையும் பார்ப்பாய்.

இருபத்திரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

மஹேஶாய நம:

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்.

### ஹிமவான் கைலாய பிரதேச தரிசனம்.

ஓ மலையரையனே! வச்சிரத்தினு லியற்றப்பெற்ற உப்பரிகைகளால் அலங்கரிக்கப்பட்ட கணேஸ்வரருடைய ஆலயத்தைப்பார்ப்பாய். பாடலிவனத்தையும் அவ்வனமத்தியில் பாடலீஸ்வரர் ஆலயத்தையும் அதற்கப்பால் தாளவனத்தையும் அதில் தாளேஸ்வரரையும் அதற்கப்பால் தயிர்மயமான நதியையும் அந்நதிக்கரையில் முஞ்சிகேஸ்வரர் நாகேஸ்வரர் வித்யேஸ்வரர் சோமேஸ்வரர் முதலியோரது ஆலயங்களையும் அதற்கப்பால் புன்னாகவனத்தில் சகலருக்குஞ் சரணமான சம்புவினுடைய சரணத்தையும் அதற்கப்

பால் வில்வவனமத்தியில் விம்வேசனையும் கந்தவர்நேம்வரருடைய ஆலயத்தையும் அதற்கப்பால் பதினுயிரக்கால் மண்டபத்திலிருக்கும் சிம்ஹேம்வரராலயத்தையும் அதற்கப்பால் ருத்திராக்ஷவனத்தையும் அவ்வனத்தில் பார்த்தமாத்திரத்தில் பாபங்களைப் பஸ்மமயமாக்கவல்ல பஸ்மரூபமான சலத்தோடு கூடிய பஸ்மாதாரசரசையும் அங்குள்ள பஸ்மேம்வரர் ஆலயத்தையும் அதனருகே கந்தசைலத்தையும் அதிலிருக்கும் கந்தேம்வரராலயத்தையும் அதனருகே சந்தனவனத்தையும் அதிலோடும் நெய்க் கால்வாயையும் கிருதேம்வரராலயத்தையும் க்ஷிப்ரேம்வரர் ஆலயத்தையும் அதனருகில் பெரிய விருக்ஷங்களை யுடைத்தானதாகிய காருடரத்னமண்டபங்களையும் புஷ்பராக சிகரங்களையுமுடைய கோபுரத்தையும் தேவதாருவனத்தையும் தேவதார் வீம்வரரையும் அதனருகில் காலாக்னி ருத்திராலயத்தையும் கந்தர்வேம்வர ராலயத்தையும் வேதசிகரத்தோடுகூடிய தரணீசரராலயத்தையும்பத்மகந்தேம்வரராலயத்தையும் அதற்கப்பாலுள்ள கர்ச்சூரக்காட்டையும் பாக்குவனத்தையும் பைரவேசராலயத்தையும் மணிகண்டேம்வர ராலயத்தையும் அதனருகில் அமிர்தநடபாவியையும் அதில் மஹேம்வரரது கருணைநோக்கத்தால் அமிர்தம் நிறைந்திருப்பதையும் அதன் கரையில் சுதாதாமேம்வர ராலயத்தையும் அமிர்தேம்வரராலயத்தையும் ஜடேம்வரராலயத்தையும் அதனருகில் ஆம்ரவனத்தையும் அதில் ஆம்பரேம்வரராலயத்தையும் அதிலுள்ள நூற்றெட்டுச்சிவலிங்கங்களையும் பிப்பலேசராலயத்தையும் அதனருகில் அசோகவனத்தையும் அதிலுள்ள அசோகேம்வரர் மந்தாரேம்வரர் சுகேம்வரர் கிரிசேசர் ப்ராஸதகேசர் உரகேசர் முதலியோரது ஆலயங்களையும் அதனருகில் ஹரிகேசவனத்தையும் அதிலிருக்கும் சாகரேசர் உத்பலேசர் குமுதேசர் அம்சேம்வரர் பத்ரேம்வரர் காமேம்வரர் முதலிய ஆலயங்களையும் அவைகளைச் சூழ்ந்திருக்கும் லிங்கங்களையுடைய உப்பரிகைகளையும் சிகரங்களையும் மாலீம்வரர் சுந்தரேம்வரர் கபர்த்தீம்வரர் யக்ஷேம்வரர் பாபயக்ஷேம்வரர் மதங்கேம்வரர் பிலக்ஷேம்வரர் திருநீம்வரர் வினதேம்வரர் முதலியோரையும் உன் சிகரத்திலிருக்கிற லிங்கங்களையும் இதற்குப் புறம்பே மணித்வீபமான ரத்னமயமான பூமி அமுதக்கடலால் சூழப்பட்டிருப்பதையும் அதன் மத்தியிலிருக்கும் ஸ்ரீ புரத்தையும் அதிலொரு மலையையும் பாற்கடலை யடைகிற மணிகங்கையையும் பார்ப்பாய். அதனருகில் காஞ்சவனத்தையும் காஞ்சேம்வரரையும் அம்மணி த்வீபத்தில் நூற்

றெட்டுப்பிராகாரம் சிவபெருமானுல் கற்பித்திருப்பதையும் கைலாயத்திலென்னென்ன ஆலயங்களைப் பார்த்தனையோ அவைகளெல்லாமிங்கிருப்பதையும் கணேசர்ஸ்கந்தராலயங்களையும் சிகரத்தையும்தேவிகலசத்தையும் பத்துலக்ஷம் ஐந்துலக்ஷம் ஸ்கந்த கணேசகணங்கள் சத்தியையும் பாசத்தையுந் தாங்கிக்கொண்டு பிராகாரத்தைக் காவல்கொண்டிருப்பதையும் சத்யோஜாதமுதலிய பஞ்சமூர்த்திகள் பிராகாரத்தி னுட்புறத்தில் காவல்கொண்டிருப்பதையும் அவர்கள் தங்கள் பெயரால் சிவலிங்கங்களை லக்ஷக்கணக்காய் ஸ்தாபித்துப் பூசிப்பதையும் அதற்குமத்தியில் இருபத்தைந்து மூர்த்திகள் பிராகாரங்களை ரக்ஷித்துக்கொண்டிருப்பதையும் இவர்களுந் தங்கள் பெயரால் சிவலிங்கங்களைத்தாபித்துப்பூசிப்பதையும்அங்குமகாதேவிக்குச் சிவபெருமானுல் கற்பிக்கப்பட்டிருக்கிற கிருகமிருப்பதையும் பார்ப்பாயாக. ஓ அரசனே! அங்கு நாம்போகக்கூடாது. அவ்விடத்தில் மகாதேவியின் றேழிகள்சஞ்சரித்துக்கொண்டிருப்பதையும் இரத்னகலசங்களுடன்கூடிய சிவலிங்கசமூகங்கள் பிரகாசிப்பதையும் பார்ப்பாயாக. ஓபர்வதராஜனே! அதுமகாதேவன் தேவியோடுகிரீடித்திருக்கும் இடமாகுமென்றிவ்வாறுநந்திதேவரால்சொல்லக்கேட்டஹிமவான்ஓ நந்திதேவரே!நான்கிருதார்த்தனுய்விட்டேன். நான்கைலாயத்தைப்பார்த்தபோது இவ்விடத்திலேயேகாலத்தைக்கழிப்போமென்று தோன்றிற்று. நீர் இப்போது இவ்விடத்திலேயே ஆசைவைக்கத்தக்கதாகச் செய்து விட்டீரே. ஓ கணேஶ்வரனே ! நானுண்மையாகச் சொல்லுகிறேன். என்சன்மம் சபலமாய் விட்டது. இப்பர்வதத்தில் சிவபெருமான் வசிக்கிறபடியால் இது புண்ணியகரமானது. இங்குள்ள வனங்களிலும் பிராகாரங்களிலும் கோபுரங்களிலும் ருத்திரமூர்த்தியாகிய பிரபு வாசஞ்செய்கிறுர். அவருடைய குணத்தை யெண்ணுவதற்கு யாவரால் முடியுமென்றனன்.

இருபத்துமூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

உ
தேஶாங்காய நமஃ

## இருபத்துநான்காம் அத்தியாயம்.

---

### ஹிமவான் சப்த த்வீபங்களையும் பார்த்தல்.

நந்திகேஶ்வரர் கூறுகின்றுர். ஓ பர்வதசிரேஷ்டனே! கீழ்த்திசையைப்பார்ப்பாயீ. அங்குதெரிகிறபர்வதம் சிரேஷ்டமானது. அது

உருக்கினபொன்போல் பிரகாசிப்பதையும் ஆயிரஞ்சிகரகாந்தியால் திக்குகளைப்பிரகாசப்படுத்துவதையும் கைலாயத்தருனியிலிருக்கிற விருஷபஸ்தம்பம்போல்பிரகாசிப்பதையும் பார்ப்பாய். அது எல்லா த்தேவர்களுக்குஞ் ஸ்தானமாயுள்ளது. அது நிற்க. அநேக நதிநதங்க ளோடு சமுத்திரங்கள் அகழியைப்போல் பிரகாசிப்பதையும் ஆதி லநேக த்வீபங்கள் பிரகாசிப்பதையும் நீலம் விந்தம் மந்தாரம் தர்த்த ரம் சுமாலி கேதுமாலி பத்ராசுவம் ரைவதம் சதகிசிருங்கம்பிங்களம் உசயம் சக்கரவாகம் மைநாகம் மது அஸ்தாசலம் பாரியாத்ரம் கிஷ தம்கந்தம் முதலியமலைகளையும் கேதாரலிங்கத்தைச்சிகரத்திலுடைய உன்னுடைய மலையையும் அது உன்னதமான சிகரங்களோடுகூடி யிருப்பதையும் பார்ப்பாய். உன்னிடமிருந்து மாநுடகங்கை வெளிப் பட்டுஅநேக லிங்கசமூகங்களது சம்பந்தமுடையதாய்பூலோகத்தைப் பாவனமாக்குகின்றது. அது பகீரதன் தபசினுல் பிரார்த்திக்கப் பட்டு மிக்க கர்வத்தோடு பிரவஹிக்க அதனைப் பரமேஸ்வரன் தமது ஜடாகோணத்தில் அடக்கிப் பின்னர்த் தேவப்பிரார்த்தனையால் வெளிவிட பூவுலகில் வந்தது. பிறகு அது மாலியவான் பர்வதத் துக்கு மேற்பக்கமாய்ச் சென்று சமுத்திரமடைகிறது. அக்கங்கை யானவள் ஆநந்தவனத்தையும் சக்கரதீர்த்தத்தையும் அடைந்தனள். அதன் கரையில் விஸ்வேஸ்வரர் சிகரத்தையும் பாதகண்டத்தில் சர் வதமையா யிருக்கும் இந்தக் கங்கையையும் அவிமுக்த ஸ்தலத்தை யும் பார்ப்பாயாக. இதன் பரிசமுண்டானவர்களுக்கும் புனர்ஜன் மம் உண்டாவதில்லை. பரமசிவன் அங்கு மோக்ஷங்கொடுத்துக் கொண்டிருக்கிறுர். அதன் மேற்கில் குஹ்யக்ஷேத்திரம், பிரபாச கம், ருத்திரகோடி, புஷ்கரம், கங்காதுவாரம், பிண்டாரகம், காலஞ் சரம் இவைகளையும் பார்ப்பாய். காலஞ்சரத்தில் மலகபுதரென் னும்யோகி முனிவர்களுக்கு உபதேசஞ் செய்தனர். த்ரிவிக்ரமருடை ய பாதஹேதுவாய் வந்த கங்கை இந்த கங்கைக்கு அந்நியமானது.

ஸ்ரீசைல சிகரத்தையும் திரியம்பகமலையையும் க்ஷிப்ராநதிக் கரையிலுள்ள மகாகாளம் காமதமாகிய வைத்தியநாயகம் முதலான மலைகளையும் அதற்கு வடமேற்காக குருதேசத்தையும் தாம்ர மய மாயும் பொன்மயமாயு மிருக்கின்ற பூமியையும் அந்தத்வீபத்தி லிருக்கிற நெய்க்கடலையும் பார்ப்பாய். அது கிம்புருடர்களுக்கு வாசஸ்தானமானது. அவர்களில் சிலர் குதிரைமுக முள்ளவர்களு முண்டு. இந்த சிலாநதியைப்பார்ப்பாய். அதன் சமீபத்தில் காக்கை முக முள்ளவர்களிருக்கிறுர்கள். அவ்வளவு தூரந்தான் மனிதர்கள்

பிரவேசிக்கக் கூடும். மேல் மறுபூமி. (சலமும் காடுமில்லாதது) அதற்கப்பால் சாகத்வீபமும் கிரவுஞ்சத்வீபமுமிருக்கின்றன. அதற்கு மேற்கில் குசகாசமென்னும் த்வீபமுளது. அதுபாற்கடலால் சூழப்பட்டிருக்கிறது. அதற்கப்பால் தேவர்கள் வசிக்கிறது. அது தயிர்க்கடலால் சூழப்பெற்றது. கிழக்கில் சக்கிரவாள பர்வதமிருக்கிறது. அதற்குக்கிழக்கில் உதய பர்வத மிருக்கிறது. மேற்கில் பூமி நல்ல ஜலத்தால் சூழப்பெற்றிருக்கிறது. சுவர்ணூர்னத்தைப் பார்ப்பாய். அது வருணனுக்கு வாசஸ்தானம். சோணமென்னும் நதம் மேற்குத்திக்கில் போகிறது. அவ்விடம் அழகாயும் ரம்யசல வனத்தோடு கூடியதாயுமிருக்கிறது. அவ்விடத்தில் கந்தர்வர்களுக்குச் சந்தோஷமுண்டாகும். அந்தப் பூமி அஸ்தாசலம்வரையில் போகிறது. அதற்குச்சமீபத்தில் சால்மலீத்வீப மிருக்கிறது. தக்ஷிணபாரத வருஷத்தில் ஜம்பு என்னும் நதி எப்போதும் பெருகிக்கொண்டிருக்கிறது. அந்தத் த்வீபத்துக்கு ஜம்புத்வீப மெனப்பெயர். அந்தஜம்புநதி சுவர்ணமுள்ளது.அதற்கப்பால் பிரதிஷ்டான புரத்தையும் காஹட்டபுரத்தையும் விந்திய பர்வதத்தில் கரவீரபுரத்தையும் புண்ணியமான வேணுவனத்தையும் நாகநாதனுடைய சிவாலயத்தையும் நர்மதா தீரத்தில் ஓங்காரத்தையும் ஓங்காரகுண்டத்தையும் ஆவட்டகம் குசார்ணீஸ்வரம் நைமிசம் பதரீவனம் கோதாவரி நர்மதை பாகுதை கிருஷ்ணவேணி நீரை பயோஷ்ணி காளிந்தி கயை பிரஜாபதியின் வேதிகை பிரயாகை சித்திரகூடம் சரயுநதிக்கரையில் சூலடங்காலயம் கோதாமுகம் சமுத்திரத்தில் கலக்கிற கங்கை காமோதகம் கொங்கணபூமி மேற்குச் சமுத்திர மூலையிலுள்ள கோகர்னம் அழகான சேஷாசலம் ஆகிய இவைகளைப்பார்ப்பாயாக. அந்த சேஷாசலத்தில் ஸ்கந்த மூர்த்தி பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கிறார். அதற்கப்பால் காளஹஸ்தியையும் காஞ்சியையும் நினைத்தமாத்திரத்தில் புண்ணியத்தைக் கொடுக்கும் அருணாசலத்தையும் விருத்தாசலத்தையும் மிக்க அழகுவாய்ந்த நடன ஸ்தலமாகிய அப்ரசபையையும் கோபர்வதத்தையும் மார்க்க சகாயத்தையும் சைகிய மலையையும் அதிலிருந்துண்டாய் வரும் காவேரிநதியையும் கண்ணுவசிகரத்தையும் ரத்னகிரியையும் திரிணச்சோதி சிகரத்தையும் மாதுர்ப்பூதேஸ்வர சிகரத்தையும் மதுரை வேணுமலை மகேந்திரமலை தாம்ரபரணிநதி முதலியவைகளையும் கன்னியாதீர்த்தம் கந்தமாதனங்களையும் கஜாரணியம் பஞ்சநதம் கும்பகோணம் மத்யார்ச்சுனம் மாயூரம் சுவேதவனம் காவேரி சமுத்திரசங்கமம் ஸ்ரீ வாஞ்சியம் சாயாவனம் தேஜனிவனம்

அமிர்தகடேசம் தோணிபுரம் வைத்தீஸ்வரம்தஞ்சேசம் கமலாலயம் வேதாரணியம் வேததீர்த்தம் காவேரிதீர்த்தத்திலுள்ள சிவலிங்கம் ஆகிய இவைகளையும் இலிங்கங்களால் அழகாயிருக்கிற பாரதகண்டத்தையும் பிரமாண்டச் சுவர் சுற்றியிருப்பதையும் கிழக்கில் பத்ராசம் கேதுமால முதலியவைகளையும் மேற்கில் ஹரி கிம்புருடமென்கிற இரண்டுகண்டங்களிருப்பதையும் வடக்கில் சம்புவுக்கு ஆனந்தத்தையுண்டுசெய்யும் மந்தரபருவதமும்இளாவிருதவருஷமும் மணிவருஷமுமிருப்பதையும் பாரதவருஷத்துக்குத் தெற்கேயிருப்பவைகளையும் பார்ப்பாயாக. இவைகளெல்லாம் ஈஸ்வரனு லேற்படுத்தப்பட்டன. இவைகளை உனக்குச் சுருக்கமாகச் சொன்னேனென்று நந்திதேவர்கூற ஹிமவான் அவரைப்பார்த்து நீர் சிவபாதபத்தியில் சிறந்தவர்.சமானமில்லாதகுணமுடையவர். உம்மைப்பற்றிச்சொல்ல வேண்டுமென்றால் ஈஸ்வரரொருவரால் தான் சொல்லமுடியும். நானுவிதமான அண்டகோடிகளில் சஞ்சரிக்குஞ்சக்தியும் அவைகளின் விருத்தாந்தங்களைக் கூறுதற்கான அதிகமானபாண்டித்யமும் யாவருடையவர்? ஒருக்கால் பிரமவிஷ்ணு ருத்திரர்கள் அறிந்திருக்கலாம்!ஐயா!நீர்சகாயமாயிருப்பதினாலும் இவ்விடம் ரம்யமாயிருப்பதினாலும்இவ்விடத்திலேயேகாலத்தைக்கழிக்கலாமென்றுயோசிக்கிறேனென்று சொல்லி விமானத்தைவிட்டிறங்கி அவ்விடத்தில் வில்வம் புஷ்பம் பழம் முதலிய அநேகதிரவியங்களால் பத்துவருடம் சிவாராதனஞ்செய்து பரசிவப்பிரபுவைநோக்கி சசிதரா! கரதரா!மாரஹரா! அம்பேசா! சம்போ! கருணாநிதருணா! என்னால் செய்தபூசையையங்கீகரித்துக்கொள்வாய். உன்னைவிடவேறுகதியில்லை யென்று துதித்தனன். அப்போதுபசுபதிபிரத்யக்ஷமாய் பக்தியில்பிரீதியுள்ள வுனக்குச்சகலகோரிக்கைகளையும் பூர்த்திசெய்துவிடுகிறேனென்று சொல்ல இமவான் உன்பாதபக்தியையும் தூர்வாசருடைய நியமனப்படி பார்வதியை என்வீட்டுக்கு அழைத்துப்போவதையும் விரும்புகின்றேனென்று வேண்டிப் பெற்றுக்கொண்டான்.

அப்போது ஹிமவானைப்பார்த்து நந்திதேவர் கேதாரலிங்கத்தால் விளங்குஞ் சிகரத்தையுடைய நீர் மஹாபுண்ணிய சாலியன்றோ? உம்மிடத்தில் அநேகருஷிகள் தபஞ்செய்துகொண்டிருக்கிறபடியால் அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்யப் பகவான் சித்தமாயிருக்கிறார். மேலும் நீர்பார்வதிக்குத்தகப்பனார். கம்பீரமான நடத்தையுடையவர். விருத்தர். சகலபர்வதங்களுக்கும் சிரேஷ்டர். உமக்குச்சமானமானவர்கள் கிடையார். உமது சிகரத்தில் லிங்கப்பிரதி

ஷ்டாசகர்களெல்லாமிருக்கின்றார்களென்று சொல்லி அவரைவிமான த்திலேற்றிக் கொண்டு சுவாமி சன்னிதானத்திலொப்புவித்து நமஸ் கரித்தார்.

இருபத்துநான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
மணிகிங்கிணி மேகலாயநம ஃ

## இருபத்தைந்தாம் அத்தியாயம்.



### ஹிமவானது பிரார்த்தனே.

ஸ்கந்தர் கூறுகின்றார். பிறகுநந்திதேவர்கைலாயமாளிகையில் பார்வதியோடு கூடினவராயும் திவ்யசிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற வராயும் நான்கு புஜங்களையுடைய வராயும் நவரத்னங்களால் பூஷி க்கப்பட்டிருக்கின்றவராயும் சந்திரனேச் சிரோபூஷணமாகவுடையவ ராயும் சர்ப்பம் சுற்றிக்கொண் டிருக்கின்ற கண்ட முடையவராயும் நவரத்னங்களால் பிரகாசிக்கின்ற கங்கணமுதலியன வுடையவராயும் முக்கண்ணராயும் திரிபுண்டர தாரியாயும் தாமரைமாலையை யுடைய வராயும் சுத்தவஸ்திரந் தரித்தவராயும் பார்வதியை உல்லாஸ மாகப் பார்த்துக்கொண் டிருக்கிறவராயும் பார்வதியா ருடைய காந்தியினல் மூடப்பட்டவராயுமிருக்கிற சம்புவையும், வணங்கின முகமுள்ளவளாயும் சிவபெருமானது மடியிலிருக்கிறவளாயும் திரி புண்டரத்தை யணிந்தவளாயும் சிரசில் சந்திரனல் பிரகாசிக்கிற கிரீ டத்தையுடையவளாயும் சந்திரசூரியர்போன்ற காதோலே யுடையவ ளாயும் நவரத்ன பதக்கங்களே யணிந்த கழுத்தை யுடையவளாயும் கஸ்தூரி சந்தனம் தாம்பூலந் தரித்தவளாயும் சிவபெருமானது திரு முகத்தையுந் திருவடியையும் கடைக்கண்ணல் நோக்குகிறவளாயு மிருக்கிற பார்வதியையும் பார்த்து, கத்திசூலத்தோடு தண்டியும் அம்பு அம்பறாத்தூணிகளோடு பைரவரும் மயில்விசிறியோடு காலா க்னிருத்திரரு முபசரிக்க வீற்றிருக்கின்ற அவ்வுமாமஹேஶ்வரரை நமஸ்கரித்து இமவான் தேவரீரைத் தரிசிக்கவந்திருக்கின்றன ரென் று விண்ணப்பஞ்செய்ய உமாமஹேஶ்வரர் உள்ளே அழைத்துவர வுத்தரவு செய்தனர். நந்திகேஶ்வரர் அக்கணமே இமவானேக் கைலா குகொடுத்து அழைத்துவர ஹிம்வான் பார்வதி பரமேஶ்வரர்களேக் கண்டு சந்தோஷமடைந்து பவஹரா! புராந்தகாரே! பிரமதாதீச!

ஹரீந்திரா! ருத்ரா! பூஜ்யா! சர்வமங்களாதிநாதா! ஹரா! விஷகண்டனே! சோமா! சந்திரசூடா! சர்ப்பஹார மணிந்தவனே! அகபதிவாசா! மஹோருலிங்கவாச! அரிநேத்ரபூஜ்யபாதா! சம்போ! கருணை செய்வாய். தேவ தேவா! பலிபலமதனப்பிரமாதசம்போ! கிரிஜாநாதா! என்னை விரைவில் காப்பாற்றுவாய். விஷத்தையுண்டவனே! பிரமத கணங்களுக்குத் தலைவனே! ரக்ஷி. கங்கையையுஞ் சந்திரனையும் சடையிற் றரித்தவனே! உபநிடதவாக்யங்களால் துதிக்கப்பட்டவனே! ஹ்ருதயத்திலிருக்கிற அக்யானத்தை நாசஞ் செய்கிறவனே! சம்புவே! என்னை ரக்ஷிப்பாய். உன்பாதத்தில் நல்ல பக்தியைக் கொடுப்பாய். லிங்கார்ச்சனத்தில் சிறந்தபக்தியைக் கொடுப்பாய். உன் பாதபூசை செய்வதே எப்போதும் என்மனதி லுதிக்கச்செய்வாய். என்நேத்திரம் உன்னுருவமாகிய லிங்கத்தைப்பார்ப்பதிலேயே ஆவலுள்ளதாயிருக்கச்செய்வாய். என்சிரசு உன்பாதத்தை வணங்கிக் கொண்டேயிருக்கவேண்டும். உன்னாலயத்துக்குப் போவதில் என்கால் சித்தமாயிருக்கவேண்டும். சசதரதர! ஹர! அகதர! சூலதரா! அவ்யயா! பாஹி என்றிவ்வாறு துதித்தஹிமவானைச் சமீபத்தில் வரும்படிச்செய்து எம்கைலாயத்தையும் அளவிறந்தலிங்கங்களையும் அவைகளின் கோபுரங்களையும் மண்டபங்களையும் பிராகாரங்களையும் பார்த்தனையோ? கைலாசேஶ்வரலிங்கத்தையும் அம்பிகேஶ்வரரையும்கணங்களுடைய சபைகளையும் பூகோளத்தையும் மேருவையும் சிவக்ஷேத்திரங்களையும் பார்த்தனையா? பிரம்மா விஷ்ணுமுதலான தேவர்களும் முனிவர்களும் கைலாயதரிசனத்துக்கு இன்னுந் தவஞ்செய்துகொண்டிருக்கின்றார்கள். எம்மனுக்கிரகத்தால் தான் இத்தரிசனங்கிடைக்கும். எமதனுக்கிரகமின்றி சோடசதானத்தாலும் கோடியக்ஞும் கோடிதபசு கோடிவிரதம் கோடிஉபவாசம் கோடிகிருச்சரம் இயமநியமாகமமுதலிய அஷ்டாங்கயோகம் கோடி பசுயானைகுதிரைகளைத்தானஞ்செய்தல் தனம்தான்யம் ரத்னம் மணி வஸ்திரம் ஆபரணம் முதலியதானம் தீர்த்தயாத்திரை கன்னிகாதானம் அன்னதானம் கிருகதானம் முதலியவைகளாலும் வருணச்சிரமத்திலாவலுள்ளவனாயிருத்தலாலும் வேதவேதாந்த விசாரணையினாலும் கைலாயதரிசனங்கிட்டுவதில்லை. எமதுபக்தியாலும் எமதனுக்கிரகத்தாலுமே கிடைக்கும். எப்போதும் எம்மைத்தவிர பாவனை வைக்காதவனும் எப்போதும் பஸ்மருத்திராக்ஷத்தால் பிரகாசிக்கின்றவனும் பஞ்சாக்ஷரஞ் ஜபிக்கின்றவனும் லிங்கார்ச்சனைசெய்கின்றவனும் ருத்திராத்யயனவானும்சிவக்ஷேத்திரவாசனுமிருக்

கிறவனுக்குங்கிடைக்கும். எமது பக்தியினாலும் லிங்கார்ச்சனையினாலும் மஹாஜிதேந்திரியர்களான சிலாதி புத்ரர் முதலானவர்களும் யமனைவென்றவராயினர். சண்டேசன் தகப்பனைக் கொன்று யமனை ஜயித்துப் பிழைப்பித்தும் ஸ்வேதனும் மார்க்கண்டேயரும் யமனையும் ததீசிவிஷ்ணுவையும் கௌதமர் இந்திரனையும் வென்றும் விளங்குகின்றார்களென்றருளினர்.

இருபத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

சமஸ்ததேவதா மூர்த்தயேநம:

# இருபத்தாறும் அத்தியாயம்.

## இறைவன் இமவானுக் கருளுதல்.

சூதர்கூறுகின்றார். ஸ்கந்தமூர்த்தி ஜைகிஷவ்யமுனிவரே! கைலாயநாதர் இமவானைப்பார்த்தருளுகையில் நந்திதேவர் கருணைக்கடலாகிய சங்கரரைப்பணிந்து ஓ பரமேஸ்வரப்பிரபோ! இவ்விமவான் யாவராலும் பூசிக்கத்தகும் புண்ணியவானாகும். ஏனெனில் பிரம்மவிஷ்ணுவாதி தேவர்களாலும் தேவரீரது திருமலையைப் பார்ப்பதற்கு முடியவில்லை. அவ்வண்ணமானகாண்டற்கரியஇம்மலையைத்தேவரீரது கிருபாலேசத்தால் இமவான்பார்த்தனர். அன்றியும் ஹிமாசலேஸ்வரரென்று ஓர் சிவலிங்கபிரதிஷ்டையை இக்கைலாயத்திற்செய்து பஞ்சாமிர்தமுதலிய விசேஷத்திரவியங்களால் அபிஷேகமும் பில்வமுதலிய பத்ரபுஷ்பங்களால் அர்ச்சனையும் நிவேதனமுஞ் செய்து நிருத்தகீதவாத்யமுஞ்செய்வித்தார். இவரதுமகனாகிய மைநாகனும் இவரைப்போலவேஇங்குசிவலிங்கபூஜையைச்செய்துதோத்திரஞ்செய்தனன். ஹிமவான் செய்த தோத்திரத்தைக் கேட்டருளுகவென்று நந்திபகவான் அதனைச் சொல்லினர்.

அத்தோத்திரங்களைக்கேட்டுச் சந்தோஷமடைந்து எமதுகைலாயத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தபடியால் சகல சத்கர்மங்களும் அனுஷ்டிக்கப்பட்டனவாயும் தக்ஷிணை அன்னதானமுதலியவையோடுகூடின சகலயாகங்களுஞ் செய்யப்பட்டனவாயும் சாந்திராயணகிருச்சரமுதலிய தபங்களெல்லாஞ் செய்யப்பட்டனவாயு மாயின. மூன்றுலோகங்கள் வனங்கள் பர்வதங்கள் பட்டணங்கள் நதி

திரங்களாகிய புண்ணியக்ஷேத்திரங்களில் லிங்கப்பிரதிஷ்டை செய்வதினும் இக்கைலாயத்திற் செய்வது கோடிபங்கதிகமாகும். பிரம்ம விஷ்ணுக்கள் முதலானவர்களுக்குஞ் செய்தற்குக் கூடாமையாகிய இக்கைலாயத்தில் இமவான் செய்யப்பெற்றபடியால் அதன்பயனை எவ்வளவென்று சொல்லக்கூடும்! ஓ இமவானே! நீயேபுண்யவான். நீ எம்ஹ்ருதயத்தில் வசிக்கத்தக்கவனுயினுய். உனக்குக் கொடுக்கத் தகாத வஸ்துவும் ஒன்றுண்டோ! ஆகலான்நீயே நாம்தான். இதிற் சந்தேகமில்லை. நீயே எம்முடைய பர்வதமூர்த்தியாயிருக்கின்ருய். தேவர்களாலும் முனிவர்களாலும்கணஸ்ரேஷ்டர்களாலும் நீ ஆஸ்ரயிக்கத் தக்கவன். கேதாரலிங்கம் உன்சிகரத்திலிருக்கிறபடியால் அவ்விலிங்கதரிசனத்தினுலேயே முத்திகிடைக்கும். உன்னிடம் தேவர்களும் முனிவர்களும்தபஞ் செய்து கேதாரேஸ்வரனைப் பூசித்து வருகின்றனர். நீயேபுண்யசாலி; சகலர்களாலும் பூசிக்கத்தக்கவன். உன்னிடம் பார்வதிபிறந்தனள். இவள் எமது பரமப்பிரீதியான சக்தியன்ருே? இத்தேவியின் கடாக்ஷ லேசத்தினுலன்ருே ஸ்தாவரசங்கமமான இப்பூமியெல்லாமுண்டாகிறது? இத்தேவியைப் பூசிப்பதனுலன்ருே சகல தேவர்களு முத்தியடைகின்றனர்? இவற்றிலாலோசனை யுண்டோ? இவ்வருஞ்சிறப்பினையுடைய சக்தியை உன்மகளாகப்பெற்றபுண்ணியனுகையால் நீ இப்போதுபெறவேண்டிய வரங்களைப்பெற்றுக்கொள்வாய். நீ சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து அருச்சித்தபடியால் சந்துஷ்டராயினேம். நீமுக்தனுய்விட்டனையென்றருளஹிமவான் அவ்வருண்மொழிகளைக்கேட்டுச்சந்தோஷமடைந்து நமஸ்கரித்து சிரசின்மேற் கைகூப்பி ஆனந்தக்கண்ணீர் சொரிந்து புளகாங்கிதங்கொண்டு ஓ பிரபுவே! தேவரீரது பாததரிசன மானபின்னர் எனக்குவேண்டியதும் ஒன்றுண்டோ? அதனினும் பெரிதான பொருளுமொன்றுண்டோ? அளவிறந்தசிவபுண்ணியங்களைச் செய்தாலும் ஒரேகாலத்தில் கைலாயத்தில் வசிக்கவும் தேவரீரைச் சமீபிக்கவும் தேவரீரதுதிருவருளைப்பெறவும் முடியுமோ? நான் தேவரீரது அநுக்கிரகத்தால் யாவுங்கிடைக்கப் பெற்றவனுயினேன். இப்பொழுது ஒன்றுவேண்டுகிறேன். பார்வதிதேவி என்னேடும் மேனையோடும் மைநாகனேடும் வசித்துக்கொஞ்சகாலம் கேதாரரேஸ்வரரைப் பூசித்துக்கொண்டிருந்துவரவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன். பெண்தாய்வீட்டுக்குவருகிற முறை உலகிலுண்டன்ருே? அன்றியும் தூர்வாசர் கடினமானதபஞ்செய்து சைவசிரேஷ்டர்களோடு பஸ்மருத்திராக்ஷதாரியாய் பஸ்மத்தில் சயனிக்கிறவராய் ருத்திரஜபஞ் செய்கிறவராய்

மூன்றுகாலத்தும் வேறெவ்விடத்தும் மனதைச்செலுத்தாமல் தேவரீரிடத்திலேயேவைத்துக் கேதாரலிங்கத்தைப்பூசிக்கின்றவரா யிருக்கின்றார். ஆகையால் அடியேனது சிகரத்தில் வசிக்கும் அவருக்கு அநுக்கிரகஞ்செய்யவேண்டு மென்று இமவான் வேண்டும்பொழுது இறைவன்தேவியைநோக்கி ஒபார்வதியே! உன்தந்தை உன்னையழைத்துக் கொண்டு போகவும் கேதாரலிங்கத்தைத் தரிசனஞ்செய்விக்கவும் பிரார்த்திக்கின்றான். எம்மாக்ஞையால் தூர்வாசனும் கேதாரத்தில் தபஞ்செய்கிறான். ஆகையால் நீ சென்று தூர்வாசனையும் உன்தாய்தந்தை சகோதரன் முதலியோரையும் கிருதார்த்தர்களாகச்செய்வாய். சூரியன்போல்பிரகாசிக்கிற விமானத்திலேறிக்கொண்டுகணேசர்களாலும் பர்வதேந்திரர்களாலும் சேவிக்கப்பட்டவளாய் ஹிமவானது கிருகம்போய்ச்சேர்ந்து முனிஸ்ரேஷ்டனை தூர்வாசனை அநுக்கிரகித்து கேதாரேஸ்வரரையும் பூசித்து ஹிமாலயத்தில் பிரகாசிக்கும் கங்கையில் ஸ்நானம்செய்து உல்லாசமாய்க் காலஞ்செலுத்துவாய். நீ இப்பொழுது எம்மைப் பிரிவதாக எண்ணற்க. நீ ஒரு அம்சத்தால் எம் பக்கலில் வாசஞ் செய்து எம்மை மகிழ்வித்தும் ஒரு அம்சத்தால் உன்தந்தையுடனிருந்து அவனை மகிழ்வித்தும் இவ்வண்ணஞ் சில நாள் கழித்து, பிறகு இங்கு வந்துசேர்வாயென்றருள தேவியார் மஹாதேவரைநோக்கிஇப்போது தேவரீர் கூறியது என்மனதுக்கு மிக்கசந்தோஷத்தைத் தருகிறது. தேவரீர் கட்டளைப்படிசெய்கிறே னென்று பணிந்துதேவரீரதுபக்தரான தூர்வாசர் எதற்குத்தபஞ் செய்கிறார்? அவர்தவஞ் செய்யும் வண்ணம் எவ்வண்ணம்? அதனைக்கேட்க ஆவலுள்ளவளா யிருக்கின்றே னென்று பிரார்த்தித்தனரென்றனர்.

இருபத்தாறும் அத்தியாயம்.

முற்றிற்று.

உ

ஸஹிஷ்ணவே நம:

# இருபத்தேழாம் அத்தியாயம்.

௭

## தூர்வாச தபோவர்ணனம்.

ஸ்கந்தர்கூறுகின்றார். ஒஜைகிஷவ்யரே! என்னப்பன் என்னம்மை கேட்டவாறு சொல்லத்திருவுளங் கொண்டு ஒ பார்வதியே! பஸ்மருத்திராக்ஷதாரியாகிய தூர்வாசமுனிவன் பதினாயிரம் வருடம்

தவம்புரிந்தான். பின்னர் ஒருவருஷம் அதிகஆகாரமில்லாமலும்ஒரு வருஷம் ஜலத்தில் நின்றும் ஒருவருஷம் இலைகளைத்தின்றும் ஒருவருஷம் வாயுவைப்பட்சித்தும் ஒருவருஷம் பஞ்சாக்னிமத்தியினின்று புகையையாகாரமாகக் கொண்டும் ஒருவருஷம் பூமியில் ஒருகையை யூன்றிக்கொண்டும்ஒருவருஷம்தலைகீழாய்நின்றுபஞ்சாக்ஷரத்தைஜபித்துசதாசிவமூர்த்தியைத்தியானித்தும்ஒருவருஷம்கால்களைமரத்தில் மாட்டித்தலையைக்கீழே தொங்கவிட்டும் பிரமவிஷ்ணுக்களுஞ் செய்யக்கூடாததவத்தைச்செய்து வந்தனன்.இப்படி ஒருவராலுஞ்செய்யப்படவில்லை.இதுவுமன்றித்தூர்வாசன் அவ்வாறான அரியதவங்களைச் செய்ததுமன்றிப் பில்வங்களாலும் புஷ்பங்களாலும் எப்போதும் சிவலிங்கார்ச்சனை செய்தனன். அவனுக்கு வைராக்ய புருஷர்களான அநேகசீடர்களிருக்கின்றனர். அவரெல்லாம் பஸ்மதிரிபுண்டர தாரிகளாயும் கிருஷ்ண ஜனந்தரித்தவர்களாயும் லிங்கார்ச்சகராயும் குருசிஸ்ருஷையில் ஆவலுள்ளவராய்அவனுடைய சிவார்ச்சனைக்குவேண்டியவற்றைச்செய்யும் நியமத்தைமேற்கொண்டவராயுமிருந்தனர்.இவ்வாறு அநேக சிவாலயங்களுள்ளதாயும் ருஷிகளுக்கெல்லாம் வாசஸ்தானமாயும் நானாவிதபக்ஷிமிருகங்களோடுகூடினதாயுமிருக்கின்றசதசிருங்கபருவதத்தில் சிஷ்யர்களுடன் சிவார்ச்சகனாயிருக்கின்ற தூர்வாசனுக்கு நானனுக்கிரகஞ்செய்ய ருஷபாரூடனாய்ச் சென்று அவனைப்பார்த்துஆச்சரியமடைந்து ஓ தூர்வாசமுனியே!நீதபசுக்குஸ்தானமாயிருக்கின்றாய்.சமுத்திரம் போலும் மிக்கதைரியமுள்ளவனாயிருக்கின்றாய். பர்வதம் போல் அசைக்கக்கூடாததவநிலைமையுடையவனாயிருக்கின்றாய். உனக்குச் சமானமானவ ரொருவருமில்லை. கீர்த்தியே தனமாகவுடையவன். அப்படிப்பட்ட நீ செய்த தவத்தைக் குறித்துநாம்வந்தோம். இனிநீவேண்டியவரத்தைக் கேட்பாயென்று யாங்கேட்க அவன் அப்போது எம்மை வேதாந்தார்த்தத்தால் தோத்திரஞ்செய்தனன். ஓ பார்வதி! அது எமக்கு மிக்க பிரியமானது. அதனைக் கேட்பாயாக.

அந்தர்திருஷ்டியுள்ளவர்களது தகரகுகையில் வசிக்கும் சிம்ஹம் போன்றவனே! புகையற்றசோதியாயுள்ளவனே!ஸ்தோத்திரம் செய்கின்றவரது சகல பாவங்களையும் அகற்றுபவனே! எம்மையும் எமது குழந்தைகளையும்குதிரை பசுமுதலியவைகளையும் ஹிம்சியாது எப்போதும் சுகமாயிருக்கும்படிகாக்கவேண்டும். ஓபகவனே! எவர் தேவரீரது நீலகண்டமும் உமாசகாயமுமாகிய திருவுருவத்தைத் தம் மனதில்பக்தியோடு சிந்தித்திலரோ அல்லதுவில்வத்தால் அர்ச்சித்தி

லரோ அவர்கள் நாவினால் மலத்தைப் புசிக்கின்றவ ராவர். எவர் தேவரீரைஉள்ளத்தில்ஏற்றுக்கொள்கின்றனரோ அவர்சுவைநிறைந்த போஜனமுதம் புசிக்கின்றவராவர். தனக்கோர் நாதனில்லாதவனும் ஈசானனும் ருத்திரத்தில் நமஃ நமஃ என்று எண்ணிறந்த நமஸ்கார சப்தங்களாற் போற்றப்பெற்றவனும் உருத்திராணியோடு கூடிய வனும் ஆகிய தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். விளங்கும் சந்திரகலை யுடையோனும் பூர்ணசந்திரன்போன்றவனும் சகல பக்தர்களாலும் பூசிக்கப்படும் லிங்கஸ்வரூபனும் ஆகிய தேவரீரை வணங்குகின் றேன். தேவரீரே சகலஜகத்துக்கும் சுகமளிக்கின்றவரன்றோ? பந்து வும் பிதாவும் மாதாவும் தேவரீரே. எனது மனோவியாதியை நீங்கச் செய்யும். இறைவனே! தேவரீரை நமஸ்கரிக்கின்றேன்.

ஓ பார்வதீ! தூர்வாசன் செய்ததோத்திரமாகிய இவ்வஷ்டகத் தைக்கேட்டு நாம் சந்தோஷமடைந்திருக்க முனிவன் எம்மை நமஸ் கரித்து ஓ பரசிவப்பிரபோ! நான் கைலாயத்துக்குத் தினம் வந்து போகவும் சர்வலோகத்திலும் வாசஞ்செய்யவும் கோபத்தால் சபித் தாலும் எனது தவம் குறையாமலிருக்கவும் வரங்கொடுக்கவேண்டு மென்று பிரார்த்தித்தனன். நாமப்படியேகொடுத்து அநுக்கிரகஞ் செய்து விட்டோம்.பின்னொருநாள்சோமநந்திவிஸ்வநந்தி முதலான கணங்களால் சிவகானஞ்செய்ய நாம் நிருத்தஞ் செய்திருக்குஞ்சமய த்தில் தூர்வாசன் கைலாயத்தில் கைலாயலிங்கமூர்த்தியைத் தரி சனஞ்செய்து அவ்விடத்தில் தூர்வாசேஶ்வரரென்று தன் பெயரா ல் ஓர்சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து அந்த மூர்த்தியை மூன்றுகால மும் பூசித்துத்தனது சீடர்களோடு மெம்மைத்தரிசிக்கவந்தான். எம் மைத் தரிசிக்க எப்போதுவந்தாலும் அவனுக்கு நாம் முடிவில் பில் வபத்ரம் புஷ்பம்சந்தனம் எங்கையால் கொடுத்தனுக்கிரகிப்பதுவழக் கம். ஆதலால் அதுபோலன்றுங் கொடுத்தேம். அவன் அவற்றைவா ங்கிச்சிரசிலுங்கண்ணிலும் ஒற்றிக்கொண்டான். இவ்வண்ணம்இவை இதரர்களுக்குக்கொடுக்கத்தகும் நிர்மாலியமன்று. நிர்மால்யங்கிடை ப்பது துர்லபம். தூர்வாசன் மஹாபக்தனுகையால் நாம் அநுக்கிர கத்தால் கொடுத்தேம். ஓ பார்வதீ! அவன் எமது பிரசாதத்தைப் பெற்றுத்திரும்பிப்போகிற சமயத்தில் ஐராவதத்தின்மேல் வச்சிர பாணியாகிய இந்திரன் சசிசகிதனாய்ச் சத்ரசாமரங்களுடன் நடிக் கின்ற அப்சரஸ்திரீகளோடும்வரக்கண்டு அவனுக்குத்தன்கையிலிருந் ததின்மாலியமாகியபுஷ்பமாலையைக்கொடுத்தான்.அவன் அந்தமாலை யையும் முனிவனையும் லக்ஷியஞ்செய்யாமல் அங்குசத்தால் மாலை

யைவாங்கி யானையின் மத்தகத்தின்மீது போட்டு விட்டான். அந்த யானை அம்மாலையையிழுத்துத் தனது ஜாதிதர்மம் விடாமல் கன்னத்திலும் கழுத்திலும் அடித்துக்கொண்டது. செல்வத்தால் மதத்தவனாகிய இந்திரனும் சரீரத்தால் மதத்ததாகிய ஐராவதமும் செய்த செயல்களைக்கண்டு கோபங்கொண்டு ஓ தேவேந்திரனே! உனக்குக் கிடைத்திருக்கும் செல்வச்செருக்கால் சிவப்பிரஸாதத்தை யெண்ணாது கீழே போட்டுவிட்டனையல்லவா? இந்த ராஜ்யமும் சம்பத்தும் உன்னைக்கீழேதள்ளப்போகின்றது. சுரர்களுடையமத்தியில் சுகமுற்றிருந்த இந்தயானையும்அசுரர்மத்தியிலகப்பட்டுச்சுகமற்று வருத்தப்படப்போகின்றது.உனதுஅற்பவறிவைநோக்காது செல்வப் பெருக்கைநோக்கி உனக்குபதேசஞ்செய்தபிரகஸ்பதியாகிய துஷ்டனும்சகலதேவர்களோடு துக்கத்தை யடையக்கடவனென்று சபித்தனன். அதனைக்கேட்டஇந்திரன்யானையை விட்டிறங்கி முனிவர் பாதங்களில் நமஸ்கரித்து இந்திராணியாலும் குருவாலும் அபராதத்தைக்க்ஷமிக்கும்படிவேண்டிக்கொண்டு ஓ முனிவரே! என்குற்றத்தைப் பொறுத்துச்சாபமுடிவைக்கூறுவீர். ஓ சாபாநுக்ரஹ சாமர்த்தியமுடையவரே! நீர் க்ஷமிப்பீராயின் இட்டசாபத்தைத்தடைசெய்யமுடியும். சிவப்பிரசாதமகிமை யுணராமல் தேவரீருக்குக் கோபமுண்டாகும்படி இவ்வபராதச்செயலைச்செய்து விட்டேனென்றுபிரார்த்திக்கமுனிவர் அவனை நோக்கிக் கர்வத்தினாலென்னை மதிக்காமலும் நமஸ்கரிக்காமலும் நான் கொடுத்த சிவப்பிரசாதத்தைக் கௌரவிக்காமலும் அவமதித்த படியினாலன்றோ யான் சபித்தேன்? அது பொய்யாகமாட்டாது. ஆதலால் நீ சகலதேவர்களோடும் இமயமலையடைந்து அநேகவருடம் தவம்புரிந் திருப்பையாயின் உனக்குப் பலமுண்டாய் அப்பலத்தினாலேயே இப்போது ஆக்ரமிக்கப்படும் ராஜ்யத்தை யடையக்கடவாயென்று சொல்லித் திரும்பிவிட்டான். அவன் சொல்லியவண்ணமே தேவராஜ்யம் பலிச்சக்கரவர்த்தியினா லாளப்பட்டதாயிற்று. இந்திரன் ஹிமாலயமடைந்து தவஞ் செய்திருந்து அநேக நாள் கழித்து குருவோடும் மனைவியோடும் தேவர்களோடும் கேதாரத்தையடைந்து கேதாரேஶ்வரரைப் பூசித்து சிவாபராதத்தைப் பரிகரித்துக்கொண்டு அப்பெருமானது அநுக்கிரஹத்தால் அமராவதியை முன்போலடைந்தனன். நமதுபக்தனான தூர்வாசமுனிவன் சிவப்பிரசாதத்தைப் பக்தியில்லாதவனுக்குக்கொடுத்து அப்பிரசாதத்துக்கு அவமதிப்பைவிளைத்தோமே! இது பாபமல்லவாவென்று அப்பாபத்தைப் போக்கிக்கொள்ள மறுபடியும் இப்போதி

மயமலையில் தவஞ்செய்துகொண்டிருக்கிறான். ஓதேவி! தூர்வாசன் இமயமலையில் தவம்புரிதற்குக்காரணமிதுவென்றறிவாய்.இப்போது அவன்உன்பாததரிசனத்தால் பாபமில்லாதவனாகப் போகின்றான்.ஓ அம்பிகாதேவி!சைவர்களாகிய பக்திமான்களால் நமதுநின்மாலியம் கொள்ளப்படலாமே யன்றி அசைவர்களான பக்திஹீனர்களால் கொள்ளத்தக்கதல்ல. ஆகலான் எம்மையாராதிக்கும் அன்பர்கள் எம்மாலனுபவிக்கப்பட்ட சந்தனம்புஷ்பம் பக்ஷயம் அன்னம் பழம் முதலானயாவையும் எமது பக்தர்களையறிந்து கொடுக்கவேண்டுமே யன்றி எம்பால்பக்தியில்லாத இதரர்களிடத்தில் செல்வமுதலான வற்றையறிந்து கொடுக்கக்கூடாது. இப்படியே எமது நின்மால்யத் தைப்பார்ப்பதற்கும் அநுபவிப்பதற்கும் பக்ஷிப்பதற்கும் சாம்பவர் களே யோக்யமானவர்களன்றி யேனையோரல்லரென்று முன்னமே சொல்லியிருக்கின்றோம். அசாம்பவனுக்குக்கொடுத்து மகாதாபத் தையடைந்ததூர்வாசன் எமக்கு மிகப்பிரியமானவன். அவனைப்போ ல்பிரியமானவர்வேறொருவரும் எமக்குக்கிடையாது. சத்தியமாய்ச் சொல்லுகின்றேம். அப்படிப்பட்டவனே இந்திரனைஅசாம்பவனென் றுணராதுசெல்வத்தை நோக்கிக்கொடுத்துப்பாபத்துக்காளாய்த்தவ ஞ்செய்வனாயின் ஏனையோர்செல்வத்தை நோக்கிக் கொடுப்பாராயின் அவர்கள்யாது செய்யப்படவேண்டுமோ அதனை ஓதேவியே! நீயே அறிவாய். ஆதலால் நீ எமதன்பனான தூர்வாசனுக்கு அநுக்கிரகஞ் செய்து திரும்பிவருவாயென்று ஆக்ஞாபித்தனர். தேவி ஜகதீஸ்வர னது ஆணையை நினைத்துத் தமதம்ஸத்தினின்றும் ஓர் திருவுருக்கொ ண்டுபுறப்படச்சித்தமாயினர்.

இருபத்தேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸததோதிதாயநம:

## இருபத்தெட்டாம் அத்தியாயம்.

### தேவி ஹிமால யாகமனம்.

சூதர்கூறுகின்றார். ஓ முனிவர்களே! ஸ்கந்தமூர்த்தி அம்பிகை புறப்பட்டா ளென்று சொல்லவே ஜைகிஷவ்யமுனிவர் அம்பிகை எப்படிப் புறப்பட்டாள்? எவ்வாறு தூர்வாசருக்கனுக்கிரகஞ் செ ய்தாள்? தேவி எப்படி கேதாரேஸ்வரரைப் பூசித்தாள்? எவ்வாறு

தேவியை ஹிமவானும் மேனையும் பூசித்தார்கள்? எவ்வளவுகாலம் அங்குவசித்தாள்? தேவர்கள் அங்கு எப்படித் தவம் புரிய வந்தனர்? ஓ ஹிமவானது பௌத்திரரே! இவையாவுஞ் சொல்லியருளுமென்று கேட்க ஸ்கந்தர் திருவாய்மலர்ந்தருளுகின்றார். ஓ ஜிதேந்திரியரே! ஈஸ்வரபாதார்ச்சகரே! உம்மிடஞ் சொல்லத்தகாதது ஒன்றுங் கிடையாது. மஹாதேவரது திருவுள்ளப்படி தேவியார் கிரீடை முதலியன செய்து நீண்ட நாள் கழித்த பிறகு கேதாரத்துக்குப் போகவேண்டுமென்கிற எண்ணங் கொண்டவராய் மகாதேவரை நோக்கி ஓ என்னுயகனே! கேதாரலிங்கத்தைப் பார்ப்பதற்கு மேனையும் ஹிமவானும் என்னை யழைக்கின்றார்கள். தூர்வாசரும் ஜிதேந்திரியராய்ச் சிவலிங்கார்ச்சகராய்அரிய தவம்புரிந்து வருகின்றார்.ஆகலான் தேவரீர் முன்சொல்லிய கட்டளைப்படி அவருக்கு அநுக்கிரகஞ்செய்துகேதாரலிங்கத்தைத்தரிசித்துஹிமவானையுஞ் சந்தோஷிப்பித்து பின்னர்அங்குள்ளபூமிகளையும்தோழிகளோடுபார்த்திங்குவருகிறேன். உத்தரவாகவேண்டுமென்று பிரார்த்திக்க பார்வதிப்பிரியனாகிய பரமசிவன்அப்பிரார்த்தனையைக்கேட்டு வாடினமுகமுடையவராய்த்தேவியைப்பார்த்துநீஇன்றையதினம்இம்மணிக்கிரகத்தில்எம்முடன் கிரீடித்திருந்து நாளைக்காலையில் அவ்வாறேபோகலாம். உன்தேகத்தில் ஒரு சக்தியைச் சிருட்டிசெய்யென்று சொல்ல அவ்வாறே அம்பிகை அப்போதுதித்த சந்திரன்போன்ற முகமுள்ளவளாயும் கருநெய்தற் பூப்போல்கண்ணுள்ளவளாயும்கோவைப்பழம்போல்உதடுள்ளவளாயும் ரத்னாரந்தரித்தவளாயும் மலர்ந்திருக்கின்றசெங்கழுநீர்ப் பூவைக் கையிற்பிடித்துக்கொண்டிருக்கிறவளாயும் பிரகாசிக்கிற காதோலையுடையவளாயும் சந்திரனைச்சிரசிற்றரித்தவளாயும் திலகந்தரித்த நெற்றியையுடையவளாயும் தோள்வளையையுடைய புஜமுடையவளாயும் ஒட்டியாணமணிந்தஇடையுள்ளவளாயும்மோதிரமணிந்தவிரலுடையவளாயும்தண்டைசதங்கைகள்பிரகாசித்துச்சப்திக்கின்றபாதங்களையுடையவளாயும் திவ்யமானவஸ்திரம் சந்தனம் தாம்பூலந்தரித்தவளாயுமுள்ள ஓர் அழகிய மநோன்மணியென்னும் சக்தியைச்சிருஷ்டித்து அச்சக்தியை மநோன்மணீஸ்வரரென்னு மிலிங்கப்பிரதிஷ்டை செய்யச்செய்து பின்னர்ச்சகலவுபசாரங்களோடும் ஆராதிக்கவுஞ்செய்வித்து வாசாமகோசரா! மநோன்மணீசா! தேவேசா! வ்யோமகேஶா! சகிதாமமௌளே! இந்திரியாதிரஹிதா! பிரணவப் பிரகாசா! (தயையினால்ரக்ஷிப்பாய்) பாலார்த்தகாத்ரா! ரமணீயசடோருகங்கா, துங்கோத்தமாங்கா! சசிதாமலலாமா! சம்போ! விஸ்வேசா! விஸ்வா!

மதனுந்தகாரா! தயைசெய்யும். கைலாசவாசா! நிகிலாகமதத்வசாரா! என்று துதிக்கவுஞ்செய்து அம்மனோன்மணியை மஹாதேவரிடம் அழைத்துக்கொண்டுபோய் நமஸ்காரஞ்செய்வித்து மஹாதேவரை நோக்கி ஓ சுவாமின்! தேவரீரது ஆக்ஞையின்படி என்னாலுண்டு செய்யப்பபட்ட இவள்தேவரீரது இடப்பாகத்தில் வசித்திருப்பாள். இவளுக்குமனோன்மணியென்று பெயர். தேவரீரெங்கிருக்கின்றீரோ அங்கெல்லாமிருப்பாள். ஆதலால் தேவரீர் ஆகார சயன லீலா காலங்களில் இவளோடு பிரீதியாயிருக்கப் பிரார்த்திக்கின்றேன். இக்கைலையில் இவளைத்தேவரீரதுசந்தோஷத்துக்கேசிருட்டித்தேன். இவளதுபெயரால் லிங்கமும் ஸ்தாபிக்கப்பட்டது. அதில்நீர்வாசஞ்செய்யவேண்டுமென்றுகூற உமாநாதனுர் ஆனந்தமுடையவராய்மனோன்மணியையும்அவளதுஇலிங்கப்பிரதிஷ்டையையும்பார்த்து ஆலிங்கனஞ்செய்துஇடப்பாகத்திற்சேர்த்துநான்குவிதமான அன்னத்தைசொர்னபாத்திரத்திற்புசித்தனர். பின்னர்ப்பிரியநாயகியைஸ்நானமுதலியனவும் அலங்காரமுஞ்செய்வித்து நந்திதேவரைப்பார்த்து பார்வதியைத் திவ்யாலங்காரத்தோடுகூடிய ரத்னவிமானத்திலேற்றிச் சகலகணங்களோடும் ஹிமாலயத்தையடைவிக்க வேண்டும். போகிறஅவ்விடங்களில் சுகமானபக்ஷ்யபோஜ்யங்களால்இவளையுபசரித்துக் கொண்டேசகலரையும்ஸ்ரமமில்லாமலழைத்துப்போகவேண்டும். விமானத்தைச்சீக்கிரத்திலலங்காரஞ் செய்து தேவியைப் பிரயாணப்படுத்தென்று ஆக்ஞாபிக்க நந்திகேஸ்வரர் விமானத்தை அலங்கரித்துக் காண்பிக்க இறைவனுர் தேவியைப்பார்த்து ஓ பார்வதீ! இவ்விமானமூர்ந்து சகலகணங்களோடும் போய்வருவாயென்று கட்டளையிட்டனர். அம்பிகையும் மகாசந்தோஷத்தோடு சிவபெருமானைத்தழுவி மனோன்மணியைப்பார்த்து ஓ தேவி! நீ எப்போதும் சிவாக்ஞையைச்செய்யகின்றவளாய்ச் சயனம் ஆகாரம் முதலியவைகளில் பிரபுவின் சித்தத்தை யநுசரித்து நான் வருகிற காலத்தை யெதிர்பார்த்திருப்பாயாக வெனக் கட்டளையிட்டனள். மனோன்மணி தேவிபாதத்தில் வணங்கதேவிஅவளை உச்சிமோந்து பிறகுபரமசிவன்சிறிதுதூரம்வழிவிட்டுநிற்க அம்பிகை தோழிகளோடும் சத்ரசாமரங்களோடும் புறப்பட்டாள். அப்போது சிலர் புஷ்பத்தையிறைத்தனர். சிலர்நிருத்தஞ்செய்தனர். சிலர் ஜயஜயவென்றுசொல்லிவாழ்த்தினர். அப்போது அம்பிகை தன்னைப்பிரியாது தொடர்ந்துகொண்டு வருகிறமனோன்மணியைப்பார்த்து நீமகாதேவரிடம்போவென்றனுப்பிவிட்டு விமானத்தில் கணேசஸ்கந்த நந்தி ஹிமவான் மேனை மைநாகன் முதலானவர்

களோடேறி ஹிமாலயத்துக்குப்புறப்பட்டனள். ஹிமாலயம் போகி றபரியந்தம் கைலாயசிகரத்தைப் பார்த்து நமஸ்கரித்துக்கொண்டே தூரத்திற்றெரிகிறகேதாரசிகரத்தைக்கண்டுநமஸ்கரித்தாள். ஹிமவா ன்சிலகணங்களைத்தன்வீட்டையலங்கரிக்கமுன்னதாகவனுப்பினுன். அவர்கள் ரத்னதோரணங்களாலும் தீபவரிசைகளாலும் சந்தனபுஷ் பங்களாலும் கோலங்களாலும் நகரையலங்கரித்துக் கேதாரீஸ்வர னுக்குச் சந்தனக்காப்பிட்டு சர்ப்பாபரணஞ்சாத்தித் தாமரைமலர் மாலைபில்வமாலைமுதலியவையுஞ் சாத்தினுர்கள். பிரம்மவிஷ்ணுவாதி தேவர்களும் அவர்களுடையதேவிகளும்வந்து வணங்கினுர்கள். அப் சரஸ்திரீகள் நிருத்தஞ் செய்தார்கள். கந்தர்வர் கானஞ்செய்தா ர்கள். முனிவர்தோத்திரஞ்செய்தனர். இவ்வாறு யாவருந்துதிக்கப் பார்வதி ஹிமவானுடைய மாளிகையி லேறி மேனையால் நீராஞ் சனஞ்செய்ய வுள்ளேசென்றனள். செல்லும்போது கணேசர் மு தலான கணங்களைக் கைலைக்குப்போம்படி வுத்தரவு செய்ய அவ் வாறே அவர்களுஞ்சென்று இறைவனுக்குத்தேவிவிருத்தாந்தத்தைச் சொன்னுர்கள். தேவியும் தாய்தந்தையரோடுசந்தோஷித்திருந்தாள். சிவபெருமானும் பார்வதி எப்போது வருவளென்றெதிர்பார்த்துக் கொண்டு மநோன்மணியோடுரமித்திருந்தனர். ஈஸ்வரசம்பந்தமான இக்கதையைக் கன்னிகைகேட்டால் சௌபாக்கியத்தையும் அக்ஷயமா னதனத்தையும் பெறுவாள். ஏனையோர் கேட்பாராயின் பூலோகத்தில் சிவபாத பூசைசெய்கின்றவர்களாய்க்கஷ்டத்தினின்றும் நீங்கினவர் களாய் எப்போதும் பந்துக்களோடு சந்தோஷமடைந்தவர்களாய்ப் புத்திரபௌத்திர முடையவர்களாய் முடிவில்கணுதிபதிகளாய் வாழ் வார்களென்றருளினர்.

இருபத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

விகாதகாரிணேநம:

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்.

### தூர்வாசர்செய்த தேவீஸ்துதி.

ஸூதர்கூறுகின்றுர். ஸ்கந்தமூர்த்திஇவ்வண்ணஞ்சொல்லிவரும் போது அங்குள்ள கணங்கள் ஓ உமாசுதரே! தேவியார் ஹிமாசலத்

தை யடைந்ததைக் கேட்டுமகிழ்ந்தோம். இனித்துர்வாசர் எவ்வாறு தேவியினல் அநுக்கிரகம்பெற்றனர்? அவர் எவ்வாறு தேவியைத் தோத்திரம்புரிந்தனர்? இவற்றைக்கேட்போமாயின் இங்கிருக்கும் எல்லோருடைய பாபங்களும் நிவர்த்தியாய்விடும். ஓ பார்வதிப்ரிய நந்தனரே! எல்லோருங்கேட்கத் திருவாய் மலர்ந்தருளுகவெனப் பிரார்த்திக்க பக்வத்ஸலராகிய த்விஷண்ணேத்ரர் ஓ கணங்களே! அம்பிகையானவள் அவ்விமாலயசிகரத்திலும் ருஷிகளுடைய ஆஸ்ரமத்திலும் மேனையோடு விளையாடிக்கொண்டிருக்கும்போது பஸ்மம் நிறைந்தவர்களாயும் திரிபுண்டரதாரிகளாயும் ருத்ராக்ஷதாரிகளாயும் ருத்ரத்தை ஜபிக்கின்றவர்களாயும் பஞ்சாக்ஷர ஜபத்திலாவலுள்ளவர்களாயும் பஞ்சவக்த்ரரைத்தியானிக்கின்றவர்களாயும் சிவலிங்மூர்த்தியைப் பில்வத் தளிர்களால் பூசிக்கின்றவர்களாயும் கேதார க்ஷேத்திரத்தில் மனதை வைக்கின்றவர்களாயும் காமத்தை நிக்ரஹிக்கின்றவர்களாயும் புகை காய் காற்று கனி இலை முதலியவைகளையுண்டு தர்ப்பாசனத்தில் வீற்றிருக்கின்றவர்களாயு மிருக்கும் ருஷிசிரேஷ்டர்களால் நிறைந்திருக்கின்ற துர்வாசருடைய ஆச்சிரமத்தைக்கண்டு அந்த மேனையோடு திரிந்துகொண்டிருந்தனள். மின்னல்போ லுலாவிக்கொண்டிருக்கிற ஸதாசிவ குடும்பினியைத் துர்வாஸ முனிவர்கண்டு மகாதேவி யென்று நிச்சயித்து ஸ்ரீமாத்ரே (என்தாயே) அருள்க. வருவாய்வருவாயென்று நமஸ்கரித்து மேனையோடுகூட ஆசனமளித்து சகல ருஷிகளோடுந் தேவியை மதுபர்க்கத்தாலும் புஷ்பகந்த தூபதீபங்களாலும் பூசித்தனர். மிக்க அன்போடளித்தவைகளை அம்பிகைபெற்று ஆசனத்திலிருக்கும் போது துர்வாசமுனிவர் வணங்கி நானே புண்யவான். நானேபரிசுத்தன். யான்செய்த தபம்பலித்துவிட்டது. உன்பாததூளிதான் என் தபசினுடைய பலம். ஓதேவேஸ்வரி ! முக்திபாலெனக்குயாதுபயன். பக்தர்களுடைய இஷ்டங்களையெல்லாங்கொடுக்கிறவள் நீ. மகாமாயா சொரூபிணியான பராசத்திநீ. பிரம்மாதிதேவர்க்களுக்குத்தாயான தேவிநீ. மகாதேவனுடைய பாதிசரீரத்தில் வசிக்கிறவள் நீ என்று மிகவணக்கத்தோடுதுதித்து மீண்டும் ஓதாயே! பரத்தைக்காட்டிலும் பரமானவளே! மூன்று லோகசவுந்தரியமாகியசமுத்திரத்தைக்கடைந்தெடுத்த அமிர்தப்பெருக்குப்போலும் அப்போதுதித்த ஆயிரஞ் சூரிய கிரணம்போலும் செவ்வரத்தைப் புஷ்பம்போலும்காந்தியுள்ளதாய்ப்பிரகாசிக்கின்றவுனது திருமேனி என் சித்தத்தில் விளங்குக. மூன்றுலோகத்துக்குந்தாயான தேவியே! உனது திருவுருவமானது என் மனதில்பிரகாசிக்கவேண்டும் என்று தோத்திரஞ் செய்தனர்.

இந்தத்திரிபுர சுந்தரியின் தோத்திரத்தை எவன் படிக்கின்றானோஅவன் சகலபாபங்களாகிறகாட்டிக் குத்தியானவனும்சகலகோரிக்கைகளையும் அடையப்பெற்றவனும் நானாவிதமானசம்பத்துகளுக்குஸ்தானமாயிருக்கிறவனும் தனக்கிடில்லாதவனும் விளங்குவான். சங்கீதத்தையும்சரசகவித்துவத்தையும் வேதார்த்தவியாக்யானத்தையும் உன் பாதகமலத்தோடு கூடியமனதையும் எல்லாமறிந்தவனாயிருப்பதையும்பெருந்தன்மையடைந்திருப்பதையும்அடைவான். அன்றியும்காரியத்தில்சாமர்த்தியத்தையும்தனதுகிருகத்தில்சம்பத்துவிருத்தியையும் சரீரத்தில் சௌந்தர்யத்தையும் லோகத்தில் பிரகாசத்தையுமடைந்து வித்வானும் கவீஸ்வரனும் அநேக ராஜாக்களுடைய கிரீடத்திலிருக்கிற புஷ்பசரங்களுடைய தூள்களினால் வியாபரிக்கப்பட்ட பாதங்களையுடையவனும் வித்வான்களுள் புகழ்பெற்றவனும் சத்துருக்களை நாசஞ்செய்கிறவனுமாயிருப்பான். அன்றியும் சர்வவித்தையையுங்கிரகிப்பான். புதிதுபுதிதான தன்மகிமையினால் லோகத்தையெல்லாம் பிரகாசப்படுத்துவான். வித்வத்தையும் ஞானத்தையும் கௌரவத்தையும் அடையக்கூடாத யோகமார்க்கத்தையும் தேஜஸையும் ஆயுளையும்அட்டசித்திகளையும் கைலாயம் போல் கீர்த்தியையும் பூலோகத்திலடைந்து பின்பு பரமசிவனுடைய சிதாகாசமான பிரம்ம சொரூபத்தையுமடைவான். ஓ தேவியே! அக்னி எக்ஞகுண்டத்தில் பிரகாசிப்பதுபோல் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கின்றதல்லவா? அதுபோல் உன் சொரூபமானது மிக்க வுயர்ந்தவர்களிடத்தும் நீசர்களிடத்தும் பிரகாசிக்கின்றதென்று பலஸ்ருதியையுங் கூறியருளினர். பதினொன்கு வித்யாசொரூபியாயும் அறுபத்துநான்கு கலாஸ்வரூபியாயும் மன்மதஸ்வரூபியாயும் சத்துக்களை யநுக்கிரகிப்பவராயும் அசத்துக்களை நிக்ரஹிப்பவராயும் பூலோகத்தில் அவதரித்த பகவத் அம்சமானவராயும் சகல உபநிஷத்துக்கும் முதலாசிரியராயும் பிரகாசிக்கின்றவராகிய தூர்வாச முனிவர் தோத்திரஞ்செய்ய அதைக்கேட்ட பார்வதி மேனையோடு சந்தோஷமடைந்து மகா பரிசுத்தரான அம் முனிவரைப்பார்த்து உனது சிறந்த ஸ்துதிக்கும் உனது தபசுக்கும் நான் சந்தோஷமடைந்தேன். உனக்கென்ன இஷ்டமுண்டோ அவ்வளவையுங் கேட்பாயாகவெனத் திருவாய்மலரத் தூர்வாசர் நமஸ்கரித்து ஓ தேவீ! உன் பாதங்களில் பக்தியும் கைலாயத்தில் சிவதரிசனமும் எனக்கு எப்போதுங் கிடைக்கவேண்டும். ஈஸ்வரனுடைய பாதபூஜையைத் தவிர யான் வேண்டுவ தொன்றுமில்லை. ஓமஹேஸ்வரியே! அதனை

லேயே சர்வகாமமும் அடையலாம். யான் கேதாரலிங்கத்தை அபி டேகஞ்செய்ய ஒரு நதியை யுண்டுசெய்யவேண்டுமென்று பிரார்த் தித்தனன்.இப்படித் தூர்வாசர் பிரார்த்தனையைக்கேட்ட தேவி உன் னிஷ்டம்போல் முடியுமென்று சொல்லிக் கங்கையை அப்பர்வத சிக ரத்திலிருந்துவெளிப்படுத்தினள். தேவியும் அக்கங்கையில் ஸ்நானஞ் செய்து கேதாரீஸ்வரனை அருச்சித்து ஹிமவான் வீட்டிற்கு வந்த னள். தூர்வாசரும் அந்நதியைக்கண்டு மகிழ்ந்து அதில் ஸ்நானஞ் செய்து அருச்சித்துக் கைலாயத்தையடைந்து சிவபெருமானிடம் பார்வதியாரால் தாம் பெற்றவரத்தைச் சொல்லி வணங்கி ஆனந்தத் தால் மெய்ம்மறந்து ஓமஹேசனே! விஸ்வேசனே! சம்புவே! தயை செய்வாயென்று சொல்லிக்கொண்டே கூத்தாடச் சிவபெருமான் முனிவரைக்கருணையோடும் பார்த்து நீயே புண்யவான். நீ கைலா யத்தில் வசிப்பாயென்றனுக்கிரகித்தனர்.

இருபத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
விஷ்வக்த்ருஸேநம :

## முப்பதாம் அத்தியாயம்.

### தேவஸ்திரீகள் தேவியை யடைந்து துதித்தல்.

தூர்வாசானுக்கிரகத்தைக்கேட்டகணங்கள் ஓ ஸ்கந்தமூர்த்தி! தூர்வாசரது சரிதத்தைக்கேட்டோம். இனித்தேவி ஹிமவான் வீட் டில் என்ன செய்தாள்? மேனையும் ஹிமவானும் எப்படித்தேவியைப் பூசித்தார்கள்? அந்த அற்புதங்களையுங்கேட்விரும்புகின்றேமென்று கேட்க ஸ்கந்தர் கூறுகின்றார்,தேவிதோழிகளாற் சூழப்பட்டவளாய் சில சமயம் சிம்ஹாசனத்தில் வீற்றிருப்பவளாயும் சிலநேரம் வனத் தில் சஞ்சரிக்கிறவளாயும் தனது தாய்தந்தைகளால் அன்னபானங் களாலும் பக்ஷ்யபோஜ்யங்களாலும் தூபதீபங்களாலும் சந்தன புஷ் பங்களாலும் சந்தோஷப்படுத்தப் பட்டவளாயும் காலங் கழித்து வந்தாள். இவ்வண்ணந் தாய்தந்தையர்களாலும் தோழியர்களாலும் சந்துஷ்டையாயிருக்கின்றதேவி ஒருநாள் வசந்தகாலத்தில்ஹிமாலய த்தில் புஷ்பம்பறிக்க ஆவலுள்ளவளாய் ஓர் ஏகாந்த விடத்தில் அ சோகவிருக்ஷத்தின் கிளையைப்பிடித்திழுத்துப் புஷ்பங்களைப்பறித்து

இறைவனை மனதில் நினைத்துக்கொண்டு தாமரைத்தடாகக்கரையில் வீற்றிருந்துசிவபெருமானை நினைத்துக் கனிவகைகளை நிவேதனஞ்செய்து மேனையை ஆலிங்கனஞ்செய்து சிறிது ஆகாரஞ்செய்துகொண்டு விசாரத்தால் மனவருத்த முடையவளாகவேயிருந்தனள்.பின்னர் சந்திரோதய காலத்தில் ஹிமாலயத்தின் உச்சியிலிருக்கிற மெத்தையில் சந்திரகிரணத்தால் மனவருத்தமடைந்து சாதி மல்லிகை முல்லை தாழை கமலம் இவைகளைப்பார்த்து அவைகளை உபயோகமற்றவைகளாக நினைத்தாள்.தென்றற்காற்றால் வீசப்பட்டவளாயிருந்தும் வியர்வையுள்ளவளாயிருக்க அதுகண்ட தோழிகளால் விசிறி முதலியவைகளா லுபசரிக்கப்பட்டும் மேனையால் பிரியஞ்செய்யப்பட்டும் வருத்தம் நீங்கினளில்லை. கட்டிலில்படுப்பளாயின் தூங்காமல் சங்கரரெங்கே சங்கரர் எங்கே யென்று விழித்துக் கொள்வாள். மற்றக் காலங்களில் தன்தாய் எப்பொழுது கைலாயதுக்குப் போவென்று சொல்லப்போகிறாளென் றெதிர்பார்த்திருப்பாள். பக்ஷிகளுடைய சப்தங்களும் காற்றுகளும் மேனையோடு பந்தாடுதலும் பழங்களைத்தின்பதும் ஆகிய இவையெல்லாம் என் னம்மைக்குப் பெருத்த கஷ்டத்தைவிளைவித்தனவேயன்றிச் சுகத்தை விளைவித்தனவில்லை. கண்ணாடியைப்பார்ப்பாளாயின் மூச்செறிவாள். இவ்வாறு பார்வதியாரிருப்பதை மலையரையன் குறிப்பினாலுணர்ந்து இனி நமதுபுத்திரியை இங்குவைத்திருத்தல் அழகன்றென்று கைலாயத்துக்கனுப்ப விசேடமாய் உபசாரங்கள் செய்துவந்தனன். அந்தச்சமயத்தில் தேவியைப் பார்ப்பதற்கு லக்ஷ்மி சரஸ்வதி சதி சுவாஹா ஸ்வதா அருந்ததிஅநசூயை கார்கி மைத்திராயணி ரோகிணி முதலிய நக்ஷத்திரங்கள் லோபாமுத்திரை மனோரமை நாக ஸ்திரீகள் கின்னர ஸ்திரீகள் புண்யதீர்த்தங்கள் ரம்பை முதலிய ஸ்திரீகள் மற்றுமுள்ளவ ராவயமடைந்து சந்தனம் புஷ்பம் பழம் முதலியவைகளைத் திருவடியில் வைத்து வணங்க அவைகளைத் தேவி அங்கீகரித்தாள். பின்னர் கந்தர்வஸ்திரீகள் கானமும் அப்சரஸ்திரீகள் நிருத்தமும் செய்தார்கள். கின்னரர்கள் வாத்தியம் வாசித்தார்கள். தேவதாஸ்திரீகள் பலமூலங்களாலும் மஞ்சள் குங்குமம் சிரேஷ்டமான சந்தனம் புஷ்பம் ஆகிய இவைகளாலும் பூசித்தார்கள். அப்படியே முனிபத்னிகளும் பூசித்தனர். அப்போது பார்வதியார் லக்ஷ்மி சரஸ்வதி முதலான தேவஸ்திரீகளையும் அருந்ததிமுதலான ருஷிபத்னிகளையும் குசலபிரஸ்னை செய்ய அவர்கள் தேவியைநோக்கி தயாரசத்தைத் தனமாகவுடையவளே! மலர்ந்த தாமரை மலர்போன்ற முகமுடைய

வளே!சாதி மல்லிகைமுதலான புஷ்பங்களாலலங்கரிக்கப்பட்ட கேச முடையவளே! சந்திரன்போல் பிரகாசிக்கின்ற கிரீடமுடையவளே! சம்சாரபயத்தை நீக்குகின்றவளே! உனக்கு நமஸ்காரஞ்செய்கின் ரோம். அழகாய் சப்திக்கிற பாதுகைகளையுடையவளே! தாமரை மலர்போல் சிவந்ததாயும் மருதாணியினால் அலங்கரிக்கப்பட்ட விரல் நுனிகளையுடைய உனது உபயபாதங்களைத் தேவகணங்களாகிய நாங்களெல்லாம் சிரசில் வகிக்கச் சந்தோஷமாய்க் காத்துக்கொண்டி ருக்கின்றோம். செந்தாமரையின் மத்தியிலுள்ள காந்தியைப்போன்ற கண்களையுடையவளே! உன் மலரடிகளை நமஸ்கரிக்கின்றோம். சகல லோகத்தாலும் துதிக்கப்பட்டவளே!சரணமடைந்தவர்களது பிடை யைத் தொலைக்கின்றவளே! நீ சர்வோத்கிருஷ்டையாயிருப்பாயாக. இனி மறுபடியும் உன் மலரடி தரிசனம் எங்களுக்கு எவ்விடத்தி லுண்டாகுமோ? உன் மலரடியைப் பூசிக்கும் புண்ணியம் எப்போ துண்டாகுமோ!சிவபெருமானது இடப்பாகத்தில் வாசஞ்செய்கிறவ ளே!எப்போதும் கைலாயத்தில் வாசஞ்செய்பவளே!சகல லோகமும் உன்பாதத்தால் ரக்ஷிக்கப்பட்டுவருகின்றது. இது மகாபுண்ணியமா னகாலம். வேதவேதாந்தங்களாலும் அறியப்படாத திருவடியைப் பார்த்த எங்கள் இரண்டுகண்களும் தன்யமாயின. எங்கள் புண்ணிய மே புண்ணியம். எங்களது மனோரதங்களெல்லாம் பூர்த்தியாய் விட் டன என்று இப்படி லக்ஷ்மி முதலானவர்கள் செய்த தோத்திரத் தைக்கேட்டுத் தேவி எல்லாத்தேவிகளையும் பார்த்துச் சொல்லுகின் றாள். ஓலக்ஷ்மிதேவியே!க்ஷேமமா?சரஸ்வதியே!இந்திராணியே! ஸ்வ தையே! நீங்களெல்லோரும் க்ஷேமமா? அருந்ததி முதலானவர்க ளே! நீங்களெல்லாம் க்ஷேமமா என்று தனித்தனியே கேட்கும் வா ர்த்தைகளை யாவருங் கேட்டு ஆச்சரியமடைந்து கைகூப்பிச்சொல்லு கின்றார்கள்.ஓ தேவியே! உன்கருணையால் எங்களுக்கு எவ்விடத்தும் க்ஷேமத்துக்குக் குறைவில்லை. மங்களத்துக்கெல்லாம் மங்களமான தேவியே! உன்மலரடியைக் கண்டமையால் நாங்களிப்போது புண்ய சீலிகளாய் விட்டோமென்று ஆனந்த வசனங்களைக் கூறித் தேவியை யுபசரித்துத் தேவதா ஸ்திரீகளெல்லாம் தங்கள் தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

பிறகு தேவி ஹிமயமலையின் சிகரத்திற்சென்று பிரதோஷ காலத்தில் மேனையோடும் சகிகளோடும் ஸ்நானஞ்செய்து பரிசுத்த மான கங்காநதி தீர்த்தத்தை யெடுத்துவந்து பஞ்சாமிர்த முதலிய அநேக சம்பாரங்களாலும் விபூதித்திரிபுண்டரங்களாலும் ருத்திரா

க்ஷம் பில்வம் புஷ்பம் வஸ்திரம் சர்ப்பபடம் திவ்யாபரணம் ரத்ன மயமான தீபம் ஆகிய இவைகளெல்லாவற்றாலும் கேதாரீஸ்வரரைப் பூசித்து அன்னம் பக்ஷ்யம் பழம் தாம்பூலம் நிருத்தம் கீதம் சங்கம் பேரி துந்துபி முதலியவைகளாலும் உபசரித்துப் பிரதக்ஷிண நமஸ் காரங்கள் செய்து அஷ்டமூர்த்தியாயிருக்கின்ற பெருமானைத் துதி க்கத்தொடங்கினள். ஸத்யோஜாதனே! மஹேசனே! சங்கரப்பிரபு வே! தேவரீருக்குச் சூர்யசந்திர அக்னிமுதலானவர்கள் மின்மினிப் பூச்சப்போல் பிரகாசிக்கின்றார்கள். நதிகளெல்லாம் சமுத்திரத்தை யடைகிறதுபோல் யமன் வருணன் குபேரன் முதலானவர்களெல் லாம் உம்மை வந்து அடைகின்றனர். வாமதேவனே! முனிவர்களா லும் தேவர்களாலும் கணேந்திரர்களாலும் வணங்கப்பட்டவனே! வாசுதேவன் தனது கண்களால் அருச்சிக்கப்பட்ட பாதமுடையவ னே!பிராமணக்கூட்டங்களால் பூசிக்கப்படுகிறவனே!தேவதேவனே! தயையினால் என்னை ரக்ஷிப்பீர். மிகவும் அகோரமான சம்சாரமா கிய சாகரத்துக்கு ஓடக்காரனே! லீலார்த்தமாய்த் தேகத்தைத் தரிக் கின்றவனே! மகேசனே! மகாதைரியசாலியே! சோமசூர்யாக்னி களை நேத்ரமாகவுடையவனே! நானாவிதலோகசிருட்டி வியாபார முள்ளவனே! ஜகத்துக்கெல்லாம் முக்கியகாரணனே! சம்புவே! பிரசித்தமான பிரபாவமுள்ளவனே! சகல வேதங்களும் தோத்திரிக் கும் புருஷனே! வேதங்களாலும் வேத விதிகளாலும் விஷ்ணுவினா லும் ஸ்கந்தனாலும் பராசத்தியினாலும் கணபதியாலும் பூசிக்கும் பாதமுள்ளவனே! என்று இவ்வாறு ஸ்தோத்திரஞ்செய்தனள்.

ஸ்கந்தர் கூறுகின்றார்:-ஓ அந்தணர்களே! இது உமக்கு எம் மால் சொல்லப்பட்டது. உமது காதுகள் புண்ணியமுடையன வா யின. இது காதுக்கு அமுதம்போல் இருக்கிறது. இதைக் கேட்கிற வன் சம்சாரத்தைவிட்டு மோக்ஷத்திலாவலுள்ளவனாய் விடுவான். பிறகு கைலாயத்தில் ருத்திரனாய் விடுவான். மற்ற சகலலோகத்தி லும் கைலாய சுகத்தில் மூன்று கோடியில் ஒருபங்கு சுகமுங் கிடை யாது. மார்க்கண்டேயர் ததீசிமுதலான ருஷிகள் அளவில்லாத மகிமையுள்ள சமுத்திரம்போன்ற இந்த சிவரகசியத்தைத் தனத்தி னிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் ஆசையில்லாதவர்களாய்க் கேட் கிறார்கள். கேவலம் சம்சாரத்திலுழலுகின்ற பாமரர்கள் இச்சிவ ரகசியத்தைப் படிக்காமல் குரங்குபோலிருக்கிற முகமுள்ளவர்க ளாய் விகாரமான பற்களைக்காட்டித் தனவான்கள் கிருகங்களில் அந்திப்பொழுதளவும் பல்லை யிளித்துக்கொண்டு நிற்கின்றவர்களா

யும் தூக்கம் சோம்பல் கலகம் இவைகளினு லிழுக்கப்பட்ட மன முடையவர்களாயும் ராத்திரியில் பிணம்போல் தூங்குகின்றவர்களா யும் மத்தியானத்தில் நீதி காவியங்களில் சொல்லப்பட்ட வுபாயப் படி வயிற்றை நிறைக்கப் பிரயத்தனப் படுகிறவர்களாயும் காலத் தைக்கழிக்கிறார்கள். ஒருவனும் ஒருக்ஷணகாலம் சிவனைச் சிந்திக் கின்றவன் கிடையாது. சம்பு பக்தனிடமிருந்து சிவகதையைக் கேட் டிருக்கிறீர்களல்லவா? அதுவே சம்சாரக்கடலிலிருந்து கரையேற் றிவிடும். சம்சாரத்திலேயே உழன்று சிவனை நினைக்ாதவர்களுக்கு என்ன கதியுண்டாகும்! ஈஸ்வரபதத்தியானஞ் செய்யாதவர்கள் ஒ ருவராலும் பூசிக்கத்தக்கவர்களல்லர். அந்தச்சாபானியர்கள் சண் டாளரைப்போல் தூரத்திலொதுக்கத்தக்கவர்கள். அவர்கள் யா கஞ்செய்திருந்தாலும் அரசர்களாயினும் திக்பாலகர்களா யிருந்தா லும் அவர்கள் நாய்வால் எப்போதுங் கிளம்பியிருப்பதுபோல் எப் போதும் காமத்திலேயே ஆவலுள்ளவர்களான படியால் அவர்களை மனதில்நினைக்கக்கூடாது. இவர்களெல்லாம் யமனை யடையத்தக்க வர். இவ்வுண்மையுணர்ந்த பெரியோ ரெப்பொழுதுஞ் சிவரகசியத் தின் பெருமையைச் சொல்லியுங் கேட்டும் என்றும் எவ்விடத்தும் புகழுடன் வாழ்ந்திருப்பர்.

முப்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

சிவரகசியம் பவாம்சம் என்னும்
இரண்டாம் அம்சம்
முற்றிற்று.

உ

சிவமயம்.

# சிவரகசியம்.



## மூன்றாவது

## அம்சம்.

உ

விஶ்வரக்ஷாக்ருதே நம:

# சிவாரகசியம்.

## மூன்றும் அம்சம்.

### முதல் அத்தியாயம்

:○<>○:

சிவரகசிய வரலாறு.

ஶிவபாதாரவிந்த ஶ்ரியமுராஶ்ரியம் ஶ்ரீபதிம் விதிம் |
இந்த்ரம் சந்த்ரம் ஸுராந்ஸ்ருஷ்டவதீ யா ஶிவா ஶிவா ||

எவள் சிவபாதாரவிந்த ஸ்ரீயாயுள்ளவளாய், இலக்குமி விஷ்ணு பிரமன் இந்திரன் சந்திரன்முதலிய தேவர்களை யுண்டாக்குகின்றனளோ, அவளே சிவையென்கிற ஜகதீஸ்வரியாம்.

பூர்வம் நைமிசாரணியவாசிகளாகிய சௌநகாதி முனிவர்கள் சகலவேதாந்ததத்வமறிந்த சூதரைநமஸ்கரித்து, வேதாந்ததத்வமறிந்தவரும் சிவக்கியானமே ஜீவனமாகவுடையவருமாகிய ஓமுனிவரே! சுருதியால் கூறப்பட்டவும் சகல சுகலாபத்திற்கு இடமாகியவும் சர்வாபத்துக்களையும் தொலையச்செய்வவும் மஹேசசந்நிதானத் தன்மைபெற்றவும் பக்தானுக்கிரக சாதனமாயுள்ளவுமாகிய சிவஸ்தலங்கள் யாவை? எந்தவிடத்தில் சாம்பவர்களுக்குச் சகலாபீஷ்டங்களுஞ் சித்திக்குமோ, எந்தவிடத்தில் பார்வதீநாதன் ஆயாசமின்றி எப்பொழுதும் பிரசன்னனுவனோ, எந்தவிடத்தில் பரமபுண்ணியமான தீர்த்தங்களுளவோ, எந்தவிடத்தில் தர்மத்தைவிருத்திசெய்வதாகிய சிவலிங்கங்கள் விளங்குகின்றனவோ, எந்தவிடத்திலே திரிநேத்திரருக்கு மிக்கதிருப்தியுள்ளதோ அத்தகைய சிவஸ்தலங்களையுந் தாங்கள் கருணைகூர்ந்து கூறவேண்டும். அன்றியும் தேவரீரால் அநேகக்ஷேத்திரங்கள் தரிசிக்கப்பட்டுள்ளன. அவைகளுள் முக்கியமாய்ச் சிவப்பிரீதிஹேதுவாயுள்ள தலங்கள்யாவையென்றுங் கேட்டனர்.

அவ்வினக்களைக் கேட்டருளிய மாத்திரத்தில் சூதமுனிவர் ஒருமுகூர்த்தநேரஞ் சிவபெருமானைத் தியானித்துப் பரமானந்தவனுபவமுடையவராய் முனிவர்களைப்பார்த்து, ஓமுனிவர்காள்! நீவிர்

நன்மைபயப்பனவாகிய வினக்களை வினவினீர்கள். நீவிர் தவத்தால் அகத்தழுக்கை அகற்றினவராதலின் உங்களை யான் தரிசித்தமாத்திரத்தில் என்மனம் மிக்க தெளிவைப்பெற்றது. நீவிர்பவலிங்கார்ச்சனையில் விருப்புற்றவர்களாகிய பாக்கியவான்களாதலால் உங்களுடைய சந்நிதானத்தின் விசேடத்தினால் எனக்குச் சிவபக்திசெழிக்கின்றது. உலகத்தில் சத்சங்கத்தார் அருமையானவரன்றோ? சத்சங்கமென்று சொல்லப்படுவார் சாம்பவர்களே. சாம்பவர்களெனப்படும் மகாபாக்கியமானது பூர்வ ஜன்மாந்திரங்களில் நிகழ்ந்த புண்ணியத்தையனுசரித்துக் கிடைப்பதாகும். ஆகலின் பூர்வம் நான் செய்த புண்ணியகர்மங்கள் இப்போது மகாசாம்பவர்களாகிய உங்களுடைய தரிசனத்தால் பலிதமாயிற்று. சாம்பவத்தன்மை கோடிக்கணக்கான புண்ணியத்தால் சித்திப்பதென்றும், அத்தன்மையுடைய சாம்பவர்களதுவருகை ஜன்மஜன்மாந்திர பாக்கியங்களாலேயே நிகழ்வதென்றும் (வாசிட்டமுதலிய) நூல்களிற் கூறப்பட்டுள்ளன. ஆகலான் உங்களை யச்சாம்பவர்களென்றறிதற்குப் பலசாதனங்கள் உங்களிடத்தில் காணப்படுகின்றன. அவை பஸ்மோத்தூளனம் திரிபுண்டரம் உருத்திராக்ஷ தாரணம் சிவலிங்கார்ச்சனம் என்பவையேயாம். இவைகள், சித்தித்தல் சிறந்ததவத்தின் பயனாகும். நீவிர் அப்பயனைப் பெற்றவர்களாக விருக்கின்றீர்கள். இனி நீவிர்வினவிய வினக்கட்கு விடைகூறுகின்றேன். கேட்பீர்களாக. எவ்விடங்களில் சாம்பவர்களது பாதாரவிந்ததூளியின் லேசம்விழுகின்றதோ அவையே உத்தமதீர்த்தங்களாம். அவ்விடங்களிலேயே சங்கரசந்நிதானமும் சகலதருமங்களுமுள. அவைகளே விரும்பிய பயனையளிப்பன. சாம்பவர் சந்நிதியில்செய்யும் புண்ணியம் முடிவற்றது. எங்கு பாபசம்பந்தம் லேசமுமின்றிச் சகலசம்பத்துக்களின் லாபமுளதாகின்றதோ அதுவே சாம்பவசம்பந்தத்தின் பொருள். அதனை விரும்பினால் அது எல்லாப் பொருள்களையும் ஏனளிக்கமாட்டாது? சாம்பவர்களது பாதாரவிந்தத்தைப் பிரமாதி தேவர்கள் தூரத்தே காண்பாராயின் கண்டவுடனே நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்து அவர்களை வரவேண்டுமென்று பிரார்த்தித்து அழைக்கின்றனர். அவர்கள் செல்லுமிடத்தில் பிதுர்க்கள் கூத்தாடுகின்றனர். அவர்களுக்கு அன்னதானஞ் செய்தவன் சொர்க்கலோகநாதனுவன். சாம்பவரது பாதாரவிந்தத்தை நிர்மலமாகிய தீர்த்தத்தால் பிரக்ஷாளனம்பண்ணி புரோக்ஷித்துக் கொள்ளுவானானால் அவன் சர்வபாவங்களினின்றும் நீங்கப்பெற்று பரிசுத்தமெய்திப் புண்ணியாத்துமா

வாகின்றனன். எவர் சாம்பவர்களின் சரணாரவிந்தத்தை அடிக்கடி நமஸ்கரிக்கின்றனரோ அவர்களைச் சகலதேவர்களும் இவர்களே பரமேசருமசொரூபர், இவரேதன்யர் என்று போற்றிவணங்குகின்றனர். சாம்பவர்களின் பாதாரவிந்தத்தை விளக்கிய நீரைப் புசிப்போர் அமிர்தம்புசித்தவராவர். சிவசின்னந்தரித்திருப்பவரைக் கண்டும் எவன் தவறியாவது நமஸ்கரியாதிருப்பானோ அவனே உலகில் பாதகமுடையோனும்வேதபாஹ்யனுமாவான். சிவனையே கதியாகக் கொண்ட சாம்பவனை எவன் சிவனாக வெண்ணுகின்றானோ அவனும் சிவனேயாவன். பலகோடி புண்ணிய ஜன்மங்களின் பயனை யடைந்தவனெவனோ அவனே சாம்பவனாவனென்று கூறப்பட்டுளது. சாம்பவரைப் புண்ணியத்தால் தரிசித்த எவன்தான் சுகமடைந்திலன்? எந்தமனிதர் சைவபூஜகளைப்பூசிக்கின்றாரோ அம்மனிதரைச் சகலதேவரும் முனிவரும் பூசிக்கின்றனர். ஆகையால் ஓ முனிவர்களே! நீவிர் என்னால்செய்யப்பட்ட அர்க்கியபாத்யாதி உபசாரங்களை யங்கீகரித்து என்னைத் தன்யனாகச்செய்யுங்கள். ஓ சிவார்ச்சகராகிய முனிவர்களே! யான்மிக்கதன்யனாகின்றேன். உங்களுடைய திருமேனிகளைச் சிவரூபங்களாக வெண்ணுகின்றேன். ஓ சாம்பவர்களே! சிறந்தசிவலிங்கங்கள் சிவாதிஷ்டானங்களாதலாலும் சாம்பவர்களது சரீரங்கள் சிவாபிமானங்களாதலாலும் இவ்விரண்டுருவும் சிவனது திருமேனிகளேயாம். ஆகலான் உங்களைப் பில்வபத்திர முதலிய பூஜாசாதனங்களால் சந்தோஷத்துடன் யான் பூஜிக்க விரும்புகின்றேனென்று கூறிப் பூஜித்து நமஸ்கரித்து அஞ்சலிபத்தஞ் செய்து கொண்டுநின்றனர்.

சாம்பவபுங்கவர்களாகிய சவுனகாதியர் பேரானந்தமெய்தி நிற்குஞ் சூதமுனிவரைப்பார்த்து ஆனந்தக்கண்ணீர் பெருகினவர்களாய்த் தாங்களும் அவரைவணங்குங் குறிப்புடன் எதிரில் அஞ்சலிபத்தஞ்செய்து கொண்டு ஓ சூதமாமுனிவரே! தேவரீரே மிக்க தன்யர். நீரேதன்யரினும் தன்யர். இப்படிப்பட்ட சிவபக்தி உம்மால் எவ்வெப்புண்ணியங்களைப் பூர்வஞ்செய்து சம்பாதிக்கப் பட்டதோ! எந்தப்புண்ணியப் பிரபாவத்தால் சர்வமங்களநாதரது பாதாரவிந்தத்தை விட்டகலாத மனமுடையவராயிருக்கின்றீரோ அவற்றை நாங்களறிந்திலம். ஓ சுவாமின்! அப்புண்ணிய விசேடங்களையெங்கட்குச் சொல்லியருளவேண்டுமென்று வினவினர். அங்ஙனம் வினவிய முனிவர்களைச் சூதர்பார்த்து ஓ முனிவிர்காள்! பூர்வத்தில் வியாசமாமுனிவர் தமதுசிஷ்யர்களோடு கேதாரேச்வரசந்நிதியடை

ந்து பூசித்து மிக்க சந்தோஷமனத்துடன் சிவார்ச்சனாபராயிருக்க அவரை யான்நமஸ்கரித்து ஓ சுவாமி ! தேவரீருக்குச் சிவக்கியான முண்டானது எவ்விதமென்று கேட்டேன். அதற்கவர் சிவாராத னையிலேயே சிக்குண்ட மனமுடையோராய்ச் சிவபஞ்சாக்ஷரத்தை நினைத்து விபூதியை உத்தூளனஞ்செய்து கேதாரேஸ்வரரைப் பார்த்துப் பின்னர் என்னைநோக்கி ஓ சூதா ! சநாதனமாயுள்ள சைவரக சியத்தை யுனக்குக்கூறுகின்றேன். அஃது அன்னியரிடங் கூறக் கூடாததும் மஹாரஹஸ்யமானதும் பரமமங்களமானதுமாம். ஆயி னும் நீ என்னிடம் பக்தியுள்ளவனாதலால் இதற்குமுன் ஒருவருக் குங்கூறாத அந்தரகஸ்யத்தை இப்பொழுது உனக்குக்கூறுகின்றேன். இதனைப் பிரயத்தனத்துடன் மிக்கசிரமப்பட்டு ரகஸ்யமாய் வைத் துக்கொள்ளவேண்டும். ஏனெனின் இது சிவபக்திபூர்ணனும் பரம சாந்தனுமாகிய பரமபரிபாகிக்கே உரைக்கத்தக்கது. உரைக்குங் காலத்தில் எத்திசையும்நோக்கி அசாம்பவனெவனு மில்லையென்று நிச்சயித்துக்கொண்டு பின்னருபதேசிக்கவேண்டும். அசாம்பவனும் அபரிபாகியுமானவனுக்கு ஓர்காலத்துங் கூறக்கூடாது. ஓ சூதா ! நீயும் என்னால் கூறப்படும் இந்தரகஸ்யத்தை அசாம்பவனுக் குரை க்கமாட்டேனென்று இக்கேதாரசந்நிதியில் நீ சபதஞ்செய்வாயாக. இது அபரிபாகிகளாகிய சோரர்க ளறியக்கூடாத நிதிக்கும்பம். மிக்க பிரயத்தனத்தால் சம்பாதிக்கப்பட்டதும் உயிர்களுக்கிதமு மாகிய ஓர் நிதிக்குடத்தைச் சேர்ாருக்குக்காட்டுதல் கெடுதியா மன்றோ? ஆகலான் இந்தச்சிவரகஸ்யமொழிந்த மற்றவைகளை யொ ருவாறு அன்னியருக்குத் தெரிவிக்கலாம். இந்த நிதிக்கலசத்தை எவர்க்குந் தெரிவிக்கக்கூடா தென்று கூறினார். ஓ முநிவர்களே! இதனை நீவிருங்கவனியுங்கள். இப்போது ரம்யமாகிய (அரிதாகிய) சைவரகஸ்யம் என்னால்கூறப்படுகின்றது. இதனை நீவிரும் மிக்க எத் தனத்துடன் ரகஸ்யமா யுள்ளத்துள்வைத்துக் காக்கவேண்டும். ரகஸ்யங்களுக்குள் சைவமாகிய ரகஸ்யமே உத்தம ரகஸ்யமாகும். இரத்தினங்களுக்குள் திவ்யரத்னங்களை எப்படி ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்தல்வேண்டுமோ அப்படியே வேதத்தால் கூறப்பட்ட தாகிய இப்பரமரகஸ்யத்தையும் பாதுகாத்தல்வேண்டும். பெரிய வேதாந்தரகசியமும் இஃதே. யான் இந்தரகஸ்யத்தை உங்களிடம் தயையாற்கூறுகின்றேன். மிக்க சிறப்புற்ற ரத்னங்களை யாரும் எவருக்குங்கொடுக்கமாட்டார்கள். அதுபோல இந்தரகஸ்யத்தை யாருக்குங்கொடுக்கக்கூடாதாயினும் யான் எனக்கு உங்கள்பாலுள்ள

கருணையால் கொடுக்கத்துணிந்தேன். இதிலுள்ள பொருளை நீங்களறிந்து சிவதற்பரர்களாயிருந்து சாக்கிரதையாய் வைத்துக்கொள்ளவேண்டும். இது பிராணாகூதாமணியென்று பிரசித்திபெற்றுள்ளது. ஆனதுபற்றி நீங்கள் எவருக்கும் வெளியிடக்கூடாது. இது ரகஸ்யமென்று பார்வதியாருக்குச்சிவனாலும் கூறப்பட்டுள்ளது. அப்பார்வதியாரும் இதனைப் பரமரகசியமாய்ப் பக்தியாய்வைத்திருந்தனர். அதனைத்தமக்குரைக்கவேண்டுமென்று குமாரக்கடவுள் பக்தியுடன்கேட்ப அவர்பொருட்டு அவ்வுமாதேவியார் உபதேசித்தனர். வேதாந்தத்தால் போற்றப்பட்டவதனை ஓர்கால் நந்திகேசர் தெரிந்துக்கொள்ளவேண்டுமென்று மிச்சசிரத்தாபத்தியுடன் ஸ்ரீ குமாரக்கடவுளை நமஸ்கரித்து அஞ்சலிபத்தஞ்செய்து பிரார்த்திக்க அவர் அந்நந்திதேவருக் குபதேசித்தனர். அந்நந்திதேவர் தம்மை மிகவும் பூஜித்து மகிழ்வோரும் சாந்தருமாகிய ஸ்ரீமந்நாராயணருக்குக்கூறியருளினர். அவர்தம்மைவணங்கி அஞ்சலிசெய்து தமக்குபதேசிக்கவேண்டுமென்று சரஸ்வதியுடன் பிரார்த்தித்த பிரம்மதேவருக்குக்கூறினர். அப்பிரமதேவர் சநகாதிகளுக்குக்கூறினர். அவர்களும் நாரதருக்குக்கூறினர். அவரெனக்குக்கூறினர். யானும் அச்சிவரகஸ்யத்தை மறவாதிருக்கவேண்டுமென்றுஉங்களுக்குக்கூற ஆரம்பித்தேன். ஓ முநிபுங்கவர்களே! நீங்களுமிதனை விநீதனும் மிக்கஹிதனுமாகிய நல்லபரிபாகிக்குக் கூறவேண்டுமேயன்றி மற்றெவர்க்குங் கூறக்கூடாது. ஓ த்விஜர்களே! இதில் யாதும் ஐயமில்லை. யான்கூறியதில் சாக்கிரதையாயிருங்கள். இஃதே பெரிய சத்யம். இஃதே எனக்குப்பெரிய குருதக்ஷிணை என்றுகூற அதற்குருஷிகள் ஓ சூதமாமுனிவரே! நீங்கள் கூறினவையெல்லாம் நன்றாய்க் கேட்டுக்கொண்டோம். அவையெல்லாம் எங்களது இதத்தின்பொருட்டேயாம். சாம்பவரகசியமானது எப்பொழுதுஞ் சாக்கிரதையாய் வைத்துக்கொள்ளவேண்டுமென்று உம்மால் கூறப்பட்டபடி எங்களிடம் ரத்னம்போல் ரகசியமாயிருக்கவேண்டியதே. நாங்களதனை எங்களுடைய கண்டத்தில் மணிபோல் வைத்துக் காக்கவேண்டியதே. இதுவிஷயத்தில் தேவரீர் சந்தேகிக்கவேண்டாம். இனி யாதொன்றைப் பூர்வம் தேவரீரை மிக்க பிரயத்தனத்துடன் கேட்டோமோ அதனை அப்பொழுதுங் கூறவில்லையே. அதுதானன்றோ இப்பொழுது தேவரீரால் கூறப்படுகின்றதென்று முநிவர்கள் கூறியதைக்கேட்டு வியாசர்மனதில் ஆனந்தமுடையவராய்ச் சிவரகசியத்தைக்கூறத்தொடங்கிப் பஸ்மதாரணஞ் செய்துகொண்டு அத்

வைதனுகிய சிவபெருமானை நமஸ்கரித்துச் சிவலிங்கமூர்த்தியைத் தொட்டு மீண்டுஞ் சிவபெருமானை நமஸ்கரித்து ஆனந்தக்கண்ணீர் ததும்பச் சர்வசம்சாரநாசகனுகிய உமாசகாயனை ஹ்ருதயத்திற் சிந்தித்துத் தழுதழுத்தவார்த்தையுடன் முநிவர்களைநோக்கி ஓ முநிவர்காள்! நீங்கள் தன்யர்களே! யாதுமையமில்லை. பஸ்மபூஷிததேகிகளாகிய நீங்கள் திரிநேத்திரருக்குப் பிரியகரமாயுள்ள சிவவித்யாதானத்துக்குப் பாத்திரராயுள்ளவர்களே! பாத்திரத்தில் கொடுக்கப்பட்ட இரத்தினமுதலியன வெல்லாம் சகலமானவருக்கும் சுகத்தை யளிப்பனவாமென்று சுருதிகள் அடிக்கடி கூறுகின்றன. உலகிலோ சிவவித்யாதானத்துக்குரிய பாத்திரமானது கிடைப்பதரிது. பாத்திரங்கிடைத்திருக்கும்போது அதனைப் பெரியோர்கள் எப்படித் தள்ளுவார்? சிவவித்யாதானத்தைக் கொடுப்போனும் அதனைப் பெற்றுக்கொள்வோனுமாகிய இருவர்க்குங் கோரமாகிய சம்சாரக் கடலினின்றும் நிவிர்த்தியுண்டாகின்றது.

எவ்விடத்தில்ஹரரும்அஜராமரருமாகியசிவபெருமானதுஅபாரமாகிய கதையெனும் ஸமுத்திரம்பொங்குகின்றதோ அவ்விடத்தில் சம்பு பார்வதி கணநாதர் சண்முகர் இவர்களுடன்கூத்தாடுகின்றனர். விஷ்ணுவானவர் கையிற்பிரம்பெடுத்து நந்தீசருடைய உக்ரமாகிய கடாக்ஷவீக்ஷணத்தால் பயந்தொடுங்கும் நான்முகன்முதலிய தேவர்களையெல்லாம் தூரத்திலோடச்செய்கின்றனர். இந்த லோகாதீதமாகிய சிவகதையெனும் கங்கையின் அலைக்காற்றானது சிரவணஞ்செய்வோர்களைப் பாவனஞ்செய்கின்றதென்பது ஓரற்புதமல்ல. இஃது சிரவணஞ்செய்வோரது சந்ததியையும் அவர் குலத்தவரையும் அவரைப் போஷித்துவருவோரையும் பரிசுத்தமாக்குகின்றது. சிவபெருமானை எப்பொழுதும் எவன் தியானிக்கும் மார்க்கத்திலிருக்கின்றனே அவனைப்பற்றி எங்ஙனங் கூறமுடியுமென்றுகூறிப் பின்னர் வியாசர் தமது நாவைப்பார்த்து ஓ நாவே! இதுகாறும் திராக்ஷை இக்ஷு க்ஷீரம் இவைகளின் சாரசம்பந்தம்பெற்றமதுரமாயுள்ள பதார்த்தங்களையருந்தி அவற்றின் சுவைகளைப் பிறருக்குக்கூறி அவற்றை வெளிப்படுத்திவந்தனையே. அதுபோலும் இனிக் காதாலனுடைய லோகாதீதமாகிய கதாம்ருததாரையையருந்தி ஹரருடைய நாமதேயமாகிய சப்தசாரங்களைக் கூறிக்கொண்டு பரமானந்த மெய்துவாயாக என்றார். அதன்பின்னர்மனதைப்பார்த்து மனமே! நீ இடதுகையில் மேருவாகிய தனுசையும், வலதுகையில் ஹரியாகிய பாணத்தையுந்தாங்கிப் பூமியாகிய தேரின்மீதுவைக்கப்பட்ட பாதத்-

தையுடையோரும், நமஸ்கரித்துள்ள சகலதேவர்களது சிரங்களிற் சூடியிருக்குங் கிரீடத்திலிழைக்கப்பெற்ற ரத்னங்களின் கிரணங்களால் வியாபிக்கப்பெற்ற பாதுகையின்மேல் விளங்கும் பாதாரவிந்தத்தை யுடையோருமாகிய பாலநேத்திரனைப் பாவனைசெய்குக என்றிவ்வண்ணம் வாக்குக்கும் மனதுக்கும் நியமனஞ்செய்து பின்னர்ச் சர்ப்பமாகிய நாணுடன்கூடிய மேருவாகிய தனுசைப்பிடித்த இடது திருக்கரத்தையுடையவனும் நாராயணனாகிய நாராசத்தை யிழுத்துப்பிடித்த வலதுதிருக்கரத்தையுடையவனும் கருணையுடையோனைப் புரத்தையெரித்த விரூபாக்ஷத்தை யுடையவனுமாகிய உமாசகாயனை நமஸ்கரிக்கிறேனென்று நமஸ்கரித்தனர்.

முதலாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
பஞ்சஹஸ்தாயநம:

# இரண்டாம் அத்தியாயம்.

---

### காயத்திரீ வரப்பிரசாதம்.

வியாசபகவான், உமாசகாயனை நமஸ்கரிக்கின்றேன் என்று தோத்திரஞ்செய்யும்போது, ருஷிகள் அவரைநோக்கி சிவவித்தையானது முத்தியைத்தரும் மஹாவித்தையன்றோ? அவ்வித்தை யாவரானும் அறியத்தக்கதாகுமா? அதன்மகிமையை வேதமும், கௌரியும், சங்கரரும், ஸ்கந்தரும், கணேசரும், நந்திகேசருமே யறியவல்லவராவர். அந்த வித்தியாஸ்வரூபத்தை கிரிஜாகாந்தனாகிய சிவபெருமானிடத்தில் நிஸ்சலமான பத்தியுடையோன் எவனோ அவனேயறிந்தவனாவான். அந்தப் பக்தியைப்பெறுதலே தவமாம். அதனைவிட்டுத் தவமென்பதுவேறில்லை. அதுதான் அற்புதமாகிய தவம். சிவபெருமானிடத்துண்டாகும் பக்தி ஏன் அற்புதமாகிய தவமாகாது? உலகத்தில் சிவவித்யாப்பிரபாவமறிந்த மனிதன் எப்படி அரியவனோ அப்படியே மஹாதேவனைவிட்டுச் சிறிதுஞ் சலியாத பத்தியாளனும் அரியவனேயாம். அந்த அரிதான மஹேஸ்வரனது பத்தியே பத்திரத்தினமென்று கூறப்படும். அந்தப் பக்தியே சம்சாரபயத்தைத்தொலைத்து முத்தியளிப்பதாகும். இப்பக்திவிசேஷ மிங்ஙனமிருக்க, அந்தமஹாதேவன் சிதாகாரன் பரமா

னந்தசொரூபன் நிர்க்குணன் பார்வதிநாதன் சந்திரசூடன் திரிபுராந்தகன் ஸ்மராரி (மன்மதவைரி) காலகாலன் திரிசூலபாணி சர்வேசன் சடாமண்டலமண்டிதன் உபாசகாயன் பரமேஸ்வரன் அந்தகாரி விருஷபத்வஜன் இலிங்கஸ்வரூபன் பஸ்மோத்தூளிதவிக்ரஹன் ருத்ராக்ஷபூஷிதன் சாந்தன் நீலகண்டன் விரூபாக்ஷன் சக்தன் தாக்ஷாயணிப்பிரியன் குமாரகுரு என்றும், அப்படியே அவ்யக்தன் என்றும், சுந்தரமானமூர்த்தியாய் வியக்தமாயிருக்கின்றானென்றும் காமாரி என்றும், காமதன் (காமத்தையளிப்போன்) என்றும், அக்ஷரனென்றும், ஞானானந்தசாகரனென்றும், பரமேஸ்வரனென்றும் பரமாத்மாவென்றும், பராத்பரனென்றும், சித்தென்றும், சித்விலாசனென்றும் கூறப்படுகின்றான். இங்ஙனமான நாமார்த்தங்களையெண்ணுங்கால் ஒன்றுக்கொன்று முரணுகின்றன. அங்ஙனம் முரணுதலாகிய பலசொற்களால் வழங்கப்படுதல் குற்றமுடைத்தன்றோ? இவற்றின் உண்மையை எங்களுக்கு நன்றாய்க்கூறியருளல்வேண்டும். அப்படிப்பட்ட தர்மங்களைக் கேட்பதனாலேயே சிவஞானமு முண்டாகுமென்றெண்ணுகின்றோமென்றுகூற வியாசபகவான், ஓமுனிவர்களே! அதனை யான்கூறுகின்றேன் கேட்பீர்களாக. பரம மங்களத்தையளிப்போனாகிய மஹாதேவனைப் பஸ்மதாரணஞ்செய்துகொண்டு சிரத்தையுடன் ஹ்ருதயத்தில் தியானித்துச்சிவார்ச்சனை செய்தலே சகலதர்மங்களுள்ளும் உத்தமதர்மமாகும். அதுவொழிந்த மற்றைய தர்மங்களெல்லாம் அதன்பொட்டே யாமென்றறிமின். இனிச் சிவனே சச்சிதானந்தலக்ஷணமுடைய பரம பிரஹ்மமாகும். அப்பரப்பிரஹ்மமாகிய சிவன் விஞ்ஞானமயன் நிர்விகாரன் நிர்மலன் ஆதியந்தமற்றவன் அப்பிரமேயன் நிர்க்குணன் நிரஞ்சனன் நிராமயன் வாங்மனாதீதன் என்று கூறப்படுகின்றனன். புராணமுதலியவைகளும் கோசரமல்லாதவனென்றே கூறுகின்றன. இத்தன்மையுடைய சம்புவென்னுந்தெய்வம் கருணையினால் நம்போன்றவர்களது வாக்குக்கும் விஷயமாகின்றானென்றறிமின். இதுவும் எனதுளத்தினின்று சிவன் ஏவுகின்றமையால் யான் கூறுகின்றேன். ஏனெனின் சிவனே புத்திப்பிரேரேபகன் என்றறிமின்.

ஓவிப்பிரர்களே! அவனது பிரேரேபத்தைக் கூறுகின்றேன் கேட்பீர்களாக. தேஜோன்மயமாய்ப் பிரகாசிக்குந் தேவனாகிய சூரியனது உத்தமமாகிய ஞானத்தைச் சகலஜீவர்களாலும் விரும்பப்படும் விஸ்வாத்மாவாகிய சிவனே ஏவுகின்றான். பர்க்கனாகிய அச்சங்கரனைத்தவிர சூரியனையும் நம்மையும் மற்றுமுள்ள ஜீவர்களை

யும் வேறு எவன் எவுவான்? அவன்தான் மற்றெல்லாப்பொருள்க ளாலும் சகலஜீவர்களாலும் விரும்பப்பட்டவனுமாவான். இந்தப்பர் க்கனென்னும் பதத்தினது மகிமையே சுருதிகளில் கூறப்பட்டுளது. சம்சாரத்தைப் பர்ஜனம் (வறுத்துவிடுதலைச்) செய்கின்றமையால் பர்க்கனெனப்பட்டான். பூர்வம் காயத்திரி தேவியானவள் அதி வுக்கிரமாகிய தவஞ்செய்தனள். அவளது பக்தியுடன் கூடியதவத் துக்குச் சந்தோஷித்த பரமேஸ்வரன் அவளிடத்துப்பிரசன்னராய்த் தோன்றி மேகம்போல் கம்பீரமான வார்த்தையால் ஓ காயத்திரி! உன்னால் மிகவுங்கோரமாய்ப் பதினாயிரங் கல்பவருடம் தவஞ்செய் யப்பட்டமையால் யான் மிக்கப் பிரீதியடைகின்றேன். வரமளிப் பவருட் சிறந்தவன் யானேயாகலான் உனக்கு வேண்டியவரங்களைக் கேட்டுப் பெற்றுக்கொள்வாயாக. அவ்வரங்களை நீ மற்றையாவ ரிடம் பெற்றிடுவாய்? நான் நீ விரும்பும் எந்த வரங்களைத்தான் கொடுக்கமாட்டேன்? என்று பர்க்கனாகிய இறைவன் கூற, காயத் திரிதேவி சாஷ்டாங்கமாய்ப் பூமியில் வீழ்ந்து வணங்கிக் கண்களி னின்றும் ஆநந்த நீர்த்ததும்ப, ஓ பகவானே! தேவதேவேசனே! சம்சாரபர்ஜனாகிய பர்க்கனே! கருணைக்கடலே! என்னால் விரும் பப்பட்ட வரத்தைத்தந்தருள்வாய். அதுவென்னையெனின், உனது பாதாரவிந்தத் தியானத்திற்குரித்தான ஜபத்திற்கு யோக்கியமாகிய மந்திரமானது தன்யர்களால் போற்றத்தக்க சுருதியேயாம். அது மந்திரமாயினும் அதில் சிவபதமிருப்பதனாலன்றோ சித்திபெறுதற் கேதுவாகின்றது? ஆகலான் அந்தப்பகவானாகிய பர்க்கனே எனது புத்தியை எவுகின்றவன். முனிவர்களெல்லாரும் சிவமந்திர ஜபத்தை யே விரும்புகின்றனர். சகலவித்தைகளையும் பிரகாசிக்கச் செய்வதா கிய சிவமந்திரமிருக்கும்பொழுது மற்றமந்திரங்கள் ஆதிக்கியத்தைப் பெறுவனவல்ல. அவையாவும் அவலமாய் ஜபிப்போர்க்கு ஆயாசத் தைத்தருவனவேயாம். ஆகலின் அவைகளை விசேஷமாய் ஜபஞ்செய் வதால் அடையும் பயன்யாது? ரசமற்றமரங்களை வளர்ப்போர்க்கு அவை மலர் கனி முதலியவற்றை எப்படித்தராவோ அதுபோலச்சிவ மந்திரமற்ற ஏனையமந்திரங்களை எவ்வளவு ஜபஞ்செய்யினும் அவை பயன்றரா. மலடியானவள் வித்தியாவிசாரதனாகிய மைந்தனை யெவ் வாறு பெறமாட்டாளோ அதுபோலச் சிவநாமமற்ற மலடாகிய மந் திரங்களும் பயனளிப்பனவல்ல. சிவநாமமென்னும் நல்லநீரால் மந் திரமாகிய விருக்ஷம் வளர்ந்து மஹேஸ்வரனாகிய பலனைத்தருகின் றது. சூரியன் ஆயிரங்கிரணமுடையோனாயினும் உதயகிரியையடை

ந்தே மஹாந்தகாரத்தைத் தொலைப்பதுபோல மந்திரங்களும் சிவ நாமத்தை யடைந்தே தன்னை ஜபிப்போர்க்குச் சகலதுக்கங்களையும் நீக்கி விரும்பிய சித்தியைத்தருகின்றன. தினங்கள் சூரியனோடுகூடா வாயின் அவை எவ்வாறு விளங்குவனவன்றோ அவ்வாறே சிவநாமத் தோடு கூடாத மந்திரங்களும் விளங்குவனவன்று. மந்திரங்களென் னும் தினங்கட்கு இக்தப்பர்க்க சப்தமே பாஸ்கரன் (சூரியன்). பாஸ் கரனிராவிடில் தினங்களுமில்லை. பகலின்றன்மையுமில்லை. அப்படி யே சிவமந்திரமில்லாவிடின் மந்திரங்களுமில்லை. அவைகளின் தன் மையுமில்லை. மஹான்மாவாகிய தேவரீரால் முதலில் சிருஷ்டிக்கப் பட்டதும் சிவமந்திரமே. ஆகலான் அம்மந்திரத்துடன் ஏனையமந் திரங்கள் கூடாவிடில் அவைஜபிக்கத்தக்கவையன்று. ஸ்திரீகளுக்குக் கண்டத்தில் மாங்கலிய சூத்திரம் இராவிடில் அவர்கள் எவ்வண்ணம் மங்களஹேதுவாகாரோ அவ்வாறே மந்திரங்களும் மங்களஹேதுவா கியசிவமந்திரமில்லாவிடில்மங்களஹேதுக்களாகா.மந்திரங்களுக்குள் சிவமந்திரமே மங்கல சூத்திரமாயுள்ளது. மங்கல சூத்திரமிழக்கப் பெற்றவள் பற்பல ரத்னாபரணங்களையணிந்தாலும் சுமங்கலி என்கிற பெயர் எப்படிப் பெறுவதில்லையோ அப்படியே சிவமந்திரமற்ற மந் திரங்கள் மங்களத்தைப் பெறுவனவன்று. ஓ முனிவரே ! கன்றீன்று பால்கறவாத பசுவால் என்னபயனோ அப்பயனே சிவமந்திரமற்ற மந்திர ஜபத்தாலுமாம். கர்ப்பத்துடன் கூடிய பசுவானது எப்படி ஆதரிக்கத்தகுந்ததோ அப்படியே சிவமந்திரத்துடன் கூடிய மந் திரமும் சகல மேதாவியர்களாலும் எப்பொழுதும் ஜபித்து ஆத ரிக்கத்தகுந்தது. ரத்னகர்ப்பையாகிய பூமியானது எப்படிச் சிறந்த பயனைத்தருகின்றதோ அப்படியே சிவமந்திரத்தையடைந்த ஏனைய மந்திரங்களும்சிறந்த பயனைத்தருகின்றன. புத்திரப்பேறற்றவள் பதி விரதையாயினும்எப்படிப்பிரகாசிக்காளோ அப்படியே மந்திரங்கள் சிவமந்திரத்தை யடையாவிடில் பிரகாசிக்க மாட்டா. சிவமந்திரப் பிரவேசத்தாலேயே மந்திரங்கள் மந்திரத்தன்மையுடையன வாகின் றன. அஃதிராவிடில் மந்திரத்தன்மையற்றவையாம். சிவ சப்தத் தினது மகிமையையறிய என்னாலும் வேதங்களாலும் முனிவர்களா லும் தேவர்களாலும் முடியா. இவ்வுண்மையால் சிவமந்திரமில்லாத மந்திரங்கள் ஜபயோக்கியமாகாவென முனிவர்களால் நிச்சயிக்கப்ப ட்டன. ஓ பர்க்கனே ! எனது மந்திரமானது உனது மந்திரமின்றி ஜபிக்க யோக்கியமற்றிருப்பதால் நான் மிகவுந் துக்கிக்கின்றேன். இத்துக்கமானது தேவரீரது கருணையின்றி யான் நீங்குவ தெங்ஙனம்?

தேவரீர் பிரசன்னராயின் அடையப்பெறாதனவுமுளவோ? ஓ இறைவனே! வேதங்களாலுங் காணக்கூடாத சொரூபம்யாதோ அதனைக் கண்ணுற்றேன். ஓ பரமேஸ்வரா! என்னிடங் கருணைகூர்வாயாக.

ஓ மஹேஸ்வரா! தேவரீருக்கு நமஸ்காரம். ஓ விருஷபத்துவஜரே! ஓ கிரிஜாதிபா! வித்யாசொரூபா! ஓ பரமாத்ம சொரூபா! ஓ சுவர்க்காபவர்க்கப்ரதா! (சுவர்க்கமோக்ஷங்களைக் கொடுக்கும் இறைவனே!) ஓ சம்போ! உமக்கு நமஸ்காரம். உமதுபாதாரவிந்த தரிசனத்தினால் ஆனந்தக் கடல்போற் பொங்குகின்றது! விபத்துக்களெல்லாம் தொலைந்தன. ஓ இறைவனே! உமதுபாதாரவிந்தத்தில் செலுத்திய சித்தத்தையுடைய மனிதன் அடைவது சுபந்தவிரமற்றுயாதுமில்லை. தேவரீர் அணுவினும் அணுவாய் மகத்தினும் மகத்தாய் ஆன்மாவுமாய் அவ்வான்மாக்களது இருதயகுகையில் விளங்குகின்றவரன்றோ? அக்குகையின்கண் நித்யசித்தரான தேவரீரைத் தேவரீரது பிரசாதத்தாலேயே கண்டவன் சோகமற்றவனாகின்றான். உமாசகாயனும் பரமேஸ்வரனும் திரிலோசனனும் நீலகண்டனும் பூதயோனியனும் (சகத்காரணனும்) சகலசாக்ஷியனுமாகிய தேவரீரைத் தியானித்த முநிவன் தமசை (அஞ்ஞானத்தைத்) தாண்டுகின்றான். ஓ இறைவனே! அவ்யக்தரூபமாகிய பரமாத்ம தத்வத்தை வேதவேதாந்தங்களுமறிந்தில. அது ஈஸ்வரனாகிய தேவரீரது திருவடிப்பிரசாதத்தினாலேயே யறியக்கூடியது. ஓ ஈஸ்வரா! வேதங்களாலும் ஏனையோராலுங் காண்டற்கரிய தேவரீரது திவ்ய திருவுருவத்தை யான்செய்த பாக்கியவசத்தால் காணப்பெற்றேன். ஓ என்னாண்டவனே! யாதொருவனது பாதபத்மத்தை ஸ்மரிக்கும் விஷயத்தில் பிரவர்த்தித்தவர் கிருதாந்தனாகிய இயமனாற்கூறப்படுங் கடுஞ்சொலைக்கடந்து ஆனந்தக் கடலில் மூழ்கிச் சம்சார தாபங்களினின்றும் விடுபட்டவராகின்றனர் என்றுகூறப்பட்டவிறைவன் தேவரீரன்றோ? ஓ மஹேஸ்வரா! தேவரீரது சரணாரவிந்தத்தை இருதயகமலத்திற் கண்டு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் தாரைதாரையாய்ப் பெருக உள்ளடங்காத ஆனந்தத்தை யனுபவிக்கப்பெற்றவர் தீரரேயன்றி ஏனையோரல்லர். ஓ சுவாமின்! தேவரீரது பாதாரவிந்தத்தை அதிக சமீபமாய்த்தன்னுடைய இருதயகமலத்தில் ஓர் கணப்பொழுதேனுங் காணப்பெற்றோன் ஈனகுலத்தானாயினும் அவன் மேற்குலத்தானென்பதைக் கேட்கவும் வேண்டுமோ? சுவர்க்காபவர்க்கங்களைக் கொடுக்கும் ஈஸ்வரனாகிய தேவரீரைப் பல இடையூறுகளுடனைது பஜிக்குந் தன்யர்களே முக்தர்களாகிய ஆஸ்திக சிரோமணிக

ளாவார். அவர்களே அனந்தகல்யாணகுண பரம்பரைகளிற் பொருந்திச் சங்கரனைப் பூஜித்துக்கொண்டு விளங்குகின்றவராவர். எந்த ஆபத்தையும் ஓர் பொழுதுங்காணாத பாக்கியவான்களுமாவர். என்னிடமுள்ள தேவரீரது பிரசாதமே இப்படிப்பட்ட தேவரீரது பாதாரவிந்த தரிசனத்தைத்தந்ததும் ஆனந்தப்பெருக்கைத் தருகின்றதுமாம். கருணைக்கடலாயுள்ள தேவரீரை ஸ்மரித்துச் சந்தோஷசாகரத்தில் மூழ்குகின்றவர் தேவரீரது திருவுருவத்தைக் கண்ணாரத் தரிசிக்கப்பெற்றால் அவர் உடனே என் பேரானந்தம் பெறுதொழிவார்? ஓ சம்போ! தேவரீரிடம் எவனுக்குத் திடமானபக்தியுளதோ அவனுக்கே சகலசுகங்களும் சகல ஐஸ்வர்யங்களுஞ் சித்திக்கின்றன. அப்படிப்பட்ட பக்தியுண்டாதல் மிகவும் அரிதே! எவனால் மஹேஸ்வரனாகிய வுமது பாதார்ச்சனையென்னும் சிவதருமம் சிறிதேனும் வழுவின்றிச்செய்யப்பட்டதோ அவனுக்கு முன்கூறியபக்தியெனும் சுபப்பிரவாகம் துர்லபமாகுமா? ஆகலான் ஓசம்போ! என்னுயகனே! எனது மந்திரத்தில் "பர்க்க" வெனும்பதம் பிரவேசிக்கும்படித் தேவரீரனுக்கிரகஞ் செய்யவேண்டும். ஓ பகவானே! இஃதே என்னால்வேண்டப்படும் வரமென்று காயத்திரிதேவி பிரார்த்திக்கப் பரமேஸ்வரன் அவ்வண்ணமே ஆகுகவென்று அருள்புரிந்து அவளால் பூஜிக்கப்பெற்ற சிவலிங்க மூர்த்தியில் கணங்களோடு பிரவேசித்தனர். ஓ முனிவரே! காயத்திரி தேவியினால் பூஜிதமானலிங்கத்தை எவன் பக்தியுடன் பூஜிக்கிறானோ அவன் சகல சித்திகளையுமுடையவனாய்ச் சித்தருள் சிறந்தவனுமாகின்றான். ஓ முனிவர்களே! அதுமுதல் காயத்திரி ஜபிப்பதற்கு யோக்யமாய்ச் சுவர்க்காபவர்க்கங்களை யளிக்கின்றவளாயினள். பர்க்கரும் பர்க்கத்வமெய்தினார். எவன் புண்ணியமாகிய காயத்திரி தோத்திரத்தைச் சிவத்தியான பூர்வகமாய்ப்படிக்கின்றானோ அவன் காயத்திரி ஜபத்துக்குரிய பயனையுமந்திரசித்தியையும் பெற்றவனாகின்றான். இப்படிப்பட்ட அபார மகிமையுள்ளசிவனை எவன் அர்ச்சிக்கவில்லையோ எவன் தியானிக்க வில்லையோ எவன் ஸ்மரிக்கவில்லையோ அவனது ஜன்மம் அவலமன்றோ? ஆசாரசீலத்தோடு சாந்தராய்ச் சிவத்தியான பூர்வகமாய்ச்சிவமந்திர ஜபஞ் செய்கின்றவர் சிவனையேயடைகின்றனர். ஆகலின் சிவமந்திரத்தோடு கூடாத மந்திரங்களை யெவ்வகையானுஞ் ஜபித்தல் கூடாது. சிவமந்திரத்துடன் கூடிய மந்திரங்களே எப்பொழுதும் ஜபிக்கத்தக்கது. அங்ஙனமாயின் ஜபிக்கக் கூடாதென்கிற மந்திரங்களும் வேதத்திலுள்ளனவாயினவே யென்றால் வேதத்திலுள்ளதென்றது

னுன்மாத்திரம் அவை ஜபிக்க யோக்கிய மாவதில்லை. எங்ஙனமெ னின் சுத்தமாகிய ராஸப என்றுஞ் சொல்லானது ஜபிக்க யோக்ய மாகவில்லையோ? அதுபோலென்க. பூவுடன்கூடியநாரானதெப்படிச சிரோபூஷணமாகின்றதோ அதுபோலச் சிவமந்திரத்துடன் கூடிய மந்திரமே கண்ட பூஷணமாம். இச்சிவமந்திர ஜபத்தைப் பரமாய்க் கொண்டவனையே முத்தியென்னுங் கன்னிகை பற்றுகின்றாள். இது வன்றியும் சமுத்திர முழுவதும் ரத்ந கரத்வத்தைப் பெறுவதல்ல. ரத்னங்களோரிடத் திருப்பது பற்றியே அது ரத்ந காமென்னும் பெயர் பெற்றது. அஃதில்லையாயின் அப்பெயர் பெறுவதெங்ஙனம்? அன்றியும் அச்சமுத்திரத்தில் திரணமுதலியவைகளுள்ளனவாயிருக் கின்றனவே அவற்றுள் யாதானுமொன்று கிரீடத்திற் பதிப்பிக்கத் தக்க யோக்கிய முடையதாகின்றதா? இனிச் சமுத்திரத்திலுள்ளது பற்றிப் பொருள்களுக்குச் சிறப்பா? சிறந்த பொருள்களைப் பற்றிச் சமுத்திரத்திற்குச் சிறப்பாவெனின் சிறந்த இரத்தினத்தைப்பற்றியே சமுத்திரத்துக்குச் சிறப்பைக் காண்கின்றோமேயன்றிச் சமுத்திரத்தி லிருப்பது பற்றிப் பொருளுக்குச் சிறப்பைக் காண்கின்றிலம். அங் குள்ள மணல் கல் முதலியவைகளை இரத்னங்களைப்போல் யாருஞ்சிர சில் சிறந்ததாகத் தரித்துக் கொள்ளாமையால். இங்ஙனங் கூறிவந்த முறைமையான சிவமந்திர ரத்னமானது வேதரத்நகரத்திலுள்ளது. அதுவே கிரகிக்கத்தக்கது. அதுவே ஜபஞ் செய்வதற்கு யோக்ய மானது. அது நீங்கிய ஏனைய மந்திரங்கள் ஜபிக்கத்தக்கவைகளல்ல. இன்னமும் எவ்வளவென்று கூறுவேம். இனி மிகக்கூறுவதினின்று மொழிவாம். சிவசப்தமானது பராத்பரனாகிய சிவனென்றேயறிக. சிவலிங்கமும் அதுபோலவே. சிவன் சிவலிங்கம் உருத்திராக்ஷம் வெண்மைநிறம்பொருந்தியவிபூதி இவையெல்லாம் ஓமுனிபுங்கவரே! மஹாபாக்யத்தால் கிடைப்பனவாம். சத்துக்கள்சாம்பவராய்த்தோ ன்றிச் சிவனைத்தியானித்து விபூதியையும் சிவமந்திரத்தையும் சிவலிங் கத்தையுமடைந்து பாவபந்தத்தினின்றும் நீங்குகின்றனர். விபூதிருத் ராக்ஷ மணிந்த யாம் சாம்பவர்களே! யாம் பூசிப்பது சிவலிங்கத் தையே. யாமெப்பொழுதுந் தியானிப்பது சிவனொருவனையே. நமது பாக்யத்தால் மந்திரமும் பர்க்கபதத்தைப்பெற்றது. சுத்தாத்மாக்கள் ஜபஞ்செய்து பற்பல கிலேசங்களைப் போக்கிக் கொள்வதற்கென்றே ருத்ராத்தியாயத்தில் பஞ்சாக்ஷரம் அமைக்கப்பெற்றுளது.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

பார்வதிநந்தனாயநம:

# மூன்றும் அத்தியாயம்.

## வியாஸமுனி சம்வாதம்.

சூதர் கூறுகின்றார். ஓ நைமிசாரண்ய வாசிகளாகிய முநிவர்களே! இவ்வாறு கூறிய அவரது வசனத்தை முநிவரெல்லாங்கேட்டு ஆனந்தக்கண்ணீரா னிறைந்தவர்களாய்ச் சிவபூஜையிற் சென்றமனமுடையவர்களாய்ச் சிவதத்வ வுபதேசகராகிய வியாசரை நமஸ்கரித்து எங்களையனே! மீண்டும் எங்கட்குச் சிவதத்வத்தையே வுபதேசிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டு ஓ பகவானே! சிவபெருமானை எப்படிப் பூசிக்கவேண்டும்? சிவதருமங்களென்பனயாவை? சிவாசாரவான்களென்பவர் யாவர்? சிவபெருமான் எதனால் பிரசன்னராகின்றார்? பார்வதியாருக் கெப்பொழுது சிவசம்பந்தமான ரகசியங்கூறப்புட்டது? அவரிருக்குமிட மெப்படிப்பட்டது? அவ்விடத்தின் பிரமாணம் எவ்வளவு? அங்கிருக்கின்றவர்யாவர்? இவைகளையெல்லாம் நன்று யெங்களுக் குரைத்தருளல் வேண்டுமென்று வினவ வியாசர் கூறுகின்றார்.

சிவார்ச்சனையில் விருப்பமுற்ற ஓ முனிவர்களே! நீவிர் நன்கு வினவினீர்கள். இதனை நீங்கள் கேட்டமாத்திரத்தில் எனக்குப்பேரானந்தம் பெருகுகின்றது. பாவமென்னும் பர்வதங்கள் புண்ணியக் கடலில் மூழ்கிப்போயின. மஹாசாம்பவர்களாகிய வுங்களது சேர்க்கையால் பிறவிக்கடலும் மூழ்கிப்போகின்றது. சிவதருமங்கள் பரிபாகிகளுக்கே வுபதேசிக்கத்தக்கன. ஆதலின் நீங்களனைவரும் விரும்பியபடி என்னாலிப்பொழுது சிவப்பிரபாவங் கூறவேண்டியது அவசியமே. ஓ முனிவர்களே! மேருபர்வதத்திலுள்ள கொடுமுடிகளில் உன்னதமாக ஓர் கொடுமுடியுளது. அதனினுமுயரமான சிருங்கம் ஓரிடத்தினுமில்லை. அச்சிருங்கத்தின்மேல் ஒரு ரத்னமயமாகிய மாளிகையுளது. அம்மாளிகையின் மஹிமையானது வேதங்களுக்கும்விஷயமாகாது. அது ஓர்பரார்த்தயோசனை உயரமுளது. எட்டுத்திக்குகளிலும் வியாபித்துத் திக்குகளின் முடிவினுஞ் சென்றுளது. அம்மாளிகைச் சிருங்கத்தில் சூரியசந்திரர்களுடைய கிரணங்கள் செல்லுவதில்லை. சூரியசந்திரர்களென்கிற வார்த்தைகளும் அவ்விடத்தில் வழங்குவதில்லை. அம்மாளிகையின் பக்கங்களில் எப்பொ

றுதும் புஷ்பித்துக்கொண்டிருக்கும் தேவவிருக்ஷங்கள் நெருங்கியிருக்கும். அமிர்தப்பிரவாகத்தினைப்போலும் ரத்னங்கள் குளிர்ந்த கிரணங்கள் வீசிக்கொண்டிருக்கும். அக்காந்திப்பிரவாகத்துக்குஓர்காலத்தினு மழிவில்லை. அம்மாளிகையின் மத்தியில் ரத்ன மண்டபங்கள் கோடியாக வெண்ணப்பட்டிருக்கும். அம்மண்டபங்கள் விசித்திரமாயமைக்கப்பட்ட எண்ணிறந்த ரத்னமேடைகளுடனும், எண்ணிறந்த இரத்ன சிருங்கங்களுடனும், இரத்ன மயமாயும் மிகுந்த விசாலமாயுமுள்ள துவாரங்களுடனும், கோடிக் கணக்கினும் அதிகமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். மற்றும் அங்குள்ள சிறுவாயில்களைக் கணக்கிடக் கற்பாந்தகாலம்வரையில் தேவர்கள் சொல்ல வெண்ணினுலு முடிவுறா. மற்றும் அங்குள்ள அழகிய தேவ விருக்ஷங்களினடியில் மனதைக் கவரும் அழகிய மேடைகளும் அம்மேடைகளில் சிவலிங்கங்களும் கோடிக்கணக்காய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அவ்விலிங்கங்களின்மேல் அவ்விருக்ஷங்களிலிருந்து பெருகாநின்ற அமுத்தாரையையே மலர்த் தேனைக்கொண்ட மலர்க்குவியலின் மகரந்தங்கள் அபிஷேகஞ் செய்வதுபோல் வீழ்ந்து எங்கும் பரவிப்பெருக்கெடுத்தோட அச்சிவலிங்கங்கள் அக்னிச்சுவாலைபோல் சோதிமயமாய்விளங்கும். அம்மலர்களாற்பூசிக்கப்பட்டு இரத்னமயமான மாளிகைகளின் காந்திகள் எட்டுத்திக்குகளிலும் தீபவரிசைபோற் பிரகாசிக்க, மலர்களிற்படிந்துவரும் தென்றற்காற்று உல்லாசமாய்ப் பரவ, அவற்றுல் விளங்கும் சிறப்பைச்சொல்ல முடியுமோ? இரத்ன மேடைகளின்சிறப்புஇங்ஙனமிருக்கஅம்மாளிகைகளினது துவாரப் பிரதேசங்கள் ஒவ்வொன்றினும் தேஜோமயமாய் விளங்கும் மேனிகளைப்படைத்துள்ள கணங்கள் கோடி கோடியாய்ப் பிரகாசிப்பார். அவர்களுடைய பிரகாசங்களே சோமசூர்யாக்னிபோல் எக்காலத்தும் பிரகாசிப்பதால் இருளென்னுஞ் சொல்லும் சூரியசந்திர தீபாதிகள் வேண்டுமென்னுஞ் சொல்லும் அங்கில்லா தொழிந்திருக்கும். இத்தன்மையான துவாரபாலர்கட்கு அங்குள்ள தேவவிருக்ஷங்களினுடைய கனிகளின்ரசமே திவ்யாமிர்தமாயிருப்பதால் அவர்கட்கொருநாளும் தேவருண்ணும் அமிர்தத்தில் விருப்ப முண்டாவதில்லை. இங்ஙனமான விருக்ஷங்களாற் சூழப்பட்ட மாளிகைப்பந்தியினடுவில் கோடியோசனை விஸ்தீரணமும் உன்னதமுமுடைய ஓர் சிருங்கமண்டப வேதிகையில் நவரத்ன மயமான சிம்ஹாசன மொன்றுளது. அச்சிங்காதனத்தின் மீது பராத்பரரும், சோதிமயரும், தியானிப்போரது மனோவாக்குகளுக்குவிஷயராய்ப் பாற்கடல்போல்

விளங்குபவரும், பஸ்மபூஷிதரும், பற்பல பரிமளத் திரவியங்கலந்த திவ்ய சந்தனலேபரும், திரிபுண்டரத்தால் விளங்கும் நெற்றியரும், ருத்திராக்ஷாபரணங்களோடு அளவிறந்த திவ்ய ரத்னங்களாலமைக் கப்பெற்ற தோள்வளை பற்பலரத்னங்களிழைத்தகழுத்தணி முதலிய வற்றையணிந்த திருமேனியருமாய், இரத்னவகைகளால் விளங்கும் குடைநிழலின்கண், இரத்தின தண்டங்களுடன் விளங்கும் அற்புத சாமரங்கள்வீச இரத்னங்களாலிழைக்கப்பெற்ற விருஷபமுத்திரையு டன்கூடிய பற்பலதுவஜங்கள்சூழச் சுகசமுத்திரம் போன்று சங்கரர் வீற்றிருப்பர். மஹாப்பிரபுவாகிய அம்மகேசரைச்சிவகணங்கள்கண்டு தூரத்தில்நின்று நடுங்கிவணங்கிப்பொற்பிரம்புபிடித்தகைகளுடையவ ராய் நிரைநிரையாய் நிற்பர். அம்மேரு மூலத்தில் நாராயணாதிதேவர் களும் கந்தர்வகின்னராதியரும் பற்பல அரியஸ்தானங்கள் பெற்று அங்கிருப்பவராயினும் அவர்கள் அச்சபையின்கண் சிங்காதனத்தரு கிலுஞ் செல்லுதலரிது. செல்லுதலே அரிதாயின் அப்பெருமானது திவ்யாலங்கார முதலியவற்றை எங்ஙனங்கண்டு களிக்கப்பெறுவர். இ றைவனது ஆலயந்தான் காணக்கூடாதாயினும் அவரது மக்களாகிய ஸ்கந்தகணேசர்களது ஆலயங்களை யாவது காணப்பெற்றுக்களிப்ப ரோவெனின் அவையும் அப்படியே. இங்ஙனமான வருஞ்சிறப்போ டுகூடிய அம்மேரு நடுவிலுள்ள கைலாயத்தில் இறைவன் ஒவ்வோர் சமயம் உல்லாசமாய் லீலாவிக்ரஹ சுந்தரராய் வந்தருளுவார். நாரா யணன் முதலியோர் ஒரோர்சமயம் தரிசனஞ் செய்ய வருவர். அங்கும் நந்திகேச்வரரது பிரம்படிக்குப்பயந்து கைலாயத்துள்ளே செல்லாமல் தூரத்தினின்று நமஸ்கரித்துச்செல்லுவர். இவ்வாறு யாவரானுங் காண்டற்கரியராய் விளங்கும் மகாதேவரைப் பார்க்க ஓர் சமயம் இமயமலையிலிருக்கும் பார்வதியார் ஆவலுடையவராய்ப் பர்வதராஜனை வணங்கி என்தந்தையே! சுந்தரங்களுக்குள் சுந்தர மாயும் கலியாணங்களுக்குள் கலியாணமாயும் பாவனங்களுக்குள் பாவனமாயும் புண்ணியங்களுக்குள் புண்ணியமாயுமுள்ள மேருமலை யில் திவ்ய சிம்ஹாசனருடராய் விளங்கும் லோமசங்காரான சங் கரரை இப்போது தரிசிக்க வேண்டுமென்கிற விருப்பம் மிகவுமுடை யவளாயிருக்கின்றேனென்றுகூற சைலராஜன் அதனைக்கேட்டுக் கண் களினின்றும் நீர்ததும்ப மிக்க விஸ்மயத்துடன் ஓ என்தாயே! நீ எண் ணியபடி உன்னைச் செலவிடுத்து நானிங்கிருப்பதற்கு எனதுள்ளம் எப்படித்துணியும்? அன்றியான் உன்னுடன் வரவேண்டினால் நம் பெருமானிருக்குமிடம் சூரியகிரணங்களும் செல்லுதற்கரிய சேய்

மைக்கண்ணுள்ளதன்றோ? அவ்விடத்தில் யான் வருவதெப்படி? ஓ என்செல்வியே! இதனால் உன்னுடன் வருவதற்கும் உன்னைவிட்டுப் பிரிந்திருப்பதற்கும் என்னால் முடியவில்லை யென்று மேனையுடன் தந்தை கூறும் வசனத்தைக்கேட்டுப் பார்வதியார் மனம் இரங்கினவராய்த் தாய் தந்தையரது மனக்கலக்கத்தைநோக்கிப் பர்வதராஜனைப்பார்த்து என் தந்தையே! நான் சாயங்காலமாவது அல்லது நாளையாவது திரும்பிவருகின்றேன். இஃதுண்மை. நீகவலையொழிகவென்று கூறியதேயன்றிப் புறப்பட்டுப் போதலையும் விட்டுத் தாய்தந்தையரது மனம் வாட்டமுறாவண்ணம் வேடிக்கையான வார்த்தைகளாலும் மனோல்லாசமான செய்கைகளாலும் திருப்திசெய்து ஒருமாதம் வரையில் வசித்துக்கொண்டிருந்தனர். அந்த ஒரு மாதம் வரையில் தாய்தந்தையரும் அவர் மகிழும்வண்ணம் பற்பல வுபசார சந்தோஷ சாதனங்களைச் சலியாது நடத்திவந்தனர். இவர்கள் செய்தியிங்ஙனமிருக்கக்கயிலாயநாதர் தேவியின்மனநிலையை யறிந்துநந்திதேவரைப் பர்வதராஜனிடமனுப்ப அவர்திவ்யகணங்களுடன்சைலராஜனைநோக்கிவர, சைலராஜன் அவரைப்பார்த்துத்திடுக்கிட்டெழுந்தோடிவந்து ஆனந்தபரவசனாய் ஆசனமளித்து அர்க்கியபாத்யாசமனங்களாலுபசரித்து அதிகவிநயத்துடன் ஓ ஸ்வாமின்! ஓ நந்தி நாதரே! தாங்களெங்கிருந்து வருகின்றீர்? சங்கரர் சவுக்கியமா? தேவரீர் இங்கு வந்ததனால் அடியேன் தன்யனாயினேன். வந்தகாரியம் யாதோ அதனையருள்புரிமின் என்று கூறவே, நந்தீசர் ஓ கிரிராஜனே! சங்கரர் சௌக்யமாவென்றீரே, எவரை ஸ்மரிப்பவருக்குஎப்பொழுதும் சுகமே சித்திக்கின்றதோ, அச்சுகஸ்வரூபர்சங்கரரன்றோ? அவருக்கு அசுகம் எங்கிருந்துவரும்? அவர் குசலதாதாவாயுள்ள மஹாத்மாவன்றோ? ம்ருத்யுவைஜயித்த அவருக்கு ம்ருத்யுவென்னும் வார்த்தையுமுண்டோ? சர்வவியாதிவிநாசகரும் நாமோச்சாரண மாத்திரத்தால் பிணிக்காடாகிய சம்சாரபாசத்தைத் தொலையச்செய்பவருமாகிய அவ்விறைவனுக்கு வியாதியென்னுஞ் சொல்லுமுண்டோ? எவனதுகண் மூடப்பட்டதாயின் பிரமனாதியர்க்கும் பிரளய முண்டாகின்றதோ அப்படிப்பட்ட பிரளயசித்தாகிய இறைவனுக்குச் சுகமுள்ள தென்பதிற் சந்தேகமுண்டோ? அவரொழிந்த நாராயணாதியர் லயமடைதலை அவரதுஅனுக்கிரகப்பிரசாதத்தால்யான்கண்டுவருகிறேன். மஹா ம்ருத்யுஞ்சயனென்று வேத வேதாந்தங்கள் அவனைப் போற்றுகின்றன. ருத்திர மூர்த்தியால் துதிக்கப்படும் அவ்விறைவன் எப்பொழுதும் குசலமுடையானென்றறிமின். இனி

யான் வந்ததையும் எனது நமஸ்காரங்களையும் அம்பிகைக்கு அறி விப்பதோடு மஹாதேவனது பூஷணமாகிய இவ்வங்குளியத்தையுங் காண்பிக்கவேண்டும். அதனால் அம்பிகையார் ஆனந்தமுறுவாரென்று நந்திகேஸ்வரர் கூறியதை இமவான் பரமசந்தோஷத்துடன் கேட்டு மோதிரத்தைப்பெற்றுக்கொண்டு அம்பிகைக்குத் தெரிவித்து அம் மோதிரத்தையுங்கொடுத்தனன். ஜகதீஸ்வரியும் ஹரவல்லபையுமா கிய கிரிகன்னிகை பரமபக்தியுடன் அதனை வாங்கிச் சிரசால்வணங்கி அம்மோதிரத்தைக்கண்ணிலொத்தி ஆனந்தபரவசராய்த் தன்னைமறந் து சிவத்தியானமுடையவராய் நின்றனர். அப்படி நின்ற அச்சிறு காலம் உயிர்கட்குப் பலகாலமாயிற்று. பின்னர் தன்னுணர்ச்சி வந்து பர்வதராசனைப்பார்த்து விஸ்வாத்மாவாகிய மஹாம்ருத்யுஞ் சயரைப்பற்றி நாம் குசலவினாவினவுவது தக்கதாமா? எப்பொழு தும் குசலமுடையரென்பது யாமறிந்ததேயன்றோ? அஃதறிந்தும் நம க்கு அவரிடத்தில் அகுசலமென்னும் புத்தி எப்படி யுண்டாயிற்று. அவர் மஹாகாலகாலரன்றோ? அப்படிப்பட்டவரைக்குறித்து வே றுவிதமான சங்கை எப்படியுண்டாகலாம்? அபம்ருத்யுவையும் எவ னதுஸ்மரணமாத்திரத்தினால் தொலைக்கின்றனரோ அப்படிப்பட்ட ச ங்கரராகிய இறைவரன்றோ நமது பதி? எவரது பாதாரவிந்தஸ்மர ணத்தினால் மஹாவியாதிதொலைகின்றதோ அப்படிப்பட்ட சுகதா தாவை நமது பாக்கியத்தாலன்றோ பதியாகப் பெற்றுளோம்? எவ னைச் சர்வதமனையென்று வழங்குகின்றனரோ அவள்நாமேயன்றோ? அப்பெயரும் நமக்கு அவரது பாணிக்கிரகணத்தினாலன்றோ வந் தது? தேவர்கள் சுகதாதாவான எந்த மகாதேவரைப் பூஜிக்கின்ற னரோ அந்த ஆதியந்தமற்றவரான அவரேயன்றோ நமக்குப்பர்த்தா வாகவிருக்கின்றவர்? பக்தியோடு சங்கரரைப்பூசிக்கின்றவரே பாக் யங்களுக்குரியவராகின்றபொழுது அவருடன்பிரியாது யாவர்க்குஞ் சௌபாக்கியந்தந்தருளுகின்றவராகிய நமக்கு எப்பொழுதும் என் சௌபாக்கியமிராது? சௌபாக்யந் தந்தருள்வோனாகிய அவனது பாதபத்மங்களில் நியமத்தியானமுடைய நமக்குச் சௌபாக்கிய கு சலசுகங்கள் எப்பொழுதும் வளர்ந்தோங்குவதேயாம்.

மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.

பிரபவேஸம:

# நான்காம் அத்தியாயம்.

## தேவி கைலாயஞ் செல்லுதல்.

வியாசர் கூறுகின்றார். ஓ முனிவர்களே! இவ்வாறு கூறிய அம்பிகையின் வசனத்தைப் பர்வதராஜன்கேட்டு மிகவுஞ் சந்தோஷித்தவனாய் மேனையைநோக்கி ஓ பிராணநாயகி! பிரமதநாதரும் கணநீசருமாகிய நந்திகேஸ்வரர் வந்து என்னிடம் சில சமாசாரங்கள் கூறினார். அம்பிகையும் பரமேஸ்வரனிடத்துப்போக முன்னமே எண்ணங்கொண்டிருக்கின்றாள். நாம் இனி அங்குபோகும் விஷயத்தில் இடையூறாய் மொழிவது தக்கதல்ல. ஆகலான் அம்பிகை சந்தோஷிக்குமாறு பிரயாணத்துக்கு வேண்டியவற்றைச் சீக்கிரம் யத்தனஞ்செய்வாயாக. இனி அநேககாலம் இங்கிருப்பதற்கு அம்பிகை விரும்பியிருப்பதாகவுனக்குத்தெரிகின்றதா? பதிவிரதை பதியைவிட்டுவேறிடமிருக்க விரும்புவாளா? பதிசேவையைச்செய்தலென்னுந் தருமமொன்றே சகல தருமங்களையும் வளரச்செய்யும். அதுவே அவரது அனுக்கிரகத்துக்கு ஏதுவாகும். இஷ்டசித்தியுண்டாதல் போல அன்னியமாயுள்ள மற்றெந்த தர்மங்களாலுண்டாவதில்லையாம். ஆதலால் சந்தோஷத்தோடுகூட அம்பிகையையனுப்பவேண்டும். அனுப்பாவிடில் பிரமதநாதருக்குக் கோபமுண்டாகாதிராது, ஆகவே அம்பிகை சந்தோஷிப்பதற்குரியசிறந்த ஆரங்கள் பட்டுகள் திவ்யாபரணங்கள் மஹாரத்தினங்களிழைத்த கேயூரங்கள் சாகரத்தினின்றுங்கொண்டுவந்த சிறந்தரத்னாபரணங்கள்முதலிய ஆபரணங்களையெல்லாம் கோடிகோடியாய்க் கொடுக்கவேண்டும். இவைகளெல்லாம் அம்பிகைநிமித்தமாகவே பெருமுயற்சியால் வருவித்துள்ளேன். ஓ பிரியே! சீக்கிரமாய் அறுசுவையுடன் பற்பல விசித்திரமான பக்ஷயமுதலிய சிற்றுண்டிகளமைந்த ஆகாரங்களையும் கற்பகவிருக்ஷத்திற்றோன்றிய அமுதரசம் வாய்ந்த கனிகளையும் நீ சாக்கிரதை செய்தனுப்பவேண்டும். இதுவன்றி மேருமலைக்குப்போகும் வரையில் மகாமேருசிகரங்களைச் சூரியகிரணம் தெரியாவண்ணம்மறைப்பதாகிய தேன்றுளிசிந்தும் நறுமணங்கமழும் மலர்களாலமைந்த பூம்பந்தல்களையும் நினைத்தவண்ணஞ் செய்யவல்லதிவ்யவிமானங்களையும் சந்திரமண்டலம்போல் பிரகாசிக்கத்தக்க பற்பல வாகனங்களையும்

மேருவையும் பழிக்கவல்ல பற்பலரத்னங்களுடன் கூடிய வஸ்திராப ரணங்களால் அலங்கரிக்கப்பெற்றுள்ள ஓர் சிம்ஹவாகனத்தையும் அனுப்பவேண்டும். மற்றும் பவானியின் சீருக்குத்தக்க பொருள்கள் எவையெவையோ அவைகளும் அநுப்பத்தக்கன என்று இவ்வாறுகூறி கிரிராஜன் அம்பிகையைப்பார்த்து ஆனந்தபாஷ்பம்பொழிந்துஇனியமுகங்காட்டி அதி தீவிரமாய் நந்திகேசரிடம்வந்து அம்பிகையை யனுப்புவதில் யாது தடையுளது? தேவரீர்போஜனஞ்செய்வதற் கெழுந்தருளவாமென்று அன்புடனழைத்துக்கொண்டுபோக அவரும் சந்தோஷத்துடன் அவன் வேண்டுகோளின்படி யமுதருந்தியபின்னர் சந்தனமுதலியவைகளையும் திவ்விய வஸ்திரங்களையும் திவ்வியாபரணங்களையும் மிக்க சந்தோஷத்துடன்கொடுக்க அவைகளையெல்லாம் சிவார்ப்பணமென்று கருதிச் சந்தோஷத்துடன் அங்கீகரித்து மகிழ்ந்தனர். இச்செய்தி யிங்ஙனமிருக்க அச்சமயத்தில் சில கணங்கள் என்னதாமதம்? கணநீசராகிய நந்தீசனையனுப்பியும்யாது காரணத்தால் இதுகாறும்வாராது அம்பிகைதாமசஞ்செய்கின்றாளென்றிறைவன் எங்களை இவ்விடம் அனுப்பினாரென்று கூறிக்கொண்டேவந்தனர். அவர்களை இமவான்கண்ணுற்று அவர்களுக்குச்செய்ய வேண்டிய மரியாதைகளைச்செய்து அம்பிகைவீற்றிருக்குமிடஞ் சென்று சர்வாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ள கவுரியைப்பார்த்து ஓ தேவி! காலதாமதமானதைக்குறித்து இறைவனார் இப்பொழுது சிவகணங்களை யனுப்பியிருக்கிறார். அவர்கள் வந்திருக்கின்றனரென்று கூறிப் பின்னர் மேனையைநோக்கி ஓ பெண்ணே! இப்போது பிரயாணத்துக்குச் சுபகரமானதும் புஷ்ய சம்பந்தமுடையதும் குருயோகம் பெற்றதுமாக இப்பகலிருப்பதால் இச்சுப முகூர்த்தத்திற்றானே அம்பிகை புறப்படவேண்டும். இனிக்காலவிளம்பனஞ் செய்யாமல் சங்கரரது இச்சையை யனுசரித்து நாம் நடக்க வேண்டும். காலவிளம்பனமாயின் மீண்டும் பகவான் தூதரையனுப்புவார். எவன் சிவேச்சையை யனுசரித்துக் காரியஞ்செய்கின்றானோ அவனுக்கெப்போதுஞ் சவுக்கியமே. அங்ஙனஞ்செய்யாவிடில் சௌக்கியம் வருவதெப்படியென்று கூறிக்கொண்டே சீக்கிரமாய்ப் பற்பல வாத்தியங்களை முழங்கச்செய்து அரண்மனைக்குள்ளே சென்று மெல்லமெல்ல அம்பிகையை யழைத்துக்கொண்டு வெளியே வந்து ஓ அம்பிகே! உனக்கு நினைத்தபடி செல்லக்கூடிய விமானங்கள் அற்புதக்கணக்கா யிதோ வந்திருக்கின்றன. சிம்ஹமொன்று உன்னை வகித்துத் தன்யமாகவேண்டுமென்று ஆவலுடன் நிற்கின்

றது. மற்றும் பற்பல வாகனங்கள் வேண்டியபவாறு நிற்கின்றன. இவைகளன்றிப் பற்பல கண்டாபரணங்களையணிந்து விளங்குந் தாசிகளும் உன்னைச்சேவிக்கும்பொருட்டு அற்புதக்கணக்காய் நிற்கின்றனர், இவைகளெல்லா முனக்கு வரிசைகளாதலா லுன்னுடன் கொண்டுபோகலாமென்று கூற கௌரி அவர்கூறிய வசனத்தைக் கேட்டுத் தன் தாயைப்பார்த்து ஓ அம்மா ! நீயும் கிரிராஜனும் இவ்விமானத்திலேறி என்னோடு மேருமலைக்குவந்து திரும்பவேண்டுமேயன்றி இப்பொழுதே நீங்கள் திரும்பக்கூடாதென்று கூறித் தன்தந்தையின் கையைப்பிடித்துக்கொண்டு மெள்ள விமானத்தின் மீதேறினாள். அப்போது தேவதுந்துபிகள் முழங்கின. கந்தர்வநாதர்கானஞ் செய்தனர். நல்ல கந்தத்துடன் சீதளமாய்க்காற்றும் மெதுவாய் வீசியது. தேவர்புஷ்பவருஷம் பொழிந்தனர். அப்சரஸ்திரீகள் நிர்த்தமாடியதுடன் தங்கப்பிடியுடன்கூடிய சத்திரசாமரங்களாலு முபசரித்தனர். இவ்வாறு சர்வோபசாரங்களுடன் தேவிபுறப்பட அப்பொழுது சந்திரமண்டல முதித்ததுபோல் ஓர் மஹா சிம்ஹமானது நம்மை அம்பிகை ஏன் அனுக்கிரகிக்கவில்லையென்பதுபோல் அம்பிகையினெதிரில் நின்றது. அதுபோலவே நிதிகளுடன் சித்திகளும் சந்தோஷத்துடன் அம்பிகையினெதிரில் நின்றனர். மலர்களால் வணங்கிய மந்தாரவிருக்ஷங்களும் ரத்னபாரங்களுடன் ரத்னசாகரமும் வணங்கிவந்து நின்றன. தேவதுந்துபியுமுழங்கின. அத்துவனியைக்கேட்ட உபேந்திரர் சந்தோஷத்துடன் யாதோ க்ஷேமம் வருகிறது. இஃது மஹாதேவரது இருப்பிடத்தைக் குறித்துப்பார்வதி புறப்பட்டுவரும் ஓர் கலியாணகாலமாகும். தரிசனஞ் செய்து புனிதமாகும் சுபகாலம் இஃதே. பூர்வம் கவுரிவிவாக சமயத்திலன்றோ இப்படிப்பட்ட சுபசூசகங்கணிகழ்ந்தன? ஆதலின் நாம் சென்று தரிசிக்க வேண்டு மென்று வந்தனர். பிரமவிஷ்ணுவாதி சகலதேவர்களும் தங்கள் தங்கள் தேவிகளுடன் கூடிச் சீக்கிரமாய் வந்தனர். கிரியில் தவஞ்செய்துகொண்டிருந்த தபோநிஷ்டர்களும் சித்தர்களும் தங்கள் தங்கள்மனைவியாரோடு பவானியைத் தரிசிக்க விரும்பிவந்தனர். இவ்வாறு அப்போதுகூடிய கூட்டம் உலகத்திலெப்பொழுது மெவ்விடத்திலும் கூடாதபெருங்கூட்டமாயிருந்தது. அக்கூட்டத்தவ ரெல்லாம் நாமிப்பொழுது தன்யராயினோம், ஆயினோமென்று கூத்தாடினர். அக்கூட்டத்தின் மத்தியில் சாக்ஷாத் பராசக்தி வீற்றிருக்கும் பொன்விமானத்தை ஸ்ரீ நாராயணர்கண்டு மிக்கசந்தோஷத்துடன் இலக்ஷ்மியோடுகூட நமஸ்கரித்து நின்றனர்.

ஏனைய பிரமனாதிதேவர்கள்விமானசிகரத்தைக்கண்டு அடிக்கடிநமஸ்கரித்து யாமே தன்யரென்று மகிழ்ந்தனர். அப்பொழுது அக்கூட்டங்களைக்கண்ட அருகிலுள்ள கணங்கள் பொற்பிரம்பைக் கையிற் பிடித்தவர்களாய்ப் பற்பல கணத்தலைவர்களை நோக்கினர். உடனே அக்கணத்தலைவரெல்லாம் அங்ஙனம் உன்னதமாகிய பிரம்பைக் கையிலெடுத்தோச்சி அசைத்துவர அவர்களை நாராயணாதிதேவர்கள் கண்ணுற்று மகாபலசாலிகளாகிய இக்கணங்கள் இப்பிரம்புகளாலடிப்பார்களாயின் நம்மாற் றாங்கமுடியுமோ? முடியா முடியா! நாம் எங்கேயாவது ஓடிப்போய் விடுவோம். அந்தோ ஓடிப்போவோமானல் பவானியினது சரணாரவிந்த தரிசனமானது நமக்கெப்படிகிடைக்கும்? பிரம்படியினால் மரணம் வருமென்றஞ்சி கவுரீசரணாரவிந்த சம்பந்தமான காற்றினாலடிபடாத இச்சீவனத்தால் யாது பயன்? யாதொருசவுரிசரணாரவிந்த சம்பந்தமாகிய காற்றுளதோ அக்காற்றால் சீவிக்காதவன் அந்தச்சன்மத்தால் யாதுபயன் பெறுவான்? வாயுவும் அவளது சரணாரவிந்த சம்பந்தத்தால் வாயுத்தன்மையுடையவனாகின்றான். ஆகலான் அம்பிகையினது சரணாரவிந்தசம்பந்தமான காற்றும் கிடைப்பதரிது. இதற்கு முன்னம் நம்மால் பல சன்மங்களெடுக்கப் பட்டன. அவைகளால் தன்யத்துவம் பெற்றிலம். இப்படிப்பட்ட விமானசிகரமுங் கண்டிலம். இவ்விமானத்தில் வீற்றிருக்கும் சைலகன்னிகையின் பாதாரவிந்த வாசனையுடன் கூடிய காற்று அனந்தகோடி புண்யங்களிருந்தாலுங் கிடைப்பதரிது. ஆகலின் இப்பிரம்படிக் கஞ்சாது அடிபட்டுக்கொள்வதே சிறந்தது. இதோ ருஷிகளும் சித்தர்களும் சமாதியை விடுத்துப் பிரம்படிக்கஞ்சாது இங்குவந்து தரிசிக்கின்றனர். அம்பிகையின் விமான சிகரத்தைப்பார்ப்பதைவிடுத்துச்செய்யும் எண்ணிறந்ததவத்தால் யாது பயனுளது? உக்கிரமாகிய தவங்களின் பிரபாவத்தால் யாதொருபலன்கிடைக்குமோ அப்பயன் இவ்விதமான சிகரத்தைக் காண்பதால் கிடைக்குமென்று சுருதிகளில் கூறப்பட்டிருக்கிறது. நமக்கு அத்தகைய பலனிங்குகிடைத்தது. இனி காணக்கூடாத சிவபெருமானும் பிரசன்னமாவர். யாதொருதேவியினது பாதாரவிந்தத்தின் பிரபையால் விமானமுழுதும் பத்மராக மிழைத்தது போல் காணப்படுகின்றதோ அப்படிப்பட்ட சிவகுடும்பினியாகிய அவளது பாதாரவிந்தத்தை ஸ்மரிப்போம். அவளது பாதாரவிந்தத்தின் காந்தியானது கணப்போதாவது நம்மேல் பதிக்கப்பட்டு ஆனந்திப்போம். இவ்விமானம் இதற்குமேல் உயரப்போமாயின்

அதன் தரிசனம் நமக்குக்கிட்டாது. ஓர்சமயம் மகாமேருவின் தாழ்வரையாகிய இவ்விடம் வருமானால் தேவர்களுள் நாமே தன்ய ரென்றெண்ணக் கடவோம். பற்பல சன்மங்களில் தவஞ்செய்து பவானிபதியைத் திருப்திசெய்திருப்போமாயின் இப்பொழுது கவுரியின் சாரூரவிந்தத்தைத் தரிசனஞ் செய்வது நிச்சயம். அங்ஙனமில்லாவிடின் அஃது துர்லபமே.

நான்காம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

குமாரகுரவேநம :

## ஐந்தாம் அத்தியாயம்.

### தேவி கைலாயஞ் செல்லுதல்.

வியாசர் கூறுகின்றார். பின்னர் தேவர்களெல்லாம் அந்தவிமானத்தைத் தரிசிக்க வேண்டி மேன்மேலே அண்ணாந்து பார்த்துக்கொண்டிருந்தனர். பிரம்படிக்குப் பயந்துபோன சூரியன் விமானச்சாயையானும் வரிசைவரிசையாய் நிமிர்ந்தோங்கிவரும் பிரம்புகளின் தொகுதிகளாலும் காணப்படாமல் மறைந்தனன். சூரியனங்ஙனமாயின் சந்திரனொளிக்கிடமேது? பின்னர் எங்கும் பரவும் மணிகளோசையுடனும் அற்புதமாகிய துவஜங்களுடனும் எண்ணிறந்தசாமரங்களுடனும் விளங்கிக் கணந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றும் அவ்விமானம் க்ஷணத்துக்குள் திசைமுடிவிலும் சென்று வரத்தக்கதாயினும் தேவர்களிடத்துள்ள பிரீதியால் மெல்ல மெல்லவந்து மேருவின் அடிவாரத்தைச் சமீபித்தது. அப்போது புஷ்பவருஷம் பொழிந்தது, மந்தாரவிருக்ஷங்களும் அத்துடன் மெதுவாய் வந்தன. தனது சாயையால் எங்கும் பரவும் முத்து ரத்னம் புஷ்பம் இவைகளின் ஜாலக்கொத்துகளுடன் விளங்கும் விமானத்தைச்சற்று தூரத்தில் தேவர்கள் கண்டு ஆனந்தபரவசராய்க் கூத்தாடினார்கள். அப்பொழுது மேனையானவள் சிவையாகிய பார்வதியாரைப்பார்த்து அவருக்குச்சந்தோஷம் வளரும் வண்ணமும் தேவர்களுக்கு அநுக்கிரகநிமித்தமாகவும் ஓ அம்பிகே! தூரத்தில் பார்ப்பாய்,அதோதேவர்கள்பக்தியுடன் நமஸ்கரித்து நிற்கின்றனர். தேவஸ்திரீகளையும் சித்தஸ்திரீகளையும் கின்னர ஸ்திரீகளையும் கந்தர்வஸ்திரீகளையும் சற்றுபார்ப்பாய். அவர்களெல்லாம் உன்பா

தாரவிந்தத்தில் பக்தியுடையவர்களாய்த் தரிசிக்கவேண்டுமென்கிற பேராவலுடன்கூடி எதிர்கொண்டு வணக்கமுள்ளவராய் வருகின்றனர். ஓ அம்பிகே! முனிபத்தினிகளும் சித்தபத்னிகளும் கூட்டங்கூட்டமாய் வருகின்றமையும், அவர்கள் எங்கெங்கும் வீழ்ந்து நமஸ்கரித்து அஞ்சலிசெய்து நிற்கின்றமையும், நாராயண ரடிக்கடி நமஸ்கரித்தவண்ணமாயிருக்கின்றமையும், அவரது பக்கத்தில் கூப்பியகரமுடையவளாய் மிக்க பக்தியுடன் இலக்ஷ்மிதேவி நிற்கின்றமையும் இவர்களைப்போலவே, சூலபாணிப் பிரியையாகிய ஓ அம்பிகே! சரஸ்வதிதேவியும் நான்முகனும், இந்திராணியும் இந்திரனும் நிற்கின்றமையும், மற்றைத்தேவர்களெல்லாம் கணங்களின் கைப்பிரம்படியால் பயந்தோடுவதையும் ஓ கவுரி! உனது சரணாரவிந்தப் பிரபாவ ஆதரவினால் கைகூப்பி நிற்கும் இலக்ஷ்மிதேவி நடனஞ்செய்கின்றமையும், தனது அபீஷ்டத்தைச் சித்திபெறுவிக்கும் உனது தரிசனங் கிடைத்ததென்று பிரமன் சந்தோஷித்துநிற்பக் கலைமகள் உனது குணகணங்களை எடுத்துத் தோத்திரஞ் செய்கின்றமையும் பார்ப்பாயாக. இவ்வண்ணம் நிற்கின்றவர்களுடைய கோரிக்கைகள் நிறைவேறவேண்டுமாகலின் மேருவின் அடிவாரமார்க்கமாய் மஹாதேவருடைய ஸ்தானத்துக்குச் செல்லவேண்டும். இந்த விமானமும் நினைத்தவண்ணஞ் செல்லும் யோக்கியதையுடையது. ஆகலான் இம்மார்க்கத்தைவிட்டு வேறுவழியாய்ச் செல்வது தகுதியன்றென்று கூற, அம்பிகையும் அங்ஙனமே யாகுகவென்ன மேனையார் மகிழ்ந்தவராய் நமது கிரிஜைக்குப் பசியினால் வாட்டமுண்டாகுமே என்றெண்ணி அமுதரசஞ் சிந்தும் கற்பகவிருக்ஷத்தின் கனியையும், தேவாமிர்தத்தையுங் கொடுக்கத் தாயின் அன்பைக்கருதி அதனை வாங்கியுண்டு ஆனந்தமடைந்து தாம்பூலம் தரித்து மிக்க சுந்தரஸ்வரூபிணியாய் விளங்கி விமானத்தை நோக்கினர். அது அம்பிகையின் திருவுள்ளக்குறிப்பின்படி மேருமூலமார்க்கமாய்ச் செல்லும் பொழுது முன்கூறப்பட்ட தேவர் முதலியோர் பரமானந்த சாகரத்தில் மூழ்கினவர்களாய் நமஸ்கரித்து அஞ்சலியஸ்தர்களாய் ஆங்காங்கு நின்று, கௌரியே ஜய ஜய, ஜகத்வந்திதயே ஜய ஜய, சங்கரவல்லபே ஜய ஜய, கமலமுகியே ஜய ஜய, ஸர்வமங்களே ஜய ஜய, காமாரி அர்த்தாங்க சிஹ்மாசனநிலையே ஜய ஜய, ஸ்ரீ கண்ட சிருங்கார ரசகாரணியே ஜய ஜய, கர்ப்பூர கஸ்தூரி சந்தனபூஷிதே ஜய ஜய, திவ்ய ஹாராலங்கிருத ஸ்தனமண்டலே ஜய ஜய, இரத்னகணசோபித கிரீடாலங்கிருதே ஜய ஜய, இரத்ன கசித ஸ்வர்ண பரணபூஷிதே ஜய

ஜய, வஜ்ரமணிகஜித தாடங்கசோபிதே ஜய ஜய, பஹிதர்ப்பண கபால சோபிதே ஜய ஜய, நீலாசல சமானகேசபார சோபிதே ஜய ஜய, ஓ மதயானையின் மஸ்தகத்தைப் பழிக்குங் குசங்களையுடையவளே, உன்மத்தமாகிய மீன்போன்ற கண்களையுடையவளே, கங்கையின் சுழல்போன்ற நாபியை யுடையவளே, கட்புலனுக்குத் தோன்ருத இடையை யுடையவளே, மதித்த ஹம்ஸம்போன்ற நடையை யுடையவளே, சந்திரன்போன்ற நெற்றியை யுடையதேவி! ஓ சிவசுந்தரியே ஜய ஜய, மவுனிகளுடைய மனத்தால் தழுவப்பட்டுள்ள பாதாரவிந்தமுடையவளே ஜய ஜய, பக்த ஜனானந்த ஹேதுவாகிய ஈஸ்வரியே ஜய ஜய, ஆனந்த சமுத்திர ஸ்வரூபிணியே ஜய ஜய, உனது பாதாரவிந்தத்திலேயே சென்ற மனமுடையவர்களாகிய எங்களைக் காத்தருளவேண்டும்.

ஐந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

௬

அத்ஷாப்யாயகம:

## ஆரும் அத்தியாயம்.

---

### தேவி கைலாயஞ் செல்லுதல்.

வியாசர் கூறுகின்றார். ஓ முனிவீர்காள்! இவ்வண்ணம் தேவர்களால் தோத்திரஞ் செய்யப்பெற்ற தேவி மேருவினடிவாரத்தில் பிரகாசிக்கும் சுவர்க்கலோகத்தைத் திவ்ய விமானத்தோடு வந்தடைந்தனள். அதுகண்ட தேவரெல்லாம் புஷ்பமாரிபொழிந்தனர். மந்தார மலரின் பரிமளமாகிய இனியதேனோடு சம்பந்தம் பெற்ற காற்றும் மெல்லென்று வீசிற்று. அந்தச்சமயத்தில் மிக்க ஆவலுடன் தேவரெல்லாம் விமானத்தின் மீது வீற்றிருக்குந் தேவியைத் தரிசிப்பதற்கெண்ணி நெருங்க, அவ்விமானத்தின் ஒளிக்கூட்டத்தால் பார்ப்பதற்குக் கூடாமல் தடைப்படவே அந்தோ! நமக்குத் தரிசனங்கிடைக்கவில்லையே என்றேக்கமுற்றவராய் ஓ கிரிராஜகுமாரி! கமலம்போல் அமலமாய் மனோஹாரியாயிருக்கும் உனது திவ்ய சரணரவிந்தமானது வேதங்களாலுங் காண்டற்கரியதா யிருக்க, அது எவ்வகைத்தான புண்ணியங்களாலோ எங்களுக்குக் கிடைக்கப் பெற்றும், உனது விமானத்திலுள்ள திவ்ய ரத்னங்களின் ஒளி

மண்டலத்தால் எங்களுடைய கண்கள் காணுஞ் சத்தியற்றனவா யிருக்கின்றனவே, ஓ உமாதேவி! எங்களுக்குயாது கதி? ஓ மீனாக்ஷி! எங்களைச்சிறிதே பார்த்தருள்புரிந்திடுவாய். ஓ அம்பிகே! உனது நோக்கத்திற் குடிகொண்டிருக்குங் கருணாரசத்திற் சிறிது எங்கள் மேற்படுமாயின் இச்சுவர்க்கம் அபவர்க்கத்தைப் பெறுமே. ஓ ஜகதீஸ்வரி! வேதங்கள் உன்னிடமே தீனதயாளத்வம் உளதென்று நிச்சயிக்கின்றனவாதலால் அதிதீனர்களாகிய எங்களைச் சிறிது காத்தருளவேண்டியது அவசியமானதன்றோ? ஓ ஜகதம்பிகே! தீனர்களாகிய எங்கள் மொழி உனது திருச்செவிக்குக் கேட்கவில்லையோ! ஓ தேவி! மிக்க தூரத்திலிருந்து எங்களைப்பார்ப்பது உனக்குச் சிரமத்தை யுண்டாக்குமென் றெண்ணியே நாங்கள் சமீபத்தில் வந்திருக்க எங்களைக் கருணாவீக்ஷண்யத்தால் நீ சிறிதும் நோக்காதிருப்பதை நோக்குங்கால் இதுவும் உனக்குச் சிரமமாயிருப்பதாகத் தெரியவருகின்றது. ஓ அம்பிகே! இப்பொழுது ஆனந்தத்திற் கிருப்பிடமாகிய உனது சங்கராது ஆலயத்துக்கு நீ எழுந்தருளுவையாயின் இனி நீ இங்குவருவது எந்நாளோ! ஓ கிரிராஜ கன்யகே! நாங்கள் உனது கருணைக்குப் பாத்திரரல்லரென்று தோன்றினால் உனக்கு யார்தான் பாத்திரமாகத் தக்கவர்? நீ அபாத்திரராகிய பதிதர்களையும் பாத்திரமாக்கத்தக்கவளல்லவா! ஆகலின் பதிதர்களாகிய எங்களைக் கருணையுடன் நோக்கி யருள்புரிவாயாக.

ஓ தேவி! நீ எங்களைப்பார்த்து ஓ தேவர்காள்! எனது தரிசனம் அதிககஷ்டத்தினால் கிடைப்பதென்றும், தவத்தைச் செய்தால் ஓர் கால் கிடைக்கப்பெறலாமென்றும், ஆனால் அத்தவம் சாதிக்கமுடியாதென்றும் பெரியோர் கூறுகின்றனரே, அவற்றை நீவிர் கேட்டிலீர்போலும் என்பையேல் அஃதுண்மையே. உனது தயைக்குப் பாத்திரமாயுள்ள அநேகரை உலகில் பார்க்கின்றோமே, அவர்களுள் நாங்கள் சேரமாட்டோமா! நாங்கள் எப்பொழுதும் சிவபூஜை செய்துகொண்டிருக்கும்போது உனது தயைக்கு ஏன் பாத்திரராகாமற் போவோம். ஓ சங்கரி! சிவபூஜையைச் செய்துவரும் எங்களுக்கு இந்தத்துரதிர்ஷ்டந்தானா வரவேண்டும். அந்தோ! அந்தோ!! ஓ ஜகதீஸ்வரி! உனக்குச் சிவபூஜையில் பக்தியில்லையா! நீ சங்கரதற்பரையா யிருப்பவளன்றோ? ஆனால் இப்பொழுதொன்று நினைக்கின்றோம். என்னை யெனின், நீ சங்கரரிடமுள்ள ஆவலுடன் சீக்கிரமாய்க் கைலைக்குப் போகக் கருதுகின்றமையால் தேவர்களிடம் இப்பொழுது கருணைகூர்தல் நாம் சீக்கிரம் போவதற்கிடை

யூறுறும் என் றெண்ணுகின்றனையோவென்பதாய். அப்படி யெண்ணுவது தகுதியாமா! அதி தீனர்களாகிய எங்களுக்குத் தரிசனமளித்துப் பாலனஞ்செய்வதனை ஓர் விக்னமாக எண்ணற்பாலதா! ஓ தேவீ! தரிசனம் பெறாது மிகவுந் துக்கசாகரத்தில் வீழ்ந்து தயிக்கும் தேவர்களாகிய எங்களைக் கரையேற்றிவைப்பாயாக.

ஓ அம்பிகே! இவ்வகையாய்ப் பரிதபிக்கும் எங்களை உபேக்ஷைசெய்துவிட்டு நீசிவபெருமானிடஞ்சென்றால் அச்சர்வாந்தரியாமிஉன்னைப்பார்த்து நீவரும்போது தேவரெல்லாம்வந்திருப்பார்களே அவர்களுக்கெல்லாம் கருணைபுரிந்து வந்தனையாவென்று கேட்பாராயின் நீ யாது கூறுவாய்? ஆகலான் உனது திருவருளை எங்கள்பால் பாலிக்கவேண்டியது கடப்பாடேயாகும். இப்படியன்றி ஓ அன்னையே! இத்தேவர்கள் சாதுக்களல்லர் இவர்களிடம்நாம்கருணைகூர்தல் தகுதியன்றென் றெண்ணி உதாசினமாய்ச் செல்லுவையாயின் அது உசிதமாகுமா? ஏனெனின், உனது தரிசனத்துக்கு, தரிசனமாத்திரத்தில் பாவக்கடல் வற்றிப்போம் என்று கூறுகின்ற சிறப்பு எங்ஙனந்தெரியவரும். ஆகலான் அதனைத் திருவுளம்பற்றுவாயாக.

ஓ தேவீ! நாங்களெப்பொழுதும் சிவார்ச்சனை செய்கின்றவர்கள். உனது சரணகமலம் எப்பொழுதும் சிவோபாசகர்களுக்குச் சுபத்தை யருளுவது. ஆகவே, எங்களுக்கு நீ அருள்புரியும் விஷயத்தில் உனக்குள்ள சிரமம்யாது? ஓ சர்வமங்களே! உனது பாதபங்கஜமானது, தாபத்திரயங்களால் வருந்துபவர்க்கு நிழல் பரப்பும் கற்பகவிருக்ஷமாயும், சிவஞானப்பாலளிக்குங் காமதேனுவாயும், சிந்திப்பனவெல்லாம் முந்திப்பொழியும் சிந்தாமணியாயும், அமுதமாரிபொழியும் மேகமாயும் உள்ளதாயிற்றே. அவ்வற்புதச்செயலெல்லாம் அச்சரணகமலத்திற் கிப்பொழுதெங்கே போயிற்று? அந்தோ! உனது சரணம் அவ்வருஞ்செயலற்றிருப்பதை ஏன் எண்ணாதிருக்கின்றனை! இனியேனும் எண்ணி எங்களைக் கொளுத்தும் துக்காக்னியணைவதற்குரிய நல்லவருஷத்தால்சுகமளித்தருள்வாயாக.

ஓ கருணாசமுத்திரீ! உனது அரிய பொன்னடி இருதயகமலத்தில் எங்களால் பூஜிக்கப்படுந் தன்மையுடைத்தாய், கைம்மாறு கருதாது பொழியும் அமுதமேகத்தன்மையையும், ஒருவரையும் எதிர்பாராது சுதந்த்ரமாய் வேண்டியாங்கருளவல்ல தீரத்தன்மையையும் உடைத்தானதாயிற்றே, அப்பொன்னடி இப்பொழுது அவ்வண்

ணத்தை மறந்து எங்கள் பால் கருணைகூராமலும், அனுதரவாயும், உதாசீனமாயும் இருக்கும்வண்ணத்தை எங்கே பெற்றதோ! அந்தோ அது எங்களை உய்வண்ணஞ் செய்யவல்ல அவ்வடிக்கு அது மெய்வண்ணமன்றே! ஓ சாம்பவீ! இனி கருணாமுத அலைகளால் மனோகரமாயுள்ள உனது நேத்திரகமலத்தினால் எங்களைச் சுக சமுத்திரம் அடையும்படி அருள்புரிவாயாக.

ஓ தேவீ! உனது தரிசனம், தேவஸ்திரீகளால் எப்பொழுதும் விரும்பப்பட்டதாகலின் கமலநாயகியாகிய இலக்குமி தாமரைமலர்களை ஏராளமாயெடுத்துக்கொண்டு உனது பாதகமலங்களைப் பூஜிக்கப் போாவலுடன் எதிர்நோக்கி வருகின்றாள். அதனைச் சற்று நோக்குவாயாக. எங்களினத்தவர்க்கு உனது பாததரிசனந்தவிர விரும்பத்தகுந்தது வேறு யாதுளது! உனது பாதாரவிந்தம், எங்களுக் கப்போதைக்கப்போதுண்டாகுந் துக்கத்தைப் போக்குந்தன்மையும், ஈரேழுலகத்திற்கும் ஈஸானத்வமாயிருக்குந் தன்மையும், எப்பொழுதுந் தீனர்களுக்குப் பந்துவாய்க் கிருபைபொழியுந்தன்மையுமாகிய இத்தன்மைகளையுடைத்தாயிருக்குந் தன்மைத்தன்றோ? அவையெல்லாம் இப்பொழுது மாறியிருத்தற்குக் காரணமென்னையோ! ஓ தேவி! மஹா சம்சாரமத்தியில் புகுந்திருக்கும்மனிதனிடத்தும் உனது தயை செல்லுகின்றதாயிற்றே! நாங்களிப்போது அவர்களினுங் கீழ்ப்பட்டவராயினோமோ! அப்படியானால் அவர்களுக்குப் பெரிதாகச் செய்வதுபோல் செய்யாமல் ஓரணுவளவான அனுக்கிரகத்தையாவது அனுக்கிரகிக்கக்கூடாதா! ஓ சங்கரப்பிரியே! நீ நமது கருணைக்கு அமரர்கள் பாத்திரமானவர்களேயென்று சிறிதெண்ணுவாயாக.

உனது சரணங்கள் எங்களாற் சரண்புகும் மரபினையுடையது. நாங்கள் கங்காதரனையும் உன்னையுமே எப்பொழுதும் அபயத்தின் பொருட்டுச் சரண்புகுந்தன்மையுடையோமன்றி மற்றெவரையுஞ் சரண்புகுந்தன்மையுடையோமல்லேம். எங்களுடைய நமஸ்காரங்களெல்லாம் உங்களிருவரைச் சேருமேயன்றி மற்றெவரையுஞ் சேரா. தெய்வங்களுக்கெல்லாந் தெய்வங்களாயும்பிரபுக்களுக்கெல்லாம் பிரபுக்களாயும் இருக்கின்ற உங்களைச் சேவிக்கின்றவர்கட்கே சம்சார துக்கமின்றாம். ஏனையோரைச் சேவிப்பதனாலென்னாம். மிருகேந்திரமிருக்குமிடத்தில் யானையின் மத்தகத்திலுள்ள முத்தங்கள் கிடைப்பனவேயன்றி என்புமுதலியவைகளன்றே? அதுபோல உனது சரணாரவிந்தங்களை யாஸ்ரயிப்பதால் எவரிடத்தும்அடையப்பெறாத

அரும்பயன் அடையப்படுமேயன்றிசாமான்யமானபயனடையப்படு வனவன்றே? பெரியோரும் அதமனென மசிதனும் உனது ஆஸ்ரயத் தால் போகபதியாகின்றானென்று கூறுகின்றனர். ஓ தினதயாபரை யாகிய அம்பிகே! உனது கிருபாநோக்கத்தால் எங்களை யனுக்கிர கிக்காவிடில் இத்தேவத்வத்தால் எங்கட்குவரும்பயனென்னை! இனி நாங்கள் அதனைத் துச்சமென்று அனுதாவுசெய்யத்தக்கதே! ஓ தேவி! நாங்களிவ்வாறெல்லாம் புலம்பியும் நீ உபேக்ஷை செய்கின்றனையே! எங்களது புலம்பல் உனது திருச்செவிக்கேறவில்லையோ! நாங்களிது காறும் செய்துவந்த தவத்தின் வன்மை இவ்வளவுதானோ! ஓ மாதா வே! உனது தயைவாராமைக்கு நாஸ்திகத்வம் ஏதுவாதல் போல் ஆஸ்திகத்வமும் அதற்கே ஏதுவாமோ! ஓ அம்பிகே! இன்ன மும் தீனர்களாகிய எங்களிடம் கிருபாநோக்கம் பாலிக்காமையால் உனது திருவுளம் மிகவுங் கடினமானதே! அதற்கைய முளதோ! அபராதஞ்செய்த புதல்வனை அன்னையாயுள்ளாள் ஆதரவு செய்கின் றாளென்பதை நீ கேட்டதில்லையா! நீ அனுதாவு செய்யத்தக்க பாத கம் எங்களிடம் இருக்குமென்பதுமுண்டா! உனது நாமத்தையும் சிவநாமத்தையும் எப்பொழுதும் ஸ்மரிக்கின்றவர்களுக்குப் பாவம் பறந்துபோமென்பது எங்களிடம்பொய்த்துப்போயிற்றோ? பொய்யா திருக்குமாயின் இதுகாறும் எங்களிடம் ஏன்கிருபைசெய்யாமலிருக் கின்றனை? சிவநாமஸ்மரணம் சகல பாவக்கூட்டங்களையும் சுட்டெ ரிக்கின்றதென்று பெரியோர் கூறுகின்றனரே! அது பொய்யா? வே தங்கள் சகல பாவங்களையுந் தொலைப்பதற்குச் சாதனம் சிவநாமஸ் மரணமென்று கூறுகின்றனவே அவைபொய்யா! அவற்றினுண்மை யைக் கூறுவாயாக. திருவெண்ணீறு சண்ணித்தமேனியனையே தியா னஞ்செய்வோனுக்குப் பாதகங்கள் கோடிகணக்காயிருந்தனவாயி னும் அவைகளெல்லாந் தொலைந்து விடுகின்றனவென்று கூறியிருக் கின்றதே. சிவலிங்கபூஜகர்களாயிருக்கின்ற எங்களிடத்தில் மாத்திரம் அது எங்ஙனம் நிற்கப்பெறும். பெருஞ்சுடருக்கருகே நிற்கப்பெற்ற வன் குளிருக்குப் பயந்தோடுவதுண்டா! அமிர்தத்தையேராளமாய்ப் புசித்தவன் பசியினால் பீடிக்கப்படுவதுண்டா! சிவலிங்கார்ச்சனை செய்வதில் மிக்க பிரீதியுள்ளவனுக்குத் துக்கமுண்டா! சங்கரோபா சகனுக்குப் பாவமென்பது லேசமுமுண்டா? ஆகலின் எங்களிடம் லேசமேனும் பாவமுளதென்னுஞ் சொல்லுக்கு மிடமில்லை. ஓ சிவப் பிரியே! எங்களைச் சீக்கிரமாய்க் கிருபாமிருதா ரசத்துடன்கூடிய உனது திருக்கண்களால் இரக்ஷிப்பாயாக. இதனால் உனக்கொரு

கெடுதியுமில்லை. உனது கிருபையன்றி எங்களுக்கு வேறுகதியிருக்குமானால் நீ இப்பொழுது கருணைசெய்யற்க. அந்தோ! எங்கட்கு உனது பாதாரவிந்தமே கதியாயிருப்பதன்றி வேறொன்று கதியாயிருப்பதில்லையே! ஆகலின் சரணமடைந்த எங்களை நீ ரக்ஷிப்பாயாக.

ஆறாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
குஞ்சராஸுரபஞ்சநாயகம:

## ஏழாம் அத்தியாயம்.

### தேவி கைலாயஞ் செல்லுதல்.

வியாசர் கூறுகின்றார். முன்னங்கூறியவாறு தேவரெல்லாங் கைகூப்பி நின்று தோத்திரஞ் செய்யவே அவ்விமானமானது அவர்களிருக்குமிடத்துக்கு நேரில் வந்தது. வரவே அதனை அண்ணாந்து பார்க்கும்போது தேவியின்பாதாரவிந்தசோதியானதுதோன்றிற்று. அதனைக்கண்டு நாம் கிருதார்த்தராயினோம், நாமே தன்யர்கள், நம்மினுந்தன்யர்கள் எவருள்ளார் என்றெண்ணிப் பரமானந்தபரவசர்களாய்நிற்ப அவ்விமானம் அச்சுவர்க்கலோகத்தைக்கடந்து அப்புறஞ்சென்று பிரமலோக விஷ்ணுலோகங்களையுங் கடந்து கயிலாயத்தையடைந்தது. அப்பொழுது தேவர்கள் ஒருவரையொருவர் பார்த்துத் தேவியினுடைய விமானம் சென்று விட்டதே என்றேங்கியும், இவ்வாறு வேகமாய்ப் போகுஞ்சமயத்தில் தேவியினது பாதார விந்ததரிசனங் கிடைத்ததே என்று மனம் பொங்கியும், விமானங்கயிலாயத்தைப்போயடைந்தும் நமக்கு இன்னமும் அச்சோதி தெரிகின்றதே என்று அதிசயித்தும், இனித் தேவியினது சரணபங்கஜம் நம்மால் எப்படி காணமுடியுமென்றும், அச்சரண பங்கஜம் பிரகாசிக்கப் பெற்ற ஸ்ரீ கயிலாயத்தைப்பிரமதகணங்கள் தரிசிக்கப் பெற்றதனாலன்றோ கிருதார்த்தராயினரென்றும்,அப்பாதாரவிந்ததூளியினருளாலன்றோமூவுலகும்நாமும் உண்டாயினோமென்றும் கூறிமீண்டும் சிலர் அத்தேவியினது சரண கமலவொளிப்பிழம்பானது நாம் வாழ்த்தக்க இவ்விடங்களிலும் பரவப் பெற்றமையால் நமது தவங்களும் நம துலகங்களும் பாவனமான. இவ்வாறுவதற்குப் பூர்வத்தில் நம்மால் என்ன புண்ணியஞ் செய்யப்பட்டதோ! இனி நமக்குக்குசல

மே என்றும், சிலர், பாவனஞ்சட்டுப் பாவனமாயும், சோபனங் கட்குச்சோபனமாயும் உள்ள அப்பாதார விந்தப்பேரொளி நம்மு டைய வுலகங்களின் மேலும் நம் முடம்புகளின்மேலும் படாமற் போமாயின் புண்ணியலோகங்களென்றும் புண்ணிய சரீரங்களென் றும் உலகங்கூறுமா என்றும், சிலர், தேவியினது திருவடியின் ஒளி காணப்பெறுதலும் அதுவியாபிக்கப் பெறுதலும் அரிதினும்அரிதே. நமது கிரீடங்களெல்லாம் அவ்வொளியின் வியாபகத்தால் அதிகப் பிரகாசத்தையுடைத்தாயிருக்கின்றன. அக்னியின் சம்பந்தத்தால் பொன் தன்னொளியை மிகுதியாய்க்காட்டுவதுபோல நமது கவர்ணு பரணங்களெல்லாம் மாற்றிலடங்காப்பேரொளியைக்காட்டுகின்றன என்றும் ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டும் பரமானந்தக் கடலில் மூழ்கியுங்களித்தனர். இவர்கள்செய்தியிங்ஙன மிருக்க.

விமானமானது கயிலாயத்தையடைந்தவுடன் அம்பிகை அவ் விமானம்விட்டிறங்கி மேனையைப்பார்த்துஅம்மே! இவ்விடத்தில்அழ கெல்லாம் உருக்கொண்டதுபோலும் விளங்குகின்ற மாளிகைகளை யும், சுந்தரக்காட்சியாய் விளங்கும்விருக்ஷலதைகளையும் பார்ப்பாய். இவ்விடம் என்னிறைவனது விலாசத்துக் குசிதமாயுள்ளது. இதனை நீ முன்னங்கண்டிருக்கமாட்டாய். இப்பொழுது இங்குசிவபிரானில் லையாதலால் என் தந்தையும் நீயும் நன்றாய்க்கண்டுகளிக்கலா மென்ற னள். இமவானும் மேனையும் அம்பிகையினது அன்பார்ந்த மொழி யைக்கேட்டு உள்ளம் பூரித்து வுள்ளே செல்லவேண்டியதுவாரவேதி கையைப்பார்த்து அதிசயமுற்று ஓகவுரி! ஆஹா! இதுவென்னவிநோ தம். இந்தவாசற்படியிலிழைத்திருக்கும் இரத்தினங்களை நான்இரத் னுகரத்திலுங் கண்டதில்லை. இவைகளுடைய காந்தி எங்களுடைய சரீர காந்திகளையும், இந்தவிமான காந்தியையும் கீழ்ப்படுத்தித்தன் மயமாக்கி எங்களை மயங்கச்செய்கின்றதே, இது மிக்கவாச்சரியம்! துவாரமே இவ்வண்ணமான வற்புதத்தை யுடையதாயின் இனிவுள் ளே சென்றால் அங்குள்ளவற்புதங்கள் எத்தன்மையவோ! இங்குது வாரபாலகராய் வசிக்கப் பெற்றபிரமதகணங்களுடைய செல்வமே செல்வமென்றுதேவியுடன் அங்குட்சார்ந்தனர். மேனையார் அங்குள் ளகனிவகைகளைப்பறித்து வந்து தன்மகளைப்பார்த்து ஓகவுரி! இப்ப டிப்பட்ட கனிவகைகளை நான் எங்குங்கண்டதில்லை. இவற்றைப்பார் க்க எனக்குச்சந்தோஷமுண்டாகின்றது. பசிவேண்டு மென்கிற வெ ண்ணமேவுண்டாகவில்லை என்று கூற, கவுரியார், ஓ அம்மா!இக்கனி வகைகள்உனக்குத்தான்ஆச்சரியமாகத்தோன்றுகின்றவேயன்றிஎன

க்குத்தோன்றவில்லை. இனி உள்ளே செல்வோம். அங்குகாணப்படும் விநோதமெல்லாம் மிக்கவாச்சரியத்தை விளைவிக்குமென்று சொல்லிக்கொண்டே தாயினால் கொடுக்கப்பட்டகனிவகைகளைப்புசித்துக் கொண்டு செல்ல, தாய் தந்தையரிருவரும் அங்கு திவ்யரத்னங்களால் நிர்மிக்கப்பட்டிருக்கு மாளிகைவரிசைகளையும், அமுதப் பிரவாகமாய்ச்செல்லும் அருவிகளையும், அதன்கரைகளில் அழகு பெற்றுவிளங்குங் கற்பகவிருக்ஷங்கள் அம்பிகை வருதலைக்கண்டு புஷ்பவருஷங்களைப் பொழிவனவற்றையும், அந்தவிருக்ஷ மூலங்களில் எண்ணிறந்த சிவலிங்கங்கள் அழகு பெற்று விளங்குவனவற்றையுங் கண்டு பரமாச்சரிய மடைந்து அவ்விலிங்க மூர்த்தங்களை ஆராதவன்புடன் அக்கற்பகமலர்களால் அர்ச்சித்து அப்புறஞ்செல்ல, அக்கற்பகச்சோலைநடுவில் பதினாயிரம் யோசனைப்பரப்பும், உயரமுமுள்ள ஓர் திவ்யரத்ன மண்டபத்தையும், அம்மண்டபத்தில் பிரமதகணங்கள் ஒருங்கு கூடி ஆடிப்பாடிக் கூத்தாடுவதையும், அந்தக் கூட்டங்களில் நடுவில் நூறுயோசனையுயரமுள்ளதும்,சிவசயனத்துக் குசிதமாய்மந்தாரமலர்களால் நிரம்பப் பெற்றுள்ளதும், எட்டு மூலைகளிலும் இரத்தினப்படிகளால் பொலிவுபெற்றுள்ளதுமான ஓர் மஞ்சத்தைக்கண்டு அற்புதமெய்தி இது மஹேசனது விலாசஸ்தானம்போற் காண்கின்றது. இதனைப்பார்க்கப் பார்க்கப் பரமானந்தமுண்டாகின்றது. நமது கவுரியின் மனதைக்கவர்வதுவும் சங்கரருக்கு மிக்கபிரியத்தை விளைவிப்பதுவுமாகிய இந்த மஞ்சத்தைக் காணப்பெற்ற நமது பாக்கியமே பாக்கியம். நாமே தன்யர்கள். இது, தேவகந்தர்வ கின்னர கிம்புருட உரக சித்தவித்தியாதரர்களாலுங் காணக்கூடியதுமன்று. இம்மஞ்சத்தில்நமதுகவுரி எவ்வளவு ஆனந்தத்துடன் வீற்றிருப்பாள். இந்தப் பாக்கியம் சங்கரானுக்கிரகத்தால் கிடைத்ததன்றோ? இம்மஞ்சத்தைக்கண்டு களிப்பதாகியபாக்கியத்தைநாம்பெறும் பொருட்டேநமது பார்வதி, இங்கு இப்பொழுது சங்கரரில்லை யென்றும் நீங்கள் இங்குள்ள அதிசயங்களைக் கண்டுகளிப்பதற்கு இதுவே நல்லசமயமென்றும் கூறினள். இப்பொழுதிங்கு சங்கரரிருப்பாராயின் நாம் இவ்வளவு எளிதாகக்காணப் பெறுவோமா! இங்குள்ள மாஹசிவகணங்களெல்லாம் இம்மஞ்சத்திற்குப் புறம்பே இருக்கின்றனரேயன்றி இதற்குள் வரவில்லை.தேவர்களோ இந்தவார்த்தையும் சொல்லுவதற்கு யோக்கிய மில்லாதவராய் துவாரத்துக்கு அப்புறத்திலேயே நிற்கின்றனர். இதன் மகிமையை நாமென்னென்று கூறுவோம்.

இம்மண்டபத்திலுள்ள இரத்தினஸ்தம்பங்களின் காந்தி இந்த மஞ்சத்திற்கு ஓராவரணம்போற் பிரகாசிக்கின்றது. இந்தமண்டபத்தைச் சூழ்ந்தவிடமெல்லாம் இங்குள்ள மந்தார விருக்ஷங்களின் நறுமணங்கமழும் மலர்களினின்றும் பெருகாநின்ற அமுதப்பெருக்கால் நனையப்பட்டு சுகந்தத்தை வீசுகின்றது. ஓ மேனையே, இந்த அற்புதமாகிய இடத்தை விட்டு நம்முடைய இடத்திலிருப்பதற்கு அம்பிகைக்கு எப்படி விருப்ப முண்டாகும்? இப்பொழுது வந்த நமக்கே இதை விட்டுப்போவதற்கு மனங்கொள்ளாமற்போமானல் எப்பொழுதும் வசிக்கும் பாக்கியம் பெற்ற நமது கவுரிக்கு எப்படிமனங்கொள்ளும்? அங்கு காணப்படும் மந்தாரகற்பகம் போலும் நமதுபர்வதத்திலிருக்கும் மந்தாரகற்பகங்கள் எப்பொழுதும் மலர்களோடும் கனிகளோடுங் கூடிப்பிரகாசிக்கின்றனவா! இங்குள்ள கனிகளைக்காண்பதனாலுண்டாகும் திருப்தியும் இன்பமும் அங்குள்ளகனிகளையுண்பதனானுண்டாகின்றனவா! என்று அதிசயத்தானும்அன்பானுங் கூறி அந்த மணிமஞ்சத்தைத்தூரத்திலிருந்தபடியே பிரதக்ஷிணநமஸ்காரங்கள் செய்து அங்குள்ள ஓர்மேடையிலுட்கார்ந்தனன். அம்பிகை, மலையரையனைப்பார்த்து ஓ என்னப்பனே, இம்மண்டபத்தைப் போலும் இன்னும் மேற்போகப்போக அங்கங்கும் இதனினுஞ்சிறந்தமண்டபங்களும், மஞ்சங்களுமிருக்கின்றன. இவையெல்லாங் கடந்து இம்மேருவின்சிகரம்போனல் அங்கோர்மாளிகையிருக்கின்றது. அதற்குமேல் அதிவிசித்திரமாகிய ஓர் பிராகாரமிருக்கின்றது. அதற்குள் எம்பெருமான்கோயில்கொண்டிருக்குமிடமிருக்கும். அதன்பெருமை கூறவேண்டுமாயின் அது என்னளவைத்தன்று. பரமானந்தவடிவனும் பலகோடி சந்திரசூரிய காந்தியுடையவனும் வேதங்களால் போற்றப் படுகின்றவனு மாகிய ஜகதீசன் இப்பொழுது அவ்விடத்திலிருக்கின்றான். அவனைத் தரிசிக்கும் பொருட்டு இனி நான் தாமதஞ் செய்யாமல் விரைவாய்ப் போகவேண்டும். அவ்விடத்திற்குநீங்கள் வரமுடியாது. ஏனெனின்சந்திரமண்டலத்தை ஒருவன் தனதுகையால் பிடித்துக் கொள்ள நினைத்தால் எப்படி முடியாதோ அப்படி முடியாதகாரியமாகும். ஆகலின் நீங்கள் இவ்விடத்தினின்று திரும்பவேண்டியவர்களே! ஓ எனது அரியமாதாபிதாக்களே! இனி இங்குள்ளனவாகிய பண்டாரங்களையும், ஆபரணமண்டபங்களையும், ஆடைமண்டபங்களையும். விசித்திரமாகிய மணிமண்டபங்களையும், சிந்திப்பனவெல்லாம் தரும் சிந்தாமணிகளையும்பார்ப்பீர்களாகவென்று பார்க்கும்படி செய்து பின்னர் இரத்தினபாத்திரங்களில்

அரியவுண்டிகள் பலவற்றையும், பலவகைக் கனிகளையுந்தந்து அவர்களையுண்ணச்செய்து தானும் உண்டு அவர் களிக்குமாறுபலவுபசாரமொழிகள் கூறி, தாம்பூலங் கொடுத்து, கற்பாந்தத்தினும்அழிவுறாததும், எக்காலத்தும் அழுக்கடையாததும், நாளுக்கு நாள் ஒளிபெறுந் தன்மையுடையதுமாகிய பலவிதமான இரத்தினுபரணங்களையும், ஐராவதத்தைப்பழிப்பதான யானைகளையும், உச்சைஃரவத்தை இகழச்செய்வதான குதிரைகளையும், காமதேனுவை நாணச்செய்வதான பசுக்களையும், மற்று முள்ளனவாகிய பொருள் களையும் மந்தார விருக்ஷங்களையும், நினைத்தபடி செல்லத்தக்க திவ்யவிமானங்களையும் கொடுத்தனள்.

அவைகளையெல்லாம்பர்வதராசன்அன்புடனேற்று அம்பிகையினது அருட்செயலை மிகவும் வியந்து அகங்களித்தவனுயினும் இதுகாறும் பிரியாதிருந்த அம்பிகையை இப்போது பிரிந்துபோக வந்ததே என்பதை எண்ணியவளவில் மனத்தின்கண் பரிபவமுடையவனுய் மயங்கிநிற்ப அச்சமயத்தில் அனுப்பப்பட்ட சிவகணங்கள் விமானுரூடராய் வருதலைக்கண்டனர். அச்சிவகணங்கள் நந்திகேசரிடத்து வந்து ஓஸ்வாமின்! பார்வதிநாதன் தேவியாரைச் சீக்கிரமாயழைத்து வரும்படி தேவரீரை யனுப்பியிருக்க அதுபோல் செய்யாமல் வெளியிலுள்ள இந்த மேடையில் நிற்கின்றீரே! இது உசிதமாயிருக்கின்றதா! காலதாமசமாகின்றது. தேவியாரைக் கண்டீரா இல்லையா? இறைவனுடைய காரியமுயற்சியில் மிக்கதீவிரமுடைய நீர் இப்படி ஆலசியம் செய்யலாமா! சிவபெருமான் ஓர்கால் கோபங்கொள்வாராயின் அடிமைகளாகிய நமக்குக்கதியாவார் யார்? அப்பால் நமக்குத்துன்பமன்றிச் சுகமேது! ஆகலின், இனியேனும் அவர்மகிழும்வண்ணம் நாம் பார்வதியாரையழைத்துக் கொண்டுபோகவேண்டும் என்று கூறவே நந்தீசரதனைக் கேட்டு அந்தக்கணங்களை நோக்கி ஓ சிவகணசிரேஷ்டர்காள்! நீவிர் எங்கள் பெருமானுருக்கு மிக்க ஆப்தராயிருப்பவர்களாகலின் சொல்லிய வெல்லாஞ் சரியே. நம்மிறைவன் என்னைவேறுகாரியங்களில் ஏவியிருப்பாராயின் முன்னமே முடித்திருப்பேன். என்றல் ஆகாதது மொன்றுண்டோ! அங்ஙன மிருக்க இப்பொழுது என்னையேவிய இப்பணியிலுள்ளசங்கடத்தையும் சந்தோஷத்தையுஞ் சொல்லுகிறேன் கேண்மின்கள்.

அம்பிகை, சர்வசுதந்தரமுடைய நமது சங்கரராகியபிரபுவைப்போலவே சர்வ சுதந்தர முடையவர். அவரது திருவுள்ளக்குறி

ப்பின்படி நாம் நடக்கவேண்டியவர்களேயன்றி நமது குறிப்பின்படி அவர் நடக்கத்தக்கவ ராவரா! நமக்கெவ்வளவு தீவிரமிருந்தபோதி லும் அவள் நடந்தால் நாம் பின்னோடு நடக்க வேண்டியவர்கள். அவர் உல்லாசமாய் நின்றால் நாம் அதிதூரத்தில் நிற்கவேண்டியவர் கள். இவ்வளவினரன்றி அவ்வம்பிகையை போ, வா, இரு, என்பத ற்கு நம்மாலாகுமா! இதனை நீவிர் இதுகாறும் அறிந்திலீர்போலும். சிவசமீபத்திற் சென்றாலும் செல்லலாம். அதுபோல் இத்தேவிசமீப த்திற் செல்ல முடியுமோ! நானிங்கு வந்து சமீபத்திற் போவதற்கு முடியாமல் படும்பாடு சிவனேயறிவர். அச்செய்தியங்ஙனமிருக்க. தேவியார் இப்போது புறப்பட்டு வரும்போது, தேவரெல்லாம் வெ கு தூரத்தி னின்றுகொண்டே தேவியை நோக்கி மிக்கபக்தியுடன் பன்முறை வீழ்ந்து வணங்கிக் கைகூப்பி நின்று ஓ ஜகதீஸ்வரீ! உனது சரணாரவிந்தத்தைப் பூசித்துப் புனிதராக விரும்புகின்ற னமென்றார். அப்படியே இலக்குமிமுதலியதேவிகளும் பிரார்த்தித்த னர். இத்தேவியார் அவர்கள் சமீபத்திற் சென்றாரில்லை. பின்னரவ ரெல்லாம் விமானத்தை நிமிர்ந்துயரநோக்கிப் போற்றிய காலத்தில் நிகழ்ந்த தேவியாரது அற்புதவிலாசம் மனோவாக்குகளுக்கெட்டத்த க்கதோ? அதனை இப்பொழுது எடுத்துச் சொல்ல வேதங்க ளெண்ணி னும் சொல்லிமுடியுமோ! அப்போது யாவருக்கு முண்டாகிய ஆனந்தமுழக்கமும், பேரிகை முதலிய வாத்திய கோஷமும், புஷ்ப மாரியினுடைய ஓசையும், ஜயசப்தங்களுடைய ஆரவாரமும் முற்கா லத்திலு மில்லை. இப்போது மில்லை. இனி யுண்டாகப் போகிறதுமி ல்லை. இது நிச்சயம். அவ்வோசைகளின் சுகானந்தத்தையனுபவித்த கந்தர்வசித்த சாத்தியர்களும் எடுத்துச் சொல்ல முடியாது. தே வர்களுடைய நெருக்கத்தைக்கண்ட தேவியினுடைய கணங்கள் தங் கள் கைப்பிரம்பாலடிக்க நாராயணர் முதலியோர் அவ்வடிபட்டு நடு ங்கித்திரும்பிப் பார்ப்பதற்குமின்றி ஒட்டம் பிடித்தனர். அந்த நடுக் கம் இன்னமும் விட்டிராது. இவ்வாறு தேவர்கள் படும் பாட்டை தேவியார்கண்டு சற்றிரக்கமுற்றுச்சமீபிக்க மீண்டுந்தேவரெல்லாம் பிரம்படியுண்டாகு மென்பதை மறந்து சமீபத்தில் வந்து கண்டுகளி த்த கொண்டாட்டத்தையும், தேவமங்கையர்கானஞ்செய்த கானவி சேஷத்தையும் என்னென்று சொல்லுவேன்! இப்பொழுதும் நினைக் க அக்கானம் தித்திக்கின்றது. அதுகாறும் பயந்து தூரத்திலிரு ந்த யானும் சமீபத்தில் போவதற்குத்துணிந்து அருகே சென்று நமது அம்மணியினுடைய அற்புதகோலத்தைக்கண்ணாரக்கண்டு களி

த்துக் கண்பெற்றபயனையும் தவஞ் செய்தபயனையும் அடையப்பெற்றேன். மேருவின் சிகரத்திலிருந்த நீங்களும் தேவமங்கையரெல்லாம் நீராஞ்சனஞ் செய்த காலத்தில் அத்தீபவரிசைகளைக் கண்டிருக்கலாமே, அதுகாணத்தக்கதோ! அதுகிடைக்கப் பெற்றார்க்கு எவ்வகையானும்பயமென்பதுண்டோ? இவ்வாறான அற்புதக்காக்ஷியிற்றிளைத்தும் தேவியினது ஆணைக்கஞ்சியும் இருக்கின்ற எனதியல்பை எல்லாமறியவல்லபெருமானார் அறியாரா? அங்ஙனம் அறியவல்ல அவர் என்னைத்தமது கோபத்துக்கு இலக்கிய மாக்குவரா! ஓ கணங்காள், இப்பொழுது அம்பிகை தமது தாய்தந்தையர்களுக்கு இங்குள்ளவினோதங்களைக் காட்டிக்கொண்டு வுல்லாசமா யிருக்கின்றாராதலால் உங்கள் வரவைச் சொல்வதற்கு யானங்குச் செல்ல முடியாது. உங்களுக்குச்சக்தியிருக்கும் பக்ஷத்தில் நீவிரேசென்று இறைவனுடைய ஆணையைத் தெரிவியுங்களென்றார். அக்கணங்கள் நந்தீசரை நோக்கி ஐயா! நீரேபோவதற்கஞ்சி நிற்பீராயின் நாங்களா அவ்வம்பிகைபால் செல்லுந்தரமுடையேம்! நன்று நன்று!! என்று யொருவரை யொருவர்பார்த்து யாது செய்வோமென்றேங்கி யிருக்கும் போது அம்பிகை யிருக்குமிடத்தில் ஆகாயத்தில் அசரீரிவாக் கொன்றெழுந்து, ஓதேவி! உனது தாய்தந்தையர்களை யவர்களிடஞ் செல்ல விடைகொடுத்து நீ காலதாமதஞ் செய்யாமல் சிவமந்திரஞ் செல்லக்கடவாய். சிவபெருமான் விரும்பிய அந்த க்ஷணமே போவதொழிந்து உதாசீனமாயிருப்பது உசிதமான செய்கை யன்று என்று கூறிற்று. அதனைக்கேட்ட அம்பிகைதிடுக்கிட்டெழுந்து சிம்மவாகனத்தின்மேலேறிக்கொண்டு தாய் தந்தையர்களை நோக்கி இனி நீங்கள் போய் வரலாம், நானும் போய் வருகின்றேனென்று புறப்பட்டனள். அவ்விருவரும் தேவி யினிடத்தில் பிரியாவிடை கொண்டு அம்பிகையைப் பார்த்துக்கொண்டே சென்றனர்.

ஏழாம்அத்தியாயம்
முற்றிற்று.

உ

கணேசாயநம:

## எட்டாம் அத்தியாயம்.

### தேவி நர்த்தியங்காணல்.

ஓ முனிவீர்காள்! தேவி சிஹ்மவாகனத்தின்மீ தெழுந்தருளிச் சில தூரஞ்சென்று பின்னர் சிவபெருமான் ஓர்கணப்பொழுதிலனு

ப்பிய விமானத்தி லெழுந்தருளிச் செல்லும் பொழுது தேவதுந்துபி முழக்கமும் ஜய ஜய வென்னும் ஜயகோஷ முழக்கமும் எவ்விடத்தும் பரவ நந்தியாதி சிவகணங்கள் அதனைக்கண்டு நாம் வந்தவேலை முடிந்ததென்று மகிழ்ந்தவர்களாய் அம்பிகையினுடைய அருளை வியந்து மிக்க பத்தியுடன் அஞ்சலிசெய்துவணங்கி ஜயஜய வென்று போற்றி, கையிலுள்ள பிரம்பெடுத்தோச்சி யசைத்துக் கொண்டு யாவரையும் விலக்கி சிவநாமகோஷஞ் செய்துகொண்டே முன் சென்றனர். அவர்களது கோஷத்தைத் திருச்செவியேற்று ஆனந்த பரிபூரணையாய்ச் சிவத்தியான பரையாய்த் தானும் சிவநாமோச்சாரணை செய்யத்தொடங்கி சம்போ! சிவா! ஹரா!பவா! பர்க்கா!பீமா! ஸ்மரஹரா! சங்கரா! சர்வா! சந்திரமௌளே! திரிநயனு! விருஷகேதனு! அந்தகாரே! கிரீஶா! மிருடா! ஈஶா! ருத்ரா! இந்து சேகரா! மஹாதேவா! மிருத்யஞ்சயா! விஶ்வநாதா! வாமதேவா! பகவன்! சூலின்! கபர்த்தின்! எனது குற்றத்தைப்பொறுத்து ரக்ஷித்தருளும்.

சகல லோகங்களுக்குச் சுகமளிப்போனும், உமாகாந்தனும், மஹேஶ்வரனும், ஈஶ்வரனும், சம்ஹாரகனும், மிருத்யுஞ்சயனும், பர்க்கனும், பூதபதியும், பாலாக்ஷனும், விருஷபேஶனும், ஶம்புவும், திகம்பரனும், மிருடனும், மிருகதரனும், ஸ்ரீகண்டனும், ஜகதீஶனுமாகியதேவரீரை நமஸ்கரிக்கின்றேன் என்று தோத்திரஞ் செய்து போகும் போது சூரியசந்திரவக்னி நக்ஷத்திரங்கள் கோடிகோடியாய்க் கூடினும் உவமிக்கவொண்ணாததாகிய ஓர் திருமாளிகையைக் கண்டு ஆகா! இது வென்ன வாச்சரியம்!இம்மாளிகைபலகோடிமின்னல்கள் நிலைபெறநின்று மின்னுகின்றனபோலக் காந்தி வீசுவதனால் நமது கண்கள் பார்க்கக்கூசுகின்றன. இச்செயல் இம்மாளிகைக்கிருப்பதனாலன்றோ இமையாநாட்டம்பெற்றதேவர்களும் தேவஸ்திரீகளும் இங்கு வருவதற்கஞ்சி வாராதொழிந்தனர்? இது காறும் நாம் காணாத இம்மாளிகை இப்போது காணப் பெற்றது நாம் செய்த பாக்கிய மாகும் என்று சிவனாரது ஆலயத்தைவியந்து பின்னர் தன்னோடுவரும் சகிகளையும் பார்க்க அவரெல்லாம் சோதிமயமாய்ப் பிரகாசிக்கும் அம்மார்க்கத்தில் வருவதற்கஞ்சித் தடுமாறுவதைக்கண்டு இனி இவர்களை நாம் அழைத்துக் கொண்டு போகமுடியாது. நாம் தனியே போவதென்றால் நமக்குரிய பணிவிடையைச் செய்பவர் யாவர்? அன்றியும் நாம் தனியே ஸ்திரீக் கூட்டங்களில்லாமல் செல்வோமாயின் இறைவனார் நம்மைப்பார்த்து என்னசொல்வாரோ!

அவரது திருமேனியில் பாதிபாகத்தைப் பெற்ற நாம் ஸ்திரீபாகங்களைப் பெறாதுபோவோமாயின் நமக்கென்ன மகிமையிருக்கின்றது, சர்வசக்தியுடையோமாகிய நாம் சக்தியற்றவரைப் போல் தனியே செல்லுவோமாயின் சர்வசக்திமயீ, என்கிற பெயரைப் படைத்ததற்குப் பயன்றானென்னையோ, என்றெண்ணி அக்கணத்திலேயே திவ்யசவுந்தரிய சரீர முடையவர்களாயும், திவ்யரத்னாபரணங்களைத் தரித்தவர்களாயுமுள்ள அனேகம் ஸ்திரீகளைப்படைத்தனள். அவரெல்லாம் உருத்திர வீணையைக் கையிலேந்திக்கொண்டு, பரமானந்தத்துடன் பரமசிவநாமங்களைக் கானஞ்செய்னதர். அந்தக் கானஸ்வரூபிணியாகிய தேவியும் அகமகிழ்ந்தவளாய்த்தானுமோர்திவ்ய வீணையை எடுத்துக் கானஞ் செய்யத் தொடங்கினள். அந்தக்கானத்தைக்கேட்டகின்னர கந்தர்வர்கள் இது இன்னராகமென்றறிவதற்கில்லாமல் மயங்கினர். இவ்வண்ணம் வீணாகானஞ்செய்த கவுரீ, தன்னால் சிருட்டிக்கப்பெற்ற சகிகள் தன்னைச் சூழ்ந்துசத்திரசாமராதிகளால் உபசரித்து வர, சிவமந்திரத்தை நோக்கிச் சென்றனள். இவர் வருகையையறிந்த சிவபெருமான்,தேவிமனக்களிப்பெய்தும்வண்ணம் ஓரற்புதச்செயலைக்கருதி அம்மையாருண்டாக்கிய ஸ்திரீகளினுஞ் சிறந்த பல திவ்ய சுந்தரிகளையுண்டாக்கி அவர்களைத் தேவியினெதிர்சென்று வேண்டியவுபசாரங்களைச் செய்து அழைத்துவர ஏவினர். அவர்களும் அப்படியே தூரிமுதலிய பலதேவவாத்தியங்களெல்லாங் கோஷித்துக்கொண்டு வர எதிர்கொண்டு சென்றனர். அவர்கள் வருகையை அம்பிகை தூரத்திலேயேகண்டு பரமானந்தமடைந்து பரமேஶ்வரன் நம்மிடத்திலுள்ள கருணையால் நாம் தனியே போவது அழகல்லவே என்றெண்ணி யதற்காக இவர்களை யனுப்பியிருக்கின்றார். யாவருக்குஞ் சுகத்தைச் செய்வதனால் சங்கரனென்று பெயர்பெற்ற சம்பு நமக்குச் சந்தோஷமுண்டாகு நிமித்தம் இந்த வற்புதமாகிய மங்கையர்களை யுண்டுபண்ணி யனுப்பியது ஓர்பொருளா!இது நம்மிடம் கருணையுடையேம்என்பதைக்காட்டுவதற்கானசெயலேயன்றி வேறன்று. அன்றியும் நீ தாமசித்துவருவதால் நாம் கோபங்கொண்டிலேமென்று குறிப்பித்ததுமாகும் என்றுதேவனது திருவருளைவியந்து எண்ணிக்கொண் டிருக்கும்போது அந்த ஸ்திரீகளெல்லாந் தேவியினருகேவந்து நமஸ்கரித்து திவ்யமாகிய நீராஞ்சனங்கள்செய்து உபசரித்து இரத்தினபாத்திரங்களில் சிவநிவேதனமாகிய அன்னவகைகளையும் கனிவகைகளையுங் காட்ட அம்பிகை அவைகளை அன்புடன் வாங்கிக் களித்து யான் கிருதார்த்தையா

யினேன், ஓ சகிகளே! சிவநிவேதன சேஷங்கிடைப்பதரிதாகலின் இப்பொழுது கிடைக்கப் பெற்றது யான்செய்த பாக்கியமாகும். எவ்வளவு தவஞ்செய்தார்க்கும் சிவநிவேதன சேஷத்தின் லேசத்தின் லேசமும் கிடைத்தலரிது. அச்சேஷம், பாவனத்துக்குப்பாவனமாகும் புரோடாசமென்னும் யாகத்தின் அவிசினும் சிறந்ததாகும். அது வுண்ணுதற்குக் கிட்டாதொழியினும் அச்சேஷத்தைக் காணப் பெற்றாலே புரோடாசத்தல் வரும் பலனுக்கு மேலானபலனுண்டாகும். அதனைப்புசிக்கப்பெற்றாலோ ஆயிரம் யாகஞ்செய்தபலனுண்டாகும். சகலபாவங்களும் நசிக்கும். சகலபுண்ணியங்களும் வளர்ந்தோங்கும். தூரத்திலிருந்து அதன்வாசனையைக்கிரகித்தாலும் பாவவாசனைகள்பறந்து போம். அத்தகையசிவநிவேதன சம்பந்தமேனும் ஒருவனுடைய கிருகத்தில் கிடைக்கப் பெறுமாயின் அதுவே அந்தக்கிருகத்துச் சுத்தியாம். அக் கிருகத்தைச்சார்ந்த ஏனைய கிருகங்களும் சுத்தியாகின்றன. அந்நிவேதன பதார்த்தங்கள் பாலாயினும், கனியாயினும், சர்க்கரையாயினும்இவையெல்லா மல்லாத நீராயினும் மற்றெதுவாயினும் ஒருவன் கிடைக்கப் பெறுவானாயின் அது பெற்றவுடன் பரிசுத்தனுவான். அது கிடைக்கப்பெற்றதனால் யான் பாக்கியசாலி என்பதற்குஞ் சந்தேகமுமுண்டோ!இது கிடைக்கப்பெற்ற புண்ணியவிசேடத்தால் எனக்கு இனிச் சிவசாமீப்பியமும்கிடைக்குமென்பதும் நிச்சயம்.முத்தர்களுக்குச் சிவசாயுஜ்யத்தைக் கொடுப்பதாகிய அது எனக்குச் சிவசாமீப்யத்தைக் கொடுத்தலரிதா! எவன் தன்னிடம் வந்த சிவநிவேதனத்தை மிக்க ஆதரவுடன் தலையால் வணங்கிப் பெற்றுச் சிவத்தியானத்துடன் புசிக்கின்றானோ அவன் சகல பாவக் கடலையுங் கடந்து முத்தனுகின்றான். இம்மகிமையையறிந் தெண்ணுமல் தன்னிடம் வந்த சிவநிவேதனத்தை உதாசினமாய்ச்சற்றுநேரங் கழித்து எடுத்துக்கொள்வோமென்று எவனிருக்கின்றானோ அவனுக்கு மஹா பாவம் அப்பொழுதே வந்துவிட்டதாகும். எவனுக்குச் சிவநிவேதனத்தைப் பெறுதற்கு விருப்பமுண்டாகவில்லையோ அப்பாவியானவன் மீளாநரகத்தில் வீழ்ந்தழிவது நிச்சயம் என்று அதன் மகிமைகளை நன்றாயெடுத்துக் கூறி மகேஶ்வரர் அருந்தி சேஷித்த நிவேதனங்களை யெல்லாம் தலையால் வணங்கி ஆதரவுடன் புசித்து சிவபெருமானைச் சிந்தித்து பரமானந்தமெய்தித் தாம்பூலத்தரித்துக் கொண்டு அக்கன்னியரெல்லாம் பாடுங் கீதங்களைக்கேட்டு மகிழ்ந்து,

பின்னர் அவர்கள் நடனத்தையுங்கண்டு களிக்கத் திருவுள்ளங் கொள்ளவே, அக்குறிப்பை அவர்களறிந்து அற்புதமாகிய நடனத்தைச் செய்யத் தொடங்கினர்.

அதனைக் கண்டதேவி, அந்தோ! ஒருவராலுங்காண்டற் கரிய இந்த ஆச்சரியமாகிய திவ்யநாட்டியமானது இறைவன் நம்மிடம்வைத்தகருணையாலன்றோ கிடைக்கப் பெற்றோம். இவ்வாறு சிவானுக்கிரகத்தால் நிகழும் நாட்டியத்தைவிட்டு நாமெப்படி போவது! இறைவனுடைய கருணையும் இந்நாட்டியத்தினிடத்தில் வளர்ந்தோங்குகின்றதுபோலுங்காண்கின்றதே! இவ்வருள் நடனத்தை விட்டு நாம்போவதற்கே துணிவேமாயின் அதுசிவாபராதமாய் முடியும்.ஏனெனின் இவர்கள் இறைவனுடைய ஆணையால் வந்தவர்களல்லவா! இந்தநாட்டியம் எவ்வளவுகால அளவினையுடையதோ!ஆரம்பத்திலேயே பரமானந்தத்தை விளைவிக்கின்றவிது.போகப்போக என்னரசானந்தத்தை விளைவிக்குமோ! அந்தவானந்தத்தை இப்போது நாமென்னவென்று சொல்லக்கூடும். இதனைப்பார்ப்பதற்கு மூன்று கண்ணிருந்தாலும் போதாதே!நிர்மலமானகண்கள் ஆயிரமாவது லக்ஷமாவது அர்ப்புதமாவது அளவுகடந்ததாவது இருந்தாலன்றோ இந்த நடனத்தைக் கண்டு மகிழலாம்? இப்போதிருக்கும் இரண்டு கண்கள் போதாதென்று அந்தக்ஷணமே தனதிச்சையால் நிர்மலமாயும் அழகுடைத்தாயுமுள்ள எண்ணிறந்தகண்களைச்சிருட்டித்துக்கொண்டு அந்தநாட்டியத்தைப்பார்த்துப் பரமானந்தையாய்த்தனது பிரஞ்ஞையை மறந்து அந்நாட்டியத்தைப்பார்த்துக் கொண்டே அநேகநாள்கழித்தனள். ஒவ்வொருகணந்தோறும் நவநவமாய்த்தோன்றும் இந்த நாட்டியத்தைக் கண்டு யார்தான் பரவசமாகார். நாட்டியக்காரராகிய அரம்பையரும் அதனைக் கேள்வியுற்றுப் பரமானந்த மடைந்தனர். பரமாச்சரியம், பரமாற்புதம், பரமானந்தம் என்றே சொல்லத்தக்க இதனை இறைவனருளன்றோ உண்டாக்கியது, அவ் விறைவன் விசித்திர நர்த்தனத்தில் மஹா சமர்த்தனுதலால் அவனுக்குத்தான் இது வாச்சரியமன்றே யன்றி ஏனைய சுவர்கலோகத்தார்க்கும், சத்தியலோகத்தார்க்கும் விஷ்ணு லோகத்தார்க்கும் இதைப்போலும் ஆச்சரிய மான தொன்றுண்டோ? இதைப்பார்ப் போரது பாக்கியமேபாக்கியம், இந்த நாட்டியத்தைச் செய்யும் இம்மங்கையர்களேபாக்கியவதிகள், இவர்களுடைய அழகே பேரழகு. இவர்களுடைய முகத்தை லக்ஷ்மி காணப்பெறுவளாயின் தூரத்திற்றானே நின்று நாணித் தலைகுனிவளென்றால் ஏனையோரது சுந்தரங்களைச்சுந்

தரங்களென்றுஞ் சொல்லலாமா! ஸ்திரிகளிடத்தில் விரும்புஞ்சுகத்துக்கு முக்கியமாய்க் காணத்தக்கது சுந்தர மன்றி வேறியாது? அதுவுடையராயின் அவர்களுக்கு ஆபரணம் வேண்டுமோ! எங்குங்கண்டறியாத ஆச்சர்ய சுந்தரமுடைய இச் சிவதாசிகளைக் காண்பராயின் ஙந்தத்தேவ மங்கைதான் தனது சுந்தரத்தை நிந்தித்துக் கொள்ளாதிருப்பாள்? இவர்களுடைய யவ்வனமானது மிக்க வாச்சரியம். இது கிடைப்பதற்கு இவர்கள் செய்ததவமேதவம். இது தான் அடையப்படும்பாக்கியமும். இது எத்தனை கோடிதவஞ்செய்தாலும் ஓர் தினையளவுங்கிட்டுதலரிது. காலோசிதமாயுண்டாகிய இவர்கள் சிவானுக்கிரகத்தாலடையப்பெற்ற பாக்கியம் இவ்வருமையுடைத்தாயின், பலகோடி காலந்தவஞ்செய்து உலகசங்கரனாகிய இறைவனைத் திருப்திசெய்தடையும் பாக்கியம் எத்தன்மைத்தாயிருக்குமோ! அதனையானறியேன்.

உலகின்கண், யாதுயாது சிறப்புடன் கூடியிருக்கக் காண்கின்றேமோ அஃதெல்லாம்சங்கரனுடைய அனுக்கிரகத்தினலேயேஉண்டாகின்றதென்றறியற்பாலது. அவ்வனுக்கிரகத்திற்குவித்தாயுள்ளது சிவார்ச்சனையேயாம். அவ்வர்ச்சனையை விட்டு தர்மார்த்தங்களினால் வரும் பயனைப் பெறுவாரிங் கொருவருமில்லை. உலகின்கண் யாவர்க்கும் எதுஎது துர்லபமோ அவையெல்லாம் சுலபமாய் ஒருங்கேயடையச்செய்வது சிவார்ச்சனையேயாம். அவ்வர்ச்சனையன்றி வேறெதனாலு மாகாது. ஆனால் சிவபூசையில் அதிகாரமுண்டாதல்மிகவுந்துர்லபம். அஃதுண்டாயின் அவர்களாலடையக்கூடாத அரிதானபொருள்யாதுமில்லை. இவ்வருச்சனையை விட்டு வேறான துர்முயற்சியால் அடையப்படும் சுவர்க்காதி இன்பங்கள் நிலையுதலிலவாய்ப் பொய்ப்பட்டுப்போகின்றன. உண்மையில் சுவர்க்கம் என்பது சாம்பவரிருக்குமிடமே யன்றி தேவர்க்களிருக்குமிடமன்று, ஏனெனின், சுவர்க்கம் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் சுகம் என்று நூல்களில் கூறப்பட்டிருக்கின்றமையால் அசுரர்களால் எப்பொழுதும் பலவகையாகிய துக்கம் நிகழ்தற்கிடமாகிய தேவருலகம் எங்ஙனம் சுவர்க்கமாகும். அந்த துக்கசுவர்க்கத்தை சுகஸ்வர்க்கமாகச் சாஸ்திரங்கள் எவ்வாறு கூறும்! ஆயின் தேவருலகம் சுவர்க்கமென்று வழங்கப்பட்டு வருகின்றதே யெனின் பிரளயத்தில் மரிக்கத்தக்க தேவர்களுக்கு அமரரென்கிறபெயர் வழங்கப்பட்டு வருகின்றது போலவேயாம். இதனுண்மையை யாராயுமளவில் மரிக்கின்றவர்களாகிய

தேவர்களுக்கு அமரரென்னுஞ் சொல் அவுபசாரமாய் அமுக்கியமாகவும் மரித்தலையறியாத மஹாதேவனாகிய அமரநாயகனுக்கு அச்சொல் முக்கியமாகவுங் கொள்ளப்படுமாறுபோல தேவர்களது சுவர்க்கத்தை அமுக்கிய சுவர்க்கமாகவும்,மஹாதேவனது கைலாசத்தைமுக்கிய சுவர்க்கமாவும் கொள்ளவேண்டு மென்று பெரியோர் கூறுகின்றனர். அவ்வுண்மையையறியாதமயக்கவறிவுடையார்கைலாயத்தைச் சுகசுவர்க்கமென்றெண்ணாமல் துக்க சுவர்க்கமாகிய அமரருலகத்தையே சுகசுவர்க்கமாகவெண்ணுகின்றனர். அந்தோ! இந்த நாட்டியம் தேவருலகத்திலிருக்கின்றதா இல்லையே! இதனையுடையது கைலாயமேயன்றோ என்று அந்த நாட்டியத்தையும் கைலாயத்தையும் புகழ்ந்து, பரம சந்தோஷபரவசையாய் எல்லாவற்றையு மறந்திருந்தனள்.

எட்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

சம்பிரகிருதாயநமஃ

## ஒன்பதாம் அத்தியாயம்.

### நந்தீச கணாதிப சம்வர்தம்.

வியாசர் கூறுகின்றார். இவ்வண்ணம் அற்புத நாட்டியத்தைக் கண்டு காலஞ் செல்வதையறியாமல் தேவியாரிருக்குந்தருணத்தில், காலத்தை எண்ணி எண்ணித்திருவுளம் வருந்தினவராய், சிலகணங்களைப்பார்த்து ஓ கணங்காள்! எனது பிரியையாகிய பார்வதி ஏன் வரவில்லை, ஏன்காலதாமசஞ்செய்கின்றாள் என்று சிலவார்த்தைகள் சொல்லி நீங்கள் அதனை யறிந்து வாருங்களென்றனுப்ப, அவர்கள் அப்பணி தங்களுக்குக்கிடைத்ததென்று அதிகவுற்சாகத்துடன் நந்தீசரிடம் வந்து அவரைப்பார்த்து, ஐயா! என்ன செய்கின்றீர்? பார்வதீநாதனது திருவுளத்துக்கு ஆனந்தத்தை விளைவிக்கத் தக்கநீர் இப்போது துன்பத்தைவிளைவிக்கின்றீரே!இஃதென்ன காரணம்?நமது சங்கரர்எங்களிடத்தில் இப்போதுசொல்லியனுப்பியதைக்கேளும். நந்தியினால் எனக்கென்னசகாயம்? மற்ற கணங்களும் தங்கள் தங்கள் சுகங்களைப் பெரிதாகவெண்ணிக் காலத்தைக் கழிக்கின்றவராயினரா

தலால் அவர்களால்தான் என்னபிரயோசனம்?எனக்கோகவுரியைக் காணமையால் ஓர் கணம் ஓர் கற்பகாலமாக இருக்கின்றது. உற்சாகமோ குறைந்து வருகின்றது. உலகத்தில் சந்தோஷத்தை விளைவிக்கத்தக்க பொருள் பலவிருப்பினும் அவைகளால் எனக்கென்ன சுகம் விளையும். எனக்கு ரமணீயமானவளும், ரமணீயமான சுகத்தைவிளைவிக்கிறவளும் கவுரியே. அவளைப்போன்ற வேறு பொருள் எனக்கு எங்கணு மிருந்ததில்லை, இருக்கின்றதில்லை, இருப்பதுமில்லை. அவள் அபூர்வமான ஸ்திரீ சிருஷ்டியாகும். அந்தச் சிருஷ்டி எந்த முகூர்த்தத்தில் நிகழ்ந்ததோ அந்த முகூர்த்தங்கிடைப்பதரிது. அதன் மகிமை எவருஞ்சொல்லவல்லவரல்லார். அது என்னாலே நிர்மிக்கப்பட்டதேனும் அது எனக்கிப்போது அன்னியமாக விருக்கிறது. இஃதற்புதம். அந்த முகூர்த்தத்துக்குச்சமானமான முகூர்த்தங்கிடைப்பதரிது. அதுபோல் கற்பாந்தத்தினும், கற்பமத்தியினும், கற்ப ஆதியாகிய இப்பொழுதினும் இல்லை. இங்ஙனமான அரிய முகூர்த்தத்தில் வந்தவளாகிய அவள் இப்பொழுது என்னிடம்வர எவ்வளவு காலஞ் செல்லும். அதனை யறிந்துவாருங்களென்றனுப்பினார் என்று கணங்கள் கூறவே, அவ்வசனங்களை நந்திப்பெருமான் முதலாயினார் கேட்டு ஒருவர் முகத்தை யொருவர்பார்த்து அதிகசந்தோஷத்தோடு மகேஶர்கூறியதெல்லாம் உண்மையே. அப்பெருமான் நம்மாலாவதாய் விரும்பிய இக்காரியம் இப்பொழுது முடியாது. யான் பூர்வத்திலோ சகல தேவ உரகர்களையும் ஓர் திரணத்தால் கட்டிவிட்டேன். என்னுடைய வுள்ளங்கையில் நதி தடாக சமுத்திர முதலியவை யெல்லாம் ஓர் முத்தி னளவா யடங்கிப்போயின. சகல பிரஹ்மாண்டங்களையும் ஓ ரணுவளவாகச் செய்துவிட்டேன். சகல தேவர்களும் என்னுடைய சேவகத்தைக்கண்டு நடுங்குகின்றனர். எனது சேவகரின் சேவக சேவகர்களை பிரஹ்ம விஷ்ணுவாதி தேவர்கள் காணப்பெறுவாராயின் பூஜிக்கின்றவராயும், நடுங்குகின்றவராயும், அஞ்சலி செய்து நின்று யாதுபணியென்று கேட்கின்றவராயுமிருக்கின்றனர். இவ்வளவு பேராற்றலையுடையேன். இவ்வளவும் அவ்விறைவனது கிருபாலேசத்தினாலேயே பெற்றுள்ளேன். சங்கரனது அடிமைத்திறத்தால் இவ்வளவு மகிமைபெற்றுள்ளோனாகிய யான் இப்போது ஏவிய இக்காரியத்தில் சிறிதுஞ் சாமார்த்திய மற்றவனாய் ஒன்றுஞ்செய்ய முடியாதவனாயிருக்கின்றேன்.

இதனை யாராயுங்கால் நான் முன் முடித்ததாகச் சொல்லிவந்த ஆற்றலெல்லாம் இறைவன் சக்தியோடு கூடியிருந்து அனுக்கிரகித்

து வந்தகாலமானதால் அவையெல்லாம் எனக்குச் சுலபமாயிருந்தன. இப்போது ஏவிய இந்தக்காரியம் சக்தியில்லாமல் கூறினாரா தலால் நானிதனைச்செய்துமுடிக்குஞ் சக்தியற்றவனாயிருக்கின்றேன். இது உண்மை. ஆதலால் இது என்னால் செய்யமுடியாதென்பதே நிச்சயம். அன்றியும், சத்திசங்கற்பித்த வழி நாம் நிற்கவேண்டியவர்களா! நாம் சங்கற்பிக்கும் வழி சத்தி நிற்பதா! ஆகலான், நமது சத்தியெங்கே, அகிலாண்டகோடி பிரஹ்மாண்டங்கட்கும் அதீசையாகிய அம்பிகையெங்கே, அச்சுதந்தரையாகிய ஜகதீஶ்வரியினிடம் உம்மைச் சிவபெருமான் விரைவாய் வந்துசேரச்சொன்னாரென்று பரதந்திரராகிய நாம் எவ்வாறுசொல்வது? வாங்மனாதீதமாகிய மகிமையையுடைய அம்மஹாசக்தியின் சங்கற்பத்தை மாற்றவேண்டியவர் சர்வேந்திரியாமியாகிய அவரேயன்றி நாமா? அதனைப் பிரபுவாகிய மஹாதேவரேயறிவர். அங்ஙனமிருக்க, சர்வஞ்ஞராகிய அவர் நம்மை இதிலேவி, இந்தக் காரியத்தை நாம் முடிக்கவில்லை என்றெண்ணவந்தது நமது பாக்கியஹீனமென் றெண்ணவேண்டியதே யன்றி வேறின்று.

இப்பொழுது அம்பிகை புறப்பட்டது யான் சொல்லியா, சொல்வதற்கு எனக்குச்சமயமும் வாய்த்ததா! யான் கண்டுசொன்னது மலையரையனையன்றி மலையரையையன்று. இவ்விடத்தில் என்னாலானசெயல் ஒன்றுமில்லை. அம்பிகையே தனதிச்சையால் கயிலாயத்துக்குப்போகவேண்டுமென்று புறப்பட்டதேயன்றி என்னாலும் உங்கட்குமுன் வந்தவர்களாலுமென்றெண்ணன்மின். எங்களால் யாதொரு பயனுமில்லை. அம்பிகைக்குச் சர்வாதிகாரமும் இறைவனே கொடுத்திருக்க அவரிடத்தில் யாருடைய அதிகாரம் செல்லும்! நாராயணாதியரிடத்துள்ள சிவானுக்கிரகமே உலகமெல்லாம் அவரேவலின்வழிநிற்கச்செய்யுமானால் அச்சிவனாரது அர்த்தாங்கமா யிருக்கின்ற அம்பிகையினிடத்துள்ள அச்சிவனாரது அனுக்கிரகத்துக்கு ஓரிலக்கியமுஞ் சொல்லுவதற்குமுண்டோ! இங்ஙனமான அனுக்கிரக விசேடத்தைக்குறித்தன்றோ தேவர்முதலாயினோரும் மலைமுழைகளில் அரியதவமியற்றிக்கிடக்கின்றனர். இச்செய்தி யிங்ஙனமிருக்க, இப்பொழுது நீங்கள் வந்தீர்களே! நீங்களென்ன செய்யப்போகின்றீர்கள். உங்களுக்குமுன் வந்த நாங்களெல்லாம் எவ்வளவு காரியஞ் செய்தோமோ அவ்வளவுகாரியந்தான் உங்களாலும் முடியும்.

ஓ கணங்காள்! இப்பொழுது கிரிஜை, நாட்டியமண்டபத்தினிருந்து எல்லாவற்றையுமறந்து நாட்டியத்தைப்பார்த்துக்கொண்டிருக்கின்றனர். அதுவும் இப்போழ்துதான் ஆரம்பிக்கப்பட்டதாயிருக்க அதனைவிட்டு எவ்வாறுவருவார்? நாமோ அந்நாட்டியவாசனை யடிக்குமிடத்துஞ் செல்லக்கூடாது. அங்குள்ள கூட்டங்களெல்லாம் சத்திக் கூட்டங்களே! ஆகவே, இப்போது வந்தவர்களாகிய நீங்களும் உங்களுக்குமுன் வந்தவர்களாகிய நாங்களும் செய்யுங் காரியமென்னை! இன்னும் கைலையிலுள்ள கணங்களெல்லாம் கோடிகோடியாகத்திரண்டு வந்தாலும் செய்யுங்காரியமென்னை! இங்கொருவராலும் யாதொரு பயனுமில்லை. இங்கு கணங்கள் வந்து சேர்வதுபோலும் அங்கு நாட்டியப்பெண்கள் புதிதுபுதிதாய் வந்துகொண்டே இருக்கின்றனர். அங்கு வருபவரை நீரெப்படியறிந்துசொல்லுகிறீரென்று கேட்பீராயின் கேட்கப்படும் நடனகானபேத லக்ஷணங்களால் யூகித்துச்சொல்லுகின்றேன். ஓ கணங்காள்! பார்வதியாரது வரவை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கும் இறைவனார் நாட்டியத்திறமை வாய்ந்தநாட்டியப்பெண்களை அணியணியாய் நவநவமாய் அவர் வாராவண்ணம் அவர்பால் ஏனனுப்புகின்றார்? நம்மையும் கூட்டங்கூட்டமாய் அவரை யழைத்துவாருங்களென்று ஏனேவுகின்றார்? இதனை நாமென்னவென்று சொல்லலாம். ஒருபொருளையுங்கண்டதிசயிக்காத பார்வதியாரும் அந்த நாடகப்பெண்களைப்பார்த்து அதிசயித்தவண்ணமா யிருக்கின்றார். இலக்ஷுமிதேவி அழகையும் சரஸ்வதிதேவி கானவினோதத்தையுங் கண்டு நாணமுறுகின்றனர். இவ்வண்ணம் யாவரும் மயங்கத்தக்க நாடகப்பெண்களையும் சிறந்த அன்னவகைகளையும், கனிவகைகளையும், சந்தன தாம்பூலவகைகளையும் புதிது புதிதாய் இறைவனார் அனுப்பிக்கொண்டேயிருக்க, இறைவியாரும் கானவினோதங்களைப் பார்த்துக்கொண்டும், அன்னமுதலியவற்றை யுண்டும் அணிந்தும் இவ்வளவு காலம் ஆயிற்றென்பதையும் அறியாமல் காலதாமதஞ் செய்துவருகின்றனர். இதனால் காலதாமதஞ்செய்விக்கின்றவர் சிவனாராயும், தாமதஞ்செய்கின்றவர் சிவையாருமாயினர். இவ்விருவரிடையில் நாமென்னசெய்வது? நீங்களேசொல்லுங்கள். இனி பிரபுவாகிய சங்கரர், நாடகப்பெண்களையும் ஏனையபொருள்களையும் புதிது புதிதாயனுப்பாதிருப்பாராயின் ஓர் சமயம் பரமேஸ்வரியார் சீக்கிரம்புறப்பட்டாலும் புறப்படுவார். ஸ்திரீகளுக்கு நாட்டியம் பார்ப்பதில் மிக்க பிரியம். அங்ஙனமிருக்க, இந்த நாடகப்பெண்களுடைய நா

ட்டியமோ மிக்க ஆச்சரியகரமாயுள்ளது என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது மந்தமாருதமும், மலர்த்தேன்மணமும் எங்கும் வீசிற்று. அக்குறிப்புணர்ந்து நந்தீசர், இனிச்சீக்கிரத்தில் அம்பிகை பிரயாணமாவார்போல் தோன்றுகின்றது. இனிப்புதிதான நாட்டியம் நடவாதிருக்கவேண்டும். நடக்குமாயின், அம்பிகையும் அந்த நாட்டியத்தை நடத்தச்செய்வாளாயின் இனிப்புறப்படுவது எக்காலமோ நாமறியோம்! ஆகையால் இடையூறு செய்வதற்காக நடனத்தை இடையூறுசெய்வதற்கும் தேவியாரதுமனம் அது விஷயத்தில் செல்லாதிருத்தற்கும் நாம் செய்யத்தக்க காரியம் யாதானுமுளதா! அது நம்மால் முடிமோ! முடியாது. இதற்கு விநாயகமூர்த்தியைச் சிந்திப்போமா! இது அவராலும் முடியாது. ஆனல் அவரைச் சகல விக்ன கர்த்தரென்று சொல்லுகின்றபடியால் ஓர்கால் விக்கினஞ்செய்ய வல்லபமுடையாராலுமாவரென்றுதோன்றுகின்றது. அவரைவிட்டு மற்றெவராலும் முடியாதென்பது நிச்சயம்.

ஒன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
வடவேசநம ஃ

## பத்தாம் அத்தியாயம்.

### கணேச சிவசந்நிதான் சயாகமம்.

வியாசர் கூறுகின்றார். ஓ முனிவர்காள்! நந்தியாதி கணங்கள் தேவியார், சிவபெருமானிடம் போவதற்கில்லாமல் தாமதித்திருக்கின்றனராதலால் இதற்குக் கணேசரை வரவழைக்கலாமாவென்று ஆலோசித்துக்கொண்டிருக்க, அங்கு கைலாயநாதர் தேவியார் வரவில்லையே, என்று ஏக்கங்கொண்டவராய், மெல்லிய வாகைமலரைப்பழித்த சரீரத்தையுடையவளாகிய கிரிஜை கயிலாயம் பார்க்க வருவதில் தாமதமாவதற்குக்காரணம் சரீர சிரமத்தினலோ, விமானத்தின் வேகத்தாலுண்டாகிய காற்றினலோ, தாயைவிட்டுத் தனியேவருவதனலுண்டாகிய மனக்கவலையாலோ, மற்றெதனலோ நாமறிவதற்கில்லையே. ஸ்ரீதேவிக்கு எந்தவிதமான கவலையுண்டானபோ

தினும் மேனை யுடனிருப்பாளாயின் அதற்கேற்ற வுபாயங்களைச்செய்து வருவதற்கான ஊக்கத்தையுண்டுபண்ணுவாள். அவளில்லாமையால் அன்னங்கொடுப்பாரின்றி இளைப்படைந்து உறங்கிவிட்டனளோ! தாய்தந்தையரைப் பிரிந்ததனால் மூர்ச்சைபடைந்தனளோ, அந்தோ! நமது கிரிஜை கல்லாகிய கிரிக்குப்பிறந்தவளானாலும் அவள் மனம் கல்லின் தன்மையுடையதன்றே. அவள்மனம்போலும் மிருதுத்தன்மையுடையபொருள் எதுவிருக்கின்றது! அதனை நாமறிந்திருந்தும் அவள் சமீபத்திற்செல்லாதொழிந்தோமே, முன்னமே அவள் தவத்தால் வாட்டமுற்றவளாதலால் மார்க்கத்தில் என்னகதியாயினளோ, இப்போதாவது நாம் போவோமென்றால் அவளையெண்ணியெண்ணி ஏங்கிய ஏக்கத்தால் சக்தியற்றிருக்கின்றோமே. பேசுவதற்குஞ் சக்தியில்லையே, நாம் கூட்டங் கூட்டமாக அனேகரையனுப்பியும் ஒருவராவது வந்து இன்னகதியாயிருக்கின்றாளென்று சொன்னாரில்லையே! யாரிருந்தும் நமக்கென்னபயன்? இனி அதனைச் சொல்வதனாலும் வரும் பயனென்? நமக்கு வைராக்கியமின்மையால் இவ்வாறு கவலைப்படலாயினோம். அஃதொன்றிருக்குமாயின் நமக்கு இக்கவலையுண்டாகாதல்லவா? ஒருவனுக்கு வைராக்கியமே பெரியபாக்கியம். அது கிடைப்பதரிது. அதனை நாம் இப்போது நினைப்பது குற்றம். இந்தயோசனை பார்வதியைக்கொள்வதற்குமுன்னிருக்கவேண்டும். இப்போது பார்வதியைப் பாலனஞ்செய்யாவிடில் கெடுதிவருவது நிச்சயம். பர்த்தாவானவன், கற்புடையாளது மனங்களிக்குமாறுசெய்வதே விதியாமென்று வேதங்களுங் கூறுகின்றன. பர்த்ருத்தன்மையானது பதிவிரதா தர்மத்தினாலுண்டாகவேண்டியதால் அவளைப் பர்த்தாவானவன் பிரிந்திருத்தலும் அவள் மனம் வாடும்படி செய்தலும் பெருங்குற்றமாம். பதிவிரதை மனக்கோட்டம் அடைதற்குக்காரணம் பர்த்தாவின் பிரிவேயன்றி மற்றொன்றன்று. பெருந்தவத்தினால் கிடைக்கத்தக்க இப் பர்த்ருத்தன்மை அவள் மனங்களிக்க நடப்பதனால் சித்திப்பதாகும். ஆகலின் நமது கற்புடையமங்கை இன்னமும் வரவில்லையே, அவள் வருவதற்கான சகுனங்களொன்றுங் காணப்படவில்லையே. இனி நாம் செய்யத்தக்கதுயாது? எதற்கும் நாம் நமது குமாரனாகிய கணபதியை வரவழைப்போமென்று அவனை நினைத்தனர். நினைக்கவே கணேசப்பெருமான் அதனை யறிந்து நம்மை யாதுகாரணமாய் தந்தையார் நினைக்கின்றார். அது சந்தோஷகாரணமாயிருக்குமோ? வேறு காரணமாயிருக்குமோ? ஆனால் நமது மனம் இப்

பொழுது ஆனந்தத்தையடைகின்றபடியால் உலகத்திற்கு யாதோ ஒரு க்ஷேமத்தை யுத்தேசித்ததாகவே தெரியவருகின்றது. இல்லாவிடில் நமக்கு இந்தப் பரமானந்தம் உண்டாகமாட்டாது. நல்லசகுனங்களுந் தோன்றுகின்றன. இது நமக்கோர் நற்காலமாகும். பரமேஶ்வரன் நம்மை நினைக்கும்படியானபாக்கியத்தைப் பெற்றோமே. இதனின்றும் பாக்கியம் நமக்குவேறுண்டோ! எவரது பாதாரவிந்தத்தை வேதாந்தங்கள் தேடித்திரிகின்றனவோ, எவரது பாதபங்கஜத்தைக் காணுதற்கு நாராயணர் முதலியோர் விரும்புகின்றனரோ, எவரது பாதபங்கஜத்தைக் காணுதற்கின்றி அருமைபெற்றுடையதோ அவரது பாதாரவிந்தத்தைத் தரிசித்து மகிழுங்காலம் நமக்குக் கிடைத்ததே என்று பேரானந்தப் பெருங்கடலின்மூழ்கி தியானஞ்செய்துகொண்டே பரமேஶ்வரரது சந்நிதானத்தை யடைந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து கைகூப்பி நின்று தோத்திரஞ்செய்து மீண்டும் நமஸ்கரித்து அவரது பக்கத்தே நின்றருளினர்.

பத்தாம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

அபீஷ்டவரதாயக:

## பதினோராம் அத்தியாயம்.

### கணேச பிரார்த்தனை.

வியாசர் கூறுகின்றார். ஓ முனிவீர்காள்! ஸ்ரீ கயிலைநாதன் தனது பக்கத்தில் நிற்கும் சகல வேதாந்த பரமகாரண கணேசராகிய கணேசரை நோக்கி, ஓ டுண்டி! குசலமா? குமாரன் எங்கிருக்கின்றான்? உங்க ளிருவரையும் பார்த்து வெகுநாளாயிற்று. இனி நீங்களும் கிரிஜையும் என்னை விட்டு நீங்காமல் என்னுட னிருக்கவேண்டும். உங்களைப்பிரிந்து என் மனம் படும்பாட்டை நான் என்னவென்று சொல்லுவேன்! அது என்னால் சகிக்கமுடியவில்லை. உன் தாய் இங்கிருந்து போனதுமுதல் இமாசலத்திலிருந்து இப்பொழுதுதான் புறப்பட்டு இக்கைலைக்குச் சிலதூரத்தில் வந்திருப்பதாகத் தெரிகின்றது. இன்னமும் இங்குவந்து சேரவில்லை. இடையில் என்ன விக்கினம் நேரிட்டதோ அதுவுந்தெரியவில்லை. நீ சென்று அவ்விக்கினங்களைப் போக்கி அழைத்துக்கொண்டு வருவா

யாக, உனக்கும் அன்னையைப் பார்ப்பதில் ஆவலிருக்குமல்லவா வென்றனர். டுண்டி விநாயகர் அதனைக்கேட்டு அவரடி பணிந்து ஓ ஐயனே! நீர் என்னன்னை வரவில்லையென்று எண்ணவேண்டாம். மார்க்கத்தில் மந்தமாருதத்தால் சிறிது சிரமபரிபாகஞ் செய்து கொண்டு பைய வருதலால் தாமதமாகின்றது. அன்றியும் தேவரீ ரனுப்பிய கானநாட்டிய மங்கையர்கள் செய்யும் அற்புதமாகிய கலா விலாசத்தில் மனதைச்செலுத்தி மற்றவைகளையெல்லா மறந்து பரம சந்தோஷத்துட னிருக்கின்றாள். இனி அம்பிகை சீக்கிரமாய் வர வேண்டுமாயின் அந்த நாட்டியத்திற்கு விக்கினஞ்செய்யவேண்டும். அது செய்தால் அது ஓய்ந்துவிடும். ஆனால் நாட்டியம் பார்ப்பதில் என்னன்னை ஆவலுடனிருக்கும்பொழுது நான் அனுகூலஞ் செய்வ தொழிந்து பிரதிகூலஞ் செய்வேனாயின் அது பெருங்குற்றமாமாத லால் என் மனம் அதற்கிடையூறு செய்ய முயலவில்லை. விக்கின கர்த்தாவாகிய நான் விக்கினஞ்செய்ய முயன்றாலும் அம்முயற்சிக்கு விக்னம் வருமேயன்றி நடனத்துக்கு ஒருநாளும் விக்னமுண்டா காது. ஏனெனின் யான் யாவர்க்கும் விக்னஞ்செய்யும் சக்தியுடை யவனேயன்றி சர்வசக்தி ரூபிணியாகிய அன்னைக்கு விக்னஞ்செய் யும் சக்தியுடையவனாவனா? பலாபலத்தைப் பார்த்தல்லவோ ஒரு கா ரியஞ் செய்யவேண்டும்? தேவரீருக்கு அம்பிகை சீக்கிரத்தில வரவே ண்டுமென்கிற எண்ணமிருப்பது உண்மையாயின் எங்குங் காணாத ஆச்சரிய நாட்டிய வித்யாநிபுணராகிய நாடகப்பெண்களை ஏன் அனுப்பினீர்? அவர்களது நடனம் சாமானியமாயிருக்குமாயின் உமது நடனசாக்ஷியாகிய அம்பிகை அதனைக்கண்டு மயங்கியிருப் பரா? ஆதலால், இந்தப் பிரம்மாண்ட மெங்கணுங் காண்டற்கரிய அபூர்வசிருட்டியாகத்தா னிருப்பார்கள் உம்மா லுண்டாக்கப்பட்ட பெண்களென்று நினைக்கின்றேன். யாவராயினும் பூர்வத்தில் எங்குங் காணாத ஆச்சரியத்தைக் காண்பாராயின் பார்த்தது போதுமென்று எண்ணுவார்களா! அன்றி முன் பலமுறை கண்டதாயினும் அது சிறப்புற்றிருக்குமாயின் அதனைக் காண்பதினின்றும் அவர் மனம் அப்புறம் போகுமா! அது மனதுக்கியல்பான தருமமல்லவா! அன்றி உம்முடைய ஆணைக்கஞ்சி நான் விக்கினஞ்செய்யத் தலைப் படுவேனாயின் அதனைக்கண்டு அம்பிகை நம்முடைய மகன் நமக்கு விக்னஞ்செய்வதாவென்று ஓர்சமயம் கோபிப்பாராயின் நான் திரு ம்பி வருவது சந்தேகந்தான். இந்த வகிலாண்டகோடி பிரஹ்மாண் டங்களுக்குள் அம்பிகையினுடைய செயலுக்கு இடையூறு செய்யத்

தக்க வன்மையாளனும் ஒருவனுண்டா! தான் நாசமடைபவன் எவனோ அவன்றான் அதனைச் செய்யத்துணிவான்.

ஓ பரமேஶ்வரா! உமது பாதாரவிந்தத்தில் என் மனமானது வண்டுபோல் மயங்கிக்கிடக்கும் அன்புடைமையும், என் கண்களானவை உன் தரிசனத்தில் அவாவுடைமையும் உடைத்தானவனாயிருக்க இப்போது அருளுடைமைக்கு மாறான இச்செயலில் யான் தலைப்படேன். இவ்விடம்விட்டு எங்கும்போகேன். சகல வேதாந்த வாக்கிய சாரங்களால் யாதொன்று பிரதிபாதிக்கப்படுகின்றதோ அது தேவரீரது பாதாரவிந்தமேயாதலால் அதனை யான் காணப்பெற்றும் காணப்பெறாதவன்போல் ஏன் போகவேண்டும்? அநந்தகோடி தவங்களால் அடையத்தக்க அரிய பொன்னடி எளிமையாய்க் கிடைக்கப்பெற்றும் அதனருமை யறியாது செல்வேனாயின் மீண்டும் அடையப்பெறுவேனென்பது என்ன நிச்சயம். ஆகலால் தேவரீருக்கு என்னிடம் கிருபையிருக்குமாயின் உமது பாதாரவிந்த பூஜையாகிய செயலில் என்னை யிருக்கும்படிச் செய்யும். வேறு செயல் எனக்கு வேண்டாம். அன்றியும் நான் பூஜிப்பதற்கு இது நல்ல சமயம். தேவி வந்துவிட்டால் நானெவ்வாறு பூஜிப்பதற்குக்கூடும்? இடையூறுதானுண்டாகும். அது நிச்சயம். ஆதலால் நான் போகவேமாட்டேன். இடையூறின்றிப் பூஜிக்க விரும்பியிருக்கும் நான் இடையூறாகத்தக்க அம்பிகை வருகைக்கு முயல்வேனா! இப்போது என் மனத்தைத் தேவரீரது பாதாரவிந்தத்தில் சோரஸ்திரீ சோரபுருஷனிடத்தில் தன் மனதை எப்படிவைத்திருப்பாளோ அப்படி வைத்திருக்கிறேன். ஆன்மாக்கள் அனந்தகோடி ஜன்மங்களில் ஆர்ஜிக்கப்பட்ட புண்ணியராசிகளால் அடையத்தக்கவன்றோ உமது தரிசனமும் பாதபூசையும்? இவ்வளவு அருமைபடைத்தவாகிய தரிசனமும் பூஜையும் எனக்குக் கிடைப்பதற்கே அம்பிகை சாவதானமாய் வருவதாக வெண்ணுகிறேன். அது நான் செய்த தவமாகும். ஓ மாத்ருபூதேஶ்வரா! உமது பாதபூஜகராகிய பாக்கியவான்கள் நான் உனது பாதபங்கஜத்தைக் கண்டது போலும் கண்டிருப்பரோ! என்னப்பனே! வெளியே காணப்பெற்ற உன் பொன்னடி என்னுள்ளத்துள் இனி நீங்காதிருக்கவேண்டும்.

ஓ திரியம்பக சதாசிவா, திரிபுரமர்த்தனா, கிருபாரச சுசாகரா, ஸ்மரஹரா, அந்தகாரே, ஹர, பவாப்திசம்சோஷகா, திரிநயனா, திரிஜகதீஶ்வரா, தேவரீரது பாதகமலம் எனது இதய கமலத்திலே

யே குடிகொண்டிருக்கக்கடவது. அதுவே உள்ளும் புறம்பும் என்னால் பூஜிக்கப்பட்டுவரக்கடவது. என் மனம் அதைவிட்டு ஒருகணமும் பிரியாதிருக்கக்கடவது என்று சிவபெருமானைப் பிரார்த்தித்துக்கொண்டு பின்னர் தம் மனதைப் பார்த்து ஓ மனமே! இந்தப் பாதாரவிந்தாமிர்தத்திலிருக்கும் சுகம் தேவாமிர்தத்தில் உண்டா! இனி யவைகளையெல்லாம் சுகமென்று எண்ணாதே! அவைகளிலுள்ள ஆதரவை அநாதரவு செய்வாயாக! யாவர்க்கும் ஆதாரபூதனாகிய அவனது பாத கமலங்களையே ஆதரவு செய்வாயாக. சந்திரமௌளீஸ்வரனுடைய பாதபங்கஜத்தைப் பஜிப்பதிற் செல்லுக. சென்று அங்ஙனமே வாழ்ந்திடுக. வாழப்பெறுவையாயின் உனது சொரூபம் சிவசொரூபமாகும். புண்ணியமும் பரிபாகப் பயனைப் பெறும். அதே நமக்கு நவநிதியம். இந்த நிதியங் கிடைப்பது தான் அருமையினும் அருமை. இது கிடைத்துவிட்டால் இன்னமும் விரும்பத்தக்கது யாது? இவ்வருமை யுடைத்தான பாக்கியத்தைப்பெறாமல் தனத்தையும் சுபுத்திராதிகளையும் பாக்கியமெனக் கருதி அந்தோ! உலகில் அவலமாயழிகின்றனர். இவர்களிறப்பாராயின் இந்தத்தனாதிகளும், மித்திராதியரும் பின்னே துணையாகவருவதுண்டா! இது கட்டுரையன்றே, உண்மையல்லவா! பசுபதிப்பிரசாதமல்லவோ இங்கும் அங்கும் எங்கும் துணையாயிருப்பதும் செல்லுமிடந்தோறுந்துணையாய் வருவதுமாம். அது வொன்றிருக்குமாயின் ஏனையவெல்லாம் துச்சமான பொருளன்றோ? ஆயின் அந்தபசுபதிப் பிரசாதத்துக்கு ஏதுவாயுள்ளது அவனது பாதாரவிந்தார்ச்சனையாம். அதுபோலும் ஏதுவானது மற்றொன்றுண்டோ! சகல வேதவேதாந்தங்களிலும் போற்றப்பெற்றது சிவபாதாரவிந்தாராதனமாம். ஓமனமே, அது இப்போது நமக்குக் கிடைத்திருக்கின்றதல்லவா! அதற்கதிகமாக யாதானுமொன்றுண்டா? சகல சுராசுரமுனிவர் முதலிய பெரியோரெல்லாம் இதையே மஹாபாக்கியமாகக் கருதி அதனை விரும்புகின்றனர். ஆதலால் யானும் அதனையே விரும்புகின்றேன். அதுவே எனக்குப்பரம். நீ மோகத்தினால் மற்றப்பொருளில் ஆசையுடைத்தாய் நாசமடையாம லிருக்கவேண்டும் என்று மனதுக் கறிவுறுத்தி சம்புவைப்பார்த்து ஓ பிரபுவே, இனி எனது மனம் உமது பாதாரவிந்தத்தை விட்டு அப்புறம்போவதற்கு எப்படித்துணியும்? ஓ கருணைக்கடலே! ஓபர்க்கரே! யானெண்ணிய வாறு இங்ஙனமே இருக்க உம்மை நமஸ்கரிக்கின்றேனென்று நமஸ்கரித்து நின்றனர்.

பதினோராம் அத்தியாயம்

முற்றிற்று.

உ

ஜ்யோதிஷோநம:

# பன்னிரண்டாம் அத்தியாயம்.

## சிவகணேச சம்வாதம்.

வியாசர் கூறுகின்றார். கருணைக்கடலாகிய கைலைநாதன் பிரார்த்தனைசெய்து நிற்கும் கணேசமூர்த்தியை ஆலிங்கனஞ்செய்துகொண்டு அப்பனே! நீ செய்ததோத்திரத்தால் மிகவும் பிரீதியடைந்தேன். இந்தத்தோத்திரமானது, சகல வேதங்களின் கருத்தாயிருத்தலால் இது தோத்திரராசமாயிருக்கக்கடவது. இதனை எவன் தோத்திரஞ்செய்கின்றானோ அவன் வேண்டிய பொருளெல்லாமடையக்கடவன். ஓடுண்டியே! நீ எனது பாதாரவிந்தத்தைப் பெரும்பொருளாயெண்ணியிருப்பதுபோலும் நான் உன்னையும், குமாரனையும், கவுரியையுமே பெரும்பொருளாகப் பிரியப்பட்டிருக்கின்றவன். ஆகலான் உனக்குயான் கொடுக்கக்கூடாத பொருளுமுண்டோ? ஓ கணேசனே! உலகத்தில் போஷணைசெய்யவேண்டியவர்கள் தாய் தந்தையாகிய இருவர். அவ்விருவருள் கர்ப்பதாரணம், போஷணம் முதலியவற்றைச்செய்தவள் தாயாதலால் அவளே முக்கியம். இந்த உண்மையால் வைராக்கிய சீலராயுள்ளார் தந்தையைத் துறந்தாலும் தாயைத் துறத்தலிலராய்ப் பாதுகாத்துவருகின்றனர். அவள் நற்குண நற்செய்கைகளுடையவளா யிருந்தாலும், அஃதில்லாதவளா யிருந்தாலும், கணவனுடன் கூடியிருந்தாலும், கூடாது வேறுதனியிடத்திருந்தாலும் புத்திரனானவன் அவளது நன்மைதீமைகளைக்கருதாது அன்னபானாதிகளால் போஷணைசெய்யவேண்டுமேயன்றி உபேக்ஷைசெய்யக்கூடாதென்று வேதங்கூறுகின்றது. விதி அவ்வாறு விதித்திருக்கிறது. நீ அந்த விதியையெண்ணாது தாயை விரும்பாது என்னைமாத்திரம் விரும்பினையே! இது முறையாகுமா? ஆதலால் நீ சீக்கிரமாய்க் கிரிஜையின் சந்நிதானம்போய் அவள்நாட்டியத்தைப்பார்த்துக்கொண்டிருக்கும் சந்தோஷத்தால் காலதாமதமாயிருப்பதும், சரீரசிரமத்தால் சோர்வடைந்திருப்பதும் மற்றெவ்விதமா யிருப்பதும் தெரிந்துகொண்டு வருவது நலமென்றெண்ணுகிறேன். தெரிந்துவருவதுமன்றி, அவள் ஆயாசமுற்றிருப்பாளாயின் அப்படியேயழைத்துவராமல் நான் புசித்து மிகுந்த இந்த புதிய அமுதசேடத்தை

த்தருகின்றேன். அதனைக்கொடுத்து உண்ணும்படிசெய்து பின்னர் அழைத்துவரவேண்டும். அன்றியும் அவள் நான் புசித்து எஞ்சிய சேடத்தில் மிக்கபிரியமுள்ளவள். அமுத விசேஷங்கள் எத்தனைவகைப்பட்டிருந்தபோதினும் அவைகளில் விருப்பம் சிறிதுங்கொள்ளாள். ஏனெனின், அவள் பதிவிரதாசிரோமணியாயும் மஹாசாத்வியாயும், சத்புத்திரவதியாயும், லாவண்யவதியாயும், சர்வ மங்களையாயும் இருப்பவளாதலால் அவளுக்கு என்னிடத்திலேயேபிரியமும் என்னுடையசேஷமாகிய உணவிலேயே ஆவலும் உடையவளாயினள். அவள் என்னிடத்தில் எவ்வண்ணமாயிருக்கின்றாளோ நானும் அவளிடத்தில் அவ்வண்ணமாகவே யிருக்கின்றேன். அவள் வண்ணத்தானாகிய யான் இப்பொழுது தனித்திருப்பேனானால் என்னால் சர்வமங்களங்களையும் அடையவேண்டிய ஆன்மகோடிகள் எவ்வண்ணம் அடையப்பெறுவர்? அவள் என்னுள்ளத்திலே இருப்பாளாயின் என்னை உள்ளத்தில் நினைப்பார்க்கு எண்ணியவை எண்ணியவாறெய்தவரும். ஓ கணேசா! அற்ப மனிதனாயினும் அம்மங்களையை ஸ்மரிப்பானாயின் செய்தற்கரிய காரியங்களைச்செய்யும் வன்மையனாய் அதனாற் பெறத்தக்க பயனையும் எளிமையாய்ப் பெறுவான். ஆகலான், நாம் அம்பிகையினிடத்தில்சென்று என்ன காரியஞ்செய்வதென்று அஞ்சுவதொழிந்து, அவளது சரணாரவிந்தத்தையேஸ்மரித்துக்கொண்டு செல்லுவையாயின் உனக்குச் சகலசித்தியும் சுலபமாய்ச்சித்தியாகும். உனதுசகோதரனாகிய குமரனும் தாரகாசுரவதம் அசாத்தியமென்று நினைத்து, தேவியை ஸ்மரித்துச்சென்றான். அவனுக்கு அது சுலபமாய் முடிந்தவரலாற்றைக் கூறுகின்றேன் கேட்ப்பாயாக.

தாரகனென்னும் அசுரன் யாவராலுஞ் செய்தற்கரிய தவமியற்றிப் பிரமனிடத்திலும், என்னிடத்திலும் யாவராலும் பெறுதற்கரியுவரங்களை விசேஷமாகப் பெற்று, அதன்வன்மையால்மூன்றுலகையும் வென்று ஒருவரும் பெறாத புகழ்பெற்று, கொடுங்கோல் செலுத்திவாழுநாளில் திருமால் பிரமன் இந்திரன் ஏனைய திக்குப்பாலகர் முதலிய யாவரும் அவனது கொடுமையைக் கண்டு கடலிலும், காடு மலை முதலியவைகளிலும், அண்டகடாகங்களிலும் உருமாறி யொளித்திருந்தனர். அவருள் இந்திரன் விருத்திராசுரனை வெற்றிகொண்ட வன்மை வாய்ந்த வச்சிராயுதத்தை ஓர் தண்டாகக்கொண்டு முனிவரைப்போல் வேடம் பூண்டுபூவுலகில் ஓர்பர்னசாலையில் வாழ்ந்திருந்தனன். ஏனைய அக்னிதேவன் முதலியோர் சிலகாலங்கழித்து தார

கணையிகைப்பட்டவர்களாய் அவனால் விதிக்கப்பட்ட தண்டங்களை மேற்கொண்டு அக்னிதேவன் மடைப்பள்ளியாளராய் அசுரக்கூட்டங்கள் வேண்டுந்தோறும் வேண்டிய வுணவுகளைத் தடையின்றியளித்து வந்தும், வருணதேவன் அவனைப் போலவே நீரைவழங்கியும், வாயுதேவன் அசுரருலாவுமிடங்கடோறும் யாதொருமாசுமில்லாமற்போக்கி எக்காலத்தும் தென்றலாய்க்குளிர்ந்துலாவிவந்தும், ஏனையதேவருட்சிலர் அவரிடும் அவமாகிய குற்றேவல்களை நற்றவவேலையாகப் பணிந்தேற்று அவைகளைச் செய்தும், சூரியன் தனது வெங்கதிரைத் தண்கதிராக்கி நிறைமதியம்போல்சுகத்தைத்தந்தும், நாளைக்கழித்து வந்தனர். இவனாணையில் அகப்படாத தேவரெல்லாம் போனவழி யாவரால் அறிய முடியும். தேவர்கள் செய்தியிங்ஙனமிருக்க.

வேதவேதாந்தமுணர்ந்தபெரியோரெல்லாம் தங்கள் தங்கள் ஆஸ்ரமங்களையும், தபோவனங்களையும் விட்டு அசுரர்கண்களுக்குத் தோன்றாதமலைமுழைகளில் மிருகம்போல் வசித்திருந்தனர். சிலநாள் கழிந்தபின்னர் அசுரகாதகனாகிய திருமால் அவனோடு நெடுநாளமர் செய்து நொந்து போர்செய்யும் வலியற்று அசுரபயத்தால் கடலில் மீனமாய் மின்மினியைப்போற் கிடந்தனன். பிரமனோ தனது வாணியோடு மனோவதியைவிட்டு மண்ணுலகில் தவசியைப்போல் உழன்று திரிந்தனன், இந்தப்பிரஹ்ம விஷ்ணுக்களுடைய செய்திகளையறிந்த அசுரன் தன் மனையாட்டியுடன் உல்லாசமாய் வைகுண்டஞ் சென்ற போது இடையேயுள்ள விரஜாநதியானது அவனைக்கண்டு பயந்து அவனுக்குத் தன்னுடைய பிரவாகத்தைக் காட்டாமல் வற்றிப் போயிற்று. அதனைக்கண்டு நகைத்து அந்நதியைத் தாண்டி உள்ளே சென்று அங்குள்ள சுகங்களை யனுபவித்து அப்படியே மற்றவுலகங்களிலுஞ்சென்று அங்கங்கும் நிகரின்றி யுலாவித் தன்னிடம் போய்ச் சேர்ந்தனன். இவ்வண்ணம எங்குஞ் சென்றவனாகிய அவன் நமது கயிலாயம் காலனைக் கொன்றவன் வாழுமிடமாதலால் அங்கு நாம் செல்வோமாயின் மானமுண்டாமென்றஞ்சி இங்கு மாத்திரம் வாராதொழிந்தனன்.

சிலநாள் கழிந்தபின்னர்தேவர்களெல்லாம் மிக்க வீரனும்கொடியோனுமாகிய தாரகாசுரனைச் சங்கரிக்க முடியாதென்று பெருந்துக்கமுடையவர்களாய் நாராயணனிருக்குமிடஞ்சென்று, கவலையோடிருக்கும் அவனைநோக்கி, ஓபகவானே! சகல வாபத்துக்களினின்றுங் காப்பாற்று வோனே! சரணமடைவோர்களுக்குச்சரண்யமான

வனே! உமது சவுரியமும் புஜவலியும் எவ்விடம் போயின. ஏனிப்படி மின்மினியைப்போல் இலக்ஷுமியோடு பயந்து மறைந்திருக்கின்றீர். மதுகைடவரைக்கொன்ற பராக்கிரமம் எங்கே போயிற்று. மது என்னும் அசுரனைச் சூதனஞ் செய்து மதுசூதன னென்று பெயர் பெற்றீரே! அப்பெயரை இனி நீர் பெற்றிருத்தல் நாணமன்றோ! தேவரீருடையகதி இவ்வாறுகுமானால் எங்கட்குச் சவுக்கியம் உண்டாவதெப்படி? நீர் இவ்வளவு கஷ்டப்படுவது தகுதியானதா? தேவரீருக்குச் சக்தி எப்போது குன்றிப்போயிற்றோ அப்போதே எங்களுடையசக்தியுங்குன்றிப்போயிற்று. பெருஞ்சத்தியுடையோராகிய நீர் அதைரியங்கொள்வது அழகாமா! ஆகலின், ஓ நாராயணரே! இனிநீர் தைரிய முடையவராய்த் தாரகனோடு யுத்தஞ் செய்து எங்களுக்குச் சுகமுண்டாக்கவேண்டு மென்று பிரார்த்திக்க, திருமால் அந்தோ! அந்தோ!! என்றேங்கி ஓ தேவர்காள்! ஏன்கூச்சலிடுகின்றீர்கள், இப்போது தாரகனில்லையோ! வாயை மூடுங்கள் என்று வாயையடக்கித்தானும் பெருங்குரலோடுபேசினால் அதனை அசுரன் கேட்டோடிவந்து என்னதீங்கு செய்வானோ வென்றுபயந்தவனாய் மெதுவாய்த்தேவர்களைப்பார்த்து, ஓதேவர்காள்! நான் தாரகனைக்கொல்லவேண்டு மென்றீர்களே! நான் அவனால் பலமுறையும் திராகரிக்கப்பட்டு இக்கதிக்குள்ளானவனா யிருக்க இப்போது நானே அவனைக் கொல்வது எவ்விதம்? அவன் யுத்தமுகத்தில் செய்யும் உங்காரமே எனக்கு இடிபோலிருக்கின்றது. இடி வீழ்ந்தவன் பிழைப்பதுண்டா? அவனது கண்ணொளியால் எனது அஸ்திரங்களெல்லாம் எரிந்து போயின. எல்லாஅஸ்திரங்களினும் சிறந்து எனக்குயிர்க்குயிராயிருக்கத்தக்க சக்கராயுதமும், நாராயணாஸ்திரமும் நெருப்பிற்பட்டபஞ்சுபோல் போயின. யுத்தசாதனங்களாயுள்ள சாரங்கம், கதை, சங்கம் முதலியவைக ளில்லாமற் போகுமானால் அவனோடு யுத்தமென்கிற சொல்லுக்கு மிடமுண்டோ? அவன் நம்மைக்கொல்வதற்குவேறு ஆயுதங்கள் வேண்டுமோ? அவனுக்குள்ள கண்ணொளியேபோதும். இவ்வாறு நாம் பேசிக்கொண்டிருப்போமானால் அவன் ஓடி வந்து நம்மை யெல்லாங் கொன்றாலும் கொன்று விடுவான். ஓ சுரர்களே, நீ மதுசூதன னுயிற்றே என்று எனக்கோர் பெருமை கூறினீர்களே! அச்செயல் என்னுடைய தன்று. அதனைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

பூர்வத்தில், மதுவும், கைடபனும் மஹாமாயாசத்தியினுடைய மோகத்தினால் கொல்லப் பட்டார்களேயன்றி என்னாலன்று. அம்ம

ஹாமாயை யாரெனின் லோகஜனனியாகிய கவுரி எவளோ அவ்வம்பிகையே தேவாசுரர்களது சிருட்டி திதி சங்காரங்களாகிய விளையாட்டைச் செய்கின்றாள். அவளே சிவை, சர்வமங்களை, சர்வாணி, பார்வதி, துர்க்கா, மிருடானி, விஸ்வபாஹூகா, காமாக்ஷி, விசாலாக்ஷி, திரிபுரபைரவி, சித்தேஸ்வரி, காத்யாயனி, வாகீஸ்வரி, மஹாகாளீ, மகிஷாசுரமர்த்தனி, சாமுண்டப்பிரமதனி, தூம்பரலோசனமர்த்தனி, நிசும்பமர்த்தனி, சும்பாசுர மர்த்தனி,சரகம்பரீ எனப் பற்பல நாமங்களால்போற்றப்படுகின்றனள். துர்க்காசுரனை நாசஞ்செய்தமையால் துர்க்கை என்றும், சத்துருக்களைச் சங்கரிக்கின்ற காலத்தில் கருணாரசத்தை யுள்ளத்துள்ளேவைத்து வெளியேஉக்கிரத்தைக் காட்டி ஆயுதாதிகளால் அவர்களைப் பாவனஞ் செய்கின்றமையால் கவுரி என்றும், இப்படியே ஒவ்வோர் காரணத்தால் ஏனைய நாமங்களும் வந்தனவென்றறியின்கள். அந்தக்கவுரி சங்கரிக்கவிரும்பியகாலத்தில் சகல ஜகத்தையும் மோகிக்கச்செய்கின்றாள். அப்போது அம்மோகத்துக்கு யானும் நீங்களும் மற்றுமுள்ள பெரியோரும் உள்ளாயிருப்பவர்களேயன்றி வேறாயிருப்பவர்களன்று. அவள் மோகப்பிரவிர்த்தி யுடையவளானால் உலகமெல்லாம் மோகிக்கின்றது,நாசப்பிரவிர்த்தி யுடையவளானால் நாசமாகின்றது. இதிற் சந்தேகமில்லை. இந்த மகா மாயாசத்தியை ஒருவன் எவனையாவது நாசஞ்செய்யச் சிறிது தியானஞ்செய்வானாயின் அந்தச்சத்துரு அந்தக்ஷணமே நாசமடைகிறான்.இஃதோர் வியப்பாகுமா? அந்த மஹாமாயாசத்தி, தன்னுடைய வோர்சத்தியினால் அவ்வக்காலத்துக்கேற்றவாறு அவரவரைச்சங்கரித்துத்தான்திர்மாயையாயும்,சங்கரவல்லபையாய்,தோற்ற நிலையொடுக்கங்களைச்செய்கின்ற சிவசத்தியாயும் இருக்கின்றவளன்றோ! ஆகலான் ஓ தேவர்காள்!நாம் அந்த கௌரியை ஸ்மரிப்போமாயின் தாரகனால் நமக்கு வந்திருக்குந்துக்கம் நீங்கிவிடும். அந்தகவுரியாகிய மங்களையோடுசிவன் கூடி தாரகாசுரநாசகனான குமாரனைத்தோற்றுவித்தனர். மஹேஸ்வர வீரியத்தால் தோன்றி மஹாகவுரிகுமாரராய் வீற்றிருக்கின்ற வீராக்ரேசர் சிலகாலஞ் சென்றால் தாரகாசுரனை யுத்தமுகத்தில் ஓர்கணப்பொழுதில் சங்கரிக்கப்போகின்றார் என்று கூற அதனைத் தேவர்கள் கேட்டு ஆனந்தமடைந்தவர்களாய் என்சரணத்தையே ஸ்மரிக்க அதனைக்கண்டுதிருமால்மகிழ்ந்தவனாய் ஓதேவர்காள், எவர் உமாலிங்க தேகராகிய மகாதேவரை நமஸ்கரிக்கின்றனரோ அவர்களுக்கே மஹாபாக்கியமுண்டாகும். எவர்களுடைய கிருகத்தில் லக்ஷணத்தோடு கூடிய எண்ணிறந்தகுதிரைகளும், மதயா

னைகளும், ஏனைய ஐஸ்வர்யங்களும் விளங்குகின்றனவோ அவர்களெல்லாம் சிவபெருமானைப் பூசித்து நமஸ்கரித்தவரே யாவர். அச்சாம் பவர்களுக்கு அசுபமென்பது ஏது, சர்வசுபத்துக்கும் அவர்களேகிருகமாயிருப்பவர். அவர்களே தன்யர்கள். நாமும் இப்போது அப் பெருமானைப் பஜிக்கின்றேமாகலின் தன்யர்களானோம். சம்பூர்ணகாமனும், பரமனும், பிரகாமனும், நிர்த்தக்த காமனும் கிரிஜார்த்தவாமனும், திரிதார்த்த சோமனும், தேவதேவோத்தமனும், தேவதாசார்வபௌமனும் ஆகிய பரமனை நாம் மறவாமல் சரணமடைவோம். சரணமடைவதற் கீடான பாக்கியமுண்டோ !என்றனர்.

பன்னிரண்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஆக்ராந்த சிதசித்பிரபவேநம:

## பதின்மூன்றும் அத்தியாயம்.

### சிவகணேச சம்வாதம்.

சிவபெருமான் கூறுகின்றார். ஓ துண்டீ, தேவர்கள் செய்தியங்ஙனமிக்க,அசுர சங்காரநிமித்தந்தோன்றிய குமாரன் என்னை நமஸ்கரித்து கைகூப்பி நின்று ஓ சங்கரா ! கருணாரசப்பிரவாகத்திற்கு நிலைக்களமாயுள்ள கடைக்கண்ணனே!முத்தொழிற்கு முதல்வராகிய தேவரீரையன்றிச் சுருதியானது யாரைப்பரமென்று கூறுகின்றது. அங்ஙனமான தேவரீரது அபார கருணைக்கு யானுந் துண்டியுமன்றி மற்றெவர் பாத்திரமாவர் ? ஓ மஹேசுரா! எவனது வீரியத்தால் தேவரெல்லாம் அடங்கி இந்த வீரியமாகிய காட்டுத்தீ சகிக்கமுடியாததாகவிருக்கின்றதே என்று எண்ணுகின்றனரோ, எவனதுகோபாக்கினிக்குத்தேவரெல்லாம் விளக்குப்பூச்சிப்போல்ஆகின்றனரோ, பிரளயகாலாக்கினியைப்போல் ஜவலிப்போனாகிய அந்தத்தாரகாசுரனிடஞ்சென்று தேவர்களுக்கு யுத்தஞ்செய்வதில் வெற்றிதருவதாகிய சகாயத்தை நான் எவ்வண்ணஞ் செய்யவல்லவனாவேன். பிரமனுடன் பயந்தோடிய விஷ்ணுமூர்த்தி இப்பொழுது இந்த நிலைமையிலிருக்கின்றாரென்கிறவார்த்தையுமில்லை. ஆலம்விதையைப் பயிரிடுவதுபோலத்தேவரீர் அவனுக்குவேண்டிய வரங்களைக் கொடுத்துவிட்டீர்,

அவ்வாலம் பின் சாகோபசாகையாய்ப் பெரிய விருக்ஷமாய் வயிரங் கொண்டுபெருத்து எங்கும் பரவுவதைப்போல் அவ்வசுரன் தனது சேனைசமுத்திரங்களுடன் எங்கும் பரவி ஒருவராலும்வெல்லக்கூடாதவயிரமுடையவனாயினன். வயிரங்கொண்ட அவ்வாலத்தைப் பின்னர் நகத்தால் கிள்ளியெறிந்து விட எப்படிமுடியாதோ அப்படி அவ்வசுரனை இப்பொழுது இலேசாகக் கொல்ல முடியாது. அவனைத்தேவரீர் ஓர் விஷவிருக்ஷம் போல் உண்டாக்கி விட்டீர். அவனது கண்ணெருப்பினாலுண்டாகும் சுவாலையே சுவர்க்கத்தைச் சுட்டெரிக்கின்றது. உமது வரமகிமையால் இத்தன்மையான பராக்கிரமத்தைப்பெற்றிருக்கின்றவனான அவனை நான் எவ்வாறு சங்காரஞ்செய்வேன்? அதனையெண்ணுவதும் எண்ணி அவ்விஷயத்தில் முயல்வதும் அவலமாயும் உசிதமற்றதாயும், அபஜயத்தையுண்டாக்குவதாயும், உலகத்தார் பரிகாசஞ்செய்வதற்கேதுவாயும் முடியுமன்றி வேறன்று. ஆகலின் அப்பாதகனால் தேவர்களுக்குண்டாயிருக்கும் துர்த்தசையையான் கண்டு சகித்திருப்பதே நலமாகும். இனி என்னிடத்தில் தாரகயுத்தமென்கிற வார்த்தையுஞ் சொல்ல வேண்டாம்.

அவ்வசுரன் விருத்தியடைதற்கேதுவாகிய எந்தஅருட்கருணை தேவரீரிடத்திருந்ததோ அந்தக்கருணை இப்போது மறக்கருணையாயினாலன்றி அவனைக்கொல்ல முடியுமோ! அதுவன்றி அவனைக்கொல்லும் வன்மையுடையார் இங்கு எவருள்ளார்? எதனை எவன் முடிக்குந்திறமுடையவனோ அதனையறிந்து அவனால் அதனை முடிக்கும்வகையைத் தேடவேண்டுமன்றோ? ஆகலான் அவ்வகையுடையவர் தேவரீரேயாகும். வேறொருவனால் அவனைக்கொல்லத் திருவுள்ளமிருக்குமாயின் எல்லாவுயிர்களையும் முடிவில் தன்னிடம் கொண்டு போகத்தக்க கிருதாந்தகனாகிய இயமனிருக்கின்றான். அவனை அத்தொழிலில் ஏவலெனெண்ணக் கூடாது? ஓ கணநாதனே! இவ்வாறு குமாரன் கூற யான் அவனைநோக்கி ஓ குழந்தாய்! நன்று கூறினாய். தாரகாசுரன் மஹா பலமுள்ளானென்று நீ கூறியதுண்மையே! அவனைப்போல் வீரன் முன்னும் பின்னும் இப்பொழுதுமில்லை. அங்ஙனமாயினும் நீகவலைப்படவேண்டியதில்லை. நீகாளி, மஹாகாளி, உமா, கவுரி, சிவா, சதீ, சர்வாணீ, சண்டிகே, துர்க்கே, உருத்திராணி, கிரிகன்யகா, மிருடா, பார்வதி, மாயா, மஹாமாயா, மஹேஸ்வரி, அபர்ணா, சாம்பவி, பத்திரா, திரிபுரி, பைரவி, ஸ்ரீ, சர்வமங்களா, லக்ஷ்மி, வாணி, தக்ஷகன்யகா, ஆரியா, ஹைமவதி என்று காத்தியாயனியாகிய தேவியினது நாமங்களை ஸ்மரித்துக் கொண்டு அத்தாரகனிடம் போவையாயின்

உனக்கு ஜயமுண்டாகும். இப்பொழுது கூறியநாமங்களில் ஒவ்வொன்றும் மஹாதுக்க நாசத்தையும், ஜயப்பிரதாபத்தையும், தனத்தையும், ஆயுள் விருத்தியையும் அளிப்பனவாம். ஓ குமாரா, கிரிராஜ கன்னையயும், தன்னையயும், மானையயும், நிஷ்களங்கையும் ஆகிய துர்க்கா தேவியைத்தியானிப்பவர் எவரோஅவர்கள் மஹாபாக்கியசாலிகளாகின்றனர். மகாபாதகராயினும் இந்த நாமங்களைச் சிந்திப்பாராயின் அவர்கள் அம் மஹாபாதகக்கடலினின்றுங் கரையேறுவர். சுவர்க்கத்திலுள்ளார் சிந்திப்பாராயின் அவர் மோக்ஷபதத்துக்காளாவார். எவளுடைய சங்கற்பசத்தியால்இந்தச்சகமெல்லாம் தோன்றிநின்றுவொடுங்குகின்றதோ, எவளது பாதாரவிந்தஸ்மரணத்தினால் மஹாமுனிவர்களாய் மஹாசக்தர்களாய் விளங்குகின்றனரோ, எவளது பாதபங்கஜதியானப் பிரசாதத்தால் ஸ்ரீ ராமன் மகாமகிமைபெற்றனனே, எவளது கடாக்ஷவசத்தால் மிக்கதரித்திரனான தீனனும் மிக்க சிறப்புடைய தேவர்களாலும் பூஜிக்கப்படும் அதீஸ்வரனாகிய தன்பனாகின்றானே, எவளது பாதபங்கஜத்தினுடைய ரேணுவின் லேசத்தைக் கூர்மவுருவனான விஷ்ணுவும், ஆயிரஞ் சிரங்களுடைய ஆதிசேஷனும், திக்கஜங்களாகிய அஷ்டகஜங்களும் தரிக்கப்பெற்று சாபவிமோசனத்தையும், பூமியைச்சுமக்கும் வன்மையையும், தாங்கும் வன்மையையும் பெற்றனரோ, அப்படிப்பட்ட சுபங்கட்கு ராஜதானியான பவானியை நீ பூஜிக்கவேண்டாமா! அந்தப்பவானியினுடைய பாதபத்மங்களை யர்ச்சனைசெய்ய நாடோறும் சமுத்திரராஜன் மிக்கசிரத்தையுடன் திவ்வியரத்னங்களைப் புதிது புதிதாய்ச்சேகரித்து வருகின்றனன். ஆகலான் ஓ முருகனே! நான் சொல்லிய நாமங்களை ஸ்மரித்துச்செல்வாயென்றேவ அப்படியே சென்று வெற்றியுடன் வந்தனன். ஓ கஜானனே! என்னால் சொல்லப்பட்ட நாமஸ்தோத்திரங்களைத் தோத்திரஞ்செய்பவர்கட்கு சுபஜய சௌபாக்கியங்கள் வளர்ந்தோங்கும். ஓ டுண்டீ! இனி நீ சிறிதுந்தாமதிக்காமல் கவுரியின் பாதாரவிந்தத்தைத் தரிசிக்கச்செல்வாயாக. உனக்குச்சகாயமாய்க் குமாரனை யழைத்துக்கொண்டுபோகவேண்டுமானாலும் அழைத்துக்கொண்டுபோகலாம். அவனும் தன்தாயைக் கண்டு நெடுநாளாயினமையான்நீகூப்பிடுவதற்குமுன் வருவான். அவனாலாகாதது யாதுமில்லை. ஆகலான் இனியோசனைசெய்யாமல் அவனுடன் சென்று எனக்கிஷ்டமான காரியத்தைச்சாதித்துக்கொண்டு வருவாயாக. யான் எப்பொழுது எதற்கு ஏவுவேனோவென்று குமாரன் எதிர்பார்த்திருப்பவனாகும். அவனுடன் யானிதனைச் சொல்வே

னுயின் தாமதிக்காமல் உடனேசெய்துமுடிப்பான். அவனுடைய பலத்துக் கீடான பலமுடையாரும் ஒருவருண்டோ! தாரகன் முதலிய அசுரரெல்லாம் அவனைக்கண்டமாத்திரத்தில் நடுநடுங்கி ஒடுங்கி ஓட்டம் பிடித்தனரன்றோ? உலகில் குமாரனென்று பிரசித்திபெற்றவர் அவனன்றி வேறு யாராவதுண்டா! கவுரியும் குமாரனுலேயே புத்ரவதியென்று பெயர்பெற்றனள். அவளைப்போல் வேறொருவரும் குமாரனைப்பெற்றிலர். ஓ புத்திரா! நீ அவனுடன் சீக்கிரம் செல்வாயாக. அவனைத்தேவிகண்டாளாகில் புத்ரவாத்சல்லிய மிகுதியால் மற்றெந்தகாரியங்களிருந்தபோதிலும் அவைகளைத்துச்சமாகத் தள்ளி நமது குழந்தை வந்துவிட்டானென்று சந்தோஷங்கொண்டு உடனே அவனை ஆகவேண்டிய செய்தியெல்லாங்கேட்டு அவன்பிரார்த்திக்கும் வண்ணஞ்செய்வாள். நீவிர் அவளைத் தரிசித்தபிறகு நிறைவேறுதகாரியமொன்றுண்டா? மஹாமந்தனுயினும் அதமனுயினும் கவுரியின்பாதாரவிந்தத்தை ஸ்மரிப்பானுயின் சகலபோகங்களையும் புசித்துச் சாம்பவர்களையெல்லாம் ஆதரித்து ஒப்பற்ற தனவானுய்ச் சகலமுமறிந்தவனுய் மிக்க பக்தியுடன் சிவாராதனஞ்செய்து அந்தியகாலத்தில் காசிக்குப்போய் அங்கு முத்தியடைகின்றான். அவனுக்கே யப்படியாகுமானுல் மகாவாத்சல்லியத்துக் கிடமாகிய புதல்வர்களான நீங்க ளத்தேவியைக் காண்பீர்களாயின் உங்கட்குச் சகலகோரிக்கைகளு முடனே நிறைவேறுமென்பதிற் சந்தேகமுண்டோ? அத்தேவியும் உடனே என்னிடம் வந்து சேர்ந்து எனக்கு நேத்திரோற்சவத்தை யளிப்பாள். நானந்த நித்தியானந்தாமுதப் பிரவாக அலை வரிசைகளாற் சூழப்பட்டவனுய் காலகாலனுகிய யான் காலத்தைக் கழிப்பேன்.

பதின்மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று.

உ
கல்யாண குரவே நம:

## பதினுன்காம் அத்தியாயம்.

### ஸ்கந்தர் சிவசந்நிதான மடைதல்.

வியாசர் கூறுகின்றார். சிவபெருமான் கணேசமூர்த்தியை நோக்கி, ஓ டுண்டி, நீ சீக்கிரமாய் உன்னன்னைபாற் செல்லுக

எனக்கு அவளைப் பார்க்கவேண்டுமென்கிற அவா வுண்டாயிருக்கின்றது. அவளது முகமாகிய பூர்ணசந்திரனை எனதுகண்களாகிய சகோரப்பறவைகண்டு சந்தோஷமெய்தவேண்டுமென்று கூறிக்கொண்டிருக்குஞ்சமயத்தில் மகாவீரராகிய முருகக்கடவுள் உமாபதியைத் தரிசித்துப் பக்திமிகுதியால் பரமானந்த பரவசராய்க் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பெருக நமஸ்கரித்துக் கைகூப்பி நின்று அனந்தங்களாயிருக்கின்ற வேதாந்தங்களாலும் யாதொருவனறியப்படானோ அப்படிப்பட்ட அவ்வயனாகிய இறைவனை நமஸ்கரிக்கின்றேன். யாதொரு தேவன் சச்சிதானந்தவுருவனும் உருவாதிதனுமானவனோ,எவனிடமிருந்து வேதாந்தங்கள் வெளிவந்தனவோ, அப்படிப்பட்ட இறைவனாகிய தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். சகல சராசரங்களும் எவனிடமிருந்துண்டாயினவோ,எவனால்அவை ரக்ஷிக்கப்படுகின்றனவோ,எவனாலவை இறுதியில் லயமடைகின்றனவோ அப்படிப்பட்ட சார்வபௌமனாகிய தேவரீரை நமஸ்கரிக்கிறேன்.யாதொரு பாதாரவிந்தமானது தத்வக்கியானக் கடல்களாயிருக்கின்ற முனிவர்களெல்லாம் தேடியுங்காணக்கூடாததோ அப்படிப்பட்டவரிதாகிய தேவரீரது பாதாரவிந்தமென் னுள்ளத்துள்ளது. அதனையே நானெப்பொழுதும் விரும்புகின்றேன். சகலதேவர்களாலும் சகலவேதங்களாலும் யாகங்களாலும் எந்தப்பாதாரவிந்தமானது காணக்கூடாததோ அப்படிப்பட்ட பாதாரவிந்தம் அடியேனால் காணப்பட்டது. யானேதன்யன். யோகிகள் எதனைக்காண்பதற்காக செய்தற்கரிய யோகாப்பியாசஞ் செய்கின்றனரோ சம்சார மெனும் பெருங்கடல் எவனது பாதாரவிந்த தரிசனத்தால் வற்றிப்போகின்றதோ அப்படிப்பட்ட சோமனும் தேவதாசார்வபௌமனும் சுந்தரகந்தனுமாகிய தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். எவனது பாதாரவிந்தமானது நித்தியானந்தத்துக்கு வித்தாயும் சர்வக்கியானத்துக்கு மேதுவாயும் எவனது பாதாரவிந்தகாந்திகளுக்கு தேவர்களது நவரத்னகசிதமாகிய கிரீடங்களின் காந்திகள் காந்தைகளாகின்றனவோ அப்படிப்பட்ட தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். ஓ ஜகதீஶ்வரா! சந்திரமௌளே! சோடச கலையுடன்கூடிய சந்திரனும் ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனும் பிரகாசித்துக்கொண்டிருக்க உமது பாதாரவிந்தமும் உமது திருமேனியும் இப்படிப்பட்ட பேரொளியோடு விளங்குவது எதன்பொருட்டோ யானறியேன்! அன்றியும் தேவரீரது நெற்றியிலுள்ள நெருப்புத்தழலாலேயேபேரிருளொழியுமானால் சூரியாதிஜோதிகள் விரும்பப்படுவதுஎற்றுக்கு? எண்ணிறந்த

மின்னல்களின் ஒளியையும் தேவரீரது சரணாரவிந்த காந்திமழுங்கச் செய்கின்றது. அந்தோ இஃதென்னவாச்சரியம். ஓ மஹாதேவரே! மனோ வாக்குகளுக்கெட்டாததும் வேதங்களாலும் காணக்கூடாதது மாயிருப்பது தேவரீரது பாதாரவிந்தமே. மகாபாதகங்களெல்லா மெந்தப்பாதாரவிந்தத்தின் அனுக்கிரகத்தாற் றொலைகின்றவோ அப்படிப்பட்ட பாதாரவிந்தத்தின் அநுக்கிரஹத்தைப்பெற்ற எனக்குச் சரியாயுள்ளதுயாது! ஓ மஹேசா! தேவரீரது பாதாரவிந்தத்திலேயே எனக்குத் திடபக்தியிருக்கும்படித் தேவரீரருள்புரிந்திடவேண்டும். அதனையே இப்பொழுது யாசிக்கின்றேன். வேறெதனையும் வேண்டிலேன். எனக்குத் தாயும் தந்தையும்பிரபுவும் நீரே! அநாதருக்கு நாதனே! பிரபோ! விஸ்வநாதா! அநாதனான என்னைத் தேவரீர்காப்பாற்றுக. உலகங்களுக்கெல்லாங் காரணராகிய தேவரீரைச் சரணமடைகின்றேன். உலகில் வேறுயாராவது சரண்யருண்டா? ஓ ஜகதீஸ்வரனே! தேவரீரது பாதார விந்தத்தின் பெருமை யெங்கே? எனது மனத்தின் சிறுமை எங்கே? ஆயினும் தேவரீரது அருளிருக்குமாயின் எனது மனோவிருத்தியானது தேவரீரது பதாரவிந்தங்களை விட்டகலா திருக்கவேண்டுமென்று தோத்திரஞ்செய்து நிற்கும் குமாரனைப் பரமேஸ்வரன் தனது திருக்கரங்களாலெடுத்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு பரம சந்தோஷத்துடன் துண்டியைநோக்கி ஓ தொந்திக்கணபதியே! நீ குமாரனோடு விமானூருடனாய் கௌரியினிடத்துச்சென்று அவளது பாதாரவிந்தத்தைத் தரிசித்து மகிழும் ஸுபதினம் இன்றேயாம். லோகமங்களையாகிய அவளது பாதாரவிந்த தரிசனத்தினும் மங்களகரமானது வேறொன் றுண்டா? அதனிலும் குமாரனுடன் தரிசனஞ்செய்வது மிகவும் மங்களமாகும். அன்றியும் இலக்குமி முதலியவர்கள் சிரசால் வணங்கப்பெற்றவளும் சகலவேதங்களாலுந் தேடப்பெற்றவளுமாகிய தேவியினது பாதாரவிந்த தரிசனமுஞ் சுலபமாய் நேரிடுமென்று சிவபெருமான் ஆசிகூறி விடையளித்தவுடன் கணேசமூர்த்தி குமாரக்கடவுளுடன் திவ்வியவிமானத்திலேறி நவரத்னமயமான பீடத்தின்மீ தெழுந்தருளினர். அவ்விமானமும் ஆகாயமார்க்கமாய்ப் புறப்பட்டது. தேவதுந்துபியு முழங்கிற்று.காற்றும் சுகமாய் வீசிற்று. மந்தாரகுந்த முதலிய மலர்களிலிருந்து அற்புதமாகிய தேனும்பெருக்கெடுத்தது. பின்னர் அற்புதமாய்ச்செல்லும் அவ்விமானத்தின் துவஜத்தை நாடகப்பெண்களால் சூழப்பட்டு விளங்கும் அம்பிகை கண்டு அடிமுதல் சிகரம்வரையில் ரத்

னராசிகளால் விளங்கும் விமானத்தில் வருவோர் யாவரென்றுயோசி த்து உடனே கணநாதனும் குமாரனுமாகிய நமது புதல்வரென்றறி ந்து அந்தோ ! இவ்வாறுமந்த புத்திரர்களைக்கண்டு எத்தனைநாளா யிற்றென்று அன்பு மீதூர்ந்து வரவையெதிர்பார்த்திருக்கும்போது கணேசமூர்த்தி தமது வரவைப்பார்த்து மகிழ்ந்திருக்கும் அம்பிகை யைக்கண்டு குமாரனைப்பார்த்து ஓ குமாரா ! இதோ நமதன்னையாகி யபவானியிருக்கின்றாளென்றுகூறி சந்தோஷத்தா லவரை யிறுகத்த ழுவிக்கொண்டு யான் மகேஸ்வரியின் சரணாரவிந்தங்களைத் தரிசித் தேன். நீயும் தரிசனஞ்செய்வாய். நாட்டியப்பெண்களுடைய கூட் டத்தின் மத்தியில் விளங்குஞ் ஜகதீஸ்வரியானவள் நம்மிருவரையும் புத்திரவாஞ்சையுடன் நோக்குகின்றனள். அதனைப் பார்ப்பாய். இவளையே சகலவேதங்களும் சச்சிதானந்த சொரூபிணியென்று மு றையிடுகின்றவென்று கூறி விமானத்தைவிட்டிறங்கி இருவரும் பை ய வந்து சிரசில் இருகரங்களையும் கூப்பிக்கொண்டு தூரத்திலிருந்த படியே நமஸ்கரித்துப் பின்னர் சமீபத்தில்வந்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நின்றனர். அவ்விருவரையும் அம்பிகை புத்திரவாஞ் சைமிகுதியால் தழுவிக்கொள்ள ஸ்தனங்களினின்றும் பால்சுரந்து அவ் விருவர்களையும் நனைத்து மகிழ்வித்தது. நந்தியாதி கணத் தலைவரெல்லாம் ஒருவருக்கொருவர் இனி நமக்கு நல்லகாலம் வந்து விட்டது. சண்முகருடன் கணபதி அம்பிகை சந்நிதானத்தில் வந் திருக்கின்றனர். இனித் தேவியார் இதுகாறுந் தாமதித்திருந்தது போலிராமல் சிவபெருமானிடம் போய்ச்சேருவார். கமலக்கண்ண னுடைய கண் மலரால் பூசிக்கப்பட்ட இறைவனது பாதாரவிந்தத் தை நாமுந் தரிசித்து மகிழ்வோம். நாமிங்குவந்த இவ்வளவு காலத் துக்குள் பிரமகற்பங்களனேகமாயின.தேவிக்குஇவ்வளவு காலஞ்செ ன்றது நாட்டியானந்தத்திலிருப்பதனாற் றோன்றவில்லை. அவரதுகண் ணிமைப்பொழுதில் எண்ணிறந்த கற்பங்கள் தோன்றி யழியுமாயின் இப்போது அநேக கற்பங்களாயின வென்பது ஓ ராச்சரியமா ? ஆயினும் இறைவனார் நம்முடையபேரில் இவ்வளவுகாலஞ் சென்றதே யென்று கோபிப்பாரென்று யோசிப்போமாயின் பொழுது நடந் தேறிய இது நம்மாலுண்டாகிய அபராதமன்று. இவ்வளவு கா லந் தாமதிப்பதற்கு அவ்விருவருமே காரணராவரன்றி நாமெப்படி யாவோம் ! ஆனதால் அவ்வபராதமுடையோர் நாமாகோம். தேவி யாரது சித்தம் பராதீனமாயுள்ளதா ? சகல தந்திர சுவதந்திரத்தை யும் நித்யானந்தத்தையு முடையதல்லவா ? அத்தன்மையாகிய திரு

வுளத்தை அவர்களது சேவகர்களாகிய நாம்மாற்ற முடியாமற் போனது அபராதமாகுமா? இப்பொழுது நமது நல்ல பாக்கியத்தினுல் குமாரர்களும் வர நாட்டியமும் நிற்க அம்பிகையும் சந்தோஷத்துடன் புத்திரர்களைத் தழுவி ஏதோ சில வார்த்தைகளையுஞ் சொல்லிக்கொண் டிருக்கின்றனர். இனிச் சீக்கிரமாய்ப் புறப்படுவாரென்றுந் தோன்றுகின்றது. இனி நமது ஆனந்தத்திற்கு யாது குறையுள்ளதென்றனர்.

பதினன்காம் அத்தியாயம்

முற்றிற்று.

௨

உன்மத்தவேஷாயநம ஃ

## பதினைந்தாம் அத்தியாயம்.

### ஸ்கந்த கணேசர் தேவியை யடைதல்.

வியாசர்கூறுகின்றனர். நந்திமுதலிய கணங்கள் இனிஅம்பிகை புறப்படுவாளென்றுனந்தமுற்றிருப்பக்கௌரியார்குமாரர்களைப்பார்த்தவுடன் ஜகதீஸ்வரனை நினைந்து ஆனந்தக்கண்ணீர்பெருக்கிக் குமாரக்கடவுளைப்பார்த்து ஒகுமாரா! எனதிறைவனுர் இப்பொழுது எவ்விடத்திருக்கின்றுர், க்ஷேமமா, அவரை இப்போது நீ கண்டனையா, அவருக்குண்டி முதலியவற்றை யாருதவுகின்றுர், சந்தனமுதலியது யார் கொடுக்கின்றனர், அவருடன் யாரிருக்கின்றுர்? என்னைப்பற்றி மிகவுஞ் சிந்தனையுடையவரா யிருக்கின்றனரா, என்னசெய்கின்றுர்; யானெங்கிருக்கின்றேன் என்னசெய்கின்றேனென்று நினைக்கின்றனரா? உன்னை யின்றனுப்பினரா, நேற்றனுப்பினரா, அன்றி அதற்குமுன் னனுப்பினரா? என் றிவ்வாறு வினவியதை ஞானவள்ளலாகிய குமாரர் கேட்டுப் பரமானந்த மடைந்தவராய்த் தேவியைப்பார்த்து ஓ தாயே! நீ இவ்வண்ணம் வினவியதென்னை? நித்யானந்த மயனுகிய என்றந்தை சர்வலோகத்துக்குஞ் சுகமளிக்குஞ் சங்கரனன்றோ? ஓ சாம்பவி! சச்சிதானந்த ரூபனுகிய மஹாதேவனது ஸ்வரூபத்தை நீ யறியாயா? அறிந்தவளாகிய நீ யாது காரணத்தா லிவ்வாறு வினவினுய்? கற்பாந்தத்தில் எல்லாத் தேவர்களையும் இவனெடுக்குகின்றதேயன்று இவனெடுங்குகின்றதில்லையே. பிரமன் முதலிய சகல ஜீவகோடிகளையும் இவன் சிருஷ்டிப்பதே

யன்றி இவன் சிருட்டிக்கப்படுவதில்லையே. இவ்வண்ணம் உற்பத்தி நாச மில்லாதவனாய் எல்லாவற்றையும் உற்பத்திநாசஞ் செய்கின்றவனாய்க் காலனுக்குக் காலனாய் விளங்கும் அவனன்றோ நம் மிறைவன்? அவனது ஐஸ்வர்யம் ஒப்புயர்வின்றி யனந்தமாய் விளங்குகின்றவன்றோ? அவனது கீர்த்தியையன்றோ சகல சுருதிகளும் இடைவிடாமல் போற்றுகின்றன. அவனே விஞ்ஞான மூர்த்தி. அவனே சுதந்தர நிலைமையன். அவனே சாம்பவ சிரேஷ்டர்களினது இருதய கமலத்தில் விளங்குபவன். அவனே லீலாவிலாசமாய் அசுரர்களைச் சங்கரிப்பவன். அவனே நாராயணன் முதலியோரால் எப்போதுந் துதிக்கத்தக்கவன். அவனே க்ஷேமவான்களுள் முதலாயுள்ளவன். அத்தன்மையனாகிய இறைவனிடத்தில் க்ஷேமத்துக் கன்னியமாய் எது எவ்வாறு வந்தணுகும்? அந்த நித்திய கலியாணனை நீ க்ஷேமமாவென்று வினாவிய தென்னையோ? ஓ தேவி! எவனது பாதாரவிந்த தூளியின் லேசமகிமையான் தேவர்களுக்கு யாவரானுங் கொண்டாடப்படும் சுவர்க்கம் வைகுண்ட முதலிய பதங்கள் கிடைத்தனவோ, கருணைக்கடலும் குணக்கடலுமாகிய எவனது அருளால் அத்தேவர்களுக்கு அமுதமுதலிய திவ்ய பதார்த்தங்கள் கிடைக்கப் பெற்றனவோ, அத்தகைய அருளாளன். நமதிறைவனென்று நீ நினைக்கத்தக்கது. ஓ கிரிஜே! நாரணன் இலக்குமி பிரமன் சரஸ்வதி முதலிய பசுக்களெல்லாம் அவனது பாதபத்ம ரேணுக்களால் உண்டானபடியினாலன்றோ அவன் பசுபதி யென்றழைக்கப்பட்டான்? இங்ஙனம் எல்லாவற்றையும் ஆக்குஞ்செயல் வேறெவனுக்குளது? ஓ சிவே! அம்மகேஸ்வரனது மகிமைவேதங்களாலும் அறியப்படாமலிருக்க அவ்விந்துசேகரனை இதர தேவர்களோடு சமனென்றெண்ணி அவனுக்குஞ் சுபாசுபங்களுளவென்று நினைப்பவர் அவனது கிருபையற்ற அறிவிலிகளேயாவர்.

அவனது மகிமையானது எல்லையற்றதன்றோ? எந்தத் தேவனைச் சகல வேதங்களும் தேவதேவோத்தமனென்றும் மாயாதீதனென்றும் உமாபதியென்றும் விஸ்வபதியென்றும் திரிபுராந்தகனென்றும் கூறுகின்றனவோ, முநீந்திரர் கின்னரர் கந்தர்வர் சிவலிங்கார்ச்சகராகிய பெரியோர் ஆகிய இவர்களெல்லாம் எவனை ராஜராஜேஸ்வரனென்று கூறுகின்றனரோ, தேவநாயகனையும் இலக்குமிநாயகனையும் ஒதுக்கி இருதயத்தில் எவனைப்பூஜித்துப் பாவனராகின்றனரோ, ஓகிரிஜே!. அந்தக்கிருதாந்தகனது பாதாரவிந்தஸ்மரணத்தினால் நாங்கள் பரமதன்யராகின்றனம். எண்ணிறந்த தே

வர்களினும் மாநுடர்களினும் ஏனையசராசரங்களினுஞ் சிறந்தவன் சங்கரனே யாவன். அவனினுமதிக னெவனுள்ளான்? அவனே அத்வைதபாவனையான் யாமென்று அநுசந்தானஞ் செய்கின்றேம். இது சத்தியம் சத்தியம் மும்முறை சத்தியம். உற்பத்திதிதிநாசங்கட்குச் சாதனன் மஹேசனென்று வேதப்பிரசித்தமாயிருக்க அவனைவிட்டு மற்றையரைக் கடவுளராக நினைத்துச் சரணமடைகின்றவனறிவு வெள்ளறிவென் றறியற்பாலது. இவன் மிக்க மதுரமாயும், நவநீத சாரமாயுமுள்ள க்ஷீரமானது வாக்குக்கெட்டுவதாகக் கிடைக்கப்பெற்றும் அதனை யுண்ணப்பெறாது அமேத்திய நீரை யுண்ண முயல்வோனுக்கொப்பாவன். இவ்வறிவு சத்துக்களுக் குதிக்காது.

தெய்வங்களுக்கெல்லாந் தெய்வமாவான் பசுபதி என்று சிரவணமும், அவனே அந்தகனுக்கு அந்தகனாவானென்று மனனமுஞ் செய்து, சந்திரகண்ட சிகாமணியும், தேவசிகாமணியும் தேவதாசார்வபவுமனுமாகிய அவனையே யான் நிதித்தியாசனமுஞ் செய்கின்றேன். இங்ஙனமான கேட்டல் சிந்தித்தல் தெளிதலில் யான் வன்மையுடையேனாதலால் யாளொருவனே அவ்விறைவனாலயத்தூட் சென்று வந்தனஞ்செய்கின்றவனாயுள்ளேன். ஏனைய இந்திரன் முதலிய தேவர்கள் வாயிற்படியில் பிரம்படிபட்டு அதனைச்சகித்துக்கொண்டு திரும்பிப்பாராமல் ஓட்டம்பிடிக்கின்றனர். ஓ மாதாவே! வேதங்களும் என்னை வந்தியென்றே கூறியபடியால் யான் அவ்விறைவனது அடியைத் தொழாநிற்கின்றேன். இருதயகமலத்திலும் பூஜியாநிற்கின்றேன். சிவோபாசகர்கட்குப் பிரமாண்ட மண்டலத்தைப் பேதிக்கும் காலதண்டத்தாலடிபடும் அடியுமுண்டோ! கிருதாந்தனிடத்தில் பயப்படத்தக்க பயமுண்டோ! அல்லது பிறவிப்பயந்தானுண்டோ! அங்ஙனமிருக்க, இந்தப் பிரம்மாண்டமத்தியில் மாநுடசன்மத்தை யெடுத்து வேதத்தையு நன்கறிந்து சந்திரமௌளியின் தியானத்தைவிடுத்துவாழ்நாளைவீணாய்க்கழிப்போர்க்குஎன்னகதியுண்டாமோ! இரத்தினச் சுமைகளைச் சுமந்துசெல்லும் கழுதையானது அந்த ரத்னங்களால் பூஜிக்கப்படாமை போல் வேதத்தையறிந்து சிவத்வத்தை யடையாத அசாம்பவன் ஒருவனாயினும் பூஜிக்கப்படமாட்டான். அவன் பிறவி கழுதையின் பிறவிக்கு ஒப்பாகும். இச்சம்சாரத்தில் உமாமஹேசுரனாகிய இறைவனது திருவடிக்கமலங்களில் அருச்சனையாவது இலிங்கார்ச்சனையாவது ஓர் கணப்பொழுது தியானித்தலாவது ஒருவனுக்குத் தெய்வகதியாய் நேரிடுமாயின் அவனது ஜன்மந்தான் சபலமென்றறியற்பாலது.

அவற்றிலொன்றேனுமில்லாதவன் பாவமென்னும் பெருந்தீச்சுட்ரால் கொளுத்தப்பட்டவனைத் தாயினது எவ்வனத்துக்கு ஹானி செய்தவனாவான். அவனாலென்னபயன்! இடைவிடாது உமாசகாயனது சரணாரவிந்தத்தைப் பூஜிப்பதில் ஆதரவில்லாதவன் ஸ்வானயோனியனாவான். சுவர்க்கமோக்ஷ பலங்களை யளித்தருளும் பர்க்கனை ஒருநெறிப்பட்ட மனதுடன் ஒருவன் பஜிப்பானாயின் அவனே தன்யனும்,தன்யாக்ரணியனுமாவன்.எவனது சித்தம் ஓர் கணப்பொழுதாயினும் சிவத்தியானத்தில் விருப்பமுற்றுளதோ அவனைத் தியானித்தாலும், அவனது பாதரேணுக்கள் படிந்தாலும் பரமபாவனமாம். இதுசத்தியம். அவன் எக்குலத்தினனாயினும் அவனைச்சேவிப்பதே சிறப்புடைத்து. அவனைச்சேவிப்பவனிலும் சிறந்தவன் எவனுள்ளான்?சாம்பவ புங்கவர்களே தீயவராகிய பேரிருளுக்கு அற்புதமாகிய ஆதித்தர்களாவர்.அவர்களதுபாதாரவிந்த தூளியையேசகலதேவர்களும் தங்களுடைய சிரங்களில் படியவேண்டுமென்றும், படிந்தால் சிவகிருபை தங்கட்கு நிச்சயமாய் வந்ததாமென்றும் எண்ணிவேண்டுகின்றனர். எவன் தனது சித்தத்திலாவது, சிவலிங்கத்திலாவது ஓர் கணப்பொழுதாயினும் சிவபரஞ்சுடரைத்தியானிக்கின்றானோ அவனது கிருகத்தில் சஞ்சரிக்கும் கிருமியும் கிருதார்த்தமாகின்றது என்றால் அவனது தாய்தந்தையரும்,வம்சத்தவரும், அடிமையாட்களும், அவனை யடுத்தவர்களும் தன்யர்களாவாரென்பதில் சிறிதேனும் ஐயமு முண்டோ! எவனொருவன் சிவனை தெய்வமென்றறிந்து அவனைப் பூஜிப்பதில் ஆவலுடையவனாகின்றானோ அவனை யொருவன் தியானஞ்செய்தாலும் முத்தியடையலாம். அவனது தாசதாச குலத்திலாவது ஒருவனுக்குத் தெய்வகதியாய் ஜன்மங்கிடைக்குமாயின் அவனே தன்யன். வேதத்தின் கருத்தும் இதுவேயாம். ஓ உமே! தெய்வங்கட்கெல்லாம் தெய்வமாகிய சிவனை வேதாந்த வாக்கியங்களாலறிந்து அவனைப் பூஜிப்பதையே பெரிதாயெண்ணுகின்றவனை யான் நமஸ்கரிக்க வெண்ணுகின்றேன். அப்படிப்பட்டவன் கிடைப்பதரிதென்று வேதாந்தங்களு மெண்ணுகின்றன. ஏனெனில் மானாதீத (பிரமாணங்களைக்கடந்தவ) னென்று தம்மால் கூறப்படுவோனாகிய சம்புவைச் சாம்பவனறிகின்றானாகலின் அம்மஹிமைநாடி அவனை நமஸ்கரிக்க விரும்புகின்றனவாம். பூர்வ ஜன்மங்களில் ஓர் கற்பமுழுவதும் எடுத்தமானுடப் பிறவிகளில் அளவிறந்த யாகதான முதலிய நற்கருமங்கள் செய்யப்பட்டிருப்பின் சாம்பவர்களது சரணாரவிந்தாச்ரயமும், பர்க்கனாகிய சிவபெருமா

னது பாதாரவிந்தத்தில் பரமபக்தியும் எளிதாய்க் கிடைக்கும் என்பது யான் நன்குயறிந்தவிஷயமே.

ஓ கிரிஜே! சரணாரவிந்தாஶ்ரயமும், பரமபக்தியும் உடையோர் செய்யும் சிவலிங்க பூஜையே சகல வேதங்களாலுங் கோஷிக்கப்பட்டுள்ளது. அது கிடைப்பதரிது. அரிதாயிருக்கின்ற சிவபூஜையைச் செய்பவனே தன்யனுவன். அவனினுஞ் சிறந்தவன் எவ்வுலகினுமில்லை. சிவனிடம் பத்தியினுற் பொருந்திய மனமுடைய மனிதனை லீலாமாத்திரமாய்மானிடதேகமெடுத்தாச்சிவனே விளங்குகின்றனென்றெண்ணற்பாலது. அவனது பாதத்திற் படிந்திருக்கும் தூகள் தேவர்களாலும்போற்றத்தகுந்தது. அவனது தேகமே சிவாலயம். ஓகிரிசுதே! பிரபஞ்சகாரியங்களை விடுத்து சிவத்தியானமே செய்துகொண்டிருப்பவன் பிரமபத முதலிய பதங்களைப் பெறுவானுயினும் அவை அவனுக்கு முக்கியமான பலனன்று. அவனடையும் பலன் சொல்லாற் சொல்லப்படாததும், அறிவாலறியப்படாததுமாகிய சிவத்துவப்பேறேயாம். ஓ என்னம்மையே! இங்ஙனம் யான்சொல்லிவந்த ஞானம் உன்னுடைய தரிசனம் இதுகாறுமில்லாமையால் சற்றுமறைபட்டது போலிருந்தது. அது இப்பொழுது சங்காரர்த்தாங்கியாகிய உனது பாதாரவிந்த தரிசனமகிமையினுல் இப்பொழுது நன்குய்ப் பிரகாசித்து உறுதி எய்தியது.

ஓ அம்மையே! யானும் கணேசனும் கிரீசராகிய இறைவனுல் ஏவப்பட்டு உனது சந்நிதானத்திற்கு வந்தோம். உன்னிடம் ஜகதீசன் மிக்க சந்தோஷமுடையவராகவே யிருக்கின்றனர். அவருக்குத் தனமும், அவர் மனம் செல்லுதற்கிடமும் நீயாகவே யிருக்கின்றுய். உன்னையன்றி அவருக்கு வேறு சிந்தனையில்லை. அவரது உள்ளத்தில் நீயே நடனஞ்செய்கின்றுய். அவரது இஷ்டதெய்வமும் நீயாகவேயிருக்கின்றுய். இப்பொழுது அவருக்கு உன்னைப்பற்றிய விசாரமன்றி வேறு விசாரமில்லை. வேறு காரியமுமில்லை. சிருட்டிதிதி சங்காரமாகிய முத்தொழிலும் அவனது திருவடியின் அசைவினுல் நடந்துவருகின்றன. பேரானந்தமே திருமேனியாகவுடைய உன்னிடத்தில் அவருக்கிருக்கும் பிரியம்போல் கணபதியினிடத்தும் என்னிடத்தும் தம்மிடத்துமில்லை என்று குமாரக்கடவுள் கூற, அமுதம்போலும் இன்சுவையளிக்கும் அவ்வினியமொழிகளால் தேவியார் பரமானந்தமடைந்து புதல்வர்களைத் தழுவி யானந்தபாஷ்பப் பிரவாகத்தில் மூழ்கிக் களித்திருந்தனர்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

உ
வராஜிதேநம:

# பதினூரும் அத்தியாயம்

## நந்தீஸ்வர குமார சம்வாதம்.

வியாசர் கூறுகின்றார். ஓ முனிவர்களே! பின்னர் குமாரக் கடவுளும் விநாயகக்கடவுளும் அம்பிகையை நமஸ்கரித்து நிற்க அம்பிகை புதல்வர்களை நோக்கி ஓ புத்திரர்களே! இன்னமும் என்னைப் பற்றிய வார்த்தைகள் ஏதேனும் மகேஸ்வரர் கூறியிருப்பாராயின் அவற்றைக் கூறுவீர்களாக. பரமானந்தத்தை விளைவிக்கும் அவைகளை யான் கேட்க ஆவலுடையவளாயிருக்கின்றேனென்ன, குமாரக்கடவுள் மீண்டும் வணங்கி அமுதத்தைப் பழிக்கும் இனியமொழிகளால் தேவியார் விரும்பியவண்ணம் கூறலாயினர்.

ஓ கிரிஜே! உனது பிரபுவாகிய சங்கரர் காலையில் என்னை யழைத்து இன்று நீகிரிஜையின் சரணத்தைத் தரிசனஞ்செய்து வருவாயென்று கட்டளையிட்டுப் பின்னர் ஓ அம்மணி! உன்னைப்பற்றி அவர் கூறியதை யான் எவ்வளவினதென்று கூறுவேன். எம்பெமான் என்னைப்பார்த்து ஓ குமாரனே! கவுரி அளவிடவொண்ணாத அழகுடையவள். சத்குணங்களால் சிந்தாமணிபோன்றவள். என்னிடத்தில் அமுதம்போலும் வார்த்தையாடுந்திறமும் அன்புமுடையவள். எனது நீலகண்டம்போலும் கரியகூந்தலுடையவள். அவள் போலும் எனக்கு எவருள்ளார். இத்தன்மையளாகிய அவள் என்னைவிட்டுப்போனபடியினால் உயிர்களுக் குதவவேண்டிய பொருள்கள் என்னுள்ளத்தில் முற்றுப்பெறவில்லை. ஆகலான் நீ சென்று அந்தக்கவுரி இவ்விடத்திற்கு விரைந்துவரும் வகையைத் தேடுவாயாக வென்றார் என்று சொல்லிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் ஜயை, விஜயை என்னும் சேடியரிருவர் இறைவனேவலால் நல்லகனிவர்க்கங்களையும், ஆபரணவர்க்கங்களையும், நாகரீகமாயுள்ள ஆடைவர்க்கங்களையும் எடுத்துக்கொண்டு அங்குவந்து, தேவியையும் ஸ்கந்தரையும் நமஸ்காரஞ்செய்து ஓ அம்பிகே! இவையெல்லாம் ஆதிபரம்பொருளாகிய உமது இறைவனார் அளித்தவைகளாகும் என்று கூறினர். அதைக் கேட்ட கவுரி ஆனந்தக்கடலில் மூழ்கினவளாய் அந்தக்கனிவர்க்கமுதலிய சகல பதார்த்தங்களையும் ஆசையோடும் பார்த்து உடுக்கவேண்டியவைகளை யுடுத்து, உண்ணவேண்

டியவைகளை யுண்டு இனி நாம் இங்கிருப்பது நீதியன்றென்றெண்ணினர். அத்திருக்குறிப்பைக் கணேசப்பெருமானும்,ஸ்கந்தமூர்த்தியும் அறிந்தவர்களாய் முன்னேபோகப் புறப்பட்டனர். அவர்கள் புறப்பாட்டைக்கண்ட நந்தீசர் கணங்களுடன் அவ்விருவரையும் அடிபணிந்து நாங்களென்ன சொல்லப்போகின்றோம். எங்களை யடிமை கொள்ளும் ஆண்டவர்களாகிய நீங்களிருவரும் இங்குவரப்பெற்றோமாகையால் நாங்களுய்ந்தோம். இதுவரையில் நாங்களெல்லாம் தேவியாரைச் சமீபிப்பதற்கே யஞ்சிப் பயந்திருந்தோம். அந்தப்பயம் இப்போ தொழியப்பெற்றோம். சிவனாருள் நம்பால் எவ்வண்ணமாமோவென்ற துயரமும் நீங்கப்பெற்று அதுவுங்கிடைக்கப்பெற்றோம் என்றுசொல்லிப் பின்னர்த் தமது கணங்களைப்பார்த்து இனி அம்மையார் புறப்படுவதற்குத் தாமதமென்ன விருக்கின்றது. இதுகாறும் நம்மிடத்திருந்த துயரம் இனி ஏனிருக்கின்றது என்று கூறவே, குமாரக்கடவுள் நந்தீசரைப்பார்த்து உலகெலாம் ஈன்றவளாகிய எனதன்னையார் எழுந்தருளிப் போவதற்குரிய பிரகாசிக்கும் பொன்விமானங்களைக் கொண்டுவந்து சீக்கிரமாய் அவைகளில் மலர் மாலைகளைத்தொங்கவிடுமின். வெளியிடங்களில் பட்டுகளால் செய்த மேற்கட்டிகளைக்கட்டுமின். சுற்றுப்பக்கங்களில் பொன்குடைகளை நிறைத்திடுமின். அவற் றிடைகளில் சூரிய சந்திரர்களைப்போல் பெரிய கண்ணாடிகளைத் தூக்குமின். மூலைகடோறும் மலர்மாலைகளையும் மணிமாலைகளையும் அணியணியாய்த் தொங்கவிடுமின். தேவியார் வீற்றிருப்பதற்குரிய உள்ளிடத்தில் தேன் பிலிற்றும் மலர் மாலை, குளிர்ந்த கொழுந்துமாலை, வேர்மாலை, கொன்றைமாலை, பொன்னரிமாலை, தூக்குமாலை முதலிய பல மலர்மாலைகளால் புட்பவிமானம்போல் அலங்காரஞ்செய்மின். நடுவிலுள்ள சிஹ்மாசனத்தினடுவில் நல்லசலவை வஸ்திரத்தை விரித்து அதன்மேல் பன்னீர் மலர், முல்லைமலர் முதலியவெண்மலர்களைப் பரப்புமின். ஓ கணங்காள்! எனது அன்னையும் அப்பனும் வீற்றிருந்தருளுங் காட்சியைக் காட்டுவனபோல் நீங்கள் தொங்கவிடும் மணிமாலைகளில் இந்திரநீல மணிமாலைகளை யோர்பக்கமும், அதன்பக்கத்தில் முத்துமாலைகளையும், அதுபோலவே ஓர் பக்கத்தில் மரகத மாலைகளையும் அதன் பக்கத்தில் மாணிக்க மாலைகளையும் தொங்கவிடுமின். இவ்வண்ணமான அலங்காரங்கள் முற்றியபின்னர் வாழைக்குலை, தெங்கின் குலை, பழுக்காய்க்குலை முதலியவற்றை நிரப்புமின். நடைப்பந்தர்கள் தோறும் வெண்பட்டு மெத்தைகளை விரித்துக்

கொண்டே வரவும், அதன்மேல் குளிர்ச்சிபொருந்திய சுகந்தமாகிய மலர்களைப் பரப்பிவரவும் செய்மின். மண்டபங்கடோறும் விசேடமான அன்னவகைகளால் திருப்பாவாடையமைத்து தீபாலத்தி முதலிய பல வுபசாரங்களைச் செய்துவரும்படி செய்மின். மண்டபங்களின் இடையிடையே சிறியவாவிகளும், தண்ணீர்ப்பந்தர்களும் உண்டாக்கும்படி செய்மின். இருபக்கமும் மாணிக்கமயமான விமானங்களை வரிசைவரிசையாய் நிறுத்தச்செய்மின். அவைகளையன்றி இடையிடையே பூம்பந்தர்களமைத்து அவைகளில் கனிவர்க்கங்களையும், மதுபர்க்கங்களையும்பானகவகைகளையும் நிறைத்து வைக்கச்செய்மின். இவைகளையன்றி நடனஞ்செய்து வரும்நாடகப் பெண்கள் இளைப்பாறுதற்குரித்தான திண்ணைகளை யலங்கரித்து வைக்கச்செய்மின். ஓர் சமயம் நமதிறைவன் இவ்வலங்காரவதிசயங்களைக்கேள்வியுற்றுக் காண்போமென்றெண்ணி எழுந்தருளிவருவாராயின் வீதி வெளியாயிருத்தல் அழகன்றாகலான் இருபக்கத்தும் விண்ணுலகத்தையளாவுமாறு செம்பொன்னினால் சுவரெடுக்கச்செய்து மண்டபங்களையும், மாளிகைகளையும் சந்திரகாந்தக்கற்களால் வகுக்கும்படி செய்மின். அவைகளில் தண்ணிய பூஞ்சோலைகளுமமைத்து அவைகளில் தென்றற்காற்றுலாவச் செய்மின். வீதிகடோறும் வீணாகானங்களோடு ஆடலும்பாடலும் பயின்றிருக்கச் செய்மின். இவ்வண்ணமான அலங்காரங்களையன்றி வரிசைவரிசையாய்த் தோரணங்களும் தீபங்களும் இருக்கும்படிச் செய்மின் என்று கட்டளையிட, அவர்கட்டளைப்படியே நந்தீசர் கணங்களை அவ்வக்காரியங்களில் ஏவ, அவரவரும் அவ்வக்காரியங்களில் முயன்றிருக்கும்பொழுது பிருங்கி முனிவர் ஓர் பெரிய விமானத்தின் மீதேறி மிக்க விரைவாய் வந்தனர்.

அவ்விமானத்தை முருகக்கடவுள் நோக்கி நந்தியைப்பார்த்து ஓ நந்தி, இனி நமக்குச் சுகங்கிடைப்பதரிதென்று தோன்றுகின்றது. ஏனெனின்; யானிங்குவந்து காலதாமதமானதென்று சிவபெருமான் கோபித்தவராய் வேறு யாரையோ மிக்க விரைவாய் என்னிடம் போம்படி ஆஞ்ஞைசெய்ய அவர் இதோ வருகின்றார். அவர் வருகின்ற விமானத்தைப்பார்ப்பாய். இனி நாம் சும்மாயிருத்தல்கூடாது. நீயோர் விமானத்தின் மீதேறி அதிவேகமாய் அவரிடஞ்சென்று அவரைக்கண்டுபசரித்து செய்தியின்னதென்று விசாரித்து வருவாயாக. அவரிடத்தில் நீ கடுஞ்சொல் ஒன்றுஞ்சொல்லாது இன்சொல்லை மிகவும் பணிவுடன் கூறுவாயாக. சங்கரகிங்கரர்களிடத்

தில் இன்சொல்வழங்காது வன்சொல்வழங்கின் நரகமடைவது நிச்சயம்.

பூர்வம் இமயகிரிச்சாரலில் மஹாபுண்ணிய சீலராகிய சுகன் என்னும் ஓர் முனிவர் சங்கரரை ஆராதனைசெய்ய விரும்பி அவ்விமயமலையில் பிரகாசிக்கும் எண்ணிறந்த கொடுமுடிகடோறுமுள்ள சிவலிங்கங்களைக் கண்டு மகிழ்ந்து பூஜைக்குவேண்டும் உபகரணத் திரவியங்களெல்லாஞ் சேகரித்துக்கொண்டு பின்னர் அவ்விலிங்க மூர்த்தங்களுக்குச் சூரியகிரணம் மழை பனி முதலியன சம்பந்தியாதிருக்கும்வண்ணம் மந்தார மலர்களால் பந்தரமைத்து, அங்குவசித்திருக்கும் சிவாசாரமுடைய பெரியோர்களாகிய பலவிருடிகளை அவ்விலிங்கங்களைப் பூஜிக்கும்படிசெய்து, தாமும் மிக்க சிரத்தையுடன் பில்வமுதலியவற்றால் யாமங்கடோறும் பூசித்துவந்தனர்.

ஓ நந்தீ ! அந்தச்சுகமுனிவர் செய்துவந்த பூஜையின் சிறப்பினுட் சில கூறுகின்றேன் கேட்பாயாக. சிவலிங்கமூர்த்திகளுக்கு முத்தினை யொத்த மலர்க்குவியல்களால் ஆலயங்களமைத்து அச்சிவலிங்கங்களின் அடிப்பீடங்களாகிய பிரஹ்மபீடங்களை யலங்கரித்து, தமது தவமகிமையால் கிடைக்கப்பெற்ற மலைபோன்ற திவ்யான்னங்களையும், பரமான்னப்பிரவாகங்களையும், புதிய நெய்ப்பிரவாகங்களாற் பாகஞ்செய்த பற்பல பக்ஷணவகைகளையும், மலைபோலும் சர்க்கரைக் குவியல்களையும், சர்க்கரை நெய்களாற் சமைத்த சித்திரான்னங்களையும், பிரவாகம்போலும் பால் தேன் முதலியவைகளையும் நிவேதனஞ்செய்து, அதன்பின்னர் ஏலம் லவங்கம் சாதிக்காய் முதலியன கலந்த தாம்பூலக்குவியல்களையும், பச்சைக்கர்ப்பூரம் கஸ்தூரிமுதலிய பரிமளத்திரவியங்கள் கலந்த சந்தனக்கலவைகளையும் சமர்ப்பித்துப், பின்னர் எண்ணிறந்த மலர்மாலைகளைச் சாத்தி, இரத்தினமயமாகிய சத்திரசாமரங்களாலும், திவ்வியரத்ன நீராஞ்சனங்களாலும் உபசரித்து, யவ்வனத்துடன் கூடிய பதினாயிரவர்களாகிய தமது மனையாட்டிகளை நர்த்தனஞ்செய்வித்து, அதனோடு ருத்திர வீணாகானமும், தேவதுந்திபியும் முழங்கச்செய்து, பற்பல சிவபக்த சிரோமணிகளால் ருத்திரமுதலியவற்றை யோதச்செய்து மகிழ்ந்து பூஜாவிதியை முடித்துப்பின்னர் சிவநிவேதன சேஷத்தையும், சிவசமர்ப்பணமாகிய வெண்பட்டு திவ்யாபரண முதலியவைகளையும் சிவ சாம்பவர்களுக்களித்துப் பரமானந்தமெய்துவர்.

ஓ நந்தீசனே! அம்முனிவர் செய்துவந்த தவமும், அத்தவத்தால் கிடைக்கப்பெற்ற திரவியமும் சிவப்பிரீதிகரமான சிவபூஜைக்குச் சாதனமாயினமையான் அவைபிரயோஜனமுடையவாயின. சிவப்பிரீதிகரமாகாத தவமுடையோனும், திரவியமுடையோனும் மானுட சஞ்சாரமற்ற பெருங்காட்டினடுவில் ஓர் பெருங்கற்பாறையில் தலையை மோதிக்கொள்பவனோடும், ஓர் பெரிய மரத்தடியிலுட்கார்ந்துகொண்டு கத்தியழுபவனோடும் ஒப்பாக எண்ணப்பட் டிகழப்படுவான். நற்றவத்தால் வந்தபாக்கியவான்களே தவத்தையும் பாக்கியங்களையும் பெற்றுச் சிவாராதனையில் அர்ப்பணஞ்செய்கின்றவராவர். அஃதில்லாத தவுர்ப்பாக்கியவான்களே அவ்விரண்டினையும் பெற்றாராயினும் அவைகளைச் சிவப்பிரீதிகரத்தில் அர்ப்பணஞ் செய்ய மன மிசையாதவராவர். இவற்றிலையமில்லை. ஆகலான், ஓ நந்தீ! சிவார்ச்சனைக்கு வேண்டிய திரவிய சாமக்கிரியைகள் சுலபமாகக் கிடைக்கப்பெறுதற்கே தவஞ்செய்யவேண்டுமெனவும், அவ்வுபகரணங்கள் கிடைக்கப்பெறுதலே அத்தவத்தால் வரத்தகும் பயனெனவும் அறிந்து, சிவாராதனத்துக்குரிமையாகாத தவம் எற்றுக்கென்றொழித்தல்வேண்டும். எவன் தான்செய்ததவத்தால் சிவபூஜைக்குரிய சாதனங்களைப் பெறவில்லையோ அத்தவம் சேணியன் செய்யும் சேஷ்டையாய் முடியும். தவத்தில் விருப்பமுள்ளவன் தான் செய்யுந் தவத்தால் சிவபூஜைக்குரிய சாமக்கிரியைகளடையப்பெற்று அவைகளைக்கொண்டு சிவாராதனஞ்செய்து வருவானாயின் அவன் முத்தி பெறுவதிலையமில்லை. எவன் தான் பெற்றிருக்கும் பாக்கியத்தால் சிவபெருமானைப் பூஜிக்கவில்லையோ அவனது பாக்கியம் அபாக்யமே. எவன் தான் பெற்ற பாக்கியத்தால் சிவபெருமானைப் பூஜிக்கின்றானோ அவன் பெற்றபாக்கியம் சௌபாக்கியமே.

ஓ நந்தீ! யான் பாக்கியதேவதைகளின் சம்வாதமொன்று கேட்டிருக்கின்றேன். அது கேட்டமாத்திரத்தில் பேரானந்தத்தை விளைவிக்கும். அதனைக்கேட்பாயாக. பாக்கியங்களொவ்வொன்றுக்கும் ஒவ்வோரதிதேவதையுண்டு. ஆகலான் அவ்வதிதேவதைகளெல்லாம் ஒன்றுகூடி, பூர்வம் இரத்னமண்டபமென்னும் ஓர் பிரதேசத்தில் கூடியிருக்கும்போது அவைகளுள் ஓர்தேவதை ஓர் திவ்ய சிஹ்மாசனத்தில் வீற்றிருந்து, ஏனைய தேவதைகளைநோக்கி. ஓ பாக்கியதேவதைகாள், உங்களால் உலகினரடையும் பயன்யாது? நீங்கள் எதற்குபயோகப்படுகின்றீர்கள்? மஹேச்வரபூஜையில் உங்களுக்குப்

யோகப்படுந் தன்மையுண்டா? அதனை விரைவிற் கூறுவீர்களாக. ஆனால் நாம் இப்போது கூடியிருக்குமிடம் சிவாலய மாதலால் இவ்விடத்தில் ஏனையோரிடங்களில் பொய்மொழி கூறுவதுபோல இவ்விடத்தில் கூறினால் விநாசம் வருவது நிச்சயம். ஏனெனின் அவரெல்லாம் அசத்தியராதலால் அவர்களிடங்களில் பொய்மொழியினால் குற்றமுண்டாகாது. மகாதேவர் சத்தியத்வமுடைய சத்திய மூர்த்தியாதலால் இவருடைய இடத்தில் சிறிதேனும் பொய்மொழி கூறின் விநாசம் வருவதற்கு ஐயமுண்டா? வேதங்களும் சங்கரனைச் சத்தியனென்று கூறுகின்றவேயன்றி அவனொழிந்த ஏனையோரைச் சத்தியரென்று கூறவில்லை. ஆதலால் அவ்வேதவுண்மையை யுணர்ந்த முனிவர்கள் சங்கரனையே வழிபடுகின்றனர். ஓ பாக்கியதேவதைகளே! சங்கரனது சந்நிதியில் பொய்கூறுதல் மகாபாதகத்திற்கு நிகராதலன்றி அவனது சந்நிதானத்தில் புண்ணியமாயினும் பாவமாயினும் செய்யப்படுமாயின் அவையனந்தமாகுமென்பது நிச்சயமாதலின் சத்தியத்தைக்கூறுமின்கள் என்று வினவியது. இவ்வசனத்தைக்கேட்ட பாக்கிய தேவதைகளுளொன்று எழுந்திருந்து ஈஸ்வரனைக்குறித்துச் சத்தியஞ்செய்து கூறத்தொடங்கிற்று.

எவனுடைய கிருகத்தில் யான் வசிக்கின்றேனோ அவன் மிக்க சாம்பவனாவான். அவனிடத்தில் எண்ணிறந்த மதயானைகளும் சிறந்த குதிரைகளும், கோக்களும், மகிஷங்களும், விசித்திர ரத்ன ஹாரங்களும், மேருமலைபோன்ற சுவர்ணக்குவியல்களும், திவ்யான்னவர்க்கங்களும் நிறைந்திருக்கும். தாமரைமலர்போலும் முகமுடைய எண்ணிறந்த நாடகப்பெண்களும், திவ்யாபரணந் தரித்தவர்களாய் சவுந்தரியத்திற்கு ரத்னாகரம் போன்று விளங்கும் ஸ்திரீகளுங் கூடியிருப்பர். இவ்வண்ணம் அவனுக்கமைந்துள்ள செல்வச்சிறப்பைக்கூற யாவரால் முடியும்! அவனுக்கு மனைவியும் புத்திரர்களும் மனதுக்கியைந்தவர்களாயும், சிறந்த மேதாவிகளாயும், சகல வித்தைகளையும் அறிந்தவர்களாயும், சகலவித்யாபாரங்கதராயும், சிவசரணாரவிந்தத்திற் பொருந்திய மனமுடையவர்களாயும், அசுபவாசனையிற் செல்லாத வைராக்கிய முடையவர்களாயும், சத்புத்திரர்களைப் பெறுவோராயும், அரோகதிட சரீரமுடையவர்களாயும் இருப்பர். அடிமையாட்களும் அவன் மனதுக்கொத்தவர்களாயும், சம்பத்தியுடையோர்களாயும் இருப்பர். அவன் இத்தன்மையான மனைவி மைந்தர்களுடனும், எண்ணிறந்த தாசிவர்க்கங்களுடனும், மற்றும்

இல்லறத்துக்கு வேண்டிய பாக்கியங்களுடனும் எப்பொழுதும் சிவார்ச்சனை புரிந்துகொண்டு சிவானந்தத்தில் மூழ்கியிருப்பன். அவனது சிவாராதனத்துக்குச் சாதகராயிருந்து கிருதார்த்தராவோமென்று தேவமங்கையர் தாசிகளாயும், தேவர்கள் தாசர்களாயும் இருப்பர். இவர்களைப்போலவே ஐராவதம் பலயானைகளாகவும், உச்சைஶ்ரவம் பலகுதிரைகளாகவும், அங்குலாவிக்கொண்டிருக்கும். இங்ஙனமான சிறப்புகளேயன்றி அவனது வீட்டில் எப்பக்கங்களிலும் எண்ணிறந்த ரத்னலிங்கங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அவன் அவ்விலிங்கமூர்த்திகளைத் தன்னைச்சார்ந்த யாவரையும் பூஜிக்கும்படி செய்து பூஜைக்குவேண்டிய சகலதிரவியங்களையும் அவர்கள் வேண்டியவாறு கொடுத்து மகிழ்வான்; மலைபோல் விளங்கும் சிவநிவேதனமாகிய திவ்யான்னக்குவியல்களையும், பரமான்னமுதலிய பக்ஷ்யங்களையும், பொன்மணிமுதலிய தக்ஷிணைகளையும் சாம்பவர்களுக்குக்கொடுத்துப் பின்னர் எஞ்சிய சிவப்பிரசாதங்களைப் புத்திர மித்திரகளத்திராதிகளுடன் புசித்துக் களிப்படைவன்; எப்பொழுதும் உருத்திராக்ஷமாலிகைகளையே ஆபரணங்களாகவும், விபூதியையே கவசமாகவும் பூண்டு கண்டு களிப்பன். இத்தன்மையான நிலைமையுள்ளவனது வீட்டிலேயே யான் வசிப்பேன். அந்த வீட்டைவிட்டுப் போவதற்கு எந்தவகையாலும் விரும்பமாட்டேன் என்று கூறியது.

இவ்வண்ணம் ஓர் சைவபாக்கியங் கூறிய வாய்மொழியை ஏனைய பாக்கிய தேவதைகள்கேட்டு நாணித் தலைகுனிந்து ஒன்றையொன்று பார்த்து அந்தோ, இப்படிப்பட்ட பாக்கியவானையாம் பெற்றிலோமே! நமது புண்ணியம் சைவபோகத்தின் பொருட்டில்லாமற் போயிற்றே. இந்தச் சைவபாக்கிய தேவதை யொருத்தியே பாக்கியவதி. இவள் உயர்ந்தோரிடத்தும் புல்லரிடத்தும் மாறி மாறிச்செல்லும் நம்மைப்போலன்று. இவள் எப்போதும் சாம்பவரது வீட்டிலேயே வசிக்கின்றனள். இனி இவளைப்போலவே நாமும் இருக்கவேண்டும். அசாம்பவர்களது கிருகங்களில் வசித்தல் கூடாது. நாம் சாம்பவரிடத்தில் வசிக்கப் பெற்றாலன்றோ சிவபூஜைக்குச் சாதனமாயிருக்கும் புண்ணியத்தைப்பெறலாம்? இந்த பாக்கிய தேவதை செய்ததவம் சிவார்ச்சனைக்கு உபயோகப்பட்டமையாலன்றோ பிரயோஜனத்துடன் பிரகாசிக்கின்றது? சிவபூஜைக்குபயோகமாகும் மரங்களும் முத்திப்பேறடையுமாயின் சாக்ஷாத்தாய்ச் சிவபூஜையைச் செய்வோர் முத்தியடைவரென்பதைக் கூறவும்

வேண்டுமோ! சிவபூஜையின் மகிமையைக்கூறவேண்டுமாயின் எந் தப்பிரமாணத்துக்கும் எட்டாது; அது வாக்குக் கெட்டாதாகலின். ஓ நந்தி! யான் சொல்லிவந்த மகிமையையுணர்ந்து இப்போது என் னெதிரில் வருகின்ற சிவபக்தரிடம் இன் சொற்களைக் கூறுவாயாக. பூர்வம் சிவபூஜாதுரந்தரராகிய சுகமுனிவரிடம் ஒருவன் நிஷ்டூரமா கிய சொற்களைச் சொல்லி நரகத்தை யடைந்தனன். ஆதலின் யான் கூறிய நெறியில் சிறிதுந்தவருதே என்று ஷண்முகக்கடவுள் நந்தி யைநோக்கிக் கூறினர்.

பதினாறும் அத்தியாயம்
முற்றிற்று.

உ

ஸமஸ்த ஜகதா தாராயநம:

## பதினேழாம் அத்தியாயம்.

### குமாரர் சிவாபராத முரைத்தல்.

**வியாசர்** கூறுகின்றார். இவ்வண்ணம் குமாரக்கடவுள் கூறி யதை நந்தீசர்கேட்டு இருகரங்களையுஞ் சிரசிற் கூப்பிக்கொண்டு ஓ பகவானே! பூர்வம் சுகமுனி என்பவனிடம் ஒருவன் நிஷ்டூரமான சொற்களைச் சொன்னனென்றருளினீரே, அச்சொற்கள்யாவை? ஓ ஷண்முகக்கடவுளே! சிவதத்வஞானியாகிய தேவரீர் அவற்றையருள் புரிந்து கூறுவது உசிதமாகும் என்று விண்ணப்பஞ்செய்ய, குமாரக் கடவுள் முகமலர்ந்து அவற்றைக் கூறத்தொடங்கி சிவஸ்மரணஞ் செய்து ஓ நந்தி! பக்திசிரத்தையுடன் சிவார்ச்சனைசெய்துகொண்டு பரமானந்தத்துடன் காலங்கழித்துவரும் சுகமுனிவரை அம்பரீஷ குலத்துட்டோன்றிய தவக்கடல்போன்ற ஓர் முனிவன் அவரைப் பார்த்துக் கொடுஞ்சொல்லுடன் ஓ சுகமுனிவரே!நீர் அற்புதமாகிய தவங்களைச்செய்து பாக்கியங்களைப் பெற்றுச்சுகமாயிராமல் சிவார்ச் சனை செய்கின்றீரே! இதனால் யாது செய்யவியலும்! அந்தோ! அவல மாக்கிக்கொண்டீரே என்று கூறினன். அவ்வன்மொழியைச் சுக முனிவர்கேட்டும் அம்மொழியை யோர்பொருளாக மதியாது முன் போல் சிவார்ச்சனையிலேயே உறுதிபெற்ற மனமுடையோராயிருந் தனர். சிவார்ச்சனையைச் சிறிதாகவும் தவத்தைப் பெரிதாகவும் யெண்ணிக் கொடுஞ்சொல் மொழிந்த முனிவன் கிழங்குஜலம் கனி

முதலியவைகளைப் புசித்துத் தவஞ்செய்து வருநாளில் ஓர்சர்ப்பம் தீண்டப்பெற் றிறந்தனன். உடனே காலதூதர்கள் வந்து அவனை யிழுத்துக்கொண்டு யமனிடஞ்சேர்க்கக் காலனும் இவனைக் கும்பீபாகத்திற்றள்ளிவருத்தவேண்டுமெனவெண்ணிச் சித்ரகுப்தனை நோக்கி ஓ சித்ரகுப்தா! இவனென்னென்னபாவஞ்செய்திருக்கின்றானென்று கேட்டனன். சித்ரகுப்தன் சிரசில் கைகூப்பி வணக்கத்துடன் ஓ ஸ்வாமி! இவன் செய்தபாவம் கற்பாந்தமாயினும் நசித்திடாது. மஹாபாவகோடிகளுக்கு ஜனகமாகிய கொடும்பாவத்தை இவன் செய்திருக்கிறான். இவனுக்கெத்தகைத்தான யாதனையைக் கொடுப்போம்? எப்படிப்பட்ட யாதனைகளுக் குட்படுத்தினாலும் இவன் செய்த பாவம் மேன்மேலும் வளர்ந்தோங்குமன்றிக் குறையாது. இத்தகைய பாதகம் இதற்குமுன் எங்குங்கண்டதில்லை. இனியும் காணப்போகிறதில்லை. இப்போதுங் காண்பதற்குமற்றெங்குமில்லை. இப்பாதகத்தை எடுத்துச் சொல்வதற்கு முடியாது. இவன் பாவத்தையெடுத்துச் சொன்னாலெனக்குங் கெடுதியுண்டாகும். ஆதலின் இவனது பாவத்தை இன்னதெனக்கேட்காமலே இவனைச்சூலத்தினாலடித்துக்குத்தி மிகவும் வருத்தி மஹாகோரமான நரகத்திற்றள்ளிக்கற்பாந்தமளவும் வருத்தவேண்டியதே. இப்பொழுது இவனைக் கண்ட மாத்திரத்தினால் யாதொரு பாவம் வருமோ அப்பாவத்தைத் தொலைக்கு நிமித்தம் பிரயத்தனம் மிகவுஞ் சிரமப்பட்டுச் செய்ய வேண்டியது. இப்பாபியைப்பார்ப்பதினாலுண்டாகும் பாவம் ஓர் காலத்திலுமொழியாது. ஆயினும் இம்மஹாபாபியை இப்பொழுது நாம்பார்க்கவேண்டியதாகவே யிருக்கின்றது. இதனால்வரும் பாவத்தைத் தொலைப்பதற்கு ஏதாவதுஓர்எத்தனஞ்செய்யவேண்டுமென்று சித்ரகுப்தன் கூறினான். அதனைக்கேட்ட யமன் மனங்கலங்கி யாது செய்வோமென்றேங்கி இப்பொழுது நமக்கோர் ஆபத்துவந்திருக்கிறது. இதன் பயன் எப்படி விளையுமோ? இன்று காலையில் எந்தப் பாபியின் முகத்தில் விழித்தோமோ! நமக்கு இத்துக்கப்பயனை விளைவிக்கும் துர்ப்பாக்கிய மன்றோ வந்திருக்கின்றது! நாமிங்குவரும் பொழுது சங்கரனை நினைக்காமல் புறப்பட்டுவிட்டோம். அவனை நினைத்துப்புறப்பட்டிருப்போமாயின் இத்துக்கம் வாராது. ஸர்வ தேவர்களாலும் ஆராதிக்கப்படுமிறைவனை ஆராதித்து எவன் புறப்பட்டுவருகின்றானோ அவனுக்கு விஜயமும் சுகமும் மேன்மேலும் வளர்ந்தோங்கும். எங்கேயாவது தூரப்பிரயாணத்திலாவது சமீபப் பிரயாணத்திலாவது எண்ணங்கொண்டால் சங்கராராதனஞ்செய்ய

வேண்டியது அவசியம். அவனெவ்வளவு பலசாதனங்களுள்ளவனு யினும் சங்கராராதன மில்லாமல் புறப்படுவானுயின் சுகங்கிட்டா தென்பது திண்ணம். பற்பல்தானங்களாலும் பற்பலசாதனங்களா லும் யாதும் பயனில்லை. காலகாலனுகிய சங்கரார்ச்சனை செய்யா விடில் அவனுக்குள்ள சாதனங்களெல்லாம் சாதனத்தன்மை பெறு வதில்லை. சகலசாதனங்களுக்கும் ஸாதனமாயுள்ளது சங்கராராத னமொன்றே. அஃதே ஸபலமாகும். ஏனையவெல்லாம் விபலமெ ன்றே எனது தீர்மானம். இவ்வுண்மையை அநேகரறிந்திலர். சகலவேதங்களும் சங்கரார்ச்சனையையே பெரும் புண்ணிய சாதன மென்று கூறுகின்றன. அது மஹா பாக்கியவான்களுக்கே விளங் கும். அர்த்தத்துவத்தை யறிந்தவர் சாம்பவரன்றி ஏனையோரல்லர். சிவாராதனமாத்திரத்தினுலேயே மற்றெதனையும் விரும்பாத பெரும் பாக்கியங் கிடைக்கின்றது. கல்பதருக்களுக்கும், காமதேனுவுக்கும் மகிமைவந்ததற்குக் காரணமும் அதுவே. பிரஹ்மத்துவ விஷ்ணுத் வங்களுக்கும் முத்திக்கும் ஏதுவாயிருப்பதும் அஃதே. அத்தன்மை யான சிவாராதனஞ்செய்பவனுக்கே சிவானந்தானுபவ அமுதம்புசி க்குந் தன்மையுண்டாம். அந்தரசம் அமரருண்ணும் அமுதரசத்தை அவமதிக்குந்தன்மையை யுடைத்து. அதன் கண் விருப்பமானது சிவானுக்கிரகத்தினுலேயே யுண்டாதல் வேண்டும். அதுவே நிர்மல மாகிய பயனையும், வேண்டும் பொருளனைத்தையும் தருந்தன்மையை யுடைத்தாம். எல்லாப்பயனையும் சிவாராதனமே தருதலால் வேறு சாதனங்கள் வேறு எந்தப்பயனை விளைவிக்கும்! வேறுசாதனங்க ளெல்லாம் சாதனப்போலிகளாதலின் அச்சாதனங்களால் உண்மைப் பயனைப் பெறுதல் யாங்ஙனம்? கானல்நீரால் தாகசாந்தி யடைவ தும், இப்பியிற்றோன்றிய வெள்ளியால் மனையாட்டின் கைகளுக்குக் கங்கணஞ்செய்து போடுவதுமுண்டா? உண்மைச்சாதனமாகிய சிவா ராதனத்தைக் கொண்டால் சகல சித்தியும் பெறுதல் நிச்சயம். ஆக லின் பொய்ம்மைச் சாதனங்களை விடுத்து உண்மைச் சாதனத்தைக் கொள்ளல்வேண்டும். அதனை யுண்மையானன்றி யாதாயினும் ஓர் வியாஜ முகத்தாற் கொண்டாலும் அதுவும் விரும்பும் பொருளை எளிதிற்கொடுத்து சகல பாவங்களையும் போக்கிவிடும். இந்த வுண் மையால் சிவபூஜையில் நாமும் எத்தனஞ்செய்யவேண்டும். அப் படிச் செய்வோமாயின் இப்போது இக்கொடும்பாவியைப் பார்ப்ப தனுல் நமக்குப் பாவமுண்டாகுமென்று சிறிதும் அஞ்சவேண் டாம். சிவபெருமானைப் பக்தியோடு ஆராதிக்காதவனே பாவத்தி

ளுல் விளையுந்துன்பத்துக்குப் பயப்படவேண்டும். சிவாராதன மாத்திரத்தினுல் சகல பாதகங்களுந் தொளுத்தப்பட்டுச் சாம்பராகின்றன. மஹா பாவமென்னுஞ் சரீரத்திற்கு விஷமானது சங்கரனை யர்ச்சிப்பதேயாம் என்று சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது அங்கு ஓர் தீனமாகிய ஸ்வரங்கேட்கப்பட்டது. படவே இயமன் மனங்கலங்கிப் பதைபதைத்து அந்தச்சப்தம் வந்த விடத்தை நோக்கிச்சென்று நீறுபூசிய மேனியராய், மஹா பரிசுத்தராய், சிவார்ச்சனை செய்பவராயிருக்கும் முனிபுங்கவரைக்கண்டு சித்திரகுப்தனேடும் அவரடியில் வீழ்ந்து வணங்கிநின்று ஓ முனிஶ்ரேஷ்டரே! புண்ணியவிருக்ஷங்க ளடர்ந்த வனத்தில் வசித்துக்கொண்டு இங்குள்ள பூஜாசாதனத் திரவியங்களால் முப்பொழுதும் மஹேஶ்வரனைப் பூஜித்து யாதொரு விசாரமுமின்றி சாத்வீகராயிருக்கின்ற உமக்கே சுகமுளது. நீரே மஹா பாக்கியவான். இத்தன்மையராகிய தேவரீர் மிகவுந் தீனமாகிய குரலுடன் கூவியது யாதுகாரணமோ? அதனையடியேனுக்குச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, முனிவர் ஓ தருமராஜனே! இன்று இங்கு ஓர் கொடும்பாவிவந்து சிவநிந்தையைச் செய்தனன். அந்தப் பாவியை யான் கண்டதனுலும், அவனுல் செய்யப்பட்ட சிவ நிந்தையக்கேட்டதனுலும் என்னிடம் மஹாபாவங்கள் விளைந்து கணந்தோறும் வளர்ந்தோங்குகின்றன. அப்பாவங்களை எதனுல் ஒழிப்பதென்று கூக்குரலிட்டுச் சிந்தித்துக்கொண்டிருக்குந் தருணத்தில் தெய்வகதியாய் உம்மையுங் காணப்பெற்றேன். இனி நீர் அவைகளைப் போக்குதற்குரிய தருமம் யாதாயினும் உளதாயின் அதனைக் கூறவேண்டும். ஏனெனின் தர்மஸ்வரூபராகிய நீர் அறியாதது யாது மில்லை. ஆகவே சற்று யோசித்துப் பார்த்துக் கூறுவீரென்று சொல்ல, இயமன் அம்முநிவரையழைத்துக்கொண்டு ஓர் குகாஶ்ரமத்தையடைந்து அவ்விடத்தில் காலகாலனை யர்ச்சிக்கும் சுகமுனிவரைக்கண்டு சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து ஓ ஸ்வாமின்! சைவ நிந்தகனுகிய ஓர் கொடும்பாவியை எனது பெருந்தவுர்ப்பாக்கியத்தால் பார்த்துவிட்டேன். அதனுல் நானும் கொடும்பாவியாயினேன். அப்பாவத்தை நீக்கத் தேவரீர் ஓருபாயங் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற் கச்சுக முனிவர் ஓ தருமராசனே! யான் எந்த சிவநிந்தகனுகிய கொடும்பாவியைப் பார்த்தேனே அந்தப் பாவியைத்தான் நீரும் பார்த்திருப்பீர்போலும்! ஓ காவலனே! அவன் முன்னர் அளவிறந்த தவஞ்செய்தவன். அங்ஙனமானவனுயினும் பின்னரவன் செய்த சிவநிந்தை

யால் கொடும்பாவியாயினன். சிவார்ச்சனையில் பிரியமில்லாதவன் கோரமாகிய தவங்களைச் செய்தாலும் தருமங்களைச் செய்தாலும் அவைகளால் யாது பயனைப்பெறலாம்! எவனுக்கு அபாரமாகிய சிவபுண்ணியங்களிருக்குமோ அவனுக்கே சிவலிங்கார்ச்சனையில் மிக்க விஸ்வாஸமுண்டாகும். சிவதர்மமொழிந்த சமான்யதர்மங்களில் பிரவிர்த்தியுடையோர் அத்தர்மங்களைக் கற்பகோடிகாலம் வரையிற் செய்து வாழ்நாள்களைக்கழிப்பாராயின் அவை அனேக காலத்துக்குப் பின்னர் பரிபக்குவம் எய்தப்பெற்றுப் பின்னர் சங்கரபூஜையில் விஸ்வாஸத்தையுண்டாக்கும். ஓ கால ஸ்வரூபனே! ஸ்ரீமிருத்யுஞ்சயனைப் பூஜிப்பதென்றால் அது பெரிய சிவபுண்ணியங்களுக்குச் சாத்தியப்படுமேயன்றி ஏனைய பசு புண்ணியங்களுக்குச் சாத்தியப்படுதலரிது. மஹாமேருவின் உயர்ந்த சிகரத்தின்மேலிருத்தலும் சந்திரனோடு கூடவசித்தலும் எங்ஙனம் சாமான்யசாதனங்களால் பெறுதலரிதோ அதுபோலெனக.

அன்றியும் சிவாராதனத்துக்குப் பல இடையூறுகளுமுண்டாகும். அதில் வழுவினால் கெடுதியேவிளையும். இதனருமை இங்ஙனம் நிற்க. சிவபூஜை யில்லாதவனது வீட்டின்கண்ணுள்ள பெண்டிர்களால் தொடப்பட்ட தண்ணீரைக்கண்களாலும் பார்க்கக்கூடாது. ஓர்கால் அது கண்களுக்கெதிர்ப்படுமாயின் உடனே கண்களை மூடிக்கொண்டு சூரியனைத் தரிசித்தல்வேண்டும். சாம்பவர்களல்லாதவரது சரீரத்தை நரகத்திலிருப்பவர்கண்டாலும் அவர்கள் சிவநேத்ரபாவனையுடன் சூரியனைத் தரிசித்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்யாமல் சற்று அலக்ஷயமாயிருப்பாராயின் அந்தக் குற்றத்துக்காளாய்ப் பல்லூழிகாலம் நரகத்தை யநுபவிப்பவராவர். ஓ தண்டதரனே! சிவலிங்காராதனஞ் செய்வோர் விபூதியைத் தேகமுழுதும் பூசிக்கொண்டு மிக்க சிரத்தையுடன் அதனைச் செய்வாராயின் அதனால் பாபம் நீங்கப்பெற்றுப் பரிசுத்த மெய்தப்பெறுவர். விபூதி பூசிய தேகம் நவமாகிய சிவலிங்கமேயாம். பாவமெனுந்தேகத்தைப் பஸ்மீகரணஞ்செய்வது பஸ்மாவேயாம். அப்பஸ்மாவைப்பூசப் பெறும்பேறு பெரும்புண்யத்தினால் கிடைக்கவேண்டியதாகலின் நீவிர் இப்பொழுது விபூதியுத்தூளனம் செய்து கொள்ளவேண்டும். விபூதியுத்தூளனஞ்செய்துகொண்ட அங்கமானது புதிதாகிய அங்கமேயாகின்றது. விபூதியணுக்கள் ரோமகூபங்களின் வழியே சென்று கோடிக்கணக்காகிய லிங்கங்களை யுண்டுபண்ணுகின்றன. விபூதியுத்

தூளனஞ்செய்த சரீரமானது லிங்கமேயாம், ஓ யமனே, அஃது சரலிங்க மெனப்படும். காஸ்மீர முதலிய அசேதனங்களாகிய பல கோடி லிங்கங்கள் இருக்கின்றனவன்றோ? சரலிங்கங்களைப் பூஜிப்பதனால் பெறும் பயன் அந்த லிங்கங்களைப் பூஜிப்பதனால் இல்லை. விரூபாக்ஷனாகிய இறைவன் பிரத்யக்ஷமாய் சாம்பவரில்லமடைந்து சரலிங்கமூர்த்தியாய் இருந்து கனி, அன்னம், தீர்த்தம், புஷ்பம் முதலியவைகளில் எவற்றையேனுங் கிரகிக்கின்றான். அவ்விலிங்கார்ச்சன மகிமையை வேதம் நன்கு அறிகின்றதோ! இல்லையோ! சாம்பவோத்தமரது விபூதி பூசப்பெற்ற அங்கத்தைக்கண்டு பூதபதியாகிய இறைவன் அம்பிகையோடு கூத்தாடுகின்றனர். ஓ யமனே, இச் சரலிங்கமானது அருமையான லிங்கமாம். விபூதி யணிந்து விரிக்கப்பட்ட இரண்டு பாஹுக்களையும் விபூதியினால் ஜ்வலிக்கும் சிரசையும் பார்த்தால் அது ஓர் லிங்கவடிவமாகவே பிரகாசிக்கின்றதன்றோ? அவ்விதமாகிய சாம்பவரது சரீரமே அபூர்வமாகிய சரலிங்கம். சரலிங்கங்களில் அர்ப்பிக்கப்பட்டதை மகேஶ்வரன் பிரசன்னமாய் புசித்தருளுகின்றான். ஆதலால் சரலிங்கத்தில் சிவசாந்நித்தியம் இருப்பதுபோல் ஸ்தாவர லிங்கங்களில் இல்லை. இரத்னலிங்கமென்று வேதத்தில் கூறப்பட்டுள்ளது. ரத்னமானது சாம்பவஸ்ரேஷ்டரே. ஆதலால் அஃதே லிங்கோத்தமமாம். எவனுக்குச் சாம்பவராகிய சரலிங்கங்களில் அவ்வளவாகப் பக்தி யுதிக்கவில்லையோ அவனே ஸ்தாவர லிங்கத்தை நன்கு பூஜிக்கவேண்டும். அப்படி யியற்றிய பூஜையின் நிவேதனத்தைச் சாம்பவருக்கே அளிக்கவேண்டும். சாம்பவரது முகத்தையடைந்து சம்புவே புசிக்கின்றனர். சாம்பவரது அந்தக்கரணமெனும் குகையை யடைந்து சம்புவே வசிக்கின்றனர் என்று அறியத்தக்கது. அவ்விதம் சம்பு வசிக்கும் சாம்பவரது ஹிருதய குகையே வேதத்தில் கூறப்பட்டுள்ளது. சாம்பவாந்தக்கரணமாகிய குகையில் அம்பிகாரமணனாய் அனந்தானந்த மூர்த்தியாய் விளங்கும் அகிலேசனைஸ்மரித்து ஆனந்தபாஷ்பம் பெருகப்பெற்ற தீரனே முத்தனாகின்றான். தமது அதிகாரத்துக்குத் தகுந்தபடி லிங்கார்ச்சனையைத் தனது சக்திக்கியன்றவாறு செய்யவேண்டும். இப்படி பரமபக்தியோடு செய்யும் பூஜாப்பிரபாவத்தால் சிதானந்தகரனாகிய சிவனை எப்போது சாக்ஷாத்காரனாய் அனுபவிக்கின்றானோ அதுமுதல் லிங்கத்தை அர்ச்சிக்கவேண்டுமென்பதில்லை. அவ்விறைவனையே அர்ச்சிக்கவேண்டும். சிவசாந்நித்தியம் இருப்பது பற்றியே லிங்கம் பூஜிக்கப்படுகின்றது. சிவனே நேரில் தரிசிக்கப்

படின் பின்னே பூஜனை அவனிடத்திலேயே செய்யத்தக்கது. பாவம் இருக்கின் சிவனைத் தரிசிக்கமுடியாததலால் சிவதரிசனத்துக்குப் பிரதிபந்தமாகிய பாவங்களை ஒழிப்பதன்பொருட்டு சிவலிங்கத்தை அர்ச்சிக்கவேண்டியது. சிவலிங்க பூஜையென்னும் மேகமானது பாவங்களென்னும் காட்டுத்தீயை நாசஞ்செய்யும் ஆதலின், ஓ கால னே, காலவரையற்ற முக்திஹேதுவாகிய காலகாலனது பூஜையை மிக்க சிரத்தையோடு செய்துகொண்டு காலங்கழிப்பாயாக என் றனர்.

இப்படிக்கூறிய சுகமுனிவரது வசனத்தைக்கேட்டு அவரது லிங்கபூஜையை நினைந்தும் அவரது பூஜாசாதனங்களைக்கண்டும் மிக்க ஆச்சர்யங்கொண்டு எமன் சுகமுனிவரை நோக்கி ஓ முனிவரே, உம் மைப்போன்ற பாக்கியவான் எவ்வுலகிலும் யாரும் இல்லை. உமது பூஜை ஸகல உலகங்களுக்கும் உபகாரமாகின்றது. உமது ஜன்மாந் தரத்தில் செய்யப்பெற்ற தவத்தின் மகிமையே இப்படி விளங்கு கின்றது. உம்மால் அர்ச்சிக்கப்பட்ட இச்சிவலிங்கத்தையும் சிவா ராதன சாமக்கிரயங்களையும் இவ்வளவு மகிமையுடையவென்று சொ ல்ல எண்ணிறந்த நாவிருக்கினும் சாத்தியமில்லை. ஓ முனிவரே, உமது ஜன்மமே சபலம், உமது தாய்தந்தையரே தன்யர், உமது சங்கத்தினல் யானும் தன்யனுயினேன். புவனங்களில் உம்மைப் போன்ற சாம்பவஸ்ரேஷ்டர் யாருமில்லையென்பது நிச்சயமே என்று சொல்லி நமஸ்கரித்து யமன் சித்ரகுப்தனேடு தனதிடம் சென்று தூதர்களை வரவழைத்து, தூதரே, சைவநிந்தகனை உதையுங்கள், நர கத்தினின்றும் கணமேனும் வெளிவிடன்மின், கோரமாகிய நரகங் களில்போட்டுப் புரட்டுங்கள், அப்பாபியை வறுத்துக் கசையாலடி த்து வாட்டுங்கள் என்று ஆக்ஞைசெய்து பின்னர் சுகமுனிவரது லிங்கார்ச்சன மகிமையை நினைந்து பக்தியாநந்த பரவசனுயினன். உலகில் சாம்பவ ஜனங்களோடு சங்கம் செய்துகொண்டும் சம்பு சம் பந்தமாகவே வசனித்துக்கொண்டும் ஏராளமான சாமக்கிரயங்க ளால் சங்கரனைப் பூஜித்துக்கொண்டுமுள்ள புண்ணியநிதிகளே தன் யர்கள்.

பதினேழாம் அத்தியாயம்

முற்றிற்று.

ஸர்வைச்வர்யப்ரதாயநம:

# பதினெட்டாம் அத்தியாயம்.



## பிருங்கி முனிவரது வருகை.

ஆதலால் சங்கரபக்தரிடம் கர்வியாது வணக்க ஒடுக்கத்தோடு சாவதானமாய்ச் சென்று விஞ்ஞாபனம் பண்ணவேண்டும். ஓ நந்திகேச்வரா, ஜாக்கிரதையாய்ச் சென்று வருவாயாக என்றனர். உடனே நந்திகேசுரர் அநேககோடி கணங்களோடு ரத்னபுஷ்பக விமானத்திலேறிவர பிருங்கியானவர் அவரைச் சற்றுதூரத்திலேயே கண்டு களித்து சமீபித்து இறைவனை நினைந்து நமஸ்கரித்து குசலப் பிரஸ்னை செய்தனர். ஓ ஸாயுஜ்யபதியாகிய நந்தீசரே, ஏது அநந்த பிரம்ம கல்பங்களாயினும் இன்னும் கால விளம்பனமாகின்றதன்றிச் சீக்கிரமாய்ப் போவதில்லையே. சங்கராக்ஞையை அநுசரித்து நடத்தல் அரிதன்றோ? நீங்கள் தாமதிக்கும்படி சங்கராக்ஞை இல்லையே. கோடிக்கணக்கான நாராயணர்களும் கமலபவன் முதலியவர்களும் தோன்றுங்காலமானதே! ஆயினும் நீங்கள் காலத்தினால் சிறிதும் மாறுதல் இன்றி இருப்பதற்குக் காரணம் காலகாலனது கிருபையே என்பது விளங்குகின்றது. இவ்வளவுகால விளம்பனமாயினும் உங்களிடம் இறைவனுக்குச் சிறிதும் கோபம் உதிக்கக்காணோம். உக்ரராயினும் அவ்விறைவர் உங்களிடம் அநுக்கிரகபரராய் இருக்கின்றனர்; மிருத்யுஞ்சயருடைய காரியத்தில் விளம்பனம்சிறிது ஏற்படினும் அதுகெடுதியை விளைவிக்காதன்றோ என்றனர். அதனைக் கேட்டு நந்தி சந்தோஷங்கொண்டு அவரை ஆலிங்கனம்செய்து, ஓ பிருங்கீ, நீர் கூறியது உண்மையேயென்று கூறி விமானம்விட்டிறங்கி பிருங்கியோடுகூட குமாரருகிற்சென்று சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துக் கைகட்டிநிற்க அப்போது ஷண்முகர் தேவதா சக்ரவர்த்தியாகிய மகாதேவருக்குச் சேவகராகிய ஓ தன்யர்களே, மகாதேவன் இப்போது யாதுசெய்கின்றனர்? ரத்னப்பிரபாலயம், அற்புதயோஜனை உன்னதமாகிய ஏகரத்னாலயம், பதினாயிர யோசனை உன்னதமாகிய நீலரத்ன மந்திரம், லக்ஷயோஜனை உன்னதமாகிய வஜ்ரரத்ன மண்டபம், முத்துமாளிகை, பத்மராகபவனம், சங்கயோஜனை யுன்னதமாகிய கோமேதக மணி மண்டபம், புஷ்பராகாலயம், மரகதாலயம் ஆகிய இவைகளில் இப்போது எங்கிருக்கின்றனர்? அல்லது

மகரந்த அருவிகளால் விநோதமாயும் பரிமளமாயுமுள்ள கோடிக் கணக்காகிய லிங்கங்களால் விளங்கும் தாழ்வரையிற்சென்று மகிழ்ந்திருக்கின்றனரா, அல்லது சந்திரமண்டல மண்டபம், மந்தார மலர் மண்டபம், அமுததீர்த்தம் முதலிய இவ்விடங்களில் எங்காவது இருக்கின்றனரா என்று வினவ அதனைக்கேட்டுப் பிருங்கியானவர் மிக்க விநயத்தோடு ஓ சுவாமி, இறைவன் மந்தாரமலர் மண்டபத்தில் வீற்றிருந்து என்னைக் கூப்பிட்டுத் தேவரீரிடம் அனுப்பினார். தேவரீரது பாதாரவிந்தம் என்னால் தரிசிக்கப்பட்டது. ஆதலின் யான் தன்யனாகின்றேன். மகாதேவரது பாதாரவிந்த தரிசனோற்சவம் சீக்கிரத்தில் கிடைக்கும்படி பிரயாணத்தில் யத்தனம் செய்யத்தக்கது, என்று சொல்லிக் குமாரரால் சொல்லப்படும் சிவகதாமுதத்தைச் சிரவணஞ் செய்துகொண்டிருந்தனர்.

இஃதிங்ஙனமாக, அம்பிகையானவர் தம்மைச்சேவித்து ஆனந்த பரவசராய் நிற்கும் ஜயை, விஜயைகளை நோக்கி, ஓ சகிகாள், மாரனையெரித்த மகேச்வரன் இயற்கையில் பேரானந்த ஸ்வரூபனாயினும் என்னை நினைந்து ஆனந்திப்பதில் உள்ள ஆச்சர்யத்தினைப் பார்த்தீர்களா என்றுசொல்ல அதற்கு விஜயையானவள், தாயே,பரமேச்வரனது உண்மை அவ்வாறாயினும் அவர் உன்னையே எப்போதுஞ் சிந்தித்துக்கொண்டிருக்கின்றனர். அவர் உனது சௌந்தர்யத்தை வியந்து அழகிய பொற்றாமரை மலரையும், முகத்தை நினைந்து களங்கத்தோடு கூடியிருப்பதால் சரத்கால சந்திரனையும், கண்களை எண்ணிக் கெண்டைமீன்களையும், அதரத்தை யுத்தேசித்துப் பவளக்கொடியையும், நாசியைநோக்கி எட் பூவையும், கூந்தலைப் பார்த்து வண்டுக்கூட்டங்களையும், தனதடத்தைச் சிந்தித்து மேருகிரியையும், நாபியை மதித்து மகரந்த நதிச்சுழலையும், தொடைகளையெண்ணிப் பொன்வாழைக் காண்டங்களையும், பாதாரவிந்தத்தை நினைந்து செந்தாமரை மலர்களையும், மார்பகத் தணிந்த ஹாரங்களை நினைந்து நக்ஷத்திர வரிசைகளையும், மொழியைக்கேட்டுக் குயிலின்பாட்டினையும் குறைகூறுகின்றனர். மலர்ந்தமலர் மெத்தைகளைப் பார்க்கின்றதில்லை! அமுதரசத்தை யருந்துகின்றதில்லை! மதிக்ந ராஜஹம்சங்களின் நடையினைக் காண்கின்றதுமில்லை; உனது இடையை யெண்ணிச்சிங்கத்தின் இடையையும் அணுவையும் நிந்திக்கின்றனர். உனது வியோகத்தால் மாரச்சுரம் மீறி அத்தாபத்தை நீக்கிக்கொள்வதன்பொருட்டுப் பனித்துளிமெத்தையின் மீதும், முல்லை மலர் மெத்தை,மந்தாரமலர்மெத்தை,சந்திரமண்டலமெத்தைஇவைகளின் மீதும்

உட்கார்ந்தும் தாபம் நீங்காது வாடுகின்றனர். ஓ கௌரீ, இறைவனது சரீரம் இயற்கையில் வெண்ணிறம் பெற்றதாயினும், இப்போது கற்பூரம் போல் வெளுத்தும் அடையாளம் தெரியாதிளைத்தும், எவ்வித உபசாரத்தையும் ஏற்றுக்கொள்ளாது வாட்டமுறுகின்றது. சந்திரமண்டல மண்டபங்களில் கௌரி விநோதமில்லையாகையால் இது விருதாவென்றும் அழகிய எந்தப்பொருளையும் கண்டமாத்திரத்தில் கிரிஜையில்லாததால், இவை வீண் என்றும் நிந்தித்துக் கிலேசமடைகின்றனர், ஓ தேவீ, இந்நிலைமையராயினும் நீ ஏது இறைவனை நினையாமலிருக்கின்றனை? எந்த இறைவனது பாதபீடத்தை நினைத்த மாத்திரத்தில் சகல அசுபங்களும் நாசமடைகின்றனவோ அப்படிப்பட்ட இறைவன் உனது தேகத்தையே நினைந்து நினைந்து வருந்த நீ அவரோடுகூடி விலாசஞ்செய்வதைச் சிறிதும் எண்ணாது இப்படியிருப்பது உசிதமோ? ஓ அன்னபூர்ணே! கல்யாணரூபனாகிய இந்து மௌளியை சீக்கிரம் வந்தடைவாயாக. அங்ஙனஞ்செய்யாவிடில் சுவர்ண ஷண்பகக்காந்தியைத்தொலையில் துரத்தும் உனது அங்கசோபை அவலமன்றோ? பூர்ணசந்திரவிம்பத்தைப் பழிக்கும் உனது முகமும் சந்திர மௌளியை நோக்கிப் புன்னகை செய்யாதிருக்குமாயின் என்னபயன்? நீலோத்பலதள காந்தியைப்பழிக்கும் உனது விழியானது சந்திசேகரரிடம் அனுராகத்தோடு செல்லாவிடில் என்னபயன்? நீலாசலம் போலும் வண்டுமலைபோலும், இருண்டுகாணப்படும் உனது அளகச்செருக்கானது திரிலோசனனது விலோசனங்களுக்குக் கோசரமாயினன்றோ அழகு பெறும்? சுமேருகிரியின் சிகரம்போல் உள்ள உனது குசமண்டலமானது ஜகதீசனது மார்பினில் சம்பந்தமடைந்தாலன்றோ அழகு பெற்றதாகும்? பவளக்கொடியையும், மதித்த ராஜஹம்சத்தின் நடையையும் பழிக்கின்ற உனது பாதபத்மமானது சந்திரகலாதரனருகிற் சென்று சௌந்தர்யத்தைப் பெறுதிருக்கின் அழகு பெறுமா? ஓ அம்பிகே, ஓ தீரே, மாரசரத்தைக் கௌரவப்படுத்திக்கொண்டிருக்கும் மகேசனை வந்தடைந்து உனது திவ்ய சௌந்தர்யத்தை விருத்தி செய்துகொள். இனி தாமதிக்காது புறப்படத்தக்கது. அவ்விறைவனது காந்தியோடு உனது காந்தி கலக்குமாயின் அப்போது அழகுபெறும். இல்லையாயின் உன் அங்க சௌந்தர்யம் வீணாகுமன்றோ? ஆதலால் விரைவிற் புறப்படுவாய்; உலகை அநுக்கிரகிப்பாய்; இறைவனை மகிழச்செய்வாய், என்தாயே! உனது தேககாந்தி சிறக்கட்டும் என்று பிரார்த்தித்தனள்.

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

உ

ஸ்ரீவிக்னேஸ்வராயநம:

# பத்தொன்பதாம் அத்தியாயம்.

### தண்டி வருகை.

இங்ஙனம் சிரவணாநந்ததாரையாரும் விஜயையினது வசனத்தைக்கேட்டு மகிழ்ந்து அம்பிகை இறைவனால் அருளப்பட்ட திவ்ய பட்டாடைகளையணிந்து, அழகாகக் தனது கேசத்தைவகிர்ந்து, திவ்யரத்னாபரணமணிந்து சந்திரபிம்பத்தைப் பழிக்கும் முககாந்தியை யுடையவளாய் மகிழ்ந்து இறைவனைப்பூசித்துப் பின்னர் ரத்ன பாத்திரங்களில் வைத்திருக்கும் திவ்ய சுவையுடைய அன்னங்களை அன்னையோடு புசித்து, பின்னர் விஜயையும் ஜயையும் உபசரித்துக் கொடுக்குந் திவ்ய தாம்பூலத்தைத் தரித்துத் தாம் உண்டும் பின்னர் எஞ்சியிருந்த சிவநிவேதன சேஷான்னத்தைக் கணத்தலைவர்களுக் கனுப்பினாள். கணத்தலைவர்க ளெல்லோரும் அதனைப்புசித்துப் பேரானந்தமுற்றிருந்தனர். உடனே தேவதுந்துபி முழங்கிற்று. சிவ மந்திரமுழுவதும் தேவதுந்துபியின் துவனி வியாபித்தது. மூவகை வாத்தியங்களும் முழங்கின. அவ்வினிய துவனியைச் சிவபெருமானும் செவிக்கமுதமாயுண்டு மகிழ்ந்தனர். உடனே சிவபெருமான் தண்டியென்னுங் கணநாதனைக் கூப்பிட்டு வாராய் தண்டீ! அற்புதமாகிய வாத்தியங்களின் முழக்கம் இவ்வண்டகடாகமெல்லாம் வியாபித்து எமது காதுக்கும் ஆபரணம்போல் விளங்குகின்றது. இதனைச் சற்று விசாரித்துப் பார்க்கு மிடத்து தேவி வருகின்றாள்போல் தோன்றுகின்றது. ஆதலின் நீ சென்று விசாரித்துத் தெரிவிப்பாயென்ன இவ்வாக்கியத்தைத் தண்டி கேட்டதும்அஞ்சலிபந்தஞ்செய்து உடனே ஓர் திவ்ய விமானத்தின்மேலேறிப் புறப்பட்டுத்தேவியின் கண்பார்வைக் கிடமாகுந் தூரத்தில் வரும்பொழுதே தேவியும் அவ் விமானத்தைக் கண்ணுற்று ஓ ஓ மிக்க வாச்சரியம்! இவ்வளவு அழகிய விமானம் யாருடையது? இங்கு ஏன் வருகின்றது! இதைப்பார்க்கப் பார்க்க மனம் நம்மை யறியாது மகிழ்கின்றதே.ஒருக்கால் என்னாதர் தாமனுப்பியதோ வென்று யோசித்து அருகிலிருந்த முருகக் கடவுளை நோக்கி ஓகுழந்தாய் குமரா! இப்பொழுது வருகின்ற விமானம் யாருடையது? இது ஹரருடையதே என்று தோன்றுகின்றது. நீ சென்று விசாரித்துச் சீக்கிரமாகவந்து சேர்வாய் என்று கூறவே

உடனே குமாரரும் அவ்வாறு சென்று அதனைப் பார்க்கும்பொழுது அது ஹாருடையது. ஹாருடைய துவஜம் காணப்படுகின்றமையால் அங்ஙனந்தோன்றுகின்றது என்று தேவியினிடங் கூறினர். இதற்குள் தண்டியும் விமானத்தினின்றும் இறங்கிவந்து திருவடியில் வீழ்ந்து நமஸ்கரித்து ஓஅன்னையே, இனி இங்கு தாமதிப்பது உசிதமல்ல, விமானந்தயாராயிருக்கின்றது. அதன் மீதுள்ள திவ்யாசனத்தையடையவேண்டும் என்று தண்டி கூறியதைக்கேட்டு மிக்க ஆனந்தத்துடன் தேவி விமானத்தினழகைப் பார்த்துச் சந்தோஷித்து ஜயை விஜையை எனும் தேவிகளுடன் கூட அவ்விமானத்தின் மீதேறி வுட்காரவே உருத்திர கணிகா கணங்கள் அற்புதமாய்க் கானஞ்செய்யக் கணத்தலைவர்களெல்லோரும் மின்னற்கொடிபோல் விளங்கும் பிரம்புகளைக் கையிலெடுத்தசைக்க மந்தமாருதமானது மலர்களின் இனியதேனை வாறிவீச உல்லாசமாய்ச் செல்லும் அப்புட்பவிமானத்தில் வீற்றிருந்து தேவி அற்புதமாகிய ரத்தினப்படித்துறைகளால் விளங்கும் மிக விஸ்தாரமாகிய தாமரைத் தடாகங்களையும் முன்னெங்குங்காணுத அழகிய அன்னப்பேட்டின் கூட்டங்களையும் கிளிப்பிள்ளைகளையும் குயிலினங்களையும் சகோரமென்னும் நிலாமொக்குப்பறவைகளையும் மலர்களிலுள்ள தேனையுண்டு ரீங்காரஞ்செய்யும் வண்டுகளையும் அங்குள்ள மண்டபங்கள் தோறும் தாமே கானநாதவொலிசெய்யும் கோடிக்கணக்காகிய உருத்திர வீணைகளையும் பார்த்து அம்பிகை மிக்க வாச்சரியமடைந்தனள். எங்கும் நிகழும் புஷ்பவருக்ஷங்களையும் கண்டு தேவி பரமானந்த முற்றிருந்தனள். அப்படி யானந்தபரவசையாய் அனுக்ரஹபரையாய்க் கருணைமேனியராய்விளங்குங் காலகாலாந்தகரது பிரியையாகிய தேவியைக் கண்ணுற்றுக் கணத்தலைவர்கூட்டங்களெல்லாம் பக்தி பரவசராய் (ஜயாம்ப ஜயஶர்வாணி ஜயகௌரி சிவப்பிரியே, ஜயான்னபூர்ணே விமலே காலகாலாந்தகப்பிரியே?ஜயஶைலஸுதே தேவி கமலாமலலோசநே, ஜயா மராங்கனாராத்யே ஜயகல்யாணிஶாம்பவி,ஜயமங்கள ஸர்வாங்கே மங்களே ஸர்வமங்களே, ஜயமிருத்யுஞ்ஜயார்த்தாங்க துங்கஸிஹ்மாஸனாஶ்ரயே, ஜய பக்த ஜயானந்த ப்ரதான நியதே சிவே, ஜயதுர்க்கே விசாலாக்ஷி ஜயத்ரிபுரபைரவி, ஜயவாகீஶ்வரிப் ராஜ்ஞேமங்களே கௌரிசண்டிகே, சித்ரகண்டேஜயாநங்க விஜயத்வஜமாலிகெ, ஜ்யஸ்ரீ விலஸத்கௌரி ஸித்தேஶ்வரி தமோநமஃ நமஸ்தேஸங்கடாகவுரி சீதளாகவுரிதேநமஃ பந்நீதேவி நமஸ்துப்யம் லளிதேவிஶ்வபாஹுகெ, கந்தளாம்ப நமஸ்துப்யம் நமஸ்தேப்ரம

ராம்பிகே, ஜ்ஞானப்ரஸூநாம்பநமோநமஸ்தே, நமோ நமஸ்தே சிவகாம சுந்தரீ நமோ நமஸ்தே ஸ்த்வருணசமேச்வரீ, நமோமஹா கௌரி நமோநமஸ்தே)

ஓ கிரிஜே! உனது சரணாரவிந்தங்களையே சரணமடைகின்றோம். நீ எங்களைக் காத்தருளல் வேண்டும். ஜகதீச்வரனுக்கு எங்களிடங் கருணையுண்டாகும்படி நீ செய்தருளவேண்டும். உன்னையல்லால் வேறே யாரானுங் கதியுண்டா! ஓ தேவி! நாங்கள் செய்த அபராதத்தை நீ பொறுத்தருளவேண்டும். அபராதஞ்செய்த பாலர்களை அன்னையானவள் தயைகொண்டு ஆதரிப்பதுபோல நீங்களும் எங்களது பிழையைப் பொறுத்தருளல்வேண்டும். ஓ தேவி! வேறு யாதாவது கதி எங்களுக்குண்டோ! உனது சரணாரவிந்தத்தையும் அல்லது சிவ சரணாரவிந்தத்தையும் விடுத்து வேறு யாரையாவது சரணமடைகின்றோமா! அந்தகவைரியினது துவாரத்தினின்றுகொண்டு யாதும் பயமின்றிச் சுகமாயிருக்கும்படி எங்களிடம் நீ யருள்புரியவேண்டும். ஓ அம்பிகே! உனது பாதாரவிந்தத்தையே சரணமடைந்து வேண்டிக்கொள்ளும் எங்களிடம் கருணை கூரும்படி நீ சிவனோடு ஏகாந்தமாயிருக்கும்போது அவ்விறைவனுக்கு அறிவுறுத்தவேண்டும். நீ சிவனுருக்குப் பாதிதேகமாயிருப்பவளாதலால் நீ கருணை கூர்ந்தால் நாங்கள் சிவகருணையைப் பெற்றுச் சுகமடைவோம். ஆதலால், நீ திருவருளைப் புரிந்து எங்களையானந்தமுடையோர்களாய்ச் செய்யவேண்டும். ஓ தேவி! இதுவே எங்களுடைய விண்ணப்பம். இதனை நீ மறவாதிருந்தால் உமாசகாயன் சகாயராவர் என்பதில் சந்தேகமில்லை. ஓ தேவி! இதனைச் செய்வதில் உனக்கு யாதும் சிரமமில்லை ஆதலால் எங்களைக் காத்தருளல் வேண்டுமென்றிங்ஙனம் கணதிபர்கள் பரமபக்தியுடன் பிரார்த்தித்துக் கதறுதலைக்கேட்டுத்தேவியும் பரமானந்தமுற்றுச் சங்கரனை நினைந்து அதனு லுண்டாகிய வானந்தத்தால் புளகித்திருந்தனள் இதற்குள் விமானம் அற்புதமாகிய ரத்ன சிம்மாசனத்தால் விளங்குவதும் திவ்யதேஜஸால் ஜ்வலிப்பதுமான ஓர்பெரிய மாளிகையருகிற்சென்றது. அம்பிகை விமானத்தைவிட்டிறங்கி அந்தத்திவ்விய சிம்மாசனத்தின்மீது சற்றுஉட்கார்ந்துகொண்டாள். அப்பொழுது பரமேச்வரனும் அம்மண்டபத்தருகில் ஆகாயத்தில் விளங்கும் விமானத்தையும் எண்ணிறந்த கோடிக் கணக்காகிய மின்னற் கூட்டங்களின் காந்திபோன்ற தேவியினுடைய திருமேனியின் ஒளிப்பெருக்

கா னுண்டாகிய பிரகாசத்தையுங் கண்ணுற்றுச் சங்கரர் கவுரி சமீபத்தில் வந்துவிட்டாள் என்றறிந்து கண்கொட்டாது அவ்விடத்தையே பார்த்துக்கொண்டு கவலையற்றவராய் பூர்வம் தேவியோடு தாம் சுகமாயிருந்ததை நினைத்தனர். அன்றியும் தேவி இப்போது நம்மிடம் வரப்போகின்றாள். திவ்ய சௌந்தரியமே உருக்கொண்டுவந்த திவ்ய திருமேனியால் நம்முபந்திர ஆலிங்கனஞ்செய்து நமது மனக்கோறிக்கையை நிறைவேற்றி இன்புறச்செய்வதற்கு தயாசாகரமாகிய தேவி வந்தனள். (இனி நம்மைப் பிரேமையுடன் தழுவி மகிழ்ந்திருக்கும் அவளது திருமுகத் தழகைப் பார்ப்போம்.) அவளது இனிய மொழியையுங் கேட்போம். அழகிய கூந்தலில் கமழும் நறுமணத்தைக் கவர்ந்து மகிழ்வோம். திவ்ய ஹம்ச தூளிகா மஞ்சத்தில் இருவரும் ஏறி மனமகிழ்ச்சியோடிருப்போம் என்று சிருங்கார சம்பந்தமாகிய பற்பல லீலாவினோதங்களை நினைந்து தமது சகல மகிமைகளும் இப்பொழுதுதான் பயன்படுவனவென்றெண்ணிப் பவானியை நினைத்தவண்ணமாக விருந்தார்.

பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ
ஸ்கந்தாயநம:

## இருபதாம் அத்தியாயம்.

### சிவகேளி விலாசம்.

வியாசர். அநேககாலமாய் தேவி வருவாளே வருவாளேயென்று எதிர்பார்த்திருக்கும் தேவரது கோறிக்கை நிறைவேறியதுபோல் விமான ரத்னகாந்திகளும் பரமேஸ்வரனது கண்களுக்கருகில் நெருங்கிவந்தன. ஜயத்வனி தூரியம் துந்துபி இவைகளின் துவனிகளும் பரமேஸ்வரரது செவிகளுக்கு நன்றாய் விஷயமாயின. மின்னற் கூட்டத்தின் ஒளிபோன்ற தேவியின் சரீர காந்தியும் பரமேஸ்வரனால் நன்றாய்க் காணப்பட்டது. சிரவண மங்களமாகிய தேவியின் தோத்திர வாக்கியங்களும் சிவபெருமான்செவிக் கமுதம்போலாயன. திவ்ய சவுந்தர்ய வுருவாகிய தேவியையும் பார்த்துப் பரமேஸ்வரர் பரமானந்த மடைந்தனர். நம்மால் இதுகாறுஞ் சிந்திக்கப்பட்டது யாதோ அதனைப்பெற்றோம். இனி நமக்குக்

கிடைப்பதற் கரிதானவஸ்து யாதுமில்லை என்று நினைந்து நினைந்து மகிழ்ந்து பரமேஸ்வரன் பாலனுக்கு நவநீதங் கிடைத்தாற்போலச் சந்தோஷமடைந்தார். பேரானந்தத்துடன் கிரிகன்னிகையையுங் கண்டனர். அன்னமின்றிப் பலநாள்களாய்ப் பசியால் வாட்டமுற்றோனுக்குத் திவ்யான்னங் கிடைத்தாற்போலும் அபுத்திரவானுக்கு லக்ஷணவானாகிய சத்புத்திர னுதித்தாற்போலவும் மாம்பூவைக்கண்ட குயில்போலவும் பலகாலும் வறுமையாளனா யிருப்பவனுக்கு மஹாராஜ்யஞ் கிடைத்தாற்போலும் பரமேஸ்வரன் கவுரியைக் கண்டு பேரானந்தமுற்றனர். பின்னர் சிவபெருமானது அரண்மனைப் பிராகாரத்தைக்கிரீந்திர கன்யையாகிய தேவிவந்தடையவே புஷ்பவருஷமுண்டாயிற்று. சகல வாத்தியங்களு முழங்கின. கானவொலிகள் எங்கும் பரவின. அப்பொழுது தேவி வருவாள்; அவள் பார்த்து மகிழவேண்டுமென்றெண்ணிப் பரமேஸ்வரன் சிருட்டித்த அபூர்வமாகிய நகரம் பரமசோபனமாயும் மனதைக் கவர்வதும் சகல உற்சவங்களுடன் கூடியதும் பற்பல ரத்னமலர்த் தோரணங்களுடனும் ரத்னமயமான துவாரங்களுடனும்விளங்கிக்கொண்டிருந்தது. தேவி விமானத்தைவிட்டுச் சந்தோஷத்துடன் கீழிறங்கி யவ்விடம் வரவே கணக்கிறந்தகோடிக்கணக்காய் திவ்யநீராஞ்சனஞ் செய்யப்பட்டது. திவ்ய நாட்டியம் நடந்தது. அதனால் தேவி பரமானந்தத்துடன் சங்கரரிருக்கும் கிருகத்துவாரத்தில் ஓர் கணப்போது நின்று சிவனையே சித்தத்தில் சிந்தித்துப் பிறகு சிவபெருமானைப் பார்ப்பதில் கொஞ்சம் நாணமுற்றவளாய்த் தலைகுனிந்து விஜயையினுடைய கையைப்பற்றிக்கொண்டு மெல்லமெல்லச் சிவபெருமானது லீலாக்கிருகத்திற் பிரவேசிக்கவே பேரானந்தத்துடன் சிவபெருமானால் பார்க்கப்பட்டு யாமே தன்யையாகின்றோம், நமது ஆனந்தமே ஆனந்தம் என்றெண்ணிச் சந்திர கலாதரனது புன்னகைகொண்டு விளங்கும் திருமுகத்தைத் தானும் மந்தஹாசத்துடன் கண்டு அவரருகிற் சென்று பரமானந்தமடைந்து நின்றனள். அப்படிப் பரமானந்தத்துடன் நிற்குந் தேவியைக் கண்டு ஜயையும் விஜயையும் பேரானந்தக் கடலில் மூழ்கினவர்களாய் அப்பாற் சென்றார்கள்.

பிறகு சங்கரனது அழகிய மடிக்கு அலங்காரமாயிருந்து மின்னற்கொடி மேகமண்டலத்தில் விளங்குவதுபோல் கவுரி ஜ்வலித்துக் கொண்டிருந்தனள். சிவபெருமான் தமதழகிய மடிமீது விளங்கும் பவானியை இறுகத்தழுவி முத்தமிட்டு சிருங்கார கேளிவிலாசத்தால்

அற்புதானந்தக்கடலில் மூழ்கியிருந்தனர். தேவியும் அவ்வாறு பரமானந்தமுற்றிருந்தனள். குந்தமுதலிய மலர்களில் நின்று பெருகுந் தேன்களுக்கு மயங்கி ரீங்காரஞ்செய்துகொண்டு வியாபித்திருக்கும் வண்டினங்களையுடையதாய், நக்ஷத்திரங்களாலும் பற்பல சந்திர மண்டலங்களாலும் வியாபிக்கப்பட்டு விளங்கும் சிவபொருமானது படுக்கையானது பவானியுடன் கூடப்பெற்று அவளது திவ்விய லீலா விசேஷங்களால் பரமேஶ்வரனுக்குப் பரமானந்தஹேதுவாய் விளங்கியது. அம்பிகையும் இடைவிடாது பரமேஶ்வரனை ஆலிங்கனஞ்செய்து கோடைகாலத்தில் தாகத்தால் மிக்க பீடையடைந்து அலைந்துதிரிவோன் திவ்யமான தாமரைத் தடாகத்தைக்கண்ணுற்று மிக்க ஆவலாய் அதனை விடாதிருப்பதுபோல கிரிஜையும் பரமேஶ்வரனது திவ்யசங்கத்தை விடாயலிருந்தனள். உலகத்திலினியது கவுரியே! அதனிலும் இனியது பரமேஶ்வரனது கேளிவிலாசமே! இவ்வண்ணம் பரம மதுரமாகிய பரமேஶ்வரனது சிருங்கார லீலாவிலாசம் பரமபாக்கியமாதலால் அதனைவிடுத்து ஓர் கணப்போதாவதிருத்தல்கூடாது. இங்ஙன மிருப்போமானால் உலகமெல்லாஞ் சுகிக்கும். துக்கங்கள் தொலைக, குறைகள் நீங்குக, அப்பிரியம் தூரத்திலகலுக, விபத்துக்கள் விலகுக என்று நினைத்துக் கவுரி சங்கராலிங்கபரையாயினள். இப்படி லோகானுக்ரக நிமித்தமாயும் பேராவலோடும் கிரிஜை சிவாலிங்கனஞ் செய்யுங்காலத்தில் திருமேனிவிம்மிதத்தால் அவளது ஆரம் அங்கதம் ஒட்டியாணம் கங்கணம் முதலிய திவ்யாபரணங்கள் தெறித்துச் சிதறின. தேவி அஷ்டமூர்த்தியின் லீலாவினோதத்தால் புஷ்டியடைந்தனள். கிரீடையால் ஜ்வலிக்கும் அழகிய கண்டத்திலுள்ள கஸ்தூரிகைப்பூச்சும் பச்சைக் கர்ப்பூரம் அகருகேசரம் முதலிய சந்தனாலங்காரமும் வியர்வைத் தாரையோடு கூட வெளிப்பட்டு அவளது அழகிய நாபி எனும் சரசில் விழுந்து பரிமளம் பரவியது. பன்னெடுங்காலம் பரசிவ சிருங்கார விலாசானுபவத்தால் தேவிக்குப்பல்லாயிரம் பிரஹ்மகல்பம் க்ஷணகாலம் போற் சென்றது. அமுதத்திலும் அமுதமாயும் திவ்யலீலாநிலையமாயும் நிராமயமாயும் உள்ள சிவனது அற்புதமாகிய திவ்விய திருமேனியைத் தனது சந்தோஷ சாதனமாய் எண்ணி யனுபவித்தனள். பலபல கற்பகாலம் நாதனது பிரிவாற்றாமையால் நிகழ்ந்த தேவியின் தேக மெலிவானது மிக்க மெலிவடைந்தது. தேவியும் சிவனும் அவ்வாறு பரமானந்த வலைமீது நீந்தி விளையாடி யிருவரும் பூரித்து ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டு நம்மிருவர் தேக

மும் சபலமாயினவென்றெண்ணினவர்களாய் அந்த திவ்ய லீலா விலாசத்தினின்றும் அகலாதவர்களாய்ப் பன்னெடுங்காலமிருந்தனர். பின்னர் பரமேஸ்வரன் ஒரே ரத்னத்தினுல் நிர்மிக்கப்பட்டு ஓர் சங்கயோசனையுயரமும் அதற்குரிய நீளமும் அகலமும் உடையதும் அநந்தகோடி சந்திரமண்டலங்களால் சூழப்பெற்றதும் எண்ணிறந்த மின்னற்கொடிகளால் ஜ்வலிக்கின்றதும் நக்ஷத்திர வரிசைகளால் சித்திரம்போல் விளங்குவதும் குந்தம் மந்தாரம் தாமரை முதலிய மலர்களால் இயற்றப்பட்ட சோபானங்களால் ஜ்வலிப்பதும் அமுத வருவிகளின் அலைவரிசைகளால் அழகுவாய்ந்ததும் சந்திர மண்டல மேல்விதானங்களுடையதும் மந்தார மலர்த்தேனின் திவலைகளால் வியாபிக்கப்பெற்றதும் செந்தாழம்பூவின் பொடிகளை வாரியிறைக்கும் மந்தமாருதத்தால் சுந்தரமாயுள்ளதும் அற்புத விலாசங்களுக்குரிய விடமாயுமுள்ள ஓரழகிய மண்டபத்தை உமாசகாயனுகிய இறைவன் நினைத்தனர். உடனே உமையோடுகூட அவ்விடம் அடைந்தனர். அம்மண்டபத்தில் கோடியோசனையுயரமும் நீளவகலமும் வாய்ந்ததும் ரத்ன சிருங்கத்தால் விளங்குவதும் எண்ணிறந்த திவ்ய ரத்னங்களின் ஒளிகளால் ஜ்வலிக்கின்றதும் எண்ணிறந்த உருத்திரவீணைகளின் இனிய நாதங்களால் வியாபிக்கப்பெற்றதுமாகிய ஓர் திவ்ய சிம்மாசனத்தைக் கண்டனர். தேவி அச்சிம்மாசனத்தைப்பார்த்து வியந்து சிவனை நோக்கி ஓ நாதா ! ஈது மிக்க அற்புதமாயிருக்கின்றதே ! இதற்கிணையாய் எவ்விதத்திலும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை, இதற் கிணையாய் எவ்வுலகத்திலாவது உளதா? ஓசம்போ! இப்படிப்பட்ட கயிலாயத்தில் எங்குமில்லை. இதன் மகிமை உங்களாலும் அறியமுடியாததா யிருக்குமென்று தோன்றுகின்றது. இங்கு மற்றெதற்கும் இடமின்றி சிவநாமமொன்றிற்கே யிடமாயுள்ளது. எனது கண்களை இவ்விடம் கவர்ந்துகொண்டது, ஓ திரிநேத்திரா, ஓர் கல்பம்வரையில் நாமிங்கிருக்க விருப்பம் மிக்குடையவளாக விருக்கின்றேன் என்று கூறிச் சிவனேடுகூடத் தேவி அம்மண்டபத்தை யடைந்தனள். அதனைக்கண்டு உல்லாசமாய்ச் சற்றிளைப்பாறிப் பின்னர் பரமானந்த ரசானுபவத்துடனிருந்தனர். அப்படி யிருக்கும்பொழுது தேவி திவ்யானந்த ரசசாகரனு யுள்ள சங்கரனை யாலிங்கனஞ்செய்து அதனுல் பரவசையாய்த் தன்னையு மறந்தனள். வஸ்திரம் ஓர்பக்கங் குலையத் தலைமுடிச் சொருக்கவிழக் கையொருபக்கமிருக்கத் திவ்ய லீலாபரவசர்களாயிருக்கு மவர்கட்குக் கற்பகோடிகள் அரைக்கணம்போற் சென்

றன. பின்னரும் அங்குள்ள விலாசமான சையைகளில் ரமிக்க விரும்பி அவ்விருவர்களும் ஒவ்வொரு அம்சதூளிகையினும் ரமித்துக்கொண்டு சிவபெருமானது ஆணைபால் அடிக்கடி வரும் திவ்யாபரணமுதலிய ஆபரணங்களையும் பெரிதாயெண்ணாமல் கவுரி சிவபெருமானது திவ்யாங்கசங்கமே நமக்குத் திவ்ய மங்களாபரணமாம் என்றும் சிவபெருமானது திவ்யாலிங்கனத்திற்கு இவைகள் இடையூருகின்றன வென்றெண்ணி ஹாரம் கங்கணம் நாசிகாபரணம் ஒட்டியாணம் முதலிய பர்பல வாபரணங்களை ஆலிங்கனத்திற் கிடையூருகாமலிருக்கும்படி கழற்றிவைத்தும் பரமானந்த பரவசராயிருந்தனர்கள்.

இருபதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

குஹாயநம:

# இருபத்தோராம் அத்தியாயம்.

## இறைவன் குமாரர்களுக் கருளுதல்.

பின்னர் கவுரியும் சிவனும் கேளிவிலாசத்தினின்றும் ஒழிவடைந்து வெளிநோக்கிய மனமுடையோராய் கலவிநீங்கித் தனித்தனி வீற்றிருந்தார்கள். சற்றுநேரங் கழித்தபிறகு கவுரியும் சங்கரரும் குமாரனை நினைத்தனர். உடனே குமாரர் கணபதியுடன் வந்து சுந்தரத்திருமுகனான சங்கரரைத் தரிசித்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அஞ்சலிசெய்து நின்று சகல சாரசரங்களுக்கும் தாய்தந்தையர்களாகிய பார்வதி பரமேஶ்வரர்களைத் தோத்திரஞ்செய்வாராயினார்.

நமோநமஸ்தே கிரிஶாயதுப்யம் நமோநமஸ்தே கிரிகன்யகாயை
நமோநமஸ்தே விருஷபத்வஜாய சிம்மத்வஜாயைச நமோநமஸ்தே
நமோநமோ பூதிவிபூஷணாய நமோநமஶ் சந்தனபூஷிதாயை
நமோநம: பாலவிலோசனாய நமோநம: பத்மவிலோசனாயை
திரிசூலஹஸ்தாய நமோநமஸ்தே நமோநம: பத்மசைத்கராயை
நமோநமோ திக்வஸநாயதுப்யம் சித்ராம்பராயைச நமோநமஸ்தே

சந்திராவதம்ஸாய நமோநமஸ்தே நமோஸ்து சந்திராபரணான்விதா
[யை
நமஸ்ஸுவர்ணாங்கித குண்டலாய் நமோஸ்து ரத்னோஜ்வகுண்டலா
நமோஸ்துதாராக்ருஹமாலிகாயநமோஸ்துஹாரான்விதகந்தராயை
ஸுவர்ணவர்ணாய நமோநமஸ்தே நமஸ்ஸுவர்ணாதிக சுந்தராயை
நமோநமஸ்தே திரிபுராந்தகாய நமோநமஸ்தே மதுநாசகாயை
நமோநமஸ்த்வந்தகஸூதனாய நமோநமஃ கைடபநாசனாயை
நமோநமோஜ்ஞானமயாயநித்யம் நமச்சிதானந்த கனப்ரதாயை
நமோஜடாஜூட விராஜிதாய நமோஸ்து வேணீபணிமண்டிதாயை
நமோஸ்து பில்வாம்ரபலார்ச்சிதாய நமோஸ்து குந்தப்பிரஸவார்சி
தாயை
நமோஜகன்மண்டல மண்டிதாய நமோமணிப்பிராஜித மண்டனாயை
நமோஸ்து வேதாந்த கணஸ்துதாய நமோஸ்து விச்வேச்வரஸம்ஸ்
துதாயை
நமோஸ்து விச்வாமரபூஜிதாய நமோஸ்துபத்மார்ச்சிதபாதுகாயை
நமச்சிவாலிங்கித விக்ரஹாய நமச்சிவாலிங்கித விக்ரஹாயை
நமோநமஸ்தெ ஜங்காயநித்யம் நமோநமஸ்தே கிரிஜேஜனன்யை
நமோநமோநங்கஹராயநித்யம் நமோநமோ அநங்கவிவர்த்தகாயை
நமோநமஸ்தேஸ்துவிஷாசனாயநமோநமஸ்தேஸ்துஸுதாசனாயை
நமோநமஸ்தேஸ்துமஹேச்வராயஸ்ரீசண்டிகே தேவிநமோநமஸ்தே

இவ்வாறு மஹாதேவரையும் பரமானந்தகந்தளையாகிய அம்பிகையையும் தோத்திரஞ்செய்து நிற்கும் லம்போதர குமாரர்களை அவ்விருவருந் தழுவிப் பரமசந்தோஷமுடையவர்களாய் ஓ குமாரா! ஓ லம்போதரா! உங்களுக்கு வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள் வீர்களாக என்று கூறவும், அவ்வசனத்தைக் கேட்டு அவ்விருவரும் பிரார்த்திப்பாராயினர். ஓ உமாகாந்தா ! எனக்குத் தேவரீரது பாதாரவிந்தத்தையே எப்பொழுதும் அர்ச்சிப்பதிலும் தேவரீரது நாமங்களைச் சிரவணஞ்செய்வதிலும் பஞ்சாக்ஷரத்தைஜபித்தலிலும் பரமமங்களப்பிரதமாகிய சிவலிங்கத்திலும் விபூதியிலும் உருத்திராக்ஷ மாலைகளிலும் சிவதரிசனத்திலும் சிவப்பிரசாதங்களிலுமே எனது புத்தி குடிகொண்டிருக்கவேண்டும். ஓ சுவாமி ! அங்கங்களுடன் ஓதுவதினாலும் பற்பல தவங்களாலும் யோகங்களாலும் துலாதானசமூகங்களாலும் பூமண்டலங்களைச் சுற்றுவதனாலும் மற்றுமுள்ள தர்மராசிகளாலும் ஆகவேண்டியது யாதுமில்லை. ஓ பாலநேத்ரா ! எப்பொழுதும் உங்களைவிட்டகலாத சித்தவிர்த்தியொன்

றையே அருளுமாறுவேண்டுகின்றேன். ஓ மிருத்தியுஞ்சய, போகத்திற்கு அங்கங்களாகிய மகத்தாகிய ராஜ்ய பதவிகளும் சகல நிதிகளும் நஸ்வரங்களே! சகல துக்கத்தையும் அகற்றுவோனும் காலாந்தகனுமாகிய தேவரீரிடம் அசஞ்சலமாகிய பக்தி யிருக்கவேண்டும் என்பதொன்றையே வேண்டுகின்றேன். கோக்ஷீரத்திலும் கிருதம் சர்க்கரை முதலிய மதுரத்திரவியங்களிலும் ஜிஹ்வையானது எப்படி யவாவுடையதாயிருக்கின்றதோ அப்படியே உமாபதே,சிவா, மஹாதேவா என்பதாதி நாமவமுதத்தில் எனது ஜிஹ்வை ஆவலுடையதாயிருக்கும்படியும் சித்தமானது எப்பொழுதும் தேவரீரது பாதாரவிந்தத்திலேயே வண்டுப்போலாகும்படிக்கும் வேண்டுகின்றேன். இஃதே எனக்கு வேண்டியவரம். ஓ ஈஸ்வரா! பிரிவாற்றாமையுற்ற நாயகனை நாயகியும் சூரியனைத் தாமரையும் சந்திரனைக் குமுதமும் அமுதத்தை நரனும் ராஜ்யத்தை ராஜாதமனும் செவியைச் செவிடனும் கண்களை அந்தகனும் நொண்டி காலூன்றிநடப்பதனையும் ஊமை வாக்ஜரியையும் எவ்விதம் பேராவலுடன் விரும்புகின்றனரோ, அதுபோல தேவரீரது பாதாரவிந்தத்தை விரும்பும் எனது மனம் விருப்பமாத்திரத்தோடு போகாமல் அதனையடைந்து மகிழ வேண்டுமென்று வேண்டுகின்றேன். பாலைவனத்திற் செல்லுவோன் சலத்தையும் குயில் வசந்தகாலத்தையும் மலடி புத்திரனையும் பெரியோர் பாவநாசத்தையும் நிலாமொக்குக்குருவி சந்திரனையும் சாதகபக்ஷி மேகத்தையும் புரம் சிவோபாசகரையும் விரும்புவதுபோல எனது மனமும் இந்துபூஷணனாகிய தேவரீரை விரும்புகின்றது. மலர்த்தேனையேபுசிக்கும் வண்டெப்படியதனையேவிரும்புகின்றதோ, காமுகன் மிக்க சுந்தரமான காமினியை விரும்புகின்றானோ, யாதுமற்ற தரித்திரன் தனத்தை எவ்வாறு விரும்புகின்றானோ, சிசு முலைப்பாலை எப்படி விரும்புகின்றதோ அங்குரம் மழையை எப்படிவிரும்புகின்றதோஅப்படிப்போல உமது நாமசங்கீர்த்தனத்தை விரும்பும் என் மனமானது அதனைப்பெற்று பரமானந்தமுடையதாகுக. ஓ சுவாமி! மற்றெதனையும் யான் விரும்புவதில்லை ஓ ஸ்வாமி! தேவரீரது சரணாரவிந்தத்தை இப்பொழுது தரிசிக்கின்றேன். இனி எக்காலந் தேவரீர்கள் தரிசனந் தருவீர்கள். ஓ தேவா, கருணைக்கடலே, தேவரீரது பாதாரவிந்தத்தைத் தரிசிக்காவிடில் தீர்த்தத்தைக் கூட எடுக்கமாட்டேன். ஓ பகவனே! காலை மாலைகளில் தேவரீரைத் தரிசிக்கும்படி எனக்கு ஆஜ்ஞாபிக்கப் பிரார்த்திக்கின்றேன். இதனினும் சிறந்தவரன் யாதுங்காண்கிலேன். ஓ சர்வனே! தேவரீ

ரது சரணாரவிந்தங்களிலும் எனது அன்னையின் சரணாரவிந்தங்களி லும் சபதஞ்செய்து இஃது கூறுகின்றேன், மற்றியாதும் என்னால் விரும்பப்படுவதில்லை. ஓ ஸ்வாமி, அருள் புரியவேண்டும் என்று கூறும் குமாரரது வேண்டுகோளைக் கேட்டதும் அவரை யாலிங்க னஞ்செய்து ஏகனேஸ்வரா, ஓ குமாரா! உங்களைக்காட்டிலும் பிரீதி கரமாகிய பொருள் எமக்கு வேறுயாதானுமுளதோ? நீவிரிரு வரும் எம் மிருவரைவிட் டகலாதிருங்கள். இஃதே எமக்குப்பிரியம் என்று கூறிச் சிவபெருமான் குமாரர் கணபதியாகிய இருவர்க்கும் ஆச்சரியமாகிய ஆடையாபரணங்களை யளித்துச் சந்தோஷங்கொ ண்டு அவர்களை வாரியணைத்து முத்தமிட்டு ஓகுமாரா,கணபதியுடன் கூட நீ நந்திகேசாதி சகலருக்கும் அற்புதமாகிய ஆடையாபரணங்க ளைக்கொடுத்துச் சந்தோஷப்படுத்துவாயாக என்றுஞ்ஞாபனஞ்செய் தனர், உடனே பார்வதி பரமேஸ்வரர்களை நமஸ்கரித்து அவ்விருவ ரும் வெளியேசென்று இரத்னமயமாகியஓரழகிய மாளிகையையடை ந்து அங்குள்ள சிங்காதனத்தின்மீது உட்கார்ந்துகொண்டனர். அது கண்டு நந்தீசர் முதலிய சிவகணங்களெல்லோரும் குமாரர்கள் வீற் றிருக்கும் மாளிகை வந்து அச்சந்நிதியில் சாஷ்டாங்கமாக நமஸ்க ரித்து அஞ்சலிசெய்து துதித்தனர். குமாரக்கடவுளும் அக்கணங்க ளிடம் கருணைகூர்ந்து அந்த க்ஷணத்திலேயே திவ்யாபரணங்களையும் அற்புதமான பட்டாடைகளையும் திவ்யான்ன வகைகளையும் மலைமலை யாய் எதிரில் தோன்றும்படித் திருவுளங்கொண்டனர். அப்படியே ஆச்சரியகரமாயும் மகா பர்வதம்போலும் எதிரில் தோன்றிய அவ் வஸ்திராபரண அன்னவகைகளை அவரவரின் யோக்கியதையின் படி சகலருக்குங் கொடுத்துதவ அதனைப்பெற்றுக் கணங்கள் பரமா னந்தத்துட னிருந்தனர். சர்வேசனாகிய இறைவன் இவ்வாறு அவ ரவர்க்குத் தக்கபடி அற்புதமாகிய திவ்யமாளிகையுங் கொடுத்து அங்கு சிவத்தியான பராயணர்களாயிருங்கள் என்றுரைத்தருளக் கணங்களும் தண்டனிட்டு வணங்கிச்சென்று தத்தம் மாளிகையை யடைந்து சிவத்தியான பாராயணர்களா யிருந்தனர். பின்னர் குமா ரரும் தேவசேனையுடன்கூடச் சிவாஞ்ஞையின்படி அவருக்குச் சமீ பத்திலுள்ள ஓர் திவ்யரத்ன மாளிகையில் சுகமாய் வீற்றிருந்து பர மானந்த மெய்தினர். கணபதியும் ஸ்வரை, சரஸை என்பவர்க ளுடன்கூட ஓர் இரத்னமாளிகையடைந்து சுகமாயிருந்தனர். இஃ திங்ஙனமிருக்க, அம்பிகை ஜயை விஜயை என்னும் இருவரையும் அருகிலழைத்து அவ்விருவர்களுக்கும் முன்னர் திவ்ய வஸ்திராபர

ணங்களை யளித்துப் பின்னர் நாட்டிய மாதர்களையும் அப்படியே சந்தோஷப்படுத்தினாள். பின்னர் மஹாதேவன் அம்பிகையைக் கூட்டிக்கொண்டு உயர்ந்த ஓர் திவ்ய மலர்மாளிகையை யடைந்தனர். அம்பிகையும் அற்புதமாகிய திவ்யான்னங்களைச் சமைத்துப் பரிகலத்திற் பரிமாறவே இறைவன் பேராவலுடன் அவைகளை யுண்டருளி அமுத கனிகளையு முண்டு பின்னர் தமதாஞ்ஞையின்படித் திவ்ய தாழைமலர்ப்பொடிகளை வாரி யிறைத்துக்கொண்டு ஆனந்தமாய் வீசும் காற்றை யனுபவித்துப் பரிசானந்தமுற்றுத் தேவியையும் பார்த்து ஓ கிரிஜே! இக்காற்றில் நீயும் சற்றிருந்து சிரமபரிகாரஞ் செய்து சுகமுறுவாயாகவென்ன அதற்கம்பிகை ஓ சுவாமி, தேவரீ ரனுபவித்து எஞ்சியகாற்றின் சேஷத்தையும் தேவரீர் பூசி எஞ்சிய பரிமளத் திரவியங்களையும் எனக்கருளவேண்டும். ஓ சுவாமி, எப்பொழுதும் அதனையே யான் விரும்புகின்றேன். தேவரீருடைய திருவடிமலரின்கண்ணும் திருநாமங்களிலும் எனது மனம் குடிகொண்டிருக்கின்றது என்று கூறி யுடனே உருத்திர வீணையைக் கையிலெடுத்துக்கொண்டு ஞானவித்யா சொருபிணியாகிய அம்பிகை

சிவசிவ ஹரஸம்போ பர்க்கபீம ஸ்மராரே த்ரிபுரஹர யமாரே
காளகூடந்தகாரே பரசிவ பரமாத்மன் ருத்ர" என்று திவ்ய நாமங்களை மலர்முனைபோன்ற தனது நகமுனைகளால் பரமானந்த பரவசையாய் மீட்டிக் கானஞ்செய்துகொண்டு ஓ ஸ்வாமி! வீணை அற்புத சிருட்டியாயிருக்கின்றதே, இதன் வரலாறு யாது; இதுபோல் யான் எங்குங்கண்டதில்லை. இது எப்படி யுண்டாயிற்று என்று இறைவனிடம் தேவி விஞ்ஞாபனஞ் செய்துகொண்டனள். அதற்குச் சிவபெருமான ஓகிரிஜே! அதனைக் கூறுகின்றேன். கேட்க.

பூர்வம் கந்தர்வநகரமொன்றிருந்தது. அபாரமகிமை பொருந்திய சிவலிங்கத்தால் ஜ்வலிப்பதும், கந்தர்வஸ்திரீகளது விலாசங்கட் கிருப்பிடமாயும் உள்ள வந்நகரத்தில், சகல பாக்கியங்கள் பொருந்தியனுபவிப்பவனும்வள்ளலுமாகிச் சகலராலும் போற்றப்பெற்ற ஊஹூ என்கிற பெயருடைய கந்தர்வநாத னொருவனிருந்தான். அவன் புஷ்பகவிமானத்தின்மீதேறி மூவுலகிலுஞ் சென்று சஞ்சரித்துக்கொண்டு எங்கெங்கு யாதுயாது விசேஷமுளது. எவனெவனது பூமியில் எவ்வெப்பிரியமுளது. சிவாராதனத்துக்குச் சாதனமாயுள்ள பொருள்கள் எங்கெங்குள்வென்று விசாரித்துவருகையில் ஓர் மலைக்குகையைக்கண்டு அதற்குட்சென்றனன். அங்கு ஓர் மஹாவீரரும்

பெருங்கருணை வள்ளலுமாகிய ஓர் சாம்பவசிரேஷ்டர் சங்கராரா தனைக்குச் சந்நத்தரா யிருப்பதைக்கண்டு அவர் காலில்வீழ்ந்து நமஸ்கரித்துக் கைகட்டி நின்று கந்தர்வ சிரேஷ்டனாகிய ஹூஹூ வென்பவன் அப்பெரியோரை நோக்கி ஓ ஸ்வாமி! தேவரீர் சவுந்த ரியம் வீரியம் முதலிய சகல பாக்கியங்களும் நிறைந்தவரென்று கா ணப்படுகின்றதே. ஓ சாம்பவ ஸ்ரேஷ்டரே! இம்மலைக்குகையின் கண் தாங்கள் யாதுசெய்யக் கருதியிருக்கின்றீர்கள்; தங்களுக்குக் கிடைக்கவரிதாய் யாதும் எவ்வுலகத்தினும் இராதென்றே தோன்று கின்றது. ஓ பாக்கியவானே! தாங்கள் கருதியது யாதென்பதை யடியேனுக் குரைத்தருள வேண்டுமென்று வினவினான். அதனைக் கேட்டு அச்சாம்பவர் புன்னகைகொண்டு ஓ சிவபக்தனே! இதனைச் சற்றுக் கேட்பாயாக, அஃதாவது, இங்கு சகலேஷ்ட சித்திகள் தரு வதும் சகல சித்தர்களும் ஆராதித்துச் சித்திபெற்றதும் அற்புதமு மாகிய ஓர் மஹாலிங்கம் விளங்குகின்றது. அது சகல சித்திகளையுந் தருகின்றதாதலால், சித்தலிங்கமென்று பிரசித்திபெற்றது. இங்கு பூர்வம் மிக்க தரித்திரனும் குஷ்டரோகியும் முடவனும் மற்றும் பற் பல வியாதிகளுடையோனும் சொத்தை நகத்தோனும் கூனனும் செவிடனும் குருடனுமாய் ஓர் விப்ரனிருந்தனன். அவன் உடுக்க உடையும் உண்ண உணவுமற்று எண்ணிறந்த பீற்றலுற்ற ஓர் கந்தை யை யுடுத்திக்கொண்டு தட்டித்தடவி ஆங்காங்கு சென்று திரிந் துழன்று பற்பல துக்கங்களையும் அனுபவித்துக்கொண்டு தெய்வ வசத்தால் ஓர்சமயம் இங்குவந்து சேர்ந்தான். அப்பொழுது ஓர் கின்னர சிரேஷ்டர் இவ்விலிங்கத்தைப் பூஜைசெய்து அற்புதமாகிய திவ்யான்னங்களை ஓர் வாழையிலையில் வைத்துச் சிவபெருமானுக்கு நிவேதித்துப் பின்னர் நிவேதனஞ்செய்த சேஷமாகிய கிருதம் சர்க் கரை முதலியவை கலந்தொழுகும் நற்சுவைப் பரிமள பரமான்னத் தைத் தாமும் ஓர் கதலியிலையில் பரிமாறிக்கொண்டு சிவத்தியானத் துடன் அதனைப் புசித்து எஞ்சியவன்னத்துடன் அவ்விலையை எடு த்துச் சற்று தூரத்தில் விழும்படி எறிந்துவிட்டார். அது விழுந்த விடத்திற்குச் சற்றருகில் அவ்விப்பிரவந்தன் அதன் நறுமணத்தை முகர்ந்து தடவிச்சென்று அதனைக் கையாலெடுத்துப் புசித்தான். உடனே அவ்வந்தணன் சகலரோகங்களும் கிழத்தனமும் நீங்கி மிக்க சுந்தரனை யவ்வன புருஷனாயினான். அப்படியானதும் அவ்வந்த ணன் ஓஹோ! இதென்ன புதுமையாயிருக்கின்றது! இது யாருடைய மகிமை! யாம் முன்னிருந்த நிலைமை என்ன! இப்பொழுதுள்ள நிலை

மையென்ன! இது நமது பூர்வபுண்ணியங்களின்மகிமையோ வென்று ஆச்சரியம் மனதிலடங்காது கூறிக்கொண்டிருக்கும்பொழுது முன்னர் பூஜைசெய்து நிவேதனஞ் சமர்ப்பித்த கின்னர சிரேஷ்டர் மீண்டும் நிவேதன அன்னங்களை யெடுத்துக்கொண்டுவந்து முன்போல் சித்தேசருக்கு நிவேதனஞ் செய்து உண்டு முன்போலவே அதனை எறிந்துவிட்டுச் செல்ல அவ்வந்தணன் உடனே ஒடிவந்து அதனைப் பேராவலுடன் முன்போலெடுத்துப் புசித்துப் பரமானந்த முற்றிருந்தான். அப்பொழுது ஓர் சாம்பவர் சிவசங்கர ஶர்வா வென்று சிவநாமங்களை உரக்க வுச்சரித்துக்கொண்டேவந்து பில்வ பத்திராதிகளால் அவ்விலிங்கத்தை யர்ச்சித்துக் கனிகளை நிவேதனஞ்செய்து அதனைப்புசித்துச் சகல மனோரதங்களையும்பெற்ற வானந்தமுடையோராய் திவ்யரூபம்பெற்று நின்றார். அப்படி நிற்கும் அச்சாம்பவரருகில் முற்கூறிய வந்தணர் சென்று அவரடியில் வீழ்ந்து நமஸ்கரித்து அஞ்சலிசெய்து ஓ ஸ்வாமி! தேவரீர் இங்கே வரும்போதிருந்த வுருவம்போய் இப்போது ஓர் திவ்யரூபம் வந்திருக்கின்றதே! இது தாங்கள் சிவபூஜைசெய்து நிர்மாலியம் புசித்த தின்பின்னரே வந்ததென்பதை யான் நன்கறிவேன். இப்படி அற்புதமாகிய ஒருருவம் வந்ததற்கு யாது காரணம்? அதனைக் கருணை கூர்ந்து எனக்குரைக்கவேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதற்கு அச்சாம்பவரும் ஓ விப்ரா, இவ்வுண்மையை யுமக்குரைக்கின்றேன் அதனை யறிந்து மயக்கம் நீங்குவீராக. இது சிவநிவேதன சேஷத்தையுண்ட மகிமை என்றறிந்துகொண்மின். இதன் மகிமை இம்மட்டுமன்றி வேதங்களில் மிகுதியாய்க் கூறப்பட்டுளது. எவன் சிவநிவேதன சேஷத்தைப் புசிக்கின்றானோ அவனே பாக்கியவான். அவன் மிக்க சுந்தரனும் சகல லக்ஷணங்களு முடையோனுமாகின்றான். சிவநிவேதன சேஷத்தின் லேசலேசத்தின் கோடியிலொருபங்குகூட மஹாபாக்கியவான் தவிர மற்றெவருக்குங் கிடைக்காது. பூர்வம் லக்ஷ்மி சிவநிவேதன சேஷ சம்பந்தத்தாலேயே மஹா சௌந்தர்யத்தையும் பெற்றனள். இன்னொன்று கூறுகின்றேன்.

பூர்வம் ஓர் மஹாரண்யத்தில் வேடர்குலத்தில் உதித்தவளாகிய பதுமையென்றொருத்தி கானகத்திலுள்ள கட்டைகளை வெட்டிக்கட்டித் தானும் தனது நாயகனுமாய்ச் சுமந்து சென்று விற்று அதனால் சீவனம் செய்துகொண்டிருந்தாள். அப்படிப் பலகாலும் சுமந்து சென்று சீவித்துவர,மவள் கிழத்தன்மையடைந்து அங்கம் மெலிந்து விறகுசுமந்து செல்வதற்குரிய சக்தி குன்றியவளாயினும்

ஜீவன நிமித்தமாய் அதனை விடக்கூடவில்லை. ஓர் சமயம் அவ் வேடுவச்சி கானகத்திற் றள்ளாடித்தள்ளாடி வழக்கம்போல் சுமந்து கொண்டு செல்லும்பொழுது பசிமிகுதியால் தடுமாறிச் சுமைதூக்கச் சக்தியற்றவளாய்க் கீழே விழுந்துவிட்டாள். அப்பொழுது அவ் வனத்தில் வழிப்போக்கராய்ச் செல்லும் ஓர் மஹாசைவர் அங்கு பில்வபத்திராதிகளால் சிவாராதனஞ்செய்து நிவேதனஞ்செய்த சேஷத்தைத் தாம் புசித்து அவ்வுச்சிட்டகலத்தைச் சற்று தூரத்தில் எறிந்துவிட்டனர். அதனைக் காற்றானது அடித்துக்கொண்டு வந்து கீழே விழுந்துகிடக்கும் வேடஸ்திரீயின் கையில் நன்றாய்ப் படும் படித் தள்ளியது. உடனே அவள் உயிரிழந்தனள். பிறகு காலபடர் அவளைக் காலனருகில் கொண்டுபோய் நிறுத்தக் காலன் சித்ர குப்தனைப் பார்த்து ஓ சித்ரகுப்தா! இவள் எங்கிருந்தனள், இவள் செய்த பாவபுண்ணியங்கள் யாவை என்று வினவ, அதற்குச் சித்திர குப்தனும் இவள் ஓர் கானகத்திலிருந்தனள், பசியோடுகூடச் சுமை தூக்கிச் செல்லுகையில் கானகத்திலிறந்தனள். இவளால் புண்ணியம் யாதும் செய்யப்படவில்லை. இவள் செய்தவெல்லாம் பெரும் பெரும் பாவங்களே! இவளெப்பொழுதும் பரபீடை செய்தவள், இவள் எப்போதும் பட்சிகளை வலையிற்பிடித்துச் சந்தோஷத்துடன் அவைகளைக் கத்திகொண்டு கண்டதுண்டங்களாக நறுக்கிப் பாகஞ் செய்து புசித்தவள், சுராபானஞ்செய்தவள், சிறிதும் புண்ணியமறி யாதவள், இவள் சிவலிங்கத்தை யோரிடத்திலாவது தரிசித்த தில்லை, சிவாலய தீபத்தைக்கூடக் கண்டதில்லை, சாம்பவரையுங் கண் டதில்லை, சிவாலயத்தில் தூசிகளைக் கூட்டுதலாகிய திருவலகிடுதலைச் செய்ததுமில்லை, சிவபூஜையைத் தரிசித்ததுமில்லை, போகமோகங் களை யளிப்பதாகிய சிவமார்க்கத்தை யெப்படி யறிவாள்! பக்தியு டன் பில்வவிருக்ஷத்தைத் தரிசித்தவளுமல்லள், இவளுடைய நெற்றி பஸ்மசம்பந்தத்தால் சுத்திபெற்றதென்பது ஓர் சமயத்திலு மில்லை, உருத்திராக்ஷமென்னுஞ் சொல்லையுமறியாள், சிவாபிஷேக தீர்த்தத்தைப் புசித்தலென்ற சொல்லின் சம்பந்தத்தையும் பெற்றவ ளல்லள், சிவநைவேத்திய மணமும் நுகர்ந்ததில்லை. சர்வ பாவங்களை யுந் தொலைப்பதாகிய மஹாதேவ நாமஸ்மரணமும், அல்லது சிவ தீர்த்த யாத்திரைச் சம்பந்தமாவது, அல்லது சிவாலயோற்சவ தரி சனமாவது அல்லது சிவஸ்தல சம்பந்தமாவது எவையும் செய்தவ ளல்லள். ஆனால் உயிரிழக்குஞ்சமயத்தில் சாம்பவரது உச்சிட்ட கல த்தின் சம்பந்தமொன்றுமாத்திரம் நேர்ந்ததுண்டு. அஃது சகல

வபீஷ்டங்களையும் தருவதாகிய ஓர் பெரும் புண்ணியமன்றோ என்று கூறினான். இதனைக் கேட்டதும் காலன் சந்தோஷமடைந்து அவள் தேகத்தைத் தனது கையாற்றொட்டு அவளைப் பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து நின்றான். உடனே அவள் திவ்யமாலை ஆடையாபரணங்களைத் தரித்தவளாய் அற்புதமாகிய உருவத்துடன் நின்றாள். உடனே! தருமராஜன் அவளை ஓர் ரத்னசிங்காதனத்தின்மீது வீற்றிருக்கச்செய்து மலர்முதலியவைகளால் பூஜைசெய்தனன். உடனே அவள் ஸ்வர்க்கமடைந்தனள். இங்ஙனம் சிவபூஜகர்களுக்கு அபாரமாகிய மகிமையுளது. ஆச்சரியம்! அம்மகிமை என்னென்று கூறுவேன். அவர் புசித்த வுச்சிஷ்டகலத்தின் சம்பந்தம்பெற்ற மஹாபாவிகளுஞ் ஸ்வர்க்கமடைவாரென்றால் அம்மகிமை அபாரமன்றோ!

இருபத்தோராம் அத்தியாயம்.

முற்றிற்று.

உ

ஷண்முகாயநம:

# இருபத்திரண்டாம் அத்தியாயம்.

## சிவநிவேதனமகிமை.

இங்ஙனம் அச்சாம்பவசிரேஷ்டர் கூறியவசனத்தைக்கேட்டுப் பரமாச்சர்யங்கொண்டு அவ்வந்தணன் அச்சாம்பவரை நோக்கி ஓ ஸ்வாமி! அவ்வேடஸ்திரீ ஸ்வர்க்கமடைந்தபின்னர் எப்படியாயினாள் அதனைக் கூறவேண்டுமென்று கேட்க அதற்குச் சாம்பவர் ஸ்வர்க்கலோகஞ்சென்று பற்பல போகங்களைப் புசித்துப் பின்னர் பிரமலோகஞ்சென்றனள். பிரமதேவர் அவளை ஓர் சிங்காதனத்திலிருக்கச்செய்து பிரமதேவனும் பூஜித்தார். அப்படியே சநகாதியரும் பூசித்தார். ஓர்சமயத்தில் பிரமலோகத்தில் வசிப்பவரெல்லாம் ஒருங்குசேர்ந்து அவரை நமஸ்கரித்துத் திசைமுகனாகிய நாதனே! ஓ ஸ்வாமி! இவள் யார் என்று கேட்டனர். அதற்குப் பிரமதேவன் ஓ சாதுக்களே! இதனை எப்படிக் கூறவியலும். மஹான்மாக்களாகிய சாம்பவர்களது ஸ்வரூபத்தைப் பரமசிவனும் அறிவதரிதென்று நினைக்கின்றேன். வேதங்களாலும் அறியப்படாததாய் யாதுளதோ அதனை யானெவ்விதங்கூறவியலும்? வைகுண்டரது புத்தியும் எட்டக்கூடாத சாம்பவர்களது மகிமையை யானுரைப்ப

தெப்படி! ஆனால் அதனை மஹேஸ்வரன் அறிந்தால் அறியலாகுமே யன்றி மற்றெவராலும் அறியமுடியாது. எவர்களது தேகசம்பந்தத்தால் சகலமும் பரிசுத்தமாகின்றதோ அப்படிப்பட்ட சைவர்களது மகிமையை யறிதற்கு முடியாது. இப்பூவுலகில் சஞ்சரிக்கும் சைவர்களெல்லாம் பிரத்தியக்ஷமாய்ச் சிவஸ்வரூபர்களேயாம். சிவப்பிரபாவமானது மூவுலகில் யாராலாவது மறியப்படுகின்றதுண்டா! எச்சைவர்களின் அங்கசம்பந்தமானது சகல சம்சாரசாகரத்தையும் வற்றச்செய்வதோ, அப்படிப்பட்ட பாவமோசகர்களாகிய சைவர்களின் மகிமையை யான் கூறிமுடியுமோ! சங்கரரது சரித்திரம் அலௌகிகமாகலின் வேதத்திற்கு மெட்டாதது. சைவரது அம்சத்தின்கோடியி லொருபங்குகூட வேதவேதாந்தங்களாலும் நிர்ணயிக்கப்பட்டனவில்லை. சைவர்களே தன்யர்கள். அவர்பாததூளி மூவுலகையும் பரிசுத்தமாக்குகின்றது. ஆயிரம் நாவுடைய ஆதிசேஷன் கூட அவர் மகிமையைக்கூறச் சக்தியுடையவரல்லர். யானும் அரியும் அப்படியே. சாம்பவர்களது அங்க சம்பந்தத்தால் மகா பாவமெனும் பறவைகள் வெடிமருந்தினொலிக்குப் பறந்தோடுவதுபோல் ஓட்டம்பிடிக்கின்றன. பூர்வம் ஓரரசனிருந்தான். அவன் மகாபாவங் குடிகொண்டவனும் பிரஜைகளை வருத்துவோனும் பரத்திரவியத்தை யபகரிப்போனும் மன்னுயிர்க்குத் துரோகஞ் செய்வதிலேயே யாவலுடையோனும் பிறரை நிந்தித்தல் பிறர் மனை விரும்பல் கோக்கொலைசெய்தல் நாய்களை இம்சித்தல் அந்தணர்களை இம்சித்து அவர் மனைவிகளை வருத்துதல் முதலிய மகா பாவங்களையே சீலமாய்க் கொண்டிருந்தான். அவ்வரசனிடம் பயத்தினால் கானகத்துள்ள மிருகங்கள் தாகந் தீர்த்துக்கொள்ளக்கூட வெளிப்புறப்படுவதில்லையெனின் மற்றையர்கள் அவனிடம் கொண்டிருக்கும் பயத்தைக் கூறவும் முடியுமோ! அத்தேசத்தின் அரண்யத்தில் ஓர் சைவர் வழிப்போக்கராய்ச் சென்றுகொண்டிருந்தார். அவர் அங்கு ஓர்வில்வவிருக்ஷத்தைக் கண்ணுற்றார்.

அதற்கருகில் பில்வதளங்கள் மிகுதியாய் மிதப்பதும் விலாமிச்சையால் சூழப்பெற்றதும் அற்புதமான தீர்த்தமுடையதும் அழகிய அலையாற் சலிப்பதுமாகிய ஓர் ஜலகுண்டமுளது. அத்தேயத்தரசன் வேட்டையாடக் கானகம்புகுந்து பல மிருகங்களைக்கொன்று தாகமுந் தாபமுமேலிட்டு நல்லதீர்த்த மெங்குளதென்று பார்த்துக்கொண்டே அக்குண்டத்தருகில் வந்து சேர்ந்தான். அக்குண்ட

மானது தான் வேட்டையாடிச் சிரமமடையுங்காலத்தி லவ்விடம் வந்து இளைப்பாறுவதற்கென அரசனால் முன்னமே தாபிக்கப்பட்டுளது. அப்பில்வமரத்துக்குக் கருப்பஞ்சாற்றிலு மினியதும் நிர்மலமாயுமுள்ள தீர்த்தம் வார்க்கச்செய்து அதனை ரக்ஷிப்பதற்கென சில வேலைக்காரர்களையு மேற்படுத்தி அவ்வில்வநிழல் படியுமிடத்தில் அழகிய தீர்த்தகுண்டத்தையு மமைத்திருந்தான். அத்தீர்த்தகுண்டத்தருகினின்று இளைப்பாறுவோமென்று பேராவலுடன் அரசன் செல்லவே அங்கு அவ்வழிப்போக்கச் சைவருங களைப்புற்று நல்ல தீர்த்தமும் நிழலும் விருக்ஷமுமிருக்கின்றது. இங்கு சற்று இளைப்பாறிப்போவோமென்று நினைத்து அருகில்வர அரசனையும் கண்ணுற்றார். அரசனும் அச்சாம்பவரைத் தரிசித்தமாத்திரத்தில் சாந்தியுதித்துக் கருணையுடையோனுய்ச்சரேலென்று குதிரையினின்று மிறங்கி அச்சாம்பவரருகிற்சென்று இவர் யாரென்று உற்றுநோக்கவே அப்போது ஓர் காற்றடித்தது. அக்காற்றினால் விபூதிபூசிய மேனியராகிய அச்சாம்பவரது தேகத்திற் படிந்த விபூதிதூளி அரசன்மீது சம்பந்தித்து உடனே ஓர் தெளிவு பிறந்த மனதுடன் அவ்வரசன் சாம்பவரைநோக்கி ஓ சுவாமி! புலிகளடர்ந்த இக்கானகத்தில் தாங்கள் வந்தது யாது காரணம்? ஏன் தங்களது தேகமிவ்வளவு வாட்டமுற்றிருக்கிறது; ஓ சுவாமி, பூர்வம் எனது மனம் மிக்கக் கொடியதாயிருந்தது. அப்படிப்பட்ட எனது மனதின் நிஷ்டூரத்தன்மை தங்களது தரிசன விசேடத்தால் நீங்கப்பெற்றேன். நான் வேறு மனிதன்போலும், என்மனம் வேறு மனம் போலும் தோன்றுகின்றது. பூர்வம் யான் செய்த பிரமஹத்தியைக் கணக்கிடமுடியாது! ஓ ஓ ஆச்சரியம்!! மகா கொடியவனாகிய வென்னையும் வசப்படுத்தும் மந்திரமு மொன்றுண்டா? ஓ சுவாமி! அவ்வளவு கொடியனாகிய யான் சகல கொடுமையு நீங்கித் தேவரீருக்கு வசப்பட்டு மகாசாந்தனாயிருக்கிறேனாதலின் இது வென்ன காலவிந்தையோதெரியவில்லை. தேவரீரிடம் யாதானும் வசீகரணமந்திர மிருக்கவேண்டும். அப்படிக்கிராவிடில் வேங்கைப்புலிகள் கூட்டங் கூட்டமாய் வாழுமிக்கானகத்தில் பிரவேசிக்க முடியுமா? தேவரீர் அம்மந்திரத்தைத் தாசனாகிய வெனக்குபதேசித்தருளவேண்டும். எனனாற் செய்யப்பட்டுள்ள கணக்கிறந்த பாபங்களைத்தொலைப்பதற்கோ ருபாயத்தையுங் கூறியருளுங்கள். இதுமுதல் யான் தேவரீருடைய தாசனென்பதில் சந்தேகமியாதுமில்லை. ஓ சுவாமி! அடியேனிடம் எப்படியாவது கிருபைசெய்யவேண்டும். தேவரீரது தேகசம்பந்தமுற்ற காற்று

என்தேகத்தில் சம்பந்தித்தமையால் யான் சாத்வீகனுயினேன், தேவரீர் சைவமந்திரத்தால் பரமபாவனமாகிய விபூதியை யடியேனுக்குத் தந்தருளல்வேண்டும். தேவரீரைப்போன்ற பெரியோர்கள் பாவிகளிடத்திலும் அருள்புரிகின்றனர். தேவரீருடைய சந்நிதானத்திலிருந்தாலெனக்குப் பாவங்களாற் பயமில்லை. தேவரீர் பாபமென்னும் புலிக்குச் சிங்க சிரேஷ்டமாய்த் தோன்றுகின்றீர். தேவரீரது தரிசனமானது பாபராசிகளுக்கு வச்சிராயுதம்போன்றது. அப்படிப்பட்ட தரிசனமானது அடியேனுக்குக் கிடைத்தது எந்த புண்ணியத்தினுலோவென்று கூறி கண்களினின்று மானந்தபாஷ்பம் பெருக அடியற்ற மரம்போல் அச்சைவ புங்கவரது பாதாரவிந்தத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தான். அச்சாம்பவரது விபூதி சம்பந்தித்த மாத்திரத்தில் அவ்வரசன் செய்தபாபங்களெல்லாம் அவன் தேகத்தைவிட்டு யானையுருவத்துடன் வந்து எதிரில் நின்றது. அதனைக் கண்ணுற்று அரசன் வியந்து மறுபடி சாம்பவர் பாதத்தில் வீழ்ந்து ஓ சுவாமி! என்தேகத்தினின்று மோர் பெரிய மைமலைபோல் ஓர் யானை தோன்றி எதிரில் நிற்கின்றது. புகைகளாற் சூழப்பெற்ற மகாபர்வதம்போற் றேன்றும் இக்கரியயானையைப் பார்க்க மிக்க விந்தையாயிருக்கிறது. ஓ சுவாமி! இச்சாம்பவ சந்நிதானமகிமையோ! யாதோ! தெரியவில்லை. தேவரீர் கூறல்வேண்டுமென்று பிரார்த்திக்க அச்சாம்பவர் ஓ அரசனே! எனக்கும் இது ஆச்சரியமாக விருக்கின்றது. உன்னினுஞ் சிறந்த புண்ணியவான் உலகிலெங்கு மில்லை யென்றே தீர்மானிக்கின்றேன். பில்வ விருக்ஷம் வைத்துத் தீர்த்தம்விட்டுக் காப்பாற்றிய புண்ணியம் கூறமுடியுமா? நீர் பில்வவிருக்ஷத்தடியில் வார்த்த ஜலத்தின் பிந்துக்கள் எவ்வளவோ அப்படிப்பட்ட தீர்த்திவலை ஒவ்வொன்றும் மகாபாதகக்கூட்டங்களைத் தொலைப்பதாயின் அளவிறந்த தீர்த்தத்தைப் பிரதிதினமுமூட்டி வளர்த்த வும்மிடம் பாபசம்பந்தம் அணுவளவுமில்லையென்பதில் சந்தேகமுமுளதோ? இம்மரத்தடியில் தினந்தோறும் நீர் வார்த்து வளர்த்தது திரிநேத்திரனை வளர்த்ததேயன்றோ. உமது புண்ணியமே புண்ணியம். சகல தேவகணங்களாலும் தாங்கள் நமஸ்கரிக்கக்கூடியவர். இப்பில்வவிருக்ஷமானது மகாதேவஸ்வரூபமே. சாமானியமல்ல, பரமசிவமகிமையானது எவருக்கும் எப்படி அரியொணுததோ அப்படி யிதன்மகிமையும் வேதங்களாலும் அறிதற்கரிதாயிருக்கின்றது. இவ்விருக்ஷ மொன்றினுலேயே இவ்வனமுழுமையும் பாவனமாயுள்ளது. உலகில் எவ்வளவு

புண்ணிய தீர்த்தங்களுளவோ அவையெல்லாம் பில்வவிருக்ஷமூலத்தில் விளங்குகின்றன. வில்வமூல ஜலத்தால் எவன் சிரசில் சம்பந்திக்கப்பெற்றவனோ அவன் சகல புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தவனாகின்றான். பில்வமூலத்தில் லிங்கரூபியாகிய மகாதேவனை எவன் பூஜிக்கின்றானோ அவன் தர்ம ஸ்வரூபனாயிருந்து சிவனையடைகின்றான். இதிலையமில்லை. பில்வமூலத்திலிருந்து மந்திரம் ஜபிப்போனுக்கு உடனே அதன் சித்தி கைகூடும். சக்தியற்ற மந்திரமாயினும் பில்வமூலத்திலிருப்பவனால் ஜபிக்கப்படுமாயின் அதன்மகிமையைப் பரமேஸ்வரன்தான் கூறவேண்டும். அவனுக்குச் சகலமுஞ் சித்திக்கும். ஜகதீஸ்வரனாகிய சிவனே லோகானுக்கிரகார்த்தம் பில்வவிருக்ஷரூபமா யிவ்வனத்திலிருந்தருள்புரிகின்றனர். பில்வமூலத்தில் பாத்திகட்டி நீர்வார்ப்பவனிடம் மஹாதேவன் மிகவும் சந்தோஷிக்கின்றார். கந்தம் புஷ்பமுதலியவைகளா லெவன் பில்வ விருக்ஷத்தை யுபசரிக்கின்றானோ அவனது சந்ததிலோகோத்தரமாய் மேன்மேலும் செழிப்புற்று விளங்கும். எவன் வில்வமூலத்துக்குத் தீபோபசாரம் செய்கின்றானோ அவன் தத்வக்யான முதித்தவனாய்ச் சிவனொடு கலப்பான். எவன் பில்வ மூலத்தில் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்கின்றானோ அவன் பாபமென்னும் மலைக்கு வச்சிராயுதமாவன். எவன் பில்வவிருக்ஷத்தின் கிளையைக் கைகளாற்பற்றி அரியதளங்களை யெடுத்துச் சிவபூஜை செய்கின்றானோ அவன் சகல பாபங்களையு மகற்றுவோனாவான். எவன் பில்வவிருக்ஷத்தடியில் சாம்பசிவசிரேஷ்டருக்குப் போஜனமளிக்கின்றானோ அவனது புண்ணியம் ஒன்று கோடிக்கணக்காய் வளர்கின்றது. வில்வவிருக்ஷத்தடியில் சிவபக்தன் பொருட்டு எவன் நெய்பாலுடன் கூடியபோஜனத்தை யளிக்கின்றானோ அவனிடம் தாரித்திரமென்னுஞ் சொல்லுக்குக்கூட இடமில்லை. பூர்வம் விந்திய தேயத்தில் ஓர் அந்தணனிருந்தான். அவன் மகா தரித்திரன், பெருங்குடும்பி, எண்ணிறந்த புத்திர பௌத்திராதிகளையுடையோன். அவன் எப்போதும் எங்குஞ் சென்று தானியத்தை யாசித்து வந்து காலங்கழித்து வருபவன். ஓர் சமயம் தனது புத்திரர்களுடன் யாசிக்கச் செல்லுங் காலத்தி லிவ்வாரண்யத்தில் மார்க்கண்ட முனிவரைக் கண்ணுற்று அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஓ சுவாமி! அடியேன் என்ன புண்ணியத்தினாலோ தங்களைத் தரிசிக்கப்பெற்றேன். யான் வறுமையால் மிக்க வருந்துகின்றேன். ஓ சுவாமி! யான் மகா கிழத்தன்மைபெற்றவன். என்மனைவியு மப்படியே. புத்திர பௌத்திராதிக

ளோடுகூடத் தானியமுள்ள விடங்களெல்லாஞ்சென்று எப்பொழு தும் யாசனையே செய்வது. ஆயினும் அவர்கள் இரண்டு மூன்று தானியத்தைக்கொண்டுவந்து எனக்களிக்க அருகில் வருவார்கள். மகாபாபியாகிய வென்னைப்பார்த்ததும் அஃதுங் கொடுக்கக்கூடா தென்று எண்ணி யேனைய பிச்சைக்காரர்களுக்கே கொடுப்பார்கள். ஏதேனு மோர்காலத்தில் கொடுப்பார்களாயின் அதனை வாங்கிக் கொண்டு வறுமையால் வாட்டமுற்ற தேகத்துடன் தள்ளாடித்தள் ளாடிச் சோர்வடைந்து செல்லும்போது அத்தானியங்களும் சேற் றுப் பிரதேசத்திற் சிதறிவிடும். அஃதில்லாவிடில் திருடர்களடித்து என்கையிலிருப்பதைப் பிடுங்கிப்போய்விடுவார்கள். என்னில்லத் திலுள்ள என்னைச் சேர்ந்தவர்களெல்லோரு மாகார மின்மையால் பசிதாளாது கோரமாயழுதுகொண்டே யிருப்பார்கள். ஓ சுவாமி! யானென்னசெய்வேன்! இத்துடன் கிழத்தன்மையு மோங்கிவிட் டது. எனது ஜனங்களும் யானும் ஒரேகாலத்தில் இறந்துபோவோ மாயின் மிகவுஞ் சந்தோஷமாயிருக்கும். அப்படி மரணமும் வருவ தில்லை. ஆதலின் தேவரீர் சற்று கடைக்கண்ணு னோக்கிக்கருணை புரியுங்கள். ஓ சுவாமி! என்னைத் தேவரீரே காப்பாற்றி யருள் வேண்டுமென்று கெஞ்சினன். அதனைக் கேட்டு முனிவரும் சற்று யோசித்துப் புன்னகை கொண்டவராய் அத்தரித்திரனைப் பார்த்து ஓ விப்பிரரே! பூர்வஜன்மங்களிலும்மால் சிவபக்தரின்பொருட்டுப் பில்வ விருக்ஷத்தடியிற் சிறிதேனும் அன்னம் அளிக்கப்படவில்லை. சிவபெருமானே சாம்பவ ரூபமாய் வில்வ விருக்ஷத்தடியில்வந்து அன்பரளிக்கு மன்னத்தைப்புசித்து அவனை அன்னபதியாக்குகின்ற னர். அப்படிப்பட்ட அன்னபதித்துவத்துக்கேதுவாகிய பில்வ மூலத்தினடியில் செய்யும் அன்னதானமானது உம்மாற்சிறிதேனுஞ் செய்யப்படவில்லை. ஆதலால் உமக்கு அன்னமின்றி இத்தகைய துன்பம் வந்திருக்கின்றது. இனியாவது எவ்வாற்றானும் பில்வவிரு க்ஷத்தடியில் சாம்பவருக்குப் பரமபக்தியுடன் அன்னதானஞ் செய் வீராயின் அவ்வன்னதானமகிமையால் உமதில்லம் அன்னாதி விபவங் களால் செழித்தோங்கிவிளங்கும். ஆதலின் சீக்கிரம் சென்று வில்வ விருக்ஷத்தடியில் அன்னதானஞ் செய்வீராகவென்று கூறினார். அதனைக் கேட்டதும் அத்தரித்திரக்கடலாகிய அவ்வந்தணன் முனி வரை நமஸ்கரித்துப்பிச்சையெடுத்துவந்த அத்தானியத்தோடு பில்வ வனத்தையடைந்து பில்வவிருக்ஷ மூலத்திற்குச்சென்றான். தெய்வ கதியாய் அங்கு ஓர் சாம்பவசிரேஷ்டர் விபூதியணிந்த மேனியராய்

உபவாசாதிகளால் மெலிந்த சரீரத்துடன் சாற்றையே புசித்துக்கொண்டு சிவபூஜை செய்துகொண்டிருந்தார். அவரைக்கண்டதும் அத்தரித்திரவந்தணன் நாமே தன்யரென்று நினைத்து அவரைப் பணிந்து ஸ்நானஞ்செய்து பரிசுத்தனுய் அவ்விடத்திலேயே அதனைப்பாகஞ்செய்து மிருதுவாகிய அன்னத்தை யெடுத்துக்கொண்டு அச்சாம்பவர் செய்யும் பூஜைக்கு சிவநிவேதனமாயளித்தனன். அவ்வன்னம் மலைபோல் வளர்வதைக்கண்டு பேராச்சரியமடைந்து தனது புத்திர பௌத்திராதிகளுடன் நமஸ்கரித்து மனமடங்காத சந்தோஷமுடையவனுய் நிற்க அச்சாம்பவரும் பரமசந்தோஷங்கொண்டு சற்றுப்பசியுமுடையோராய் அவ்வந்தணனைப்பார்த்து ஓ பிராமணசிரேஷ்டரே! பக்தியுடன் நீங்கள் சமர்ப்பித்த அன்னம் அற்பமாயினும் அது சிவனுல் புசிக்கப்பெற்றமையால் மலைபோல் வளரப் பெற்றது. உமதுபாக்கியம் உலகிலொருவருக்குமில்லை. சகல தரித்திரமும் தொலைந்துவிட்டது. இவ்வன்னத்தைப் பில்வவிருக்ஷமூலந்தோறும் சிவபூஜைசெய்துகொண்டு விளங்கும் சாம்பவர்களுக்கு அளிப்பீராயின் நீங்கள் அன்னபதியாவதற்கியாதுந் தடையில்லை யென்ன அதனைக்கேட்டு அவ்வந்தணன் அவ்வாறே சென்று சிவார்ச்சனை செய்துகொண்டு விளங்கும் பெரியோர்களை வணங்கித் தான் செய்யும் அன்னதானத்தைப் பெற்றுப் புசித்து அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து அவ்வாறேயளித்துத் தனது வீடுபோய்ச்சேர்ந்தான். தன் வீடுநிறையத் தானியராசிகளிருப்பதைக் கண்ணுற்று இதென்ன மிக்க வாச்சரியமாகவிருக்கின்றது. இது எதனுடைய மகிமையென்று நினைத்து இல்லங்களை விசாலப்படுத்தி முன்போல் பில்வவிருக்ஷத்தடியில் பூசைசெய்து வரும் சாம்பவர்களுக்கு அன்னதானஞ்செய்து வந்தான். அதனுல் அத்தரித்திரனுகிய அந்தணன் சகலபோக சம்பூர்ணனுய் அரசனிலுஞ் சிறந்தவனுனன். ஆதலால் ஓ அரசனே! நீயும் பில்வவிருக்ஷத்தடியில் மகாதேவனைப் பூசிப்பாயாக. பூசிக்கும் சாம்பவருக்கும் தினந்தோறு மன்னமளிப்பாயாக. இனி எந்தப்பிராணியையும் ஹிம்சியா திருப்பாயாக. இங்கோர் அழகான சிவாலயமமைத்து சோமேஸ்வரத்தினின்றும் ஓர் பாணலிங்கம் கொணர்ந்து பில்வமூலத்தில் பிரதிஷ்டைசெய்து விபூதிருத்திராக்ஷந்தரித்து பரமபக்தியுடன் சிவபூசைசெய்வையாயின் கோரமாகிய சம்சாரத்தினின்றும் விடுபட்டுப்பேரானந்தமெய்துவாய். சம்சாரமென்னும் பெருங்கடல் கடக்கமுடியாதது. புத்ரபாரியை யாதிகளிடமுள்ள பிரியமெல்லாம்

வீணே. ஆதலின் சம்சாரவிஷயங்களிலுள்ள அவாவைத் துச்சமென்று கருதிப் பிறவிப்பிணியகற்றுவோராகிய மகாதேவனைச் சரணமடைவாயாக. அவனை விடுத்து வேறு யாதுங் கதியில்லை என்றனர்.

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

உ

பாலநேத்ரசுதாயநம:

## இருபத்துமூன்றும் அத்தியாயம்.

### சிவநிவேதனமகிமை.

இங்ஙனம் முனிவர் கூறியதைக்கேட்டு அரசன் அவரடியில் வீழ்ந்து நமஸ்கரித்து ஓ சுவாமி, தேவரீர் சிவதீக்ஷை அடியேனுக்குச் செய்துவைக்கவேண்டும். அதனால் யான் பரிசுத்தனாவேன். சுவாமி, எனக்குத் தேவரீரே கதியன்றி மற்றொருவருமில்லை. சிவதீக்ஷை சிவபெருமான் இவர்களின் மகிமை யெப்படிப்பட்டது. அதை அடியேனுக்குரைத்தருளல்வேண்டும். அதனைக் கேட்டமாத்திரத்தில் சகல பாபங்களும் எப்படி நீங்கப்பெறுகின்றனென்று அரசன்கேட்க அதற்குச் சாம்பவர் கூறலாயினர். ஓ அரசனே! விபூதி தரித்துச் சத்தியமாய்ச் சொல்லுகிறேன். சிவமந்திர தீக்ஷை பெற்றவனது தேகத்தைக்கண்டமாத்திரத்தில் யமதூதர்கள் மிக்க தூரத்திலோடுகின்றனர். அப்படியே பாதகமென்னு மலைகளுந் தொலைகின்றன. ஓ அரசனே! அஃதெலாமேன்! இப்போது பிரத்யக்ஷமாய் உனது பாதகங்கள் யானையுருவோடு நிற்பதைப் பார்க்கின்றாய். எனது நெற்றியிற் பூசிய விபூதி தூளியின் சம்பந்தத்தாலும் என்தேகத்தைத் தரிசித்ததினாலும் பாதகமெலா மிவ்வுருவாயுன்னை விட்டு வெளிவந்து நிற்கின்றது. யான் பாக்கியவசத்தாலேயே அதிபால்யத்தில் சைவவித்தையில் தீக்ஷிக்கப்பெற்றேன். காலகாலனது அபாரமான கருணைக்குப் பாத்ரனாயினேன். எவரெவர் சாம்பவவித்தையில் தீக்ஷிக்கப்பெற்றவரோ அவரது பாத தூளியால் மூவுலகும் பாவனமாகின்றது. எந்த பாக்கியவானுக்குச் சாம்பவ வித்தையில் பக்தியுதிக்கின்றதோ அவரை தேவர்களெல்லோரும் சிவானுக்கிரகம்பெறவேண்டுமென்று அவனை வணங்குகின்றனர். எங்களுக்குச் சிவவித்தையொன்றே அழியாததனமாயுளது.

ஓ அரசனே! ஏனைய தனங்களெல்லாம் நசிக்கின்றன. சிவவித்தியாதனமொன்றே நித்தியமாகிய தனமாம். மகாபுண்ணியவானாகிய மனிதனே சைவனாய் இக்கலியிற்றோன்றிச் சிவதீக்ஷைபெற்று பேரானந்தத்துக்காளாகின்றான். சகல பாதகங்களாலும் யமதூதர்களாலும் பயமற்று விளங்குவோன் சாம்பவவித்தையுடையோனே. சாம்பவவித்தையினாலேயே கைலாயமடையப் பெறுவதாம். கைலாயமென்பதை யடைவதற்குச் சாம்பவ்வித்தை சோபானமாகும். மற்றெவ்வுபாயங்களாலுங் கைலாயமடையப் பெறுவதில்லை. எவனுக்குச் சாம்பவ வித்தியாபரிச்சயமும் பக்தியுமில்லையோ அவனது சன்மம் வீணே. அவனைப்பெற்ற அன்னையை மலடியென்றே கூறலாம். அப்புத்திரனால் யாது பயன்? மனித சன்மத்தையுமெடுத்து அதனிலும் அரிதாகிய அந்தணப்பிறவியையும் பெற்று சாம்பவ வித்தையும் விளங்க அந்தணவரசாயுள்ளவரெவரோ அவனது பிதுரர்களே திருப்தியுடையவர்களாகின்றனர். சிவ வித்தையுடன் கூடிய அந்தணரை முனீஸ்வரர்களெல்லோரும் நமஸ்கரிக்கின்றனர். பிராமணனாய்ப்பிறந்து சாம்பவ வித்தையையுடையோனாயிராவிடில் அவனை நமஸ்கரிப்பதும் அவனுக்குத்தானஞ்செய்வதும் தக்கதல்ல. சாம்பவ வித்தையை அப்யாசஞ்செய்து சிவார்ச்சனையையுஞ் செய்வோனாயின் அவனே நமஸ்கரிக்கவும் தானஞ்செய்வதற்கும் தக்கவனாவான். சாம்பவவித்தையே சிறந்ததாதலின் அவ்வித்தையைப்பெறுவதில் அதிகாரமும் அரிதாம். சிவவித்தையைப்பெற்றுச் சிவபூஜையும் செய்வானானால் சிவபெருமான் அதனைப் பிரீதியுடனேற்றுக் கொள்கின்றார். அவன் சிவலிங்கத்துக்குச் சமர்ப்பிக்குந்தீர்த்தமே அமுதமாகும். அவனது பிதுரர்களெல்லோரும் முத்திபெறுகின்றனர். அவனளிக்குந்தீர்த்தத்தைப்பெற்றுப்பிதுரர் அமிர்தத்தைக் கூட அவ்வாறு விரும்புவதில்லையென்று கூறியமொழியைக்கேட்டு அரசன் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துநின்று ஓ சுவாமி! இப்போது தேவரீர்சாம்பவவித்தையை யுபதேசிக்கவேண்டுமென்று விநயத்துடன் பிரார்த்திப்பதைக்கேட்டு அவ்வாறே ஆகட்டுமென்ன அரசனும் பேரானந்தமடைந்தான். அவ்வரசனது சேனைகளும் ரதகஜதுரக பதாதி முதலிய ஆரவாரங்களுடன் எண்ணிறந்தனவாய் வந்தன. அவனது மந்திரிகளும் மற்றுமுள்ள ராஜபுருஷர்களும் அரசனைத் தேடிக்காணாமல் அலைந்து எங்குந்திரிந்து வில்வமரத்தடியில் அரசனிருப்பதைக் கண்ணுற்று அவனருகிற்சேர்ந்து நின்றனர். அரசன் பரம சாந்தமனமுடையோனைத் தலைகுனிந்து வினயத்துடன் கூடி

யிருப்பதைக் கண்ணுற்றுச்சரியமடைந்து ஒருவரை யொருவர் நோக்கி இதென்னவிந்தையாயிருக்கிறது.குரூரனாகிய நமதரசன் இந்நிலையிலிருக்கின்றான். இருக்கட்டும், அரசனைத்தொழுது நிற்போமென்று கூறிக்கொண்டு அரசனை நமஸ்கரித்து ஸ்வாமி, என்ன இப்படி இருக்கின்றீர்களே, நகரத்துக்குப்போய் ராஜ்யகாரியங்களைக்கவனிக்கவேண்டாமா? ஆதலின் புறப்படுங்களென்றுகூறும் மந்திரியைநோக்கி அரசன் ஓ மந்திரி முதலியவர்களே! ராஜ்யகாரியத்தைக் கூறுகின்றேனதனைக் கேளுங்கள். சாம்பவ ஸ்ரேஷ்டராகிய இம்முனிவர் சந்நிதியிலேயே இனி எப்போதும் வசிக்கவேண்டுமெனத் தீர்மானித்திருக்கின்றேன். இரத்நமயமாயும் சுவர்ணமயமாயும் இங்கோர் நகரத்தை விரைவிலேயே யமைப்பீர்களாக. இங்கு ரத்னமயமான ஓர் அழகிய மந்திரத்தையுண்டாக்குவீராக. இங்கு கோடிக்கணக்காய்ப் பாணலிங்கங்களைப் பிரதிஷ்டை செய்யவேண்டும். விஸ்வகர்மனுக்குச் சமானனாகிய சிற்பவேலைத் திறமைபெற்ற வேலைக்காரர்களை இங்கு வரவழைத்து அற்புதமான மண்டபங்களையும் ஆலயங்களையுமமைத்தால் அதுவே யெனது பெருஞ்சந்தோஷத்துக்கேதுவாயுள்ளது. இப்போது சிவதீக்ஷையின் பொருட்டு எனக்கு என்னென்ன பொருள் வேண்டியவோ அவைகளைச் சீக்கிரம் வரவழைத்துத் தயாராய் வைத்துக்கொள்வீர்களாக வென்று ஆணையிட்டனன். அதனை மந்திரிகள் கேட்டு நடுக்குற்று அரசன் கூறியபடி சுவர்க்கத்துக்கு நிகராய் நகரமமைத்து ஓர் சிவாலயத்தை அற்புதமான ரத்ன சிற்பவேலைகளுடன் நிர்மித்தனர். சிவதீக்ஷைக்கு வேண்டிய திரவியங்களுஞ் சன்னத்தமாயின. அரசனும் அவைகளைக்கண்ணுற்று மிக மகிழ்ந்து ஸ்நானஞ்செய்து விபூதிருத்திராக்கமணிந்து முனிவரிடஞ்சென்று சுவாமி, சூரியன் உச்சிக்கு வருகின்றான். இஃதே புண்ணியகாலம். தீக்ஷைக்கு வேண்டிய சாதனங்களும் தயாராயிருக்கின்றனவென்று கூறினான். முனிவரும் அப்பில்வவிருக்ஷமூலத்தில் பாணலிங்கங்களைப் பிரதிஷ்டைசெய்து பில்வபத்திரம் முதலிய சாதனங்களாற்பூசித்து ஹோமஞ்செய்து சாம்பவவித்தையை அரசனுக்குபதேசித்தார். அரசனும் அச்சாம்பவ வித்தையைப்பெற்று அதனால் ஓர் திவ்யதேஜஸையுடையவனாய் ராகுவினின்றும் விடுபட்ட சூரியன்போல் பிரகாசித்தான். மந்திரிகளும் அவ்வரசனைக்கண்டு வணங்கி அவர்களும் சாம்பவவித்தையை யுபதேசிக்கப்பெற்றனர். அவ்வளவேயன்றி அம்மந்திரிகளின் மனைவியரும் மற்றுமுள்ள வேலைக்காரர்களும் சாம்பவவித்தையையுபதேசி

க்கப்பெற்று விளங்கினார்கள். அந்நகரமுழுவதும் சாம்பவர்களால் நிறையப்பெற்று விளங்கியது. அந்நகர்முழுவதும் சாம்பவச்சொல்லே விளங்கியது. அங்குள்ள சிவாலயம்போல் அழகிய சிவாலயமெங்குமில்லை. அந்நகரத்தைத் தூரத்திலேயேகண்டு யமதூதர்களெல்லோருமோட்டம் பிடித்தனர். சாம்பவர்களது மகிமை இப்படிப்பட்டதாதலின் உலகில் அம்மகிமையை வர்ணிக்க எவனாலாகும்! அவ்வரசன் முன்சம்பாதித்த தனங்களெல்லாவற்றையும் சாம்பவர்களுக்குதவினான். அங்கு தினந்தோறும் கோடிக்கணக்காயிருக்கும் லிங்கங்களைப்பூசித்து அப்பில்வமரத்தடியில் எண்ணிறந்த சாம்பவர்களுக்கு அறுசுவையோடுகூடிய அன்னதானஞ்செய்து வந்தான். அந்தப்பில்வ விருக்ஷத்தைச்சுற்றி ஒருயோஜனைநீளம் பிராகாரமமைத்து அதனில் மணிமயமான மண்டபமியற்றி அதன்மத்தியில் அரையோஜனை விஸ்தாரம் ரத்னமயமான வோராலயமமைத்துக் கோடிக்கணக்காய் லிங்கங்களைத்தாபித்தான். ரத்னதீபங்களாலும் ரத்னசித்ரங்களாலும் எவ்வுலகினும் நிகரற்று அற்புதமாய் அவ்வாலயம் விளங்கியது. அவனது மனைவியர்களெல்லாம் இறைவனது ஆலயத்தில் காலைமாலைகளில் அற்புதநடனஞ் செய்தனர்.

அதனைத் தரிசிப்பதின் பொருட்டு நாங்கள் செல்லுகின்றோம். அவ்வரசனுமெங்களைச் சைவக்கூட்டமென்று மிகவும் ஆதரிக்கின்றனர். இவ்வரசனால் பூவுலகிலுள்ளோரெவரும் சைவராயினர். இவர்காலத்தில் அசைவரென்போர் ஒருவருமில்லை. யமலோகத்திலும் நரகவாதனை யடைவோரொருவருமில்லை. அத்தேயத்தில் பூச்சிப்புழுக்களும் சுவர்க்கமடையுமாயின்மிருகங்களைப்பற்றிக் கேட்பானேன். அவ்வரசனுடைய காலத்தில் பூவுலகுமுழுவதும் சைவாலங்காரமாகவே விளங்கியது. அவ்வரசன் சைவசரீரம் பெற்றுப் புத்திரமித்திர மந்திரிபிரதானிகள் வேலைக்காரர்கள் முதலியவர்களுடனிவ்வுலகிலோர் கற்பம் வசித்துப்பின்னர் கைலையடைந்து ஸ்வராஜ்யம்பெற்றுப் பேரானந்தமடைந்தனன். இப்படியே பலர் சங்கரானுக்கிரகத்தால் சகலபாக்யமும் பெற்றிருந்தனர். இந்த வேட்மங்கையும் மகாதாரித்திரத்துடன் வியாதி முதலிய தொந்தரவடைந்து விறகுவிற்று ஜீவனஞ்செய்து மரிக்குங்காலத்தில் ஓர் சாம்பவரது எச்சிலிலை மேல்வீழ்ந்தது. அது சம்பந்தித்த கையை யமன் பூசை செய்தான். இவள் சுவர்க்கலோகம் வந்ததும் இந்திரனும் பூசித்தான். இப்போது நமது சத்யலோகம் வந்திருக்கிறாள். இங்கு

நாமும் பன்னெடுங்காலம் பூசித்தோம். இனி விமானமூர்ந்து விஷ்ணுலோகமடைந்து பலகாலம் வசித்து மிக்கசந்தோஷமடைவாள். அதற்குப் பின்னிவள் க்ஷீரசாகரத்தின் கன்னிகையாயுதிப்பாள். மகாலக்ஷணமுடைய சமுத்திர கன்னிகையாகிய இவளைக் கண்டு அக்ஷீரசமுத்திரனும் லக்ஷ்மியென்று பெயரிடுவான். உமையினுடைய பிரசாதத்தினால் இக்கன்னிகை கிடைத்தனளென்று மிக்கக்களிப்பெய்தி லக்ஷ்மியென்னும் பெயரிட்டு ரூபலாவண்ணியம் நிறைந்தவளாகிய அக்கன்னிகையைப் பார்த்து சந்தோஷமடைந்து மலர்ந்த தாமரை மலரினை யொத்த முகத்தினளாகிய இக்கன்னிகையை யாருக்குக் கொடுப்போம். கர்மதேவர்கள் பலரிருக்கின்றனர். அங்ஙனமே ஆஜானதேவர்களுமெண்ணிறந்த பலருளர். அவருள் யாருக்காவது ஒருவருக்குக் கொடுப்போமா. அக்கர்ம தேவருள் நாராயணரொருவரே மிகச்சிறந்தவர். அவருக்குக் கொடுப்பதே நலமென்று கொடுப்பான். அவர் இவளை மணந்து இவ்விடத்திலேயே சிலகாலமிஷ்டப்படியிருப்பர். பின்னர் அவள் விஷ்ணுவோடு கூடச் சுகமாய் சர்வலோகங்களாலும் போற்றப்பெற்றவளாய் இந்திரா, கமலா, பத்மா, ஸ்ரீ என்பது முதலிய பெயர்களாலும் வழங்கப்பெற்று லோகோத்ரமாய் விளங்குவாள். இப்படிப்பட்ட பாக்யம் இவளுக்குளது. அப்பாக்கியமும் சாம்பவர் புசித்த எச்சிலிலையின் சம்பந்தத்தால் வந்ததன்றி வேறல்ல. சிவநைவேதனத்தின் மகிமையும் சிவபக்தர் மகிமையுங் கூறவுமியலுமாவென்று பிரமதேவர் கூறினார். தேவர்கள்கேட்டுப் பரமாச்சரியமடைந்து சிவத்தியானபரர்களாயிருந்தனர். சிவநைவேத்ய அன்னத்தைப்புசித்த புண்ணியத்தினாலேயே மிக்க சுந்தரமான ருருவங்கிடைக்கின்றது. அதன் மகிமை இப்படிப்பட்டதென்று எவ்விதங்கூறலாகும். சிவனுக்கு அர்ப்பணஞ்செய்த தீர்த்தமும் நிவேதனஞ்செய்த கனியும் சிவநைவேத்ய பாத்திரத்தினுடைய மகிமையுமென்னுற கூறப்பட்டதென்றதைக் கேட்ட விப்ரனும் அவரை நமஸ்கரித்து அஞ்சலிசெய்து சித்த லிங்கார்ச்சனை செய்வதில் ஆவாக்கொண்டனன். இப்படிப்பட்ட லிங்கமானது பரமமங்களமளிப்பதாதலால் கிடைப்பதரிது. சகல தேவர்களாலும் பூசிக்கத்தக்கது. இவ்விலிங்கத்திற்குச் சமர்ப்பிக்குங்கனிநீர் அன்னம் முதலியவைகளைப் புசித்தவன் மகாபாக்யவானாகின்றான். சிவன் கூறுகின்றார். ஓ தேவி! இவ்வாறு அவர் கூறிய வாக்கியத்தைக்கேட்டுக் கந்தர்வராஜன் பூசிக்கவேண்டிய சகல சாதனங்களையுஞ் சேகரித்துக்கொண்டு அவ்விலிங்கத்தை அற்புதமாகிய

திவ்யரத்னங்களாலுமர்ச்சித்துத்தன்னுடையமனைவியர்களை வரவழை த்து அவ்வாலயத்தில் பூஜாகாலத்தில் நாட்டியஞ் செய்யவேவினன். அவர்களும்அவ்வாறேகானமும்நாட்டியமுஞ்செய்துருத்திரவீணையை க்கையிலெடுத்துமீட்டி ஆனந்தபரவசர்களாய்,ஓகோ! சகலவபீஷ்டங் களையும் இந்நாதமேயளித்திடுமென்று கூறி, நாட்டியத்தின் முடிவில் ஓ சுவாமி! நாங்களெல்லோரும் தேவரீருடைய ஆராதனைக்குச் சாத னமாகிய ருத்திரவீணை யாகவேண்டுமென்று பிரார்த்திக்க, நாம் சித்தேசசொரூபமாக விருந்து அவ்வாறே வரங் கொடுத்தருளி னோம். அவ்வாறு வரம்பெற்றமையால் அவர்களெல்லோரும் நமது கைலாயத்தில் ருத்திரவீணையாகப் பெற்று விளங்குகின்றனர். ஓ கிரிஜே! அதனினியநாதத்தைச் சற்றுகேட்பாய். அது எவ்வளவி னிமையாயிருக்கின்றதுபார்ப்பாய்என்று சிவபெருமான்கூறியருளிய தைக்கேட்டுக்கௌரியும் அவ்வாறே அவ்வுருத்திர வீணாநாதத்தைச் சற்று சாவதானமாய்க் கேட்டதும் சிவனோடுகூட சிருங்காரவிலா சோற்சவஞ் செய்வதில் சற்று பிரியமுள்ளவளாயினள். சிவபெரு மானும் வசந்தோற்சவத்தினிகழ்ந்த கஸ்தூரி முதலிய நறுமணத்திர வியங்களையணிந்து அங்கிருந்து மலர்ந்த தாமரையோடுகூடிய ஓர் திவ்யதடாகமடைந்து ஜலக்கிரீடை செய்யவிரும்பி அவ்வாறே செய் ததினால் சிரமமுற்று அதற்கருகிலுள்ள திவ்யரத்னமண்டபத்தை யடைந்து அதன்மத்தியில் விளங்கும் சிம்ஹாசனத்தின்மீது கிரிஜை யுடன் வீற்றிருக்க விரும்பி வெண்பட்டாடையணிந்துதிவ்யபூஷணங் களாலலங்கரித்துச்சந்தன முதலியவைகளைப்பூசிச் சந்தோஷத்துடன் சிறிதுநேரம் வீற்றிருந்தனர். பின்பு புன்னை மந்தாரை முதலிய நறுமணமலர்களால் நித்யாலங்காரம்பெற்று விளங்குவதும் அற் புதயோஜனை பரிமாணமுடையதுமாகிய ஒருப்பரிகையையடைந்து தேவியோடுகூடப் பரமசிவன் பரமானந்தமாய் ரமித்துக்கொண்டி ருந்தனர். பாவமெனும் பெருங்கானகத்திற்குக் காட்டுத்தீயும், பிறப்பிறப்பு எனும் சம்சாரத்துக்கு ஹாலாலவிஷமாயும், ராகத்து வேஷமெனும் விட்டிற்பூச்சிக்குத் தீபச்சுடருமாகிய காலகாலன் சிலகாலத்தைச் சிருங்காரலீலா விலாசத்தாற் கழித்தனர்.

இருபத்து மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.

உ

பிரபவேகம:

# இருபத்து நான்காம் அத்தியாயம்.

## சிவபெருமான் ரேவாநதிக்கரையை யடைந்தது.

அங்கு சிருங்கார லீலாவிலாசத்தால் ஜ்வலிக்கும் திவ்யமண்டபத்தினிடத்தில்விளங்கும் அஷ்டமூர்த்தியாகியபரமேஸ்வரனை அம்பிகை ஆனந்தத்துடன் ஆலிங்கனஞ்செய்து ஓபகவானே! சத்யலோகமும்தேவரீரது ஆக்ஞையாலுண்டாக்கப்பட்டதன்றோ? அதன்மகிமையைக்கேட்கவேண்டுமென்று மிக்கவிருப்புற்றிருக்கின்றேன். அவ்வுலகில் வசிப்பதற்கு ஏது யாது? அவ்வுலகைத்தேவரீர்யாரைப்பாலனஞ்செய்ய ஏற்படுத்தி யிருக்கின்றீர்கள்? அவ்வுலகைப் பாலனஞ் செய்யத்தக்கவர் எந்த புண்ணியத்தைச் செய்தவர்? இஃதெல்லாவற்றையுமெனக்கு விஸ்தாரமாய்க்கூறவேண்டும், ஓபாலலோசனா! அவர் அவ்வுலகை எவ்வளவுகாலம் பாலனஞ் செய்வாரென்றுவினவினர். அப்போதுபரமேஸ்வரன் தேவியைப்பார்த்து ஓதேவி! நீகேட்டுக்கொண்டபடி கூறுகின்றேன். சத்யலோகமானது அடைவதற்கரிது. அது மகாபெரும் புண்ணியங்களாலேயே யடையப்படும். சுமேரு பர்வதத்தின் நடுவிலுள்ளது. பூர்வமெனது திவ்யவிலாசங்களுக் கிடமாயிருந்தது. அவ்வுலகிலழகிய வனங்களும் நகரங்களும் எப்போதும் மலர்ந்துவிளங்கும் தாமரையோடு கூடிய திவ்யதடாகங்க ளெண்ணிறந்தவற்றை யுடையவாயிருக்கின்றன. அங்கு நவரத்னமயமான திவ்யலிங்காலயங்களும் விளங்குகின்றன. அவ்விலிங்கங்களைத் தரிசிப்பதினாலேயேசகலசுபங்களும்வளர்ந்தோங்குகின்றன. பூஜிப்பதினால்கிடைக்கும்பயனைக்கூறமுடியாது! அங்கு பசிதாகங்களால் தொந்தரையில்லை. பூர்வம் அங்குயான் லீலாவிலாச நிமித்தமிருந்தேன். அப்போது நந்திகேசன் என்னைக்காணாது எங்குசென்றேனென்று தேடித்திரிந்து கடைசியி லவ்விடம்வந்து சிங்காதனத்தில் வீற்றிருந்து தேவமுனிரிஷிகளால் துதிக்கப்பெற்று விளங்குமென்னைக்கண்டு சந்தோஷமுற்றுச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அஞ்சலிசெய்து கூறியதாவது, ஓசுவாமி! தேவதேவேசா! சர்வலோகேசா! தேவரீர் இங்கிருக்கின்றீர்களே, இதுவியாயமோ? கைலாயத்தினழகின் கோடியிலொருபங்கேனும் இங்கில்லை. அங்குள்ள உத்யானவனங்களினழகு எவ்வுலகினுமில்லை. அங்குள்ள மந்தார விருக்ஷங்களெப்போதும் மலர்

களாலும் கனிகளாலும் நிறைந்து விளங்குகின்றன. அங்கு எண்ணிறந்த கோடிகளாய் ஆங்காங்குண்டாகும் மந்தார விருக்ஷத்தின் கந்த மெவ்வுலகினும் வியாபித்துளது. அக்கனிகளின்ரசம் அமிர்தத்தையும் பழிப்பதே. அம்மாதுர்ய மெங்குளது! அதன்பரிமளம் கஸ்தூரியையும் பழிப்பதன்றோ? அங்குள்ள முல்லைமுதலியன எப்போதும் மலர்ந்து கொண்டே யிருக்கின்றன. அகண்டமாயழகிய பில்வ பத்திரங்கள் அங்குவிளங்குவனபோ லெங்குளது? அங்குள்ள பில்வ மரங்களெல்லாம் தளங்களா லெப்பொழுதும் அருகிலுள்ள சிவலிங்கங்களையருசித்துக்கொண்டேயிருக்கின்ற அவ்வழகெங்குளது? அப்படித் தளங்களாலும் மலர்த்தேன்களாலும் பூசிக்கும் அவ்விருக்ஷங்களை விடுத்து மற்றவிடத்திலும் மனஞ்செல்லுமா? அவைகளைச் சந்தோஷமாய்ப் பார்த்துக்கொண்டிருப் பதனாலேயே காலங்கழிப்பதன்றோ நன்று? அவ்வுத்யான வனங்களின் அழகு மனோவாக்குகளுக்கெட்டுமோ? மிக்க இனிமையாய்ச் செய்யும் வண்டுகளின் ரீங்காரத்தாலும் ரத்னமயமாய் விளங்கும் அன்னம் சகோரம் சாரசம் முதலியபறவைகளாலும் பொன்னிறமாகிய வாழைக்கனிகளாலும் அமுதரசத்துடன் கூடி விளங்கும் கரும்புகளாலும் எண்ணிறந்த பருத்தகட்டி மாம்பழங்களுடன் கூடிய மாமரங்களாலும் முத்து பவள முதலியவைகளாலும் புஷ்பசரங்களாலும் மலர்க் குவியல்களாலும் சந்தோஷித்து வரிசைவரிசையாய் நிற்பவும் கரியமலைகளைப் பரிகசிப்பவுமாகிய வண்டுக்கூட்டங்களாலும் கைலாயம் விளங்குவது போலெவ்விடம் விளங்குகின்றது? ஒபிரபோ! இஃது கைலாயத்துக்கு வெளியில் ஏதோ ஓரிடத்திலுளது! அப்படிப்பட்ட கைலாயத்தை விடுத்து இங்கேனிருக்கின்றீர்கள்? இது சிவவிலாசத்துக்குத்தக்கதாகுமா? ஓசுவாமி! அடியேனுக்கும் இவ்விடம் ருசிக்கவில்லையாயின் தேவரீருக்கு எவ்வாறு ருசிக்கின்றது! இதுபோல் அழகியவிடம் கைலாயத்திலில்லையா? தேவரீரது நிலயமாகிய கைலையிலுள்ள அழகின் லேசலேசமு மிங்கில்லையே. உலகிலெங்கு மிராத ஆச்சரியகரமான வஸ்துக்கள் எண்ணிறந்தனவாய்க் கயிலாயமொன்றிலேயே யிருக்கின்றன. ஓதேவனே! கைலாயத் துவாரத்திலிருக்கும் ரத்னமாளிகைபோலப் பிர்மாண்டங்களு ளெங்கேயாவ திருக்கின்றதா? தேவரீர் அத்தகைய கைலாயத்தை விடுத்திங்கிருப்பது அடியேனுக் குசிதமாகத்தோன்றவில்லை. இதனை யான் தேவரீரிடம் விக்ஞாபனம் செய்துகொள்வது தகுதியல்லவென்றறிவேனாயினும் என்மனம் என்னை யிவ்வாறு கூற ஏவுகின்றது. ஒஜகதீஶ்வரா! இன்னும் தாங்க

ளனுக்கிரகிக்கத் தகுந்தவுலகம் பதினொன்குள. அவைகள் மிக்க சுந்தரமாயுமிருக்கின்றன. ஆயினும் அவையெல்லாம் கைலாயமந்திரத்துக்கு நிகருண்டோ வென்று நந்தீசன் கூறினான். அதற்குச் சதாசிவனாகிய யான் மிக்கமகிழ்ந்து பதில்கூறியதாவது, ஓநந்தீ! நீ கூறியது சரியே. கைலாயத்திலுஞ் சிறந்தவிடம் ஓரிடத்திலுமில்லை. அது மிக்ககோரமாகிய தவங்களாலுமடையக் கூடியதன்று. தேவர்களுக்குள் எனக்கன்னியமாகிய சிறந்த தெய்வமெப்படியில்லையோ அப்படியே கைலாயம்போலச் சிறந்தவிடமெங்குமில்லை. க்ஷீரங்கள் பற்பலவாயினும் கோக்ஷீரமெப்படியோ, மதுரமாகிய பொருள்கள் பற்பலவாயினும் வெள்ளைச்சர்க்கரையெப்படியோ, ஆடைகளுள் வெண்பட்டெப்படியோ, ஆபரணங்களுள் ருத்திராக்ஷமெப்படியோ, அணிபூச்சுகளில் விபூதியெப்படியோ, மனிதர்களுள் சாம்பவரெப்படியோ, ஸ்திரீகளுள் கிரிஜையெப்படியோ, தீர்த்தங்களுள் சிவகங்கையெப்படியோ திவ்யசரசுகளில் ருத்ரசரசு எப்படியோ, புரிகளுள் காசிப்புரி எப்படியோ, வாவிகளுள் ஞானவாவி எப்படியோ, மண்டபங்களுள் முக்திமண்டபமெப்படியோ, லிங்கங்களுள் விஸ்வேஸ்வரலிங்கமெப்படியோ, மூர்த்திகளுள் தக்ஷிணாமூர்த்தி யெப்படியோ, கிரிகளுள் இமயகிரி எப்படியோ, நதிகளுள் நர்மதை யெப்படியோ, முனிவர்களுள் அகத்தியனெப்படியோ, சகல மந்திரங்களுள் சிவபஞ்சாக்ஷரமெப்படியோ, சிவபூஜாசாதனங்களுள் பில்வபத்திரமெப்படியோ, வேதங்களுள் ருத்திராத்யாய மெப்படியோ, சர்ப்பங்களுள் ஆதிசேடனெப்படியோ, நாற்கால் ஜந்துக்களுள் விருஷபமெப்படியோ, வித்தைகளில் சிவவித்தை யெப்படியோ, போஜ்யங்களில் சிவநைவேத்யமெப்படியோ, இல்லத்தின்கட்டுகளுள் கிருகாந்தமெப்படியோ, ஆலயங்களுள் சிவாலயமெப்படியோ, அவயவங்களுள் சிவநமஸ்கார அடையாளம்பெற்ற சிரசெப்படியோ, குமாரர்களுள் சண்முகனெப்படியோ, லோகங்களுள் சுவர்ணமெப்படியோ, பிராமணர்களுள் சாம்பவரெப்படியோ, சகலரத்நங்களுள்ளும் சிந்தாமணியெப்படியோ, கிரகங்களுள் சந்திரனெப்படியோ, பாவனங்களுள் சுருதிவழிப்பட்ட விபூதியெப்படியோ, அப்படியே சகலவிடங்களிலும் கைலாயமொன்றே சிறப்புற்றுளது. கைலாயத்துக்கு நிகரானவிடமிருப்பதாக வேதங்களுளோரிடத்துங் காணப்படவில்லை. அப்படியாயினும் மகாபாபிகள் கைலாயத்தினும் சிறந்தவிடமுளதென்று கூறுகின்றனர்! எப்போதும் எனது சந்நிதானம் பெற்று விளங்கும் கைலையினுமுத்தமமானவிடமெங்குமில்லை. எங்

குள்ளவிசித்திரமாகிய ரத்னரசனைவேதங்களுக்குமெட்டாததோ இணை யற்ற சுகதேசமாகிய அக்கைலாயமே உத்தமம். அஃதே எனக்குப் பிரியம். ஓ நந்தீசா! ஓர் ரகசியங் கூறுகின்றேன். என் மனம் விரு ம்புமிடம் கௌரியின் சரீரமொன்று, காசியென்னும் புண்ணியபுரி யொன்று, சாம்பவர்களது சித்தமொன்று, கைலாயமென்னுமிட மொன்றெனவிந்நான்கேயன்றிவேறில்லை.இவைகளுள்ளும் சாம்பவர் களது சித்தமொன்றே மிகவும் பிரியமாயுளது. அங்கு நானனந்தப் பதுபோலெங்குமானந்திப்பதில்லை.யான்சாம்பவரால் பற்பலவிதமா யெப்போதும் பூசிக்கப்படுகின்றேன். அவருடைய சித்தபூமியிலேயே பரார்த்தம் யோசனை பரிமாணமுடையதாய் ரத்னமயமாய் விளங்கு மாலயமுளது. அவ்வாலயத்துக்கு ரத்னமயமான துவாரமும், மலர் மயமான பிராகாரம் கோடிகோடியாய் அச்சாம்பவர் சித்தத்தினில் கற்பித்துக்கொள்ளுகின்றனர். அங்குஅநேககோடி கற்பதருக்களாற் சூழப்பெற்றதும் கோடியோசனை விஸ்தாரமுடையதுமாகிய ஓர் சிம் ஹாசனத்தையும், அதன்மேல் அழகிய மலர்மெத்தையையும், அதன் மேல் வெண்பட்டுகளுடுத்திப் பற்பல திரவியமணிந்து திவ்யாபரணந் தரித்து நவரத்னமயமான தோள்வளையும் அரைஞாணும் அழகிய நூபுரங்களும் தரித்து விளங்குமென்னையும் உமாசகிதனுய்ப்பாவித்து, வீற்றிருக்குமென்னை அகருதூபங்களாலும் ரத்னநீராஞ்சனங்களா லும் பூசித்து, திவ்ய பக்குவான்னமலைகளாலும் சர்க்கரைக்குன்றுக ளாலும் புத்துருக்கு நெய்ப்பிரவாகங்களாலும் சந்தோஷிக்கச் செய்து, சூபம்,சாகம் முதலியவைகளை மலைபோன்றவாய் அவைக ளுடன் கூடிய அன்னபர்வதங்களாலும் தேன்பசுவினெய் முதலிய வைகளின் தாராப்பிரவாகங்களால் மிச்ரமாகிய அன்னகிரிகளாலும் தினந்தோறும் அச்சாம்பவர் எனக்குத் திருப்தி செய்விக்கின்றனர். அபாரமான அமுதக்கனிகளாலும் ஏலம் இலவங்கம் ஜாதிக்காய் முதலிய பரிமளத்திரவியங்களோடுகூடிய தாம்பூல பர்வதங்களாலும் மனோநிர்மிதமாகிய பற்பல பூஜாசாதனங்களாலும் தினந்தோறும் பூசிக்கின்றனர். அன்றியும் அப்படிப்பூசித்துப் பக்தி பரவசராய் மனதினுலேயே என்னெதிரில் கூத்தாடுகின்றனர். அன்றியும் பஞ் சாமிர்தப் பிரவாகங்களால் என்னை அபிஷேகிக்கின்றனர். இவ்வாறு பூஜாவிதானங்களோடுகூடிய சாம்பவரது சித்தத்தில் எவ்வளவு சவுக் கியமெனக்குளதோ அவ்வளவு சவுக்கியம் மற்றெங்குமில்லை. சகல சம்பத்துகளும் நிறைந்துள்ள இல்லத்தைவிட்டு வேறிடஞ்செல்லு மனிதனுலகிலுண்டா? யான் கௌரியுடன் கூடி விலாசம் செய்வ

தற்கு மலர்மாளிகையை யெப்பொழுதும் சாம்பவர் சித்தத்தாலியற் றிக்கொண்டே யிருக்கின்றனர். ஆதலின் யானதனைவிட்டு எங்குஞ் செல்லேன். என் சரீரத்தில் எனக்கு எப்படிப்பிரியமுளதோ அத னினுமிகுதியான பிரியம் எனக்குச் சாம்பவர் சரீரத்திலுளது. ரத்ன மயமாய் நிர்மிக்கப்பட்டவைகளும் திவ்ய முத்துச்சாலர்களுடைய வுமாகிய திவ்ய வெண்பட்டுக் குடைகளாலும் சந்திரகிரண கூட்டங் கள்போன்ற திவ்ய சவரிரோமங்களோடு கூடியவும் அற்புதமாகிய சுவர்ணப்பிடிகளுடன் கூடியவுமான சாமரங்களாலும் சாம்பவரது சித்தமே என்னைச் சேவிக்கின்றது. ஆதலால் சாம்பவரது சரீரமே எனக்கு மிக்க பிரீதிகரமான திவ்யாலயமாயுள்ளது. கைலாயத்தி லும் காசியிலும் கௌரியிடத்திலும் எனக்கு அத்தகைய பிரிய மில்லை. சாம்பவர் சித்தத்திற் செய்யும் பூஜைபோலவும் அப்பூசோப கரணங்கள் போலவும் அம்மலர் மாளிகைபோலவும் யாராலெங்கு எனக்குச் செய்யப்படுகின்றது? அப்படிப்பட்ட சாம்பவ ஸ்ரேஷ் டர் கலியில் எங்கேயாவது யாராவ தொருவரிருப்பார். அல்லது அநேகங்கோடிக்கு இருவரல்லது மூவரிருப்பர். அவர்களை நமஸ் கரிக்க வேண்டுமென்பதிற் சிறிதுமையமில்லை. இதுகாறும் நீ என் னைப் பூஜித்தாய். ஆயினும் அம்மகான்கள்போல நீ யுபாசித்ததில்லை யென்பதுண்மை. இப்போது யான் ரேவாநதிக்கரைக்குப்போக வேண்டும். அங்கு ஓர் சாம்பவ சிரேஷ்டர் என்னைத் தியானித்துக் கொண்டிருக்கின்றார். நான் கௌரியுடனங்கு சென்று அவர் செய்யு மரிய பூசைகளைப் பெற்றுச் சுகமாய்ச் சிலகாலம் வசிக்கவேண்டும். அவர் சாயங்காலத்தில் மிக்க ஆதரவுடனென்னைப் பூசிக்கின்றனர். மஹாநிசியில் மகாபூசை செய்கின்றனர். அன்றியும் பின்னர் மலர் மெத்தை யொன்றைக்கற்பித்து எனக்குச் சமர்ப்பிக்கின்றனர். ஓர் ரத்னமாளிகை யுண்டாக்கி யதன்மத்தியில் ஓர்விசாலமந்திர மியற்றி சகலசாதனங்களையுமமைத்துரத்ன தீபங்களும்அமுதரசம் பெருகும் கனிகளுமமைத்து விசாலஞ்செய்யும் பொருட்டு என்னைப் பிரார்த் திக்கின்றனர். அப்படியே யான் அவ்விசால மந்திரத்திற் சென்றதும் அவர்நித்திரை யென்னும் முத்திரையுடன் கூடிப்பிர்மானந்த முற்றி ருக்கின்றனர். ஓநந்தி! நீஇப்போது இங்கு தாமதிக்காது சீக்கிரம் கைலைக்குச் செல்வாயாக. அங்கு கைலாயத் துவாரத்திலிருந்து முன்போற் பாலனஞ் செய்திருப்பாயாக என்றனர்.

இருபத்து நான்காம் அத்தியாயம்

முற்றிற்று.

பிங்களாயநம:

# இருபத்தைந்தாம் அத்தியாயம்.



## சாம்பவசிவபூஜை.

வியாசர்-இங்ஙனங் கூறியமகாதேவன் மஹாதேவியுடன் கூட ரேவா நதிக்கரையிலுள்ள சாம்பவரது மனமெனுமழகிய வாலயத்தையடைந்து அங்கு அச்சாம்பவரால் சகல தேவசிரோமணியாயும், அனந்த வேதவேதாந்தங்களாற் போற்றப் பெற்றவராயும் பற்பல கணங்களோடுகூடி விளங்குபவராயும் மகா பக்தியுடன் தியானிக்கப்பட்டனர். அச்சாம்பவர் சகல தேவகணங்களால் போற்றப் பெற்றவரும் பனிவரைபோல் விளங்கும் இடபத்தின்மீது வீற்றிருப்பவரும் ரத்னகுடைகளின் நிழலினால் மறைக்கப் பெற்ற வாகனத்தை யுடையவரும் அபாரமான சாமரைகளால் இனிமையாய் வீசப்பட்டவரும் கௌரியினது அழகியதேக சம்பந்தத்தால் பரமானந்த முற்றவருமாய் ஈஸ்வரனைத் தமது மனதா னிர்மிக்கப்பட்டு மலர்மெத்தைகளாலும் ரத்னப்பிராகாரங்களாலும் மணிமண்டபங்களாலுஞ் ஜ்வலிக்குந் திவ்யாலயத்திலிருப்பவராய்ச் சிந்தித்தனர்; சிறந்தநிவேதனங்களாலும் புஷ்பபூஜையினாலும் சந்தோஷிப்பித்தனர். பின்னர் அபாரமான ரத்ன துவாரங்களைக்கடந்து அவ்விறைவனிடம் தாம் சென்றதாய்ப் பாவித்தனர்; தம்மனதிற்கு திருப்தி எங்ஙன முண்டாகுமோ அப்படி புஷ்பங்களாலர்ச்சித்துத் திருப்தியடைந்தனர். ரத்ன சிம்மாசனத்தின்மீது விளங்கும் அவருக்கு மதுபர்க்கமுதலியவற்றாலுபசாரஞ்செய்தார். கோக்ஷீர பிரவாகத்தாலும்நெய்க்கடலாலும் தயிர்க்கடலாலும் சர்க்கரைப் பர்வதங்களாலும் கனிரசங்களாலு மிறைவனுக் கபிஷேகஞ் செய்து பின்னர் கங்காப்பிரவாகம் எண்ணிறந்த தாரையாய்ச் சிவனது சிரசில் விழும்படி அபிஷேகித்தனர். பின்னர் சுகவுஷ்ணமாகிய தீர்த்தத்தை ரத்னகுடங்களால் மொண்டு உமையுடன் கூடியமகேசுவரனுக்கு ஸ்நானம் சமர்ப்பித்தனர். அவ்வாறுஸ்நானம் சமர்பித்து நினைப்பதற்கரிதும் பார்ப்பதற்கரிது மாகிய திவ்விய வெண்பட்டாடைகளைச்சமர்ப்பித்து அச்சாம்பவர் பின்னரெண்ணிறந்த ரத்னங்களா னிர்மிக்கப்பட்டதும் முல்லைமுதலிய மலர்களால் மெத்தையிட்டு விளங்குவதுமாகிய மகா சிம்மாதனத்தில் வீற்றிருக்கச் செய்து திரி

புண்டரமாய் விபூதியணிவித்து நறுமணங் கமழும்சந்தனத்தைப் பூசி விலையிடக்கூடாத ரத்னாபரணங்களால் அலங்கரித்து தூபதீபமுதலி யவைகளைச் சமர்ப்பித்து நூறு யோசனை விஸ்தாரம் நாற்பக்கத் திலும் ரத்னதீபமாலைகளைத் தீபிக்கச்செய்து, சூபங்கலந்து புத் துருக்கு நெய்யொழுகும் திவ்யான்னத்தையும் அறுவகையுடன் கூடி யசாக விசேஷங்களையும் மலைபோலும் சித்திரான்னங்களையும் சர்க் கரை பால் மது முதலியவைகளா லாக்கிய பாற்கடல்போலும் பர மான்னத்தையும் பின்னும் பற்பல விசித்திர நிவேதன வகைகளையும் நிவேதித்தனர். பின்னர் அமுதம்தேன் முதலியவைகளையும் இளநீ ரையும் பிரவாகம் பிரவாகமாய்ச் சமர்ப்பித்துப்பின்னர் மிக்க சீதள மாகிய தாம்பூலதளவரிசைகளை மலைபோலமைத்துப் பாக்கு ஏலம் லவங்கம் கஸ்தூரிமுதலிய நறுமணத் திரவியத்துடன் கலந்ததிரவியத் தை மலைமலையாய்ச் சமர்ப்பித்துப் பின்னர் சாமரைக்கோடிகளானு முபசரித்து மந்தமாருதஞ் சேவிக்கச்செய்து சந்திரமண்டலம்போன் ற அழகிய கண்ணாடிகளைத் தரிசிப்பித்து எண்ணிறந்த அப்சரமங் கையர்களின் கூட்டங்களால் நிர்த்தனம் புரிவித்து இடையிடையே மந்தாரபுஷ்பவருஷஞ் செய்வித்துப்பரமானந்தமுற்றிருந்தார். இவ் வாறு பக்தியோடு அவர்செய்யும் அபாரமான பூஜையினால் பர மேஸ்வரன் மிகவுஞ்சந்தோஷங் கொண்டவராய் அச்சாம்பவரைப் பார்த்துக் கருணைகூர்ந்து இனியமொழி கொண்டு கூறலாயினார். ஓசாம்பவபுங்கவ! நீசெய்தபூஜைக்குப்பிரதியாய் நானென்ன செய்யப் போகின்றேன். நான் பரமசந்தோஷ மெய்தினேன். நீவேண்டும் வரத்தைப் பெற்றுக்கொள்வாயாகவென்று திருவாய்மலர்ந்ததும் சாம்பவர் ஆனந்தபரவசமாய் யாதும்தெரியாது எல்லாவற்றையு மறந்து தம்மையுமறந்து ஒருமுகூர்த்தநேரம் அசைவற்றிருந்து ஆனந்தக்கண்ணீர்ததும்பச் சிரசில் அஞ்சலிகூப்பி

> நமோ நமஸ்தேஸ்து நமோ நமஸ்தே நமோ நமஸ்தே கிரிஜா
> ஸகாய || ம்ருத்யுஞ் ஜயாநாமயமாமவாவ கதிஸ்த்வமேவாஸிம
> [மேந்து மௌளே.

ஓ நாதனே! சகல ஜகங்களையும் தகிக்கவெழுந்து சகல தேவா சுரர்களை யெங்குசென்றாலும் விடாது கொளுத்தத்தலைப்பட்ட காள கூட மகாவிஷம் வெளிப்பட்டதாகிய மகா ஆபத்தினின்றும் சகல சராசரங்களையும் தேவரீரன்றோ ரக்ஷித்தீர்? சகல ஜகத்திற்கும் மங் களந்தருபவளாகிய சர்வமங்களையுடன்கூடித் தேவரீரன்றோ சகல

ஜனங்களுக்கும் தடையற்ற சுகங்கொடுக்கின்றவர்? தேவரீரது பாதாரவிந்தத்தைத் தியானித்தால் தனதான்யம் பார்யாபுத்ரமித்ரர் முதலிய சம்பத்துகளும் மலைபோல் வளர்ந்து அவர்களுடன்கூடி சுகமாயிருந்து இறுதியில் சம்சாரபந்தம் நீங்கி மோக்ஷமடைவதற்கு ஏதுவாகும்.

ஓ பிநாகபாணியே! தேவரீரது பாதாரவிந்தமானது எனக்கு ஆனந்ததாரா வருஷத்துக்கு மகாமேகமாயுள்ளது. அது பார்க்கப் பார்க்கப் புதிது புதிதாய்த் தெவிட்டாத ஆனந்தமளிக்கின்றது. அது மகாபாபங்களாகிய மலைகளைப் பொடிப்பொடியாக்கி ஆனந்த கங்காப்பிரவாகத்தில்என்மனதை மூழ்கினதாகச்செய்கின்றது.முன் செய்த அபாரமான புண்ணியங்களும் அளவற்ற தானங்களும் அரிய தவங்களுமெனக்குப் பரிபக்குவப்பட்டன. அதனால் ஓ சந்திர மௌளே! எனக்கு இத்தகைய ஆனந்த கங்கையானது விருத்தியடைகின்றது. தேவரீரது பாதபத்மஸ்மரணேந்து தாரையானது அற்புதமான ஆனந்ததாரையை யெனக்குப் பெருகச்செய்கிறது. ஓ திரிணேத்ரா! யானே பவித்திரன். தேவரீரது கருணைகடாக்ஷத்துக்கு யானே இலக்கிய மாகின்றே னன்றோ? எவருடைய பாததரிசனமானது சுரேந்திர லோகபோகங்களையும் துச்சமாய் நினைத்துத்தள்ளச் செய்கின்றதோ, எவரது தரிசனத்தினால் சகல தேவகணங்களும் வந்திகளாய் முன்னோடுகின்றனரோ, வாணியும் பிரமனை விடுத்து நாவின் முனையில்வந்து நிற்கின்றனளோ, அப்படிப்பட்ட இறைவன் தேவரீரன்றோ? மலைக்குநிகராகிய திவ்யான்னங்களைத் தானஞ்செய்வதாலும் கோதானங்களாலும் தடையற்ற சுகம் கிடைப்பதில்லை. ஓ சந்திரமௌளே! அப்படிப்பட்ட சுகம் தேவரீரது சரணாரவிந்தங்களைப் பூசிப்பதினாலேயே கிடைக்கின்றது. அபாரமாகிய சம்சார மகாசமுத்திரத்தை வற்றச்செய்வதில் தேவரீரது தியானமொன்றே மகா அக்கினிக்குச்சமானமாகின்றது. தேவரீரது சரணமொன்றே திவ்ய ஐஸ்வர்யத்தையும் அந்தத்தில் முக்தியையும் பெறுதற்குத் தகுதியாகியவரனையளிக்கத்தகுதியாயுள்ளது. ஓ தேவரே! வேண்டியவரனைப் பெற்றுக்கொள்ளென் றருள் புரிந்தீர்களே, தேவரீரது சரணாரவிந்தங்களைத் தரிசிப்பதைத்தவிர வேறே பெறக்கூடியவரமுளதோ? ஆதலின் அத்தகையவரத்தைக் கொடுத்து என்னை ரக்ஷித்தருளவேண்டும். ஓ தேவா! பிரமாதிகளாகிய சகலதேவர்களின் சித்தகமலத்தில் விளங்குவதும் சரணாகதர்களை ரக்ஷிப்பதுமாகிய தேவரீரது பாதாரவிந்தத்தை அநாதனும்தீனனுமாகிய யான்

சரணமடைகின்றேன். யான் மரணமடையுங்காலத்தில் தேவரீரது பாதாரவிந்தத்தையெனக்குத்தரிசிப்பித்தருளவேண்டும். அநாதனுய் அல்லற்படுமெனக்கு மரணகாலத்தில்தேவரீரது பாதத்தையேதுணையாகவருளவேண்டும். ஓ ஜகதீஸ்வரா! சந்திரகலாதரா! யான் மரிக்குங்க்ஷணத்தில் விபூதிருத்திராக்ஷ மணிந்துகொண்டு தேவரீரது பாதாரவிந்தத்தையே சிந்திப்பதிலெனக் கிச்சைவரும்படி தேவரீரருளவேண்டும். அடியேனுக்குத் தந்தை தேவரீரே. தாய் பவானியே! உங்களிருவருடைய பிரசாதத்தாலெனக்கு மஹேஸ்வராராதனைசெய்து விளங்குஞ்சந்ததிகள் வளர்ந்தோங்கவேண்டும். இஃதோர்வரம். உலகில் சிவார்ச்சனை செய்வோர்களது பாதாரவிந்தத்தைப் பூசிப்பதற்காகவே தனத்தையார்ச்சிக்க விரும்புவோர்களே மகான்களாவர். அப்படிப்பட்ட மகான்களே எனது சந்ததியாகவேண்டும். அனந்த கல்யாணபரம்பரைகளுக்கு ஏதுவானது பரமேஸ்வரஸ்மரணமொன்றே. அஃதே எனக்கு எப்போதும் வேண்டியது. ஓ ஈசனே! தாயுந்தந்தையும் நீரே. ஆதலின் என்னைத்தீனபந்துவாகிய தேவரீர் கருணுகடாக்ஷத்தால் சற்றுநோக்கி யருளுங்கள். அபாரமாகிய பாதகங்களுக்குத்தேவரீர் பிரளயகாலாக்னியன்றோ? அப்படிப்பட்ட பாதாரவிந்த ஸ்மரணமானது அநேககோடி ஜன்மங்களிற் பூசைசெய்தவருக்கன்றோ நிகழும்? ஸ்ரீகாலகாலா, என் சித்தத்தினில் தேவரீரை எப்போதும் சிந்திக்கின்றேன். எனது மோகத்தைத்தேவரீரது சரணந் தொலைத்துவிடுக. ஹே பூதநாத! பகவந்! கிரிஜாசகாய! ஹேகௌரி! தேவீ! கிரிஜே! சிவவல்லபே! என்றனைக் காத்திடு. ஓ மாராந்தகா! யமாந்தகா! சந்திரமௌளே! ஓ மதுகைடபநாசினி! தேவீ! என்னை ரக்ஷியுங்கள். ஹே பிரபோ! மோஹசத்ரோ! த்ரிலோசனு! சுராசுரஸார்வபௌம! என்னிடம் கருணைகொள்ளுங்கள். ஹேஞானஜனனீ! பிரளயகாலத்தினிறுதியில் செய்யும் சிவவிலாச! பரமானந்தரூபிணீ! என்னிடம் பிரசாதங் கொள்ளவேண்டும். ஓ தாக்ஷாயணி! பிரணத பாப விநாக தக்ஷே (நமஸ்கரிக்கின்றவர்களின் பாபத்தை நாசஞ்செய்வதில் சாமர்த்தியமுள்ளவளே!). அனன்னியகதியாகியவென்னை உனது அபாரமான கருணுகடாக்ஷங்களுக்குச் சற்று கோசரஞ் செய்வாயாக. ஓ ஈசா! உனது பாதாரவிந்த பஜனத்தையே செய்வேனு? ஓ சிவே! பவானி! எனது வாணியானது எப்போதும் உன் சம்பந்தமாகவேயிருக்கட்டும். சகல தேவாசுரர்களுக்குப் பிரபுவும் உமாகாந்தனும் பிரசாந்தனும் சந்தான விருக்ஷ புஷ்பமண்டப மகாசிம்ஹாசனத்தில்

வீற்றிருப்பவனும் வணங்கும் தேவக்கூட்டங்களது கிரீடகோடிகளில் விளங்கும் திவ்யபாதாரவிந்தத்தையுடையோனும் ஆகிய தேவரீரையே பஜிக்கின்றேன். ஹே ம்ருத்யுஞ்சயா ! என்னைரக்ஷியுங்கள். ஓ! தேவதேவா ! சகலவேதாந்தங்களும் சகலதேவமுனிவர்களும் சோமாவதம்சராகிய தேவரீரையே யாராதிக்கவேண்டுமென்று கூறுகின்றார்கள். ஓபகவனே ! தேவரீரது பாதபத்மம் அவர்களால் எப்போதும் பூசிக்கப்படுகின்றது. ஓ இறைவனே ! உமதுருவமானது இயமநியமயோகங்களாலும் யாகங்களாலும் தானங்களாலும் தீனர்களைக் காப்பாற்றுவதினாலுமாகிய நற்கருமங்களாலு முடியாது. சர்வாணியினது குஜகலசங்களில் விளங்கும் திவ்யசந்தன குங்குமங்களின் காந்திப்பெருக்கத்தால் விளங்கும் தேவரீரது பாதபத்மத்தை வணங்குகின்றேன். ஓ ஜகதீஸ்வரா ! உம்மையே நான் சரணமடைகின்றேன். அர்த்தேந்துமௌளே ! என்னையே தேவரீர் கருணையோடு நோக்குங்கள். தேவரீரது பாதாரவிந்தம் அடியேனுக்கு மேன்மேலுஞ் சுகத்தையே செய்க. பாபக்கூட்டங்களைத் தூரத்திநீக்குக. ஓகாலகாலா! சகலஜகங்களையு முண்டாக்குதல் பாலித்த லழித்தலாகிய இம்முத்தொழிலும் தேவரீரது பாதாரவிந்தம் அநாயாசமாய்ச்செய்யுந்தொழிலன்றோ? அது ஓர் விளையாட்டுப்போன்றதே. அப்படிப்பட்ட பதாரவிந்தத்திற்கு என்னைரக்ஷிப்பதும் ஓர் பெரிதோ? ஆதலின் அது நம்மவனிவனென்று நினைக்கவேண்டும். அதுவே எனக்குப்பாக்கியம். ஓசம்போ! உனது சரணாரவிந்தபஜனமே எனக்கு நிதியாயுளது. தனமும் அதுவே. சுகசமுத்திரமுமதுவே. அஃதே எனக்குச் சகலமும்.

இருபத்தைந்தாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

கிருத்திகாஸோநவேநம:

## இருபத்தாறும் அத்தியாயம்.

### சிவபூஜாமஹிமை.

வியாசர்:-இவ்வாறு பிரார்த்திக்கும் சாம்பவரது மொழியை இறைவன்கேட்டு உமையுடன்பரமசந்தோஷத்தினால் கருணைகூர்ந்து அமிர்தம் போன்ற திவ்யவசனத்தைக் கூறுவாராயினர். ஓ பக்த

புங்கவா! செய்தபூஜையினால் மிகவும் பிரீதியுடையவராயினோம். நீ செய்த தோத்திரத்தினால் யாமடைந்த சந்தோஷம் சொல்லி முடியாது. நீ பிரார்த்தித்தவரன் எம்மாலளிக்கப்பட்டது. பத்தர்களுக்குக் கொடுக்காதவரன் யாதுளது? நீ செய்த தோத்திரத்தை எவர்படிக்கின்றாரோ அவருக்குச் சந்ததியும் ஐஸ்வரியமு மேன்மேலும் வளர்கவென்று கூறிப் பூஜையை யேற்றுக்கொண்டு சிவபெருமானவ்விடத்திலேயே அந்தர்த்தானமாயினர். ரிஷிகள் கேட்கின்றனர்—இப்போது தாங்கள் கூறிய அமுதப்போன்றதும் மகாபாபங்களைத் தொலைச்செய்வதுமாகிய திவ்யசரித்திரம் கேட்கப்பட்டது. பின்னர் தேவியும் தேவரும் எங்கிருந்தனர்? அதனைக் கூறவேண்டுமென வியாசர் கூறுகின்றார். பிறகு கிரிஜாவல்லபராகியபிரபு கைலாயம் வந்து அங்குள்ள உத்யானவனத்தை யடைந்து அதன்மத்தியிலுள்ள ரத்னமண்டபத்தில் கௌரியோடு திவ்ய சிம்மாதனத்தில் வீற்றிருந்து கௌரியைப் பார்த்து ஹே கௌரி? அழகிய பில்வ தளங்களுடன்கூடி விளங்கும் பில்வ விருக்ஷங்களைப் பார். சிவலிங்கார்ச்சனை செய்யும் பெரியோர்களிடம் சென்று சென்றுவரும் மலர்க்கொடிகளைப்பார். சிவலிங்கார்ச்சனையின் பொருட்டு மலர்ந்து நறுமணங்கமழ்ந்து விளங்கும்அழகிய மலர்களையும் பக்குவமாகிய கனிகளையும் பார். மிக்க அழகாகிய தாமரை மலர்களையும் மந்தமாருதத்தால் அழகாய்ச் சலிக்கும் மந்தார மலர்களையும் அமுதரசம் நிறைந்த பக்குவமாகிய கனிகளையும் அமுதக்கனியுடன் கூடிய கரும்பு வகைகளையும் பார். இங்குள்ளவெல்லாம் இதற்கன்னியமான எவ்விடத்துமிராத அபூர்வமாகிய கனிகளாமன்றோ? வெகு விநோதமாக விருக்கின்றன. பார்க்கப்பார்க்கத்தெவிட்டாத ஆனந்தத்தைத் தருகின்றவன்றோவென்று கூறினார். அதனைக் கேட்டுக் கௌரி மகாதேவரை நோக்கி ஆச்சரியங்கொண்டு ஓ தேவதேவா! சங்கரா! அபாரகருணாரசசாகரா! இதுமிக்க ஆச்சரியமாகவிருக்கிறது. இவ்வனத்தின் விருத்தாந்தத்தை யெனக்குரைக்கவேண்டும். இங்குள்ள விருக்ஷங்கள் சிவலிங்கத்தைப் பூசிக்க மலர் முதலியவைகளுடன் தாமேசென்று சென்று சஞ்சரித்து வருகின்றனவே. இப்புதுமையின் விசேடத்தை யெனக்குக்கூறவேண்டுமென்ன, சிவபெருமான் ஹே தேவி! பூர்வம் ஹிமயகிரி குகையில் முனிவர் சிலர் சாந்தர்களாய்ப் பலகாலமென்னை நோக்கித் தவஞ்செய்திருந்தனர். பின் யான் பிரசன்னமாக அவர்களென்னைப்பற்பல விதமாய்த்துதித்துப் பிரார்த்தித்தனர். அவர்கள் கேட்டவரமாகிய துதி சகல பாபத்தையுந் தொலைப்பது. அது:—

மகாமேருவாகிய வில்லின் கோடிகளின் காந்தியுடன் நன்கு தழுவப்பட்ட தேகத்தோனாகிய இறைவனை நமஸ்கரிக்கின்றோம், பேரானந்த பதத்தினில் விளையாடுவோனாகிய காலகாலனை வணங்குவாம். மஹைஸ்வர்ய காரணனும் மாரவைரியுமாகிய வுமாஸகாயனை நமஸ்கரிப்பாம். அர்த்தசந்திர கலாபரணனாகியவனை மனமெனும் மானதஸரசிற்கு ராஜஹம்ஸனை வணங்குவாம். பவானியின் புன்னகைக்கிடமானவனை விஷ்ணுமுதலிய தேவர்களால் போற்றப்பெற்றவனை வேதாந்தகோடிகளால் துதிக்கப்பெற்றவனை சரணமடைந்தவர்களின் துக்கத்தைத் தொலைப்பவனை சுபமளிப்போனை சகல ஜகத் சிருஷ்டி ஸ்திதி சங்கார காரணனை பவானி முககமல பானுவை காலகூடபக்ஷகனை அந்தகாந்தகனை கிரிராஜகன்னிகையின்ஸ்தன குங்குமங்கவர்ந்தமார்பினனை ருத்ராக்ஷமாலா பூஷணனை நால்வகைப் புருஷார்த்தந் தந்தருள்வோனை விருஷபத்வஜனை ஜடாகோடியின் உரைதலால் சிதறியநக்ஷத்திரக் கூட்டங்களுடையோனை நமஸ்கரிக்கின்றோம் என்பதாம் என்று கூறினர். வியாசர்:—இவ்வாறு அம்முனிவர்கள் மகாதேவனை வணங்கி ஓதேவதேவா! சங்கரா! சாந்தனே! ப்ரணதார்த்திஹரா! அடியேங்களுக்கு வேண்டியவரனையளித்தருளுங்கள். ஓஜகதீஸ்வரா! கைலாயத்தில்கோடிக்கணக்காய் திவ்யலிங்கங்களிருக்கின்றன. அவைகளைப் பூசிக்கவிருப்புற்றிருக்கின்றோம். ஆனால்அப்பூஜைக் குபயோகமாகும் திவ்யமலர்களுடையவிருக்ஷங்களாயிருந்து லிங்கமுள்ளவிடமெல்லாம்நடந்துசென்று தம்மிடமுள்ள மலர்களால்பூஜிக்கவேண்டுமென்றவிருப்பமுளது.இஃதே எங்களது வரம். இப்படிச் சிவபூஜைக்குபயோகமாகாவிடில் ஜன்மத்தால் யாது பிரயோஜனம்? சிவபூஜையை விடுத்துக்கேவலம் தேகத்தை வற்றச்செய்வதான தவத்தால் அப்பிறவி வீணே.எவன்எப்பிறவியில் பரமபக்தியுடன் ஒருமைப்பட்ட மனமுடையோனாய் சிவபூஜை செய்கின்றானோ அப்பிறவியே அவனுக்குச் சபலமாகும். அவனே ஜீவன்முக்தனென்பது வேதங்களின் றுணிபு. எவனால் சகலமங்கள சாதனமாகிய சம்புபூஜை பில்வபத்திரங்களாலும் மலர்களாலும் பரிசுத்தமாகிய தீர்த்தங்களாலும் செய்யப்படவில்லையோ அச்சன்மம் அவலமே. ஆதலின் எப்போதும் சிவபூஜா சாதனமாகும் மலர்களையுடையவிருக்ஷங்களாயிருந்து நேரிலே சென்று சிவலிங்கத்தைப்பூசிக்கவேண்டும். அப்படிப்பட்ட புண்யவிருக்ஷமாகுந் தன்மையை யெங்களுக்கருள்புரியுங்கள். அப்படிப்பட்ட விருக்ஷங்களாயிருத்தலையே நாங்கள் விரும்புகின்றோம். சிவலிங்கத்தின் பொருட்டு ஓர் மலரை

யாவது பில்வதளத்தையாவது எவன் சமர்ப்பிக்கின்றானோ அவனே பாக்யவான். ஆதலின் அநுக்கிரகிக்கவேண்டும். சிவபூஜைக்குப யோகப்படும் விருக்ஷங்கள் மரணத்தின் பின்னர் சிவனையடையு மென்று சுருதியில் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் இத்தகைய வரத்தை விரும்புகின்றோமென்று பிரார்த்திக்கும் முனிவர்களைக் கருணையுடனோக்கிமகாதேவன் ஓமுனிவர்களே! நீங்கள்விரும்பியபடி வரமளித்தனமென்று கூறி அவ்விடமே அந்தர்த்தான மாயினர். முனிவர்களும் மிக்ககளிப்பெய்தி ஒருவரையொருவர் நோக்கி, தவம் தானம் பூஜை முதலியவைகளெல்லாம் சிவப்பிரசாதத் தையே பலமாகக்கொண்டவாதலால் அப்பயனை யுண்டாக்குகின் றன. அன்றி வேறு பயன் யாதுமில்லை. சிவப் பிரசாதமடைந்தன ராயின் பின்னர் யாதும் வேண்டியதில்லை. பயன்களுக்கெல்லாம் சிறந்தபயன் சங்கரப்பிரசாதமே யென்றுகூறினர். வியாசர்:-ஓமுனி வர்களே! மகாதேவனது பிரபாவம் இஃது. அதனை வேதாந்தங்க ளும் அறிந்தில. மகேசபூஜையால் எவனது பிறவி சந்தோஷத்து டன் கழிக்கப்படுகின்றதோ அவனே புண்யான்மாவாகிய தன்யன். அவனையே சகல தேவர்களும் பூசிக்கின்றனர். எவன் மிக்க சிரத்தையுடன் சிவலிங்கத்தைப் பூசிக்கவில்லையோ அவன் பதர். அவன் அடைவது அவலமாகிய கதியே யென்பது சத்யம். பத்ரம் புஷ்பம் அறுகு மற்றுள்ள பூஜா சாதனங்களாலும் மகாதேவனைப் பூசிப்பவன் தேவர்களால் பூசிக்கப்படுகின்றவனாகின்றான்.

பூர்வம் ஸ்ரீகிரி யென்னுமிடத்தில் ஓர் மனிதாதமனிருந்தான். அவன் மிக்க தரித்திரன், குஷ்டப்பிணியன், அவன் சிலகாலம் பிராமணவேஷத்துடனிருந்து மன்னுயிரை ஹிம்சித்து வந்தான். அப்படி பலகாலமிருந்து பின்னர் வேடவுருவத்துடன் வேட்டை யாட வனஞ்சென்று அங்குள்ள மிருகம் பக்ஷி முதலியவைகளை ஹிம்சிப்பதில் விருப்புற்று முயன்றாலும் மிக்க வயதுசென்று சரீ ரம் தளர்ந்து போனமையால் ஒன்றும் அவனால் ஹிம்சிக்க முடிய வில்லை. அப்படியாகவே அவன் சத்தியற்றவனாய் அவ்வனத்தி லோர் பக்கத்திற் றங்கியிருந்து தானேமரித்துக்கிடைக்கும் பக்ஷி யையாவது மிருகத்தையாவது தனதிருப்பிடங்கொண்டுபோய் அத னால் மனைவி மக்கள் முதலியவர்களோடு ஜீவனஞ் செய்துவந் தான். அவனுடைய மக்களெல்லோரும் எப்பொழுதும் பசியால் வருந்துவார்கள். ஓர்சமயம் அவனோர் பக்கத்தில் கத்தரிக்காய் களிருப்பதைக்கண்டு அவைகளை விசேடமாய்க்கவர்ந்து தனதிருப்

பிடஞ்சேர்ந்து பசிமேலிட்டுச் சீக்கிரம் பாகஞ்செய்ய முயன்றான். அப்போது அக்கத்தரிக்காய்களுடன் ஓர் கத்தரிப்பூவை அம்மக்களுளொருவன் எடுத்துக்கொண்டு அரண்யமார்க்கமாய்த்தனதிருப்பிடம் வரும்போது அப்பாலகன் அப்பூவை வீசி யெறிந்தான். அஃது ஓர் சிவலிங்கத்தின் மீது வீழ்ந்தது. பின்னர்ப் பசியினால் வருந்தி யிறந்து விட்டான். யமகிங்கரரும் கோலாகலமாய் வந்து அவனைக் காலனருகிற்சேர்த்தனர். காலனும் அவன் தூரத்தில் வரும்போதே நடுங்கிச் சித்ரகுப்தனைக் கூப்பிட்டு அந்தோ! இதென்ன கொடுமை!ஓசித்ரகுப்தா! இதைப்பார்! மிக்க ஆச்சரியமாயிருக்கின்றது. இதைப்பார்க்க நமது மனமும் நடுங்குகின்றது. அஃதிருக்கட்டும். இவரைக்கண்டு சூலபாணியும் சிவகணங்களும் நடுங்குவாரென்பதிற் சந்தேகமில்லை. யான் எவ்வளவோ சிவகணங்களைத் தரிசிக்கின்றேன். அவர்களிடமும் எனக்குப் பயமுண்டாகவில்லை. என்னையறியாமல் என்னுள்ளம் பதைக்கின்றதாகலின் இவர் யார்? அந்தோ! கொடியவர்களாகிய நமது தூதர்கள் விசாரிக்காமல் யாரோ பெரியவரான மகாத்மாவை யழைத்துக்கொண்டு வந்தனர்போற் காண்கின்றது. இனி அவர்களை விசாரித்துச் சிக்ஷிக்கவேண்டு மென்று கூறிய தர்மராஜனை நோக்கிச் சித்ரகுப்தன் அந்தோ! என்ன இப்படிவிளைந்தது? இவர்மகாதேவரன்றோ? இனி மகேஶ்வரனால் நமக்கு எக்காலத்திலென்ன கெடுதிவிளையுமோ! இவர் சாம்பவ சிரேஷ்டராவர். மகேஶ்வரன் சுதந்தரரும் கருணைக் கடலுமானவ ரன்றோ?அவரது வைபவ மெண்ணிறந்தது.இவர் அவராக்ஞையால் கைலாயமேயடைவரென்றெண்ணுகின்றேன். இவர் செய்தபுண்ணியத்தைச் சொல்லக்கேட்பவர் முக்திபெறுவதுண்மையே. இவரது தந்தை சகலதருமங்களையும் விடுத்துப் பலபாதகங்களையே செய்துவந்த கொடும்பாவி; தரித்திரன்; பிணியுடையோன். இவரது சகோதரர்களும் மகாதுஷ்டர்கள். அன்னையும் அவ்வாறே. இவரது குலம்பரமதுஷ்டத்தன்மையுடையது. இவரினத்தோரெல்லோரும் அன்னம் அன்னமென்று கதறிக்கொண்டே யிருப்பவர். ஆயினும் அவர்களுக்கு ஓர் கவள அன்னமுங் கிடைப்பதில்லை. இவர் இறக்கும்போது ஓர் வாடியகத்தரிப்பூவை யெறிய அது ஓர் சிவலிங்கத்தின்மீது வீழ்ந்தது. அதனைத் தன்னைப் பூசித்ததாய்க்கொண்டு சிவபெருமான் சந்தோஷித்துக் கருணையோடு தமது தூதர்களைப்பார்த்து இவரைச் சீக்கிரம் நமதுலகத்திற்கு விமானத்தின்மீதேற்றி நம்பதங்கொண்டு வந்து சேருங்களென் றாக்ஞாபித் திருக்கின்றனர். இனி

யாதாகுமோ! சிவகணங்கள்யாது செய்வரோ! அது எனக்குத்தெரியாது. ஆனல் ஒன்று தோன்றுகின்றது. இஃதோர் பிரளயகாலமென்னலாம்! இனி அவர்கள் வந்து உங்களையும் பாசத்தாலிறுகக் கட்டியிழுத்துக்கொண்டுபோவார்கள். அங்ஙனமாயின் ஏனைய தூதர்களின் கதியைப்பற்றிக் கூறவும் வேண்டுமா? இனி நாம் ஓடியொளிப்போமெனினும் சிவகணங்கள் வந்து பாசங்களாற் கட்டி நம்மையிழுத்துப்போவது நிச்சயமே. நமது தூதர்கள் விசாரியாமல் இக்கொடியகாரியத்தைச் செய்துவிட்டார்கள். ஆதலின் அதனல் வரும் துக்கபரம்பரைகளை நீங்க ளனுபவிக்க வேண்டியதுதான். நமக்குச் சிவதத்வக்யானமில்லை. இப்படிப்பட்ட கொடுஞ்செயலைச் செய்யுந் தூதர்களைத் தண்டிப்பதுமில்லை. ஆதலின் நமது மகாபாபங்களின் பயனகிய பெருந்துக்கங்களையும் அடிக்கடி யனுபவிக்க வேண்டியிருக்கின்றது. இனியாவது பெரியவரை மரியாதையுடன் வரவழைத்துப் பூசித்திருங்கள். இச்சாம்பவர் திருப்தியடையும்படி பூசிப்பீர்களாயின் பின்னர் யாதாயின் ஓர் சாதகம் நமக்குண்டாகுமென்ன, யமன் கேட்டுக்கொண்டிருக்கும்போதே சிவதூதர்கள் விமானத்துடன் கோலாகலமாய்ச் சப்தித்துச் சீக்கிரம் வந்தடைந்து பெரும்பாசங்களால் யமனை யிறுகக்கட்டி வருத்த முயலும் போது பிரமன் விஷ்ணு இந்திரன் முதலிய எல்லோரும் சரேலென வோடிவந்து அச்சிவகணங்களின் பாதாரவிந்தத்தில் வீழ்ந்து நமஸ்கரித்துப் பக்தியுடன் பூசித்து அஞ்சலிபத்தஞ்செய்து கொண்டு,

நமோநமஸ் ஸாம்பவேப்யோ கணேப்யோவோ நமோநம: ரயிப்யோவோ நமஸ்துப்யம் ரதேப் யச்சநமோநம: ஸேனப்பியச்ச நமோ நித்யம் ஸேகனநியப்யச்ச நமோநம: க்ஷத்ருப்யோவோ நமோ நித்யம் சங்க்ருஹீ திருப்யயேவசா ||

என்று துதித்து மீண்டும் சிவகணங்களை நமஸ்கரித்துச் சிரசிலஞ்சலிகூப்பி ஓகுவாமின்! ஓ சாம்பவ கணதிபர்களே! தேவரீரை வணங்குகின்றோம். தேவர்களாகிய எங்களது அபராதங்களை க்ஷமித்துக்கொள்ளவேண்டும். கருணையுடன்கூடிய நோக்கத்தாலெங்களைக் காத்தருளவேண்டும். இந்த யமன் மிக்க அறியாதவன். இவன் செய்த பிழையைத் தயாநிதிகளாகிய நீங்கள் பொறுக்கவேண்டும். ஓசாம்பவ கணங்களே! இக்குற்றஞ்செய்த தூதர்களு மெண்ணிறந்தவர்களாதலால் இவர்களைச் சிக்ஷிப்பதுந் தகுதியல்ல. எண்ணிறந்தவர்களை சிக்ஷிக்க எவ்வாறு இயலும். எண்ணுக்குட்பட்டவர்களையே சிக்ஷிக்க வியலும். யமனே ஒருவன். உலகிலுள்ள எண்ணிறந்த கிருகங்

களில் நடக்குஞ் சங்கதியை எப்படியறிவான்? யமனும் விசாரியாமல் சிக்ஷிப்பதில்லை. சித்ரகுப்தனோடு விசாரித்தே சகலரையும் தண்டிக்கின்றான். ஏதோ இவ்விஷயத்தில் யமன் தவறிப்போயினான். இப்போது நீங்கள் இவனைக் கட்டிக்கொண்டு போவதற்கு வந்துவிட்டீர்கள். ஓ சம்புகணங்களே! இப்படித் துக்கமடைந்திருக்கும் எங்களிடம் நீங்கள் கருணைகொள்ளுங்கள். சிவாக்ஞா பரிபாலகருக்கு இங்கு செய்யக்கூடாத காரியம் யாதுமில்லையாயினும் நீங்கள் யோசித்துப் பாருங்கள். உங்களது ஆணையை இந்த யமன் எங்ஙன மீறுவான்? அப்படி மீறிச் சீவிப்பவனுண்டா? சுவர்க்கம் சத்யலோகம் வைகுண்ட முதலிய வுலகங்களில் தானாகட்டும் அவன் ஜீவிக்கமுடியுமா? நாங்கள் ஒவ்வோர்காலத்தில் அறியாமையால் யாதேனுங் குற்றஞ்செய்ய நிகழும். அதனை நீங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டும். காலகாலனுடைய ஆக்ஞையால் நீங்கள் சகலத்தையும் நடத்துவீர்களாயின் இப்பிரமாண்டத்துக்குள் நரகத்துக்குப்போகின்றவன் யார்? அன்றியும் அபராதஞ் செய்தவர்களாயினும் மிக்க விநயமுள்ள வேலைக்காரர்களா யிருக்கின்றமையா லெங்களை நீங்கள் காப்பாற்றவேண்டும். ஓ சிவகணநாதர்களே! மகாதேவனது ஐஸ்வரியமே மகாவற்புதம். அவர்களது தூதர்களாகிய நீங்கள் தேவாசுரர்களாலும் பூசிக்கப்படுகின்றவர்களன்றோ? உங்களில் ஒருவராலேயே சகல ஜகங்களும் ஓர் கணப்போதில் அழிந்துவிடும். அப்படிக்கிருக்கச் சிவகணங்களாகிய உங்களனைவர்களாலுஞ் செய்யவேண்டிய காரியமென்றொன்றுண்டா? ஆயினுஞ் சிவாக்ஞையால் எல்லோரும் வந்தீர்கள். இதனால் உங்களுக்கு மிக்க சிரமம். உங்களது கோபத்துக்கும் யமன் விஷயமாவது தகுதியா? கைலாயத்துவாரத்தி லிருந்துகொண்டே யமனைச்சிக்ஷிக்க நினைப்பீர்களானால் அவன் சிக்ஷிக்கப்பட்டவனாகானா? நாங்களனைவரும் உங்களது ஆக்ஞாபாசத்திற்கட்டுப்பட்டவர்களானால் யமனைப்பற்றிக் கூறவேண்டுவதுமுண்டோ? ஆனால் எங்களது பாக்யவசத்தால் நீங்களனைவரும் இங்கு வந்து தரிசனந்தந்தீர்கள். உங்களைத்தரிசித்த மாத்திரத்தினால் சாக்ஷாத் ஜகதீஸ்வரனைத் தரிசித்ததாகின்றமையால் நாங்களெல்லோரும் கிருதார்த்தர்களாயினோமென்று சகலதேவர்களும் பிரார்த்தித்துக்கொண்டிருக்க அதனைச் சிறிதுங்கவனியாது அச் சிவகணங்கள் காலனையும் அவனுக்குபகாரமாய் வந்த சகல தேவர்களையும் பாசத்தாற்கட்டி யமனையடித்து மிக்க தொந்தரவு செய்துகொண்டு கைலாயங்கொண்டுபோக முயன்றார்கள்.

இருபத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

உ

சிவமயம்

# இருபத்தேழாம் அத்தியாயம்.

## சிவபூஜாமஹிமை.

வியாசர்:—யமன் முதலியவர்களைக்கட்டித் தொந்தரை செய்யுங் கோலாகலத்தைக்கேட்டுச்சங்கரன் நந்தியை அழைத்து ஓநந்தீ! எனதாணையின்படிச்சென்ற கணங்களுக்குப் பிரதிகூலமாய் யமனுக்குதவியாய்த் தேவர்கள் வந்திருக்கின்றனர். நீ ரத்னபுஷ்பகவிமானத்திலேறி விரைவிலேசென்று அவர்களெல்லோரையுஞ்சூலச்சுவாலைகளால் வாட்டுவாயாக. எனதாக்ஞையை மீறிவந்தவர்களாகையால் அவர்களைப்பழுக்கக்காய்ச்சியமழுக்களாற் கொளுத்துவாயாக. அன்றியும் யமனை ரம்பத்தாலறுத்து வருத்தவேண்டியது. அவர்களை யிங்கு கொண்டு வரவேண்டுமென்பது அவசியமில்லை. வருத்தவேண்டியதே முக்யம். அவ்விடத்திலேயே பழுக்கக்காய்ச்சிய வுலக்கைகளால் புடையுங்கள். கும்பீபாக முதலிய நரகங்களிற் புரட்டுங்கள். யமனுக்கு அநுகூலமாய்வந்த துர்ப்புத்திகளாகிய தேவர்களெல்லாம் உயிர் நீங்குவாராயின் எனதாக்ஞையால் உடனுக்குடன் பிழைப்பித்து வருத்தவேண்டியது. உனக்கு நிகராகிய வீரன் யாருமில்லை யென்பது எனது சங்கல்பமாகையால் நீ விரைவிலே சென்று சிறிதும் யோசிக்காமல் அவர்களைச்சித்ரவதைசெய்யவேண்டியது. அவர்கள் நல்ல வார்த்தை சொல்லவந்தாலும் சிறிதும் விசாரியாமல் பழுக்கக்காய்ச்சிய கூர்மையாகிய கதையாலடித்து வதஞ்செய்யென் றுக்ஞாபித்தார். அதனைக்கேட்ட நந்திதேவர் சிரமீது கைகூப்பி ஓதேவதேவ! தேவரீரது ஆணையைச் சிரசில் வகிக்கின்றேன். இதோ ஓர் நொடியிற்சென்று ஆணையின்படி நடக்கின்றேன். எண்ணிறந்த இப்பிரமாண்டங்களுள் தேவரீரது ஆக்ஞைக்குப்பிரதிகூலஞ் செய்கின்றவனெவன்? சகல தேவாசுரர்களும் எப்போது சிவாபராதம் யாது நேருமோவென்று நடுக்குற்றிருக்கின்றனர். இப்போதே தேவரீரது ஆணையால் சகலதேவர்களையுஞ் சங்கரித்து விடுகின்றேன். இங்கு சிவகணங்களுக்குப்பிரதிகூலமாய் வாராமல் சுவர்க்கத்திலிருக்கும் ஏனையதேவர்களை யாதும் உபத்திரவஞ் செய்யக்கூடாது. அவர்களே சிவாக்ஞைக்கு நடுங்கிக் கலங்கியிருக்கின்றவர்கள். ஆதலின் இவர்களையே சிக்ஷித்தலுசிதம். பின்னர்

இத்தேவர்கள் வீணுய்க் கெட்டுவிட்டோமே யென்று பரிதாபப்பட்டு இனியாவது சரியாய் நடப்போமென்றெண்ணுவார்கள். அன்றியும் நாம் சிக்ஷைசெய்யும்போது அவர்கள் நம்மை யெதிர்த்து யாதாவது அபராதஞ் செய்வார்களாயின் மீண்டுந்தோன்றுமல் வதஞ்செய்ய வேண்டியவர்களே. ஓ சுவாமி! இத்தகையகாரியங்களை இப்போதே செய்து விடுகின்றே னென்றுகூறிக் கைகட்டி நிற்கும் நந்தியைப் பார்த்து ஓ நந்தி! நன்குகூறினுய், சீக்கிரம் செல்லென்றனர். நந்தியும் சந்தோஷத்தா லுள்ளம் பூரித்தவராய் புஷ்பவிமானத்திலேறி யமன் முதலியதேவர்களிருக்குமிடம் வந்துசேர்ந்தனர். விமானமும் ஓர் கணப்போதில் அத்தேவர்களுக்குச் சற்றுதூரத்தில் நெருங்கினதையும் அதில் நந்திதேவரையுங்கண்டு பயத்தால் நடுங்கிச் சிவ கிங்கரர்களெல்லோரும்தேவர்களை உபத்திரவப்படுத்தும்படி நிகழ்ந்த சிவாக்ஞையை நாம் சற்று அநாதரவு செய்தோம்,அதனுல் நம்மிடங் கோபித்து நந்தி வருகின்றுரென்று நினைத்துத்தேவர்களைச்சவுக்கடியாலடித்தும் பழுக்கக்காச்சிய இருப்பாயுதங்களாற் புடைத்தும் உலக்கைகளாலும் பிண்டிபாலங்களாலும் அடித்தும் பழுக்கக்காய்ச்சிய ரம்பத்தாலறுத்தும் ஹிம்சிக்கும்போது தேவர்களெல்லோரும் சுவாசமற்றவரும் கதறுகிறவரும் கூவுகின்றவர்களும் சரணுகதியடைகின்றவர்களுமாய்க் கோலாகலம்நடந்தது. அவரவர் மனைவிகளும் நடுக்குற்றுச் சோகத்தால் கோலாகலமாயழுதனர். சகலகந்தர்வர்களும் முனிவர்களும் சித்தர்களும் பன்னகர்களும் கோலாகலத்தைக்கேட்டு ஓடோடிவந்து தூரத்தில் நின்றுபார்த்தனர். சிவகணங்களால் தேவர்கள் தொந்தரவு படுவதைக்கண்டு ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டதாவது: அந்தோ! கொடிதுகொடிது! துராத்மாவாயிருக்கிற இந்த யமன் விசாரியாது செய்தகாரியமன்றே இவ் விதமாய் விளைந்தது! அம்மூடன் சிவாக்ஞையை மறந்துவிட்டான். அவ்வபராதத்தால் சகலதேவர்களும் வருந்தும்படி நிகழ்ந்தது. இது அகாலத்தில்வந்த பிரளயமோ! சகல தேவர்களும் பாசத்தாற்கட்டுப்பட்டு ஆயுத மண்டலங்களில் வீழ்ந்து வருந்துகின்றனர். மகாக்னிச் சுவாலையாலும் கசையடியாலு மிக்க துன்பப்பட்டு ஓ வென்றலறுகின்றனர். இத்தொந்தரை அடங்கி இக்கூக்குரலும் எப்போது ஒய்வதோ? இவ்வளவு காரியம் சிவகணங்களால் நடத்தப்பட்டது. இனி நந்தியும் வருகின்றுர். அவரென்ன செய்வரோ! அவர் செய்யக்கூடாத காரியம் யாதுமில்லை. நமக்கோ ஆபத்து வந்துவிட்டது. வந்ததைச் சகலரும்சகிக்கவேண்டியதன்றி பரவசர்களாகிய இத்தே

வர்களால் செய்யக்கூடிய் காரிய மொன்றுமில்லை யென்று பற்பலவா றுய் அவ்வவ் வுலகில் வசிப்பவ ரெல்லோருஞ் சொல்லிக்கொண்டி ருக்க நந்தி சிவகணங்களருகில்வர சிவகணங்களெல்லோரும் சரே லெனவோடி அவரடியில் வீழ்ந்து நமஸ்கரித்து ஓ ஸ்வாமி ! நந்தீச் வரரே ! நாங்கள் யமனுக் கனுகூலஞ் செய்ய வந்தவர்களையும் யமனையும் சிக்ஷித்தோம். பழுக்கக்காய்ச்சிய சங்கிலியாற் கட்டி அக்னிச்ஜுவாலைபோன்ற கத்தியால் கண்டங் கண்டமாய்ச் சேதித்து மிக்க வருத்திவிட்டோம். யமனை வந்ததும் வருத்தினோம். பின்னர் அவனுக்குச் சகாயமாய்வந்த தேவர்களையும் கதையடியடித்துச் சின்ன பின்ன மாக்கினோம். இன்னும் நாங்கள் செய்யவேண்டிய காரியமியாதேனு முளதாயின் அதைத்தாங்கள் ஆக்ஞாபிக்க வேண் டுமென்று கூறிநின்றனர். அப்பொழுது தேவர்கள் நந்திதேவரைக் கண்டு அவரதுகடாக்ஷாமிர்தத்தால் சகல தொந்தரவும் நீங்கிப் பாச ங்களெல்லாம் பறந்து போகவே சாஷ்டாங்கமாய் வீழ்ந்து நமஸ் கரித்து ஓகருணைக்கடலே! தீனர்களாகிய எங்களைக்காப்பாற்றவேண் டும். அறியாமையால் அபராதஞ் செய்தவர்களாகிய எங்களை ஓர் கணப்போது தங்களுடைய கடாக்ஷ கருணாமுதப் பிரவாகத்தால் குளிரச்செய்யுங்கள். நாங்கள் சிவாக்ஞையை மீறவில்லை. ஆயினும் எங்களுக்கு இத்தகைய கதி வந்தது. சகல சுரர்களும் சிவபூஜை யையும் ருத்திராக்ஷதாரணத்தையும் விடவில்லை. சிவபூஜாதிரவிய நாசஞ் செய்தோமில்லை. சிவாலய வுதாசீனமாவது சிவதூஷணை யாவது எங்களால் செய்யப்படவில்லை. சிவதூஷண வார்த்தையுங் கேட்டோமில்லை. எங்கேயாவது எப்போதாவது சிவனையனாதர வுஞ்செய்யவில்லை. சிவகணங்களுக்கும் அபராதஞ் செய்தவர்களும் சிவாபிஷேகதீர்த்தம் சிவநைவேத்யம் முதலியவைகளைப் புசிக்காத வர்களும் அல்லேம். சிவநிர்மாலியத்தைத் தரிக்காதவர்களுமல்லேம். சிவதீர்த்தயாத்திரையை உபேக்ஷித்தவர்களுமல்லேம். சிவநிந்தகரா கியபாவிகளை ஆதரித்தல் சிவமார்க்கத்தைச்சுத்தஞ்செய்யாதிருத்தல் சிவமார்க்கத்திலுள்ள முட்களைக் களையாதிருத்தல் சிவாலயத்தில் திருவலகிடாதிருத்தல் சிவனுக்கு நிவேதிக்காத வஸ்திரந்தரித்தல் முதலிய தீச்செயல் யாவும் எங்களால் செய்யப்பட்டிலவாம். அன்றி யும் சிவஸ்மரணமின்றி ரம்பா சம்போகஞ் செய்தல்முதலிய மற்று முள்ள எவ்வபராதமுஞ் செய்யாத எங்களுக்கு இத்துக்கம் வந்து விட்டது. ஓ சுவாமி! இன்னும் தேவரீர் ஆணைக்கு அடங்கியிருப்ப வர்களே யன்றி வேறில்லை. நாங்கள் மஹேஶ்வரனையறிந்தவர்களல்

லேம். தேவரீரே எங்களுக்கு மஹேஸ்வரன். தீனர்களுக்குத் துக்கத்தைத் தொலைப்பதில் தேவரீர் கருணைப்பெருக்கான கடைக்கண்ணுடையவரன்றோ? ஓ சுவாமி! எங்களைக் காத்தருளல்வேண்டும். தேவரீரது திருவடிகளே சரணமென்று சகல தேவரது பிரார்த்தனையைக் கருணாநிதியாகிய நந்திதேவர் கேட்டு அவர்களுக்குள்ள சகல தொந்தரவும் நீங்கும்படி அருள்புரிந்து விமானத்திலிருந்திறங்கவே ஓர் திவ்ய சிங்காதனம் அங்கு சித்தமாயிருக்க அங்கெழுந்தருளச் சகல தேவரும் பூசித்து நிற்க நந்திதேவர் பார்த்து ஓ தேவர்களே! இப்போது யமன் செய்த வபராதத்தினால் சிவதசைக்கு ஹானிவந்ததென்றெண்ண வேண்டியது. உங்களுக்கும் அவ்வாறே சாக்ஷாத் ஜகதீஸ்வரன் உக்ரனென்று பிரசித்திபெற்றவனாயினும் நாம் வேண்டிக்கொண்டமையால் சற்று கருணை கொண்டார். அல்லாவிடில் அப்போதேயே சகல தேவர்களுக்கும் பிரளயம் வந்திருக்கும். உங்களுடன் எனக்குள்ள மித்ரத்துவமே உங்களை ரக்ஷிப்பதற்கேதுவாயிருந்தது. உண்மையிலெமன் அபராதஞ் செய்யாதவனாயினும் அவன்தூதர்களது கொடுமையானது அவனுக்காபத்தை விளைவித்தது. இக்காலனும் அடிக்கடி தனது தூதர்களைச் சிக்ஷிப்பதுமில்லை. இனித்தூதர்களை சிக்ஷிக்கவேண்டியதென்று போதிப்பதற்காகவே இவ்வாறு சிவகணங்களே சிக்ஷித்தனரென்று கூறினார். இவ்வாறுகூறியதைக்கேட்டுத்தேவர்கள் காலனோடு சேர்ந்து வந்து நமஸ்கரித்து மிக்க வணக்கத்துடன் கூறினதாவது:-ஓஸ்வாமி! யமதூதர்கள் இவரைப் பாபியென்று கொண்டுவந்தார்கள். ஆனால் யாதும் சிக்ஷை செய்யவில்லை. மற்றும் துன்பப்படுத்தவுமில்லை. ஆனால் பாபியா புண்ணியவானா என்று விசாரமே செய்யப்பட்டது. ஓஸ்வாமி! விசாரியாது ஓர் காரியத்தைச் செய்யலாமா? விசாரிக்காமலேதெரிந்து கொள்வதற்கோ சிவனுக்கன்னியராகிய சகலரும்இயற்கையில் சர்வஞ்ஞர்களல்லராதலால் விசாரிப்பதும் உசிதமே. இவரை விசாரிக்காமலே புண்ணியவானென்றழைத்துப் பூசித்தாலதுவும் பாவமன்றோ? அவ்வபராதத்துக்குள்ள பயனை அப்பொழுதும் அநுபவிக்கவேண்டியதே. இவர் செய்த புண்ணிய பாவம் யாது என்பதை நன்றாய் விசாரித்தறிந்த பின்னர் ஓர் காரியத்தைச் செய்ய வேண்டியது. கணங்கள் வந்தமையால் இவர் புண்யவானென்பதறியப்பட்டது. அதற்கு முன் அதனை எவ்விதமறியக்கூடும்? இவரால் என்னபுண்யம் செய்யப்பட்டது? யாகங்களாலும் தானங்களாலும் தாங்கள் வரக்கூடியவரல்லவே. ஆனால் தேவரீர் வந்திருக்

கின்றீர். ஆதலால் இவரால் எத்தனையோ கோடி துலாதானங்களும் அஸ்வமேதாந்த முதலிய சகல யாகங்களும் சரீரத்தை மெலியச்செய்வதாகிய தவமும் கோடிக்கணக்காகிய கோதானங்களுஞ் செய்யப்பட்டிருக்கவேண்டும். அல்லாவிடில் இச்சிவகணங்களும் தேவரீரும் இங்கு வருவீர்களா? இன்னமுஞ் சிவகணங்கள் வந்துகொண்டேயிருக்கின்றனர். இவர் பூர்வம் பிராம்மணர்களின் பொருட்டு லக்ஷக்கணக்காகிய ரத்னங்களைக் கொடுத்திருக்கவேண்டும். தினந்தோறும் லக்ஷக்கணக்காய் கோதானஞ்செய்திருக்கவேண்டும். பயிருடன் கூடிய பூமியைத் தானஞ்செய்திருக்கவேண்டும். வெய்யில் நிறைந்தவழியிலும் மகாரணியத்திலும் தண்ணீர்ப்பந்தர் ஏற்படுத்தியிருக்கவேண்டும். தரித்திரர்களுக்கு மகாமேருபோல் சுவர்ணத்தைக்கொடுத்திருக்கவேண்டும். ஆவின்பாலைக் குடங்குடமாய் விப்ரர்களுக்குத்தானஞ்செய்திருக்கவேண்டும். பிராமணர்களின்பொருட்டுக்கோடிக்கணக்கா யன்னதானஞ்செய்திருக்கவேண்டும். ஆனதுபற்றியே இவரெதிரில் இந்த யமாலயத்திலும் அவைகள் சித்தமாய் நிற்கின்றன. இவர் கோடிக்கணக்காய் சுவர்ணத்தோடு கூடிய கன்னிகாதானங்களும் தடாகங்களும் வாவிகளும் கட்டில் மெத்தைகளும் சத்திரத்தானங்களும் தனம் தானியம் இல்லமுதலிய தானங்களும் வழிப்போக்கர்களுக்கு சுகஹேதுவாகிய நிழல்விருக்ஷங்களை வைத்துப் பயிரிடுதலும் ஆகிய எண்ணிறந்த பெரும் புண்ணியங்கள் செய்திருக்கிறாரென்பது நிச்சயம். அல்லாவிடில் இவைகளெல்லாம் இங்குவந்திருப்பதற்கு நியாயமுண்டோ? இவர் செய்ததானம் ஒவ்வொன்றும் பலகோடியாய்வந்து இவரை உபசரிக்கச்சித்தமாய் நிற்கின்றன. இவைகளையெல்லாங் கணக்கிடவுந்தகுமோ! இவர் செய்த புண்ணியங்களை விசாரிக்கப்புகுந்தால் அதற்குக் கற்பாந்தகாலமும் போதாது. இக்காலனும் தர்மாதர்ம விசாரத்தினாலேயேகாலங்கழிக்கவேண்டியவனாயிருக்க இவனைச் சிக்ஷிப்பதற்கு இப்படி முயன்றது தகுமா? சிவலிங்கார்ச்சனத்தைக்கனவிலும் மறவாத சாம்பவசிரேஷ்டனாகிய இவனை அப்படித் தண்டிப்பதுந்தகுமா? அந்தோ! இப்பவும் இக்காலனைப்பாருங்கள்! சிரசிலும் கழுத்திலும் கைகளிலும் உருத்திராக்ஷமாலைதரித்து விளங்குகின்றான். இவனை வருத்துவதில் உங்களுக்குப் பயமுண்டாகவில்லையா? விபூதிருத்திராக்ஷந்தரிப்பவர்களும் சிவலிங்கார்ச்சனை செய்பவருமாகிய எங்களது சரீரத்திலும் காயமென்பதுண்டாகலாமோ? ஓ கணேஸ்வரா! இது பெரியதுர் அதிர்ஷ்ட மன்றோ? பஸ்மருத்திராக்ஷந்தரிக்கும் பகலானர்ச்சகர்க

ளுக்கும் இத்துக்க மெங்ஙனம் தருமென்று கூறிகின்றனர். அடி பட்ட காயத்தால் துன்பஞ்சகிக்கமுடியாதவரராய் சிரசி லஞ்சலி கூப்பி ஓஜகதீஸ்வரா! சந்திரகலாதரா! எவனது ஐஸ்வர்யம் அபார மாயுளதோ, தமோவசமு மிறுதியுற்றதோ, எவன் கௌரியின் அழ கிய ஸ்தனம் அதரமுதலியவைகளில் மனஞ்சென்று திவ்யலீலாவி லோலனாய் விளங்குபவனோ, அப்படிப்பட்ட ஸ்ரீகாலகாலனும் கிரு பாசாகரனுமாகிய பரமேஸ்வரா! தேவரீரை வணங்குகின்றோ மென்று பிரார்த்தித்துச் சரணமடைந்தனர்.

இருபத்தேழாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

த்விஷட்புஜாயநம:

# இருபத்தெட்டாம் அத்தியாயம்.

## நந்திகேஸ்வரர்தேவர்களுக்குச் சிவமஹிமை யுரைத்தது.

வியாசர்:- இங்ஙனந்தேவர்கள்கூறிய வசனத்தைக்கேட்டு நந்தி கேஸ்வரர் சிவனையும் சிவமகிமையையு நினைந்து தேவர்களைப்பார்த் துக்கூறியதாவது:— ஏ விஷ்ணுவே! பிரமனே! ஓ தர்மராஜனே! இந்திரா! மற்றுமுள்ள தேவர்களே! சிவமகிமையைக் கூறுகின்றேன் கேளுங்கள். மஹேஸ்வரன் சகல தேவர்களுக்கு முத்தமன். அவ னே அநாமயன். அவனே ஜகதீஸ்வரன். அவனே ம்ருத்யுஞ்ச யன், அவனது சரணாரவிந்தமே விஸ்வத்திற்கும் ஈஸ்வரனாயுளது. அது ஓர் கணம் ஸ்மரித்தாலும் நித்தியமாகிய பேரானந்தத்தைக் கொடுப்பது. தேவ சக்ரவர்த்தியாகிய அவனையே நமஸ்கரிக்கின் றேன். சந்திரகலாதரனும் விஷமுண்டவனுமாகிய அவனையே சகல வேதாந்தங்களுந் துதிக்கின்றன. அவனையே சரணமடைகின்றேன். எப்போதாவது ஹ்ருதயகமலத்தில் அப்பெருமானது சரணத்தை ஒரு கணப்பொழுது சிந்திப்பானானால் அவன் யமபதமடையான். ஏனையதேவர்கள் ஈஸ்வரனுக்கு நிகரா! நிகரானால் விரூபாக்ஷனென் று கூறுவதுண்டா? அவ்விரூபாக்ஷனது கருணைகடாக்ஷமன்றி அவ னுக்கு நிகராவரா? அபாரமாகிய தருமங்களும் யாகங்களும் தான ங்களும் யோகங்களும் உக்கிரமாகிய தபங்களும் என்னபிரயோ ஜனத்தைத்தரும்! காலகாலனாகிய அவ்விறைவனையே எப்பொழு

துஞ் சிந்திப்பாம். தர்மமும் அவ்வுமாசகாயனேயே சொரூபத்துட னடைந்து சேவிக்கின்றது. நவமாகிய ஓர் பில்வதளமாவது சிவன் பொருட்டுச் சமர்ப்பித்தால் அவனுக்கு நிகராதலைப்பெறலாம். கண் டமாகிய பத்திரங்களும் சின்னமாகிய மலர்களும் லீலையாலாவதுபர. மேஶ்வரன்மீது விழுமானல் அவர் சுபத்தையும் முத்தியையு மளித் தருள்கின்றார். அஸ்வமேதாதி அளவிறந்தயாகங்களும் சிவாராதனையி ன் புண்ணியராசியின் லேசத்துக்குக்கூட நிகரல்லவே. கோடிகோதா னங்களாலும் யாதுபயன்? கேசவாராதனத்தினாலும் யாது? இவைக ளெல்லாம் சிவாராதனபுண்ணியராசிக்கு நிகரல்ல. அளவிறந்தசுவர் ணங்களோடுகூடக் கன்னிகாதானஞ்செய்தல், பயிர்தான்யங்களால் பூரணமாகிய பூதானஞ்செய்தல், அறுசுவையுண்டியமைத்து அரிய நெய்யொழுகும் அன்னங்களைத் தானஞ்செய்தல், கோக்ஷீரம் அமிர் தம் இவைகளைக் குடங்குடமாய்த் தானஞ்செய்தல், விசித்திரமாகிய வஸ்திராபரணதானஞ்செய்தல், ஜலகும்பதானஞ்செய்தல், நறுமணங் கமழும் புஷ்பமாலாதானஞ்செய்தல் ஆகிய இவைகளால் வரும்பயன் சிவலிங்க பூஜாபலத்தின் லேசலேசத்திற்கும் நிகராகாது. லிங்கத் திற்கு அளிக்கப்பட்ட மலர் தளம் ஜலம் கனி முதலியவைகளை உமா சகாயனுகிய இறைவன் பெற்றுக்கொண்டு அனந்தமாகிய பாக்யத் தையளித்து இறுதியில் முத்தியையுமளிக்கின்றனர். ஆறுகுகளாலா வது சிவலிங்கத்தைப் பக்தியுடன் பூசித்து எவர் வணங்குகின்றன ரோ அவர்கள் சம்சாரமாகிய பெருங்கடலைத் தாண்டிக் காலகால னுகிய ஜகதீஶ்வரனையடைகின்றனர். சிவலிங்கத்தில் ஓர் சிறிது தீர்த் தம் சமர்ப்பித்தாலும் அஃதே பெரும்புண்ணியத்திற்கேதுவாகும். அதற்கு நிகரா யுலகில் பாபநாசஹேது யாதொன்றுமில்லை. எவன் தினந்தோறும் பக்தியுடன் தீர்த்தத்தையும் சிறிது பில்வதளங்களை யும் சமர்ப்பிக்கின்றானே அவனது புண்ணியத்துக் கீடான புண்ணி யம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை யென்று சுருதிகளில் பிரசித்த மாயுளது. சிவன்பொருட்டுப்பக்தியுடன் சிறிது நெய்யுடன்கலந்த அற்பமாகிய அன்னத்தைச் சமர்ப்பிப்பதற்கு மீடாகிய புண்ணியமு மவ்வாறே. நெய்யிட்ட ஓர் சிறியதீபம் மகேஶ்வரனுக்குச் சமர்ப் பிக்கப்படுமாயினும், ஓர் சிறிது தூபம் அல்லது கனிகளாவது தேனு வது பிரதிதினமும் பக்தியுடன் சமர்ப்பிக்கப்படுமாயினும் அவ னது புண்யமும் நிகரற்றதெனச் சுருதிகள் புகல்கின்றன. ஏலம் லவங்கமுதலியவைகள் கலந்த தாம்பூலத்தையாவது தினந்தோறும் பக்தியோடு சமர்ப்பிப்பவனது புண்ணியமுங் கூறமுடியாது. எவன்

அழகியகண்ணாடி சாமரம் சத்திரம், நாட்டியம், த்வஜம், வாத்யம் முதலியவைகளால் பரமேஸ்வரருக்குத் திருப்திசெய்து வைக்கின்றானோ அவனது புண்ணியமும் நிகரற்றதென்று சுருதிகள் கூறுகின்றன. எவன் சிவாலயத்தில் திருவலகிடுதல் திருவிளக்கேற்றல் பட்டாடை சமர்ப்பித்தல் இவைகளைத் தினந்தோறுஞ் செய்பவனோ, வசந்தகாலந்தோறும் திவ்யசந்தனக்காப்பிட்டுத் தயிரன்னம் பக்தியுடன் பரமேஸ்வரனுக்குத் தினந்தோறுஞ் சமர்ப்பிக்கின்றானோ, க்ஷீரான்னத்தினாலும் கிருதான்னத்தினாலும் மது அன்னத்தினாலும் எவன் மகேஸ்வரனைத்தினந்தோறும் பூசித்துத் திருப்திசெய்விக்கின்றானோ, எவன் மகேசனாலருளப்பட்ட வஸ்திரங்களாலும்தனங்களாலும் அவனுக்கே திருப்திசெய்விக்கின்றானோ இவர்களுடைய புண்ணியத்திற் கெல்லாம் ஈடானபுண்ணியமும் உண்டா? லிங்கார்ச்சனை புண்ணியம் மதிக்கக்கூடாதவொன்றன்றோ? அது சகல புண்ணியத்திற்கும் சிவனது அபாரமான திருப்திக்கும் காரணமாகும். அஃதே வேதாந்த சிரோமணிகளால் கூறப்படுவது. ஆதலின் அப்புண்ணியத்திற்கும் நிகருண்டா? ஹே தேவர்களே! சிவபாதாரவிந்த பூசனைக்கு நிகரான புண்யம் யாதுமில்லை. அது அனந்தகோடி ஜன்மங்களிற் செய்த புண்யங்களாலேயே கிடைக்கும். அச்சிவபூஜையை கரவீரமலராலும் அறுகினாலுஞ் செய்வது கூட நித்யமாகிய முத்தியையளிப்பதாகும். சிவபூஜனத்தின் விஸ்வாசம் அபாரமான புண்ணியங்களிருந்தாலொழிய வுண்டாகாது. அப்படியுண்டான விஸ்வாசமும் அனந்தகோடி புண்ணியங்கள் செய்திருந்தால் தான் நிலைத்திருக்கும். அப்படி விஸ்வாசமிருந்து செய்யும் பூஜையால் எண்ணிறந்த புண்ணிய சமுத்திரங்கள் கிடைப்பனவாகும். அஃது அபார கல்யாண விபவங்களைப் பெறுதற் கேதுவாகும். உலகில் முனிவர்கள் சரீரத்துக்குக்கிலேசத்தை விளைவித்துக்கொண்டு எவ்வளவோ உக்ரமாகிய தவங்களைச்செய்கின்றனரே! லிங்காராதனத்தை விடுத்துச்செய்யும் அத்தவங்களால் யாதுபயன்? அதுமரித்தால் சுகத்துக்கும் முக்தியென்னும் வார்த்தைக்கும் ஹேதுவல்ல.லிங்கார்ச்சனமொன்றே சகலாபீஷ்டங்களையுந் தந்தருள்வதென்று சுருதிகணங்கள் முறையிடுகின்றன. புதிதானதும் வாடாததுமாகிய அற்பமாகிய ஓர் பில்வதளம் சிவலிங்கத்தில் பக்தியுடன் சமர்ப்பிப்பானால் அஃது சுபசமுத்திரமாம். பலகாலனுபவிக்கப்பட்டு இறுதியில் முக்தியையுங் கொடுக்கும். ஓ சுரகணங்களே! இது சத்தியம்! இது சத்தியம்! எவ்வாற்றானும் இது சத்தியமேயென்று இருகை

களையுந் தூக்கி அம்பிகையினுடைய பாதாரவிந்தங்களிலும் சங்கர சரணாரவிந்தத்திலும் சபதஞ்செய்து கூறுகின்றேன். லிங்கார்ச்சனம் சகல அபீஷ்டத்தையுங்கொடுக்கும். அதற்கு நிகரானது மூவுலகிலுமில்லை. ஓதேவகணங்களே! இங்கு நான் கூறியது பரமரகசியமாயுளது. சகல முனிஜனங்களாலும் இஃதே வேண்டப்படுகின்றது. இதனை அபாரமாகிய பக்தியுடையவன், சிவபூஜை செய்வதிலேயே பிரியமுடைய புண்யவான் இவர் பொருட்டே கூறவேண்டியது. சிவநிந்தகர்களாகிய மற்றவர்களின் பொருட்டுக் கூறக்கூடாதென்று சம்பு பாதாரவிந்தங்களில் சபதஞ்செய்து கூறுகின்றேன்.

வியாசர்:-இவ்வாறு நந்தீசரது வசனாமுததாரையைச் செவியாலருந்திச் சிவானுக்கிரகத்தையும் பெற்றுத் தேவர்களெல்லோரும் ஆனந்தபரவசராய் ஓர் முகூர்த்தநேரம் சகலத்தையுமறந்து நின்று மீண்டும் நந்தீஸ்வரரை நமஸ்கரித்து ஓ சுவாமி! இந்த மகானால் என்ன புண்யம் செய்யப்பட்டது? அதைக்கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்போது நந்தீஸ்வரர் தேவர்களை நோக்கி ஓ தேவர்களே! நானென்ன சொல்லுவேன்! த்ரிணேத்ரனது சரிதம் அற்புதமன்றோ? பாவனங்களுக்கெல்லாம் பாவனமாம். அமரவீரராகிய ஹரரது அநுக்கிரகம் பரமானந்த சாதனமாயுள்ளது. அம்மகாதேவனே சுதந்திரன். அவன் கருணைக்கடல். அவனாலேயே சம்சாரக்கடலைத் தாண்டவேண்டியது. அந்தப்பிரபுவினுடைய ஆக்ஞைக்கு அடங்கியே கிங்கரர்கள் நடக்கவேண்டியது. அப்படியில்லாவிடில் விபரீதமே விளையுமென்பது நிச்சயம். அவன் கூறியதே வேதார்த்தம். வேதங்கூறியது மவனே. வேதங்களுக்குப் பிராமாண்யமும் அவன் கூறியது பற்றியே. வேதங்களெல்லாம் சிவவாக்கியங்களேயாம். ஆதலால் அது சகலப்பிரமாணத்துக்கு முதற் பிரமாணமாயிருக்கிறது. தர்மதத்வம் மகேசனாலேயே நியாயமாயிருக்கின்றது. தேவ கின்னர கந்தர்வ நாகர்களுக்கெல்லாம் அங்கு யாதுமிடமில்லை. அவனே நித்யன். சர்வக்ஞன். அஷ்டமூர்த்தி. சகல தர்மதத்வங்களையும் உள்ளபடி அவனே யறிகின்றான். இது இத்தர்மமுடையது. இதன் தத்துவம் இவ்விதமானது என்று சகலத்தையுமறிகின்றவன் அம்பிகையுடன் கூடிய அப்பகவனே. அவனே சம்சாரமோசகன். சராசரமாகிய சகல ஜகமும் அவனது மாயையினால் மோகித்துளது. சகல சீவர்களையும் பற்பலவிதமாய்ச் சம்சாரத்தில் தள்ளுகின்றான். ஆச்சரியம்! மகேசனது அபாரமகிமையானது உலகிலெவனாலறிய முடியும்? அவனது வசனமாகிய வேதங்களால்

தான் அவனதுருவமறிய முடியும். நம்போன்றவர்களது வாக்யத் தாலும் நம்மவர்களது ஞானத்தினாலுமறியக்கூடியதன்று. அவன துருவம் சச்சிதானந்தஸ்வரூபம். அஃதுவேதாந்தத்திற்கே விஷயம். அப்படிப்பட்டதை நாமெப்படி யறியக்கூடும்? அங்ஙனமாகிய பரமேஸ்வரன் லீலாவிக்ரகமாகிய பற்பல மூர்த்திகளுடன்கூடி விளங்குகின்றார். அப்படிப்பட்ட லீலாவிக்ரக ஸ்வரூபத்தையும் நாமறிய முடியாது. ஒவ்வோர் மூர்த்தியும் நமது கண்களாற் பார்க்கக்கூடியதன்று. தேஜோமண்டலம்போல் ஜ்வலிப்பவும் இரண்டு கைகளோடு கூடியவுமாகிய மூர்த்திகள் அவனுக்குக் கோடிக்கணக்காயிருக்கின்றன. நான்கு கைகளுடையனவாய் எண்ணிறந்த மூர்த்திகளும் எட்டுக்கைகளையுடையனவாய் எண்ணிறந்த மூர்த்திகளும் விளங்குகின்றன. அன்றியும் சில மூர்த்திகள் பத்துக்கையுடையனவும் சில ஆயிரங்கைகளுடையனவும் சிலலக்ஷங்கைகளையுடையனவும் சில கோடிகைகளுடையனவும் சில மூர்த்திகள் பரார்த்தகைகளுடையனவும் திவ்யாபரண மணிந்தனவும் மகாமேருபோன்றவுமாய் விளங்குகின்றன. திவ்யமாகிய வெண்பட்டாடை யணிந்து திவ்ய சந்தனம் பூசி உமைபாதி தேகமாய் முச்சூலங்கையேந்தி சந்திரகலை தரித்து கண்டங்கறுத்து சடைமுடிதரித்து அவர்களெல்லோரும் கைலாயபுவனாலயத்தை வியாபித்துக்கொண்டு பரமானந்த சம்பூர்ணர்களும் கருணாநிதிகளுமாய் விளங்குகின்றனர். அவர்களது மகிமையென்னும் கடலின்கரை வேதங்களாலும் காண்பதரிது. நம்போன்றவர் எங்ஙனங்காணவியலும்? இம் மூர்த்திகளுக்கெல்லாம் மூலமூர்த்தியாய்ச்சர்வாதாரனாய் விளங்குபவன் சித்கனனாகிய சிவனொருவனே. அவனையறிவது துர்லபமே. யான் இரண்டுகைகளுடன் கூடிவிளங்கும் ஈசானவிக்ரஹத்தைக் கோரமான தவஞ்செய்ததாலும் சிவனது கிருபையாலுந் தரிசித்து வருகின்றேன். அவர் சிவையுடன் எப்போது கூடியிருக்கின்றாரோ அப்போது அவரது தரிசனம் குமாரனுக்கும் கணபதிக்கும் மற்றுமுள்ளவருக்கும் கிடைக்காது. அவருடைய ஆக்ஞையினாலேயே பிரமாண்டமண்டலமெல்லாம் நடைபெறுகின்றது. அவனது ஆணைக்குப் பயந்தே வாயு சஞ்சரிக்கின்றான். உக்ரனாகிய அவரது சாசனத்துக்குப் பயந்தே சூரியனுமுதிக்கின்றான். அவனிடம் பயந்தே இந்திரன் அக்னி ம்ருத்யு முதலியவர்கள் தத்தந்தொழிலை நடத்துகின்றனர். இப்படி சகல சுருதிகளாலும் போற்றப்படும் மகாதேவனை எவன் சிந்திக்கின்றானோ அவன் அபாரமாகிய பாபசாகரங்களினின்றுங் கரை

பேறுகின்றான். அர்ச்சித்தலும் ஸ்மரித்தலும் தியானித்தலும் வந்தனைசெய்தலும் அவனது மகிமைகளைக் கூறுதலும் அனந்தமாகிய பேற்றையளிப்பவாகும். சிவசரணாரவிந்தத்தை யர்ச்சித்தல் தியானித்தல் ஸ்மரித்தல் அவனது சரணாரவிந்த மகிமையையே மொழிதல் முதலியவைகளால் எப்போதுஞ் சந்தோஷமாய் இலக்ஷ்மி முதலிய சகலரும் காலத்தைக் கழிக்கின்றனர்.

இருபத்தெட்டாம் அத்தியாயம்
முற்றிற்று.

---

உ
த்விஷண்ணேத்ராயநமஃ

# இருபத்தொன்பதாம் அத்தியாயம்.

நந்திகேசுரர் சிவதர்மமுரைத்தது,

வியாசர்:-பின்னர் தேவர்களெல்லோரும் நந்திதேவரை மீண்டும் சாஷ்டாங்கமாகநமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு தங்களுக்குச் சிவதருமத்தைக்கேட்டுத் தெரிந்துகொள்வதிலிருக்கும் அவாவைத் தெரிவித்துக்கொண்டனர். அம்மொழியைக்கேட்டுச் சிவதர்மமணிபூஷணராகிய நந்திதேவரும் தேவர்களைப்பார்த்து ஓ தேவர்களே! பற்பலகோடி தருமங்களின் சாரமாயுள்ளது சங்கர பூஜையே. அதனினுஞ் சிறந்தபுண்ணியம் யாதுமில்லை. சொர்க்கமோக்ஷங்களைத்தருவது சிவபூஜையென்றே பற்பல சுருதிகளில் கூறப்பட்டுளது. அச்சிவபூஜையைக்கூறுகின்றமையால் வேதங்களும்பாவனமாகின்றன. சிவனைத்தியானிப்பதே சிறந்த பூஜையாகும். அதனால் பாபக்கடலாகிய சம்ஸாரத்தினின்றுங் கரையேறலாம். 'ஹிரண்ய பாஹு' என்பதாதி சுருதிகளில் சங்கரனது ஸ்வரூபம் த்யானிக்க வேண்டுமென்றே கூறப்படுகின்றது. சாந்தனும் சர்வக்ஞனுமாகிய உமாகாந்தனை யடிக்கடித்யானித்துச்சம்சாரபந்தத்தினில்நீங்கவேண்டும். பற்பல ஜன்மங்களிற்செய்த புண்ணியங்களினாலேயே பரமனிடம் பக்தியுதிக்கின்றது. அப்பக்தியுடன் சிவனைத் தியானிக்கின்றவன் முக்தனாகின்றான். அப்படிப்பட்ட பக்தியானது உலகில் தவத்தினாலும் பெறுதலரிது. சிவானுக்கிரகத்தினாலேயே அஃதுண்டாகிறது. சுருதிகூறியபடி லிங்கத்தில் சதாசிவனைத்யானித்துத் தினந்தோறும் பில்வம் மலர் தர்ப்பை தளம் அறுகு ஜலம் இவைகளால்பிரீதியுடன்

பூசிக்கவேண்டியது. மங்களகரமாகிய லிங்கத்தைச் சாம்பாதித்து விபூதியால் தனது தேகமுழுமையும்பூசி ருத்திராக்ஷ தாரணஞ்செய்துகொண்டு சரம் அல்லது அசரமாகவுள்ள சிவலிங்கத்தைச் சற்றுப் பரிசித்து சத்யோஜாதாதி மந்திரங்களால் உமாபதியை ஆவாகித்து ருத்திராத்தியாயத்தாலும் ரௌத்திர சூக்தங்களாலும் கோக்ஷீரம் மது ஆஜ்யம் சர்க்கரை கனி ஜலம் இவைகளைக் கொண்டபிஷேகஞ் செய்யவேண்டும். பின்னர் விபூதியைக்கொடுத்துச் சந்தனத்தையுஞ் சமர்ப்பிக்கவேண்டும். பிறகு பில்வதளத்தையும் அக்ஷதைகளையுஞ் சமர்ப்பித்துத் தூப தீப நைவேத்யம் பானீயம் இவைகளைத் தந்து இதன்பின்னர் ஏலம்லவங்கமுதலியவைகளோடு கூடியதாம்பூலத்தையும் நிவேதித்துவெண்பட்டாடைகளாலும் ஆபரணங்களாலும் பின் தீப நீராஞ்சனங்களாலும் உபசரிக்கவேண்டும். பின்னர் கண்ணாடி சாமரம் சத்திரம் விசிறி இவைகளாலு முபசரித்துச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நாட்டியஞ்செய்வதால் திருப்திசெய்து சந்தனத்துடன் கூடியசீதளமாகிய தீர்த்தத்தையுஞ் சமர்ப்பித்துத் தூபத்தையும் கர்ப்பூரதீபத்தையும் சமர்ப்பித்து குருபதேசப்படி பஞ்சாக்ஷரத்தை ஜபித்துச் சாம்பவர்களுக்குப் போஜன மளிக்கவேண்டும். தானும் சிவநைவேத்ய அன்னத்தை மௌனமாய்ப்புசித்துப் பின்னர் சிவகதையைப்படிக்கச் செய்து கேட்டுச் சிவையைப்பூசித்துப் பின்னர் சயனசாமக்கிரியைகளைச் சித்தஞ் செய்து சிவபவானிகளுக்குத்தந்து அங்ஙனம் த்யானித்துத் தான் ஈசானனை ஸ்மரித்து வழிபடவேண்டும். உபநயனமான பின்னர் மரணம் வரையில் இவ்வாறு பூசிக்கவேண்டும். இப்பூஜை பிராமணர்களுக்கும் அரசர் வைசியர் தேவர்கள் முனிவர்கள் கந்தர்வர்கின்னரர் முதலியவர்களுக்கும் அனுஷ்டிக்கவேண்டியதா யுள்ளது. இனி ஸ்திரீகளுக்கும்சிவபூஜை பெருந்தர்மமேயாம். சூத்திரர்களுக்கும் மற்றவர்களுக்கும் லௌகிகமாகிய சிவபூஜை செய்யவேண்டியதவசியம். ஏனெனின் சிவார்ச்சனையின்றிப்புசிப்பவன் வாழ்நாள்முழுவதும் தரித்திரனாயிருந்து இறுதியில் நரகமடைகின்றான். சம்சாரபந்தத்தினின்று ஓர் காலமும் முக்தனாகான். சம்சாரசாகரத்திலகப்பட் டுழல்வோன் சிவபூஜை யென்னுமோர் தோணியை யடைந்து கரையேறுகின்றான். சம்சாரபாச பந்தத்தை யறுத்துவிடுவதில் சிவபூஜையென்னுமோர் பெருங்கத்தியே தக்கதாயுள தன்றி மூவுலகிலும் யாதொன்றும் வேறில்லை. சிவார்ச்சனை செய்யாதவர்களே பிறப்பது மிறப்பதுமாய் எண்ணிறந்த ஜன்மகோடிகளைப் பெற்றுத்துன்புற்று நரகத்தில்

அல்லற்படுகின்றனர். எவர் சிவார்ச்சனையை நிந்திக்கின்றனரோ அவர் பல்லூழிகாலம் கர்ப்பநரகவாசஞ் செய்கின்றனர். ஊர்ப்பன்றிகளுக்கும் அவர்களுக்கும் சிறிதும் விசேஷமில்லை. ஊர்ப்பன்றிகள் மலத்தைப் புசிக்கின்றன. இவர்களும் கர்ப்பநரகங்களில் மலத்தைப்புசிக்கின்றார்கள். அவர்கள் பலகோடிபிறவி பன்றியின் கர்ப்பத்திலும் வசிக்கின்றனர். இங்கு ஓர் புராதனமாகிய இதிகாசத்தை உதகரிக்கின்றேன். கேட்பீர்களாக.

பூர்வம் வேதாத்தியயனஞ்செய்து சகலவேதாந்த பாரகனாகிய ஓர் பிராமணன் தனம் தானியம் புத்திரன் பௌத்திரன் முதலிய சகல சம்பத்துக்களுடன் சகல போகங்களையும் புசித்துக்கொண்டிருந்தான். அவனது பூர்வ புண்ணியத்தாலேயே அத்தகைய நிலைமையிருந்தது. அவன் நாட்டியகானங்களில் மிக்க அவாவுடையோனாய் நாட்டியகானஞ் செய்வோர்களுக்கு ஏராளமாய்த் தானங்களையும் ரத்னங்களையும் வெண்பட்டாடைகளையும் கொடுத்து வந்தான். அவனுக்கு அசாம்பவர்களிடமே மிக்க சிநேகமிருந்தது. அவர்களுக்கே ஏராளமாய்த் தனங்களையும் கோக்களையுங் கொடுத்தான். எருமைகளையும் ஆயிரக்கணக்காய்க்கொடுத்தான். குதிரை காளை முதலியவைகளையும் அசாம்பவர்களுக்கே கொடுத்தும் அவர்களுக்கே அன்னதானஞ் செய்துகொண்டு மிருந்தான். அசாம்பவர்களுடன் சகவாசமும் அவர்களுடன் புசித்தலும் சல்லாபமுதலியவுஞ் செய்துவந்தான். அவனது இல்லத்தில் சிவலிங்கமென்ற வார்த்தைக்குமிடமில்லையாகையால் அவனதில்லம் ஸ்மசானம்போலிருந்தது, அஃதும் சண்டாள ஸ்மசானத்திற்குத் துல்யமாய்ச் சொல்லவேண்டும். யாதொரு இல்லம் சாம்பவசம்பந்த மில்லாததோ சிவலிங்கமில்லாததோ அவ்வில்லத்தில்வசிப்பவன் ஜன்மஜன்மமும் சண்டாளனாகின்றான். அசாம்பவர்வார்க்குந் தீர்த்தம் மூத்திரத்திற்கு நிகராதலால் அதனை யருந்தக்கூடாது. அப்படி யருந்துவானாயின் அவன் கோடிஜன்மம் மூத்திரக்குண்டங்களில் வீழ்கின்றான். அசாம்பவரது அன்னத்தை யறியாது புசிப்போனாயினும் அவன் நெருப்பில்வேகும் மலகுண்டங்களில் வீழ்ந்து பல்லூழிக்கால மல்லற்படுகின்றான். அசாம்பவர்களோடுகூட செய்யும் உண்டிமுதலியவைகளால் களிக்கின்றவனெவனோ அச்சண்டாளன் விஷ்டையில் கிருமியாகப்பிறக்கின்றான். மகாபாதகசம்சர்க்கத்தினுங் கொடியது அசாம்பவர்களது சகவாசமாதலால் அது கொடுந் துக்கத்துக்கு ஹேது வாகும். ஆபத்துக்காலத்தில் சண்டாளர்களோடுவசித்தாலும்

வசிக்கலாம். அஃது கூட சுவர்க்கத்தைத்தடுப்பதல்ல. அசாம்பவ னது குலத்தில் பழகுவது சுவர்க்க மோக்ஷங்களைத்தடுப்பதாகும். இப்படி அசாம்பவ அதமதனுயிருந்த அவ்வந்தணன் காலவசத்தா லிறந்தான். அவனது பத்னியும் அவனோடு கூட இறந்தனள். அவ னோடு கூட சம்பந்தித்தவர்களும் கோரமாகிய நரகத்தில் வீழ்ந்தார் கள். எவரெவரிடம் அவனது தனம் சென்றதோ அவரனைவரும் அவ ர்மித்திரர்களும் மிகவும் கோரமாகிய நரகத்தையடைந்தனர். அவ்வ தமன் பற்பலதுன்பமனுபவித்துக்கொண்டு நாய்ச்சன்மத்தைக் கண க்கிலடங்காது எடுத்துப்பிசாசவுருவமடைந்து ஜலமற்ற ஓர் பெரிய காட்டில் பசியாலும் தாகத்தாலு மெப்போதுங் கதறிக்கொண்டு மிக்கதுக்கத்துடன் காலங்கழித்துவந்தனன். இவனைப்போல இன்னும் மெண்ணிறந்தவர்கள் பிசாசவுருவம் பெற்று அவ்வனத்தில் பசிதாக த்தால் கதறிக்கொண்டிருந்தனர். இவர்களது அலறுதலைக்கேட்டு அவ்வனத்திலுள்ள மிருகங்களெல்லாம் பயந்து மரித்தன. சிலமிருகங் கள்காதில் கத்திமுனைபோல்விழும் அவ்வலறுதலைக்கேட்டுப் பயந்து ஓட்டம் பிடித்தன. அவ்வனத்தில் அப்பிசாசங்களுக்குக் கனிதீர்த் தமுதலிய யாவும் கண்ணுக்குப் புலப்படவில்லை. அற்புதமாகிய கனி வகைகளும் திவ்விய தீர்த்தங்களு மிருந்தாலும் அப்பிசாசங்களின் கண்ணுக்குத்தோன்றாததின் காரணம் அவைகளால் சிவாலயத்தில் ஓர் சமயத்திலும் திருவிளக்கிடாதிருந்தமையே. அப்பாதகத்தால் அவர்களெல்லோரும் குருடர்களாயினர். ஓ தேவர்களே! எவன் பக்தியுடன் பசுபதிக்குத் தீபம் சமர்ப்பிக்கவில்லையோ அவன் பிற விக் குருடனாகின்றான். எவரால் மகேஶ்வரன்பொருட்டு நறுமணங் கமழும் சந்தனம் சமர்ப்பணஞ் செய்யப்பட்டிலதோ அவர்கள் துர் க்கந்தமுடையவராகின்றனர். எவர்களால் பக்திபூர்வமாய் மகேஶ் வரனுக்கு வஸ்திரம் சமர்ப்பிக்கப்படவில்லையோ அவர்களே வஸ் திரமின்றிப்பரிதபிக்கின்றனர். எவர் அறுவகையுண்டியுடன்கூடிய அன்னத்தைப் பரமனுக்கு நிவேதிக்கவில்லையோ அவர்களே அன் னமென்பதையேகாணாது தபிக்கின்றனர். எவர்கள் தனதில்லத்தை மாகேசனுக் கிடமாய்ச்செய்திலரோ அவர்கள் இல்லமின்றித்தபிக் கின்றனர். ஓ தேவர்களே! மதுரமாகிய கனிகளையும் சுத்தமாகிய தீர்த்தத்தையும் அற்பமாயினும் எவன் சமர்ப்பிக்கின்றானோ அவன் பாலைநிலமடைந்தாலும் அங்கும் திவ்விய தீர்த்தம்கிடைக்கப்பெறு கின்றான். ஓர் சிறிது தீர்த்தத்தை மகேஶ்வரனுக்காவது அல்லது சாம்பவர்களுக்காவது பக்தியுடனளித்தவன் அமுதசமுத்திரம்கிடை

க்கப் பெற்றானந்திக்கின்றான். அன்னத்தை மகேஸ்வரனுக்காவது சாம்பவருக்காவது நிவேதிக்கும் மனிதன் அன்ன பர்வதத்துக்கு அதிபனாகின்றான். மகேசனுக்கும் அவனதடியாருக்கும் ஓர் சிறிது பால்உதவுவோர் பாற்கடலையடைந்து மகிழ்கின்றனர். சங்கரனுக்கும் சாம்பவருக்கும் சிறிது சர்க்கரை அளிக்கும் மனிதர் சர்க்கரைமலைக்கு அதிபதிகளாகின்றனர். சம்புவுக்கும் சாம்பவர்க்கும் கனியுதவு மனிதர் கனிமலைபெற்றுக்களிக்கின்றனர். சந்தனமளிப்பவர் சந்தனமலைக்கதிபராய்ச் சந்தோஷிக்கின்றனர். சிவசாம்பவர்களுக் காபரணமளிப்போர் ஆபரணசைலமடைந்து ஆனந்திக்கின்றனர். சம்பு சாம்பவர்களுக்குச் சுவர்ணமுதவுவோர் சுவர்ணமலைக்கதிபராய்ச் சுகிக்கின்றனர். வெண்பட்டுக்குடை யுதவும் மனிதர் வெண்பட்டுக் குடை பிடிக்கப்பட்டவராய்ச் சிவபதஞ்செல்கின்றனர். சிவசாம்பவர்களுக்குச் சாமரமுதவு மனிதர் ரத்னசாமரங்களாலுபசரிக்கப்பட்டுச் சிவமந்திரம் புகுவார். வாகனமுதவுவோர் ரத்ன புஷ்பகவிமான மடைந்து சிவமந்திரம் புகுவார். சிவனுக்கும் சாம்பவருக்கும் சிறந்த பொருள்களையெல்லாமுதவுவோர் சகல பாக்கியங்களுடன் சிவலோகஞ்செல்வார். அசாம்பவரிடம் மகாமேருபரிமாணம் தானங்கொடுத்தாலும் அவைகள் திருடர் கொண்டுபோனதற்குச் சமானமாகும். அசாம்பவனுக்குக் கொடுத்ததின் பலம் சோரரிடமும் சண்டாளரிடமும் கொடுத்ததற்கு நிகராம். ஓதேவர்களே! ஆனதுபற்றியே அசாம்பவர்கள் தானபாத்திரர்களல்லர். அவன் தனத்தையடைந்தும் துற்பாக்கியனாதலால் அத்துராத்மா அசாம்பவர்களிடம் தனத்தைக்கொடுத்து இத்தகைய துக்கமடைந்தான். அவன் போலநேகர் அவ்வனத்தில் கண்தெரியாது எப்போதும் ஓயாமல் அலறிக்கொண்டேயிருந்தார்கள். இப்படி அவர்கள் அலறிக்கொண்டிருக்கும்போது அசரீரிவாக்ய மொன்றுண்டாயது. ஓ மூடர்களே! அசாம்பவர்களுக்கு இஃதே கதியாகும். இங்கலறுவதால் யாது பயன். அந்தோ! தனமெலாம் அசாம்பவர்களிடஞ் சென்று வியர்த்தமாகியது. பாலை நிலத்திலும் பெரும் படுகுழியிலும் மலத்திலும் எறிந்ததுபோல் அசைவர்களிடம் தனமெலாஞ் சென்றது. சகல சாதனதேவதைகளும் அந்தோ இவர் தனம் அசாம்பவரிடம் சென்று அவலமாயினரோ என்று கதறுகின்றன. அசைவ சகவாசத்தால் அதர்மமாய் விட்டது. சன்மமத்யத்தில் இப்போதாவது சாம்பவரின் பொருட்டுச் சிறிது தண்ணீரும் வார்க்காது பிசாசத்தன்மை பெற்று அல்லற்படுகின்றீர்கள். அறியாமையாலாவது சிறிதன்

னத்தைச் சாம்பவருக்குதவாது பிசாசத்தன்மை பெற்று இவ்வனத்தில் கொடுந்துன்பத்தை யனுபவித்துக்கொண்டிருக்கின்றீர்கள். அந்தோ! சாம்பவராகிய மகான்மாக்களுக்கு வஸ்திரங்கொடுக்காமல் இக்கெடுதியடைந்து தவிக்கின்றீர்கள். அசாம்பவ கதையில் ஆவலுடையவர்களாயிருந்தீர்களே யன்றி, சம்புகதை சிறிதும் கேட்கவில்லை. சிவாலயத்தில் ஓர் சிறு விளக்குமிட்டதில்லை. ஏனையோர் சிவாலயத்தில் திருவிளக்கிடுவதைப்பார்த்தது மில்லை. பக்தியுடன் சம்புவையாவது சாம்பவரையாவது பூசித்தது மில்லை. ஏராளமாய்த்தனமுடையோராயிருந்தும் சிவாலயத்திற்குச்சிறிது முதவவில்லை. சிவ ஸ்தல யாத்திரை எந்தப்பாவச்செயலின் காரணமாகவாவது செய்ததில்லை. சிவலிங்கங்களில் பத்திரமாவது புஷ்பமாவது அளித்ததில்லை. அப்பாவங்களால் பிசாசத்தன்மை பெற்று இவ்வனத்திலலறுகின்றீர்கள். கோடிகாலத்தில் சிவலிங்கங்களில் ஆதரவுடன் சிறிது தீர்த்தமும் அபிஷேகிக்க வில்லை. இவைகளினால் இத்தகைய பாவத்தைப் பெற்று இவ்வனத்தில் வருந்துகின்றீர்கள் என்று ஆகாயவாணி வரிசை வரிசையாய்க் கூறுவதைக்கேட்டு அப்பிசாசங்கள் தலையிலடித்துக்கொண்டு பூமியில் விழுந்தலறின. அப்போது ஓர் சாம்பவர் அவ்வழியாய்ச்சிவபூஜை நிமித்தம் பில்வபத்திர மெடுக்கவர அக்கூக்குரலைக்கேட்டுப் பயந்து பில்வத்தை யெடுத்து விரைவில் வீடு வந்து சேர்ந்தனர். அங்கு நடந்த கூக்குரலையும் ஆகாயவாணி கூறியதையும் கிராமத்திலுள்ள தன்னினத்தோர்க்குக்கூற அவர்க ளாச்சரியமடைந்து அன்று முதல் சிவோபாசனையில் மிக்க சிரத்தை யுடையவராயினர்.

பின்னர் சில நாள் கழித்து அக்கிராமத்தில் பஸ்மதாரியொருவர் மரிக்கச் சிவகணங்கள் அவரைக்கயிலைக்கழைத்துப்போக வந்து சேர்ந்தனர். அத்தினத்திலேயே காலையில் அரண்யத்தில் நடந்த விருத்தாந்தங்களை அவர் கேட்டு என்னசெய்வோமென்றேங்கியிருந்தனர். ஐயோ நாம் சைவாசாரங்களை விட்டுவிட் டிருந்தோமே. அரண்யத்தில் நடந்த விருத்தாந்தங்களைக்கேட்டதின் பின்னர் மன நடுங்குகின்றதே. வயதுசென்ற நாம் இனிச்செய்யக்கூடிய காரியமென்ன விருக்கின்றது. மரண காலத்தில் இம்மொழியைக் கேட்டனம். இப்போது பூசிப்பதற்கோ சக்தியில்லை. இதற்குமுன் பாப நாசகமாகிய சிவகதையைக் கேட்டதில்லை. இனியாது செய்யத்தக்கது? சைவரை நமதில்லத்துக்கழைத்துவந்து பக்தியுடன் போஜனமளித்திலம். இதுகாறும் பாபமே செய்யப்பட்டது. இக்கிரா

மமோ சிறிதும் புண்ணியமற்றது. அந்தோ ! சிவலிங்கமற்ற இக்கிராமத்தைச் சுடுக. இது காறும் சாம்பவஜனமும் விபூதியும் சிவபக்தியும் அற்றதாகிய இக்கிராமத்தைச் சுடுக சுடுக. தனதானியம் பசுக்கூட்டம் வெண்பட்டாடைகள் இவைகளெல்லாம் சைவர்களாலனுபவிக்கப் படவில்லை. இப்போதும் தானஞ் செய்வோமென்னில் யாராவது சாம்பவர் வருகின்றனரா ! அந்தோ ! நமதில்லத்தில் பரமான்ன ஆஜ்ய பகவான்ன போஜனங்களுடன் சாம்பவருக்குச் சிறிது அன்னமுமளித்திலமே ! அந்தோ ! நமதில்லத்தையும் நமது தனத்தையுஞ் சுடுக சுடுக வென்று பலவாறு புலம்பி ஹேசம்போ! என்னைக் காப்பாற்றுங்களென்றுகூறி லௌகிக விபூதியால் அங்கமுற்றும் பூசிக்கொண் டிறந்துவிட்டார். அவரது புதல்வர்களும் மற்றவர்களும் அவரைக்கொண்டுபோய்த் தகனஞ் செய்து தமதில்லம் வந்து சேர்ந்தனர். அவரைச் சூழ்ந்து கொண்டு தகிக்கும் நெருப்பின் புகை பிசாசங்களிருந்தவிடத்தை யடைந்து அப்பிசாசங்கள் மீதுசம்பந்தப்படவே அப்பிசாசங்களெல்லாம் சகலபாபமும் நீங்கிச் சிவலோகமடைந்தன. தேவர்களெல்லோரும் அக்கிழவரோடு சிவவார்த்தைகளையாடிக்கொண்டு சிவனையே துதித்துக்கொண்டு சந்தோஷத்துடன் சென்றனர். மஹேசனுடைய மஹிமையும் அவரதுபாசகருடைய மகிமையும் கூறவுமுடியுமா ? எவர் பரிதாபங்கொண்டதினாலேயே முக்தியடைந்தனரோ அவரது தேகதஹனத்தாலுண்டான புகையின் சம்பந்தத்தாலேயே மகா பாபிகளான பிசாசங்களெல்லா முத்தியடைந்தன. இம்மாத்திரத்தினாலேயே மகாதேவனும் யோகிகளுக்குந் துர்லபமானபதத்தைக்கொடுக்கின்றனர். பல்லூழிகால மிக்க கோரமான நரகயாதனை யனுபவித்துப் பின் பிசாசத்வம்பெற்றுப் பிறகு அப்புகையின் சம்பந்தத்தால் முக்தியடைந்தனர். அப்புகை எவர் தேகத்தைக்கொளுத்துவதினாலுண்டாகியதோ அவர் சாம்பவரல்லர். அவர் பதிதர்களுக்குள் அதமர். அவரால் ஓர் சமயத்திலும் சிவபூஜை செய்யப்படவில்லை. அவரால் சிவலிங்கம் தரிசிக்கப்பட்டது மில்லை. சாம்பவரோடுகூட சிறிதும் பழகவில்லை. மரணகாலத்தில் இவ்வாறுபாபியாய் விட்டோமே என்று பரிதாபப்பட்டு விபூதி பூசிக்கொண்டிருந்தார். அவருக்கித்தகைய வுத்தமகதி கிடைத்தது. முனிவர்களும் வேதங்களும் புத்திர மித்திரர்களோடுகூடி தேவகணங்களும் எப்போதும் எவனைத்துதிக்கின்றார்களோ அப்படிப்பட்ட தேவதேவனை ஓர் க்ஷ

ணகாலந் துதித்தாலும் சகலகாமங்களும் நிறைவேறினவர்களாய் சந்திரகலை வரப்பெற்றுப் பரமானந்தமடைவார்கள்.

இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஶக்திதராயநம:

## முப்பதாம் அத்தியாயம்.

---

### சிவபக்தர் மஹிமையுரைத்தது.

தேவர்கள்:-ஓ நந்திகேஶ்வரரே! எங்களையும் சங்கரர் பூஜை செய்வதின்பொருட்டு உத்தரவளியுங்கள். நாங்கள் அவருக்கே வேலைக்காரர்களாயும் அவராணையின்படிநடக்கிறவர்களாயுமிருப்போம். அவரையன்றி வேறு யாரும் கதியில்லையென்பது நிச்சயம். அவரது பாதாரவிந்தத்தைத் துதிப்பதினாலேயே நாள்களைத் தொலைக்கின்றோம். அஃதே எங்களுக்குச் சீவனமும். தேவரீர் கூறிய கதாமிர்தத்தால் எங்களது மனம் மிக்க திருப்தியடைந்து தினந்தோறும் பரமானந்தமடையும். ஓசுவாமி! இத்துராத்மாக்களால் அளவிறந்த திரவியம் செலவிடப்பட்டது. ஆனால் சாம்பவர்களுக்குச்சிறிதும் கொடுக்கவில்லையே. அதன் கதி என்ன? அவரிடம் தானம் வாங்கிய அசாம்பவர்களுக்கும் எக்கதியுண்டாகும்? அதனை எங்களுக்குரைத்தருளுங்கள். ஆயிரம் யோசனைவிஸ்தாரமுடைய யமாலயமானது அசைவர்களாலேயே நிறைந்திருக்கிறது. அவ்வசைவர்களும்துராராதனமும் துர்த்தானமும் செய்ததனாலேயே தனத்தைச் செலவழித்தவர்கள். ஆதலால் இவர்கள் அசாம்பவராயினர். யாகமுதலிய சகல தர்மங்களையும் விடுத்தனர். அதனாலும் அசாம்பவராயினர். சிவாலயமற்ற விடத்தில் வசித்திருந்தவர்கள். சைவதன்மத்தை விடுத்து, அன்னிய தர்மங்களைக்கைப்பற்றி யிருந்தவர்களாதலால் அசாம்பவரானார்கள். இப்படிப்பட்ட அசாம்பவர்களாகிய கொடும்பாவிகளை விசாரிப்பதினாலேயே இந்த யமனுக்குக் காலம்போய்க்கொண்டிருக்கிறது. இவனுக்குச் சிவபூஜை செய்யவேண்டுமென்றிச்சையிருந்தாலும் அதற்குச்சாவகாசங்கிடைக்காமல் என்னசெய்வோமென்றேங்கியிருக்கின்றான். ஓ பகவானே! இவனது துக்கமொழிதற்கு ஏதேனும் உபாயங்கூறுங்க ளென்று பிரார்த்தித்தனர்.

அப்பொழுது நந்திதேவரும் தேவர்களைப்பார்த்துப் பதரைக்கிள்ளுவதுபோல் வீணாய் இவ்விசாரத்தினாலென்னபயன் ? எவ்வாறேனும் அசாம்பவர்களைக் கும்பிபாகத்திற்றள்ளி வருத்தவேண்டியதே. அசாம்பவர்கள் செய்யும் சிறிது தன்மத்தை அதர்மமென்றே நினைக்கவேண்டும். சண்டாளர்களால் யாகஞ்செய்யப்படினும் சுவர்க்கசாதனமாகுமா? சண்டாளஸ்திரீகள் வேதாத்யயனஞ்செய்தால் அதன் பயனை யவர்களடைவதுண்டா? ஆதலின் கற்பகாலம்வரையில் கும்பிபாகாதி நரகங்களிற் றள்ளி வருத்திவிடு. பின்னர் அவர்கள் பிசாசங்களாவார்கள். இனிப் பூசிக்கத்தகுந்தவர்களாகிய சிவபக்தர்களாகிற பெரியோர்களைக் கூறுகின்றேன். சாவதானமாய்க்கேளுங்கள்.

ஹேவிஸ்வநாத மதநாந்தக காலகால கௌரீபதே கிரிச சந்திரகளாவதம்ஸ | ஶைலேந்திரஜா ஹ்ருதயபங்கஜ ராஜஹம்ஸ பாஹி || என்று எவன் கூறுகின்றானோ அவன் சிவபக்தனாகின்றான்.

காசிபதே ஹரபவாமரஸார்வபௌம பீமஸ்மராந்தக ரிபோ கிரிஶத்ரிணேத்ர | போபூதிகாத்ர வ்ருஷபாதிப பத்ரகாத்ர பாஹி || என்று எவன்கூறுகின்றானோ அவனைச் சிவபக்தனென்றறிக.

விஶ்வேஶ்வர த்ருதசநாயக சந்திரமௌளே லுலாதிலோல விகடாகடிதார்த்ததேக | சித்தேஶ்வரீரமணசந்திரபதே முஹுர்மாம் பாஹி || என்று எவன் கூறுகின்றானோ அவன் பக்தனென்றறிக.

போசங்கடாரமண சூலகரஸ்மராரே ஸ்ரீ வீரதாரரமண போகலஶேஶ ஶம்போ | ஜ்யோதிஸ்வரூப பகவந்மணிகர்ணிகேச பாஹி || என்று கூறுபவர் சிவபக்தரென்றறிக.

புண்யாவிமுக்த பரமேஶ்வர நந்திகேச ஸ்ரீமன்மஹேஶ்வர ஸ்வர்ணபினாகபாணே | ஸ்ரீ காளகூடவிஷ நீலதரார்த்த கண்டபாஹி || என்பவர் சிவபக்தராவார்.

உத்துளனுதி ருசிராங்க ஸத்ரிபுண்டர ரேகா லலாட பலகாந்தகமர்த்தகேஶ | ஆமர்த்தகேஶ்வர மஹாக விநாசகேஶ பாஹி || என்பவர் சிவபக்தரென்றறிக.

ஸ்ரீ விருத்தகாள விருஷபத்துவஜ கிருத்திவாஸ ஸ்ரீலிங்க லிங்கிலயாவ்யய ம்ருத்யு ம்ருத்யோ | ஸ்ரீ வக்ரதுண்ட கணநாயகடுண்டிராஜபாஹி || என்பவர் சிவபக்தராவர்.

கேதாரநாயக சதாசிவ சோமநாத ஞானேச தக்ஷஹர நாயக தக்ஷநாத | சித்தேச தர்மகணநாயக சண்டிகேஶபாஹி || என்பவர் சிவபக்தராவர்.

லிங்கத்தைத்தரிசித்துப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து பத்திர தீர்த்தாதிகளைச் சமர்ப்பிக்கின்றவனும் விபூதி ருத்ராக்ஷ மணிந்தவனுமாகிய மனிதன் மரித்தால் சிவனையடைகின்றான். இப்படிப்பட்ட சிவார்ச்சகர்களாகிய பெரியோர்களை அபாரகுண சாகரர்களாகிய சித்தேஸ்வரர்களும் முனீஸ்வரர்களுங்கூட தூரத்தில் கண்டதும் வீழ்ந்து நமஸ்கரித்து வணக்கத்துடன் நிற்கின்றனர். எவனால் ஓர் தரமாவது சிவலிங்கம் பூஜிக்கப்பட்டுளதோ அவனால் சோகமெனுங்கடல் தாண்டப்பட்டதாகும். அவன் உடனே கிரிஜாரமணனை யடைந்து பரமானந்த மெய்துகின்றான். சிவகதையை ஓர் க்ஷணகாலமாவது கேட்பானாயின் அவன் பாதகக் கடலினின்றுங் கரையேறுகின்றான். அவனைப் பூசிப்பதினால் உமாபதி திருப்தியடைந்து சகல கஷ்டங்களையு நீக்குகின்றனர். இது சத்யமே. எவனை சிவ பூஜையைத்தரிசித்துப் பக்தியுடன் பரமானந்த மெய்தி மயிர் சிலிர்க்கப்பெறுகின்றானோ அவனைச்சாம்பவோத்தம னென்று நினையுங்கள். யாதொருவன் காலகாலனது சரணாரவிந்தங்களில்பக்தியுடையோனாய் யோகாதி நியமங்களுடன் கூடியிருக்கின்றானோ அவனை மூவுலகிலும் உத்தமனென்றும் அவனினுஞ்சிறந்தவர் யாருமில்லையென்றும் அறிமின். இப்படிப்பட்ட பெரியோர்களைத் தேவகின்னரர் முதலியோரும் அர்ச்சிக்கவேண்டும். அவரைப்பூசிப்பதால் கௌரிரமணன் திருப்தியடைகின்றார். யாதொருவன் காலையில் சந்திரகலாபரணனை பத்ரபலபுஷ்பாதிகளால் அருச்சித்து மகிழ்கின்றானோ அவனை முனிவர்களெல்லோரும் இவர்மகான்;இவரைப்பூசித்துத்தன்யராகவேண்டு மென்று சிரத்தையோடு பூசித்து மகிழ்கின்றனர். எனது நாதனும் என்தந்தையும் எனது பிராணரக்ஷகனுமாகிய ஸ்ரீ கால கால சிவனை நமஸ்கரித்துத் தொழுகின்றனரோ அத்தகைய பெரியோரே பரமசைவராவார். ஹே சந்திரமௌளே! எனது புதல்வர்களும் தான்யம் தனம் கோக்கள் முதலிய சகலமும் தேவரீருடையவே யென்று சகலத்தையும் சிவாதீனமாய் நினைப்பவர் சம்சாரபயத்தை விடுத்துச் சிவனையடைகின்றனர். சிவபாதத்தை நினைக்கும் மனமே தன்யமாகும். சிவலிங்க தரிசனத்திலாவலுடைய நேத்திரங்களே தன்யங்களாகும். அதனினுஞ் சிறந்தது யாதேனுமுண்டா? அவனைப்பெற்றதாயே தன்யையாவாள். அவனது தந்தையும் அவனது குலமும் அவனது புதல்வர்களும் அவனது தாசிதாசவர்க்கங்களுமே தன்யங்களாகும். சிவதீர்த்த யாத்திரையில் பாவனமாகிய அவரது சரணாரவிந்தங்களும் சிவனைப்பூசிப்பதனால் பாவனமாகிய

அவரது திருக்கரங்களும் சிவனுக்கு வணக்கத்துடன் வணங்கிய சிரசும் தன்யத்திலும் தன்யங்களாம். அவற்றிலும் சிறந்தவை உலகிலுண்டா? உன்மத்தனைப்போல் தன்னை மறந்து சங்கர நாமத்தைச் சொல்வோனும் சிவலிங்க பூசையைத்தரிசித்துப்பரமானந்த பரவசமாகின்றவனும் ஆகியஇவரதுபாதுகையை ஸ்மரிப்பதும்பாவத்தைத் தொலையச்செய்வதாம். அபாரமாகிய சிவபக்தியுடைய மகான் எத்தனையோ பலகோடி சீவராசிகள் அடங்கிய இம்மூவுலகில் யாரேனுமொருவரிருப்பார். அவரைக்கண்டு பவமெனும் சம்சாரக்கடல் நடுங்குகின்றது. சிவபக்தர்களைத் தூரத்தில் கண்டமாத்திரத்திலேயே கின்னரர்கள் தத்தம்புதல்வர் முதலியோருடன் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துக் கைகட்டி விநயத்துட னிற்கின்றனர். சிவபக்தர் பிரபாவத்தை என்னென்று கூறுவேன்! சிவனுக்கு மிக்க பிரீதி பாத்ரமானவர் அவர்களே. அவர்களைப் பிரம்மாதி தேவர்களும் பூசிக்க வேண்டியவ ரென்றறிந்து பூசை செய்யச் சித்தமாயிருங்கள். எவர் சங்கரஸ்மரணத்தால் பரிசுத்தமான மனதோடும் தேகத்தோடும் விளங்குகின்றனரோ ஓ யமனே! அவர்களை த்ரிணேத்ரனது ஆலயமென்று நினைவாயாக. அவர்களைப் பூசிக்கவேண்டுமென்று கூட அவர்களில்லஞ் செல்லற்க. இது தத்வம். சுருதியில் கூறியபடி பரிசுத்தமான விபூதி யணிந்து விளங்குபவர்களையும் உருத்திராக்ஷ பூஷணமணிந்து விளங்கும் புண்ணிய தேகர்களையும் ஸ்ரீ காளஹத்தீசரைப் பூசிக்கவேண்டுமென்று அவாவுடன் பில்வமுதலியவைகளை யெடுத்துக்கொண்டு செல்பவரது இல்லத்தையும் மத்யார்ச்சுனேஶ்வரரையும் அருணசலேஶ்வரரையும் சிதம்பர நாதரையும் தரிசிக்கவேண்டுமென்று விரும்பும் சித்தமுடையோர்களையும் சிவாலயமாகிய சிவனுக்கிருப்பிட மென்றுநினை.

எவர் ஸ்ரீ கும்பகோணபதியையும் ஸ்ரீ நந்திமண்டலத்தையும் விருப்புற்றிருக்கினரோ எவர் ப்ரமராம்பிகையினது திவ்யஸ்வரூபத்தை நினைத்துச் சந்தோஷமடைந் திருக்கிறார்களோ எவர் தீர்த்தேச லிங்கத்தைப்பூசிக்க விரும்பினவரோ எவர் ஸ்ரீ காசி ப்ரதேசத்தைக் கருதிய மனமுடையவரோ எவர் விஶ்வேஶ்வரரை அர்ச்சிக்கவும் தரிசிக்கவும் விரும்பினவரோ எவர் அவி முக்தத்தைப் பூசிக்கக்கருதினவரோ எவர் ஆனந்த பைரவரைத் தரிசிக்க எண்ணியவரோ எவர்கள் முக்திமண்டபத்தைத் தரிசிக்க விரும்புகின்றனரோ அவர்களை ஜகதீஶ்வரனது ஆலயமென்று நினைவாயாக. எவர் பக்தியோடு எப்போதும் அன்னபூரணியினது பாதாரவிந்தத்

தைப் பஜிப்பதிலும் டுண்டிராஜனது சரணத்தை அர்ச்சிப்பதிலும் விருப்புற்ற மனமுடையோரோ எவர் வீரேஸ்வர பூஜையைத் தரிசிப்பதை விரும்பியவரோ எவர் காலபைரவரைத் தரிசிக்கக்கருதியவரோ ஓங்கார நாயகரைத் தரிசிக்க விரும்பியவரோ அவர்களது இல்லத்தை மனதிலும் நினைத்தல் கூடாது. உனது தூதர்களுக்கும் அவ்வாறே. அவர்களது இருப்பிடத்தை நீங்கள் சிவாலய மென்னக்கருதவேண்டும். உனது தூதர்கள் கொடியவர்களாதலால் காரியாகாரியம் தெரியாமல் துர்ப்புத்தியுடன் கெட்டகாரியத்தையே செய்வார். அவர்களது பழக்கத்தாலுனக்கும் விசேடமாய்ப்பாவ நிகழும். அடா யமனே! நீ தர்மநாச மாகாதிருக்கும் வண்ணம் அவர்களை அடிக்கடி தண்டித்துக்கொண்டிருக்க வேண்டும். உனது தூதர்கள் சைவர்களது இருப்பிடங்களில் சஞ்சரிப்பார்களாயின் சிவன் கோபிப்பார். ஆதலின் அதனை ஜாக்கிரதையாய்க் கவனிப்பாயாக. எவர் சங்கரஸ்மரணத்தால் சகல பாபங்களாலும் தொலைந்து பரிசுத்தமெய்தியவரோ எவர் லிங்கபூஜை விரும்பினவரோ விபூதி உத்தூளனஞ் செய்தும் திரிபுண்டரமணிந்தும் உருத்திராக்ஷத்தைக்கண்டத்திலணிந்தும் பில்வமூல சிவலிங்கத்தை நமஸ்கரித்தும் பில்வபத்திரங்களால் லிங்கபூசை செய்தும் சிவத்தியானத்தால் தேகசேஷ்டைமறந்தும் சிவலிங்க தரிசனத்திலேயே நேத்ரவியாபாரத்தை நிறைவேற்றிக்கொண்டும் சிவலிங்கத்தையே முக்யப்பிராணனைப் பாவித்துக் கொண்டிருப்பவர்களோ அவர்களது இல்லங்களில் உனது படர்கள் அக்கியான மோகத்தாலுஞ் செல்லக்கூடாது. சங்கரநாம அமிர்த தாராசாரத்தை யனுபவிக்கும் நாவே தன்யமாயுள்ளது. அத்தகைய புண்யம் அநேக கோடிஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்டிருக்கவேண்டும். அஃதும் சிவானுக்கிரகமிருந்தால்தான் கிடைக்கும்.

முப்பதாம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

பிசிதாஸ்ரயநம:

# முப்பத்தோராம் அத்தியாயம்.

## சிவபக்தர் மஹிமையுரைத்தது.

வியாசர்:-இங்ஙனம் நந்திதேவர் கூறியதைக் கேட்ட சகலதேவர்களும் பரமாநந்தமெய்தி மீண்டும் நமஸ்கரித்து அஞ்சலிஹஸ்த

ராய் ஓ நந்தியெம்பெருமானே ! சிவக்கியானக்கடலே ! இங்கு தூத ரால் வரவழைக்கப்பட்டவர் செய்தபுண்ணியம்யாது ? அதனையுரைத் தருளுங்களென்ன நந்திதேவர் கூறுகின்றார்:-ஓ தேவர்களே ! அப்பு ண்ணியத்தைக் கேட்பீர்களாயின் நீங்கள் பேராச்சரியமடைவீர்கள். தத்வக்கியான மற்றவர்களுக்கெல்லா மாச்சரியமன்றோ ! சிவபூஜாம ஹிமை யென்னுஞ்சாகரத்தில் ஓர் சிறியபிந்துவைக் கூட நீங்களறிந் திலீர். தவத்தால் சித்தகந்தர்வ வித்தியாதரர்களானீர்கள். சிவப்பிர பாவமெனும் ரத்னங்களுக்குச் சிவன்சமுத்திரம் போன்றவ ராதலால் சிவனே தனது தத்வத்தை யறிவாரன்றி யேனையோரறிவதற்கில்லை. நாங்கள் அவர்களுடைய பிரசாதத்தில் ஓர்லேசமே அறிந்தோம். அஃது அப்படியிருக்கமற்றவர்கள் அவரதுமகிமையை யறியமுடியு மா? அபூர்வமாகிய ரத்னங்களைச்சம்பாதித்து ஒருவன் தனதுவீட்டில் வைத்துக்கொண்டிருப்பதா யெண்ணிக்கொள்வோம். அவ்விரத்ன ங்களின் மகிமையை யவனறிவானேயன்றி மற்றவரெவ்வித மறிவார். ரத்னதத்வத்தை அதன் பரீக்ஷகனே யறிவான். எல்லோருமறிவத ற்கில்லை. தாக்ஷாயணி வல்லபராகிய அவ்விறைவனே நித்யன், சர்வ க்ஞனுதலால் அவனே இத்தத்வத்தையறிவான். விசித்திரமாகிய பலரத்னங்களிலும்ஏதோ இரண்டொரு ரத்னம் சிறந்தவாயிருக்க லாம். அஃதே மதிக்கக் கூடாதவாயிருக்கலாம். ஓ தேவர்களே ! சிவ தர்மமெனும் ரத்னம் ரகஸ்யமாய்ச் சாக்கிரதையாய்க் காப்பாற்ற வேண்டியது. அது மிக்க பக்தனுக்கே கொடுக்கவேண்டியது. ரசம் அற்பமாயினும் அபாரமாகிய லோகத்தையும் ஸ்வர்னமாக்குகின் றது. அக்னி லேசமாயினும் அது மலைபோன்றபஞ்சைச் சாம்பரா க்குகின்றது. ஔஷதம் சிறிதாயினும் அதனுல் மகாவியாதி தொலை கின்றது. கத்தி சிறிதாயினும் கூர்மையாயிருந்தால் பெரிய தேகத் தின் விநாசத்திற்கும் ஹேதுவாகின்றது. இதுபோலவே சிவதர்மம் அற்பமாயினும் பாவமெனும் பெருமலையைப் பொடிப்பொடியாய் உருவிலாமற் செய்து புண்ணியத்தையும் சம்பத்தையும் வளரச்செய் கின்றது. தர்மங்களுக்குள் உத்தம தருமமானது சிவதருமமொன் றே. சாம்பவனும் மஹாதேவனுமாகிய சதாசிவனே சர்வதேவ சிகாமணியாயுள்ளவரென்று கூறுவது போலச் சிவதர்மமே சர்வதர் ம மணியாயுள்ளதென்று வேதங்கூறுகின்றது. சிவதர்மத்திலும் மே லாகிய தருமம் வேறொன்றில்லை இது சத்யம் சத்யம் சத்தியமென் று கைதூக்கிக் கூறுகின்றேன். சிவதர்மத்துக்கு வேருகிய தருமங்க ளெல்லாம் தருமாபாசமேயாம். ஓ சுரர்களே! அப்படிப்பட்டதருமத்

தை ஆச்ரயிப்பதினால் யாது பயன்? சிவதருமங்களையறியாது உலகில் ஏனைய தருமங்களையே அறியாதுஅநுஷ்டிக்கின்றனர். அதனால் யாது பயனடையக்கூடும்? ரத்னமென்று பிரமித்து வளையற்கற்களை வாங்குவானாயின் அதனால் அவன் கோரிய பயன் கிடைக்குமா? அன்றியும் தேவாதிதேவனான இறைவனுக்கு எது பிரியமோ அதுதான் மேலாகிய தர்மம். அஃதொழிந்த சதாசாரமுதலிய வெல்லாமப்படியல்ல. இவர் வேடனுடைய புத்ரன். இவரது பிதா பாவங்களுக்கெல்லாம் நிதிபோன்றவன். இவரது மாதாவும் சகோதரர்களும் குலமும் மஹா பாபமுடையவர்களே. கத்தியாலெடுபட்ட ஓர் கத்திரிப்பூ லிங்கசிரசில் வீழ்ந்தது. மரணகாலத்தில் அத்தகைய பூவை எறிந்து விட்டு மரித்துவிட்டபடியால் என்னால் இப்பூ லிங்க சிரசில் வீழ்ந்தமைபற்றி மோக்ஷமளிப்பதற்கிய பூசை செய்யப்பட்டதென நினைத்து அப்பூவை யெறிந்தார். அறிந்து தர்மஞ்செய்தால் இதன் பயன் வேதங்களாலுங் கூறமுடியாது. அறியாது செய்த சிவபூசையும் சகலாபீஷ்டங்களையுங் கொடுப்பதாகுமென்று சகல வேதங்களுடைய கருத்து. இப்புண்ணியத்தினால் சிவகணத்தன்மை பெற்று சிவனுக்கு மிக்க பிரீதிகரனாயிருப்பான். தருமங்களுள் உத்தமமான தருமமானது சனாதனமாகிய சிவதருமமொன்றே.

பூர்வம் விந்தியதேசத்தில் ஓர் மஹா பாபியிருந்தான். அவன் செய்த பாபங்களை யெண்ணமுடியாது. அவன் பிறர் மனைவியரை விரும்புவதும் எச்சிலைப்புசிப்பதும் கரும மற்றவனுமாயிருந்தான். அவன் ஓர் சோரமனைவியை வைத்திருந்தான். அவளிடம் அவனுக்கு ஓர் கன்னிகை யுண்டானாள். அக்கன்னிகை யௌவனபருவமடைந்ததும் அவளிடமும் காமத்தையனுபவித்தான். அவளிடமும் ஓர் கன்னிகை யுண்டாக அவளையும் யௌவனபருவத்தில் ரமித்தான். அவள் ஓர் நாள் அப்பாபியைப்பார்த்து நான் மலரின்மேல் சுகமனுபவிக்க விரும்புகின்றேனாதலின் அவ்வாறு செய்யவேண்டுமென்னக் கொடும்பாவியும் இரவில் மலர்களைத்திருடிக்கொண்டு வந்தாலொழிய நமக்குக் கிட்டாவெனவெண்ணி எங்கும் மலரைக்காணாது ஓர் சிவாலய நந்தவனத்தில் சிவார்ச்சனையின் பொருட்டுப் பயிரிட்டிருக்கும் அற்புதமாகிய மலர்களைக்கண்டான். அவன் இவைகளொன்றையும் விடாமல் சகலத்தையும் நமது வீட்டுக்குக் கொண்டுபோக வேண்டுமென்றும் அன்றியும் இங்கிருக்கும் மலர்ச் செடிகளெல்லாவற்றையும் பெயர்த்து நமதிருப்பிடத்திற்குச் சமீபத்தில் பயிராக்கி விடுவோமானால் தடையின்றி என்றும் மலர்கிடைக்

துக் கொண்டேயிருக்குமென்றும் நினைத்து நடுராத்திரியில் அங்கு புகுந்து பரிமளமுள்ள புஷ்பத்தைக்கொய்து கையில் வைத்துக் கொண்டான். காற்றினலிழுக்கப்படும் பரிமள வாசனையை முகர்ந்து ஓர் சர்ப்பம் வாசனைவரும் வழியை நோக்கிவர இவனும் அம்மலரையெடுத்து முகர்ந்து முகர்ந்து வீட்டுக்குப் போவோமென்றெண்ணி நந்தவனத்தைத் தாண்டிச் சிவாலயத்தருகில் வரும்போது தன்கையிலிருந்த புஷ்பம் கீழே விழ அதைக்குனிந்து எடுக்கும்போது அவனோடு கூட வந்த சர்ப்பமானது அவன்கையைப்பிடித்து மேலேறிச் சுற்றிக்கொண்டது. அக்கொடும்பாவி பயந்து அதனை உதறிக் கையிலிருந்த மலரை எறிந்துவிட்டான். ஆயினும் அது அருகிலிருந்த சிவலிங்க சிரசில் வீழ்ந்தது. அதனல் சிவலிங்கமுங் குளிர்ந்தது. அக்கொடும்பாவி சர்ப்பந்தீண்டியதனு லிறந்துவிட்டான். அதனல் மகேச்வரன் திருப்தியடைந்து கௌரியைப்பார்த்து ஓ கௌரீ! உனக்கோர் ஆச்சரியங்கூறுகின்றேன் கேட்பாயாக. அதைக்கேட்பதினல் பக்தியுடன்கூடப்பூசித்தபயன் வரப்பெறலாம். விந்திய தேசத்தில் அழகிய புஷ்பவனமிருக்கிறது. அங்குள்ள மலர்கள் மிக்க அழகாயும் பரிமள மிகுந்து மிருக்கின்றன. ஓர் பக்தன் என்னிடம் அபாரமான பக்தியினல் அவ்வனத்தைத் தாபித்தான். அங்கு காற்றும் புகுதல் கூடாது. இப்பூவுலகில் மற்றெவ்விடத்தும் அதுபோலழகாகிய வனங்கிடையாது. அவ்வனத்திலுள்ள விருக்ஷங்கள் செடிகொடிகள் முதலியன பூவின் பரிமளத்தால் தேவோத்தியான வனத்தையும் பரிகசிக்கின்றன. அங்கு சிதறியோடும் மலர்த்தேன்கள் ஓர் சிற்றுறுபோல் பிரவகிக்கின்றது. அதன் பரிமளமோ மொழிதற்கியலாதென்று கூறியவுடன் கௌரி பரமசந்தோஷமெய்தி சுவாமீ! அவ்வனத்தை யிப்போதே பார்க்கவேண்டுமென்றுகூறிச் சிவபெருமானுடன் அவ்வனம் வந்தடைந்தனள். அவ்வனத்தில் ஓர் சிறு தடாகமும் அதற்கு ரத்னமயமாகிய படிக்கட்டுகளும் அதனருகில் அழகிய பிராகாரங்களோடுகூடி ஒளி மண்டலம்போல் ஜ்வலிக்கும் ஓர் சிவாலயமு மிருந்தன. அம்பிகையுடன் கூடிய இறைவன் அவ்விடம் வந்து லிங்கத்தை அம்பிகையும் தானும் பார்த்துச் சந்தோஷத்துடனிருந்து அதன்சிரசிலும் அருகிலும் மலர்களைக்கண்டு பரமானந்தங்கொண்டு பின்னர் அவ்வாலய தீபங்களையும் அற்புதமாகிய சித்ரமெழுதியிருக்கும் ரத்னஸ்தம்பங்களையும் நோக்கிப் பிரீதியடைந்து பின்னர் வெளிவந்து அவ்வனத்திலுள்ள விருக்ஷத்தடியிலுலாவிக்கொண்டு அம்மரத்திலுள்ள மலர்களினிரசத்

தின் பரிமளத்தை முகர்ந்து பின்னர் அங்குள்ள அருவியின் தீர்த்தத்தையருந்தி கனிகளையும் புசித்து மலர் தோறும் மலர் தோறும் முகர்ந்து சந்தோஷத்தால் பரமேஸ்வரன் அமிர்தத்தையு மிகழ்ந்து பிறகு அதற்கருகில் நர்மதாலிங்கமானது சர்ப்பத்தால் சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்து, கௌரீ! இப்பாண லிங்கத்தைப்பார். இதைப்பார்க்கப் பார்க்கத் திருப்தி வருவதில்லை. எனது பக்த னொருவன் இவ்விலிங்கத்தை இங்கு பிரதிஷ்டை செய்தான். இங்கு சற்றுத்தங்குவோமென்றுகூறி ரத்ன மந்திரத்திலாவது ரத்ன லிங்கங்களிலாவது ரேவா லிங்கங்களிலாவது நமக்கு இவ்வளவு பிரீதியுண்டானதில்லை. இது மிக்க அற்புதமாயிருக்கின்றதென்று கூறிக் கௌரியுடன் கூட அருகில் வந்து அங்குள்ள புஷ்பத்தை யெடுத்து முகர்ந்து பார்த்து ஆச்சரியங்கொண்டு ஓ கௌரி ! எந்தப்புண்ணியவானால் இவ் விலிங்கத்தில் இம்மலர் சமர்ப்பிக்கப்பட்டதோ அவனுக்கு முத்தி கிடைக்குமென்பதில் சிறிது மையமில்லை.

என்றுகூறி மிக்கபிரீதியோடு கிரிஜையும்சிவபெருமானும் மீண்டும் மீண்டும் முகர்ந்துபார்த்துச் சிவபெருமான் ஓ தேவி! இவ்விலிங்கத்தை நாகம் சுற்றியிருப்பதுபற்றி எனக்கு நாகபூஷணனென்று பெயருளதென்றுகூறிச் சற்றுத்தூரத்தில் ஓர்சவத்தை அதனுருவை நீக்கித் திவ்விய ரூபமுடையோனாகச்செய்து திவ்வியவிமானத்திலேற்றிச் சிவகணங்கள் கைலைக்குக்கொண்டுபோகச் சித்தமாயிருப்பதையுங்கண்டனர். அதனையும் அவர் தேவிக்குக்காண்பித்து அங்கிருந்த உத்தியான வனம் வந்து அதனழகைப் பார்த்துக்கொண்டிருந்தனர். ஓ தேவர்களே! லிங்கார்ச்சனத்துக்கு நிகரான சிறப்புமுளதோ! சிவலிங்கபூஜைக்கீடான புண்யம்யாது மெக்காலத்துமில்லை. மகாபாவியாகிய இவர் மகாபாதகஞ் செய்தவராயினும் அவ்விசேடத்தால் பரம புண்யவானானாராதலால் இம்மகா புண்ய புருஷரை இவ்வியமாலயத்துக்குக் கொண்டுவரக் கூடாது. பூர்வம் ஸ்ரீ சைலப் பிரதேசத்தில் ஓர் தரித்திர அந்தணன் மகா கோரமாகிய பாபங்களைச் செய்தான். வேடர்களது இடந்தோறுஞ்சென்று யாகஞ் செய்து சீவனஞ் செய்துவந்தான். வனங்களிலுள்ள கத்தரிக்காய்களைப் பறித்து மூட்டைகட்டிக்கொண்டு அதனை வீடுசேர்த்து அதனாலுஞ் சீவித்தான். அவன் இப்படி தினந்தோறும் கத்தரிக்காய்களைக்கொண்டுவந்து ஓர் பாணலிங்கத்தினருகில் மூட்டைகட்டிப் பின்னர் அதனைலிங்கசிரசில்வைத்துவிட்டுச் சிலவற்றைப்பக்குவஞ்செய்து புசித்துப்போவது வழக்கம். ஓர்நாள் பிரதோஷசமயத்தில் முன்போலக் கத்தரிக்காய்

களை வைத்து வேர்வைநீங்க நதியில் ஸ்நானஞ்செய்து வழக்கம் போல் அக்கத்தரிக்காய்களில் சலத்தைத்தெளித்துப்புற்களைமுறுக்கி அதனால் மூட்டைகட்டிப் பசிமிகுதியால் சீக்கிரம் சமைத்துப் புசிக்க வேண்டுமென்று பிச்சைவாங்கிவந்த அவ்வரிசியில் ஓர் சிறிதைலிங்க சந்நிதியில் அன்னமாகச்செய்ய நெருப்புண்டாக்கி அதில் சிறுவிறகு களைப்போட்டு எரியவிட்டுத் தான் களைப்பால் படுத்துவிட்டான். அன்று சோமவாரமும் திரயோதசியும்ஆருத்திரா நக்ஷத்திரமுங்கூடி ய தினமாகையால் அவன்செயல் அத்தகையதினப் பிரதோஷசமயத் தில் அச்சிவலிங்கத்துக்கு பூசைசெய்ததாக ஆய்விட்டபடியால் அதன் பலத்தைப்பெற்றான். அதாவது கத்தரிக்காயை நனைத்தது அபிஷேக மாகவும் அறுகினால்கட்டியது அருச்சனையாகவும் மூட்டிய நெருப்பு தீபமாகவும் பாகஞ்செய்த அன்னம் நிவேதனமாகவும் படுத்துறங்கி யது நமஸ்காரமாகவுமானமையால் அதனை முறைமையாகச்செய்த சிவபூஜையாகக் கருணைக்கடலாகிய சிவபெருமான் மிக்க திருப்திய டைந்தருளி அவனுக்கோர் சுவப்பனங்காட்டி யச்சுவப்பனத்தில் பாணலிங்கத்தில் அபிஷேகம் அர்ச்சனை நைவேத்தியம் நமஸ்காரம் விதிமுறையாகச்செய்தவாய்த் தோற்றுவித்தார். உடனே அவன் எழுந்து பார்த்துத் தானிருக்குமிடம் ஓர் திவ்வியரத்ன மாளிகையா யும் திவ்வியபோகத்துடன் கூடிய சகல சுகங்களும் சம்பூர்ணமாய் விளங்குவதையும் தனதான்யங்களும் கோக்களும் அஸ்வங்களும் யானைகளும் மனதின் நிலையையும் கடந்து விளங்குவதையும் கோடிக் கணக்காய் விளங்கும் தாசதாசிகள் காத்துக்கொண்டிருப்பதையும் ரத்னாபரணங்கள் மலைபோல் விளங்குவதையும் திவ்விய ஸ்திரீ அரு கில்நிற்பதையும் பார்த்துப்பிரமித்து இதென்ன விந்தை! அடா! நாம் யார்? எங்குவந்தோம்? இந்நிலைமை எப்படிப்பெற்றோம்? ஓ தாம ரைமலரைப் பழிக்கும் நங்காய்! நீயார்? யாருடைய மனைவி? ரத் னமயமாய் விளங்கும் இம்மனை யாருடையது? இக்குதிரைகளும் யா னைகளும் தாசதாசிவர்க்கங்களும் யாருடையன? இத்தகைய மகா பாக்கியம் யாரியற்றியது? ஓ சுந்தரி! நீ என் எனதருகினின்று திவ்ய சாமரம்வீசுகின்றனை? எனது தேகம் முன்போலில்லையே. கணந்தோ றும் அழகோங்குகின்றதே என்று கேட்க அவள் அவனைப்பார்த்து ஓபுண்ணியவானே! யான் பாக்கியதேவதை. சங்கரனாலிங்கு உன்னைச் சேவிப்பதின் பொருட்டனுப்பப்பட்டேன். உன்னால் பிரதோஷசம யத்தில் நர்மதா லிங்கமானது உத்தமமான தீர்த்தங்களாலும் கத்தரிக் காய்களாலும் அறுகினாலும் தீப நைவேத்யங்களாலும் நமஸ்காரத்

தாலும் மகா புண்ணிய யோகமுடைய பிரதோட சமயத்தில் பூசிக்கப்பட்டது. இத்தகைய லக்னம் கிடைக்காது. இப்படிப்பட்ட திதிவார நக்ஷத்திரங்கள் கூடிய புண்யதினத்தில் சிவபூசை செய்தால் வரும் பயனைத் தேவர்களாலுங் கூறமுடியாது. நீசெய்த பூசைக்குப் பயன் இது மாத்திரமல்ல. எவ்வளவோ வுளது. இப்படிப்பட்ட லக்கினத்தில் பூசிப்போருக்குத் தேவதேவனும் உமையால் ஆலிங்கனஞ் செய்யப் பெற்றவனும் நினைப்பதற்கரிய மகிமை யுடையோனும் சர்வேஸ்வரனுமாகிய சங்கரன் சகல மங்களங்களையும் பலகாலு மனுபவிக்கும்படிச் சந்தோஷத்தையு மளித்து இறுதியில் முக்தியையுங் கொடுத்தருளுகின்றனர். ஆதலால் சிவவிபவங்களுக்கு அளவில்லை.

முப்பத்தோராம் அத்தியாயம்
முற்றிற்று.

உ

பிரபஞ்சநாயகம் ?

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

### சிவபக்தர் மஹிமையுரைத்தது.

நந்திகேசுரர்:-இவ்விதங் கூறும் வசனத்தைக்கேட்டு அவ்வந்தணன் அப்பாக்கிய தேவதையை மிக்கபக்தியுடன் நமஸ்கரித்து ஆனந்தக்கண்ணீர்பெருகத் தழுதழுத்தமொழியுடன் கூறுகின்றான். ஓ தேவி! இப்பாக்கியம் என்னிடம் எவ்வளவுகால மிருக்கும்? சங்கரப்பிரசாதம் என்னிடம் வந்தவரலாறேது? அதனைக் கூறுகவென்று பிரார்த்திக்க லக்ஷ்மிநாதனது நேத்திராரவிந்தங்களால் பூசிக்கப்படும் பாதாரவிந்தமுடைய இறைவனை ஸ்மரித்து அப்பாக்கியதேவதை புன்னகையுடன் கூறுகின்றாள். ஓ சிவபக்தனே! உன்னால் வினவியது யாதோ அஃது சிவபூஜையின் மகிமையே யாதலால் அதனை அறிவதற்குக் கூடாது. அப்படியாயினும் சிவானுக்கிரகத்தால் சற்றுத் தெரிந்துகொள்வாய். கத்தரிக்காய்கள் கெடாதிருக்கும் நிமித்தம் அதனை அறுகம்புற்களால் மறைத்துக்கட்டினாய். அப்படிச் செய்தது சாயங்காலத்தோடுகூடிய புண்ணிய திதி வார நக்ஷத்திர யோகமுடைய பிரதோஷ காலத்துச் சிவலிங்கசம்பந்தமாயிருந்தமையாலும் அச்சிவலிங்கமும் அக்ஷேத்திரமும் மிக்க சிறந்தவாதலானும்

